# தொல்காப்பியம்

## செய்யுளியல்

உரைவளம்

க. வெள்ளைவாரணன்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்க

24

# தொல்காப்பியம்

## செய்யுளியல்

### உரைவளம்

க. வெள்ளைவாரணன்

ஆய்வுரை

பதிப்புத்துறை






மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

பதிப்புரிமை :

பதிப்புத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021

*Publications Division*
*Madurai Kamaraj University*
*Madurai*-625 021

பதிப்பு எண் : 106 விலை ரூ. 93-00

பதிப்பு விவரங்கள் :

| | | |
|---|---|---|
| உரைவள ஆசிரியர் | : | பேராசிரியர் க. வெள்ளைவாரணன் முன்னாள் இணைப்பாளர், தமிழியற்புலம் (Prof.K. Vellaivaranan, Former-Co-Ordinator, Tamilology, Madurai Kamaraj University, Madurai-625 021) |
| 2) தலைப்பு | : | தொல்காப்பியம் செய்யுளியல் (Tolkappiyam:Cheyuliyal-Variorum Edition) |
| 3) பதிப்பு: | | |
| i) இடம் | : | மதுரை காமராசர் பல்கலைக்கழகம் (Madurai Kamaraj University Madurai-21) |
| ii) பதிப்பித்தோர் | : | பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் (Publications Division, Madurai Kamaraj University, Madurai-21) |
| iii) ஆண்டு | : | 1989-முதற்பதிப்பு |
| 4) மொத்த பக்கங்கள் | : | 1050 + 16 |
| 5) பொருள் | : | தொல்காப்பிய உரைவளம் |

---

| | | |
|---|---|---|
| அச்சும் அமைப்பும் | : | பழநிஆண்டவர் அச்சகம் காட்டுமன்னார்கோயில் |

# அணிந்துரை

டாக்டர். இராம. பெரியகருப்பன்
("தமிழண்ணல்")
பேராசிரியர், துறைத் தலைவர்
தமிழியல் துறை,
இந்திய மொழிப் புலம்

மதுரை காமராசர்
பல்கலைக் கழகம்,
மதுரை - 625 021

3—4—1989

தொல்காப்பியம் என்னும் தமிழ் முதல் நூல் இன்னும் உலகிற்கு முறையுற உணர்த்தப்படாமலே இருக்கிறது. தமிழரிலும் அப்பெருநூலைக் கற்றவர்கள் விரல்விட்டு எண்ணத் தக்கவர்களாகி விட்டனர். அரிஸ்டாட்டில், பரதமுனிவர், பாணினி என்ற வரிசையில் வைத்து எண்ணத்தகுந்த இவர்தம் நூற் கருத்துக்கள் உணரப்படாமலும் உணர்த்தப்படாமலும் போவது நினைந்து இரங்குதற்குரியதாகும்.

பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் அவர்களைக் கொண்டு தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு உரைவள நூல்களை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் வெளியிட்டு வருவது மேற்கூறிய குறையினை அகற்றுவதற்கு மிகுதியும் பயன் படும் பணியாகும். இப்பல்கலைக் கழகத்தில் 'தமிழியற்புலம்' என்று ஒன்று தொடங்கப்பட்ட பொழுது அதன் முதல் ஆய்வறிஞராகவும், ஒருங்கிணைப்பாளராகவும் பணிபுரிந்தவர் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் ஆவார். அவர்கள் இங்குப் பணிசெய்த காலத்தில் புறத்திணையியல் முதல் உவமயியல் ஈறானவற்றிற்கு மட்டுமே உரைவளம் பதிப்பை உருவாக் கினார்கள். தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் இலக்கியத் துறைத் தலைவராக அவர்கள் செல்ல நேரிட்டதால் செய்யுளியல் மரபியல் ஆகிய இரண்டும் நிறைவுறாமல் எஞ்சி நின்றன. பொருளதிகாரம் முழுமைக்கும் உரைவளம் வேண்டும் என்ற எம் விருப்பத்திற்கிசைய அன்னார் பணியினின்று சென்ற பிறகும் இதே நினைவாக இருந்து, இப்பின்னிரண்டு இயல்களையும் உரைவளப்பதிப்புக்களாக எழுதித் தந்தார்கள். பணியிலிருக்கும் பொழுதே கடமையை மறந்துவிடும் இக்காலத்தில் பணியை விடுத்துச் சென்றபிறகும் கடமையை முடித்துத் தந்த பேராசிரியரது பணி நன்றியறிதலுடன் போற்றத்தக்கதாகும்.

இந்நூல் வரிசை சிறந்த அமைப்புடையதாய், இளம்பூரணர் முதல் சோமசுந்தர பாரதியார் வரையிலான உரைகளை உடைய தாய்த் திகழ்கின்றது ஒவ்வொரு நூற்பாவின் இறுதியிலும் உள்ள வெள்ளைவாரணரின் ஆய்வுரை கருத்துத் தெளிவு தந்து தொல்காப்பியக் கல்விக்கு வழிகாட்டுவதாய் அமைகிறது. மேலும் வெள்ளைவாரணர் தாம் தந்திருக்கும் அடிக்குறிப்புக் களின் வழி மூலத்திலும் உரையிலும் கண்டிருக்கும் பிழைபாடு களை நீக்கத் துணைபுரிகின்றார். ஆராய்ச்சியாளர்களுக்கும் மாணவர்களுக்கும் இப்பதிப்புக்கள் பெரிதும் பயன்படும் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திற்கும் பேராசிரியர் க. வெள்ளைவாரணர் அவர்களுக்கும் தமிழுலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கின்றது. இவ்வுரைவளப் பதிப்புக்களின் வழித் தொல்காப்பியக் கல்வி வளரும் வகை செய்தல் வேண்டும். அதுவே அமரராகிவிட்ட பெரும் பேராசிரியர் வெள்ளைவாரணனாருக்குத் தமிழுலகம் செய்யும் அஞ்சலியாகும்.

தமிழண்ணல்

# பதிப்புரை

பழந்தமிழ் மரபுகளைக் காப்பதற்காக எழுந்த நூல் தொல்காப்பியம் ஆகும். தமிழ் மொழியில், நற்பொருள் நல்கும் உயிராம் சொற்கள், 'செய்யுள்' எனும் யாக்கை பெற்றுச் செவ்விதின் இயங்கும் பெற்றியை யாப்பியல் விளக்குகிறது; காப்பியச் செய்யுளியலைப் பயில்வோர் தொல்காப்பியர்தம் கணக்கியல் அறிவின் ஆழமும் அகலமும் அறிந்து மகிழ்வர்.

'உரையாசிரியர்' எனும் சிறப்பினைப் பெற்றவர் உளங்கொள் உரைகூறும் இளம்பூரண அடிகள்; இவர் தொல்காப்பியம் முழுமைக்கும் உரை கண்டவர்; தமிழ்மரபில் பெரிதும் தோய்ந்து ஆய்ந்து எழுதிய இவருரை இன்றும் நின்று நிலவுகிறது.

பேராசிரியர் உரை, தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியல், உவமயியல், செய்யுளியல், மரபியல் எனும் நான்கியல்களுக்கும் காணப்படுகிறது. நச்சினார்க்கினியர் உரை எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரத்துள் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல் பொருளியல், செய்யுளியல் என்னும் ஆறு இயல்களுக்கும் காணப்படுகிறது. சேனாவரையர், தெய்வச் சிலையார், கல்லாடனார் ஆகியோர் இயற்றிய உரைகள் சொல்லதிகாரம் ஒன்றற்கே உள்ளன.

மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை வாயிலாக வெளிவரும் இவ் உரைக்களஞ்சியம் தனிச்சிறப்புடையது. செய்யுளியலுக்குரிய முப்பெரும் பழம்புலவர் உரைகள் ஆராயப் பட்டு, அவற்றின் சீர்மையும் நீர்மையும் நோக்கிப் பின்னர்த் தம் ஆய்வுரை நேரிய வகையில் வழங்குகிறார் பேராசிரியர் வெள்ளைவாரணனார் அவர்கள். இதனால் இதுவரை புலவர் பெருமக்களுக்கு ஏற்பட்ட ஐயங்கள் களையப்படுகின்றன.

இப்பதிப்பு வெளிவரும் நேரத்தில் பேராசிரியர் வெள்ளைவாரணனார் இப்பூலகில் இல்லை. தம்புகழ் நிறீஇத் தாமாய்ந்தவர் எனும் மொழிக்கேற்பப் புகழ் ஏணியில் ஏறி, வரா உலகம் புக்கனர்.

ஸ்ரீ

பேராசிரியர் வெள்ளைவாரணனார் தொல்காப்பியப் பொருளதிகாரம் முழுமைக்கும் உரைகளை நிரல்படுத்தித் தம் ஆய்வுரையை வழங்கியுள்ளார். இவை ஒன்பது தனித் தொகுதிகளாக வருகின்றன. மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தமிழியற் புலத்தினின்று நீங்கிய பின்னரும் தமக்கு இட்ட பணியை நிறைவேற்றும் கருத்தால், இறுதி இயல்களாகிய செய்யுளியலுக்கும் மரபியலுக்கும் உரைகளைத் தொகுத்தும் ஆய்வுரையை வகுத்தும் நல்கியுள்ளார்.

பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் இவ் ஆய்வுப் பணியின் சிறப்புத் தமிழ்கூறு நல்லுலகு உள்ளவரை நின்று நிலைக்கும் என்பதில் ஐயமில்லை.

பேராசிரியர். டாக்டர். கதிர்மகாதேவன்

# தொல்காப்பிய நூற்பா

| எண் | நூற்பா | உரைகள்* 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|---|
| | | பக்க எண் | | | |
| 1. | மாத்திரை யெழுத்தியல் | க | உ | கங | கஎ |
| 2. | அவற்றுள் மாத்திரை | ககூ | உக | உசா | உகூ |
| 3. | குறிலே நெடிலே | ஙய | ஙய | ஙஉ | ஙங |
| 4. | அ. இருவகை உகரமோ<br>ஆ. குறிலிணை யுகரம் | ஙச | ஙசா<br>சஉ | சய<br>சங | சங |
| 5. | இயலசை முதலிரண் | சச | சச | சரு | சரு |
| 6. | தனிக்குறில் முதலசை | சஎ | சஅ | ருய | ருக |
| 7. | ஒற்றெழுத் தியற்றே | ருக | ருஉ | ருச | ருரு |
| 8. | முற்றிய லுகரமும் | ருசா | ருஎ | சாக | சாங |
| 9. | குற்றிய லுகரமும் | சாச | சாச | சாசா | சாசா |
| 10. | அசையுஞ் சீரும் | சாஎ | சாஎ | எங | எச |
| 11. | ஈரசை கொண்டு | எசா | எசா | அய | அஉ |
| 12. | இயலசை மயக்கம் | அங | அச | அஎ | அஅ |
| 13. | முன்நிரை இறினும் | அகூ | அகூ | கூக | கூஉ |
| 14. | நேரவண் நிற்பின் | கூங | கூங | கூச | கூரு |
| 15. | இயலசை ஈற்றுமுன் | கூரு | கூசா | கூசா | கூஎ |
| 16. | அளபெடை அசைநிலை | கூஎ | கூஅ | ளச | ளஎ |
| 17. | ஒற்றள பெடுப்பினும் | ளஎ | ளஅ | ளயஉ | ளயச |
| 18. | இயற்சீர் இறுதிமுன் | ளயச | ளயரு | ளயசா | ளயஎ |
| 19. | வஞ்சிச் சீரென | ளயஅ | ளஉய | ளஉங | ளஉஅ |
| 20. | தன்பா அல்வழித் | ளஉஅ | ளஉஅ | ளஉகூ | ளஉகூ |
| 21. | வஞ்சி மருங்கி | ளஉகூ | ளஉகூ | ளஙக | ளஙக |
| 22. | வெண்பா உரிச்சீர் | ளஙஉ | ளஙஉ | ளஙச | ளஙச |
| 23. | கலித்தளை மருங்கிற் | ளஙரு | ளஙரு | ளஙஎ | ளஙஅ |
| 24. | கலித்தளை யடிவயின் | ளஙஅ | ளஙஅ | ளஙகூ | ளசய |
| 25. | வஞ்சி மருங்கினும் | ளசய | ளசக | ளசங | ளசரு |
| 26. | இசைநிலை நிறைய | ளசசா | ளசசா | ளசஎ | ளசஅ |
| 27. | இயற்சீர்ப் பாற்படுத் | ளசஅ | ளசகூ | ளருக | ளருஉ |
| 28. | வெண்சீர் ஈற்றசை | ளருங | ளருங | ளருகூ | ளசாய |
| 29. | இன்சீ ரியைய | ளசாக | ளசாக | ளசாஉ | ளசாஉ |
| 30. | அந்நிலை மருங்கின் | ளசாஉ | ளசாஉ | ளசாச | ளசாசா |

* 1. இளம்பூரணம்
2. பேராசிரியம்
3. நச்சினார்க்கினியம்
4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

| எண் | நூற்பா | உரைகள்* 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|---|
| | | | | பக்க எண் | |
| 31. | நாற்சீர் கொண்ட | ளசாசா | ளசாசா | ளசாஎ | ளசாஅ |
| 32. | அடியுள் ளனவே | ளசாகூ | ளஎய | ளஎக | ளஎஉ |
| 33. | அடி இறந்து வருதல் | ளஎஉ | ளஎஉ | ளஎரு | ளஎசா |
| 34. | அடியின் சிறப்பே | ளஎஎ | ளஎஎ | ளஎகூ | ளஎகூ |
| 35. | நாலெழுத் தாதி | ளஎகூ (35–37) | ளஅஉ (35–39) | ளஅச (35–39) | ளஅசா (35–39) |
| 36. | ஏழெழுத் தென்ப | ளஅய | | | |
| 37. | பத்தெழுத் தென்ப | ளஅக | | | |
| 38. | மூவைந் தெழுத்தே | ளஅக (38–39) | | | |
| 39. | மூவா றெழுத்தே | ளஅஉ | | | |
| 40. | அ. சீர்நிலை தானே<br>ஆ. நேர்நிரை வஞ்சிக் | ள அஅ | ளஅகூ<br>ளகூங | ளகூஉ<br>ளகூச | ளகூச |
| 41. | எழுத்தள வெஞ்சினும் | ளகூரு | ளகூரு | உளஉ | உளச |
| 42. | உயிரில் லெழுத்தும் | உளரு | உளரு | உளசா | உளசா |
| 43. | வஞ்சி அடியே | உளஎ | உளஎ | உளகூ | உளகூ |
| 44. | தன்சீர் எழுத்தின் | உளகூ | உகய | உகய | உகக |
| 45. | முச்சீ ரானும் | உகக | உகஉ | உகஉ | உகங |
| 46. | அசைகூன் ஆகும் | உகங | உகச | உகரு | உகரு |
| 47. | சீர்கூன் ஆதல் | உகசா | உகசா | உகஎ | உகஅ |
| 48. | ஐவகை அடியும் விரிக்குங் | உகஅ | உஉஉ | உஙஅ | உசஎ |
| 49 | ஆங்ஙனம் விரிப்பின் | உசகூ | உருய | உருங | உருச |
| 50. | ஐவகை அடியும் ஆசிரிய | உருச | உருசா | உருஅ | உருஅ |
| 51. | விராஅய் வரினும் | உருஅ | உருகூ | உசாய | உசாய |
| 52. | அ. தன்சீர் வகையினுற்<br>ஆ. தன்சீருள்வழி | உசாக | உசாங<br>உசாஅ | உசாசா<br>உசாகூ | உஎய |
| 53. | சீரியல் மருங்கின் | உஎக | உஎஉ | உஎங | உஎச |
| 54. | குறளடி முதலா | உஎரு | உஎரு | உஅரு | உஅகூ |
| 55. | அளவுஞ் சிந்தும் | உகூய | உகூக | உகூங | உகூச |
| 56. | அளவடி மிகுதி | உகூரு | உகூஎ | உகூஅ | உகூஅ |
| 57. | நிரைமுதல் வெண்சீர் | உகூகூ | உகூகூ | ஙளக | ஙளஉ |
| 58. | விராஅய தளையு | ஙளஉ | ஙளங | ஙளங | ஙளச |

* 1. இளம்பூரணம் 3. நச்சினார்க்கினியம்

2. பேராசிரியம் 4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

| எண் | நூற்பா | உரைகள்* 1 | 2 (பக்க எண்) | 3 | 4 |
|---|---|---|---|---|---|
| 59. | இயற்சீர் வெள்ளடி | ௩௱௪ | ௩௱௫ | ௩௱௭ | ௩௱௮ |
| 60. | வெண்டளை விரவியும் | ௩௱௮ | ௩௱௯ | ௩௧௧ | ௩௧௩ |
| 61. | அறுசீர் அடியே | ௩௧௩ | ௩௧௪ | ௩௧௬ | ௩௧௭ |
| 62. | எழுசீ ரடியே | ௩௧௮ | ௩௧௮ | ௩௧௮ | ௩௧௯ |
| 63. | முடுகியல் வரையார் | ௩௧௯ | ௩௧௯ | ௩௨௧ | ௩௨௧ |
| 64. | ஆசிரிய மருங்கினும் | ௩௨௧ | ௩௨௨ | ௩௨௪ | ௩௨௫ |
| 65. | ஈற்றயல் அடியே | ௩௨௬ | ௩௨௭ | ௩௨௯ | ௩௩௰ |
| 66. | இடையும் வரையார் | ௩௨௬ | | | |
| 67. | முச்சீர் முரற்கையுள் | ௩௩௧ | ௩௩௨ | ௩௩௩ | ௩௩௩ |
| 68. | வஞ்சித் தூக்கே | ௩௩௪ | ௩௩௪ | ௩௩௬ | ௩௩௮ |
| 69. | அ. வெண்பா ஈற்றடி | ௩௩௮ | ௩௩௮ | ௩௩௯ | ௩௪௩ |
| | ஆ. அசைச்சீர்த் தாகும் | | ௩௪௧ | ௩௪௨ | |
| 70. | நேரீற் றியற்சீர் | ௩௪௩ | ௩௪௩ | ௩௪௫ | ௩௪௬ |
| 71. | நிறையவண் நிற்பின் | ௩௪௬ | ௩௪௭ | ௩௪௯ | ௩௫௰ |
| 72. | எழுசீர் இறுதி | ௩௫௰ | ௩௫௧ | ௩௫௩ | ௩௫௪ |
| 73. | வெண்பா இயலினும் | ௩௫௧ | | | |
| 74. | எழுத்து முதலா | ௩௫௪ | ௩௫௫ | ௩௫௭ | ௩௫௮ |
| 75. | பாட்டுரை நூலே | ௩௫௮ | ௩௫௯ | ௩௬௧ | ௩௬௨ |
| 76. | மரபே தானும் | ௩௬௨ | ௩௬௩ | ௩௬௮ | ௩௭௰ |
| 77. | அகவ லென்ப | ௩௭௧ | ௩௭௧ | ௩௭௩ | ௩௭௩ |
| 78. | அஃதன் றென்ப | ௩௭௪ | ௩௭௫ | ௩௭௫ | ௩௭௬ |
| 79. | துள்ளல் ஓசை | ௩௭௬ | ௩௭௭ | ௩௭௭ | ௩௭௮ |
| 80. | தூங்கல் ஓசை | ௩௭௮ | ௩௭௮ | ௩௭௯ | ௩௭௯ |
| 81. | மருட்பா ஏனை | ௩௭௯ | ௩௮௰ | ௩௮௧ | ௩௮௧ |
| 82. | அவ்வியல் பல்லது | ௩௮௨ | ௩௮௩ | ௩௮௪ | ௩௮௪ |
| 83. | தூக்கியல் வகையே | ௩௮௫ | ௩௮௫ | ௩௮௭ | ௩௮௮ |
| 84. | மோனை எதுகை | ௩௮௮ | ௩௮௮ | ௩௯௰ | ௩௯௰ |
| 85. | அளபெடை தலைப்பெய | ௩௯௧ | ௩௯௧ | ௩௯௨ | ௩௯௨ |
| 86. | பொழிப்பும் ஒரூஉம் | ௩௯௨ | ௩௯௩ | ௩௯௩ | ௩௯௪ |
| 87. | நிரனிறுத் தமைத்தலும் | ௩௯௪ | ௩௯௫ | ௩௯௭ | ௩௯௭ |

* 1. இளம்பூரணம்  3. நச்சினார்க்கினியம்
2. பேராசிரியம்  4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

* 1. இளம்பூரணம் 3. நச்சினார்க்கினியம்
2. பேராசிரியம் 4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

| எண் | நூற்பா | உரைகள்* 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|---|
| | | பக்க எண் | | | |
| 116. | பரிபா டல்லே | ௫௮௬ | ௫௮௬ | ௫௮௭ | ௫௮௮ |
| 117. | கொச்சகம் அராகஞ் | ௫௮௮ | ௫௯௨ | ௫௯௭ | ௫௯௯ |
| 118. | சொற்சீ ரடியும் | ௬௱ | ௬௱ | ௬௱௨ | ௬௱௨ |
| 119. | கட்டுரை வகையான் | ௬௱௨ | ௬௱௯ | ௬௧௨ | ௬௧௩ |
| 120, | அங்கதந் தானே | ௬௧௪ | ௬௧௪ | ௬௧௫ | ௬௧௬ |
| 121. | செம்பொரு ளாயின் | ௪௧௬ | ௬௧௬ | ௬௧௭ | ௬௧௮ |
| 122. | மொழிகரந்து மொழியின் | ௬௧௮ | ௬௧௮ | ௬௨௰ | ௬௨௰ |
| 123. | செய்யுள் தாமே | ௬௨௰ | ௬௨௧ | ௬௨௨ | ௬௨௨ |
| 124. | புகழொடும் பொருளொடும் | ௬௨௩ | ௬௨௩ | ௬௨௪ | ௬௨௬ |
| 125. | வசையொடும் நசையொடும் | ௬௨௭ | ௬௨௭ | ௬௨௮ | ௬௨௮ |
| 126. | ஒத்தா ழிசைக்கலி | ௬௨௮ | ௬௨௯ | ௬௩௪ | ௬௩௫ |
| 127. | அவற்றுள், ஒத்தா | ௬௩௫ | ௬௩௫ | ௬௩௬ | ௬௩௬ |
| 128. | இடைநிலைப் பாட்டே | ௬௩௬ | ௬௩௭ | ௬௪௧ | ௬௪௨ |
| 129. | தரவே தானும் | ௬௪௨ | ௬௪௩ | ௬௪௩ | ௬௪௪ |
| 130. | இடைநிலைப் பாட்டே | ௬௪௪ | ௬௪௫ | ௬௪௮ | ௬௪௮ |
| 131. | அடைநிலைக் கிளவி | ௬௪௯ | ௬௪௯ | ௬௫௰ | ௬௫௰ |
| 132. | அ. போக்கியல் வகையே<br>ஆ. தரவியல் ஒத்தும் | ௬௫௧ | ௬௫௪<br>௬௫௫ | ௬௫௪<br>௬௫௮ | ௬௬௪ |
| 133. | ஏனை யொன்றே | ௬௬௫ | ௬௬௫ | ௬௬௬ | ௬௬௭ |
| 134. | அதுவே, வண்ணகம் | ௬௬௮ | ௬௬௮ | ௬௬௯ | ௬௬௯ |
| 135. | வண்ணகம் தானே | ௬௭௰ | ௬௭௰ | ௬௭௧ | ௬௭௨ |
| 136. | தரவே தானும் | ௬௭௨ | ௬௭௩ | ௬௭௪ | ௬௭௪ |
| 137. | அ. ஒத்துமூன் றாகும்<br>ஆ. தரவிற் சுருங்கித் | ௬௭௫ | ௬௭௫<br>௬௭௬ | ௬௭௭<br>௬௭௭ | ௬௭௮ |
| 138. | அடக்கியல் வாரம் | ௬௭௮ | ௬௭௮ | ௬௭௯ | ௬௭௯ |
| 139. | முதற்றொடை பெருகிச் | ௬௮௰ | ௬௮௰ | ௬௮௩ | ௬௮௪ |
| 140. | எண்ணிடை ஒழிதல் | ௬௮௫ | ௬௮௭ | ௬௯௪ | ௬௯௫ |
| 141. | ஒருபோ கியற்கையும் | ௬௯௬ | ௬௯௬ | ௬௯௬ | ௬௯௭ |

* 1. இளம்பூரணம் 3. நச்சினார்க்கினியம்
2. பேராசிரியம் 4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

| எண் | நூற்பா | உரைகள்* 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|---|
| | | பக்க எண் | | | |
| 142. | கொச்சக ஒருபோ | சாகூஎ | சாகூஅ | சாகூஅ | சாகூகூ |
| 143. | தரவின் றாகித் | சாகூகூ | எளந | எஉஉ | எநஎ |
| 144. | ஒருபான் சிறுமை | எநஅ | எநஅ | எநகூ | எசய |
| 145. | அம்போத ரங்கம் | எசய | எசக | எசஉ | எசந |
| 146 | எருத்தே கொச்சகம் | எசந | எசசா | எருய | எருக |
| 147. | ஒருபொருள் நுதலிய | எருக | எருந | எருகூ | எசாஉ |
| 148. | தரவும் போக்கும் | எசாச | எசாஅ எஅய | எளஎ எகூஉ | அளரு |
| 149. | கூற்றும் மாற்றமும் | அளசா | அளஅ | அகஉ | அகரு |
| 150. | ஆசிரியப் பாட்டின் | அகசா | அகஎ | அகஅ | அகஅ |
| 151. | நெடு வெண் பாட்டே | அககூ | அககூ | அஉஉ | அஉந |
| 152 | அங்கதப் பாட்டள | அஉச | அஉச | அஉரு | அஉரு |
| 153. | கலிவெண் பாட்டே | அஉசா | அஉசா | அநந | அநரு |
| 154. | புறநிலை வாயுறை | அநசா | அநசா | அநஅ | அசய |
| 155. | பரிபா டல்லே | அசக | அசஉ | அசஉ | அசந |
| 156. | அளவியல் வகையே | அசந | அசந | அசந | அசச |
| 157. | எழுநிலத் தெழுந்த | அசச | அசச | அசரு | அசரு |
| 158. | அவைதாம் நூலி | அசரு | அசசா | அசஎ | அசஎ |
| 159 | அவற்றுள் நூலெனப் | அசஅ | அசகூ | அசகூ | அருய |
| 160. | அதுவே தானும் | அருய | அருய | அருக | அருக |
| 161. | ஒருபொருள் நுதலிய | அருக | அருஉ | அருஉ | அருந |
| 162. | அவற்றுள், சூத்திரம் | அருச | அருச | அருரு | அருரு |
| 163. | நேரின மணியைநிரல்பட | அருசா | அருசா | அருஎ | அருஎ |
| 164. | ஒருநெறி இன்றி | அருஎ | அருஅ | அருஅ | அருஅ |
| 165. | மூன்றுறுப் படக்கிய | அருகூ | அருகூ | அசாய | அசாக |
| 166. | பாட்டிடை வைத்த | அசாந | அசாந | அசாரு | அசாசா |
| 167. | அதுவே தானும் | அசாஎ | அசாஎ | அசாஎ | அசாஅ |
| 168. | ஒன்றே மற்றுஞ் | அசாஅ | அசாகூ | அசாகூ | அஎய |
| 169. | ஒப்பொடு புணர்ந்த | அஎய | அஎக | அஎஉ | அஎஉ |
| 170 | நுண்மையுஞ் சுருக்கமும் | அஎந | அஎந | அஎச | அஎரு |
| 171. | நிறைமொழி மாந்தர் | அஎசா | அஎசா | அஎஎ | அஎஅ |

* 1. இளம்பூரணம் 3. நச்சினார்க்கினியம்
2. பேராசிரியம் 4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

| எண் | நூற்பா | உரைகள்* 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|---|
| | | பக்க எண் | | | |
| 172. | எழுத்தொடுஞ் சொல்லொடும் | ௮௮௰ | ௮௮௧ | ௮௮௨ | ௮௯௩ |
| 173. | பாட்டிடைக் கலந்த | ௮௮௪ | ௮௮௫ | ... | ௮௮௫ |
| 174. | அதுவே தானும் | ௮௮௬ | ௮௮௭ | .. | ௮௮௭ |
| 175. | அ. அடிநிமிர் கிளவி<br>ஆ. அடியிகந்து வரினுங் | ௮௮௮ | ௮௯௪<br>௮௯௫ | ... | ௮௯௫ |
| 176. | கிளரியல் வகையிற் | ௮௯௭ | ௮௯௭ | ... | ௮௯௮ |
| 177. | கைக்கிளை முதலா | ௮௯௮ | ௮௯௯ | ௮௯௯ | ௯௱ |
| 178. | காமப் புணர்ச்சியும் | ௯௱ | ௯௱௧ | ௯௱௪ | ௯௱௫ |
| 179. | மறைவெளிப் படுதலுந் | ௯௱௬ | ௯௱௬ | ௯௱௮ | ௯௱௰ |
| 180. | மெய்பெறும் அவையே | ௯௧௧ | ௯௧௧ | ௯௧௨ | ௯௧௩ |
| 181. | பார்ப்பான் பாங்கன் | ௯௧௩ | ௯௧௩ | ௯௧௫ | ௯௧௫ |
| 182. | பாணன் கூத்தன் | ௯௧௬ | ௯௧௭ | ௯௧௮ | ௯௧௯ |
| 183. | ஊரும் அயலுஞ் | ௯௨௰ | ௯௨௰ | ௯௩௧ | ௯௨௨ |
| 184. | கிழவன் தன்னொடுங் | ௯௨௨ | ௯௨௨ | ௯௨௩ | ௯௨௪ |
| 185, | ஒண்தொடி மாதர் | ௯௨௪ | ௯௨௪ | ௯௨௫ | ௯௨௫ |
| 186. | இடைச்சுர மருங்கிற் | ௯௮௬ | ௯௨௬ | ௯௨௭ | ௯௨௮ |
| 187. | ஒழிந்தோர் கிளவி | ௯௨௮ | ௯௨௯ | ௯௩௰ | ௯௩௰ |
| 188. | மனையோள் கிளவியுங் | ௯௩௧ | ௯௩௧ | ௯௩௩ | ௯௩௫ |
| 189. | பார்ப்பார் அறிவர் | ௯௩௫ | ௯௪௫ | ௯௩௭ | ௯௩௮ |
| 190 | பரத்தை வாயில் | ௯௩௮ | ௯௩௮ | ௯௩௯ | ௯௪௰ |
| 191. | வாயில் உசாவே | ௯௪௰ | ௯௪௰ | ௯௪௧ | ௯௪௧ |
| 192. | ஞாயிறு திங்கள் | ௯௪௨ | ௯௪௩ | ௯௪௪ | ௯௪௫ |
| 193. | ஒரு நெறிப் பட்டாங் | ௯௪௬ | ௯௪௭ | ௮௪௮ | ௯௪௯ |
| 194. | இறப்பே நிகழ்வே | ௯௫௰ | ௯௫௰ | ௯௫௧ | ௯௫௨ |
| 195. | இது நனி பயக்கும் | ௯௫௩ | ௯௫௩ | ௯௫௪ | ௯௫௪ |
| 196. | உய்த்துணர் வின்றித் | ௯௫௫ | ௯௫௫ | ௯௫௬ | ௯௫௭ |
| 197. | எண்வகை இயனெறி | ௯௫௭ | ௯௫௮ | ... | ௯௫௮ |
| 198. | சொல்லொடுங் குறிப்பொடும் | ௯௫௯ | ௯௫௯ | ௯௬௰ | ௯௫௮ |

* 1. இளம்பூரணம்　　3. நச்சினார்க்கினியம்
2. பேராசிரியம்　　4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

| எண் | நூற்பா | உரைகள்* 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|---|
| | | பக்க எண் | | | |
| 199. | இவ்விடத் திம்மொழி | ௯௬௧ | ௯௬௧ | ௯௬௨ | ௯௬௩ |
| 200. | இன்பமும் இடும்பையும் | ௯௬௪ | ௯௬௪ | ௯௬௫ | ௯௬௬ |
| 201. | அவ்வவ மாக்களும் | ௯௬௬ | ௯௬௭ | ௯௬௮ | ௯௬௯ |
| 202. | அகன்று பொருள் கிடப்பினும் | ௯௬௯ | ௯௬௯ | ௯௭௧ | ௯௭௨ |
| 203. | மாட்டும் எச்சமும் | ௯௭௩ | ௯௭௩ | ௯௭௪ | ௯௭௬ |
| 204. | வண்ணந் தாமே | ௯௭௭ | ௯௭௭ | ௯௭௭ | ௯௭௮ |
| 205. | அவைதாம் பாஅ | ௯௭௮ | ௯௭௮ | ௯௭௯ | ௯௭௯ |
| 206. | அவற்றுட் பாஅ | ௯௭௯ | ௯௭௯ | — | ௯௮௰ |
| 207. | தாஅ வண்ணம் | ௯௮௧ | ௯௮௧ | — | ௯௮௨ |
| 208. | வல்லிசை வண்ணம் | ௯௮௨ | ௯௮௩ | — | ௯௮௩ |
| 209. | மெல்லிசை வண்ணம் | ௯௮௩ | ௯௮௩ | — | ௯௮௪ |
| 210. | இயைபு வண்ணம் | ௯௮௪ | ௯௮௪ | — | ௯௮௫ |
| 211. | அளபெடை வண்ணம் | ௯௮௫ | ௯௮௫ | ௯௮௬ | ௯௮௬ |
| 212. | நெடுஞ்சீர் வண்ணம் | ௯௮௬ | ௯௮௭ | ௯௮௭ | ௯௮௭ |
| 213. | குறுஞ்சீர் வண்ணங் | ௯௮௮ | ௯௮௮ | ௯௮௮ | ௯௮௯ |
| 214. | சித்திர வண்ணம் | ௯௮௯ | ௯௮௯ | ௯௮௯ | ௯௯௰ |
| 215. | நலிபு வண்ணம் | ௯௯௰ | ௯௯௧ | ௯௯௧ | ௯௯௧ |
| 216 | அகப்பாட்டு வண்ணம் | ௯௯௨ | ௯௯௨ | ௯௯௩ | ௯௯௪ |
| 217. | புறப்பாட்டு வண்ணம் | ௯௯௪ | ௯௯௫ | ௯௯௬ | ௯௯௬ |
| 218. | ஒழுகு வண்ணம் | ௯௯௭ | ௯௯௭ | ௯௯௭ | ௯௯௭ |
| 219. | ஒரூஉ வண்ணம் | ௯௯௮ | ௯௯௯ | ௧௦௦௦ | ௧௦௦௦ |
| 220. | எண்ணு வண்ணம் | ௧௦௦௧ | ௧௦௦௧ | ௧௦௦௨ | ௧௦௦௨ |
| 221. | அகைப்பு வண்ணம் | ௧௦௦௩ | ௧௦௦௩ | ௧௦௦௩ | ௧௦௦௪ |
| 222 | தூங்கல் வண்ணம் | ௧௦௦௫ | ௧௦௦௫ | ௧௦௦௫ | ௧௦௦௫ |
| 223. | ஏந்தல் வண்ணம் | ௧௦௦௬ | ௧௦௦௬ | ௧௦௦௭ | ௧௦௦௭ |
| 224. | உருட்டு வண்ணம் | ௧௦௦௭ | ௧௦௦௮ | ௧௦௦௮ | ௧௦௦௯ |
| 225. | முடுகு வண்ண | ௧௦௦௯ | ௧௦௦௯ | ௧௦௦௰ | ௧௦௦௰ |
| 226. | வண்ணத் தாமே | ௧௦௧௧ | ௧௦௧௧ | ௧௦௧௨ | ௧௦௧௨ |
| 227. | சின்மென் மொழியாற் | ௧௦௧௪ | ௧௦௧௪ | ௧௦௧௭ | ௧௦௧௮ |

* 1. இளம்பூரணம்
2. பேராசிரியம்
3. நச்சினார்க்கினியம்
4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

* 1. இளம்பூரணம்
2. பேராசிரியம்
3. நச்சினார்க்கினியம்
4. ஆய்வுரை (வெள்ளைவாரணன்)

# சுருக்க விளக்கம்

| | |
|---|---|
| அகம் | — அகநானூறு |
| ஆசாரக் | — ஆசாரக் கோவை |
| உ. வே | — உரைவேறுபாடு |
| ஐங்குறு | — ஐங்குறுநூறு |
| கலி | — கலித்தொகை |
| குறுந் | — குறுந்தொகை |
| சிந் | — சீவகசிந்தாமணி |
| சிலப் | — சிலப்பதிகாரம் |
| சீவக | — சீவகசிந்தாமணி |
| சீவகசிந் | — சீவகசிந்தாமணி |
| சூளா | — சூளாமணி |
| திருமுரு | — திருமுருகாற்றுப்படை |
| நற் | — நற்றிணை |
| நன் | — நன்னூல் |
| நாலடி | — நாலடியார் |
| நான்மணி | — நான்மணிக்கடிகை |
| நெடுநல் | — நெடுநல்வாடை |
| பத்து | — பத்துப்பாட்டு |
| பா. வே | — பாடவேறுபாடு |
| பு. வெ | — புறப்பொருள் வெண்பாமாலை |
| புறம் | — புறநானூறு |
| பெரும்பாண் | — பெரும்பாணாற்றுப்படை |
| மலைபடு | — மலைபடுகடாம் |
| முத்தொள் | — முத்தொள்ளாயிரம் |
| மொழி | — மொழிமரபியல் |
| யா. காரிகை | — யாப்பருங்கலக் காரிகை |
| யா. வி | — யாப்பருங்கல விருத்தி |
| வெண் | — புறப்பொருள் வெண்பாமாலை |

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

### செய்யுளியல்

#### உரைவளம்

க. மாத்திரை யெழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவியல் எனாஅ
திணையே கைகோள் பொருள்வகை எனாஅ *
கேட்போர் களனே காலவகை எனாஅ
பயனே மெய்ப்பா டெச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையின்
ஆறுதலை யிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே.

என்பது சூத்திரம்.

**இளம்பூரணம் :**

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், செய்யு—லென்னும் பெயர்த்து. செய்யுளிலக்கணம் உணர்த்தினமையாற் பெற்ற பெயர். மேலுணர்த்தப்பட்ட பொருண்மை யெல்லாவற்றிற்கும் இஃதிடமாதலின்[1] அவற்றின்பிற் கூறப்பட்டது.

---

* 'கூற்றுவகையெனாஅ' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

1. 'இஃது' என்றது, செய்யுளை.

இதன் றலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், செய்யு-ளுறுப்பெல்லாந் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இதன்பொருள்) மாத்திரை முதலாகச் சொல்லப்பட்ட முப்பத்து நான்குஞ் செய்யுட்கு உறுப்பென்றவாறு.

பிற்கூறிய எட்டும் மேற்கூறிய இருபத்தாறினோடும் ஒரு-நிகரன அன்மையின்,[1] வேறுதொகை கொடுக்கப்பட்டது. அவை-யாமாறு தத்தஞ் சூத்திரத்துக் காட்டுதும். (க)

**பேராசிரியம் :**

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், செய்யுளிய-லென்னும் பெயர்த்து; செய்யுளிலக்கணம் உணர்த்தினமையான் அப்பெயர்த்தாயிற்று. எனவே ஒத்து நுதலியதூஉஞ் செய்யு-ளிலக்கண முணர்த்தலென்பது பெற்றாம். மேற் பாயிரத்துள்,

"வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளும்" (தொல். பாயிரம்)

ஆராய்வலென்று புகுந்தமையால், எழுத்தினுஞ் சொல்லினும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேண்டுவன விராய்க்கூறிப் பொரு ளதிகாரத்துள்ளும் இதுகாறும் பெரும்பான்மையும் வழக்கிற்கு வேண்டுவனவே கூறிவந்தான், அப்பொருள்பற்றிச் செய்யுள் கூறுமாதலின் இவ்வதிகாரத்துட் செய்யுளிலக்கணமெல்லாந் தொகுத்துக் கூறுகின்றது இவ்வோத்தென்பது.[2] எனவே, முற்

---

1. பிற்கூறிய எட்டு என்பன அம்மை முதலிய எண்வகை வனப்புக்கள். மேற்கூறிய இருபத்தாறாவன மாத்திரை முதல் வண்ணம் ஈறாகவுள்ள செய்யு-ளுறுப்புக்கள். இவை இருபத்தாறும் தனிநிலைச் செய்யுட்கு இன்றியமையாதன வாகவும் பிற்கூறிய வனப்புக்கள் எட்டும் தனிநிலைச் செய்யுட்கள் பல தொடர்ந்தமைந்த தொடர்நிலைச்செய்யுட்குரியனவாகவும் வருதலின் 'ஒருநிகரன அன்மையின்' என்றார்.

2. எழுத்ததிகாரத்துஞ் சொல்லதிகாரத்தும் உலக வழக்கிற்குஞ் செய்யுள் வழக்கிற்கும் வேண்டும் விதிகளைக் கலந்து கூறிப் பொருளதிகாரத்தில் இதற்கு-முன்னருள்ள ஏழியல்களிலும் பெரும்பாலும் உலகவழக்குப் பற்றிய விதிகளேயே கூறிவந்த தொல்காப்பியனார், இவ்வதிகாரத்துட் கூறவேண்டிய செய்யுளிலக்கண மெல்லாம் இவ்வியலால் தொகுத்துக்கூறுகின்றாராதலின் இது செய்யுளிய லென்னும் பெயருடையதாயிற்று. பொருளதிகாரத்தில் அகத்திணையியல் முதலாக முன்னுள்ள ஏழியல்களும் உலக வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாகிய விதிகளைக் கூறுகின்றன. செய்யுளியலாகிய இது செய்யுட்கேயுரிய விதிகளைக் கூறுகின்றது.

கூறிய எழுவகையோத்தும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது வென்பதூஉம், இது செய்யுட்கே உரித்தென்பதூஉம் பெற்றாம். மற்றிதனை யாப்பதிகாரமென வேறோரதிகாரமாக்கி உரைப்பாரு முளர்; அங்ஙனங் கூறின் வழக்கதிகாரமெனவும் வேறு வேண்டு மென மறுக்க; அல்லதூஉம் எழுத்துஞ் சொல்லும் பொருளு மென மூன்றற்கும் மூன்றதிகாரமாக்கி அதிகாரமொன்றற்கு ஒன்பதோத்தாகத் தந்திரஞ் செய்ததனோடு மாறுகோளாம் இதனை வேறதிகாரமென்பார்க்கென்பது[1]. மற்று, ஓத்து நுதலிய தெல்லாம் நுதலுவதன்றே ஓத்தினுள்வைத்த சூத்திரம்; அதனான், இதன் முதற் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இவ்வோத்தினு ளுணர்த்தப்படுகின்ற செய்யுட் குறுப்பாவன இவையெனவே,[2] அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.[3]

(இ-ள்.) இக்கூறப்பட்ட முப்பத்துநான்கும் பேரிசைப்புலவர்[4] செயப்படுஞ் செய்யுட்கு உறுப்பாமென அவ்வாறு செய்தல் வன்மையால் கூறினார் புலவர் (எ - று).

அப்பெயர்-பெயர்; அம்முறை-முறை; அத்தொகை-தொகை. தொகை 'ஆறுதலையிட்ட அந்நாலைந்து' மெனவும், எட்டென வும் இருவகையால் தோன்றக் கூறியது, ஏனைய போலாமல்

---

1. பொருளதிகாரத்தின் பகுதியாகிய செய்யுளியலை யாப்பதிகாரமென வேறோரதிகாரமாக்கியுரைப்பவர் இறையனார் களவியலுரையாசிரியர். ''தமிழ் தான் நான்கு வகைப்படும் எழுத்துஞ்சொல்லும் பொருளும் யாப்புமென'' என்பது இறையனார் களவியலுரை. வழக்குஞ் செய்யுளும் ஆகியவிரண்டனுள் யாப்பினை மட்டும் பிரித்துத் தனியதிகாரமாக்குதல், இயற்றமிழிலக்கணத்தினை எழுத்துஞ் சொல்லும் பொருளும் என மூன்றதிகாரமாகக்கொண்டு ஒவ்வோரதிகாரத்-தினையும் ஒன்பது ஒன்பது இயல்களாகப் பகுத்துரைத்த தொல்காப்பியனாரது நூலமைப்புக்கு மாறுபட்டதாம் என்பது பேராசிரியர் கருத்தாகும்.

2. 'இவையென' என்றிருத்தல் பொருத்தம்.

3. இயலின் முதற்கண் உள்ள சூத்திரம் அவ்வியலிற் கூறப்படும் பொருள் களைத் தொகுத்துச் சுட்டுவதாக அமைதல் வேண்டும்.

4. 'நன்று பெரிதாகும்' எனவரும் உரியியற் சூத்திரத்தையுளங்கொண்டு 'நல்லிசைப்புலவர்' என்பதற்குப் 'பேரிசைப்புலவர்' எனப்பொருள் வரைந்தார். பேரிசைப் புலவரால் பா. வே.

எட்டுறுப்பும் ஓரோர் செய்யுட்கு ஓரோவொன்றேயும் வருமென்ப தறிவித்தற்கும், அவைதாம்.[1] அச்செய்யுள் பல தொடர்ந்த வழியே பெரும்பான்மையும் உறுப்பாமென்ப தறிவித்தற்கும் அவ்வாறுகூறினார் என்க. எனவே, ஒழிந்த உறுப்பிருபத்தாறும்[2] ஒன்றொன்றனை இன்றியமையாவென்பது பெற்றாம்.

இனி மாத்திரை யென்பது, எழுத்திற்கோதிய மாத்திரை களைச் செய்யுள் விராய்க்கிடக்கும் அளவையென்றவாறு.[3] மாத் திரையது மாத்திரையினை ஈண்டு மாத்திரையென்றான். அது மாத்திரையளவும், (314) என்றதனாற் பெற்றாம். எழுத்தியல் வகையென்பது, மேற்கூறிய எழுத்துக்களை இயற்றிக்கொள்ளுங் கூறுபாடு.[4] அசைவகை யென்பது, அசைக்கூறுபாடு;[5] அவை இயலசையும் உரியசையுமென இரண்டாம். யாத்தசீரென்பது, (360) பொருள்பெறத் தொடர்ந்து நிற்குஞ் சீரென்றவாறு; எனவே, அசைபல தொடர்ந்து சீராங்கால் அவ்வசையுந் தத்தம் வகையாற் பொருள்பெற்று நிற்றலும் அவ்வாறன்றிச் சீர்முழுதும் ஒரு சொல்லாங்கால் அவ்வசை பொருள் பெறாது நிற்றலும் அடங்கின. தேமா என்று அசை பொருள் வேறுபெற்றன; சாத்தன் எனப் பொருள் வேறு பெறாது நின்ற அசையாற் சீர் யாத்து நின்றது. பொருள்பெற நின்ற எழுத்தும் அசையுஞ் சிறப்புடைய வென்பாருமுளர்.[6] அற்றன்று, பொருள்பட நிற்பன

1. 'அவைதாம்' என்றது அம்மை முதலிய எட்டினையும். இவைபெரும் பாலுந் தொடர்நிலைச் செய்யுட்கே உறுப்பாவன.

2. இருபத்தாறாவன மாத்திரைமுதல் வண்ணம் ஈறாகச் சொல்லப் பட்டவை. இவை இருபத்தாறும் ஒன்றோடொன்று தொடர்புடையனவாய் ஒவ்வொரு செய்யுட்கும் இன்றியமையா உறுப்புக்களாகும்.

3. மாத்திரை - அளவு; எழுத்திற்குச் சொல்லிய மாத்திரையினது அளவு மாத்திரையென்னும் உறுப்பாகும்,

4. மேல் எழுத்ததிகாரத்துக்கூறிய எழுத்துக்களைச் செய்யுளுக்கேற்ப இயற்றிக்கொள்ளுங்கூறுபாடு.

5. முற்கூறிய எழுத்தாலாகிய அசைகளின் கூறுபாடு.

6. ''பொருள்பயந்து நிற்பன 'சிறப்பசை' என்றும், மொழிக்கு உறுப்பாய் நிற்பன 'சிறப்பிலசை' என்றும் வழங்குப'' எனவும் ''சீர்வயின் பொருள்பயந்து நிற்பனவற்றைச் 'சிறப்புடைச்சீர்' எனவும் வகையுளிசேர்ந்து நிற்பனவற்றைச் 'சிறப்பில்சீர்' என்றும் சொல்வார்'' எனவும் வரும் யாப்பருங்கலவுரைப்பகுதி இங்ஙனங்கூறுவார் கூற்றை யெடுத்துரைத்தல் காணலாம்.

எழுத்து யாண்டு மின்மையானும், பொருள் பெறநின்ற அசையா னாகிய தேமாவென்னுஞ் சீரும் அவ்வசைச் சிறப்பினாற் சிறப் புடைச் சீரெனப்படாமையானும் சாத்தனெனத் தன்பொரு ளொடு தான் துணிந்து நின்றவழி அதுவுஞ் சிறப்புடைச் சீரெனவும் படுமாதலானுமென்பது.[1] அடியென்பது, அச்சீர் இரண்டும் பலவுந் தொடர்ந்தாவதோர் உறுப்பு. **யாப்பென்பது**, அவ்வடிதொறும் பொருள்பெறச் செய்வதோர் செய்கை. **மர** பென்பது, காலமுமிடனும்பற்றி வழக்குத் திரிந்தக்காலுந் திரிந்த வற்றுக்கேற்ப வழுப்படாமைச் செய்வதோர் முறைமை. மற்றுச் **சொல்லோத்தினுட்** கூறிய மரபிற்கும் **மரபியலுள்** உரைப்பன வற்றுக்கும் இதற்கும் வேற்றுமையென்னையெனின், இது செய் யுட்கே உரித்து; அவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது வென்பது; அல்லதூஉம் அவற்றது வேறுபாடு முன்னர் **அகத்திணையியலுள்** கூறிவந்தாம்[2] **தூக்கென்பது**, பாக்களைத் துணித்து நிறுத்தல். **தொடைவகையென்பது**, தொடைப் பகுதி பலவுமென்றவாறு: அவை வரையறையுடையனவும் வரையறையில்லனவுமென இருவகைய.[3] இப்பகுதி யெல்லாம் அடியாற் கோடலின் அடிக்கும் இஃதொக்கும்.[4] **நோக்** கென்பது, மாத்திரை முதலாகிய உறுப்புக்களைக் கேட்டோர்க்கு நோக்குப்படச் செய்தல். **பா** என்பது, சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாட மோதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து

---

1. அசையினும் சீரினும் அன்னோர்காணும் சிறப்பும் சிறப்பின்மையும் ஏற்புடையனவல்ல என்பது பேராசிரியர் கருத்தாகும்,

2. சொல்லதிகாரத்தும் மரபியலிலும் கூறப்படும் மரபுகள் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொதுவாகவுரியன. செய்யுளுறுப்பாகிய மரபென்பது செய்யுளுக்கே யுரியதாகும். இவ்வியலுக்குப் பேராசிரியர் உரைவரைந்துள்ளார் என்பது இதனாற் புலனாம்,

3. நாற்சீரடிதன்னையே எழுத்தெண்ணிப் பதினேழ்நிலத்து ஐவகை-யடிகளாகப் பகுத்துரைக்கும் அடிகளிற் கொள்ளப்படும் தொடைவகை வரையறையுடையன. நாற்சீரினிகந்து ஐஞ்சீரடி முதலாகவரும் சீர்வகை அடிகளிற் கொள்ளப்படும் தொடைகள் வரையறையில்லாதன.

4. இவ்வியலில் நாற்சீரடிதன்னையே எழுத்தெண்ணிக் கட்டளையடிகளாகப் பகுத்துரைக்கப்படும் அடிகள் வரையறையுடையனவாகவும் ஐஞ்சீரடி முதலாக வுள்ள சீர்வகையடிகள் வரையறையில்லாதனவாகவும் வருதலின் அடிக்கும் இஃது ஒக்கும் என்றார்.

இன்ன செய்யுளென்று உணர்தற்கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை. **அளவியலெ**ன்பது, அப் பாவரையறை. **திணை**யென்பது, அகம் புறம் என்று அறியச் செய்தல். **கைகோ**ளென்பது, அவ்வத்திணை யொழுக்க விகற்பம் அறியச் செய்தல்; அது களவுங் கற்பும். **கூற்று**வகையென்பது, அச் செய்யுள் கேட்டாரை இது சொல்லுகின்றார் இன்னாரென உணர்வித்தல். இவை யென்பது பாடமாயின், எண்ணிய மூன்றனையுந்தொகுத்தவாறே பிறிதில்லை.[1] **கேட்போ**ரென்பது இன்னார்க்குச் சொல்லுகின்றது இதுவெனத் தெரித்தல். **கள**னென்பது, முல்லை குறிஞ்சி முதலாயினவும் இரவுக்குறி பகற் குறி முதலாயினவும் உணரச்செய்தல். மற்றுத் தன்மை முன்னிலை படர்க்கையுமாம். **காலவகை**யென்பது, சிறுபொழுது பெரும்பொழுதென்னுங் காலப்பகுதி முதலாயின. **பய**னென்பது, சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச் செய்தல். **மெய்ப்பா**டென்பது சொற் கேட்டோர்க்குப் பொருள் கண்கூடாதல். **எச்சவகை**யென்பது, (518) சொல் லப்படாத மொழிகளைக் குறித்துக்கொள்ளச் செய்தல்: அது கூற்றினுங் குறிப்பினும் வருதலின் வகையென்றான், **முன்ன**மென்பது, உயர்ந்தோரும் இழிந்தோரும் ஒத்தோருந் தத்தம் வகையான் ஒப்பச் சொல்லுதற்குக் கருத்துப்படச் செய்தல்.[2] **பொரு**ளென்பது, புலவன் தான் தோற்றிக்கொண்டு செய்யப் படுவதோர் பொருண்மை.[3] **துறைவகை**யென்பது, முதலுங் கருவும் முறைபிறழ வந்தாலும் இஃது இதன்பாற் படுமென்று ஒகு துறைப்படுத்தற் கேதுவாகியதோர் கருவி அச்செய்யுட் குளதாகச் செய்தல்; அவையும் பலவாதலின் வகையென்றா னென்பது. **மாட்டெ**ன்பது, பல்வேறு பொருட்பரப்பிற் றாயினும் அன்றாயினும் நின்றதனொடு வந்ததனை ஒரு தொடர்

1. 'கூற்றிவையெனா' என்பது பாடமாகக்கொள்ளுமிடத்து இவை-யென்பது திணை கைகோள் கூற்று என்னும் மூன்றனையும் தொகுத்துச்சுட்டிய சுட்டுப்பெயராகக் கொள்ளுதல் வேண்டும்.

2. கூறுவாரும் கேட்பாரும் இன்னார் என வுணர்தற்கேற்ற சொல்லமைப்புச் செய்யுளில் அமையச் சொல்லுங்கருத்தமைதி முன்னம் என்னும் செய்யுளுறுப்-பாகும். முன்னம் - கருத்து,

3. செய்யுள் செய்யும் புலவன் தன்புலமைத் திறத்தால் தானே வகுத் துரைக்கும் பொருட்கூறு.

கொளீஇ முடித்துக்கொள்ளச் செய்தல். வண்ணமென்பது, ஒருபாவின்கண்ணே நிகழும் ஓசைவிகற்பம். எனாவென்பன, எண்ணிடைச் சொல்.

யாப்பியல்வகையின் ஆறுதலையிட்ட அந்நாலைந்துமென்பது, யாப்பிலக்கணப் பகுதியாகிய இருபத்தாறு மென்றவாறு. இவை யாப்பிற்கு இன்றியமையாத இலக்கணப் பகுதியவென விதந் தோதவே, இனிக் கூறும் உறுப்பெட்டும் இன்றியமையாமை இல்லை யென்றவாறு.

"அம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே யிழைபெனாஅப்
பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ"

யென்பது, இக்கூறப்பட்ட எண்வகை வனப்பொடு முன்னர்க் கூறிய இருபத்தாறுந் தொகுப்ப முப்பத்து நான்குறுப்பா மென்றவாறு. மற்றிவற்றை வனப்பென்று கூறற்குக் காரணம் அவற்றைக் கூறும் வழிச் (547) சொல்லுதும்.

நல்லிசைப் புலவர் செய்யுளென்பது, இவ்வுறுப்பனைத்துங் குறையாமற் செய்யப்படுவன நல்லிசைப் புலவர் செய்யுஞ் செய்யுளெனப்படு மென்றவாறு. நல்லிசைப்புலவர் செய்யுள் எனவே, எழுநிலத்தெழுந்த (391, 476) செய்யுளுள்ளும் அடிவரையறை யுடையவற்றுக்கே இவ்விலக்கண மென்பதூஉம், திணையே கைகோளெனக் கூறும் உறுப்பு முதலாயினவெல்லாம் ஏனை அறுவகைச் செய்யுட்கும் (476-7) உறுப்பாகா வென்பதூஉம், அவையொழிந்த உறுப்பினுள் ஏற்பன பெறுமாயினும் ஆண்டு வரையறையின்மையிற் கூறானென்பதூஉம், அவை செய்தாரெல் லாம் அவற்றானே நல்லிசைப் புலவரெனப்படா ரென்பதூஉம் பெற்றாம்.[1]

---

1. எழுநிலத்தெழுந்த செய்யுளாவன: பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. இவற்றுள் முதற்கண்வைத்துரைக்கப்பட்ட பாட்டு என்பன அடிவரையறையுடையன. திணை கைகோள் முதலியஉறுப்புக்கள் இத்தகைய பாட்டுக்கேயுரியன; பாட்டொழிந்த அடிவரையறையில்லாத ஏனைய அறுவகைச் செய்யுட்கும் இவை உறுப்பாகா.

இனி, நூலும் உரையுஞ் செய்தார் நல்லிசை யுடையரென்பது; அவற்றை நூலினான் உரையினானென இதற்கு இடையின்றி வைத்தமையிற் பெறுதுமென்பது. "வல்லிதிற் கூறி வகுத்துரைத்தனர்" நல்லிசைப் புலவரென்பது, அவற்றை நூலினான் இனி இங்ஙனங் கூறிய[1] நல்லாசிரியரிலக்கணமே கூறியொழிந்தார், எல்லாவற்றானும் எல்லாமமையச் செய்யுஞ் சுவடுடையராகி அவ்வத்துறை போயினார் தாமும் என்றவாறு; எனவே, இவ்வுறுப்பமையச் செய்தனவே செய்யுளெனப் படுவனவென்று சிறப்பித்தவாறு.

மற்றுக் 'கூறி' யெனவும் 'உரைத்தன'ரெனவும் இருகாற் சொல்லியதென்னையெனின்,- அச்செய்யுளானே கூறி அவற்றுப் பொருளுரைத்தா ரென்றவாறு; என்றார்க்குச் செய்யுட்குற்றம் ஈண்டோதாரோவெனின், ஓதல்வேண்டுமே? இவ்விலக்கணத்துப் பிறழ்ந்துங் குன்றியும் வருவனவெல்லாம் வழுவென்பதறிய வைத்தானல்லனே, ஆசிரியனென்பது.

மற்றுச் செய்யுளுறுப்பு ஈண்டோதினார்; செய்யுள் யாண்டோதுபவெனின், அறியாது கடாயினாய், உறுப்பென்பன உறுப்புடைப் பொருளின் வேறெனப்படா; பொருள் எனப் படுவன உறுப்பே, அவற்ற தீட்டத்தினை முதலென வழங்குப வாகலான் உறுப்பினையே சொல்லியொழிந்தார்; முதற்பொருள திலக்கணமென உறுப்பிலக்கணத்தினையே வேறுபடுத்துக் கூறலாவதின்மையானும் உறுப்புரைப்பவே அவ்வுறுப்புடைய பொருள் வழக்கியலாற் பெறலாமாகலானுமென்பது.[2]

---

1. 'இங்ஙனங்கூறிய' எனவரும் இவ்வுரைத்தொடர் 'வல்லிதிற்கூறி' எனச் சூத்திரத்தில் வினையெச்சமாக அமைந்தாற் போன்று 'இங்ஙனங்கூறி' என்றிருத்தலே பொருட்பொருத்தமுடையதாகும். 'ஓதல் வேண்டுமே' என்புழி ஏகாரம் உடன்படுதற் குறிப்பின் வந்த தேற்றேகாரமாகும். 'அறியவைத்தா னல்லனே என்பது 'அறியவைத்தான் அல்லவா' என வினாப்பொருளதாய் 'அறியவைத்தான்' எனத் தேற்றப்பொருள் தந்தது.

2. மாத்திரை முதலாகச் சொல்லப்பட்ட உறுப்புக்களின் தொகுதியே செய்யுளாகிய முதற்பொருளாதலின், அதன் உறுப்பிலக்கணமுணர்த்தவே உறுப்புடைய முதலாகிய செய்யுளிலக்கணமும் வழக்கியலாற் புலனாகும் என்பதாம். ஈட்டம்-தொகுதி.

மற்று, யாத்தசீரே யடியாப் பென்றதென்னை? தளையென் பதோர் உறுப்புப் பிறர் வேண்டுபவாலெனின், இருவருஞ் சீரது தொழிலே தளையென வேண்டுப, தளைத்தலிற் றளையாத- லானும் வேறு பொருளென வேண்டாரென்பது; என்றார்க்கு, அசையின்றிச் சீருமில்லை, சீரின்றி அடியுமில்லையாம்பிறவெனின், அற்றன்று; உறுப்பும் உறுப்புடைச் செய்யுளும்போல அவை கொள்ளப்படுந் தளையென வேறொன்றின்மையிற் கொள்ளான்;[1] என்னை ? அது குறளடியென வேறுறுப்பாயினமையின் என் பது; தளையென்றிதனைக் கோடுமேல் அதனைக் குறளடி யென லாகாதென்பது. அல்லதூஉம், ஈரசை கூடி ஒரு சீராயினவாறு போல இருசீர் கூடியவழி அவ்விரண்டனையும் ஒன்றென்று கோடல்வேண்டும்; கொள்ளவே நாற்சீரடியினை இடைதுணித் துச் சொல்லுவதன்றி நான்கு பகுதியானெய்திக் கண்டம்படச் சொல்லுமாறில்லையென்க. 'யாத்தசீர்' என்றதனானே அசை தொறுந் துணித்துச் சொல்லப்படா சீரென்பதூஉம், அச் சீரான் அடியானவழி 'சீரியைந்திற்றது சீரெனவே படு' (323) மென்றதனாற் சீரெல்லாந்துணித்துச் சொல்லப்படுமென்பதூஉங் கூறினான் இவ்வாசிரியனென்பது.[2] அற்றன்றியும், அவ்வாறு தளைகொள்வார் சீரா னடிவகுப்பதூஉங் குற்றமென மறுக்க. மற்றுத் தொடை கூறியதென்னை? அடியிரண்டு தொடுத்தற்

1. அசை, சீர், அடி எனப்படும் அவை உறுப்பும் உறுப்புடைச் செய்யுளும் போல முறையே சினையும் முதலுமாகக் கொள்ளப்படுவன. தளை என்பது சீரது தொழிலே யாதலானும் இருசீர் கூடியது குறளடியென வேறோருறுப்பாதலானும் தளையினை ஓர் உறுப்பாகக் கொண்டிலர் தொல்காப்பியனார்.

2. இனி, அசையிரண்டு கூடிச் சீராமாறுபோலச் சீரிரண்டுகூடித் தளையா மென்றால் நாற்சீரடியினை முதலிருசீரும் ஒன்றாகவும் பின்னிருசீரும் ஒன்றாகவும் துணித்துக் கூறுதல் வேண்டும். அவ்வாறு நாற்சீரடியினை இருசீர் இருசீராக இரண்டாக இடையே துணித்துக்கூறாது ஒவ்வொரு சீரினையும் தனித்தனியே துணித்து நான்கு பகுதியாகத் தாள அறுதிபடக் கூறுதலே ஓசைமரபாக அமைந் துளது, அன்றியும் 'யாத்தசீர்' என அடைபுணர்த்தோதினமையால் சீரினை அசை தொறுந் துணித்துச் சொல்லின் சீராகாதென்பதும் அசைகளைப் பிரிவின்றிச் சேர்த்துச் சொல்லவே சீராமென்பதும், சீரால் அடியாகும் நிலையிற் 'சீரியைந்- திற்றதுசீர்' (323) எனக் கூறுதலால் அடியிலுள்ள சீர்கள் எல்லாம் தாள அறுதிப்படத் துணித்துச் சொல்லப்படுமென்பதும் தொல்காப்பியனார் கொள்கை- யாதல் நன்கு புலனாம்.

கண்டம்படச் சொல்லுதலாவது, அடிக்கணுள்ள சீர்களை அறுதிபடத் துணித்துச் சொல்லுதல்.

றொழில்லதின்மையினெனின், அற்றன்று, தொடுத்தற்றொழின் மாத்திரையானே தொடை யென்றானல்லன், அவ்வடிக்கண் நின்ற எழுத்துஞ் சொல்லும் பிறபொருளாகலான் அவற்றானே தொடை கொண்டமையின் வேறுப்பென்றானென்பது. அஃதேற், சீருஞ் சீரும் இயைந்தவழி அவையிடமாக நின்ற அசையால் தளைகொள்ளாமோவெனின், கோடுமன்றே, அதனை அடியென்னாமாயின் என முற்கூறியவாறே கூறிமறுக்க. அல்லதூஉம் அவ்விரண்டசையுங் கூடிச் சீராமன்றோ வெனின் என்பது.[1] மற்று நாற்சீரடியுள் இருசீ ரியைந்தவழிக் குறளடி யென்னாமாகலின் அதனைத் தளையென்னாமோவெனின் அங்ஙனங்கொள்ளின் இருசீரடிக்கட்டளை வேண்டாதானாம்; ஆகவே, ஒருவழிக் கொண்டு ஒருவழிக்கொள்ளாமை **'மயங்கக்கூறல்'** (663) என்னுங் குற்றமாமென்பது[2] அல்லதூஉம், அங்ஙனமன்றி வருமா-யின் அடிக்கெல்லாம் பொதுவகையால் தளையுறுப்பெனப் படாது எழுத்தும் அசையும்போல யாண்டும் வருவனவெல்லாம் உறுப்பெனப்படுவன வென்றற்கு.

"இணைநூன் முடிபு தன்னூன் மேற்றே"

என்பதனாற் **காக்கைபாடினியார்** ஓதிய தளையிலக்கணம் ஈண்டுங் கோடல் வேண்டுமெனின், அதுவே கருத்தாயின்

---

1. அடியிரண்டு தொடுத்தல் தொழில்பற்றித் தொடைகொண்டாரல்லர்; அங்ஙனம் தொடுக்கப்படும் அடிக்கண் அமைந்த எழுத்துஞ் சொல்லும் பற்றித் தொடை கொண்டமையின் எழுத்துஞ்சொல்லுமாகிய அவற்றின் அமைப்பு தொடையென்னும் உறுப்பாயிற்று.

சீருஞ்சீரும் இயைந்தவழி அவையிடமாகநின்ற அசையால் தளையென்பதனை உறுப்பாகக் கொள்ளலாகாதோ என்றால், சீரும் சீரும் இயைந்த அவ்வமைப்பினை அடியென்றதோர் உறுப்பாகக்கொள்ளுதலால் அதனையே தளையெனக்-கொள்ளுதல் பொருந்தாது. அன்றியும் நின்ற சீரின் ஈற்றசையும் வருஞ்சீரின் முதலசையும் கூடித் தளையென்றதோருறுப்பாமெனின் அவ்விரண்டும் கூடிய நிலையில் மற்றொரு சீராகவும் கொள்ளப்படுமல்லவா? என வினவி மறுத்தவாறு.

2. இருசீர் இணைதல் குறளடியென அடியென்பதோர் உறுப்பாமெனக் கொள்ளினும் நாற்சீரடியுள் இருசீர் இணைந்த நிலையினைக் குறளடியெனக்கூறும் வழக்கமில்லையாதலால் நாற்சீரடிக்கண் தளையென்றதோருறுப்பு கொள்ளலா-மல்லவா என்றார்க்கு, அவ்வாறு நாற்சீரடிக்கண் தளையென்றதோருறுப்பினைக் கொள்ளுதலும் இருசீரடிக்கண்தளைகொள்ளாமையும் மயங்கக்கூறல் என்னும் குற்றமாம் ஆதலின் ஈரிடத்தும் தளையென்பதனை உறுப்பெனக் கொள்ளாமையே ஏற்புடையதாம் என்றவாறு.

அவர்க்கும் இவர் முடிவே பற்றித் தளை களையல்வேண்டும். அல்லதூஉம், இவர்க்கு **இளையரான காக்கைபாடினியார்** தளை கொண்டில ரென்பது இதனாற் பெற்றாம். தளைவேண்டினார் பிறகாலத்து ஓராசிரியரென்பது. என்னை ?

"வடக்குங் தெற்குங் குணக்குங் குடக்கும்
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை யகவயிற் கிடந்த
நூலதி னுண்மை வாலிதின் விரிப்பின்"

எனக் கூறி வடவேங்கடந் தென்குமரியெனப் **பனம்பாரனார்** கூறியவாற்றானே எல்லைகொண்டார் **காக்கைபாடினியார்.** ஒழிந்த **காக்கை பாடினியத்து,**

"வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்"
(தொல்-பொருள். 650)

எனத் தென்றிசையுங் கடலெல்லையாகக் கூறப்பட்டதாகலான் அவர் **குமரியாறுள்ள** காலத்தா ரல்லரென்பதூஉங், **குறும்பனை நாடு** அவர்க்கு நீக்கல் வேண்டுவதன்றென்பதூஉம் பெற்றாம். பெறவே, அவர் இவரோடு ஒருசாலை மாணாக்கரல்லரென்பது எல்லார்க்கும் உணரல் வேண்டுமென்பது.[1]

---

1. 'இணைநூன் முடிபு தன்னூன் மேற்றே' எனப் பேராசிரியருரையிற் காணப்படும் பழஞ்சூத்திரம், ''ஒருகாலத்து வாழ்ந்த கருத்தொற்றுமையுடைய ஆசிரியர் இருவர் செய்த இரண்டு நூல்களுள் ஒன்றிற்கூறிய முடிபு மற்றொன்றிலும் பொருந்தியமைதல் வேண்டும்'' என்னும் கொள்கையினை விதிப்பதாகும் எனக்கருதவேண்டியுளது. தொல்காப்பியனாருடன் ஒருசாலை மாணாக்கராய் அகத்தியனார்பால் தமிழ் பயின்ற காக்கைபாடினியார் என்பவரையே 'இவர்க்கு (தொல்காப்பியனார்க்கு) இளையரான காக்கை-பாடினியார்' எனப் பேராசிரியர் குறித்துள்ளார். தொல்காப்பியனாருடன் பயின்ற காக்கைபாடினியார் தொல்காப்பியனார்போலவே செய்யுளுறுப்புக்-களுள் ஒன்றாகத் தளை என்பதனைக் கொள்ளவில்லையென்பதும் தளையினைச் செய்யுளுறுப்பாகக் கொண்ட காக்கைபாடினியார் என்பவர் தொல்காப்பியனார் வாழ்ந்த காலத்திற்கு நெடுங்காலம் பிற்பட்டுத் தோன்றிய மற்றோராசிரியர் என்பதும், தொல்காப்பியனாருடன் ஒரு சாலைமாணாக்கராகிய காக்கைபாடினியார் என்பவர் தம் காலத்தில் வாழ்ந்த பனம்பாரனார் கூறியவாறே தமிழகத்தின் வடவெல்லை வேங்கடமெனவும் தென்னெல்லை குமரியாறெனவும் குறித்துள்ளார் என்பதும், தொல்காப்பியனார் காலத்திற்கு நெடுங்-

மற்றிது முறையாயவாறென்னை யெனின், மாத்திரை எழுத்தினது குணமாதலானும் அசையுஞ் சீரும் அடியுந் தூக்கும் பாவும் வண்ணங்களுமென்று இன்னோரன்னவெல்லாம் மாத்திரை நிமித்தமாகத் தோன்றுவனவாதலானும் அது முன் (314) வைத்தான். அக்குணத்திற்குரிய எழுத்தினை அதன்பின் வைத்தான். அவ்வெழுத்தான் அசையும், (315) அசையாற் சீருஞ் (324) சீரான் அடியும், (346) அவ்வடி பெற்றவழி அதனை ஆக்குமாறறியக் கூறும் யாப்பும் (390) அவ்வடியகத்தன சொல்லும் பொருளுமாகலான் அதன்பின் மரபும் (392) வைத்தான். அவ்வடியிரண்டினைத் தொடுக்குங்கால் அவற்றை ஓரடியென ஒரு தொடர்ப்படாமைத் துணிப்பது தூக்காகலான் (399) அதனைத் தொடைக்குமுன் (400) வைத்தான். அவ்வடியிரண்டு தொடுத்த வழியுங் கொள்ளப்படும் நோக்கென்பதறிவித்தற்கு (416) அதனைத் தொடைப்பின் வைத்தான். அவ்வடி இரண்டும் பலவுந் தொடர்ந்தவழி முழுவதுங் கிடப்பது பாவாகலான் அதனை அதன்பின் (417) வைத்தான். அப்பாத் துணிந்த துணிவினை (501) எண்ணுதலான் அளவினை (496) அதன்பின் வைத்தான். திணையுந் திணைக்குறுப்பாகிய (497) ஒழுகலாறும் அவ்வொழுக்கத்தவாகிய கூற்றும் (506) அதன்பின் வைத்தான். கேட்போருங் (508) கேட்கும் இடனும் (510) அதுபோலப் புலப்படாத காலமும் (514) இவற்றாற் பயனுமப் (515) பயனது பரத்துவரும்[1]

---

காலம் பிற்பட்டுத் தோன்றிய காக்கைபாடினியம் என்றநூலில் தமிழகத்தின் தென்னெல்லை கடலாகக் குறிக்கப்பட்டுள்ளமையால் இந்நூலாசிரியராகிய காக்கைபாடினியார் என்பவர் தமிழ் நாட்டின் தென்னெல்லை குமரியாறாக விளங்கிய தொல்காப்பியனார் காலத்தில் வாழ்ந்தவரல்லர் என்பதும் தமிழகத்தின் தென்திசையிலோடிய குமரியாறு கடலாற் கொள்ளப்பட்டுத் தமிழ்நாட்டின் தென்னெல்லை கடலாய் மாறிய பிற்காலத்தில் வாழ்ந்தவரென்பதும் நன்கு புலனாம். தொல்காப்பியனார் காலத்தில் வாழ்ந்த காக்கைபாடினியார் இயற்றிய காக்கைபாடினியத்தின் வேறாக ஒழிந்த காக்கைபாடினியம் என்னும் பிற்கால யாப்பிலக்கண நூலையியற்றிய காக்கைபாடினியார் என்பவர் தொல்காப்பியனாரோடு ஒருசாலைமாணாக்கரல்லர் என்பது தமிழிலக்கிய வரலாற்றை உள்ளவாறுணரவிரும்புவோர் எல்லோரும் இன்றியமையாதுணர்ந்து கொள்ள வேண்டிய வரலாற்றுச் செய்தியென்பதனை வற்புறுத்தும் முறையில் பேராசிரியர் எழுதிய இவ்வுரை விளக்கம் அமைந்துள்ளமை கூர்ந்துணரத்தகுவதாகும்.

1. பயனது பரத்துவரும் மெய்ப்பாடும் - பயனைச் சார்பாகக்கொண்டு தோன்றும் மெய்ப்பாடும். பாம்-சார்பு. பயன(துபாத்)து(ய்ப) வரும். பா.வே.

மெய்ப்பாடும் (516) இவற்றினெல்லாம் ஒழிந்துநின்ற எச்சமும் (518) அவ்வெச்சத்தோடுங் கூட்டி யுணரப்படும் முன்னமும் (519) அம்முறைமையான் அதன்பின் வைத்தான். ஆவற்றிற் கெல்லாம் பொதுவாகிய பொருளை (520) அதன்பின் வைத் தான். அப்பொருட் பிறழ்ச்சியை ஒருதுறைப்படுக்குந் துறையை அதன்பின் (521) வைத்தான். மேல் (523) எச்சமும் மாட்டு மின்றியும் வருஉமென்பவாகலான் மாட்டினைத் துறை வகையின் பின் வைத்தான். அவற்றுள் எச்சத்தினை முன் ஓதி னான் அது செய்யுட்கணின்றி வருஞ் சிறுபான்மையாதலா னென்பது; வண்ணம் பாவினது பகுதியுறுப்பாதலான் அதனை அவற்றுப் பின் (547) வைத்தான், வனப்பினை (525) எல்லா வற்றுக்கும் பின் (547) வைத்தான், அவற்றை ஒன்றொன்றாக நோக்குங்கால் அவ்வெட்டுமின்றியுஞ் செய்யுள் செய்பவாகலி னென்பது. மற்றிவ்வுறுப்பினையெல்லாம் ஆசிரியன் குறியென் றுமோ உலகு குறியென்றுமோ வெனின், அவ்விருதிறத்தானும் ஏற்பனவறிந்து கொள்ளப்படுமென்றொழிக. இவற்றை உயி ருடையதனுறுப்புப் போலக் கொளின் உயிர் வேறு கூறல்வேண் டுவதாம்; அவ்வாறு கூறாமையிற் கலவையுறுப்புப்போலக் கொள்க.

### நச்சினார்க்கினியம்

இவ்வோத்து செய்யுளது இலக்கணம் உணர்த்தினமையிற் செய்யுளியல் என்னும் பெயர்த்து: எனவே இவ்வோத்துநுதலியது செய்யுளிலக்கணமாயிற்று. பாயிரத்துள்

"வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்வல்"

என்றமையான் இதற்கு முன்னர்க்கூறிய அதிகாரங்களிலும் இவ்வதிகாரத்தும் எல்லாம் வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேண்டு-வனகூறி, அவ்விரண்டும்பற்றிச் செய்யுள் நிகழுமாதலால் அச்செய்யுட்குரிய இலக்கணத்தையெல்லாம் இவ்வோத்தினுட் டொகுத்துக் கூறுகின்றார் என்றுணர்க. இங்ஙனங்கூறவே, முற்கூறிய ஓத்துக்களோடு இயைபுடைத்தாயிற்று.

இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம்[1] :- இவ்வோத்தினுள் மேற்கூறுகின்ற செய்யுட்கு உறுப்பாவன இவையென்று அவற்றது பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

(இ-ள்) மாத்திரையென்றது எழுத்திற் குரித்தாக எழுத்ததிகாரத்தோதிய மாத்திரைகள் தத்தம் அளவின் இறந்து பாவின் ஓசை வேறுபாடுகளையுணர்த்தி விராஅய் நிற்கும்நிலையை: மாத்திரையென்றது மாத்திரையளவை என்பதூஉம், எழுத்தியல் என்றது எழுத்தியல்வகையை என்பதூஉம் மேலைச்சூத்திரத்தாற்[2] பெறுக. எழுத்தியல்வகையென்றது எழுத்ததிகாரத்துக் கூறிய எழுத்துக்கள் செய்யுட்கியலும் வகையை. அசைவகையென்றது இயலசையும் உரியசையும் என இருவகையாம் அசைக் கூறுபாட்டினை. யாத்தசீர் என்றது பொருள்பெறத் தொடர்ந்து நிற்குஞ் சீரை: எனவே அசையும் தனித்தனியே பொருள்பெறுவனவும் தனித்தனிப் பொருளின்றிச் சீராய வழிப் பொருள் பெறுவனவும் என இருவகையாம்; தேமா, சாத்தன்[3] எனவரும். அடியென்றது அச்சீர் இரண்டும்பலவுந் தொடர்ந்ததோருறுப்பை. யாப்பென்றது அவ்வடிதொறும் பொருளேற்றுநிற்பச் செய்வதோர் செய்கையை. மரபென்றது காலந்தொறும் இடந்தொறும் வழக்குத் திரிந்தவாற்றுக்குக்கேற்ப வழுப்படாமற் செய்வதோர் முறைமையை. தூக்கென்றது பாக்களைத் துணித்து நிறுத்தலை. தொடைவகையென்றது எழுத்துச்சொற் பொருள்களை எதிரெதிர்நிறீஇத் தொடுக்கின்ற தொடைப்பகுதிகளை. நோக்கென்றது மாத்திரை முதலிய உறுப்புக்களை யுடைத்தாய்க் கேட்போர்க்கு நோக்குதல்படச் செய்தலை. நோக்குதல் - பயன் கோடல். பாவென்றது இவ்வுறுப்புக்களையுடைத்தாய்ச் சேட்புலத்திருந்து சொல்லும் பொருளுந் தெரியாமல் ஒருவன்கூறிய வழியும், இஃது என்னசெய்யுளென்றறிவதற்கு ஏதுவாகிப் பரந்துபடச் செய்வதோரோசையை. அளவியல் என்றது அடி வரையறையை. திணையென்றது அகத்திணையும் புறத்திணையும்

---

1, தலைச்சூத்திரம் - முதற்சூத்திரம்.

2. மேலைச்சூத்திரம் - இதனை அடுத்து வரும் இரண்டாஞ் சூத்திரம்.

3. 'தேமா' என்றது, தனித்தனியே பொருள்தரும் அசையால் இயன்ற சீருக்கு உதாரணம். 'சாத்தன்' என்றது, அசை தனித்தனியே பொருள் தராது சீராயவழிப் பொருள் பெற்று வந்ததற்கு உதாரணம்.

அறியச்செய்தலை. கைகோள் என்றது அவ்வத்திணையொழுக்கம் அறியச் செய்தலை. கூற்றுவகையென்றது அச்செய்யுட் கேட்டோரை இது கூறுகின்றோரின்னோரென அறிவித்தலை. கூற்றிவை என்பது பாடமாயின் அஃது எண்ணிய மூன்றினையுந்[1] தொகுத்ததாம். கேட்போர் என்றது இன்னார்க்குக் கூறுகின்றது இதுவெனத் தெரித்தலை. களனென்றது இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் முதலியன உணரச்செய்தலை. காலவகையென்றது முக்காலத்தும் திணைநிகழ்ச்சிக்கண்ணே பொருணிகழ்ச்சியுணரக் கூறலை. பயனென்றது சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச்செய்தலை. மெய்ப்பாடென்றது சொற் கேட்டோர்க்குப் பொருள் கட்புலனாதலை.[2] எச்சவகை யென்றது சொல்லப்படாத ஒழிபும் தழீஇக்கொள்ளச்செய்தலை: அது கூற்றும் குறியும்[3] எனவருதலின் வகையென்றார். முன்னமென்றது கூறுவாரையும் கூறக்கேட்டோரையும் குறிப்பான் எல்லாரும் கருதும்படி செய்தலை. பொருள் என்றது புலவன் றான்றேற்றிக் கொண்டு செய்வதோர் பொருண்மையை.[4] துறைவகை யென்றது முதலுங் கருவும் முறைபிறழ்ந்தாலும் இஃது இதன்பாற்படு மென்று ஒருதுறைப்படுத்தற்கேதுவாயதோர் கருவியுளதாகச் செய்தலை. மாட்டென்றது அகன்றும் அணுகியுங் கிடந்த பொருள்களைக் கொண்டுவந்து தொடராகக் கூட்டி முடித்தலை. வண்ண மென்றது ஒருபாவின்கண் ணிகழும் ஓசை விகற்பத்தை. எனாஅ என்ற எல்லாம் எண்ணிடைச்சொல். ஏகாரங்கள் எண்ணுப்பொருட்டு.[5] யாப்பியல் வகையி னாறுதலையிட்ட அந்நாலைந்தும் என்றது யாப்பிலக்கணப் பகுதியால் அவ்வண்ணத் தொடு கூறிய இருபத்தாறும் எ-று. அம்மை ...... வகுத்துரைத் தனரே என்றது அம்மைமுதலிய எண்வகை வனப்பொடும் முற்-

1. எண்ணிய மூன்றாவன: திணை, கைகோள், கூற்று என்பன,

2. 'மெய்ப்பாடு' என்புழி மெய் - பொருள்; பாடு - தோன்றுதல் (கட்புலனாதல்).

3. 'கூற்றுங்குறிப்பும்' என்றிருத்தல் வேண்டும்.

4, தான் தோற்றிக்கொண்டு செய்தலாவது, செய்யுள் செய்யும் புலவன் தானே பொருள் வகையினைப் புதுவதாகப் படைத்துக்கொண்டு செய்தல்.

5. 'எண்ணுப்பொருள' எனத் திருத்துக.

கூறிய இருபத்தாறுந் தொகுத்து முப்பத்துநான்குறுப்பாக்கி இம்முப்பத்துநான்கும் நல்லிசைப்புலவர் செய்யப்படுஞ் செய்யுட்கு உறுப்பாமென்றுகூறி, அங்ஙனம் இலக்கணமே கூறி விடாதே அவற்றைத் தாஞ் செய்தல் வன்மையினமைந்து சுவடுபட வகுத்த[1] அவ்வத்துறையெல்லாம் போயினார் **என்றவாறு.**

செய்யுளுறுப்பெனக்கூறி வல்லிதின் வகுத்துரைத்தனரென மாறுக. இருபத்தாறுஎன்றும் எட்டுஎன்றும் இருவகையாற் றொகை கூறியது, இருபத்தாறும் தனிநிலைச் செய்யுட்கு ஒன்றொன்றனை இன்றியமையாவாய் வருதலும், அவ்வெட்டும் பல செய்யுட்டொடர்ந்த தொடர்நிலைச்செய்யுட்கே பெரும்பான்மையும் உறுப்பாய் வருதலும், தனிநிலைக்கண் ஒரோவொன்றாயும் வருதலும் அறிவித்தற்கு என்க. இவ்வுறுப்புக் குறையாமற் செய்யுட் செய்வார் நல்லிசைப்புலவர் என்பதூஉம், அடிவரையறை கூறியவற்றிற்கே இவ்விலக்கணமென்பதூஉம், அடிவரையறையில்லா நூன்முதலிய ஆறற்கும் திணைமுதலிய உறுப்பு ஆகா என்பதூஉம், அவற்றுள் நூலும் உரையும் ஒழிந்த நான்கும் செய்தார் இசைப் புலவராகார் என்பதூஉம் உணர்க. இனி நூலும் உரையும் செய்தாரும் நல்லிசைப்புலவர் என்பது பின்னர் அவற்றிற் கிலக்கணம் கூறும்வழி யுணர்க. உறுப்பெனவே உறுப்புடைச் செய்யுளும் அதன்கண் அடங்கும், உறுப்பினது ஈட்டம் முதலாதலின்[2].

இவ்வாசிரியர் தளையை உறுப்பாகக் கொள்ளாத தென்னையெனின்:- தளையாவது சீரினது தொழிலாய்ப் பாக்களின் ஓசையைத்தட்டு இருசீரிணைந்ததாகும்; அவ்வாறிணைந்த இருசீரினையும் ஆசிரியரெல்லாம் இருசீர்க்குறளடியென அடியாகவே வகுத்துக்கொண்டாராதலின் தளையென வேறோ ருறுப்பின்றாம். அன்றியும், தளையான் அடிவகுப்பாரும் உளராயினன்றே அதனை உறுப்பென்று கொள்ளவேண்டுவது; அங்ஙனம் வகுத்துக் கொள்ளாமையின் உறுப்பென்னாது சீரது தொழிலாய் ஓசையைத் தட்டு நிற்பதொன்றென்றே கொண்டார். அதனை யுறுப்பென்-

1. 'சுவடுபட வகுத்தார்' என முற்றுச்சொல்லாகத் திருத்திக் கொள்க.
2. ''உறுப்பினது ஈட்டம் முதலாதலின், உறுப்பு எனவே உறுப்புடைச் செய்யுளும் அதன்கண் அடங்கும்'' என இயைத்துப் பொருள் கொள்க. உறுப்பினது ஈட்டம்-அங்கங்களின் தொகுதி. முதலாதல்-அங்கியாதல்.

பார்க்குச் சீரான் அடிவகுத்தல் குற்றமாம். தொல்காப்பியரோடு ஒருசாலை மாணாக்கராகிய காக்கைபாடினியாரும் உறுப்பென்னார்; பின்றோன்றிய காக்கைபாடினியார் முதலியோர் கொள்வர்: அது பொருந்தாது.

இச்சூத்திரத்துட் கூறிய முறையே முறையாமாறு வருகின்ற சூத்திரங்களின் பொருட்கிடையான் உய்த்துணர்க. வனப்பெட்டும் தனித்தனி வருமாறும் தம்முள் இயைபுடைமையும் ஆண்டுணர்க. இவ்வுறுப்பினை ஆசிரியன்குறியும் உலகத்தார்குறியுமாகக் கொள்க. இவற்றை உயிரில்லாத கலவையுறுப்புப் போற் கொள்க.[1]

## ஆய்வுரை :

முன்னர் உணர்த்தப்பட்ட அகமும் புறமுமாகிய பொருண்மையெல்லாவற்றிற்கும் இடமாகிய செய்யுளது இலக்கணம் உணர்த்தினமையால் இது செய்யுளியல் என்னும் பெயர்த்தாயிற்று. எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் உலக வழக்கிற்குஞ் செய்யுள் வழக்கிற்கும் வேண்டும் விதிகளை விரவிக் கூறிப் பொருளதிகாரத்தில் இதுகாறும் பெரும்பாலும் உலக வழக்கிற்கு வேண்டிய விதிகளையே கூறிவந்த ஆசிரியர், அப்பொருள்பற்றிச் செய்யுள் இயலுமாறு கூறக்கருதி, இவ்வதிகாரத்துட் குறிக்கத் தகுந்த செய்யுளிலக்கணமெல்லாம் இவ்வியலில் தொகுத்துணர்த்துகின்றார். எனவே பொருளதிகாரத்தின் முன்னுள்ள ஏழியல்களும் உலக வழக்கும் செய்யுள் வழக்குமாகிய அவ்விரண்டற்கும் பொதுவென்பதும், செய்யுளியலாகிய இது, செய்யுட்கேயுரித்தென்பதும் நன்கு பெறப்படும். இவ்வியலில் அமைந்த சூத்திரங்களை இளம்பூரணர் 235-ஆகவும், பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் 243-ஆகவும் பகுத்து உரை வரைந்துள்ளார்கள்.

இனி, செய்யுளியலாகிய இதனை யாப்பதிகாரம் என வேறோர் அதிகாரமாக்கிக் கூறுவாருமுளர். அங்ஙனங்கூறின் வழக்கதிகாரம் என வேறொன்று கூறுதல் வேண்டுமாதலானும், எழுத்துஞ் சொல்லும் பொருளும் என மூன்றற்கும் மூன்றதிகாரமாக்கி அதிகாரம் ஒன்றற்கு ஒன்பது இயல்களாக ஆசிரியர்

1. நச்சினார்க்கினியர் தரும் இவ்விளக்கம் பேராசிரியர் உரையை அடியொற்றியமைந்ததாகும்.

நூல் செய்த முறையோடு மாறுகொள்ளுமாதலானும் அது பொருந்தாது என மறுப்பர் பேராசிரியர்.

இந்நூற்பா செய்யுளுறுப்புக்கள் எல்லாவற்றையும் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ - ள்.) மாத்திரை, எழுத்தியல், அசைவகை, சீர், அடி, யாப்பு, மரபு, தூக்கு, தொடைவகை, நோக்கு, பா, அளவியல், திணை, கைகோள், கூற்றுவகை, கேட்போர், களன், காலவகை, பயன், மெய்ப்பாடு, எச்சவகை, முன்னம், பொருள், துறைவகை, மாட்டு, வண்ணம் என வரும் யாப்பிலக்கணப்பகுதியாகிய இருபத்தாறும், அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு எனவரும் வனப்பு எட்டும் ஆக இங்குக் கூறப்பட்ட முப்பத்து நான்கும் நல்லிசைப்புலவர் கூறும் செய்யுளுக்கு உறுப்பாம் என்றவாறு.

இதன்கண் மாத்திரை முதல் வண்ணம் ஈறாக முற்கூறப்பட்ட இருபத்தாறும் ஒவ்வொரு செய்யுட்கும் இன்றியமையாதனவாய் வரும் உறுப்புக்கள் எனவும், பிற்கூறப்பட்ட அம்மை முதலிய எண்வகை வனப்புக்களும் செய்யுட்கள் பல தொடர்ந்தமைந்த தொடர்நிலைப் பனுவலுக்கே பெரும்பான்மையும் உறுப்பாகவும் தனிநிலைச் செய்யுட்களில் ஒரோவொன்றாகவும் வருவன எனவும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தெளிவாகக் குறித்துள்ளனர்.

செய்யுளுக்குரிய உறுப்புக்கள் எல்லாவற்றையும் தொகுத்துக் கூறுவதாகிய இச்சூத்திரத்தில் தளை என்பது தனியுறுப்பாக எடுத்துரைக்கப்படவில்லை. தளையாவது, நின்ற சீரின் ஈற்றசையுடன் வருஞ்சீரின் முதலசை ஒன்றியும் ஒன்றாமலும் தம்முள் தளைத்து (கட்டப்பட்டு) நிற்றல். சீரது தொழிலாகிய இத்தளையைச் செய்யுளுக்குரிய தனியுறுப்பாகக் கொள்ளாது, சீராலாகிய அடியின் அமைப்பாகவே கொண்டு இலக்கணங் கூறினார் தொல்காப்பியனார். இவ்வாறன்றிச் சிறுகாக்கை பாடினியார் முதலிய பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்கள் தளையென்பதனைச் செய்யுளுக்குரிய தனியுறுப்பாகவே கொண்டனர். இருசீர் இணைந்தது குறளடியாம் என்பது ஆசிரியர் தொல்காப்பியனார்க்கும் பிற்கால யாப்பிலக்கண நூலாசிரியர்க்கும் ஒப்ப முடிந்ததாகும். இனி, சீரிரண்டு தளைத்துநிற்றல் தளையென்னுந் தனியுறுப்பாமெனக் கொள்ளின் இவ்விருசீர்

இணைப்பைக் குறளடியென வேறோர் உறுப்பாகக் கொள்ளுதல் பொருந்தாது. அன்றியும் தளைபல அடுத்து நடப்பதே அடியெனக் கொள்ளும் பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்க்குத் தாம் உறுப்பெனக் கொண்ட தளையால் அடிவகுப்பதன்றிச் சீரால் அடிவகுத்தல் குற்றமாய் முடியும். ஆதலால் சீரது தொழிலாகிய தளையென்பதனைச் செய்யுளுக்குரிய தனிவேறுறுப்பாகக் கொள்ளுதல் கூடாதென்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் முதலியோர் துணிபாகும்.

**உ. அவற்றுள்,**
**மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்**
**மேற்கிளந் தனவே[1] யென்மனார் புலவர்.**

என்பது சூத்திரம்.

## இளம்பூரணம் :

(இ - ள்.) என்—எனின். மேற்சொல்லப்பட்டவற்றுள் மாத்திரை வகையு மெழுத்தியல் வகையு மேல் எழுத்ததிகாரத்துச் சொல்லப்பட்டன வென்று சொல்லுவர் புலவரென்றவாறு.

ஈண்டு வேறுபாடில்லை யென்றவாறு.[2] அவையாவன குற்றெழுத் தொருமாத்திரை; நெட்டெழுத்து இரண்டு மாத்திரை; உயிரளபெடை மூன்றுமாத்திரை; குற்றிய லிகரமுங் குற்றியலுகரமும் ஆய்தமு மெய்யும் ஒரோவொன்று அரை மாத்திரை; ஒற்றளபெடை ஒரு மாத்திரை; ஐகாரக் குறுக்கம் ஒரு மாத்திரை; மகரக்குறுக்கங் கால்மாத்திரை; ஏறிய உயிரினளவே உயிர்மெய்க்களவு.[3]

---

1. 'மேற்கிளந்தன்ன' என்பது பேராசிரியருரையிற்கண்ட பாடம்.
2. மாத்திரையளவும் எழுத்தியல்வகையும் மேற்கிளந்தனவே என்றமையால் மேல் எழுத்ததிகாரத்திற்கூறப்பட்ட அவற்றினியல்பு செய்யுளியலாகிய இவ்-விடத்தும் வேறுபடுதலில்லையென்பதாம்.
3. இவ்வுரைத் தொடரையடியொற்றி எழுத்துக்களின் மாத்திரை வகுத்-துரைப்பது,

''மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையௌக் குறுக்க மொற்றள
பரையொற் றிஉக் குறுக்க மாய்தங்
கால்குறள் மஃகா னாய்த மாத்திரை.'' (நன். எழுத்தியல்-43)

எனவரும் நன்னூற் சூத்திரமாகும்.

இளம்பூரணர் செய்யுளியலில் எழுத்துக்களைப் பகுத்தாற்போலவே யாப்பருங் கலக்காரிகையாசிரியரும்,

**எழுத்தியலாவது**—உயிரெழுத்து, மெய்யெழுத்து, சார்பெழுத்தென மூவகைப்படும். உயிரெழுத்து குற்றெழுத்து, நெட்டெழுத்து, அளபெடையென மூவகைப்படும். மெய்யெழுத்து வல்லினம், மெல்லினம், இடையினமென மூவகைப்படும். சார்பெழுத்து, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தமென மூவகைப்படும். மெய்யினுட் சிலவும் ஆய்தமும் அளபெடுக்கப் பெறும்.

குற்றெழுத்து அ, இ, உ, எ, ஒ. நெட்டெழுத்து ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. அளபெடை ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ. வல்லினம் க ச ட த ப ற. மெல்லினம் ங ஞ ண ந ம ன. இடையினம் ய ர ல வ ழ ள. குற்றியலுகரமாவது நெட்டெழுத்தின் பின்னரும் மூன்றெழுத்து முன்னான மொழியினும் வல்லெழுத்தை ஊர்ந்து வந்த உகரம். நாகு-நாக்கு; காசு-காச்சு: காடு - காட்டு; காது - காத்து; காபு - காப்பு; காறு - காற்று என இந்நிகரன. குற்றியலிகரமாவது இவ்வுகரந்திரிந்து மகர மூர்ந்து யகர-

---

''குறினெடி லாவி குறுகிய மூவுயி ராய்தமெய்யே
மறுவறு மூவின மைதீ ருயிர்மெய் மதிமருட்டுஞ்
சிறுநுதற் பேரமர்க் கட்செய்ய வாயைய நுண்ணிடையாய்
அறிஞ ருரைத்த வளவு மசைக்குறுப் பாவனவே. (யா. கா-)

எனப் பகுத்துக் கூறியுள்ளார்.

குற்றியலுகரம் பற்றியும் ஆய்தம்பற்றியும் குற்றியலிகரம் பற்றியும் விளக்கும் நிலையில் இளம்பூரணருரையிற்காணப்படும் இவ்வுரைத் தொடர்களை முறையே யடியொற்றியமைந்தன,

'நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே' (எழுத்தியல் - 39)

எனவும்,

'யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச் சொன்மியாவி னிகரமுங் குறிய' (எழுத்தியல் - 38)

எனவும்,

'குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே' (எழுத்தியல் - 35)

எனவும்,

'தற்சுட் டளபொழி யைமூவ ழியும்
நையும் ...... ...... ......' (எழுத்தியல் - 40)

எனவும்,

'ணன முன்னும் வஃகான்மிசையு மக்குறுகும்' (எழுத்தியல் - 41)

எனவும் வரும் நன்னூற் சூத்திரங்களாகும்.

மோடியைந்து வரும். நாகியாது உகரந்திரிந்தது; கேண் மியா மகர மூர்ந்தது; பிறவு மன்ன. ஆய்தமாவது குற்றெழுத்திற்கும் வல்லெழுத்திற்கும் இடை வரும். அஃதாவது எஃகு என வரும். ஒற்றளபெடையாவது மெல்லினமும் வயலளவும் ஆய்தமும் அளபெடுக்கும். அவை மங்ங்கலம், மஞ்ஞ்சு என வரும்.

இனி உயிருமெய்யுங் கூடி உயிர்மெய்யெழுத்தாம். அவை ககர முதல் னகரவீறாகிய இருநூற்றொருபத்தாறாம். இன்னும் ஐகாரக் குறுக்கமும் மகரக்குறுக்கமும் என்பவுமுள. ஐகாரக்குறுக்கம் அளபெடையுந் தனியு மல்லாதவழிக் குறுகும். மகரக்குறுக்கம் ணகர னகர ஒற்றின் பின்வரும். புணர்மொழிக்கண் வகரத்தின் மேனின்ற மகரங் குறுகும்.

இவையெல்லாம் எழுத்ததிகாரத்துட் காண்க.

**பேராசிரியம் :**

இது, நிறுத்த முறையானே முதற்கணின்ற மாத்திரையும் எழுத்தியலு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மாத்திரைகள் பல தொடர்ந்து செய்யுட்கண் விராய் நிற்கும் அளவையும்,[1] எழுத்துக்களியற்றப்பட்டு எழுத்ததிகாரத்தின் வேறுபட்ட தொகையுமென[2] இரண்டினமும் மேல் எழுத்தோத்தினுட் கூறப்படாதனவல்ல;[3] அவையே : அவற்றை ஈண்டு வேண்டுமாற்றாற் கொள்க என்பான் மேற் கிளந்தவகையிற் பிறழாமற் கொள்க என்றானென்பது.

அன்னவெனவே, இம் 'மாத்திரையளவும் எழுத்தியல் வகையும்' வேறென்பதூஉம், வேறாயினும் ஆண்டுக் கூறியவற்றோடு வேறுபடாமைக் கொள்க வென்பதூஉம் உரைத்தானாம். எனவே, எல்லா வழியும் வரையாது எய்தற்பாலவாகிய மாத்திரைகள் ஒரோவழி வரையப்படுமாயினும் அவை முற்கூறாத வேறு சில மாத்திரையுமல்ல, ஈண்டுப் பதினைந்து எழுத்தென்று

1. எழுத்தொலிக்குரிய கால அளவு தொடர்ந்து செய்யுட்கண் அமைந்து நிற்கும் அமைப்பு இங்கு 'மாத்திரை அளவு' என்பதாகும்.

2. எழுத்ததிகாரத்தில் முப்பத்துமூன்று எனக் கூறப்பட்ட தொகை இங்குச் செய்யுளியலிற் பதினைந்தென இயற்றிக்கொள்ளப்படுதலின் எழுத்ததிகாரத்தின் வேறுபட்டதொகை என்றார்.

3. எழுத்ததிகாரத்திற் கூறப்பட்டனவே.

கூறிப் பயங்கோடுமாயினும் ஆண்டை முப்பத்து மூன்றெழுத்தின் வேறுபடப் பிறந்தன சில வெழுத்துமல்லவென்பான், மேற்கிளந் தன்னவென்றானென்பது. மாத்திரையென்றொழியாது மாத் திரையளவுமென்றதனான் அம்மாத்திரையை விராய்ச்செய்யும் அளவை ஈண்டுக் கூறினானென்பது கருத்து. மற்று, எழுத்தியல் வகையினை மாட்டேற்றான் முப்பத்து மூன்றெனக் கொள்வ தன்றிப் பதினைந்தென்று கொள்ளுமாறென்னையெனின் எழுத்-தோத்தினுட் குறிலுநெடிலும் உயிருமெய்யும் இனமூன்றுஞ் சார்-பெழுத்து மூன்றுமெனப் பத்தும் இயல்புவகையான் ஆண்டுப் படுத்தோதினான், உயிர்மெய்யும் உயிரளபெடையுந் தத்தம் வகையாற் கூடுமாறும் ஐகாரம் ஔகாரம் போலிவகையாற் கூடுமாறும் யாழ்நூலகத்து ஒற்றிசை நீளுமாறும் ஆண்டுத் தோற்றுவாய் செய்தான். செய்யவே, அவை ஈண்டுக்கூறும் எழுத்-தியல் வகையோடொக்குமென்று உய்த்து உணர்ந்துகொள்ள வைத்தானென்பது. இவற்றோடு மகரக்குறுக்கமுங் கூட்டிப் பதினாறெழுத்து என்பாருமுளர்.[1] அதனாற் பயனென்னையெனின் பாட்டுடைத்தலைவன் கேட்டுக்குக் காரணமாமென்பர். மற்று உயிர்மெய்த் தொடக்கத்து ஐந்தனையும் மேல் எழுத்தென் றிலனாகலான் ஈண்டு எழுத்தியல்வகையுள் எழுத்தாக்கி அடக்கு மாறென்னையெனின், ஈண்டு அன்னவெனவே ஆண்டு இரண் டெழுத்தின் கூட்டமெனவும் மொழியெனவும் போலியெனவுங் கூறினானாயினும் அவற்றை எழுத்தியல் வகையெனப் பெயர் கொடுப்பவே ஆண்டு நின்ற வகையானே ஈண்டு எழுத்தெனப் படுமென்பதாயிற்று.

---

1. அளபெடையினை உயிரளபெடை ஒற்றளபெடை என இரண்டாகக் கொண்டு மகரக்குறுக்கத்தை எண்ணாது எழுத்துக்களைப் பதினைந்தாக இயற்றிக் கொள்ளுதல் தொல்காப்பிய மரபாகும். அளபெடையை ஒன்றாக எண்ணி மகரக் குறுக்கத்தைக் கூட்டிப் பதினைந்தாக எண்ணினார் யாப்பருங்கலவாசிரியர். எனினும்,

'தனிநிலை யொற்றிவை தாமல கிலவே
அளபெடை யல்லாக் காலை யான' (யாப்பருங்கலம் சூ-3)

என ஒற்றளபெடுத்தலையும் அவ்வாசிரியர் உடன்பட்டுரைத்தலால் அவரும் அளபெடையினை உயிரளபெடை ஒற்றளபெடை என இரண்டாகப் பகுத்துக் கொண்டமை புலனாம். எனவே அசைக்குறுப்பாம் எழுத்துக்கள்; உயிர், மெய், உயிர்மெய், குறில், நெடில், உயிரளபெடை, ஒற்றளபெடை, வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம் எனப்பதினாறாயின.

இதன் கருத்து, 'இய'லென்றதனான் இயற்றிக்கொள்ளும் வகையான் எழுத்து இனையதென்றானாம். 'வகை' யென் பதனான் முப்பத்து மூன்றினைக் குறிலும் நெடிலுமென்றற் றொடக்கத்துப் பெயர் வேறுபாட்டாற் பத்துவகைப்பட இயற்று தலுங் கூட்டவகையா னிரண்டும் போலிவகையா னிரண்டும் யாழ்நூல்வேண்டும் வகையா னொன்றுமென ஐந்துவகையா னியற்றுதலுமென இரு வகையுங் கொள்ளப்படும்.[1] அல்லதூஉஞ் செய்யுட்கள் அவ்வெழுத்து வகையான் இன்னோசையவாக விராய்ச்செய்தலுங் கொள்க. மற்றளபெடையை மேல் மொழி யென்றான் ஈண்டெழுத்தென்றானாகலின் இதனை ஓரெழுத் தென்று கோடுமோ இரண்டெழுத்தென்று கோடுமோவெனின்,

'நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே"
(தொல்-எழுத்-மொழி. 8.)

என்று கூறியவாற்றான் ஆண்டிரண்டெழுத்தெனக் கொள்ளக் கிடந்ததாயினும் முன்னர்ப் போக்கி,

"அளபெடை யசைநிலை யாகலு முரித்தே'
(தொல்-செய். 17)

என்றவழி எழுத்து நிலைமையும் எய்துவிக்குமாகலான் எதிரது நோக்கி ஈண்டு ஓரெழுத்தென்று கோடுமென்பது.[2] இனி அவற்-றுட் குறிலும் நெடிலுங் குற்றுகரமும் அசைக்குறுப்பாம். மற்று,

---

1. உயிர் பன்னிரண்டும் மெய்பதினெட்டும் சார்பெழுத்து மூன்றும் ஆக முப்பத்து மூன்றெழுத்துக்களையும் குறில், நெடில், உயிர், மெய், வலி, மெலி, இடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் எனப்பத்துவகையாகப்பகுத் துரைத்தல் இயல்பு வகையாற்கொள்ளப்படும் பகுப்பாகும். உயிர்மெய், உயிரள பெடை, என்னும் இரண்டும் எழுத்துக்களிரண்டு கூடிய கூட்டத்தினாற் பெற்ற பெயர். ஐகாரக் குறுக்கம், ஔகாரக்குறுக்கம் என்பன இரண்டும் போலிவகையாற் கொள்ளப்பட்டன. ஒற்றிசை நீளுதல் ஒன்றும் இசைநூல் வேண்டுமாற்றான் கொள்ளப்பட்டது. எனவே இவையைந்தும் செயற்கைவகையால் இயற்றிக் கொள்ளப்படும் பகுப்பாகும்.

2. உயிரளபெடையினை நெடிலும் குறிலும் ஆகிய இரண்டெழுத்தின் கூட்டம் என எழுத்ததிகாரத்திற்கொண்ட தொல்காப்பியனார், இவ்வியலிற் பின்னர் 'அளபெடை யசைநிலை யாகலும் உரித்தே' (செய். 17) என ஓரெழுத்-தாம் நிலைமையினையும் எய்துவிக்கின்றாராதலின், எதிரது நோக்கி இவ்வியலில் உயிரளபெடையினை ஓரெழுத்து எனக் கொள்வோம் என்பர் பேராசிரியர். கொள்-தும்-கோடும் எனப்புணர்ந்தது. கோடும்-கொள்வோம்; தன்மைப் பன்மைவினைமுற்று.

'ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி' (தொல்-செ. 3) என்பதனான், ஒற்றும் அசைக்குறுப்பாகாவோவெனின், அச் சூத்திரத் தானன்றே அவை குறிலும் நெடிலும் அடுத்து வந்தும் வேறுபடாது நேர்நிரையாதலெய்தியது நோக்கி அவை அசைக் குறுப்பாகா வென்றதென்க.[1] மற்று இடைநின்று நிரையாதலை விலக்காவோவெனின், அன்னதொரு விதியுண்டாயினன்றே இவை இடைபுகுந்து விலக்கவேண்டுவதென மறுக்க. நெடிலும் அளபெடையிரண்டும் உயிரும் உயிர்மெய்யும் வல்லினமும் மெல் லினமும் இடையினமும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமு மெனப் பத்துந் தொடைக்கு உறுப்பாம். குறிலும் நெடிலும் அள பெடையிரண்டும் இனம் மூன்றும் ஆய்தமும் வண்ணத்திற்கு உறுப்பாம். இங்ஙனமே வேறுபடவந்த பயனோக்கி எழுத்தினை இயற்றிக்கோடலின் எழுத்தியல்வகை யென்றானென்பது. அஃதேல் ஒற்றுங் குற்றிகரமும் ஈண்டோதியதென்னை யெனின், ஒற்றள பெடையான் அசைநிலையுஞ் சீர்நிலையுங் கோடலின் ஈண்டு ஒற்றுக் கூறினான். குற்றிகரமும் உயிராயினும் ஒற்றுப்-போல எழுத்தெண்ணி அடிவகுக்குங்கால் எண்ணப்படா-தென்றற்குக் கூறினானென்பது.[2] அஃதேல்,

"ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்" (320)

என்பவாகலின், அதை ஈண்டுத் தழாஅற்கவெனின், அக்கருத் தினால் அவ்வாறும் அமையுமென்பது; அற்றன்று, இதனை மேற் புள்ளிபெறு மென்றிலனாதலான் புள்ளிபெறு மென்றற்கும்

"ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்" (320)

என்றானென்பது.[3]

---

1. குறிலும் நெடிலும் ஒற்றொடு வந்தாலும் ஒற்றின்றித் தனித்து வந்-தாலும் நேரசையாம் எனவே அசைகொள்வதில் ஒற்றெழுத்துக்கெனத் தனிமதிப் பில்லை யென்பது பெறப்படுதலால் ஒற்றுக்கள் அசைக்கு உறுப்பாகா என்ற-தாயிற்று.

2. ஒற்றளபெடையால் அசைநிலையுஞ் சீர்நிலையுங் கொள்ளுதலானும், குற்றிகரமும் உயிராயினும் எழுத்தெண்ணி அடிவகுக்குங்கால் ஒற்றுப்போல எண்ணப்படா தென்றற்கும் ஒற்றும் குற்றிகரமும் ஈண்டுச் செய்யுட்குறுப்பாக வோதப்பட்டன.

3. 'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' (செய்யுளியல்-8) என்பது ஒற்றுப் போல எழுத்தெண்ணப்படாதென்பதனை மட்டும் குறிப்பதன்று. எழுத்ததி-காரத்தில் குற்றியலிகரம் ஒற்றெழுத்துப்போன்று புள்ளிபெறும் எனக்கூறப்படாத நிலையில் குற்றியலிகரம் ஒற்றுப்போன்று புள்ளிபெறும் என்பதனையும் குறிப்ப-தாகும்.

இனி, ஒருசாரார் மாத்திரையென்றது எழுத்தல்லோசை யாகிய குறிப்பிசை கொண்டானென்பர்.[1] அக்குறிப்பிசை உறுப் பாக வருஞ் சான்றோர் செய்யுள் யாண்டுங் காணாமையின் நாம் அது வேண்டாமாயினாம். சிறுபான்மை ஒரோவழி வரினும் அத்துணையானே அஃது இன்றியமையாத உறுப்போடு எண் ணப்படாதென மறுக்க. உறுப்பன்று என்றார்க்குக் குறிப்பிசை யாண்டுப் பெறுதுமெனின்,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (தொல் - செய். 11) என்புழிப் பெறுதுமென்பது.[2]

இனி, 'எழுத்தியல் வகையும் மேற்கிளந் தன்ன' வென்ப தனையும் எழுத்திலக்கணத்திற் றிரியாமற் செய்யுள் செய்க வென்றவாறென்பவெனின், அஃதே கருத்தாயிற் சொல்லோத்தி னுள்ளும் எழுத்திலக்கணமாகிய மயக்கமும் நிலையும் முதலாகிய இலக்கணத்தில் திரியாமற் சொல்லாராய்தல் வேண்டுமெனவும், இவ்வதிகாரத்துள்ளும் 'எழுத்தியல் வகையுஞ் சொல்லியல் வகையும் மேற்கிளந்தன்ன' வெனவுஞ் சூத்திரஞ் செய்வான்மன் ஆசிரியனென மறுக்க.[3]

---

1. மாத்திரை என்பதனை எழுத்தல்லோசையெனக்கொண்ட ஆசிரியர் பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்களுள் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை, ஒருசாரார் "மாத்திரையென்றதனான் எழுத்தல்லோசையாகிய குறிப்பிசை கொண்டானென்பர்" எனவரும் இவ்வுரைத்தொடர் தொல்காப்பியவுரை-யாசிரியர்களுள் ஒருசாராார்கூறிய உரை விளக்கத்தை யுளத்திற்கொண்டு பேராசிரியரால் எழுதப்பெற்றதென்பது, 'நாம் அது வேண்டாமாயினாம்' எனப்பின்வரும் அவரது உரைத்தொடரால் உய்த்துணரப்படும்.

2. குறிப்பிசையாவன எழுத்தொலியல்லாத முற்கு, வீளை, இலதை, அநுகரணம் முதலாகவுடையன. இவற்றை அசையுஞ்சீரும் இசையொடு சேர்த்திக்-கொள்ளும் முறைமையினை, யாப்பருங்கல ஆசிரியர் 'எழுத்தல் லிசையை அசை-பெறுத் தியற்றல்' (யாப்பருங்கலம் சூ-95) என்ற தொடரால் ஒழிபியலிற்-குறித்துள்ளமை இவ்வுரைப் பகுதியோடு ஒப்பவைத்து உணர்தற்குரியதாகும்.

3. மேல் எழுத்ததிகாரத்திற் கூறப்பட்ட எழுத்திலக்கணத்தில் "திரியாமற் செய்யுள் செய்க" என்பதே இச்சூத்திரக்கருத்தாயின் சொல்லதிகாரத்திலும் இவ்வாறு எழுத்திலக்கணம் சிதையாமற் சொல்லாராய்தல் வேண்டும் எனவும் இப்பொருளதிகாரத்திலும் எழுத்திலக்கணமுஞ் சொல்லிலக்கணமும் மேற்கிளந்-தன்ன எனவும் தொல்காப்பியனார் சூத்திரஞ் செய்திருப்பர். அங்ஙனம் சூத்திரஞ்செய்யாமையின், 'மாத்திரையளவும் எழுத்தியல்வகையும் மேற்கிளந்த வகையாற் பிறழாமற்கொள்ளத்தக்கன' என்பதே இச்சூத்திரத்தின் பொருளா தலின், எழுத்திலக்கணத்தில் திரியாமற்செய்யுள் செய்க என்பது இச்சூத்திரத்தின் கருத்தன்றாம், என மறுக்கும் முறையில் அமைந்தது இவ்வுரைப் பகுதியாகும்.

மற்று, மாத்திரையளவைக்கும் இலக்கணங் கூறுமின் எனின், அதுவும்,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (323)

என்புழி, வல்லோராறெனப் பாவொடுபொருந்தக் கூறு மென்பது; அல்லதூஉம் மாத்திரையினை அளவைப்பட நிறுத்துக என்ப தோரிலக்கணமாதலின் இங்ஙனம் வரையறை யுடைத்தாக நோக்கிச் செய்யுளுறுப்பென்றானா மென்பது.[1]

மற்று மாத்திரையினை அளவைப்பட நிறுத்தாக்காற் படுங் குற்றம் என்னையெனின், அற்றன்று;

"வரகு வரகு வரகு வரகு" என்னும் அடியினைப்,

"பனாட்டுப் பனாட்டுப் பனாட்டுப் பனாட்டு"

என நிறுத்தின் அது மாத்திரைவகையாற் சிதைவு பட்டதாம்.

"அம்ம வாழி கேளாய் தோழீ"

என்றாற், பின்னர்நின்ற இருசீரும் நெடிலாதல் இன்னாதென்றுந் தோழியெனப் பின்னர் நின்ற சீரைக் குறுக்கினவழி இன்னோசைத்தாமென்றும் அவ்வாறே செய்யுள் செய்ப. பிறவுங் கொச்சகக்கலியுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் இவ்வாறே கண்டு கொள்க.

**நச்சினார்க்கினியம்**

இது நிறுத்தமுறையானே மாத்திரையும் எழுத்தியலும் உணர்த்துகின்றது.

(இ - ள்.) அவற்றுள் மாத்திரையளவும் என்பது, முற்கூறிய வற்றுள் மாத்திரையைச் செவிகருவியாக உணர்ந்துகொள்ளும் நிலையும். எழுத்தியல் வகையும் என்பது, முற்கூறிய முப்பத்து மூன்றெழுத்தும் யாப்பிலக்கணத்திற்குப் பதினைந்துபெயரவாய் நடக்குங் கூறுபாடும். மேற்கிளந்தன்ன என்மனார் புலவர் என்பது, எழுத்தோத்திற்கூறிய இலக்கணத்திற் பிறழாமை வருமென்று கூறுவர் புலவர். (எ - று.)

---

1. மாத்திரையளவு என்பது, செய்யுட்களில் எழுத்தொலியினை அளவைப்பட நிறுத்துக என்பது ஓரிலக்கணம். பாவுக்கு மாத்திரையளவாகிய வரையறை வேண்டப்படுதல்பற்றி அதனைச் செய்யுட்குரிய உறுப்பாகக் கொண்டார் தொல்காப்பியனார். இவ்வியலில் 'அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி' எனவரும் சூத்திரத்தில் இசையொடு சேர்த்தி வகுத்துணர்த்துதல் வல்லோர் ஆறு எனப் பாவென்னும் உறுப்பொடு பொருந்த மாத்திரையளவுக்குத் தொல்காப்பியனார் இலக்கணங்கூறியுள்ளார் என்பது பேராசிரியர் தரும் விளக்கமாகும்.

ஈண்டு அளவென்றது எழுத்திலக்கணத்தில் எழுத்திற்குக் கூறிய மாத்திரைகள் தத்தம் ஓசைகளைப் புலப்படுத்தி நிற்குமாறு தொடர்புபடுத்தி விராஅய் நிற்பச்செய்யும் நிலையை அளந்து கோடலை : என்றது

"அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலும்"
(தொல். எழுத். நூன். 33)

என்னுஞ் சூத்திரத்தானும்

"குறுமையு நெடுமையு மளவிற் கோடலின்"
(தொல். எழுத். மொழி. 17)

என்னுஞ் சூத்திரத்தானும் செய்யுட்குரிய ஓசைதருமெனக் கூறிய நெட்டெழுத்துக்களும் ஒற்றெழுத்துக்களும் தத்தம் பாவின் ஓசையை வேறுபடத்தந்து நிற்கும் என்றதாம். இவ்விரண்டு சூத்திரத்தோடும் மாத்திரையளவை மாட்டெறிந்தார். 'இவன் அளந்த அளவு நன்று' என்றாற்போல, அளவு அளவுதொழின் மேனின்றது.[1] இதனாலல்லது செய்யுள் வேறுபாடு உணரலா காமையிற் சிறப்புறுப்பாக ஏனையுறுப்புக்களின் முன்னே கூறினார்.[2]

உதாரணம்:

"வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி
எனவும், (கலி. பாலை. 10)
"கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுள்"
(கலி. பாலை. 10)

---

1. "அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்" (நூன்மரபு - 33) என வரும் எழுத்ததிகாரச் சூத்திரம் இசைநூற்கு வருவதோர் இலக்கணம் ஆமாறு கூறி, அவ்விலக்கணம் செய்யுளியலை நோக்கி இயற்றமிழுக்கும் கொள்கின்றது என்பதும், "குறுமையும் நெடுமையும்" (மொழி மரபு-17) எனவரும் சூத்திரம் மேற்கூறிய சூத்திரத்திற்குப் புறனடையாய் அதன்கண் நிகழ்வதோர் ஐயம் அகற்றுகின்றது என்பதும், எழுத்ததிகாரத்திலமைந்துள்ள இவ்விரு சூத்திரங்-களாலும் செய்யுட்குரிய ஓசைதரும் எனக் கூறப்பட்ட நெட்டெழுத்துக்களும் ஒற்றெழுத்துக்களும் தத்தம் பாவின் ஓசையை வேறுபடத் தந்துநிற்கும் எனக் கூறிய தொல்காப்பியனார் மேற்குறித்த எழுத்ததிகாரச் சூத்திரங்கள் இரண்டி னோடும் இச்செய்யுளியலிற் கூறப்படும் மாத்திரையளவினை மாட்டெறிந்து கூறினார் என்பதும், 'மாத்திரையளவு' என்புழி 'அளவு' என்றது அளத்தலாகிய தொழில்மேல் நின்றது என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

2. எழுத்துக்களின் ஓசையினைச் செவிகருவியாக அளத்தலாகிய மாத்திரை-யளவினாலன்றிச் செய்யுளின் பாவேறுபாடு உணரலாகாமையின் மாத்திரை யளவினைச் சிறப்புறுப்பாகக் கொண்டு ஏனையுறுப்புக்களின்முன்னே கூறினார்.

எனவும் குற்றெழுத்துக்களெல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரைமிகுத்து விராஅய் நின்றவாறு காண்க.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி"
(அகம். 4)

"பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே"
(கலி. பாலை. 10)

எனக் குற்றெழுத்துக்களெல்லாம் இடையினின்ற ஒற்றெழுத்துக்களை மாத்திரை மிகுத்து விராஅய் நின்றவாறு காண்க. இதுவும் எழுத்திற்சூத்திரங்களிரண்டும் ஆணைகூறிற்று.

இனி எழுத்து முப்பத்துமூன்றனுட் சில எழுத்துக்களை உயிர் என்னும் பெயர்கொடுத்து அவற்றைக் குறிலும், நெடிலும், அளபெடையும், குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஐகாரக் குறுக்கமும், ஔகாரக்குறுக்கமும் எனப் பெயர்வேறுபாடு கொடுத்து அதனோடு எட்டாக்கியும், சிலஎழுத்துக்களை மெய் என்னும் பெயர்கொடுத்து அவற்றை மெல்லினமும், வல்லினமும், இடையினமும், ஆய்தமும், ஒற்றளபெடையும் எனப் பெயர் வேறுபாடு கொடுத்து அதனோடு ஆறாக்கியும், இவையிரண்டுங் கூடியவற்றை உயிர்மெய் என வேறோர் பெயராக்கியும் மேற் கூறியவாறே பதினைந்து பெயரவாய் ஈண்டு நடக்குமென்றதற்கு எழுத்தியல்வகை யென்றார். இவ்வெழுத்தினை எழுத்தினுட்கூறிய சூத்திரங்களோடு மாட்டெறிந்தார். அவை,

"ஔகார விறுவாய்" (தொல். எழுத். நூன். 8)
"அ, இ, உ, எ" (தொல். எழுத். நூன். 3)
"ஆ, ஈ, ஊ, ஏ" (தொல். எழுத். நூன். 4)
"நீட்டம் வேண்டின்" (தொல். எழுத். நூன். 6)
"அவைதாங்
குற்றியலிகரம்" (தொல். எழுத். நூன். 2)
"ஓரள பாகு மிடனுமா ருண்டே"
(தொல். மொழி. 24.)
"வல்லெழுத்தென்ப" (தொல். எழுத். 19.)
"மெல்லெழுத்தென்ப" (தொல். எழுத். 20.)
"இடையெழுத்தென்ப" (தொல். எழுத். 21.)
"உயிர்மெய்யல்லன" (தொல். மொழி. 27)

என்பனவாம். அளபெடையிரண்டும் எழுத்தாந்தன்மை மேலே

பெறுதும். இவற்றுட் குறிலும் நெடிலும் குற்றுகரமும் அசைக் குறுப்பாம். ஒற்றடுத்த அசைகள் வேறுபடாமையின் ஒற்று அசைக் குறுப்பாகா : ஒற்றளபெடைக் குறுப்பாம். நெடிலும், அளபெடையிரண்டும், உயிரும், உயிர்மெய்யும், மூவினமும், ஐகார ஔகாரக் குறுக்கமும் தொடைக்குறுப்பாம். குறிலும், நெடிலும், அளபெடையிரண்டும், மூவினமும், ஆய்தமும் வண்ணத் திற்குறுப்பாம். இவற்றை இயற்கையெழுத்துஞ் சார்பெழுத்தும் என இரண்டாகவும் வகுப்பர்.[1]

**ஆய்வுரை :**

இது, மேற்சூத்திரத்து நிறுத்தமுறையாலே முதற்கண் நின்ற மாத்திரையும் எழுத்தியலும் உணர்த்துகின்றது.

(இ-ள்) மாத்திரையளவும் எழுத்தியல் வகையும் ஆகிய இரண்டும் மேல் எழுத்ததிகாரத்திற்கூறிய இலக்கணத்திற்பிறழா-மற் செய்யுளுக்கு உறுப்பாய் வரும் என்பர் ஆசிரியர். (எ-று.)

'மாத்திரை' என்பது, எழுத்திற்குச் சொல்லிய மாத்திரை-களைச் செய்யுள் பொருந்தியமைந்த அளவு ஆகும். மாத்திரை-யினது அளவு மாத்திரை யெனப்பட்டது. எழுத்திலக்கணத்தில் எழுத்திற்குக் கூறிய ஒலித்தற் காலஅளவாகிய மாத்திரைகள் செய்யுளில் ஓசை நலம் சிதையாதபடி தத்தம் ஓசைகளைப் புலப்படுத்தி அளவுபெற ஒலித்து நிற்றலே மாத்திரையென்னும் உறுப்பாகும். மாத்திரையளவாகிய இதனாலல்லது செய்யுட் களின் ஓசை வேறுபாடு உணரலாகாமையின் ஏனையுறுப் புக்களினும் மாத்திரையளவினைச் சிறப்புறுப்பாக முற்கூறினார்.

இனி, 'எழுத்தியல்வகை' என்றது, மேல் எழுத்ததிகாரத்திற் கூறப்பட்ட எழுத்துக்களைச் செய்யுளுக்கு ஏற்புடையவாக இயற்றிக்கொள்ளுங் கூறுபாடு. அஃதாவது மேல் எழுத்ததி-காரத்தில் தமிழுக்குரிய முப்பத்து மூன்றெழுத்துக்களையும் உயிர், குறில், நெடில், மெய், வலி, மெலி, இடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என இயல்பு வகையாற் பத்தும் உயிர்மெய், உயிரளபெடை எனக்கூட்டவகையால் இரண்டும், ஐகாரக்குறுக்கம் ஔகாரக்குறுக்கம் எனப் போலி வகையால் இரண்டும், யாழ்நூலாகிய இசைநூன்முறையால்வரும் ஒற்றிசை

1. சிறப்பெழுத்து, உறுப்பெழுத்து என இருவகையாகத் தொகுத்துரைப்பர் யாப்பருங்கலவிருத்தி ஆசிரியர்.

நீளுதல் ஒன்றும் ஆகப் பதினைந்து பெயரளவாய்ப் பகுத்துரைத்த வகையாகும். இவற்றுடன் மகரக்குறுக்கம் ஒன்றுகூட்டிப் பதினா-றெழுத்தெனக் கொள்ளுதலும் உண்டு.

௩. குறிலே நெடிலே குறிலிணை குறில்நெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையு மென்றிசிற் பெயரே.

## இளம்பூரணம் :

என்பது நிறுத்தமுறையானே அசையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குறிலும் நெடிலுங் குறிலிணையுங் குறினெடிலுந் தனியே வரினும் ஒற்றொடு வரினும், ஆராயுங்காலத்து நேரசையும் நிரையசையுமா மென்றவாறு.

இதுவு மொரு நிரனிறை;[1] முந்துற்ற நான்கு மொருபொரு-ளாய்ப் பின்னிரண்டாகி வரினும், முற்பட்டவையும் இரண்டாகப் பகுத்தலான். கோழி வேந்தன், என நான்குநேரசையும், வெறி சுறா நிறம் குரால், என நான்கு நிரையசையும். (௩)

## பேராசிரியம் :

இது, நிறுத்த முறையானே அசைவகை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குறிலும் நெடிலுந் தனித்து வந்துங் குறில் [இரண்டு] இணைந்து வந்துங் குறிற்பின்னர் நெடில் இணைந்து வந்தும் அவை ஒற்றடுத்தும் முறையானே நிரனிறை வகையானே நேரசையும் நிரையசையுமென்றாம் (எ - று).

"குறிலே நெடிலே ஒற்றொடு வருதலொடு"

எனவும்,

"குறிலிணை குறினெடில் ஒற்றொடு வருதலொடு"

1. 'குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்'
என முற்கூறப்பட்ட நான்கும் ஒருபொருளாய் எண்ணப்பட்டு, அவை குறிலே நெடிலே எனவும், குறிலிணை குறினெடில் எனவும் பின் இரண்டாகி அவை முறையே நேரும் நிரையும் என இரண்டாகப் பகுக்கப்பெறுதலான் 'இதுவுமொரு நிரனிறை' என்றார். ஒற்றொடுவருதல் நேர்நிரை யிரண்டற்கும் பொது.

எனவும், வேறு நிரனிறீஇப் பொருளுரைக்க.[1] 'மெய்ப்பட நாடி' யென்பது பொருள்பெற ஆராய்ந்து; எனவே, இப்பெயர் ஆட்சி காரணமேயன்றிக் குணங்காரணமாகலுமுடைய வென்றவாறு. உயிரில்லெழுத்தல்லாதன (356) தனித்து நிற்றலின் இயலசை யென்னும் பொருள்பட நேரசை யென்றாயிற்று.[2]

அவை இரண்டு நிரைதலின் இணையசையென்னும் பொருள்பட நிரையசை யென்றாயிற்று.[3] அல்லதூஉம் மெய்ப் பட நாடி என்றதனான் அவ்வாய்பாடே அவற்றுக்குக் காரண மென்பதூஉங் கொள்க.[4] 'உடம்பொடு புணர்த்தல்' (665) என்பதனால் உதாரணமுங் கூறியவாறு. அவை நேர்நிரையெனச் சொல்லிக் கண்டுகொள்க : அ ஆ எனவும், அல் ஆல் எனவும், பல பலா எனவும், புகர் புகார் எனவும், பிறவும் இவ்வாறு வருவனவெல்லாங் கொள்க.

மற்றுக் குறினெடிலென எழுத்தாக ஓதியதென்னை? சொல் லாய வழி அசையாகாவோ வெனின், அவை ஒற்றொடு வருத லென்றதனானே, சொல்லாதலும் நேர்ந்தானாகவே அவை இரு வாற்றானும் அசையாமென்பது[5] சீரின்றன்மைக்கண் வந்தது.

---

1. 'குறிலேநெடிலே குறிலிணை குறினெடில்' என எண்ணப்பட்ட நான்கினைக் 'குறிலேநெடிலே' எனவும் 'குறிலிணை குறினெடில்' எனவும் கூட்டி இரண்டாக வேறுநிறுத்தி, அவையிரண்டும் ஒற்றொடுவருதலொடு கூட்டி முறையே நேரும் நிரையும் ஆம்என நிரல்நிறையாகப்பொருள்கொள்க என்பதாம்.

2. உயிர்இல் எழுத்து-ஒற்றெழுத்து. ஒற்றெழுத்தல்லாத குறிலும் நெடிலும் தம்மியல்பில் நேர் (தனி) நின்று அசையாதலின் நேரசை யென்னும் பெயர்த்-தாயிற்று. நேர்தல்-தனிநிற்றல்.

3. குறிலும் நெடிலும் குறிலொடுகுறில் குறிலொடுநெடில் என இணைந்து நின்று அசையாதலின் நிரையசையென்னும் பெயர்த்தாயிற்று. நிரைதல்-இணைந்து நிற்றல்.

4. (நேர், நிரைஎன்னும்) ''அவ்வாய்பாடே அவற்றுக்குதாரணமென்ப தூஉங்கொள்க'' என்றிருத்தல் வேண்டும்.

5. குறில் நெடில் என எழுத்தாக வோதினாராயினும் அவை சொல்லாதலும புலப்பட 'ஒற்றொடு வருதலொடு' எனக் கூறினாராதலின், நேர்நிரை என்னும் அசைகள் எழுத்தாதலும் சொல்லாதலும் என இருநிலைமையும் உடையனவாதல் பெறப்படும். ''அவையிருவாற்றானும் சீரின் தன்மைக்கண் அசையாமென்பது'' என முற்றுப்புள்ளியிட்டும், சீரின்தன்மைக்கண் ''உள்ளார்தோழி'' என நேரசை நான்கும், 'வரிவரால் கலா வலின்' என நிரையசை நான்கும் வந்தன'' எனத் தொடர்புபடுத்தியும் இவ்வுரைப்பகுதியின் பொருளையுணர்க.

"உள்ளார் தோழி"

என நேரசை நான்கும் வந்தன.

"வரி வரால் கலா வலின்"

என நிரையசை நான்கும் வந்தன

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்த முறையானே அசை கூறுகின்றது.

(இ-ள்) குறிலும் நெடிலும் தனித்து வந்தும், குறிலிரண்டு இணைந்து வந்தும், குறிற்பின்னர் நெடிலிணைந்து வந்தும், பின்னர் இந்நான்கும் ஒற்றொடு வருதலோடே பொருள்பெற ஆராய்ந்து நிரனிறை வகையான் நேரசையும் நிரையசையும் என்று பெயர்கூறினார் ஆசிரியர். (எ-று).

குறிலும் நெடிலும் தம்முள் மாத்திரையொவ்வாவேனும் அவற்றின் மாத்திரையை நோக்காது எழுத்தாந்தன்மை நோக்கி இரண்டற்கும் ஒரோ வோரலகு பெறுமென்றார்.[1] இது குறிலிணைக்குங் குறினெடிற்கும் ஒக்கும். நேரசை நிரையசை என்ற பெயர், ஆட்சியும் குணமும் காரணமாகப் பெற்ற பெயர். இரண்டெழுத்தா னாகாது ஓரெழுத்தானாதலின் நேரியதன்றே: அதனான் நேரியஅசை நேரசை என்றாயிற்று.

"உயிரி லெழுத்து மெண்ணப் படாஅ"

(தொல். செய். 44)

என்றலின் எண்ணப்படாத[2] ஒற்றுக்கள் பயன்படாது அசைந்து நிற்றலின் அசையென்னும் பெயரும் எய்திற்று.[3] இரண்டெழுத்து நிரைதலின் இணையசையென்னும் பொருள்பட நிரையசை யென்றாயிற்று.

உதாரணம் : அ, ஆ, அல், ஆல் எனவும், பல, பலா, புகர், புகார் எனவும் வரும். ஒற்றுக்கள் எழுத்தாய் நின்று அலகு பெறுதற் குரியவல்லவென்பது மொழி மரபின் கண்ணே

1. மாத்திரை நோக்காது ஓர் எழுத்தாந்தன்மை நோக்கிக் குறில், நெடில் இரண்டிற்கும் ஓவ்வோர் அலகு (எண்ணிக்கை) கொண்டார்.

2. எண்ணுப்படாத. பா. வே.

3. நேர், நிரை என்னும் இருநிலைமைக்கண்ணும் ஒற்றுக்கள் அலகு பெறாது அசைந்து நிற்றலின் அசையென்னும் பெயரும் வழங்குவ தாயிற்று.

"மொழிப்படுத் திசைப்பினும்" (20)

என்பதன்கட் கூறியவாற்றானுணர்க.[1] குறில் நெடில் என எழுத்தாக ஓதிற்றேனும்

"நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி"
(தொல். மொழி. 10)

என்றதனால் நெடில் சொல்லாந்தன்மையும்

"குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே"
(தொல். மொழி. 11)

என்றதனாற் குறிலும் சிறுபான்மை சொல்லாந்தன்மையும் பெறுதும்; அன்றியும் ஒற்றுக் கூறினமையானும் பெறுதும். 'உள் ளார் தோ ழி' என நேரசை நான்கும் 'வரி வரால் கலா வலின்' எனநிரையசை நான்கும் வந்தன.

**ஆய்வுரை :**

இது, நிறுத்தமுறையானே எழுத்துக்களாலாகிய அசைகளின் கூறபாடு உணர்த்துகின்றது.

(இ - ள்) குறிலும் நெடிலும் தனித்து வந்தாலும் ஒற்றடுத்து வந்தாலும் அவற்றைப் பொருள்பெற ஆராய்ந்து நேரசை யெனவும், குறிலிணையும் குறில் நெடிலும் தனித்து வந்தாலும் ஒற்றடுத்து வந்தாலும் (அவற்றைப் பொருள் பெற ஆராய்ந்து) நிரையசையெனவும் பெயர் கூறினார் ஆசிரியர். (எ - று.)

"குறிலே நெடிலே குறிலிணை குறில்நெடில்" என ஒரு தொடராக வைத்து எண்ணப்பட்ட நான்கனுள் எண்ணேகாரம் பெற்ற முதலிரண்டினையும் ஒரு தொகுதியாகவும், எண்ணிடைச்சொற் பெறாத ஏனை யிரண்டினையும் மற்றொரு தொகுதியாகவும் இருவகைப்படுத்து ஒற்றொடு வருதலையும் மெய்ப்பட நாடுதலையும் இவ்விரு தொகுதிகட்கும் பொதுவாக்கி, இவ்விரண்டிற்கும் முறையே 'நேர்' எனவும் 'நிரை' எனவும் பெயர்தந்தமையின், இச்சூத்திரம் ஒரு வகைநிரல்நிறைப் பொருள்கோள்

---

1. "மொழிப்படுத் திசைப்பினும்" (மொழிமரபு - 20) எனவரும் எழுத்ததிகாரச் சூத்திரம், ஒற்றும் குற்றுகரமும் எழுத்ததிகாரத்தில் எழுத்துக்களோடு கூட்டி எண்ணப்பட்டு நிற்கும் என்பதும், செய்யுளியலுள் எண்ணப்படாது (அலகுபெறாது) நிற்கும் என்பதும் கூறுகின்றது என நச்சினார்க்கினியர் கருத்துரை வரைந்துள்ளமை இங்கு இயைத்து நோக்கத்தகுவதாகும்.

அமைந்ததாகும். குறிலேநெடிலே ஒற்றொடு வருதலொடு மெய்ப் படநாடி நேர் என்றிசின் எனவும், குறிலிணை குறில் நெடில் ஒற்றொடு வருதலொடு மெய்ப்படநாடி நிரை என்றிசின் எனவும் இரு தொடராக இயைத்துப் பொருள் கூறப்பட்டது. கோ, பூ, வேந், தன் - என நேரசை நான்கும் வெறி, சுறா, நிறம், குரால் என - நிரையசை நான்கும் வந்தன.

ஓரெழுத்தான் ஆகிய நேரிய அசை நேரசையென்னும் பெயர்த் தாயிற்று. இரண்டெழுத்து நிரைந்து வருதலின் நிரையசை யென்னும் பெயர்த்தாயிற்று. நேரசையினைத் தனியசை எனவும் நிரையசையினை இணையசை யெனவும் வழங்குதலும் உண்டு. இவ்வசைகளுக்கு உறுப்பாய் நின்ற குறிலும் நெடிலும் மாத்திரை யளவினால் தம்முள் ஒவ்வாவாயினும், எழுத்தாந்தன்மையில்-ஒன்றெனவே கொண்டு எண்ணப்படுந் தகுதி நோக்கி நெடி-லாயினும் குறிலாயினும் ஒவ்வோரலகு பெறும் என விதிக்கப்-பட்டன.

௪ இருவகை உகரமோ, டியைந்தவை வரினே
நேர்பு நிரைபும் ஆகும் என்ப
குறிலிணை உகரம் அல்வழி யான. *

**இளம்பூரணம் :**

இதுவுமது.

(இ - ள்.) மேற்சொல்லப்பட்ட இரண்டசையுங் குற்றிய-லுகரமு மல்லாத முற்றியலுகரமும் பொருந்திவரின், நேர்பசையு நிரைபசையு மெனப்பெயராகும்; அவ்வழிக் குற்றெழுத்தொடு பொருந்தின உகரமல்லாத விடத்தென்றவாறு.[1]

காது, காற்று, கன்று, காவு, சார்பு, கல்லு என்பன நேர்பசை. வரகு, அரக்கு, மலாடு, பனாட்டு, கதவு, புணர்வு, உருமு, வினாவு

---

*இதன் முன்னிரண்டிகளை ஒரு சூத்திரமாகவும் ஈற்றடியை மற்றொரு சூத்திரமாகவும் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

1. இதுவும் அசையாமாறு உணர்த்துதல் நுதலிற்று. 'அவை இருவகையுகர மொடு இயைந்துவரின்' என இயைத்துப்பொருள் கொள்க. 'அவை' என்பன முற்கூறிய நேர், நிரை என்னும் அசைகள் இரண்டும். இருவகையுகரம் ஆவன குற்றியலுகரம் முற்றியலுகரம். கடு, கணு என்றாற்போன்று குற்றெழுத்தொடு பொருந்திக் குறிலிணையாய் நின்ற உகரம் நேர்பு, நிரைபு ஆகாது என்பார் 'குறிலிணையுகரம் அல்வழியான' என்றார்.

என்பன நிரைபசை. தொகுத்து நோக்குழி நேர், நிரை, நேர்பு நிரைபு என்பன தாமே யுதாரணமாம். அஃதேல் நேர்பசை நிரை பசையெனக் காக்கைபாடினியார் முதலாகிய ஒருசாராசிரியர் கொண்டிலரா லெனின், அவர் அதனை யிரண்டசையாக்கியுரைத் தாராயினும் அதனை முடியநிறுத்தராது, வெண்பாவீற்றின்கண் வந்த குற்றுகர நேரீற்றியற்சீரைத் தேமா புளிமா என்னும் உதாரணத்தான் ஓசையூட்டிற் செப்பலோசை குன்றுமென்றஞ்சி, காசு பிறப்பென உகரவீற்றான் உதாரணங் காட்டினமையானும், சீருந்தளையுங் கெடுவழிக் குற்றியலுகரம் அலகுபெறாதென்றமை யானும், வெண்பா வீற்றினு முற்றுகரமுஞ் சிறுபான்மை வருமென உடன்பட்டமையானும், நேர்பசை நிரைபசை யென்று வருதல் வலியுடைத்தென்று கொள்க. அவை செய்யு ளீற்றின்கண் வருமாறு:

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்" (குறள். ௰)

"வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை இல" (குறள் ௪)

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" (குறள் ரு)

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்றல் அரிது" (குறள். எ)

என வரும். பிறவு மன்ன,

அலகிடுங்கால் நேரசை ஓரலகு; நிரையசை யிரண்டலகு; நேர்பசை மூன்றலகு; நிரைபசை நான்கலகு பெறும்.[1] (௬)

---

1. அலகிடுதலாவது, எழுத்துக்களையெண்ணி அசைப்படுத்தல். அவ்வா றலகிடுமிடத்து நேரசை ஓரெழுத்தாகிய எண்ணிக்கையும், நிரையசை இரண்டெழுத்தாகிய எண்ணிக்கையும், நேர்பு மூன்று மாத்திரையாகிய அளவும், நிரைபு நான்கு மாத்திரையாகிய அளவும் பெறும் எனக்கொள்ளுதல் பொருத்த முடையதாம். இவ்வாறு இயலசைக்கு எழுத்தளவும் உரியசைக்கு மாத்திரையளவும் கொண்டு அலகிடுதலைக் குறித்ததே

"நேரோ ரலகு நிரையிரண் டலகு
நேர்பு மூன்றலகு நிரைபு நான்கலகென்
றோதினர் புலவர் உணரு மாறே" (யா-வி. அசையோத்து-சூ-1)

எனவரும் யாப்பருங்கலவிருத்தி மேற்கோட் சூத்திரமாகும்.

இருவகை யுகரமோ டியைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகு மென்ப.

**பேராசிரியம் :-**

இது, சொல்லாத அசைக்கூறுஞ் சொல்லுகின்றது.

(இ - ள்) இருவகை யுகர மென்பன; குற்றுகர முற்றுகரங்கள்; அவற்றோடு மேற்கூறிய நேரசையும் நிரையசையும் ஒரு சொல் விழுக்காடுபட இயைந்துவரின்[1] நிறுத்தமுறையானே நேரசையோ டொன்றிவந்த குற்றுகரமும் அதனோடு ஒன்றி வந்த முற்றுகரமும் நேர்பசை யெனப்படும்; நிரையசையோ டொன்றிவந்த குற்றுகரமும் அதனோ டொன்றிவந்த முற்றுகரமும் நிரைபசை எனப்படும் (எ - று.)

'இயைந்து' என்றான், இருவகை உகரமும் இருபிளவு படாது ஒன்றாகி வரல்வேண்டும். அங்ஙனம் அசையாங்காலென்றற்கு. இருவகை உகரமும் ஒரு காலத்து ஒன்றன்பின் வாரா; வேறு வேறு வருமென்பது. இருவகை உகரமும் இறுதிக்கண் நின்று அசையாக்குமென்ப தென்னை பெறுமாறெனின், குற்றுகரம் ஈற்றுக்கணல்லது வாராமையானும்,

"நிற்றற வின்றே யீற்றடி மருங்கினும்" (தொல்-செய்.9)

என்பதனானும் பெறுது மென்பது; அல்லதூஉம் நுந்தை யென்னும் முதற்கட் குற்றுகரம் இறுதிக்கண் நேரசையல்லது நிரையசை அடுத்து வருதலின்மையானும் அது பெறுதுமென்பது.[2] முன்னர் நேரசை நான்கும் நிரையசை நான்குமென எண்வகையான் அசை கூறி, அவற்றுப் பின் இருவகையுகரமும் வருமெனவே, அவை குற்றுகரத்தோடு எட்டும் முற்றுகரத்தோடு எட்டுமாகப் பதினாறு உதாரணப் பகுதியவாய்ச் சென்றதேனும், அவற்றுள் குற்றெழுத்துப் பின்வரும் உகரம் நேரசையாகாதென்பது,

1, 'அவை இருவகையுகரமொடு இயைந்துவரின்' என இயையும். அவை என்றது, நேர், நிரை என்னும் இரண்டசைகளையும். ஒருசொல் விழுக்காடுபட வருதலாவது ஒரு சொற்றன்மையைப் பிரிவின்றிப் பொருந்திவருதல்.

2. குற்றியலுகரம் மொழியிறுதிக்கண்ணன்றி வாராமையானும், முற்றியலுகரம் புணர்ச்சிவகையான் இறுதிக்கண்ணல்லது இடையில் வாராமையானும் நுந்தை என்னும் மொழிமுதற்குற்றியலுகரம் தன்பின் நேரசையல்லது நிரையசையடுத்து வாராமையானும் இருவகையுகரமும் இறுதிக்கண் நின்று நேர்பு, நிரைபு என்னும் அசைக்கு உறுப்பாம் என்பது பெறப்படும்.

"குறிலிணை யுகர மல்வழி யான" (தொல்-செய்.5)

என்புழிச் சொல்லுதும்; ஒழிந்தன குற்றுகர நேர்பசை மூன்றும் நிரைபசை நான்குமாயின.

உ - ம் : வண்டு, நாகு, காம்பு எனவும்;
வரகு, குரங்கு; மலாடு, மலாட்டு எனவும்,

இவை குற்றுகரம் அடுத்து நேர்பும் நிரைபும் வந்தவாறு.

இனி, முற்றுகரம் இரண்டசைப்பின்னும் வருங்காற் குறிலொற்றின் பின்னும் நெடிற் பின்னுமென நேரசைக்கு இரண்டல்லதாகாது. நிரையசைக்கண்ணும் குறிலிணைப் பின்னுங் குறினெடிற் பின்னுமல்லதாகாது.[1]

உ-ம் : மின்னு நாணு எனவும்,
உருமு குலாவு எனவும் வரும்.

வாழ்வு, தாழ்வு என நெடிலொற்றின் பின்னும் முற்றுகரம் வந்ததாலெனின், அவை ஆகாவென்பதூஉம் இக்காட்டிய நான்குமே ஆவனவென்பதூஉம் முன்னர்,

"நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்"
(தொல். செய். 9)

என்புழிச் சொல்லுதும்.[2]

இனி, ஒருசாரார் நேர்பசை நிரைபசை யென்பன வேண்டாவென்ப. என்னை : குற்றுகர முற்றுகரங்களை வேறாக்கி அலகிட அமையாதே ? 'ஞாயிறு' எனக் குற்றுகரங் குறிலிணையாய் அலகு பெறுமோவெனக் குற்றங் கூறுப. முற்றுகரமுந் 'தேமா' வென நேரசையாயிற்று 'மின்னு' என்றவழி வேறலகுபெற

---

1. நேரசை நான்கனுள் குற்றொற்று, நெடில் என்னும் இரண்டின்பின்னரே முற்றுகரம்வந்து நேர்பசையாகும். நிரையசை நான்கனுள்ளும் குறிலிணை, குறினெடில் என்னும் இரண்டின் பின்னுமே வந்து நிரைபசையாகும் என்பர் பேராசிரியர்.

2. புணர்ச்சிக்கண் நிலைமொழித்தொழிலாகிய வுகரமும் நிலைமொழியீறு கெட்டுநின்றவுகரமுமே நேர்பசை நிரைபசைகட்கு உறுப்பாமென்பதனை, 'முற்றியலுகரமும் மொழிசிதைத்துக்கொளா' (செய்-9) எனவருஞ் சூத்திரவுரையிற்பேராசிரியர் குறித்துள்ளார். 'தாழ்வு' என நெடிற்பின் வந்த முற்றுகரம் இயல்பாய் நின்றவுகர மாதலின் அவர்கருத்துப்படி நேர்பசையெனக் கொள்ளப் படாதாயிற்று.

அமையுமென்பது. அற்றன்று, குற்றுகரத்தினைக் குற்றெழுத்தென்ப வேறு குற்றுகரம் வேண்டாதாரும், என்றார்க்கு வேண்டினானையுங் குற்றங் கூறுவரவர்; என்னை ? குற்றியலுகரம் அரைமாத்திரைத்தாகலின் ஒற்றுப்போல ஓரசையுள் ஒடுக்கி அலகிடப்படும். அற்றன்றேற் குற்றெழுத்தாக்கி அலகு வைக்கவே அமையுமென்பதாம் அவர் கருத்து.[1] அதற்கு விடை : குற்றுகரம் ஒற்றுப்போன்று ஒடுங்கி நில்லாது; என்னை ? தன்னான் ஊரப்பட்ட ஒற்றுந் தானுமாகி அரைமாத்திரைத்தாகியும் ஒடுங்கி இசையாது அகன்று இசைக்கும்; அதனால் ஒற்றென்றலுமாகாது; பின்னும் ஒரு மாத்திரைத் தாகாமையிற் குற்றெழுத்தெனலுமாகாது; மற்று அதனான் அதனை ஒற்றென அடக்கார்; குற்றெழுத்தென ஏற்று அலகு கொள்ளார், இனி அதனைச் செயற்பாலதோர் அசையாக்குதலென்பது நோக்கி நேர்பசை நிரைபசையென வேண்டினானென்பது.[2] அவை வண்டு தொண்டி என ஓசை யொவ்வாமை செவி கருவியாக உணர்ந்துகொள்க. அஃதேல், 'ஞாயிறு வலியது' என்றவழிக் குறிலிணையுகர மெனக் குற்றெழுத்தாக்குவது எற்றுக்கெனின், அளபெடையை ஓசையிற் சிதையாது "நிலப்படையுள் அலகு சிதைத்தாற் போலக்" குற்றுகரத்தைக் குற்றெழுத்துப்போல அலகுபெறு மென்பது இலக்கணமில்லதொரு வழூவமைதி தானாயதனை இலக்கணமாக ஓர்த்துக்கொண்டு இலக்கண வகையாற் குற்றுகர மாதலை விலக்குவாரும் உளரோவென

---

1. 'மின்னு' என்புழி முற்றியலுகரம் தேமா என நேரசையாயிற்று. குற்றியலுகரம் அரைமாத்திரையுடையதாதலின் அது மெய்யெழுத்துப்போல ஓரசையுள் அடக்கி அலகிடப்பெறுதல் வேண்டும். அவ்வாறு மெய்யென அடக்கமுடியாவிட்டால் குற்றெழுத்தாகக்கொண்டு அசையமைக்கலாம். இவ்விருவகையுமன்றிக் குற்றியலுகரத்தையுறுப்பாகக் கொண்டு நேர்பசை, நிரைபசையென வேறிருவகை அசைகொள்ளவேண்டிய இன்றியமையாமையில்லையென்பர் ஒருசார் யாப்பிலக்கண ஆசிரியர்கள்.

2. குற்றியலுகரம் தன்னால் ஊரப்பட்டமெய்யுந் தானுமாகி அரைமாத்திரையினதாய் நின்றநிலையிலும் ஒற்றுப்போல ஒடுங்கிநில்லாது விரிந்தொலித்தலால் அதனை ஒற்றென அடக்குதலும் கூடாது. ஒரு மாத்திரைத்தாகாமையின் அதனைக் குற்றெழுத்தென அலகு கொள்ளுதற்கும் இடமில்லை. இந்நிலையில் அதனையுறுப்பாக்கி வேறொரசைகோடலே செயற்பாலது என வுணர்ந்த தொல்காப்பியனார் அது கொண்டு நேர்பு, நிரைபு என்னும் அசைவகையினையமைத்துக் கொண்டார்.

மறுக்க.[1] அஃதாக, முற்றுகரம் ஒரு மாத்திரையாதலிற் குற்றெழுத்-தாக்கி நேரும் நிரையுமாகப் பெறாவோவெனிற் பெறா; என்னை ?

"வண்டு வண்டு வண்டு வண்டு"

என நின்றவழிப் பிறந்த அகவலோசை.

"மின்னு மின்னு மின்னு மின்னு"

என நின்ற வழியும் பெறப்படுமாதலின், அதுவும் அது பட்டதே பட்டு அவ்வசையே பெறுமென்றா னென்பது.[2] அல்லதூஉம் வெண்பாட்டீற்றடி வண்டு எனக் குற்றுகரவீற்றான் இற்றவழிக் கோலு என முற்றுகரவீற்றான் இறுமாயினும் ஒத்தவோசையாம்.

இனி, உகர வீறல்லாத தேமாவென்பதனான் வெண்பா முடியாவென்பர், அதனாலுங் குற்றுகரத்தின் செய்கை முற்று கரத்திற்கும் வேண்டி நேர்பு நிரைபு கொண்டானென்பது. அற்றன்றியுங் குற்றுகரஞ் சார்ந்து தோன்றுமாறுபோல இம் முற்றுகரமும் வருமொழி காரணமாக நிலைமொழி சார்ந்து தோன்றுதலொப்புமை நோக்கியும் அதனைக் குற்றுகரம்போல ஓரசைக்கு உறுப்பாம் என்றானென்பது.

"எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப"

(தொல். செய். 48)

---

1. அளபெடையை ஓசையீற் சிதையாது அலகு சிதைத்தாற்போல, ஞாயிறு, வலியது என்புழிக் குற்றியலுகரத்தைக் குற்றெழுத்துப்போல அலகுபெறுமெனக் கொள்ளுதல் இலக்கணமில்லதோர் வழுவமைதியாகும். ஒருசிலவிடங்களில் அருகி-வரும் அதனையே யாண்டும் செல்லும் இலக்கணமாகக்கொண்டு குற்றியலுகரம் நேர்பசை நிரைபசைகட்கு உறுப்பாதலை இலக்கணமுணர்ந்தோர் விலக்க-மாட்டார்கள் என்பதாம். இவ்வுரைப்பகுதியுள் 'அளபெடையை ஓசையிற்சிதை-யாது நிலப்படையுள் அலகு சிதைத்தாற்போல' எனவரும் தொடரிலுள்ள 'நிலப் படையுள்' என்பதனை நீக்கிப்படிக்கப்பொருளினிது புலனாதல் காண்க.

2. முற்றுகரம் ஒருமாத்திரைத்தாயினும், 'வண்டு வண்டு வண்டு வண்டு' எனக் குற்றியலுகரம் நின்றவழிப்பிறந்த அகவலோசை 'மின்னு மின்னு மின்னு மின்னு' என முற்றுகரம் நின்றவழியும் பிறத்தலின் அவ்வழி முற்றுகரமும் குற்றுகரத்தின் இயல்பினதாய் நேர்பு, நிரைபு என்னும் அசைக்கு உறுப்பாமெனக் கொண்டார். அன்றியும் குற்றுகரம் மொழியிடைச் சார்ந்து தோன்றுமாறுபோல வருமொழி காரணமாக நிலைமொழி சார்ந்து தோன்றும் முற்றுகரமே ஈண்டு உரியசைக்கு உறுப்பாகக் கொள்ளப்படும் என்பதாம்.

என்பதனான் அவை அவ்வாறாதல் அறிந்துகொள்க. இவையும் ஆட்சியுங் குணமுங் காரணமாகப் பெற்ற பெயர். ஆட்சி,

*"நிரையவ ணிற்பினேரு நேர்பும்"*        (தொல். செய். 75)

எனவும்,

*"நேரீற் றியற்சீர் நிரையு நிரைபும்"*        (தொல். செய். 74)

எனவும்,

வருமென்பது. இருவகை யுகரமும் அடைந்துவந்த இயலசையிரண்டும் நேர்பும் நிரைபு மென்றாலும், நேரும் நிரையு மென்னும் பொருண்மையவே யாகலான் அவற்றது பெயரான் இவற்றையும் பெயர் கொடுத்தான் ஆகுபெயராக்கி யென்பது. எனவே, நேர்நிரையின் பின் உகரம் வருதலின் நேர்பு நிரைபு எனக் குணங் காரணமாகவும் பெற்றாம். சூ

**நச்சினார்க்கினியம் :-**

இது கூறாத அசைக்கூறுங் கூறுகின்றது.

(இ - ள்.) இருவகை உகரமொடு என்பது, குற்றுகர முற்றுகரங்களோடே. அவையியைந்துவரின் எ - து, மேற்கூறிய நேரசையும் நிரையசையும் பிளவுபடாது ஒருசொல்விழுக்காடுபட இயைந்துவரின். நேர்பும் நிரைபும் ஆகுமென்ப எ - து நிறுத்தமுறையே நேரசை யோடியைந்த குற்றுகரமும் அதனோடியைந்த முற்றுகரமும் நேர்பசை எனப்படும் : நிரையசையோடு இயைந்த குற்றுகரமும் அதனோடியைந்த முற்றுகரமும் நிரைபசை எனப்படும் (எ - று.)[1]

நேரின்பின் உகரம்வருதலின் நேர்பு: நிரையின்பின் உகரம் வருதலின் நிரைபு என ஆட்சியும் குணமும் காரணமாகப்பெற்ற பெயராதல் மேற்கூறியவற்றுட்காண்க.

உ - ம். வண்டு, நாகு, காம்பு, மின்னு, நாணு, தீர்வு : நேரசைமூன்றன் பின்னும் இருவகை உகரமும் வந்து நேர்பசையாயிற்று. குறிற்பின் வரும் இருவகையுகரமும் நேர்பசையாகாமை மேற்கூறுகின்றார்.[2] வரகு, குரங்கு, மலாடு, மலாட்டு,

---

1. ''இருவகை உகரமொடு அவை இயைந்துவரின், நேர்பும் நிரைபும் ஆகும் என்ப'' என இயைத்துப் பொருள் வரையப்பட்டது. 'அவை' என்றது, முற்குறித்த நேர், நிரை என்னும் இயலசை இரண்டினையும்.
2. குறிற்பின் வரும் இருவகை உகரமும் 'நேர்பு' என்னும் அசையாகா என்பதனை அடுத்துவரும் சூத்திரத்தாற் கூறுவர் ஆசிரியர்.

இரவு, புணர்வு, உலாவு என நிரையசை நான்கின் பின்னர்க் குற்றுகரமும், நிரையசை மூன்றின் பின்னர் முற்றுகரமும் வந்து நிரைபசையாயிற்று. குறினெடி லொற்றின்பின் வந்த முற்றுகரம் உளவேற்காண்க.

"குற்றிய லுகரமு மற்றென மொழிப"

(தொல். எழுத். புணரி. 3)

என்ற விதியாற் குற்றுகரம் புள்ளிபெற்று நின்றும் புள்ளிபெற்ற ஒற்றுப்போன்று ஒடுங்கிநில்லாது தன்னான் ஊரப்பட்ட மெய்யுந் தானும் அரைமாத்திரைத்தாய்நின்றதேனும், அகன்றிசைத்தலின் ஒற்றென்றலுமாகாது ; ஒருமாத்திரை பெற்ற உயிர்போல அகன்றிசையாமையின் உயிரென வேறோரலகு கொடுத்தலுமாகாது. இதனைச்செயற்பாலது வேறோ ரசையாக்குதலென நோக்கி நேர்பசை நிரைபசை என வேண்டினார் ஆசிரியர். பின்னுள்ளோர் அலகு பெறுமென்று கொண்டாரேனும் அவர்க்கும் அலகுபெறாவென்றுங் கொள்ளவேண்டியவாறும், தேமா, புளிமாவொழியக் காசு, பிறப்பு, எனக் குற்றுகர வீறாக வேறுதாரணங்கொள்ளவேண்டியவாறும் உணர்க ; எனவே குற்றுகரம் அலகுபெறாவாயிற்று. வண்டு, கொண்டி என ஓசை ஒவ்வாமை செவி கருவியாக உணர்க.

ஒரு மாத்திரைபெற்ற முற்றுகரம் நேர்பசை நிரைபசையாமோ வெனின் ;— 'வண்டு வண்டு வண்டு வண்டு' என்புழிப் பிறந்த அகவலோசை 'மின்னு மின்னு மின்னு மின்னு' என்புழியும் பெறப்படுதலானும், வெண்பாட்டீற்றடி வண்டு எனக் குற்றுகர வீற்றா னின்றுழியும் கோலு என முற்றுகர வீற்றா னின்றுழியும் ஒத்தவோசையவாமாகலானும்[1] அவ்வசைகளாயிற்று. இஃது

"எழுத்தளவெஞ்சினும் ......... மொழிப"

(செய். 43)

என்ற விதியாற் பெறுதும்.

1. ஈற்றடியிறுதிக்கண்ணே முற்றுகரம் உரியசைக்கு உறுப்பாய் வருதல் மரூஉ வழக்கு என்பர் பேராசிரியர்.

குறிலிணை யுகரம் அல்வழி யான.

**பேராசிரியம் :**

இஃது, எய்திய தொருமருங்கு மறுத்ததூஉம் எய்தாத தெய்துவித்ததூஉமாம்; வழுவமைத்த தெனினும் அமையும். தனிக்குறிலானாகிய நேரசைப் பின்னும் இருவகையுகரம் வந்து நேர்பசையாதலை விலக்கினமையின் எய்திய தொரு மருங்கு மறுத்ததாம். குற்றுகரங் குற்றெழுத்துப் போன்று அலகு பெறு மென்றமையின் எய்தாததெய்துவித்து வழுவமைத்ததாம்.

(இ - ள்.) இருவகை உகரமும் இரு குறிலாகி இணைந்த வழி நேர்பசையாகாது (எ - று).

கரு, மழு என முற்றுகரம் நேர்பசையாகாது நிரையசை யாயிற்று. என்றார்க்குக், குற்றுகரம் விலக்கியதென்னை ? குறி லிணைவந்த வழிக் குற்றுகரமாகாதென்பது,

"நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" (தொல். எழு. மொழி.3)

என்றதனாற் பெறுதும் பிறவெனின், அது நோக்கிக் கூறினா னல்லன்; 'ஏற்புழிக்கோடல்' என்பதனான், ஞாயிறு வலியது என ஓரசைப் பின்னர் வந்தவழி இது குற்றுகரமேயாமன்றே ஆண்டும் அது குறிலிணை யுகரமெனவே படுமென்பது; பட்டக் கண்ணுங் குற்றுகரமேயென வழுவமைத்தவாறு. குறிலிணை யெனக் குற்றுகரத்தையும் **உடம்பொடு புணர்த்தல்** (665) என் பதனாற் குற்றெழுத்தென வேண்டினானென்பது பெற்றாம். இங்ஙனம் குற்றுகரங் குறிலிணையாகியுங் குற்றுகரமாகி எழுத் தள வெஞ்சினும் அமையுமெனவே நுந்தையென்னும் முதற்கட் குற்றுகரமுங் குற்றெழுத்துப் போன்று அலகுபெறும் எழுத்தள வெஞ்சினுமென்பது கொள்க.[1] இஃது **'ஒன்றினமுடித்த றன்னின முடித்தல்'** (665) என்னும் உத்திவகை.

---

1. குறிலிணையுகரம் - கரு, மழு என்றாற்போன்று இருகுறிலாய் இணைந்த உகரம். குற்றியலுகரம் குறிலிணையாய் வாராதாயினும் ஞாயிறு, வலியது என்றாற் போன்று ஓரசையின்பின்வந்தவழி அதுவும் குறிலிணையுகரம் எனவே படும் என்பதுபட அவ்வழிவரும் குற்றுகரத்தையும் குறிலிணையுகரம் எனவே கொள்ளுமாறு உடம்பொடு புணர்த்தல் என்பதனால் குற்றெழுத்தெனவே கூறினார் ஆசிரியர் என்பதும், அங்ஙனங் கொள்ளும் வழி 'நுந்தை' என்னும் மொழிமுதற்குற்றியலுகரமும் மாத்திரை குறைந்த நிலையிலும் குற்றெழுத்துப் போன்று அலகுபெறும் என்பதும் இவ்வுரைப்பகுதியால் இனிது புலனாம்.

**நச்சினார்க்கினியம் :**

இது தனிக்குறிலானாகிய நேரசைப்பின்னும் இருவகை உகரம் வந்து நேர்பசையாதலை விலக்கினமையான் எய்தியதுவிலக்கியதூஉமாம். குற்றுகரங் குற்றெழுத்துப்போன்று அலகுபெறுமென்றமையின் எய்தாதது எய்துவித்து வழுவமைத்ததூஉமாம்.

(இ-ள்.) குற்றெழுத்தோடிணைந்த குற்றியலுகரமும் முற்றியலுகரமும் அல்லாதவிடத்தே முற்கூறிய நேர்பசையாவன; எனவே குற்றெழுத்தோடிணைந்த குற்றியலுகரமும் முற்றியலுகரமும் வந்துழி நிரையசையாம். (எ-று.)

இனி, 'உடம்பொடுபுணர்த்தல்' என்பதனாற் குறிலிணையெனக் குற்றுகரத்தையும் குற்றெழுத்தென வேண்டினமை பெற்றாம்.[1] உ-ம்:- ஞாயிறு வலியது என ஓரசைப்பின்னர் வருகின்ற குறிற்பின்வந்தகுற்றுகரம் குற்றெழுத்துப் போன்று குறிலிணையுகரமாய் அலகுபெற்றதேனும் குற்றுகரமே யென்று இலக்கண மல்லதோர் வழுவமைத்தவாறு. இங்ஙனம் குற்றுகரம் எழுத்தளபெஞ்சுமெனவே,

"குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கி
னொற்றிய நகரமிசை நகரமொடு முதலும்"
(எழுத். மொழி. 34)

என விதித்த நுந்தையென்னும் முதற்கட் குற்றுகரம், எழுத்தளபெஞ்சிக் குற்றெழுத்துப் போன்று அலகுபெறுதலுங் கொள்க.[2] கரு, மழு இவை முற்றுகரநிரையசையாம்.

**ஆய்வுரை :**

இதுவும் அசைவகை யுணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்கூறப்பட்ட நேர், நிரை என்னும் இரண்டசையும், குற்றியலுகரம் முற்றியலுகரம் என்பவற்றுள் ஒன்றினை இறுதியிற் பெற்றுப் பிளவுபடாது ஒருசொற்றன்மையெய்திவரின்,

---

1. குற்றெழுத்தோடு இணைந்த நிலையிற் குற்றியலுகரத்தையும் 'குறிலிணையுகரம்' எனக் குற்றெழுத்தாக ஆசிரியர் உடன்பட்டுரைத்தலால் குற்றியலுகரத்தையும் குற்றெழுத்தெனக் கொண்டமை புலனாகும்.

2. எனவே 'நுந்தை' என்னும் மொழிமுதற் குற்றியலுகரமும் எழுத்தளபு எஞ்சிக் குறைந்த ஓசையது ஆயினும் குற்றெழுத்துப்போன்று அலகு பெறும் என்பது இதனாற்கொள்க என்றாராயிற்று.

அவை முறையே நேர்பு, நிரைபு என்னும் அசைகளாகும்; (மேற்குறித்த உகரம்) குற்றெழுத்தொடு பொருந்தின குறிலிணை யுகரமாய் வாராதவழி (எ-று.)

எனவே குற்றெழுத்தாகிய நேரசையின் பின் இருவகை-யுகரங்களுள் ஒன்று இணைந்து வருமாயின் அவை குறிலிணை-யுகரமாய் நிரையசையாவதன்றி நேர்பசையாதல் இல்லை என்பதாம்.

உதாரணம்: வண்டு, நாகு, பாம்பு, எனவும், மின்னு, நாணு, தீர்வு எனவும் நேரசை மூன்றின் பின்னும் முறையே குற்றுகரமும் முற்றுகரமும் வந்து 'நேர்பு' என்னும் அசையாயின. வரகு, குரங்கு, மலாடு, பனாட்டு என நிரையசை நான்கின் பின்னர்க் குற்றுகரமும், இரவு, புணர்வு, உலாவு என நிரையசை மூன்றின் பின்னர் முற்றுகரமும் வந்து 'நிரைபு' அசையாயின. நேரின்பின் உகரம் நேர்பு; நிரையின்பின் உகரம் நிரைபு என இவையிரண்டும் காரணப் பெயராயின.

ரு இயலசை முதலிரண் டேனவை உரியசை.

**இளம்பூரணம்** :-

என்—எனின். மேற்சொல்லப்பட்ட அசைக்குப் பிறிதோர் குறியிடுதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்பட்ட நேரசையும் நிரையசையும் இயலசை யெனக் குறிபெறும். நேர்பசையும் நிரைபசையும் உரியசை யெனக் குறிபெறும் என்றவாறு.[1] (ரு)

**பேராசிரியம்** :

இது, மேற்கூறிய அசை நான்கினையும் இருகூறு செய்து அவற்றுக்குளய்தாத தெய்துவிக்கின்றது. இனி, ஆட்சியுங் குண னுங் காரணமாக வேறு வேறு பெயர் கொடுக்கின்றது இச்சூத் திரமெனவும் அமையும்.

(இ-ள்) முதற்கணின்ற நேரும் நிரையும் இயற்றிக்கொள்ளப் படாது, இயற்கை வகையான் நின்றாங்கு நின்று தளைப்பனவாம்,

---

1. முதலிரண்டு இயலசை, ஏனவை உரியசை, என இசையும். 'ஏனையவை' எனற்பாலது, ஏனவை என்றாயிற்று. முதலிரண்டு என்பன நேரும் நிரையும். ஏனவை என்பன நேர்பும் நிரைபும்.

'ஏனைய' என்பது பேராசிரியர் கொண்ட பாடம்.

ஒழிந்தன விரண்டும் இயற்றிக்கொள்ளப்பட்டு இயலசையாதற்கு உரியவாம் (எ - று)[1]

எனவே, எய்தாத தெய்துவித்தது; இயலசை உரியசை யென்று ஆளுமாகலானும் இயற்கையால் இயறலின் இயலசை யெனவும், அவை செய்யுந் தொழில் செய்தற்கு உரியவாகலான் உரியசையெனவும், ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெய ரெய்துவித்ததூஉ மாயிற்று[2]

அங்ஙனம் இயற்றிக் கொள்ளுமாறு சீர்கூறும்வழிக் கூறுதும்.

**நச்சினார்க்கினியம் :**

இது முற்கூறிய அசையை இருகூறுசெய்து[3] அவற்றிற்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

(இ - ள்.) இயலசை முதலிரண்டு எ-து முதற்கண்ணின்ற நேரும் நிரையும் இயற்றிக்கொள்ளப்படாது இயற்கைவகையான் நின்றாங்குநின்று தளைத்தலின் இயலசை யென்றும்: ஏனைய வுரியசை எ-து ஒழிந்த இரண்டும் இயற்றிக்கொள்ளப்பட்டுந் தொழில் செய்தற்குரியவாதலின் உரியசையென்றும் பெயராம். (எ-று.) அங்ஙனம் இயற்றுதல் சீருட் காண்க.

**ஆய்வுரை :**

இது, முற்கூறிய நான்கசைகளையும் இருவகைப்படுத்து அவ்வகைகட்குப் பெயர் கூறுகின்றது.

(இ-ள்) முதலிற்கூறப்பட்ட நேர், நிரை என்னும் இரண்டும் இயலசையெனப் பெயர் பெறும். ஏனைய நேர்பு, நிரைபு என்னும் இரண்டும் உரியசையெனப் பெயர் பெறும்.

---

1. முதலிரண்டு இயலசை; ஏனைய உரியசை என இயையும். முதலிரண்டா வன முதற்கண் கூறப்பட்ட நேர், நிரை என்பன. ஏனைய ஆவன அடுத்துக்-கூறப்பட்ட நேர்பு, நிரைபு என்பன. நேர் நிரை என்பன இயற்கையால் இயலுதலின் இயலசை யெனப்பட்டன. அவை செய்யுந் தொழில் செய்தற்குரியன நேர்பு, நிரைபு என்பனவாதலின் அவை உரியசையெனப்பட்டன.

2. ஆட்சிபற்றிய பெயராவன வழக்கிலும் நூலிலும் ஆளுதற்பொருட்டு அமைக்கப்பெற்ற பெயர்கள். குணம்பற்றிய பெயராவன அவை குறித்த பொருளின் தன்மை பற்றி வழங்கும் காரணப்பெயர்கள். இவ்விருதிறமும் ஒருங்கேயுடையவாய் வழங்குவன இயலசை உரியசை யென்பனவாதலான் 'ஆட்சியுங்குணனுங்காரணமாகப் பெயர் எய்துவித்ததூஉமாயிற்று' என்றார்.

3. இருகூறுசெய்தல் - (இயலசை, உரியசை என) இரண்டுவகையாகப் பகுத்தல்.

நேர், நிரை என்பன சொற்கள் நின்றாங்கு நிற்ப இயற்கை வகையால் வரும் அசைகளாதலின் இயலசையெனப்பட்டன. இயலசையாகிய இவை செய்யும் தொழில் செய்தற்கு உரிய-வகையில் அமைந்தன நேர்பு, நிரைபு என்பனவாதலின் அவை உரியசையெனப்பட்டன.

இங்ஙனம் ஆசிரியர் தொல்காப்பியனார் நேர், நிரை என்னும் இயலசையுடன் நேர்பு, நிரைபு என்னும் உரியசைகளையும் கூட்டி அசைவகை நான்கென்றாராகப் பின்வந்த யாப்பிலக்கண ஆசிரியர்கள் நேர்பு, நிரைபு என்னும் உரியசைகளைத் தனி-யசைகளாகக் கொள்ளாது அவற்றை நேர்நேர், நிரைநேர் என ஈரசைச் சீர்களுள் அடக்கி நேர், நிரை என இரண்டசைகளையே கொள்வாராயினர்.

''குற்றிய லுகரமும் அற்றென மொழிப'' (புணரியல் 3) என்ற நூற்பாவில் ஒற்றுப்போன்று புள்ளிபெறும் எனப்பட்ட குற்றிய-லுகரம், தன்னால் ஊரப்பட்ட மெய்யும் தானும் அரை-மாத்திரையுடையதாய் நின்றதேனும் மெய்யெழுத்தினைப்-போன்று ஒடுங்கியொலியாது அகன்றொலிக்கும். அதனால் அவ் வுகரத்தை ஒற்றென அடக்கி மெய்யெழுத்தினைப்போன்று அலகுபெறாது என விலக்குதல் பொருந்தாது. இனி, குற்றிய-லுகரமாகிய அஃது ஒருமாத்திரையளவாய் விரிந்திசைக்காமை-யின் அதனை உயிர்த்திறமுடைய குற்றெழுத்தெனக் கொண்டு அலகு கொள்ளுதலும் ஏற்புடையதன்று. இங்ஙனம் ஒற்றெனவும் தள்ளப்படாது உயிர் எனவும் எண்ணப்படாது இடைநிகர்த்ததா-யுள்ள இக்குற்றியலுகரத்தைக் கொண்டு வேறோர் அசையாக்கு தலே செய்யத்தகுவது எனத் துணிந்த பண்டைத் தமிழியல் நூலோர் இவ்வுகரத்தினைக் கருவியாகக் கொண்டு நேர்பு, நிரைபு என்னும் இருவகை உரியசைகளை வகுத்துரைத்தனர். 'வண்டு வண்டு வண்டு வண்டு' எனக் குற்றுகரம் நின்றவழிப்பிறந்த அகவ லோசை, 'மின்னு மின்னு மின்னு மின்னு' என முற்றுகரம் ஈறாய் நின்ற வழியும் பெறப்படுதலானும், வெண்பாவின் ஈற்றடி 'வண்டு' எனக் குற்றுகரவீறாக நின்றுழியும் 'கோலு' என முற்றுகர வீறாக நின்றுழியும் ஒத்த ஓசையவாமாகலானும், குற்றுகரம் மொழியீற்றினைச் சார்பாகக் கொண்டு தோன்றுமாறுபோல உரியசைக்குறுப்பாகிய முற்றுகரமும் வருமொழி காரணமாகத் தோன்றுதலானும் குற்றுகரத்தின் செய்கை முற்றுகரத்திற்கும்

வேண்டி அதனைக் குற்றுகரம்போல நேர்பு, நிரைபு என்னும் அசைகட்கு உறுப்பாகக் கொண்டனர்.

இங்ஙனம் தொல்காப்பியனார்க்கு முற்பட்ட தமிழியல் நூலார் எழுத்தாலாகிய அசைகளின் இயல்புணர்ந்து அவற்றை நேர், நிரை, நேர்பு, நிரைபு என நான்காகப் பகுத்துரைத்தனராக, பிற்கால யாப்பிலக்கண நூலாசிரியர்கள் நேர்பு, நிரைபு என்னும் உரியசைகளின் இறுதியில் நின்ற குற்றுகர முற்றுகரங்களைத் தனியசையாகப் பிரித்து, அவற்றை நேரசையென அடக்கி நேர், நிரை என்னும் இரண்டசைகளையே கொண்டனர். அன்னோர் தாம் ஈரசைச் சீர்களாகக் கொண்ட நேர்பு, நிரைபு என்ப வற்றுக்குத் தேமா, புளிமா என்னும் வாய்பாட்டால் ஓசையூட்டின் செப்பலோசை சிதையுமென்று அஞ்சி அவற்றுக்கு முறையே காசு, பிறப்பு எனக்குற்றுகரவீற்று உதாரணங்காட்டியும், சீரும் தளையும் சிதையவருமிடத்துக் குற்றுகரம் அலகு பெறாது எனத் தனிவிதி வகுத்தும், வெண்பாவீற்றில் சிறுபான்மை முற்றுகரம் வரும் என உடன்பட்டும் இவ்வாறு பல்வேறு வரையறைகளைச் செய்து கொள்வாராயினர்.

௬௱. தனிக்குறில் முதலசை மொழிசிதைந் தாகாது.

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவும் அசைக்குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தொடர்மொழிக்கண் மொழி சிதைந்து தனிக் குறில் நேரசை யாகா தென்றவாறு. 1

மொழிசிதைத்தலாவது - ஒற்றுமைப் பட்டிருக்கின்றதனைப் பிரித்தல். அஃதாவது புளிமா என்றவழி நிரைநேராக அலகிடாது முதனின்றதனை நேரசையாக்கி யிடை நின்றதூஉ மிறுதி நின்றதூஉம் நிரையசையாதல். அவ்வழிப் புளி யென்னுஞ் சொல்லைப் பிரிக்கவேண்டுதலின் நிரையசை யாகவே கோடல்-வேண்டு மென்றவாறு. இனி, மொழி சிதையாக்கால் நேரசை-யாம். அது விட்டிசைத்து நிற்றல். "அஉ மறியா ... னாட்டைநீ"

---

1. மொழிசிதைந்து தனிக்குறில் முதலசையாகாது என இயைத்துப் பொருள் கொள்க. முதலசை - நேரசை.

'மொழிசிதைத்து' என்பது பேராசிரியர்கொண்ட பாடம்.

(யாப்.வி.பக். கசஉ) எனவும், "அஆ இழந்தானென் றெண்ணப் படும்" (நாலடி. கூ) எனவும் வருவன முதலெழுத்து நேரசை-யாம். (சீா)

**பேராசிரியம் :**

இஃது, எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று; உகிரி மயிரி என நின்றவழிக் குறிலிணையேயன்றி மூன்றெழுத்து நிறைந்தமையின் நிரையசையாகா, தனித்தனி நேரசையாகலும் மூன்று குற்றெழுத்தினுள் இரண்டு குறிலிணையாக ஒன்று நேரசையாவதும் முதற்கண்ணே கொல்லோவெனவும் எய்திய-தனை விலக்கி விட்டிசைத்த வழித் தனிக்குறில் நேரசையா-மென்பது எய்துவித்தமையின்.

(இ-ள்) தனிக்குறிலானாகிய நேரசை முதற்கண் மொழி சிதைத்துச் செய்யப்படாது (எ-று).

இங்ஙனம் முதற்கண் வரையறுப்பவே இடையும் இறுதியும் மேலோதியவாற்றான் நேரசையாமென்பது. மொழிசிதைத்த லென்பது விட்டிசையாத மொழியை விட்டிசைத்து மொழிதல்;[1] எனவே, விட்டிசைத்த மொழியாயின் அது மொழிசிதைத்த தெனப்படாது இயல்பாமென்பது பெற்றாம். கரு மழு என முதற்கண் மொழி சிதைத்து நேரசையாகாமையுங் குறிலிணை யெனப்பட்டு நிரையசையாயினவாறுங் கண்டு கொள்க.

"அ ஆ விழந்தான்" (நாலடி.1-9)

எனவும்,

"அ உ வறியா வறிவி லிடைமகனே
நொ அலைய னின்னாட்டை நீ"

எனவும்,

'முரல' என மொழிக்கண் வந்த மூன்று குற்றெழுத்துக்களுள் இரண்டு குறிலிணையாக ஒன்று குறிலாகப் பிரியுங்கால் தனிக்குறிலாய் நேரசையாவது முதற்கண் உள்ள குறிலோ இறுதிக்கண் உள்ள குறிலோ என ஐயந்தோன்றிய நிலையில், முதற்கண் உள்ள குறில் மொழிசிதைத்து நேரசையெனக் கொள்ளப்-படாது; இடையிலும் இறுதியிலும் உள்ள குறிலே நேரசையாகும் என ஐயமகற்றும் நிலையில் அமைந்தது இச்சூத்திரமாகும்.

1. விட்டிசையாத மொழியை விட்டிசைத்து மொழிதலாவது, புளி, பலா என்றாற்போல் ஓரசையாய் இணைந்தொலிக்கும் எழுத்துக்களுள் ஒன்றைத் தனியே பிரித்து வேறோர் அசையாகக் கொள்ளுதல்.

இவை விட்டிசைத்தலின் மொழி சிதையாது தனிக்குறில் முதற்கண் நேரசையாயினவாறும் அவை குறினெடிலுங் குறிலிணையு மெனப்பட்டு நிரையசை யாகாதவாறுங் கண்டு கொள்க.

இனி, விட்டு இசைக்கும் இடந்தான் மூன்றென்பது உரையிற் கொள்க.[1] அவை,

"அ ஆ விழந்தான்"

எனக் குறிப்பின்கண் வருதலும்

"அ உ வறியா"

எனச் சுட்டின்கண் வருதலும்

"ஞொ அலையல்"

என ஏவற்கண் வருதலுமென

விட்டிசைக்குமிடந்தான் மூன்றெனப்பட்டது. முதலசை யென்பது நேரசை யென்பாருமுளர். அது விதந்தோதல் வேண்டா, தனிக்குறிலான் அசையாமெனப்பட்டது நேரசையே யென்பது பெறுதுமாகலான்.[2] மற்றும்,

"இ உக்குறுக்கம்"                                    (நேமிநாதம்-5)

என்றவழி

விட்டிசைத்து மொழி சிதையாதாகலான் அவ்விரண் டெழுத்துங்கூட்டி நேர்பசை யென்னாமோவெனின், அவை பிளவுபட நிற்றலின் இயைந்திலவென மறுக்க.[3]                                    (எ)

---

1. உரையிற்கொள்ளுதலாவது, உரையிற்கோடல் என்னும் உத்தியாற் கொண்டு விரித்துரைத்தல். அங்ஙனம் கொள்ளுங்கால் விட்டிசைக்குமிடம் குறிப்பு, சுட்டு, ஏவல் என மூன்றெனப்படும்.

2. 'தனிக்குறில் முதற்கண் மொழிசிதைத்து அசையாகாது' என இயைத்து இச்சூத்திரத்துக்குப் பொருள் வரைந்தார் பேராசிரியர். 'மொழி சிதைந்து தனிக்குறில் முதலசையாகாது' என இயைத்து 'முதலசை' என்பதற்கு 'நேரசை' யெனப்பொருள் வரைந்தார் இளம்பூரணர். தனிக்குறிலாகிய அசை நேரசையே யென்பது எல்லார்க்கும் புலனாம் ஆதலால், 'முதலசை' என இயைத்து அதனை நேரசைக்குரிய பெயராகப் பிரித்தோதவேண்டிய இன்றியமை-யாமையில்லையென்பது பேராசிரியர் கருத்தாகும்.

3. 'இ...உக்குறுக்கம்' என விட்டிசைத்து நின்ற நிலையில் 'இ' என்னும் நேரசையுடன் பின்வரும் 'உ' என்பதனைச் சேர்த்து 'நேர்பு' என்னும் அசை-யாகக் கொள்ளக் கூடாதோ என வினவினார்க்கு 'இ-உ' என்னும் அவ்விரண்டும் விட்டிசைத்துப் பிளவுபட நிற்றலால் 'நேர்பு' என ஒற்றுமைப்பட இயைந்து நிற்கும் ஓரசையாகக் கொள்ளுதல் பொருந்தாது என அன்னோர் கூற்றினை மறுத்தவாறு.

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) மொழி சிதைத்து எ-து பொருடந்து ஒற்றுமைப் பட்டு நிற்பதோர் சொல்லைப் பொருளைக்கெடுத்து : (முதல்) தனிக்குறில் - முதல் நின்ற எழுத்தைத் தனிக்குறிலாக்கின்: முதலசையாகாது எ-து அது நேரசையாகாது[1] எ - று.

எனவே, பொருள்தந்து ஒற்றுமைப்பட்டு நில்லாது விட்டிசைத்து நின்றுழி நேரசையாம் என்றவாறாயிற்று. புளிமா என்றவழிப் புளியென்று ஒற்றுமைப்பட்டுநின்ற சொல்லைச் சிதைத்து முதல்நின்ற பகர உகரத்தை நேரசையாக அலகிடப்படாது. இனி விட்டிசைத்து நேரசையாங்கால் ஏவல், குறிப்பு, தற்சுட்டு, வினா, சுட்டு என ஐந்து பொருளின்கண் விட்டிசைத்து நேரசையாம். உதாரணம் :-

''வெறிகமழ் தண்புறவின் வீங்கி யுகளு
மறிமுலை யுண்ணாமை வேண்டிப் - பறிமுன்கை
அ உ மறியா வறிவி லிடைமகனே
நொஅலைய னின்னாட்டை நீ''

என்பது ஏவல். 'அ உ என்பது' அகரந் தன்னையே சுட்டுதலிற் றற்சுட்டு.

"அ ஆ விழந்தானென் றெண்ணப் படும்" (நாலடி. 9) என்பது அருட்குறிப்பு. ''அ அவனும், இ இவனும், உ உவனும்'' என்பது சுட்டு. 'எ எவன்' என்பது வினா. 'உரையிற்கோடல்' என்பதனான் ஐந்திடத்தும் விட்டிசைத்தல் கொள்க.[2]

---

1. ''மொழிசிதைத்துத் தனிக்குறில் (ஆக்கின் அது) முதலசை ஆகாது'' எனவேண்டுஞ் சொல் வருவித்து உரை வரையப்பட்டது.

மொழி சிதைத்தலாவது, குறிலிணையாகவும் குறில் நெடிலாகவும் ஒற்றுமைப்பட்டு இயைந்து பொருள்தந்து நிற்கும் சொல்லின்கண்ணே அதன் பொருள் கெடுமாறு குற்றெழுத்தினைத் தனியே பிரித்து அலகிடல்.

2. தனிக்குறில் விட்டிசைக்குமிடம் ஏவல், குறிப்பு, தற்சுட்டு என மூன்று என்றார் யாப்பருங்கலவிருத்தியாசிரியர். அம்மூன்றுடன் சுட்டும் வினாவும் ஆகிய இரண்டையுஞ் சேர்த்து ஐந்து எனக் கொண்டார் நச்சினார்க்கினியர். 'ஏவல் குறிப்பே தற்சுட்டு' என்புழி ஏகாரம் மிகுத்துக் கூறிய அதனால், சுட்டின்கண்ணும் வினாவின்கண்ணும் ஒருசார் தனிக்குறில் மொழிமுதற்கண் வந்து நேரசையாம். என்னை?

"அ இ உ, எ ஒ என்னுமப்பா லைந்தும்"
(தொல். எழுத். நூன். 3)

எனவரும். இவை மொழிசிதைத்துத் தனிக்குறிலாய் நேரசை யாயினவாறு காண்க.

**ஆய்வுரை :**

இஃது, ஒற்றடாத குற்றெழுத்துத் தனித்து நேரசையாகாது என்கின்றது.

(இ-ள்) இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழியின்கண் உள்ள குற்றெழுத்து மொழிசிதைத்து நேரசையெனக் கொள்ளப்படாது எ-று.

மொழி சிதைத்தலாவது, குறிலிணையாகவும் குறினெடிலாகவும் ஒற்றுமைப்பட்டு இயைந்த குற்றெழுத்தினை மொழி முதற்கண் தனிக்குறிலாகப் பிரித்து அசைத்தல். 'முதலசை' என்றது இயலசையிரண்டனுள் முதலில் வைத்து எண்ணப்படும் நேரசையினை. மொழி சிதைத்துத் தனிக்குறில் நேரசையாகாது எனவே அதுபின்னுள்ள குறிலோடும் நெடிலோடும் இணைந்து குறிலிணையாகவும் குறினெடிலாகவும் நிரையசையாம் எனவும் மொழி சிதையாதவழி நேரசையாம் எனவும் கொள்க. ஈண்டு மொழியென்றது இரண்டிறந்திசைக்குந் தொடர்மொழியினை.

எ ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்.

**இளம்பூரணம்:**

என்—எனின். இதுவுமது.

(இ-ள்.) குற்றியலிகரம் ஒற்றெழுத்து இயல்பிற்று என்றவாறு.[1]

அடியினதிடைக்கண் ஒற்றுமைப்பட்ட சொல்லின்கண் நேரசை என்று ...... எனவே அலகுபெறாதென்றவாறாம்.

முன்பக்கத் தொடர்ச்சி

''ஏவல் குறிப்பே தற்சுட் டல்வழி
யாவையும் தனிக்குறில் முதலசை யாகா
சுட்டினும் வினாவினும் உயிர்வரு காலை
ஒட்ட வருஉம் ஒருசாரும் உளவே

என்றார் மயேச்சுரர் (யா. வி. ) எனவரும் யாப்பருங்கல விருத்தியாசிரியர் கூற்று இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

1. குற்றியலிகரம் ஒற்றெழுத்து இயற்று எனமுடியும். ஒற்றெழுத்தின் இயல்பாவது அசையாக்குங்கால் எழுத்தென எண்ணப்பெற்று அலகுபெறாமை.

"பேதைமை யென்ப தியாதென வினவின்
ஓதிய இவற்றை உணராது மயங்கி
இயற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கண்டது தெளிதல்."

இதன்கட் குற்றியலிகரம் அலகு பெறாதவாறு காண்க.[1] (எ)

**பேராசிரியம் :**

இஃது, எய்தாத தெய்துவித்து ஐயம் அறுத்தது.

(இ - ள்) மேற்கூறிய எழுத்திலக்கண வகையானும் ஈண் டோதும் அசைக்குறுப்பா மாற்றானும் எல்லாங் குற்றியலிகரம் ஒற்றெழுத்தியற்றேயாம் (எ - று).

தேற்றேகார மடுத்துக் கூறியவாறு.[2] எனவே எழுத் தோத்தினுண்,

'மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்'
(தொல்-எழுத்-புண-2)

எனக் கூறிக்,

'குற்றிய லுகரமு மற்றென மொழிப'
(தொல்-எழுத் புண-3)

எனக் குற்றுகரத்திற்குப் புள்ளிபெறுதலுங் கூறினான்; அது போலக் குற்றிகரமும் புள்ளிபெற்று நிற்றல் உடைத்தெனவும் ஈண்டுக் குற்றுகரம் நேர்பும் நிரைபுமாகியவாறு போலத் தானும் ஓர் அசையாகுங் கொல்லென்று ஐயுறுவது வேண்டா, ஒற்று நின்றாங்கு நின்று இயலசை உரியசைகளைச் சார்ந்து வருதலும் ஒற்றுப்போல எழுத்தெண்ணப்படாமையு முடைத்து என்ற வாறுமாயிற்று[3]. எனவே, ஒற்றெழுத்தியற்றாயினுங் குற்றுகரம்

---

1. 'பேதைமை யென்ப தியாதென வினவின்' எனவரும் ஆசிரிய அடியில் 'தியாதென' எனத் தகரவொற்றின் மேல்நின்ற குற்றியலிகரம் ஒற்றுப்போன்று அலகுபெறாமையால் 'தியாதென' என்னுஞ்சீர் நேர்நிரை (கூவிள) என்னும் வாய்பாட்டோசையினதாய் நின்றமை செவி கருவியாகக் கூறிக்காண்க.

2. சார்பெழுத்தினுள் ஒன்றாகிய குற்றியலிகரம் முற்குறித்த எழுத்திலக்கண வகையாலும் இவ்வியலிற் கூறப்படும் அசைக்குறுப்பாம் நெறியினாலும் ஒற்றெழுத்தின் தன்மையதே எனத் தெளிவுபடுத்தும் முறையில் 'குற்றிய லிகரம் ஒற்றெழுத் தியற்றே' எனத்தேற்றேகாரமடுத்துக்கூறினார். மடுத்துக் கூறுதல்- இயைத்துச் சொல்லுதல்.

3. குற்றிகரம் ஒற்றெழுத்தின் இயல்பினதே என்றதனால் குற்றியலிகரம் ஒற்றுப்போலப் புள்ளி பெறுதலும், ஒற்று நின்றாற்போல நின்று இயலசையுரியசைகளைச் சார்ந்து வருதலும் ஒற்றுப்போல எழுத்தெண்ணப்படாமையும் உடைத்து என்பதாம்.

இகரக்குறுக்கம் போலாது செய்யுட்கு உபகாரப்பட்டதோர் அசை வேறுபாடு தோன்ற நிற்குமென்றவாறாயிற்று.[1] மற்று எண்ணப்படாதென்றது ஈண்டுக் கூறல்வேண்டுமே ?

'உயிரி லெழுத்து மெண்ணப் படாஅ'

(தொல்-செய். 44)

என்புழிப் பெறுதுமாலெனின், அது குற்றுகரத்திற்கே கூறிய தென்பது ஆண்டுச் சொல்லுதும்.

உதாரணம் :

"மியாயிக மோமதி யிகுஞ்சின் னென்னும்"

(தொல்-சொல்-இடைச்-26)

எனவும்,

"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை" (குறள். 254)

எனவும் இவை இயலசை சார்ந்து ஒற்றியற்றாகிக் குற்றிகரம் வந்தவாறு. நாகியாது வரகியாது எனக் குற்றிகரம் உரியசை சார்ந்து ஒற்றியற்றாகி வந்தவாறு. அது நிரையும் நிரைபுஞ் சார்ந்து ஒற்றியற்றாமாறு இல்லைபோலும் ['மியாயிக' என்பது பாதிரி; "அருளல்லதியாது" என்பதும் 'நாகியாது' என்பதும் போரேறாம்; 'வரகியாது' என்பது கடியாறாம். பிறவும் அன்ன] இவற்றையெல்லாம் 'ஒற்றெழுத் தியற்றே' யென்பதனாற் புள்ளியிட்டெழுதுக.[2] இது சொல்லிய காரணங், குற்றுகரம் அரைமாத்திரைத்தாகியும் ஒற்றியற்றாகாது நேர்பும் நிரைபும் ஆகியவாறுபோல அதற்கு இனமாகிய குற்றிகரமும் அரை-மாத்திரத்தாகி வேறோரசையாகுங் கொல்லென்று ஐயுறாமற் காத்தவாறு. மற்று ஆய்தத்தினையும் ஒற்றியற்றென்னாமோ வெனின், அஃது எழுத்தோத்தினுள்,

'எழுத்தோ ரன்ன' (தொல்-எழுத். நூல்-2)

என்பதனாற் பெற்றாமென்பது. மற்று,

"முந்தியாய் பெய்த வளைகழலும்" (யா. வி. ப. 43)

எனவும்,

"நினக்கியான் சொல்லிய தின்ன தின்று"

1. குற்றியலிகரம் எல்லாவகையானும் ஒற்றெழுத்தின் தன்மையது எனவே அதனுடன் வைத்து எண்ணப்படும் குற்றியலுகரம் ஒற்றெழுத்தின் இயல்பின-தாயினும் செய்யுட்கு உபகாரப்பட்டதோர் அசைவேறுபாடு தோன்ற அசைக்கு உறுப்பாயும் நிற்கும் என்பது பெறப்படும்.

2. குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆகிய இவற்றையெல்லாம் தொல்காப்பி யனார் விதித்தவண்ணம் புள்ளியிட்டு எழுதுதல்வேண்டும் எனப் பேராசிரியர் பணித்தவாறு காண்க.

எனவும் இவை ஒற்றியற்றாகாது எழுத்தியற்றாயினவென்று காட்டுவாருமுளர். முந்தியாய் என்பது இகரவீறுமாமாகலின் அது காட்டல் நிரம்பாது. அல்லதூஉம் அவை சான்றோர் செய்யு ளல்லவென மறுக்க. இனி, ஒற்றும் எழுத்துமென உம்மையோ டெண்ணலுமாகாது; இவ்வோத்தினுள்,

'உயிரில் லெழுத்து மெண்ணப் படாஅ' (தொல். செய். 44)

என ஒற்றினையும் எழுத்தென்றானாகலின்.[1]

**நச்சினார்க்கினியம்:**

இது குற்றியலிகரம் அலகுபெற்றும் அலகுபெறாதும் வரும் என்கிறது.

(இ-ள்.) குற்றியலிகரம் ஒற்றியற்று எழுத்தியற்று எ - து குற்றியலிகரமாவது ஒற்றியல்பினையுடைத்து: அதுவேயன்றி, எழுத்தியல்பினையும் உடைத்து. எ-று.

என்றது அலகுபெறாதவழி ஒற்றாம்: அலகுபெற்றவழி யெழுத்தாம் என்றவாறு. உ-ம் :—

"குழலினி தியாழினி தென்ப" (திருக்குறள் 66)

என ஆசிரியத்தளையாயும்

"அருளல்ல தியாதெனின்" (திருக்குறள் 256)

எனக் கலித்தளையாயும் வருதலிற் குற்றியலிகரம் அலகுபெறாது ஒற்றியற்றாயிற்று.

"நினக்கி யாரே மாகுது மென்று
வனப்பு நினக்கியா னுரைப்பக் கேண்மதி"

---

1. 'ஒற்றெழுத்து' என்பதனை உம்மைத் தொகையாகக்கொண்டு குற்றிய லிகரம் ஒற்றியற்று, எழுத்தியற்று, எனப் பிரித்துக்கூட்டிக் ''குற்றியலிகரமாவது ஒற்றியல்பினையுடைத்து; அதுவேயுமன்றி எழுத்தியல்பினையும் உடைத்து'' எனப்பொருள் கூறுவாரைமறுக்கும் முறையில் அமைந்தது, இவ்வுரைத்தொட-ராகும். தமிழ் நெடுங்கணக்கிலுள்ள உயிரும் மெய்யும் ஆகிய முப்பதும் 'எழுத்-தெனப்படுப' எனத் தொல்காப்பியனார் தெளிவாகக் குறிப்பிடுதலால், அவ்வெழுத்துக்களுள் உயிரினை மட்டும் எழுத்து என்ற பெயராலும் மெய்யினை 'ஒற்று' என்ற பெயராலும் வேறுபடக் கொள்ளுதல் பொருந்தாது எனவும், உயிர்த்திறமியக்கம் இல்லாத ஒற்று முதலியவற்றை 'உயிரில்லெழுத்தும்' என எழுத்து என்ற பெயரால் ஆசிரியர் சுட்டிக்கூறலால் எழுத்து என்பது உயிர்கட்கு மட்டுமன்றி உயிரல்லாத ஒற்றுக்களையும் குறித்து வழங்கும் பொதுப்-பெயரெனவும் அறிவுறுத்தும் முறையில் அமைந்தது இவ்வுரைப்பகுதியாகும்.

என இக்குற்றியலிகரங்கள் அலகுபெறுதலின் எழுத்தியற்றா-யிற்று. இங்ஙனம் சான்றோர் செய்யுள் வருதல் பெருவரவிற்று.[1] ஒற்றினையும் எழுத்தென்று ஓரோரிடத்துக் கூறினாரேனும், ஈண்டு ஒற்று எழுத்து எனக்கூறலின் ஒற்றல்லா வெழுத்தை யுணர்த்திற்று.[2]

**ஆய்வுரை :**

இஃது அசைகொள்ளுந்திறத்தில் மூற்கூறப்படாத குற்றிய-லிகரத்தின் நிலை உணர்த்துகின்றது.

(இ-ள்) குற்றியலிகரம் ஒற்றெழுத்தின் இயல்பினது என்பர் ஆசிரியர் எ-று.

எனவே, சார்பெழுத்துள் ஒன்றாகிய குற்றியலிகரம் ஒற்று நின்றாங்கு நின்று இயலசை உரியசைகளைச் சார்ந்துவருதலும், ஒற்றுப்போல எழுத்தெண்ணப்படாமையும் ஆகிய இருநிலைமை யும் ஒருங்குடையது என்பது பெறப்படும். குற்றியலிகரம்,

"குழலினி தியாழின தென்ப" (திருக்குறள் 66)

என ஒற்றின் தன்மையதாய் நின்று அலகு பெறாமையும்,

"மற்றியா னென்னுளேன் கொல்லோ" (திருக். 1206)

---

1. குற்றியலிகரம் ஒற்றின் தன்மையதாய் அலகு பெறாமலே வரும் என்பது பேராசிரியர் கருத்தாகும். இக்கருத்தினால், 'முந்தியாய் பெய்தவளை கழலும்' என்றாங்குக் குற்றியலிகரம் அலகு பெற்றுவரும் பாடல்களைச் சான்றோர் செய்யுள் அல்ல எனப் பேராசிரியர் மறுத்துள்ளமை காணலாம். குற்றியலிகரம் எழுத்தின் தன்மையதாய் அலகு பெறுதல் உண்டென்பது சங்க விலக்கியம், திருக்குறள், திருச்சிற்றம்பலக்கோவை முதலிய சான்றோர் செய்யுட்களிற் பெரு வரவிற்றாய்க் காணப்படுகின்றது. எனவே குற்றிய லிகரம் ஒற்றாந்தன்மையினை-யும் எழுத்தாய் அலகிடப்பெறுந் தன்மையினையும் ஒருங்கு உடையது என்பதனைப் புலப்படுத்தும் முறையில் 'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' எனவரும் நூற்பா வினைக் 'குற்றியலிகரம் ஒற்றியற்று, எழுத்தியற்று' என இருதொடராகப் பகுத்துரைத்தார் நச்சினார்க்கினியர். ''குற்றியலிகரம் அலகு பெறாதவழி ஒற்றின் தன்மையது; அலகு பெறும்வழி எழுத்தின் தன்மையது'' என்பது இச்சூத்திரத்-திற்கு நச்சினார்க்கினியர் கண்ட புதுப்பொருளாகும்.

2. ஒற்றினையும் 'எழுத்து' என ஆசிரியர் கூறினாராயினும் செய்யுளில் அலகிடப்பெறாமையும் அலகிடப்பெறுதலும் ஆகிய தன்மை பற்றி முறையே 'ஒற்று' எனவும் 'எழுத்து' எனவும் பகுத்துக் கூறினமையால் இச்சூத்திரத்து 'எழுத்து' என்றது, ஒற்றல்லாத எழுத்தினை என்பது நச்சினார்க்கினியர் தரும் உரைவிளக்கமாகும்.

என உயிரெழுத்தின் இயல்பினதாய் நின்று அலகு பெறுதலும் என இருநிலைமையுமுடையதாய் இலக்கியங்களிற் பயின்று வருதலைக் கண்ட நச்சினார்க்கினியர் "குற்றியலுகரம் ஒற்றியல்பிற்றாயும் ஒற்றல்லா உயிரெழுத்தியல்பிற்றாயும் வரும்" என இச்சூத்திரத்திற்குப் புதியதோர் உரைவிளக்கம் கூறியுள்ளமை, இலக்கியங்கண்டதற் கிலக்கணம் வகுக்கும் அவரது நுண்மாணுழை புலத்தினை இனிது புலப்படுத்துவதாகும்.

அ முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ
நிற்றல் இன்றே ஈற்றடி மருங்கினும்.

**இளம்பூரணம்:**

என்—எனின். முற்றியலுகரத்திற் குரிய வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) முற்றிய லுகரமு மொழிசிதைந்து நேர்பசை நிரைபசை யென்றுரைக்கப்படாது; அஃது ஈற்றடி மருங்கிற் றனியசையாகி நிற்றலும் இன்றென்றவாறு.

எனவே அடியின திடைக்கண் ஒற்றுமைப்பட்ட சொல்லின்கண் நேர்பசை நிரைபசையெனக் காட்டப்படாது. அது ஈற்றடி மருங்கிற்றனியசையாகி நில்லா வென்பதூஉம், ஒற்றுமைப்படாத சொல்லின்கண் தனியசையாமென்பதூஉம், ஈற்றடிக்கண் எவ்வழியானுந் தனியசை யாகாதென்பதூஉம் உணர்த்தியவாறாம்.[1]

---

1. மொழிமுதற் குற்றியலுகரமேயன்றி மொழிமுதற்கண் வந்த முற்றியலுகரமும் அடியினது நடுவே ஒற்றுமைப்பட்ட சொல்லின்கண் பிரிந்து நேர்பசை நிரைபசையாகக் கொள்ளப்படாது என்பதாம், அது ஈற்றடி மருங்கின் தனியசையாக நிற்றல் இல்லை என்றவாறு. எனவே அவ்வுகரம் ஈற்றின்கண் நேர்பசை நிரைபசைகட்கு உறுப்பாய் வருவதல்லது தனியசையாகாதென்பதும் உணர்த்தியவாறாம். இச் சூத்திரத்தில் முதலடி ஒரு தொடராகவும் ஈற்றடி ஒரு தொடராகவும் நின்று, முற்றியலுகரத்தின் இருவகையியல்பினை உணர்த்தின. நுந்தையென்னும் மொழிமுதற் குற்றியலுகரமேயன்றி முத்தரையர் என்றாற்போன்று வருமொழி முதலிலுள்ள முற்றியலுகரமும் மொழிசிதைந்து நிலைமொழியீற்றசையோடு கூடி நேர்பசை நிரைபசையாகக் கொள்ளப்படா என்பார், 'முற்றிய லுகரமு மொழிசிதைத்துக் கொளா' என்றார். எனவே அடியின திடைக்கண் ஒற்றுமைப்பட்ட சொல்லின்கண் பிரிந்து நேர்பசை நிரைபசையெனக் காட்டப்படாது என்பதாம். முற்றியலுகரம் ஈற்றடிக்கண் எவ்வகையானும் தனியசையாகாதென்பார், 'நிற்றலின்றேயீற்றடி மருங்கினும்' என்றார். எனவே ஈற்றடியிறுதியினும் இடையடியிறுதியினும் முற்றியலுகரம் தனியசையாகி நில்லாதென்பதும் ஒற்றுமைப்படாத சொல்லின்கண் தனியசையாமென்பதும் பெறப்படும் என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

"அங்கண் மதியம் அரவுவாய்ப் பட்டென"
(அகத்திணை. பக். உ௱)

என்றவழி அரவென்பது மொழிசிதையாமையின் நிரைபசை யாயிற்று.

"பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்" (நாலடி. உOO)

என்றவழி பெரு முன்னர்க் குறித்துச் சீராக்க வேண்டுமாயின் ஈண்டு மொழிசிதைத்தலின் நிரைபசை யாகாதாயிற்று.

"இனமலர்க் கோதாய் இலங்குநீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரகலம் புல்லு" (யாப். வி. பக். உOகூ)

"மஞ்சுசூழ் சோலை மலைநாட மூத்தாலும்
அஞ்சொன் மடவாட் கருளு" (யாப். வி. பக். உகக)

என்பதனாற்கொள்ளற்க.[1] இவை புல்லு அருளு என வருமா-லெனின்: "நிற்றலின்றே யீற்றடி மருங்கினும்" என்பதனான் ஈற்றடியிறுதியினு மிடையடியிறுதியினு முற்றியலுகரம் நில்லா தெனவும் பொருளாம்; இதனானே அவ்வாறு வருதலுங்கொள்க. முற்றியலுகரமு மென்றவும்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

**பேராசிரியம் :** (அ)

இதுவும், ஐயம் அறுத்தது; இருவகையுகரமொடு நேரும் நிரையும் இயையின் அவை நேர்பும் நிரைபுமாமென்றான், அவற்றுண் முற்றுகரம் ஈறாகி நிற்குஞ் சொல் உலகத்து அரியவாயின வாதலின் புணர்ச்சிக்கண் வந்த உகரமே ஈண்டு நேர்பும் நிரைபு மாவனவெனவும் புணர்ச்சிக்கண்ணும் நிலைமொழித் தொழி லாகிய உகரமும், நிலைமொழி யீறுகெட்டு நின்ற உகரமுமே

---

1. இவ்வுரைத்தொடரின் முதற்கண் "என்பதனாற் கொள் (ளற்)க" என்ற தொடர் ஏடெழுதுவோராற் பிழைபட்டதெனத்தெரிகிறது. ஆதலின் இதனை நீக்கிப் படித்தல் பொருந்தும். "இவை புல்லு அருளு எனவருமா லெனின்? எனவும், 'நிற்றலின்றே யீற்றடிமருங்கின்' என்பதனான் ஈற்றடியிறுதி யினும் இடையடியிறுதியினும் முற்றியலுகரம் (தனியசையாகி) நில்லாதெனவும் பொருளாம்; இதனானே அவ்வாறு வருதலுங்கொள்க" எனவும் இவ்வுரைத்-தொடர் வினாவும் விடையுமாக அமைந்திருத்தல்வேண்டும். இந்நுட்பம் "முற்றியலுகர மீறாயிற்ற வெண்பாவிற்கு, 'மஞ்சுசூழ் சோலை மலைநாட மூத்தாலும், அஞ்சொன்மடவார்க் கருளு' 'இனமலர்க் கோதா யிலங்குநீர்ச் சேர்ப்பன், புனைமலர்த் தாரகலம் புல்லு' என்பவற்றை உதாரணமாகக் காட்டி, அவை பிறப்பு காசு என்னும் வாய்பாடாகக் கொள்ளப்படும்; இவ்வுதாரணம் "செய்யுளியலுடையார் காட்டியன" எனவரும் யாப்பருங்கலவிருத்தியுரையாற் புலனாம்.

கொள்ளப்படுவன வெனவும், வருமொழித் தொழிலாகிய ஒற்று நிலை மொழியாகிய நேர்பு நிரைபிற்கு உறுப்பாவன கண்டு வரு மொழியுகரம் ஈண்டும் அதுபோல அவற்றிற்குறுப்பாங்கொல் லென்று ஐயுற்றானை ஐயுறற்கவெனவுங் கூறினமையின்.

(இ - ள்.) முற்றியலுகரம் மொழி சிதைத்துக்கொளாஅ— இருவகையுகரமு மியைந்தவை வருங்கால் வருமொழியைச் சிதைத்துப் பிரித்து அவற்றினின்று வாங்கிக் கொடுக்கப்படா; நிற்றலின்றே யீற்றடி மருங்கினும்—அங்ஙனம் வாங்கிக் கொடுக் கப்படாவாயின், நேரசை நிரையசைப் பின்னர் முற்றுகரம் ஈறாகி வருஞ்சொல்லும் உலகத்தரியவாயின் முற்றுகரத்தால் நேர்பும் நிரைபும் ஆமாறென்னை யென்றார்க்கு அடியிறுதிக்கணல்லது முற்றுகரம் புணர்ச்சிவகையான் இடைநில்லாதன வாயின கண்டா யென்ப துணர்த்தியவாறு.

'இன்று' என ஒருமை கூறினமையின் எடுத்தோதிய முற் றுகரமே கொண்டு இலேசினாற் றழீஇய குற்றுகரங் கொள்ளற்க. மற்றிதனை இலேசினாற் கொண்டதென்னையெனின், நுந்தை யென்னும் ஒருமொழிக்கணன்றி வாராமையின் அதன் சிறு வரவுநோக்கி உம்மையாற் கொண்டானென்பது.[1] முற்றுகரம் மொழிசிதைத்துக்கொளாவெனவே ஒற்றூர்ந்துவரினுந் தனித்து வரினும் உடன்விலக்குண்ணு மென்பது.

"நாணுடை யரிவை" (அகம். 34)

என்றவழி,

1. 'முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ' எனவரும் சூத்திரத்திற்கு உரைவரையு மிடத்து 'முற்றியலுகரமும்' என்ற உம்மையால் 'மொழிமுதற்' குற்றுகரமாகிய 'நுந்தை' யென்பதனையும் தழுவிக்கொண்டு "இருவகையுகரமும் இயைந்தவை வருங்கால் வருமொழியைச் சிதைத்துப்பிரித்து அவற்றினின்று வாங்கிக்கொடுக்கப்படா" எனவும், 'நிற்றலின்றே ஈற்றடிமருங்கினும்' எனவரும் இரண்டாமடிக்கு, ,'அடியிறுதிக்கணல்லது முற்றுகரம் புணர்ச்சிவகையான் இடை நில்லாதனவாயின' எனவும் பொருள்வரைந்து (இரண்டாமடியில்) "இன்று" என ஒருமை கூறினமையின் எடுத்தோதிய முற்றுகரமே கொண்டு குற்றுகரங் கொள்ளற்க எனவும், மொழிமுதற் குற்றுகரம் 'நுந்தை' யென்னும் ஒரு மொழிக் கணன்றிவாராமையின் அதன் சிறுவரவுநோக்கி உம்மையாற்கொண்டான் ஆசிரியன்எனவும் விளக்கம்கூறினார். 'ஈற்றடி மருங்கின்' என்பதற்கு 'அடியிறுதிக் கண்' எனப்பொருள் வரைந்தார்பேராசிரியர். 'ஈற்றடி மருங்கினும்' என்ற உம்மையால் அடியீற்றில் மட்டுமன்றி மொழியீற்றிலும் இடையினும் முற்றுகரம் உரியசையாக வரும் என்பது, இச்சூத்திரவுரையின் இறுதியிற் பேராசிரியர் காட்டும் உதாரணங்களால் நன்கு புலனாம்.

"நாண்"

என்னும் நேரசைப் பின்னர்,

"உடையரிவை"

யெனத் தனித்முவந்த உகரம் நேர்பசையாகாது.

"வார்முரசு"

என்றவழி வார்என்னும் நேரசைப்பின்னர் முரசென மகரம் ஊர்ந்து வந்த உகரமும் நேர்பசையாகாது.

"வற்றுறுசெய்தி"

எனவும்,

"பரன்முரம்பு"

எனவும், வந்தவழி வற்றெனவும் பரலெனவும் நின்ற நேரசை நிரையசைப் பின்னர் உறுசெய்தி யெனவும் முரம்பெனவும் வந்த உகரங்களும் நேர்பசையாகா,

"சின்னுந்தை" "இராநுந்தை"

எனக் குற்றுகரம் வந்தவழியும் நேர்பசை நிரைபசையாக வென்றவாறு,[1]

"நாணுத் தளையாக வைகி" (அகம். 29)

என்றவழி ணகாரவீறு புணர்ச்சிவகையாற் பெற்ற உகரம் நிலைமொழித்தொழிலாகலான் அது நாகு என்னுங் குற்றுகரம்போல் ஒற்றுமைப்பட்டு நேர்பசையாயிற்று.

---

1. இருவகையுகரமும் இயைந்து நேர்பசை நிரைபசையாங்கால் 'முற்றுகரம் வருமொழிடைச் சிதைத்துப்பிரித்து அவற்றினின்றும் வாங்கி நிலைமொழி-யெழுத்துடன் கூட்டி நேர்பசை நிரைபசை கொள்ளப்படா' என ஆசிரியர் தெளிவுபடக் கூறியதனால் வருமொழி முதலிலுள்ள, உகரம் நிலைமொழி-யொற்றினை யூர்ந்து, 'நாணுடையரிவை' என வருமிடத்து நாண் என்னும் நேரசைப் பின்னர் வருமொழிமுதலில் ஒற்றூராது தனித்து வந்த உடை என்பதன் உகரம் நிலைமொழியீற்றின் மெய்யினையூர்ந்து நாணு நேர்பு எனக்கொள்ளப்-படாதென்பதும், 'வார்முரசு' எனவரும் இருமொழித்தொடரில் வருமொழிமுதற்-கண் மகரவொற்றினையூர்ந்து வந்த 'மு' என்னும் முற்றுகரத்தைப் பிரித்து வாங்கி நிலைமொழிச் சொல்லாகிய 'வார்' என்பதுடன் கூட்டி 'வார்மு' என 'நேர்பு' அசையாகக் கொள்ளப்படாதென்பதும், இவ்வாறே மொழி முதற்குற்று-கரமாகிய நுந்தையென்பது சின்னுந்தை, இராநுந்தை என இருமொழித் தொடராக வந்த நிலையில் வருமொழிமுதற்கண் உள்ள 'நு' என்பதனை நிலைமொழியிலுள்ள நேரசை நிரையசைகளுடன் கூட்டி 'சின்னுந்' எனவும் 'இராநுந்' எனவும் கூட்டி 'நேர்பு' 'நிரைபு' கொள்ளப்படாதென்பதும் எடுத்துக்காட்டுடன் விளக்கப் பெற்றன.

"விழவுத் தலைக்கொண்ட" (அகம். 17)
என்றக்காலும் அவ்வாறே ஆகாரவீறும் உகரம்பெற்று நிரைபசை யாயிற்று.

"மின்னு மிளிர்ந்தன்ன கனங்குழை" (அகம். 158)
எனவும்,

"முழவு முகம் புலரா" (அகம். 206) நற்றிணை, 200)
எனவும் வருவனவும் அவை.

"நாணுத்தளை"
என்றாற்போல வரும் ஒற்றுப்பேறு முன்னர்ச் சொல்லுதும்.

"நீர்க்கு" "நிழற்கு"
என்ற உருபும் நிலைமொழித் தொழிலாதலான் அவையும் நேர் பசை நிரைபசையாமென்பது இதனாற் பெற்றாம்.[1]

"நிற்றலின்று"
என ஒருமைகூறி முற்றுகரமே கொண்டமையிற் குற்றுகரமாயின் இடையும் இறுதியும் நின்று நேர்பும் நிரைபுமாம் என்றவாறாம். அவை,

"ஆட்டுத்தாள்" "சேற்றுக்கால்"
எனவும்,

"எய்போற் கிடந்தானென் னேறு" (பு. வெ. வாகை.22)
எனவும், இடையும் இறுதியுங் குற்றுகரம் நேர்பசையாயிற்று.

"களிற்றுத்தாள்"
எனவும்,

---

1. நாண், மின் என்றாங்கு வரும் மெய்யீறுகள் முறையே நாணு, மின்னு என நிலைமொழித்தொழிலாகிய உகரம் பெற்று நின்றவழியும், விழா, முழா என்றாங்கு வரும் ஆகாரவீறு, விழவு, முழவு என ஆகாரம் குறுகி உகரம் பெற்ற வழியும் நீர், நிழல் என்றாங்குவரும் பெயர்கள் முறையே 'நீர்க்கு' 'நிழற்கு' என நிலைமொழித் தொழிலாகிய உகரவீற்று உருபு பெற்ற வழியும் வரும் முற்று-கரமே நேர்பு, நிரைபு என்னும் உரியசைகட்கு உறுப்பாம் என்பது, இங்கு உரையில் எடுத்துக்காட்டப்பெற்ற உதாரணங்களால் இனிது புலனாதல் காணலாம். 'நாணுத் தளையாக', 'விழவுத்தலைக்கொண்ட' என முற்றுகரமும், ஆட்டுத்தாள், களிற்றுத்தாள் எனக்குற்றுகரமும் வருமொழி ஒற்றோடு தோன்றி நேர்பசை நிரைபசையாதல் 'குற்றியலுகரமும் முற்றியலுகரமும் ஒற்றோடு தோன்றி நிற்கவும் பெறுமே' என அடுத்துவரும் நூற்பாவினால் உணர்த்தப்-பெறுதலின் அதன் உரையில் விளக்கப்பெறும் என்பார் 'நாணுத்தளை' என்றாற் போல வரும் ஒற்றுப்பேறு முன்னர்ச் சொல்லுதும்' என்றார்.

"வேலாண் முகத்த களிறு" (திருக்குறள். 500)

எனவும், இடையும் இறுதியுங் குற்றுகரம் நிரைபசையாயினவாறு.

மருங்கினுமென்ற உம்மையான் அடியீற்றேயன்றி மொழி யீற்றும் அவற்றிறுதி கெடநின்ற மொழிக்கண் இடைநின்ற உகரம் இறுதியாகி உரியசையாகுவனவும் உளவென்பது கொள்க. அவை,

"மேவுசீர்"

எனவுங்,

"கோலுகடல்"

எனவும்,

"உலவுகடல்"

எனவும்,

"விரவுகொடி"

எனவுங்,

"தலனளவு நலனளவு"

எனவுஞ்,

"சுரும்புலவு நறுந்தொடையலள்"

எனவும் வரும்.

இவை ஈற்றுநின்ற மகரங்கெட்டு உகரவீறாயின. இவற்றுள் நிரைபசை யுகரங்களை ஆகாரவீற்றுப்புணர்ச்சி யுகரமென்னா மோவெனின், என்னாமன்றே; வருமொழியொற்று மிகாமையி னென்பது.

"உலவுக்கடல்" "விரவுத்தளை"

யெனின், அவ்வாறே யமையுமென்பது. மருங்கென்றதனான் ஈற்றடிக்கண்ணும் இறுதிக்கண்ணே முற்றுகரம் விலக்குண்டதெனக்கொள்க. என்றார்க்குப்,

"புனைமலர்த் தாரகலம் புல்லு" (யா. வி. ப. 58)

எனவுங்,

"கண்ணாரக் காணக் கதவு" (முத்தொள்ளாயிரம். 42)

எனவும் வருமாலெனின் அவை மரூஉ வழக்கென்க. ௮

**நச்சினார்க்கினியம் :**

இது குற்றியலுகரத்திற் கினமாகிய முற்றுகரத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்.) முற்றிய ............ கொளாஅ எ-து முற்றியலுகரமும் வருமொழியைச் சிதைத்துப் பிரித்து அவற்றினின்றும் வாங்கிக் கொடுக்கப்படா: எனவே நிலைமொழித் தொழிலாகிய உகரமும்[1] நிலைமொழியீறு கெடநின்ற உகரமுமே[2] கொள்க எ-று. நிற்ற.........மருங்கினும் எ-து அது தான் இடையினன்றி ஈற்றடி யிடத்திலும் இயலசையாய் நிற்றலின்று; எனவே உரியசையாயே நிற்கும். எ-று.

'நாணுடை யரிவை' (அகம்-௩௬) என்புழி வருமொழியின் உகரம் வந்தேறியது முற்றுகரமாகாதென்றுணர்க. இனி 'நாணுத்தளை யாக வைகி' 'இரவுத்துயின் மடிந்த தானை' (அகம்-உ௬) 'சுறவுக்கொடி' (சிந்-முத்-௬௯௩) 'விழவுத்தலைக் கொண்ட' (அகம்-௬௭) 'மின்னுநிமிர்ந்தன்ன' (நற்றிணை-ருக) இவை நிலைமொழித் தொழிலாகிய உகரம் பெற்றன. நீர்க்கு, நிழற்கு எனநின்ற நான்கனுருபு நிலைமொழித் தொழிலுகரமாம். உலவுகடல், விரவுகொடி எனின் அதுவாம். 'சுரும்புலவு நறுந்-தொடையலள், கலனளவு நலனளவு' இவை நிலைமொழியீற்று மகரங்கெட நின்ற உகரம் முற்றுகரமாயின. இனி 'இனத்துள்ள தாகு மறிவு' (திருக்குறள்- ௬௯௬) 'இன்னா தினியார்ப் பிரிவு' (திருக்குறள்-கக௫அ) 'கருமமே கல்லார்கட் டீர்வு' 'பேரறி-வாளர் துணிவு' 'பாடறியாதானையிரவு' 'போற்றாதார் முன்னர்ச்செலவு' (நான்மணி-க0) 'புன்கணுடைத்தாற் புணர்வு' (திருக்குறள்-கக௫உ) 'புனைமலர்த்தாரகலம் புல்லு' 'அஞ்-சொன் மடவார்க்கருளு' 'கோலு' இவை யடியிறுதிக்கண் உரியசையாய் நின்றவாறு காண்க.

'நிற்றலின்றே' என்றதற்கு ஈற்றடிக்கண் நிற்றலில்லையென்று கூறின் அவை முடியாவாம். இவை அசைக்கும் ஓசைக்கும் உறுப்பாம். உகரமும் என்ற உம்மையாற் குற்றுகரமும் 'சேற்றுக்-கானீலம்' எனப் பிரித்துக் கொடாமனின்றவாறும்[3] எய்போற்-

---

1. நிலைமொழித் தொழிலாகிய உகரம் என்றது, மின், நாண் என்னும் மெய்யீறுகள் முறையே மின்னு நாணு என நிலைமொழித் தொழிலாகிய சாரியை பெற்று நின்ற முற்றுகரத்தை.

2. நிலைமொழியீறு கெடநின்ற உகரம் என்றது, சுறா, நிலா என வரும் ஆகாரவீறு ஒருமாத்திரை கெட சுறவு, நிலவு என்றாற் போன்று நின்ற முற்றுகரத்தை.

3. 'கொடாமனின்றவாறும்' என்றே மூதற்பதிப்பிற் காணப்படுகிறது.

கிடந்தானென்னேறு' (வெண்-வாகை-உஉ) என இறுதிக்கண் உரியசையாய் நின்றவாறுங் காண்க. நாகுண்டு என்பது குற்று-கரமாகாது.[1]

**ஆய்வுரை :**

இது முற்றியலுகரத்திற்குரிய வேறுபாடுணர்த்துகின்றது.

(இ-ள்) முற்றியலுகரமும் மொழி சிதைத்து நேர்பசை நிரைபசையென்று உரைக்கப்படாது; அஃது ஈற்றடிமருங்கில் தனியசையாகி நிற்றலும் இல்லை எ-று.

"அங்கண் மதியம் அரவுவாய்ப் பட்டெனɛ"

என்றவழி 'அரவு' என்பது மொழி சிதையாமையின் நிரைபு அசையாயிற்று.

"பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்"

என்றவழிப் 'பெரு-முத்தரையர்' என்பதனைப் 'பெருமுத்-தரையர்' எனப்பிரித்துச் சீராக்கின் மொழி சிதைதலின் நிரைபசை யாகாதாயிற்று என்பது இளம்பூரணர் தரும் விளக்கமாகும்.

இருவகையுகரமொடு நேரும் நிரையும் இயையின் அவை நேர்பும் நிரைபும் ஆம் என்றார் ஆசிரியர். அவற்றுள் முற்றுகரம் ஈறாகிநிற்குஞ்சொல் உலகத்து அரியவாயின ஆதலின் புணர்ச்சி வகையால் ஈற்றின்கண் தோன்றிய உகரமே ஈண்டு நேர்பும் நிரைபும் ஆவன எனவும், அப்புணர்ச்சிக்கண்ணும் 'நாணு' என்றாங்கு வரும் நிலைமொழித் தொழிலாகிய உகரமும், 'விழவு' என்றாங்குவரும்நிலைமொழி யீறுகெட்டுநின்ற உகரமுமே கொள்ளப்படுவன எனவும், வருமொழித் தொழிலாகிய ஒற்று, 'நாணுத் தளையாக' விழவுத்தலைக் கொண்ட' என்றாங்கு நேர்பு நிரைபுகட்கு உறுப்பாதல் போன்று 'நாண் உடை அரிவை நாணுடையரிவை' என்றாங்குவரும் வருமொழி முதலுகரம் இவ்வுரியசைகட்கு உறுப்பாகுமோ? என ஐயுற்றார்க்கு வருமொழி முதலுகரம் அங்ஙனம் உறுப்பாகாதெனவும், 'நீர்க்கு' 'நிழற்கு' எனவரும் வேற்றுமையுருபு நிலைமொழித் தொழிலாதலால் அவ்வுறுப்புநேர்பசை நிரைபசைகட்கு உறுப்பாமென்பது இதனாற் பெறப்படும் எனவும், குற்றுகரமாயின் 'ஆட்டுத்தாள்' 'சேற்றுக்-

1. இத்தொடர் இச்சூத்திரவுரைப்பகுதியோடு தொடர்பின்றிக் காணப் படுகின்றது.

கால்' 'எய்போற் கிடந்தானென் னேறு' வேலாண் முகத்தகளிறு' என இடையும் இறுதியும் நின்று நேர்பும் நிரைபும் ஆமெனவும் இச்சூத்திரவுரையிற் பேராசிரியர் கூறிய விளக்கம் இங்கு மீண்டும் நினைவுகூர்தற்குரியதாகும்.

௬. குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே.

**இளம்பூரணம் :**

என்—எனின். எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ-ள்.) இருவகை யுகரமும் ஒற்றொடு தோன்றித் தனி யசையாகி நிற்கவும் பெறுமென்றவாறு.[1]

உம்மை யிறந்தது தழீஇயிற்று.[2]

உதாரணம் :

"படுகிளி யாவும் பசுங்குரல் ஏனல்
கடிதின் மறப்பித்தா யாயின் இனிநீ
நெடிதுள்ளல் ஓம்புதல் வேண்டும்." (கலித். ௫௦)

இதன்கட் குற்றியலுகரம் ஒற்றொடுவருதலான் நேரசையாயிற்று.

"கண்ணும் படுமோ என்றிசின் யானே." (நற்றிணை. ௬௧)

இதன்கண் முற்றியலுகரம் ஒற்றொடு வருதலான் நேரசையா யிற்று. (௬)

**பேராசிரியம் :-**

இஃது, எய்தாதது எய்துவித்தது; இயலசைகளை,

"ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி"
(தொல். செய். 3)

என்றான், உரியசைக்கு அது கூறாதான் ஈண்டுக் கூறுகின்ற மையின்.[3]

1. ஈண்டு 'நிற்றல்' என்றது, அசைக்கு உறுப்பாமளவிலன்றித் தனியசை-யாகி நிற்றலை.

2. முற்கூறியபடி இருவகையுகரமும் நேர்பு, நிரைபு என்னும் அசைகட்கு உறுப்-பாகிவருதலேயன்றி நேர், நிரை எனத் தனியசையாகி நிற்கவும் பெறும் என்றலின் 'நிற்கவும்' என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாகும்.

3. குறில், நெடில், குறிலிணை, குறினெடில் என்பன தனித்து வந்து இயலசை யாதலேயன்றி ஒற்றுடன் வந்தும் இயலசையாகும் என்ற தொல்-காப்பியனார் நேர்பு நிரைபு என்னும் உரியசைகளும் அவ்வாறு ஒற்றொடு தோன்றி நிற்றலுண்டு எனக்கூறுதலின் 'இஃது எய்தாது எய்துவித்தது' எனக் கருத்துரை வரையப்பெற்றது.

(இ-ள்.) மேற்கூறி வருகின்ற குற்றுகர முற்றுகரங்கள் ஒற்றொடு நிற்கவும் பெறும்; அவ்வொற்றுத் தோன்றிய ஒற்றாயின் (எ-று).

எனவே, நிலைமொழி ஒற்றுடையவாயின் அவை நேர்பும் நிரையுமாகா. வருமொழி வல்லெழுத்துமிகினே யாவதென்றவாறு. அஃதென்னை பெறுமாறெனின்,

"வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருமொழி"
(தொல். எழுத். குற்றிய. 4)

என்றதனான். முன்னர் நிலைமொழித் தொழிலாகிய முற்றுகரம் வருமெனக் கூறிய அதிகாரத்தானே ஒற்றுத் தோன்றினென்றானாகலானும் பெறுதும்: நிலைமொழியுகரம் பெற்று வருமொழி ஒற்றெய்துவது கண்டானாகலானென்பது.[1]

உ-ம்: "சேற்றுக்கா னீலஞ் செருவென்ற வேந்தன்வேல்"
(யா. வி. ப. 236)

எனவும்,

"நாணுத் தளையாக வைகி" (அகம். 29)

எனவும்,

"நெருப்புச் சினந்தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை"
(புறம். 125)

எனவும்,

"கனவுக்கொ னீகண்டது" (கலி. 90)

எனவும் இவை இருவகையுகரமும் ஒற்றடுத் துரியசையாயினவாறு. உம்மை, எதிர்மறையாகலான் ஒற்றின்றி வருதலே பெரும்பான்மை. இங்ஙனம் வருமொழி யொற்றுமிகின் அவை கொண்டு நேர்பும் நிரைபுமா மெனவே,

"உண்ணும்"

எனவும்,

1. 'குற்றியலுகரமும் முற்றியலுகரமும் ஒற்றொடு நிற்கப் பெறும்' என்னாது, 'ஒற்றோடு தோன்றி நிற்கவும் பெறும்' என்றதனால், அங்ஙனம் இருவகை யுகரத்தினையும் அடுத்துத்தோன்றும் ஒற்றுக்கள் மொழிக்கண் இயல்பாகவுள்ள ஒற்றுக்கள் அல்ல எனவும் வல்லெழுத்து வருவழி நிலைமொழித் தொழிலாகிய புணர்ச்சிவகையால் தோன்றிய வொற்றுக்களே அவை என்பது மேற்சூத்திரத்து நிலைமொழித் தொழிலாகிய முற்றுகரத்தை உரியசைக் குறுப்பாகக் கூறியதனாலும்புலனாம் எனவும் விளக்குவது இவ்வுரைப் பகுதியாகும்.

"நடக்கும்"

எனவும், நிலைமொழியொற்று நின்றவழித் தேமாவும் புளிமாவு மாவதல்லது நேர்பசையும் நிரைபசையு மாகாதென்பதாம்.

"விக்குள், கடவுள்"

என்பனவும் அவை. (சுo)

**நச்சினார்க்கினியம் :**

இது உரியசைகள் ஒற்றுப்பெற்று நிற்குமென எய்தாத தெய்துவித்தது.

இ-ள். குற்றியலுகரமும் முற்றியலுகரமும் எ-து முற்கூறிய குற்றியலுகரமும் முற்றியலுகரமும். ஒற்றொடு......... பெறுமே எ-து வருமொழி வல்லெழுத்து வரும்வழி வல்லொற்றொடு தோன்றி நிற்கவும் பெறும் எ-று.

உதாரணம் :- 'சேற்றுக்கானீலம்', 'நாணுத்தளையாகவைகி', 'நெருப்புச் சினந்தணிந்த', 'கனவுக்கொ ணீகண்டது' என இருவகை உகரமும் ஒற்றடுத்து உரியசையாயினவாறு காண்க. உம்மை எதிர்மறையாதலின் ஒற்றடாது வருதலே பெரும்பான்மை யென்றுணர்க.[1] நிலைமொழி ஒற்று மிக்கு உண்ணும், நடக்கும் என்பன தேமா புளிமாவாயே நிற்கும்; விக்குள், கடவுள் என்பனவும் அவை.

**ஆய்வுரை :**

இஃது உரியசைக்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

(இ-ள்) உரியசைக்கு உறுப்பாய் வருமெனப்பட்ட குற்றியலுகரமும் முற்றியலுகரமும் தம்பின்னர் ஒற்றொடுகூடி நிற்றலையும் பெறும்: (அவ்வொற்று வருமொழிப் புணர்ச்சியால் நிலை மொழிக்கண் தோன்றிய ஒற்றாயின்) எ-று.

'ஒற்றொடு நிற்கப் பெறும்' என்னாது 'ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறும்' என்றமையால் அவ்வுகரங்களின் பின்வரும் ஒற்று நிலைமொழியீற்றின் இயல்பாகவுள்ள ஒற்று அன்றென்பதும், வருமொழி வல்லெழுத்து மிக்குத் தோன்றிய ஒற்றென்பதும் உய்த்துணர வைத்தாராயிற்று.

உ-ம். சேற்றுக்கால், நாணுத்தளை, நெருப்புச்சினம், கனவுக் கொல்-என இருவகையுகரமும் ஒற்றோடு தோன்றி நேர்பும்

1. 'நிற்கவும் என்புழி உம்மை எதிர்மறையாகலான் ஒற்றடாது நிற்றலே பெரும்பான்மை என்பதாம்.

நிரைபுமாய் நின்றன. 'கூறும்', 'கிடக்கும்' என இயல்பாகிய ஒற்றீறாயவழி அவை முறையே தேமா, புளிமா என இயற்சீரா-வதல்லது நேர்பும் நிரைபும் ஆகா என்பதாம். 'நிற்கவும் பெறுமே' என்புழி உம்மை எதிர்மறையாதலால் நேர்பு, நிரைபு என்னும் இவ்வுரியசைகள் ஒற்றின்றி வருதலே பெரும்பான்மை யென்றார் பேராசிரியர்.

௯. அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தல்* வல்லோர் ஆறே.

**இளம்பூரணம் :**

என்—எனின். வகையுளி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அசையையுஞ் சீரையும் ஓசையோடு சேர்த்திப் பாகுபாடுணர்த்தல் வல்லோர்கள் நெறி யென்றவாறு.

அஃதாவது பொருளொடு சொல்லை யறுத்தவழித் தளையுஞ் சீருஞ் சிதையின் அவ்வழி ஓசையை நோக்கி அதன்வழிச் சேர்த்துக என்றவாறு.

அது வருமாறு :

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்" (குறள். ௩)

என்றவழி வாழ்வாரெனப் பொருணோக்கிச் சீராமாயின் ஓசை கெடும். அதன்கண் 'வாழ்' என்பதனை முதனின்ற சீரோ-டொட்டக் கெடாதாம்.[1] பிறவு மன்ன.

இத்துணையும் கூறப்பட்டது அசைவகை.[2] (௧0)

**பேராசிரியம் :**

இது, மேற் கூறப்பட்டனவற்றுக்கும் இனிவருஞ் சீர்க்கு மெல்லாம் புறனடை.

(இ-ள்.) அசைகளையுஞ் சீர்களையும் ஓசையொடு சேர்த்தி வேறுபடுத்து உணர்த்துவித்தலும் அச்செய்யுளிலக்கணத் துறை போயினாரது நெறி (எ-று).

* 'உணர்த்தலும்' என்பது பேராசிரியர் கொண்ட பாடம்.

1. முதனின்றசீரோடு ஒட்டக்கெடாதாம்-முதற்கண் நின்ற சீருடன் சேர்க்க, ஓசை கெடாது.

2. இவ்வியலில் மூன்றாஞ் சூத்திரமுதல் ஒன்பதாஞ்சூத்திரம் முடிய இது-வரையும் அசைவகை பற்றிய இலக்கணங்கூறப்பட்டது.

மேல் (செய்-1) மாத்திரை யென்பதோர் உறுப்புரைத்தான்; அதனான் அசை சீர்களது ஓசையை அளந்து கூறுபடுத்து இன்னோசையும் இன்னாவோசையு முணர்த்துக. எழுத்தியல்-வகைக்கும் இஃதொக்கும்.[1]

"குருத்துக் குறைத்துக் கொணர்ந்து நமது
கருப்புச் செறுப்புப் பரப்பு" (யா. வி. ப. 33, 181)

எனின், வெண்பாவீற்றடி இன்னோசைத்தன்றாம்.

"கருப்புக் கொழுந்து கவர்ந்து"

என முடிக்கின், இன்னோசைத்தாய் வெறுத்திசையின்றா மென்பது.

"நிலமிசை நீடுவாழ் வார்" (குறள். 3)

இதனுள், வாழ்வார் என்னும் மொழியை வகுத்து, வாரென நேரசைச் சீராக்கி வகுப்பவே அசையினை இசையொடு சேர்த்திற்றாம். இனி, 'நீடுகொடி' என்பதனை மாவருவாய் என்று அசையுஞ்சீரும் இசையிற்சேர்த்துக வென்பாருமுளர்.[2] இவற்றைப் பிறநூலார் வகையுளியென்ப;[3] இச்சூத்திரத்துள், 'வகுத்தன ருணர்த்தல்' என்றமையின்.

இனி, வெண்பாவினுள் வெண்சீரொன்றி வந்தவழியும் வேற்-றுத்தளை விரவும் இடனுடைய; அவையும் இசையொடு சேர்த்தி வேறுபாடுணர்த்துக.

"மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்"

என்பது, பன்னிரண்டெழுத்தடி;

1. செய்யுட்குரிய உறுப்புக்களுள் ஒன்றாக மேலே குறிக்கப்பட்ட மாத்திரை யென்னும் அளவினால் அசை சீர் என்பவற்றின் ஓசையை அளந்து வகைப்-படுத்துச் செய்யுட்குரிய இனியவோசை இவையெனவும் செய்யுட்கு ஒவ்வாத இன்னாவோசை யிவை யெனவும் செவிகருவியாகவகைப்படுத்துணர்த்துக என்பது கருத்து. இவ்வாறு மாத்திரையால் அளந்துணர்த்துதல் என்பது முற்கூறிய எழுத்தியல் வகைக்கும் ஏற்புடையதே என்பதாம்.

2. 'நீடுகொடி' என்பதனை நீ- டுகொ-டி எனச் சேர்த்து 'மாவருவாய்' என வெண்பாவுரிச்சீராக இசையொடு புணர்த்துரைப்பர் உரியசை கொள்ளாத பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்கள்.

3. 'பிறநூலார்' என்பது, யாப்பருங்கல முதலிய பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்களை.

"மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய்"
என்பது, பதின்மூன்றெழுத்தடி;

"மாசேர்வாய் மாவருவாய் மாசேர்வாய் மாவருவாய்"
என்பது, பதினான்கெழுத்தடி; இவை மூன்றும்,

"அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய" (தொல்-செய். 58)
என வெண்பாவிற்கு ஓதிய அளவடியேயாயினும் இக்காட்டிய அலகிடுகையாற் கலித்தளை தட்டுத் துள்ளலோசையும் பிறக்கும்.

"மாசேர்வாய் மாசேர்வாய் பாதிரி பாதிரி"
எனவும்,

"மாசேர்வாய் பாதிரி பாதிரி காருருமு"
எனவும்,

"மாசேர்வாய் பாதிரி காருருமு காருருமு"
எனவும், முன்காட்டிய மூன்றனையுமே இவ்வாறு அலகிட்டு ஓசையூட்டக் கலித்தளை தட்டாது வெண்பாவடியேயாம். இவ் விருகூறும் ஓசையொடு சேர்த்துணர்த்துக. பதினான்கெழுத்தின் இறந்த பதினைந்துநிலனும் பதினாறுநிலனும் பதினேழு நிலனு-மென இம்மூன்றும் வெண்சீர்வந் தொன்றியக்காலும் இயற்சீர்வந் தொன்றாக்காலும் ஒரு ஞான்றுஞ் செப்பலோசை பிறவா; அவையும் ஓசையொடு சேர்த்தி வகுத்துணர்த்துக; அவை வருமாறு:

"புலிவருவாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய்"
எனவும்,

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்"
எனவும்,

"புலிவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்"
எனவும், இவை வெண்சீரொன்றியுங் கலித்தளை தட்டின; இனி இவற்றை இயற்சீர்கொடுத்துச் சொல்லுங்காலுஞ் செப்பலோசை சிதையும்; என்னை ?

"காருருமு காருருமு காருருமு பாதிரி"
எனவும்.

"காருருமு காருருமு காருருமு காருருமு"
எனவும்,

"நரையுருமு காருருமு காருருமு காருருமு"
எனவும், இவை இயற்சீரான் வந்தும் வேறொரு சந்தப்பட்டுச் செப்பலோசை சிதையநிற்கு மென்பது, அசையுஞ் சீரும் இசை-

யொடு சேர்த்தி வகுத்துணர்த்துக. இன்னோரன்ன பிறவும் பெரிதும் எஃகுசெவியும் நுண்ணுணர்வும் உடையார்க்கன்றி உணரலாகா.[1]

"ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசேர்வாய்"
என்றக்கால், ஞாயிறு புலிவருவாயென இயற்சீரின்பின்னர் நிரையசை வந்து,

"சீரியை மருங்கி னோரசை யொப்பின்
ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும்"

(தொல்-செய். 56)

என்பதனான், ஆசிரியத்தளையாயினும் அஃது ஆண்டுக் கலித்தளைப்பாற் படுமென்பது,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி"
என்பதனான் உணரப்படும். இனி,

"ஞாயிறு புலிசேர்வாய் புலிசேர்வாய் மாசேர்வாய்"
என்புழிப், புலிசேர்வாய் மாசேர்வாயென நேரொன்றிய தேனும் அது கலித்தளையென்பது,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி"
என்பதனான் உணரப்படும். இன்னோரன்ன பலவுமுள; அவை யெல்லாம் வரையறுத்து இலக்கணங் கூறப்படா; அவற்றை அவ்வாறு வேறுபடுத்துணர்த்துதல் அவ்வத் துறைபோயினார் கடனென அடங்கக் கூறல்வேண்டி,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே"
என்றானென்பது.

---

1. வெண்பாவினுள் வெண்சீர் ஒன்றி வந்த நிலையிலும் வேற்றுத்தளைவந்து கலக்கும் இடமுண்டு. வெண்பாவிற்கு ஓதிய பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்தளவும் அமைந்த அளவடியுசெப்பலோசை பிறக்கும். பதினான்கெழுத்தினைக்கடந்து பதினைந் தெழுந்து, பதினாறெழுத்து, பதினேழுழுத்து அமைந்த, மூன்றடிகளும் வெண்சீர்வந்து காய்முன்நேராய் ஒன்றியக்காலும் இயற்சீர்வந்து மாமுன்நிரையும் விளமுன் நேரும் என ஒன்றாக்காலும் எக்காலத்தும் செப்பலோசை பிறவா. இங்ஙனம் வருவனவற்றை அசையும்சீரும் இசையொடு சேர்த் வேறுபடுத்து வகுத்துணர்த்துதல் எஃகு செவியும் நுண்ணுணர்வும் வாய்ந்த நல்லிசைப் புலவர்கடனென்ப தாம்.

உம்மையான் அடியினை வகுத்துணர்த்துதலுங் கொள்க.[1] அது,

"நுதல திமையா நாட்ட மிகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே"

(அகம்-கடவுள் வாழ்த்து)

என்புழி, 'இகலட்டு' என்னுஞ் சீர் எழுத்து முதலாக ஈண்டிய வடியிற் குறித்த பொருளை முடியநாட்டப் பின் வந்ததாகலின் யாப்பென்னும் உறுப்பினுள் அடங்காது இகலட்டுக் கைய தென மேலடியோடு பொருள் கூடியும், இசையொடு சேர்த்தி வகுத்துணர்த்தியதேயாம். இன்னும் இவ்விலேசானே எழுத்தல் லோசையும்[2] அசையொடுஞ் சீரொடுஞ் சேர்த்தி வகுத்துணர்த் தலுங் கொள்க. அவை,

"சுஂஂ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை"

என்றாற்போல்வன.

இனி, அகவலோசை மூன்றெனவுஞ் செப்பலோசை மூன் றெனவும் 'அசையுஞ்சீரும் இசையொடு சேர்த்தி' யென வகுத் துணர்த்துவாருமுளர்.[3] அவை இயலசைமயங்கிய இயற்சீரும் உரியசைமயங்கிய இயற்சீரும் வெண்சீரும்பற்றி ஓசை வேறுபட்டுத் தோன்றுமென்க. அங்ஙனமாயினும் அவை மும்மூன்றாக்கி வரையறுக்கப் படாமையின் ஈண்டவை கூறானென்பது.

இனி, ஒருசாரார் அசையுஞ்சீரும் இசையொடு சேர்த்தி வகுத்துணர்த்தலென்பதனை இவ்வாறு முரைப்ப. என்னை? ஒரு செய்யுளுட்கிடந்த அசை சீர்களை ஈண்டுக் காட்டிய தேமா புளிமாவென்பன முதலாகிய உதாரணங்களோடு சேர்த்தி அவ் விரண்டனையும் ஒக்கும் வகையான் ஓசையூட்டிக் காட்டுப; அற்றன்று, இவ்வுதாரணஞ் சீரென்று வலித்திருந்தார்க்காம் அது செய்துகாட்டல் வேண்டுவது. எல்லாச் சொல்லிற்கும் ஏற்றவாற்றான் 'அசையுஞ்சீரும் இசையோ'டெனப் பொதுவகை

---

1. 'அசையுஞ்சீரும்' என்னும் உம்மையால், அடியினையும் இசையொடு சேர்த்து வகுத்துணர்த்துதல் வல்லோராறு எனக்கொள்ளப்படும்.

2. எழுத்தல்லோசை - குறிப்பிசை.

3. இவ்வாறு கூறுபவர் யாப்பருங்கல விருத்தியாசிரியர் முதலியோர். ஏந்தி சையகவல், தூங்கிசையகவல், ஒழுகிசையகவல் என அகவலோசை மூன்று வகைப் படும். ஏந்திசைச் செப்பல் தூங்கிசைச்செப்பல் ஒழுகிசைச்செப்பல் எனச் செப்பலோசை மூன்று வகைப்படும் என்பர்.

யாற் கூறினமையின் அதுகாட்டல் நிரம்பாதென்பது.[1] இனிக்,

"கடியாறு கடியாறு கடியாறு கடியாறு"

என்பதனைத் துள்ளலாகச் சொல்லிக் கலியடியெனவுங், கடியாறு என்பது நேர்பீறாமென்பதாயினும், அது வெண்சீரே ஈற்றசை நிரையியற்றாய் நின்றதெனச் சொல்லி அதற்கு இலக்கணம்,

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே"

(தொல்-செய்-29)

எனப் பொருளுரைத்து, மற்றதனைக் கலித்தளையெனவுங் காட்டுப. அற்றன்று; 'கடியாறு' என்னுஞ் சீரின் உறழ்ந்த ஆசிரியவடியும் அதுவே வாய்பாடாக வருமாகலின், மற்றதன்கண் துள்ளலோசை பிறந்ததாலெனின், அவற்றுக்கண் ஓரோமாத்திரை கொடுப்பத் துள்ளலோசை பிறந்ததாயினும், 'அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்திச் சொல்லுக' வெனவே அங்ஙனம் மாத்திரை நீட்டிச்சொல்லாது அகவலோசைப்படச் சொல்லுகவென்பது இதனாற் பெற்றாமாகலின் அது பொருளன் றென்பது.[2] (கக)

---

1. ஒரு செய்யுளுட்கிடந்த அசை சீர்களைத் தேமா புளிமா என்பன முதலாகிய உதாரணவாய்பாடுகளோடு சேர்த்தி ஓசையூட்டிக்காட்டுதலே அசையுஞ் சீரும் இசையொடுபுணர்த்தலாகும் என்பர் ஓராசிரியர். இவ்வாறு உதாரண வாய்பாடு காட்டுதலென்பது செய்யுளுட் கிடந்தசீர் இன்னசீர் என்று வரையறை கண்டார்க்கே இயல்வதொன்றாகும். எல்லாச் சொல்லிற்கும் பொருந்தும் வகையால் செய்யுளிற்கிடந்த அசையையும் சீரையும் இசையொடு சேர்த்திச் செவிகருவியாக வகுத்துணர்த்துக என்னும் இவ்விதி பொதுவகையாற் கூறப்பட்டதாகலின், முன்னமே விளங்கிக் கிடந்த சீர்களுக்கு உதாரணவாய்பாட்டால் ஓசையூட்டிக் காட்டுதல் என்ற அளவில் இத்தொடர்ப்பொருள் நிரம்பாது என்பது கருத்து.

2. 'கடியாறு கடியாறு கடியாறு கடியாறு' என்பதனைச் சொல்லிக்கலியடி யெனவும், கடியாறு என்பது 'நிரைநேர்பு, என நேர்பீறாமாயினும் அது வெண்சீரீற்றசை நிரையியற்றாய் நின்றதெனச் சொல்லி அதனைக் கலித்தளையெனவும் காட்டுவர் ஒரு சாராசிரியர். கடியாறு என்னும் ஆசிரியவுரிச்சீரான் உறழ்ந்த ஆசிரியவடியும் அதுவே வாய்பாடாகக் 'கடியாறு கடியாறு கடியாறு கடியாறு' எனவரும். அவற்றின்கண் ஓரோவொரு மாத்திரை கொடுப்பத் துள்ளலோசை பிறந்ததாயினும் அங்ஙனம் நீட்டிச்சொல்லாது அகவலோசைபடச் சொல்லுக என்பது, 'அசையுஞ்சீருமிசையொடு சேர்த்தி வகுத்தனருணர்த்தலும் வல்லோராறே' யெனவரும் இச்சூத்திரத்தாற் பெற்றாம். எனவே அன்னோர் கூறும் விளக்கம் பொருளன்று என்றார் பேராசிரியர்.

**நச்சினார்க்கினியம்:-**

இது முற்கூறியவற்றிற்கும் இனி வருஞ் சீர்க்குமெல்லாம் புறநடை.

(இ-ள்) அசை......சேர்த்தி எ-து அசைகளையும் சீர்களையும் ஓசையோடு சேர்த்தி. வகுத்...... ராறே எ-து வேறுபாடுணர்வித்தலும் செய்யுளிலக்கணத் துறைபோயினாரது நெறி எ-று.

முற்கூறிய மாத்திரையென்னு முறுப்பின் ஓசையை யளந்து இன்னோசையும், இன்னாவோசையும் அறிந்து உணர்த்துக. எ-று

உ-ம். 'தருக்கிப் புணர்ந்து தணந்த தமது
பொருப்புப் புடைத்துப் புடைத்து'

என்றால் வெண்பாவீற்றடி இன்னோசைத்தாகாமையிற் 'பொருப்புத் தழைந்த பொழிந்து' என மெல்லினவோசை சேர்க்க இன்னோசைத்தாயிற்று. 'நிலமிசை நீடுவாழ் வார்' (திருக்குறள்-3) இதனுள் வாழ்வாரென்னும் ஓசையை வகுத்து வார் என நேரசைச் சீராக்க அசையான் இன்னோசைத்தாயிற்று. இதனை **வகையுளி** என வேறோருறுப்பாக்குவாருமுளர். இனிக் கட்டளையடியையும் சீர்வகையடியையும் இசையொடுசேர்த்தி இன்னோசையுணர்க. அஃது 'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய' (செய்-ருஅ) என்ற பதினான்கெழுத்தளவும்வருங் கட்டளை வெண்பாவும் வெண்சீரேயொன்றிற் கலித்தளைதட்டு இன்னோசை பெறாதாம். மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என்றாற் றுள்ளலோசையும் பிறக்கும். இதனை மாசேர்வாய் பாதிரி காருருமு காருருமு எனின் இன்னோசைத்தாய்ச்செப்பலோசை பிறந்தது. இனிச் சீர்வகையடிக்கும் 'யாதானு நாடாமா லூராமால் யாதோதான்' என்றாற் சீர்வகைத் துள்ளலோசையும், 'என்னொருவன்' என்றாற் சீர்வகைச் செப்பலோசையும் பிறக்குமாறு இசையொடு சேர்த்தியுணர்க. இனி ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசேர்வாய் என்றால் ஞாயிறு என்ற இயற்சீர்ப்பின் நிரையொன்றி ஆசிரியத்தளையாயிற்றேனும் கலித்தளைப்பாற்படுதலும்: ஞாயிறு புலிசேர்வாய் புலிசேர்வாய் மாசேர்வாய் என்றவழிப் புலிசேர்வாய் மாசேர்வாயென நேரொன்றிற்றேனும் கலித்தளைப்பாற்படுதலும் இசையொடு சேர்த்தியுணர்க. இவ்வாறே பிறவும் வகுத்துணர்த்துதல் அத் துறைபோயினார்க்கே தெரிவதாம்.

இனி உம்மையான் அடியுமிவ்வாறே வகுத்துணர்த்துக.

“நுதல திமையா நாட்ட மிகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே” (அகம்-கடவுள் வாழ்த்து)

என்புழி இகலட்டு என்னுஞ்சீர் குறித்தபொருளை முடியநாட்டும் யாப்பென்னும் உறுப்பினுள் அடங்காது ‘இகலட்டுக்கையது’ என மேலிலடியோடு பொருள் கூடிற்றேனும் இசையொடு சேர்த்தி வகுத்ததாயிற்று. இன்னும் அதனானே எழுத்தல் கிளவியாகிய ‘சுஃறென்னுந் தண்டோட்டுப் பெண்ணை’ என்பதனை அசை யொடுஞ் சீரொடுஞ் சேர்த்துணர்த்தலுங் கொள்க. இனி அகவன் முதலிய நான்கோசையினையும் ஒன்று மூன்றாக்கி வகுத்தல் **தொல்காப்பியனார்** கருத்தன்றாயிற்று; என்னை? இயலசை மயங்கிய இயற்சீரும், உரியசை மயங்கிய இயற்சீரும், வெண்சீரும் பற்றி யோசை வேறுபடத் தோன்றலின் அவை பன்னிரண்டென்-னும் வரையுளடங்காவென்பதுபற்றி. இன்னும் ‘இசையொடு சேர்த்தி’ என்றதனானே

‘ஓரள பாகு மிடனுமாருண்டே’ (தொல்-மொழி மரபு-உ) என்ற ஐகாரமும் பொருள்சிதைந் திசையொடு சேர்தல் கொள்க.

‘வண்கொன் றையைமருட்டுங் காண்’
‘புகழ்த லானாப்பெருவண் மையனே’

இவை முதலிடைகடைகளிற் சிதைந்தும் வருமென்று கொள்க.[1]

**ஆய்வுரை :**

இது, முற்கூறிய அசை வகைக்கும் இனிக்கூறும் சீர்வகைக்கும் ஆவதோர் நெறியுணர்த்துகின்றது.

(இ - ள்.) அசைகளையும் சீர்களையும் ஓசையோடு சேர்த்தி அவற்றை வகைப்படுத்து உணரச் செய்தலும் செய்யுளிலக்கணத் துறையில் வல்லவர்களது நெறியாகும் எ-று.

செய்யுட்குரிய உறுப்புக்களாகிய அசையினையும் சீரினையும் மாத்திரையாகிய அளவினால் அளந்து இஃது இன்ன அசை, இஃது இன்ன சீர் என ஓசையுடன் சேர்த்திப் பாவுக்குரிய இனிய ஓசை இதுவெனவும் இன்னா ஓசை இதுவெனவும் செவி கருவி

1. இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை, பேராசிரியர் எழுதிய உரையின் சுருக்கமாகவே அமைந்துள்ளது.

யாக உணர்ந்து அசையினையும் சீரினையும் பகுத்துணர்த்துக என்பதாம்.

''ஆடுநடைப் புரவி அரசர் கோமகன்''

எனவரும் அகவலடியின் முதற்சீரின் அசைகளை ஆடு-நடைப் (நேர்பு-நிரை) என இரண்டாகப் பகுத்து ஆசிரியவுரிச்சீராக இயைத்துக் கூறுங்கால் அசையும் சீரும் இசையொடு பொருந்தி இனிய ஓசையுடையதாக அமைதலும், இவ்வாறன்றி ஆ-டுந-டைப் (நேர்-நிரை-நேர்) என மூவசைச் சீராகப் பகுத்துக் கூறுங்கால் இன்னா ஓசையினதாதலும் செவி கருவியாகக் கூர்ந்துணர்வார்க்கு இனிது புலனாம்.

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்''

எனவரும் குறள்வெண்பாவின் இரண்டாமடியினை 'இறைவ/ னடிசேரா/ தார்' என மூன்று சீர்களாகப் பிரித்து இசையொடு சேர்த்துங்கால் அவ்வடி வெண்பாவின் இறுதியடியாகிய முச்-சீரடியாய் இனிய ஓசையுடையதாதலும், அவ்வாறன்றி 'இறை வனடி/ சேராதார்' எனச் சொற்கிடந்தாங்கே பிரித்தால் வெண்பாவின் ஈற்றடிக்குரிய முச்சீரடியாகாது இருசீரடியாய்ச் சீர்குன்றி இன்னா ஓசைத்தாதலும் காணலாம். சொற்களின் பொருள் ஒன்றைமட்டும் நோக்கி அசையும் சீரும் பகுக்காது பாவுக்குரிய இன்னோசையினையே நோக்கி 'இறைவ/ னடிசேரா/ தார்' என இவ்வாறு அசையும் சீரும் பகுத்துரைக்கும் முறை-யினைப் பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்கள் வகையுளி என வழங்குவர். ''வகையுளி'' என்பது, முன்னும் பின்னும் அசை முதலாய் உறுப்புக்கள் நிற்புழி அறிந்து குற்றப் படாமல் ஓசை யறுத்தல் .........

'அருள்நோக்கு நீரார் அசைசீ ரடிக்கண்
பொருள்நோக்கா தோசையே நோக்கி — மருள்நீக்கிக்
கூம்பவும் கூம்பா தலரவுங் கொண்டியற்றல்
வாய்ந்த வகையுளியின் மாண்பு'

இதனை விரித்து உரைத்துக் கொள்க'' எனவரும் யாப்பருங்-கலவிருத்தியும் மேற்கோளும் இங்குக் கருதத்தக்கனவாகும். 'வகுத்தனர் உணர்த்தல்' என்ற தொடரும் வகையுளிஎனும் பெயர்க்கு ஆதாரமாதல் காண்க.

ம். ஈரசை கொண்டு மூவசை புணர்த்துஞ்*
சீரியைந் திற்றது சீரெனப் படுமே.

## இளம்பூரணம்:

என்—எனின். நிறுத்தமுறையானே சீராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இரண்டசைகொண்டு புணர்த்தும், மூன்றசை கொண்டு புணர்த்தும், ஓசை பொருந்தி யிற்றது சீரெனப்படும் என்றவாறு.

"தாமரை புரையுங் காமர் சேவடி" (குறுந். கடவுள்வாழ்த்து) என்றவழி நான்குசொல்லாகி ஓசை யற்றுநின்றவாறு கண்டு கொள்க.[1]

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (குறள். ககo)

என்றவழி மூன்றசையினாற் சீராகியவாறும் அவ்வளவினான் ஓசையற்றுநின்றவாறுங் கண்டுகொள்க.[2]

## பேராசிரியம்:

இது, முறையானே அசையுணர்த்திச் சீராமாறுணர்த்துவான் தொடங்கி அவை இத்துணைப் பகுதியவென்பதூஉம் அவற்றுப் பொதுவிலக்கணமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டசையானும் மூன்றசையானும் ஒரொரு சொற்கள் சீரியைந்திறுவன சீரென்று சொல்லப்படும். (எ - று)

"சீரியைந் திறுதல்"

என்பது வழக்கியல் செய்யுளாமாற்றால் யாப்பினும் பொருள்.

---

* 'புணர்ந்துஞ்' என்பது பேராசிரியருரையிற் கண்டபாடம்.

1. "தாமரை புரையுங் காமர் சேவடி" என்றவழி ஈரசையினாற் சீராகி நான்கு சொல்லாகி ஓசையற்று நின்றவாறு கண்டுகொள்க" என்றிருத்தல் வேண்டும்.

2. ஓசை அற்று நிற்றலாவது, தாளவறுதிபடச் சீராகிப் பிரிந்து நிற்றலாகும்.

'புணர்த்தும்' என இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பாடங் கொண்டனர், 'புணர்ந்தும்' எனப்பாடங்கொள்வர் பேராசிரியர்.

பெறப் பகுத்துப் பதமாகியவற்றுச் சேறல்.

உ - ம்: "சாத்தன் கொற்றன்"

எனவும்,

"உண்டான் தின்றான்"

எனவும்,

இரண்டசை கொண்டு சீராயின.

"கானப்பேர் சாய்க்கானம், கூதாளி"

எனவும்,

"உண்ணாதன" "தின்னாதன"

எனவும், இவை மூவசை புணர்ந்து சீராயின. இவை செய்யுளுள் வருமாறு;

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு"
(பத்துப். திருமுரு. 1,2)

என ஈரசைச்சீர் வந்தன.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
றானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்"
(முத்தொள்ளாயிரம். 104)

எனவும்,

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினும்" (பத்துப். பட்டின, 1, 2)

எனவும் இவை மூவசைச்சீர் வந்தன. பிறவுமன்ன.

மற்றுச் சீரென்றதென்னையெனின், பாணிபோன்று இலயம் பட நிற்றலான் அது சீரெனத் தொழிற்பெயராம்.[1]

என்னை ?

"சொற்சீர்த் திறுதல்" (தொல். செய். 123)

என்புழித் தொழிற்படுத்தோதினமையின்.

1. தாளத்தின் நிகழ்ச்சி பாணி, தூக்கு, சீர் என மூன்று வகைப்படும். பாணி என்பது, ஒரு தாளத்தின் முதல் எடுக்குங்காலம். தாளத்தின் இடைநிகழுங்காலம் தூக்கு எனப்படும். தாளம் அறுதிப்பட முடியுங்காலம் சீர் எனப்படும், இந்நுட்பம் முற்பாணி, வளர்தூக்கு, கொண்டசீர் என அடையொடு புணர்ந்தும் 'பாணியுந் தூக்கும் சீரும் என்றிவை மாணிழையரிவைகாப்ப' எனமுறையொடு புணர்ந்தும் வரும் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலின் தொடர்களாலும் நச்சினார்க்கினியர் உரையாலும் நன்குணரப்படும். இலயம்-தாள அறுதி. சீர் என்னும் பெயர் ஈண்டு தாள அறுதிபட முடிந்துநின்றறுதலாகிய தொழிற்றன்மைப் பட நிற்றலால் சீர் எனத் தொழிற்பெயராம் என்றார்.

இனி

"இயைதல்"

என்பது அசைவகை ஒன்றொன்றனோடு தொடர்ந்தவழி யல்லாற் சீர்க்கு அலகுபெற லாகாதென்றவாறு; எனவே, அவ்வாறு இலயம்பட நின்றனவாயினும் புணர்ச்சியெய்து மென்பதாம். மற்று,

"இற்றது"

என்றதென்னை ? சீரென்பது தொழிற் பெயராதலால் அது,

"சீரியைந்து"

எனவே, பெறுதுமெனின், அங்ஙனங் கொள்ளிற் சீரியைந்த தொடரெல்லாங் கூடி ஒரு சீராவான் செல்லுமாகலின் இடையிடை இற்றுவரல்வேண்டு மென்றற்கு அங்ஙனங் கூறினானென்பது;[1] இதனானே[2] ஒரோவழிப் புணர்ச்சிவிகாரம் எய்தாமையுங் கூறினானாம்.[3]

"வண்டுபடத் ததைந்த கண்ணி" (அகம். 1)

என்புழி, வல்லெழுத்துமிக்க புணர்ச்சிவகையானே சீரியைந்தன.

"பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து"

என்றவழி ஒன்றோடொன்று தொடர்ந்ததேனும் இற்றதென்பதனான் இறுதிபட நின்றமையின்.

"எல்லா விறுதியும் உகர நிறையும்" (தொல். எழுத். 408)

என்றதனாற் குற்றுகர முற்றுகரமாகாது நாலெழுத்தடியாயிற்று. இதனை, எழுத்தடியென்றலே வலியுடைத்து; வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரத்தால் நாலெழுத்தடி வேறுண்மையின்.

"ஈரசை கொண்டும்"

எனவும்,

"மூவசை புணர்ந்தும்"

எனவுங், கூறினமையான் ஒருசீர் பலசொல் தொடர்ந்துவரினும்

---

1. ஓரடியிற் பலசீர்கள் இயைந்துவருவனவாயினும் அவை ஒவ்வொன்றும் தாள வறுதிபட முடிந்து நிற்பன என்பார், 'சீர் இயைந்து இற்றது சீர்' என்றார். இறுதல்-முடிதல்.

2. இதனானே-இவ்வாறு ஒவ்வொரு சீரும் முடிந்து நிற்றலாலே.

3. சொற்கள் தம்முட்கூடிச் சீர்களால் தாள அறுதிபடப் பிரிந்து நிற்கும் எனவே அவை எழுத்ததிகாரத்திற் கூறப்பட்ட புணர்ச்சிவிதிகளைச் சிலவிடங்களில் எய்தாமையும் உண்டு என ஆசிரியர் கூறினாராயிற்று என்பதாம்.

அவை ஒன்றுபட நிற்றல் வேண்டுமென்றவாறாம். எனவே, உலகத்துச் சொல்லெல்லாம் ஈரசையானும் மூவசையானுமன்றி வாராவென்பது பெற்றாம். இதனானே ஒருசொல்லைப் பகுத்துச் சீர்க்குவேண்டுமாற்றான் வேறு சீராக்கியவழியும் அச்சீர்வகையானே வேறு சொல்லிலக்கணம் பெறுமென்பதுங் கொள்க.

அது,

"மம்மர் நெஞ்சினன் றொழுதுநின் றதுவே" (அகம். 56)

என்புழி, நின்றது என்னுஞ்சீர் குற்றுகரவீற்றுச் சொல்லன்றே, அதனைப் பிரித்து அதுவேயென வேறு சீராக்கவே, அது முற்றுகரமாகி வேறுபடுதல் கண்கூடாக் கண்டுகொள்க.[1] என்றார்க்கு, எனப்படுமென்ற தென்னையெனின், ஓரசையே சீர்நிலை பெறுமென்றுமாயினும் அவை சீரென முன்னோதப்படாவென்றற் கென்பது.[2] மற்று நாலசையானும் ஐந்தசையானும் உண்ணா நின்றன. அலங்கரியாநின்றான் எனச் சொல் வருவன உளவா லெனின், அங்ஙனம் வருஞ் சொற்கள் சிலவாகலானும் அவை தாமும் இரண்டுசொல் விழுக்காடாய்ப் பிளவுபட்டு நிற்றலின் ஒரு சீரெனப்படாமையானும் அவை சீராக வருஞ் செய்யுள் இன்மையானும் என மறுக்க.[3]

---

1. நின்றது என்னுங்குற்றியலுகரவீற்றுடன் ஏகாரம் புணருங்கால் 'புள்ளி-யீற்றுமுன் உயிர்தனித்தியலாது, மெய்யொடுஞ்சிவணும் அவ்வியல்கெடுத்தே' 'குற்றியலுகரமும் அற்றெனமொழிப' என்றவிதிப்படி. 'நின்றதே' எனப்புணர்தல், வேண்டும். அவ்வாறன்றி 'மம்மர் நெஞ்சினன் றொழுதுநின் றதுவே' என வகரவுடம்படுமெய் பெற்றுப்புணர்தற்குக் காரணம், 'தொழுதுநின்றது' என்னுஞ்-சொற்களைச் சீராக்குங்கால் 'நின்றது' என்னும் குற்றியலுகரம் 'தொழுதுநின் றது' என முற்றியலுகரமாகச் சொல்வேறு பட்டமையால் சீர்வகையானே வேறு சொல்லிலக்கணம் பெற்றவாறு காணலாம்.

2, ஓரசையே சீராம் நிலையைப்பெறும் என்று கூறினோமாயினும் அவை சீரெனச் சிறப்பித்து ஓதப்படா என்றற்கு, ஈரசைகொண்டும் மூவசை புணர்ந்தும் இற்றது 'சீர் எனப்படும்' என்றார் ஆசிரியர்.

3. சீரெனப்படும் என்றதுகொண்டு, நாலசையானும் ஐந்தசையானுஞ் சொல்வருவன சிறப்பில்லாச் சீர்களெனத்தழுவிக்கொள்ளலாமே எனவினா-வினார்க்கு அங்ஙனம் வருஞ்சொற்கள் சிலவேயாகலானும் உண்ணா-நின்றான், அலங்கரியா - நின்றான் என இருசொற்களாகப் பிளவுபட்டு நிற்றலானும் அவை சீர்களாக வரும் சான்றோர் செய்யுட்கள் இன்மையானும் அவைகொண்டு நாலசைச்சீர்கோடல் பொருந்தாது என மறுக்க என்றவாறு.

இனி வஞ்சிப்பாவினுள் வந்த ஆசிரிய அடியினை நாலசைச் சீர் காட்டல் வேண்டுவார் இருசீரடியாக உரைப்பினும் அவை தூங்கலோசையிலவாகலானும் அவை சீரியைந்திறுத லின்மை யானுங் கொள்ளாரென்பது. ஈண்டு எனப்படு மென்பதே பற்றி நாலசைச்சீர் கொண்டாரும் உளர். ஐயசைச்சீர் கொண்டாரைக் கண்டிலமென்க.[1]

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்தமுறையானே சீருணர்த்துவான் றொடங்கி அவற்றின் பகுதியும் அவற்றது பொதுவிலக்கணமும் உணர்த்-திற்று.

(இ - ள்.) ஈரசை யியைந்துகொண்டும் எ-து ஈரசை தன்னில் இயைந்து பொருள்கொண்டும். மூவசை யியைந்துகொண்டும் எ-து மூவசை தன்னிலியைந்து பொருள்கொண்டும். இற்றது சீரெனப்படும் எ-து அற்று நிற்பது சீரென்று சிறப்பித்துச் சொல்லப்படும். சீர்புணர்த்தும்[2] சீரெனப்படும் எ-து அவ்வாறன்றி அச்சீர்தான் ஒருசீரோடொருசீர் தொடரப் பிறர் கூட்டப்பட்டு நின்றாலுஞ் சீரென்று சொல்லப்படும் என்றுங் கொள்க. எ-று.

'இயைந்து' என்றதனையும் 'கொண்டு' என்றதனையும் ஈரசைக்கும் மூவசைக்குங் கூட்டிக், 'கொண்டு' என்பதற்குப் 'பொருள்கொண்டு' என்று பொருளுரைக்க. நடுவுநின்ற 'சீர்' என்றதனைப் 'புணர்த்தும்' என்றதனோடு மாறிக்கூட்டுக. இயைந்து என்றதனான்[3] ஒருசீர்க்கட் பலசொற்றொடர்ந்து

1. யாப்பருங்கலவுரையாசிரியர்,

'நின்று நின்றுளம் நினைபு நினைவொடு' எனவரும் பாடலைக் குறளடி-வஞ்சிப்பாவாகக்கொண்டு அதன்கண் நாலசைப் பொதுச்சீர் எட்டும் வந்தன எனக்குறித்துள்ளார், இங்கு 'நின்று நின்றுளம் நினைபு நினைவொடு' என நாற்சீரடியான் இயன்ற ஆசிரிய அடியினை நாலசைச்சீர் வேண்டுவோர் இரு-சீரடியாகவுரைப்பினும் அவை இரு சீராய் இயைந்து முடியாமையானும் அங்ஙனம் இருசீரடிகளாகப்பகுத்துரைக்குமிடத்து அவை வஞ்சிப்பாவிற்குரிய தூங்கலோசை-யினவாய் வாராமையானும் அவை இருசீரடியாகச் சீர் இயைந்து முடியாமை-யானும் நாலசைச்சீர் கோடல் பொருந்தாதென்பதாம்.

2. 'புணர்த்தும்' என இளம்பூரணர் கொண்ட பாடமே நச்சினார்க்-கினியரும் கொண்டார். 'புணர்ந்தும்' என்பது பேராசிரியர் கொண்ட பாடமாகும்.

3. 'இயைதல்' என்றது, ஈரசையும் மூவசையுமாகச் சொற்கள் ஒன்றுபட்டுப் பொருந்தி நிற்றல்.

வரினும் அவையொன்றுபட்டுநிற்றல் வேண்டுமென்றுணர்க. எனவே, சொல்லெல்லாம் ஈரசையும் மூவசையுமாயல்லது வாராவென்பதூஉம், இனிப் புணர்த்து என்றதனான் அச்சீர்கள் அவ்வா றற்று நிற்குமேனும்[1] பிறர் தொடர்புபடுத்தும்வழிப் புணர்ச்சி விகாரமெய்தாமற் றம்முட்டொடர்ந்து நிற்றலும் புணர்ச்சி விகாரமெய்தியுந் தொடர்ந்து நிற்றலுமுடைய என்பதூஉங் கொள்க.

உ-ம் ''பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து
மதனுடை நெஞ்சமொடு நடுநா ளென்னாது''

இவை[2] புணர்ச்சி விகாரமெய்தாமல் இசையற்றுத் தொடர்ந்தன.

'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி'

இது வல்லெழுத்துப் புணர்ச்சியெய்திற்று. இன்னும் அதனானே ஒரு சொல்லைப் பகுத்துச் சீர்க்கு வேண்டுமாற்றான் வேறு சீராக்கியவழியும் அச்சீர்வகையான் வேறு சொல்லிலக்கணம் பெறுதும். அது

'மம்மர் நெஞ்சினன் றொழுதுநின் றதுவே'

என்புழி நின்றது என்னுங் குற்றுகரவீற்றுச் சொல்லினைப் பிரித்து அதுவே என வேறொரு சீராக்க, முற்றுகரமாகி வேறு-படுதல் கொள்க. எனப்படும் என்று சிறப்பித்த வதனான் இவை சிறப்புடைய என்பதூஉம், ஓரசைச்சீர் இவைபோலச் சிறப்பில என்பதூஉம் உணர்த்திற்று. உண்ணாநின்றான் என நாலசை யாலும் வருமாலெனின், அவை பிளவுபட்டு நிற்றலின் ஒரு சீரெனப்படாமையானும், அவை சீராகவருஞ்செய்யு ளின்மை-யானும், வஞ்சியுள்

'நேரிழை மகளி ருணங்குணாக் கவரும்' (பட்டினப்பாலை)

என்ற ஆசிரியவடியினை நாலசைச்சீர் காட்டவேண்டுவார் இருசீரடியாகவுரைப்பினும் அவற்றிற்குத் தூங்கலோசையின்றா-கலானும், சீர் தம்முட் புணர்ந்திறுதலின்மையானும், வஞ்சிச்சீர் அறுபது காட்டுகின்றவழி யாண்டும் நேர்பசை நிரைபசைகள் அலகுபெறாமையானும் தொல்காப்பியனார் கொள்ளார். உ—ம் 'சாத்தன், கொற்றன், தேமா ஈரசைச்சீர் கொண்டன[3]. காணப்

1. அற்று நிற்றலாவது, தாளவறுதிபட முடிந்து நிற்றல்.
2. 'இவை' என்றது, ஈரசைச் சீரினையும் மூவசைச் சீரினையும்.
3. இவை ஈரசை கொண்டன-என்றிருத்தல் பொருத்தமாகும்.

பேர், சாய்க்கானம், தேமாங்காய் எனவும் உண்ணாதன, தின்னாதன, தேமாங்கனி எனவும் இவை மூவசை கொண்டன. பிறர் தொடர்புபடுத்தின செய்யுள்

''உலகமுவப்ப வலனேர்பு'

(திருமுருகாற்றுப்படை)

'யாதானு நாடாமால்'

எனவும்

'வசையில்புகழ் வயங்குவெண்மீன்'

(பட்டினப்பாலை)

எனவும் ஈரசைச்சீரும் மூவசைச்சீரும் வந்தன.

**ஆய்வுரை :**

இது, சீரின் பொதுவிலக்கணமும் அதன் வகையும் உணர்த்து கின்றது.

(இ-ள்) இரண்டசை கொண்டு புணர்த்தும் மூவசைகொண்டு புணர்த்தும் ஓசைபொருந்தித் தாள அறுதிப்பட நிற்பது சீர் என்று கூறப்படும் எ-று.

சீரியைந்து இறுதல் என்பது, வழக்குநடை செய்யுள் நடையாகும்படி யாப்பினுட் பொருள்பெறப் பகுத்துச் சொல்லாகியவற்றுட் செல்லுதல்.

உ-ம்: 'வேந்தன்' எனவும் 'வந்தான்' எனவும் இரண்டசை புணர்ந்து சீராயின. 'வானத்தார்' எனவும் 'நில்லாதன' எனவும் மூவசை புணர்ந்து சீராயின. இனிச் செய்யுளுள்,

'தாமரை புரையுங் காமர் சேவடி'

என்றவழி ஈரசையினாற் சீராகி நான்கு சொல்லாகி ஓசை அறுதிப்பட நின்றவாறும்,

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை'

என்றவழி மூவசையினாற் சீராகி நான்கு சொல்லாகி ஓசை அறுதிப்பட நின்றவாறும் காணலாம்.

'ஈரசை கொண்டும் மூவசை புணர்த்துஞ் சீர் இயைந்து இற்றது சீர்' என்றமையால், ஒருசீர் பலசொல் தொடர்ந்து வரினும் அவை ஒன்றுபட நிற்றல் வேண்டுமென்பதும், எனவே உலகில் வழங்கும் சொல்லெல்லாம் ஈரசையானும் மூவசையானு

மல்லது வாரா என்பதும் பெறப்படும். ஒரு சொல்லைப் பகுத்துச் சீருக்கு ஏற்றவாறு வேறு சீராக ஆக்கிய நிலையிலும் அச்சீர்வகையால் வேறு சொல்லிலக்கணம் பெறப்படும். ''மம்மர் நெஞ்சினன் றொழுதுநின் றதுவே'' எனவரும் அடியில் 'நின்றது' என்னுங் குற்றுகரவீற்றுச் சொல்லினைத் தொழுதுநின்-றதுவே எனப்-பிரித்து வேறொரு சீராக்கியவழி குற்றுகரம் முற்றுகரமாகி உடம்படுமெய்யாகிய வகரம் பெற்று வேறுபடுதல் காண்க.

'சீரெனப்படுமே' எனச் சிறப்பித்தவதனால் ஈரசைச் சீரும் மூவசைச் சீரும் ஆகிய இவை சிறப்புடைய என்பதும் ஓரசைச்சீர் இவைபோலச் சிறப்பில என்பதும் பெறப்படும். ஈண்டு 'எனப்-படும்' (எனச் சிறப்பித்துரைக்கப்படும்) என்பதேபற்றி இத்-துணைச் சிறப்பிலதாகிய நாலசைச் சீரும் கொள்ளப்படும் என்ற கருத்தால் பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்கள் நாலசைச் சீர் கொண்டனர். அவர்கள் நாலசைச் சீர்க்கு உதாரணமாக உலக வழக்கினுள் காட்டும் 'உண்ணாநின்றன' முதலிய சொற்கள் இருசொற் றன்மையவாய்ப் பிளவு பட்டு நிற்றலின் அவை ஒரு சீரெனக் கொள்ளப்படாவாதலானும் அவற்றை ஒருசீராகக் கொண்டுவரும் செய்யுள் யாண்டும் இல்லாமையானும் அவர்கள் நாலசைச் சீர் காட்டல்வேண்டி வஞ்சிப்பாவினுள் வந்த 'நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்' என்ற ஆசிரிய அடியினை இருசீரடி-யாகவுரைப்பினும் அதற்குத் தூங்கலோசை வாராமையானும், வஞ்சிச்சீர் அறுபது காட்டும் நிலையில் நேர்பசை நிரைபசைகள் யாண்டும் அலகு பெறாமையானும் நாலசைச்சீர் கொள்ளுதல் தொல்காப்பியனார்க்கு உடன்பாடன்று என்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

**கஉ. இயலசை மயக்கம் இயற்சீர் ஏனை**
**உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர்.**

## இளம்பூரணம் :

என்-எனின். ஈரசைச்சீர் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட அசைகளில் இயலசை மயங்கி-வந்தன இயற்சீர் எனப்படும்; உரியசை மயங்கிவந்தன ஆசிரியவுரிச்சீரெனப்படும் என்றவாறு.[1]

1. நேர், நிரை என்பன இயலசை. நேர்பு, நிரைபு என்பன உரியசை மயங்குதல்-கலந்து உடன்வருதல்.

மயங்குதலாவது ஒருங்குவருதல். நேர் நிரை நேர்பு நிரைபு என்னு நான்கினையுந் தம்மினுறழப் பதினாறு அசைச்சீராம்[1] அவற்றுள் இயலசையாகிய நேரும் நிரையுந் தம்மின் உறழ நான்கு சீராம் அவை இயற்சீர் எனப்படும்.

உதாரணம்

''தேமா, புளிமா, கருவிளம், கூவிளம்''

என வரும்.

இனி உரியசையாகிய நேர்பு நிரைபு மென்றவற்றைத் தம்மினுறழ நான்குசீராம். அவை ஆசிரிய உரிச்சீர் எனப்படும்[1]

உதாரணம்

''ஆற்றுநோக்கு, ஆற்றுவரவு, வரகுசோறு, வரகுதவிடு''

என வரும். (கஉ)

**பேராசிரியம் :**

இது, நிறுத்தமுறையானே இயலசையும் உரியசையும் வேறு வேறு தம்முண் மயங்கிவரும் ஈரசைச்சீ ருணர்த்துகின்றது.

(இ - ள்.) 1நேர்நேர் 2நிரைநேர் 3நிரைநிரை 4நேர்நிரை என்பன நான்கும் இயற்சீர்; 1நேர்புநேர்பு 2நிரைபுநேர்பு 3நிரைபு நிரைபு 4நேர்புநிரைபு என்பன நான்கும் ஆசிரியவுரிச்சீர் (எ - று).

இவற்றுள் இயற்சீரைத் 1தேமா 2புளிமா 3கணவிரி 4பாதிரி எனவும், 1வாய்க்கால் 2வாய்த்தலை 3துலைவாய் 4துலைமுகம் எனவும் (யா. வி. ப. 66) பிறவும் இன்னோரன்ன வேறு வேறு காட்டுப. இனி, வருவனவற்றிற்கும் இஃதொக்கும். **ஆசிரிய வுரிச்சீரை** 1வீடுபேறு 2வரகுசோறு 3தடவுமருது 4பாறுகுருகு எனவுங் காட்டுப. அவற்றுக்குச் செய்யுள் :

''அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே'' (குறுந். 216)

---

1. இத்தொடர் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கினையும் தம்மின் உறழப் பதினாறு ஈரசைச் சீராம் என்றிருத்தல் வேண்டும். உறழ்தல்-பெருக்கல்.

நேர், நிரை என்னும் இயலசை இரண்டும் கூடிவந்த ஈரசைச் சீர் இயற்சீர் எனவும் நேர்பு, நிரைபு என்னும் உரியசை கூடிவந்த ஈரசைச்சீர் ஆசிரியவுரிச் சீர் எனவும் பெயர்பெறும். எ-று.

என்புழிக் 'கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை'[1] என நான்கியற் சீரும் வந்தன.

"வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப"[2]
(புறம். 35)

எனவும்,

"வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்"[3]
(பத்துப். திருமுரு. 106)

எனவும்,

"பூண்டுகிடந்து வளரும் பூங்கட் புதல்வன்"[4]

எனவும்,

"நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்து"[5]
(அகம். 96)

எனவும் வரும் இவற்றுள் 'வீற்று வீற்று' எனவும், 'வசிந்து வாங்கு' எனவும், 'பூண்டுகிடந்து' எனவும், 'இறவுக்கலித்து' எனவும் நான்காசிரியவுரிச்சீரும் வந்தவாறு கண்டுகொள்க. பிறவு மன்ன.

இஃது, ஆட்சியுங் குணனுங் காரணமாகப்பெற்ற பெயர். ஆட்சி:

"இயற்சீ ரிறுதிமு னேரவ ணிற்பின்" (தொல். செய். 19)

எனவும் பிறாண்டும் ஆளுப. குணம்: இயற்சீராகலானும் நான்குபாவிற்கும் இயன்று வருதலானுங் குணங் காரண மாயிற்று. இயல்பு வகையான் ஒரோ ஒன்றாகி நின்ற சொற்கள் வருதல் பெரும்பான்மையாகலானும் நான்குபாவிற்கும் பொது

1. 'தேமா கணவிரி புளிமா பாதிரி, என நான்கியற்சீரும் வந்தன. கணவி 'கருவிளம்' எனவும் 'பாதிரிகூவிளம்' எனவும் யாப்பருங்கலவாசிரியரால் வழங்கப்பெற்றன

2. 'நிரைபுநிரை நிரைநேர் நேர்புநேர்பு நிரைநேர்
குளிறுபுலி புளிமா வீடுபேறு புளிமா

3. 'நேர்நிரை நிரைநேர்பு நிரைபுநேர்பு நிரைநேர்'
பாதிரி புளிமா வரகுசோறு புளிமா

4. 'நேர்புநிரைபு நிரைநேர் நேர்நேர் நிரை நேர்'
பாறுகுருகு புளிமா தேமா புளிமா

5. 'நிரைநேர் நேர்நேர் நிரைநிரை நிரைபுநிரைபு'
புளிமா தேமா கணவிரி தடவுமருது

வாகி இயன்று வருதலானும், இயலசையான் வரும் ஈரசைச் சீராகலானும், இவற்றை ஒருபாவிற் குரிமைகூறுதல் அரிதாக லானும் இவற்றை இயற்சீரென்றான். எனவே, சொல்லின் **முடியும்** இலக்கணத்தால் நான்குபாவிற்கும் உரியவென்பதூஉம் ஈண்டுப் பெற்றாம். அல்லதூஉம் அவற்றைத் தளைகூறும்வழி மூன்றுபாவிற்கும் உரிமைகூறிக் கலிப்பாவிற்கும் வஞ்சிப்பா விற்கும் நேரீற்றியற்சீர் வாராவென, ஒழிந்தசீர் வருமென்ப துடன்பட்டமையானும் நான்கு பாவிற்கும் இயன்றுவருமென்பது பெற்றாம்.[1] **ஆசிரியவுரிச்சீர்** என்றதூஉம் அவ்வாறே ஆட்சியும் குணனும் நோக்கிய பெயர். ஆட்சி,

"வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீர்" (335)

எனவும் பிறாண்டும் ஆளுப. உரியசை மயக்கமாகலானும் ஆசிரியத்திற் குரிமையானும் இக்குறி குணங் காரணமாயிற்று.[2] மற்றிவை இயற்சீர்போல ஓரோர் சொல்லாய் யாண்டும் நிற்ற லில்லை பிறவெனின், அற்றன்று, தோன்றுவாக்கு இரங்குவாக்கு என்றாற்போல்வன உளவென்பது. இனி, இவ்வியற்சீர்தாமும் இரண்டுசொற் கூடியும் ஒன்றாகிய வழியே சீரெனப்படும்; அது போல இவையும்,

"எல்லாத் தொகையு மொருசொன் னடைய"

(தொல். சொல். எச்ச. 14)

என்பதனான் ஒரு சொல்லாயினவெனினும் அமையும். மற்று ஒழிந்த இயற்சீருங் கூறாது[3] ஆசிரியவுரிச்சீர் ஈண்டுவைத்த

1. இயல்புவகையால் ஒவ்வொன்றாகி நின்ற அசைச்சொற்களால் பெரும் பாலும் இயன்று நான்குபாவிற்கும் உரிமையுடைய இயல்பினவாய் வருதலால் இயலசையால் இயன்றுவரும் ஈரசைச்சீர்கள் நான்கும் குணங்காரணமாகவும் நூலிற்பலமுறை எடுத்தாளப்பெறும் ஆட்சிபற்றியும் இயற்சீர் எனப்பெயர் பெற்றன.

2. உரியசை மயக்கமாகிய ஈரசைச்சீர்நான்கும் ஆசிரியப்பாவிற்குரிமை-யுடைமையாகிய குணங்காரணமாகவும் 'வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீர்' என்றாங்கு நூலில் ஆளப்பெறும் ஆட்சிபற்றிய வழக்கத்தினாலும் ஆசிரியவுரிச்சீர் எனப்பெயர் பெற்றன.

3. ஒழிந்த இயற்சீர் என்றது, இயலசையும் உரியசையும் விரவியமைந்த ஈரசைச் சீர் எட்டனுள் உரியசைப் பின்னர் நிரையசை வருவனவாகிய நேர்பு-நிரை (நீடுகொடி) நிரைபுநிரை (குளிறுபுலி) என்னும் உரியசைச்சீர் இரண்டும் நீங்கலாக நேர்புநேர் (சேற்றுக்கால்), நிரைபுநேர் (களிற்றுத்தாள்), நேர்நேர்பு-

தென்னையெனின், இவ் விருபகுதியவற்றை இயற்சீரென்றும் (331) ஆசிரியவுரிச்சீரென்றும் (335) ஆளுமாகலின் என்றவாறு.[1]

**நச்சினார்க்கினியம்:**

இது முறையானே இயலசையும் உரியசையும் வேறு வேறு தம்முண் மயங்கிவரும் ஈரசைச்சீர் உணர்த்திற்று.

இ-ள். இயலசை மயங்கினவற்றை இயற்சீரென்றும் உரியசை மயங்கினவற்றை ஆசிரியவுரிச்சீரென்றும் கூறுப. எ-று.

மயக்கம் என்றது தம்மொடு தாமயங்குதலும் தம்மொடு பிறிது மயங்குதலுமாம். உ-ம். நேர்நேர், நிரைநிரை எனத் தம்மொடுதாமயங்கின; இரண்டினையும் பிரித்து நேர்நிரை நிரைநேர் எனப் பிறிதொடுமயக்க இந்நான்கும் இயற்சீராயிற்று. இந்நான்கு வழியுமல்லது வேறுகூட்டமின்மையும் உணர்க. இவற்றைத் தேமா, புளிமா, பாதிரி, கணவிரி எனவும் கருவிளம் கூவிளம் எனவும் காட்டுப; பிறவாறுங்காட்டுப. நேர்புநேர்பு நிரைபுநிரைபு எனத் தம்மொடு தாமயங்கின. இரண்டினையும் பிரித்து நேர்புநிரைபு, நிரைபுநேர்பு எனப் பிறிதொடுமயக்க இந்நான்கும் ஆசிரியவுரிச்சீராயிற்று. இவற்றை வீடுபேறு, தடவுமருது, பாறுகுருகு, வரகுசோறு எனக்காட்டுப. செய்யுள்:

"அவரே
கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை"
(குறுந்தொகை-உகக)

என நான்கியற்சீரும் வந்தன.

---

(போரேறு), நேர்நிரைபு (பூமருது) நிரைநேர்பு (கடியாறு), நிரைநிரைபு (மழகளிறு) என்னும் ஆறினையும். இவையாறும்

'நேரவணிற்பின் இயற்சீர்ப்பால' (செய்யுளியல் - கரு)

'இயலசையீற்றுமுன் உரியசைவரினே
நிரையசையியலவாகுமென்ப' (செய்யுளியல் - கசு)

என இவ்வியலிற் பின்வருஞ் சூத்திரங்களாற் கூறப்படுவன.

1. இயற்சீர்களாகிய இவற்றைச் சொல்லி முடிப்பதற்கு முன் ஆசிரியவுரிச் சீரை இங்குக்கூறியதன்நோக்கம், இயலசையாலாகிய ஈரசைச்சீர்நான்குமே இயற்சீராமென்றும் உரியசையாலாகிய ஈரசைச்சீர் நான்குமே ஆசிரியவுரிச்சீரா-மென்றும் ஈண்டுச் சிறப்பித்து எடுத்தோதப்படும் என அறிவித்தற்பொருட்டாம் என்பது கருத்து.

"வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப"

எனவும்

"நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்து"
(அகம் - கூகா)

எனவும்

"பூண்டுகிடந்து வளரும் பூங்கட் புதல்வன்"

எனவும்

"வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்"
(திருமுருகாற்றுப்படை)

எனவும் வந்தவற்றுள் வீற்றுவீற்று எனவும் இறவுக்கலித்து எனவும் பூண்டுகிடந்து எனவும் வசிந்துவாங்கு எனவும் நான்-காசிரியவுரிச்சீரும் வந்தன.[1] நான்கு பாவிற்கும் இயற்றலானும், இயல்புவகையான் ஓரோசொல்லாய் வருதல் பெரும்பான்மை யாகலானும் இயற்சீரெனவும், ஆசிரியத்திற்கு உரிமையான் உரிச்சீரெனவும் ஆட்சியுங்குணமுங் காரணமாகப் பெற்றபெயர்.

"இயற்சீ ரிறுதிமுன்" (செய் - கசா)

எனவும்

"வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீர்" (செய் - உரு)

எனவும் பிறாண்டும் ஆள்ப.

**ஆய்வுரை :**

இஃது இயலசையிரண்டு தம்முட் கூடியும் உரியசையிரண்டு தம்முட் கூடியும் இருவகை ஈரசைச் சீர்களாமாறு கூறுகின்றது.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட அசைகளில் இயலசை மயங்கி வந்தன இயற்சீரெனப்படும். உரியசை மயங்கி வந்தன ஆசிரிய-வுரிச்சீர் எனப்படும் எ-று.

நேர் நிரை நேர்பு நிரைபு என்னும் நான்கு அசைகளையும் முதலசைகளாக நிறுத்தி அவற்றின்முன் அந்நான்கசைகளையும் இரண்டாம் அசைகளாக வருவித்து ஒன்றோடொன்று கூட்டிப்

---

1. வீற்றுவீற்று - நேர்புநேர்பு, இறவுக்கலித்து - நிரைபுநிரைபு இவை தம்மொடுதாம் மயங்கின.

பூண்டுகிடந்து - நேர்புநிரைபு, வசிந்துவாங்கு - நிரைபுநேர்பு இவை பிறிதொடு மயங்கின.

பெருக்க ஈரசைச் சீர்கள் பதினாறாகும். அவற்றுள் நேர், நிரை என்னும் இயலசையிரண்டனையும் பெருக்கப் பிறந்த ஈரசைச் சீர்கள் நான்கும் இயற்சீர் எனப் பெயர்பெறும். அவை தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பன. நேர்பு, நிரைபு என்னும் உரியசை யிரண்டனையும் பெருக்கப் பிறந்த ஈரசைச் சீர்கள் நான்கும் ஆசிரியவுரிச்சீர் எனப் பெயர்பெறும். அவை ஆற்று-நோக்கு, ஆற்றுவரவு, வரகுசோறு, வரகுதவிடு என்பனவாகும்.

**கரு முன்நிரை இறினும்[1] அன்ன வாகும்.**

## இளம்பூரணம் :

என் -எனின். இதுவும் ஆசிரியவுரிச்சீ ராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நேர்பசை நிரைபசைப்பின், நிரை யிறுதியும் ஆசிரியவுரிச்சீரா மென்றவாறு.[2]

உதாரணம்

"யாற்றுமடை, குளத்துமடை"

என வரும்.

## பேராசிரியம் :

இஃது, இயலசையும் உரியசையும் மயங்கியாவன கூறுகின்றது.

(இ - ள்.) "உரியசை மயக்கம் ஆசிரிய வுரிச்சீர்" (தொல். செய். 13) என மேனின்ற அதிகாரத்தான் அவ்வுரியசைப் பின்னர் நிரையசையுறினும் அவ்வுரியசை மயக்கமாகிய ஆசிரிய வுரிச்சீராம் (எ - று).[3]

---

1. 'முன்னிரையுறினும்' என்பது, பேராசிரியருரையிற் கண்டபாடம்.

2. முன் நிரை இறுதலாவது,

நேர்பு, நிரைபு என்னும் உரியசையின் பின் நிரைவந்து நேர்புநிரை-யாற்றுமடை, நிரைபுநிரை-குளத்துமடை என நிரையீறாய் முடிந்து நிற்றல். அன்னவாதலாவாது முற்கூறிய ஆசிரியவுரிச்சீரின் தன்மையவாதல்.

3. 'உரியசைமயக்கம் ஆசிரியவுரிச்சீர்' என்பது மேல்நின்ற சூத்திரமாதலின், இங்கு 'நிரையுறுதல்' என்றது முற்குறித்த உரியசையின் பின் நிரையசை வந்து மயங்கி ஈரசைச்சீராதலைக் குறித்து நின்றது.

நேர்புநிரை - நீடுகொடி

நிரைபுநிரை - குளிறுபுலி

உரியசையும் இயலசையும் கலந்துவந்த ஈரசைச் சீர்களாகிய இவையிரண்டும் ஆசிரியவுரிச்சீர்போலக்கொள்ளப்படும் என்பதாம்.

அவை, [1]நேர்புநிரை, [2]நிரைபுநிரை என வரும். இவற்றை [1]நீடுகொடி [2]நாணுத்தளை [3]குளிறுபுலி [4]விரவுக்கொடி எனவும் பிறவாற்றானுங் காட்டுப. அவையெல்லாம் அறிந்து கொள்க.

மற்று, இயலசையும் உரியசையும் விரவி இயற்சீராவன இலவோ-வெனின் உள; அவையன்றே மேற்சொல்கின்றனவென்பது. அஃதேல், இவ்விரண்டும் இயற்சீராகாவோவெனின், "அன்ன" வென்று மாட்டெறிந்த கருத்தினான் அதுவும் அமையுமென்பது; என்றார்க்கு, இவற்றை ஆசிரியவுரிச்சீரென்றல் குற்றமாம் பிற வெனின், பெரும்பான்மையும் ஆசிரியத்திற்கும் அதற்கினமாகிய வஞ்சிக்கும் உரியவாகலானும், ஒழிந்த இரண்டு பாவின்கண்ணுஞ் சிறுவரவின வாகலானும், வெண்பாவினுட் கட்டளையடிக்கண் வாராவென்பது,

"கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ" (தொல். செய்.24)

என வரைந்தமையாற் பெறுதுமாகலானும் இவற்றை ஆசிரிய வுரிச்சீ ரென்றலே வலியுடைத்தென்பது[1] அன்னவென்பதனை இயற்சீரொடு மாட்டுங்கால் ஈற்றது அதிகாரம்பட இறுதிநின்ற நிரையீற்றியற்சீ ரிரண்டனோடுங் கொள்ளப்படும்; கொள்ளவே, அம்முறையானே நீடுகொடி என்பதனைப் பாதிரி போலவுங் குளிறுபுலி என்பதனைக் கணவிரி போலவுந் தளைகொள்ளப்படு மென்பதாம்.[2]

அவை செய்யுளுள் வருமாறு :

"ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ" (புறம். 55)

எனவும்,

---

1. நேர்பு நிரை (நீடுகொடி) நிரைபுநிரை (குளிறுபுலி) எனவரும் இவை-யிரண்டும் பெரும்பாலும் ஆசிரியத்திற்கும் அதற்கினமாகிய வஞ்சிக்கும் உரியன-வாதாலானும் ஒழிந்த இரண்டுபாக்களின் சிறுவரவினவாதலானும், வெண்பாவிற் கட்டளைக்கண் இவை வருதல் இல்லையென்பது 'கலித்தளைமருங்கிற்கடியவும் படா' (செய்-24) என வரைந்தமையாற் பெறப்படுதலானும் இவற்றை இயற்சீர் என்னாது ஆசிரியவுரிச்சீர் என்றலே வலியுடையதாகும்.

2. இவையிரண்டும் நிரையசையால் இறுதல் பற்றி 'அன்ன' என்னும் மாட்டேற்றினை நிரையீற்றியற்சீரிரண்டனோடும் இயையக்கொள்ளுங்கால் நீடுகொடி (நேர்புநிரை) என்பது பாதிரி (நேர்நிரை) போலவும், குளிறுபுலி (நிரைபுநிரை) என்பது கணவிரி (நிரைநிரை) போலவும் தளை கொள்ளப்படும் என்பர் பேராசிரியர்.

"உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை" (புறம்.3)
எனவும்,

"ஓங்குதிரை வியன்பரப்பின்" (பத்துப். மதுரை 1)

எனவும்,

"நிலவுமணல் வியன்கானல்" (புறம். 17)
எனவும் இவை ஆசிரியத்துள்ளும் வஞ்சியுள்ளும் வந்தவாறு.

"தூங்குதிரை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டே"
எனவும்,

"ஏடுகொடி யாக வெழுதுகோ" (முத்தொள். 50)
எனவும் இவை வெண்பாவினுட் கட்டளையடியல்லாதவழிச் சிறுபான்மையான் வந்தன.[1] மற்றிவையுங் கட்டளையடியென்னாமோ வெனின் அற்றன்று; அது தளைவகை கொள்ளுந்துணை இன்னோசைத்தன்றென்பது,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (தொல். செய். 11)
என்பதனானுணர்க. இப்பகுதி யறியாதார் அடியுறழ்ந்ததனாற் பயனென்னை யென்றிகழ்ப. (கச)

**நச்சினார்க்கினியம் :**

இஃது இயலசையும் உரியசையும் மயங்கிச் சீராமாறு கூறுகின்றது.

இ-ள். 'உரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்' (செய்-கரு) என்ற அதிகாரத்தான் அவ்வுரியசைமுன்னர் நிரையசைவரினும் அவ்வுரியசை மயக்கமாகிய ஆசிரியவுரிச்சீராம். எ-று.

அவை நேர்புநிரை, நிரைபுநிரை. உ-ம். நீடுகொடி நாணுத்தளை, உரறுபுலி விரவுகொடி எனவரும். செய்யுள் :

---

1. 'தூங்குதிரை' எனவும், 'ஏடுகொடி' எனவும் உரியசை முன் நிரையசை யுற்ற ஈரசைச்சீர்கள் வெண்பாவினுட் கட்டளையடியல்லாதவழிச் சிறுபான்மை வந்தன. இவை தளைவகை கொள்ளும் அளவுக்கு இன்னோசையுடையவல்லாமையால் கட்டளையடியுட்பட்டு அடங்காவாயின. 'நீடுகொடி' (நேர்புநிரை) என்பதனைப் பாதிரி (நேர்நிரை) என்னும் நிரையீற்றியற்சீரேபோலக் கொள்ளுங்கால் வெண்பாவின் செப்பலோசை சிதையாதவாறும் இவ்வாறன்றித் தூங்-குதி-ரை, எனவும் ஏ-டுகொ-டி எனவும் மூவசைச்சீர்களாகக் கொண்டு பிற்கால யாப்பிலக்கணவாசிரியர் சொல்லமைதி கெடப் பகுத்துரைத்தல் பொருந்தாமையும் கண்டு கொள்க.

"ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ"
(புறம்-௫௫)

"நாணுத்தளை யாக வைகி மாண்வினைக்கு"
"களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை"
(புறம்-௬௪)

"உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை"
(புறங்-௩)

"ஓங்குதிரை வியன்பரப்பின்"
(மதுரைக்காஞ்சி)

"பன்னுதமிழ்ப் பாவலர்க்கு"
"களிற்றுநிணத் துகிலுடுத்த"
"பிணர்மோட்டுப் பேய்மகளிர்"
"நிலவுமணல் வியன்கானல்"

எனவும்[1] ஆசிரியத்திலும் வஞ்சியிலும் வந்தன.

"தூங்குசிறை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டு"

எனவும்

"ஏடுகொடி யாக வெழுதுகோ"

எனவும் வெண்பாவினுட் கட்டளையடியல்வழிச் சிறுபான்மை வந்தன. கட்டளையடி யன்மை இசையொடு சேர்த்தியுணர்க. இவை இயலசையோடு மயங்கினமையிற் பாதிரி கணவிரிபோலக் கொள்க.[2]

**ஆய்வுரை :**

இஃது இயலசையும் உரியசையும் மயங்கி ஈரசைச் சீராமாறு கூறுகின்றது.

(இ-ள்) நேர்பசை நிரைபசைகளின்பின் நிரையசை இறுதியாய் வரின் அவையும் ஆசிரியவுரிச்சீரெனப்படும்.

உதாரணம்: ஆற்றுமடை, குளத்துமடை எனவரும்.

---

1. ஓங்குதிரை - நேர்புநிரை
பன்னுதமிழ்ப் - நேர்புநிரை
களிற்றுநிணத் - நிரைபுநிரை
நிலவுமணல் - நிரைபுநிரை

2. "தூங்குசிறை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டு" எனவும் "ஏடுகொடி யாக எழுதுகோ" எனவும் ஆசிரியவுரிச்சீர் வெண்பாவிற் கட்டளையடியல்லாத வழிச் சிறுபான்மை வரும் எனவும் அவை அங்ஙனம் வருங்கால், தூங்குசிறை, உவவுமதி என்பவற்றை முறையே இயலசை மயக்கமாகிய பாதிரி, கணவிரிபோலக் கொண்டு ஓசையூட்டுக எனவும் கூறியவாறு.

கச. நேரவண் நிற்பின் இயற்சீர்ப் பால.

## இளம்பூரணம் :

என்—எனின். இது இயற்சீர்க் குரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உரியசைப் பின்னர் நேரசை வரின், அது இயற்சீரென வருமென்றவாறு.[1]

உதாரணம்

"ஆற்றுக்கால், குளத்துக்கால்"

என வரும். (கச)

## பேராசிரியம் :

இஃது, இயலசை உரியசை மயக்கத்துப் பிறப்பன இரண்டியற்சீர் உணர்த்துகின்றது.

(இ-ள்) முன்னர் உரியசைப் பின்னர் நிரையசைவரின் ஆசிரியவுரிச்சீராமென்றான். அவ்வதிகாரத்தால் உரியசையிரண்டன்பின்னும் நேரசை வரின் அவையிரண்டும் ஆசிரியப் பாலவாம் (எ-று)

அவை நேர்புநேர், நிரைபுநேர் என வரும்.

உ-ம் "1சேற்றுக்கால் 2வேணுக்கோல் 3களிற்றுத்தாள் 4முழவுத் தோள்" என வரும்.

"1நீத்துநீர் 2குளத்துநீர் 3போதுபூ 4விறகுதீ"

எனவுங் காட்டுப. பிறவு மன்ன.

இவை இயற்சீர் நான்கினுள்ளும் எப்பாற்படுமெனின், அதிகாரத்தால் நீடுகொடி குளிறுபுலி என்பனபோல இறுதியினின்ற பாதிரி கணவிரிப்பாற்படும் முறையானென்பது. எனவே, போதுபூ பாதிரியாகவும், விறகுதீ கணவிரியாகவும் இயற்றப்படுமென்பது. இவ்வாறு கூறவே, இவை பாதிரி கணவிரிபோல அசை திரிந்து நிரையாமென்பது கொள்ளற்க. நேர்பு நிரைபு முதலாக நிரையீறாகிய சீர் தளைகொண்டாங்குக் கொள்ளப்-

1. அவண்-நேர்பு, நிரைபு என்னும் உரியசையின்பின். நேர்நிற்றலாவது நேர்புநேர்-ஆற்றுக்கால், நிரைபுநேர்-குளத்துக்கால் என நேரீறாய் முடிந்து நிற்றல். இவையிரண்டும் இயற்சீரின் பாற்படும்.

படும் இவையுமென்பதாம். "தளைகொளொக்கும்"
எனவே, ஏழு தளையுள்ளும் இவற்றை ஒன்றொன்றனுள் அடங்கு மென்று அடக்கற்க. என்னை ? இவை வேறுவேறு பட்ட அசையான் வேறு வேறு சீராயினமையினென்பது.[1] அசைச் சீர்க்கு உரிச்சீரிலக்கணமின்மையின் இதற்கு இஃதுதொப்ப வாரா தென்றுணர்க.[2]

"நீத்துநீர்ப் பரப்பி னிவந்துசென் மான்றேர்"
என்புழிப் போதுபூவும் விறகுதீயும் வந்தவாறு கண்டுகொள்க. இவற்றை ஆசிரியவுரிச்சீர்ப்பின் வைத்ததென்னையெனின், இவையும் அவைபோல ஈண்டொருங்கியைதல் பெரும்பான்மை யென்பது அறிவித்தற்கென வுணர்க.[3] (கரு)

**நச்சினார்க்கினியம் :-**

இஃது இயலசை உரியசை மயக்கத்துப் பிறப்பன இரண்டியற் சீருணர்த்திற்று.

இ-ள். அவண் நேர்நிற்பின் இயற்சீர்ப்பால எ-து மேனின்ற அதிகாரத்தான் உரியசையிரண்டன்பின்னும் நேரசைவரின் அவையிரண்டும் இயற்சீர்ப்பாலவாம்[4] எ-று.

---

1. உரியசையின்பின் நேர்புநேர் (சேற்றுக்கால் -போதுபூ) நிரைபுநேர் (களிற்றுத்ததாள்-விறகுதீ) என நேரசை வரின் அவையிரண்டும் முறையே பாதிரி, கணவிரி என்றாற்போலக் கொள்ளப்படும் என்பதாம். இவ்வாறு கூறவே இவை பாதிரி, கணவிரி என்பனவாக அசைதிரிந்து நிரையீற்றுச் சீர்களாமெனக்கொள்ளுதல் கூடாது. நேர்புநிரை, நிரைபுநிரை யாகிய நிரையீற்றுச் சீர்கள் தளைகொண்டதுபோல இவையும் தளைகொள்ளப்படும் எனவும், வேறுவேறுபட்ட அசையான் வேறுவேறு சீராயின இவற்றைத் தளைகோள்ஒக்கும் என்றதே கொண்டு ஏழுதளையுள்ளும் ஒன்றொன்றனுள் அடங்குமென்று அடக்குதல் கூடா தெனவும்விளக்குவர் பேராசிரியர்.

2. இயற்சீர்க்கு உரிச்சீரிலக்கணமின்மையின் உரியசைமுன்வரும் இயலசைச்சீர்க்கு இயலசை முன்வரும் இயலசைச்சீர் ஒப்ப வாராது என்பதாம்.

3. உரியசைப்பின் நேர்புணர்ந்து இயற்சீர்ப்பாற்படும் இவ்வீரசைச் சீர்கள், உரியசைமுன் நிரைபுணர்ந்து வரும் ஆசிரியவுரிச்சீர்களைப்போன்று இயற்சீரும் ஆசிரியவுரிச்சீருமாக ஓரடிக்கண் ஒருங்கியைந்து வருதல் பெரும்பான்மையென்பது அறிவித்தற்கு, இவற்றை ஆசிரியவுரிச்சீர்ப்பின் வைத்தார் ஆசிரியர்.

4. நேர்புநேர், நிரைபுநேர் எனவரும் ஈரசைச்சீர்களிரண்டும் முறையே பாதிரி, கணவிரி என்னும் இயற்சீர்ப்பாற்படும் என்பதாம்.

அவை நேர்புநேர், நிரைபுநேர்; உ-ம். சேற்றுக்கால் வேணுக்கோல், களிற்றுத்தாள், முழவுத்தோள் எனவரும்; நீத்துநீர், குளத்துநீர் எனவும் போதுபூ, மேவுசீர், விறகுதீ, உருமுதீ எனவும் கண்டு கொள்க. இவையெல்லாம் பாதிரி கணவிரி என்னும் இயற்சீர்ப்பாற்படும். போதுபூ, விறகுதீ என்னுமிரண்டன்கட் குற்றுகரம் மேல்வரும் நெடிலோடிணைந்து நிரையாய்ப் பாதிரி கணவிரிபோல நிரையாமோவெனின்; ஆகா; - அக் குற்றுகரம் நேர்பு நிரைபுமாயேநின்று நேருநிரையு முதலாய் நிரையீறாகிய சீர் தளைகொண்டாங்குத் தட்கும்.[1] செய்யுள்-

"நீத்துநீர்ப் பரப்பி னிவந்துசென் மான்றேர்"
எனப் போதுபூவும், விறகுதீயும் வந்தன.

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ ள்) நேர்பசை நிரையசைகளின்பின் நேரசை நிற்பின் இயற்சீராம் எ-று.

உ-ம். ஆற்றுக்கால், குளத்துக்கால் எனவரும்.

கரு இயலசை ஈற்றுமுன் உரியசை வரினே
நிரையசை இயல ஆகு மென்ப.

**இளம்பூரணம்:**

(இ - ள்.) இயலசைப் பின்னர் உரியசைவரின், நிரையசை வந்தாற்போலக் கொள்க வென்றவாறு.

எனவே இவையும் இயற்சீ ரென்றவாறாம்.

உதாரணம்

"மாங்காடு, களங்காடு, பாங்குரங்கு, கடிகுரங்கு"
என வரும்[2]

---

1. போதுபூ, விறகுதீ என்புழி இடைநின்ற குற்றுகரம் பின்வரும் எழுத்-துடன்கூடி நிரையசையாகாது. 'நீத்துநீர்ப் பரப்பின் நிவந்து செல் மான்றேர்' என்புழிப்போல நீத்து, நிவந்து என முன்னுள்ள எழுத்துடன் கூடி முறையே நேர்பும் நிரைபும் ஆகியே நிற்கும் என்பதாம்.

2. நேர், நிரை யென்னும் இயலசைகளிலொன்றின்பின்னர் நேர்பு, நிரைபு என்னும் உரியசைகளுளொன்று வந்து, நேர்நேர்பு (மாங்காடு), நிரைநேர்பு-(களங்காடு) நேர்நிரைபு -(பாய்குரங்கு), நிரைநிரைபு -(கடிகுரங்கு) எனவரின் அவை நான்கும் நிரையீற்றியற்சீரே போலக் கொள்ளப்படும்.

இத்துணையுங் கூறப்பட்டது ஈரசைச் சீர் பதினாறினும் இயற்சீர் பத்தும் ஆசிரிய வுரிச்சீர் ஆறுமா மென்றவாறு[1]

**பேராசிரியம் :**

இது, மேனின்ற இயற்சீரதிகாரத்தான் ஈரசைச்சீருள் இயலசை உரியசை மயக்கத்துள் ஒழிந்து நின்ற நான்கு இயற் சீரு[2] முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இயலசை இரண்டின்பின்னும் உரியசை இரண்டும் ஒன்று இரண்டு செய்து மயங்கி நான்காகுங்கால் அவ்விரண்டு உரி யசையும் இயலசை மயக்கமாகிய இயற்சீர்நான்கனுள் நிரையீற்ற பாதிரியுங் கணவிரியும் போல வருஞ்சீரொடு தட்கும் (எ – று).

அவை [1]நேர்நேர்பு [2]நேர்நிரைபு [3]நிரைநேர்பு [4]நிரை நிரைபு எனவரும். வருங்கால் நேர்முதற்சீர் இரண்டும் பாதிரி போலவும் நிரைமுதற்சீர் இரண்டுங் கணவிரிபோலவுங் கொள்ளப்படு மென்றவாறு.[3] எனவே, இச்சூத்திரமுஞ் சீராமாறேயன்றிச் சீர்தளைக்குமாறுங் கூறியவாறாயிற்று.[4] இவற்றைப் [1]போரேறு [2]பூமருது [3]கடியாறு [4]மழகளிறு எனினும் இழுக்காது. (கூசா)

**நச்சினார்க்கினியம்:**

இது மேனின்ற இயற்சீரதிகாரத்தான் ஈரசைச்சீருள் உரியசை இயலசை மயக்கத்துள் ஒழிந்துநின்ற நான்கியற்சீரும் உணர்த்திற்று.

---

1. ஈரசைச்சீர் பதினாறினுள் இயற்சீர்பத்தும் ஆசிரியவுரிச்சீர் ஆறும் ஆகும் என்பது இதுவரை கூறப்பட்டது.

2. ஒழிந்து நின்ற நான்காவன நேர்நேர்பு (போரேறு), நேர்நிரைபு (பூமருது) நிரைநேர்பு (கடியாறு), நிரைநிரைபு (மழகளிறு) என்பனவாம்.

3. நிரையசையியலவென்றது, நேர்முதல் இயலசையும் நிரைமுதல் இயலசையும் நேர்பு, நிரைபு என்னும் உரியசை யிரண்டனோடும் மயங்கிவந்த ஈரசைச்சீர் நான்கனுள் நேர்முதலாகிய போரேறு, பூமருது இரண்டும் நிரை-யீற்றியற்சீருள் பாதிரிபோலவும் நிரைமுதலாகிய கடியாறு, மழகளிறு இரண்டும் நிரையீற்றியற்சீராகிய கணவிரிபோலவும் அமைந்து வருஞ்சீர்களோடு தளைத்து நிற்கும் என்பதாம்.

4. இயலசைமுன் உரியசைவரின் என்னாது, 'இயலசையீற்றுமுன் உரியசை-வரின்' என விரித்துக்கூறினமையால் இச்சூத்திரஞ் சீராமாறேயன்றி நின்றசீரின் ஈற்றசையோடு வருஞ்சீரின் முதலசை வந்து சீர்தளைக்குமாறுங்கூறியவாறாயிற்று என்றார்.

(இ - ள்.) இயலசை......வரினே எ-து இயலசையிரண்டன் பின்னும் உரியசையிரண்டும் ஒன்றிரண்டுசெய்து மயங்கி நான்-காங்கால் அவ்விரண்டுரியசையும்; நிரை........மென்ப எ-து இயலசை மயக்கமாகிய இயற்சீர் நான்கனுள் நிரையீற்ற பாதிரி-யும் கணவிரியும் போல வருஞ்சீரொடு தட்கும். எ-று[1]

அவை நேர்நேர்பு, நேர்நிரைபு, நிரைநேர்பு, நிரைநிரைபு எனவருங்கால் நேர் முதலிரண்டும் பாதிரி போலவும் நிரை முதலிரண்டும் கணவிரி போலவும் கொள்க.

இச்சூத்திரமும் தளைக்குமாறு கூறிற்றாம். உ-ம். போரேறு நன்னாணு, பூமருது காருருமு, கடியாறு பெருநாணு, மழகளிறு நரையுருமு எனவரும்.

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) இயலசைப்பின் உரியசைவரின் நிரையசை வந்தாற் போல, இயற்சீரெனக் கொள்ளப்படும் எ-று. உ-ம்: மாங்காடு, களங்காடு, பாய்குரங்கு, கடிகுரங்கு எனவரும்.

கக. அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே.

**இளம்பூரணம் :**

என் எனின். சீர்க்கண் உயிரளபெடைக்குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) உயிரளபெடை அசையாக நிற்கவும் பெறும் என்றவாறு.[2]

உம்மை எதிர்மறையாகலான் ஆகாமை பெரும்பான்மை.[3]

---

1. நேர் முதலாக வரும் நேர்நேர்பு, நேர்நிரைபு இரண்டும் பாதிரி போலவும் நிரை முதலாக வரும் நிரைநேர்பு, நிரை நிரைபு இரண்டும் கணவிரி-போலவும் நின்று வருஞ்சீரொடு தளைக்கும்.

| நேர்நேர்பு | நேர்நிரைபு | நிரைநேர்பு | நிரைநிரைபு |
|---|---|---|---|
| போரேறு | பூமருது | கடியாறு | மழகளிறு |
| நன்னாணு | காருருமு | பெருநாணு | நரையுருமு |

2. அசைநிலையாகல் என்பது, எழுத்தாகக் கொண்டு எண்ணப்பெறாமை.

3. அசை நிலையாகலும், என்புழி உம்மை எதிர்மறையாதலால் உயிரளபெடை அசைநிலையாகாமையே பெரும்பான்மை யென்பதாம். அசைநிலை-யாகாமையாவது எழுத்தெனக்கொண்டு அலகிடப்பெறுதல்.

உதாரணம்

"கடாஅ உருவொடு......வல்லதே ஒற்று." (குறள். ருஅரு)
இது அளபெடை யலகுபெற்றது.

"இடைநுடங்க வீர்ங்கோதை பின்தாழ வாட்கண்
புடைபெயரப் போழ்வாய் திறந்த - கடைகடையின்
உப்போஒ எனவுரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்
கொப்போநீர் வேலி உலகு."

இதன்கண் அளபெடை யசைநிலையாகி யலகுபெறாதாயிற்று. (கசா)

**பேராசிரியம் :**

இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதி; மேல் எழுத்ததிகாரத்து ஓதப்பட்ட அளபெடையை ஆண்டு மொழியெனக் கூறினான், அவ்வாற்றானே அவை பெரும்பான்மையும் ஈண்டும் ஈரசைச்-சீராகலின் ஈண்டுச் சீர்கூறியவாற்றான் எய்திநின்றன வற்றை எழுத்து நிலைமைப்படுத்து அசைநிலையும் வேண்டினமையின்.

(இ - ள்.) அளபெடை மேற்கூறிய இயற்சீர் நிலைமையே யன்றி ஓரசையாய் நிற்றலும் உரித்து (எ - று).[1]

உம்மையாற் சீர்நிலையெய்தலே வலியுடைத்து.[2]

"நிலை"

யென்றதனான் எழுத்து நிலைமையும் நேர்ந்தானாம்; என்னை? அசையது நிலையைக் குறிலும் நெடிலுங் குறிலிணையுமென எழுத்தான் வகுத்தமையின்[3] அவை மேற்கூறிய ஈரசைச்சீர் பதினாறனுள்ளும் என்ன சீர்ப்பாற்பட்டன வெனின் ஆசிரியவுரிச்சீ ராறும் போதுபூ விறகுதீ என்னும் இரண்டியற்சீரும் ஒழித்து ஒழிந்தவியற்சீர் எட்டுமாம். அங்ஙனமாதல் ஒருமொழியகத்தே உடையவென்பது. 'ஆஅ' எனத் தேமாவாயிற்று. 'கடாஅ' (குறள்- 585) எனப் புளிமாவாயிற்று. யாஅது என ஈரெழுத்து ஞாயிறாம்; என்னை? கடாஅ என்புழி அளபெடையதாகாரம்

---

1. உயிரளபெடை நெடிலும் குறிலும் ஆகிய ஈரெழுத்தாய்ச்சீராந்தன்மையின் நீங்கி ஓரெழுத்தாய் அசையாம் நிலைமையினைப் பெறுதலும் உண்டு என்பதாம்.

2. 'அசைநிலையாதலும்' என்புழி உம்மையை எதிர்மறையும்மையாகக்-கொண்டு அசைநிலையாதலின்றிச் சீர்நிலையெய்துதலே வலியுடைத்து என்றார்.

3. நிலையென்றதனால், உயிரளபெடை நெடிலும் குறிலும் என எழுத்தாம் நிலையினை ஒருமொழியகத்தே பெற்று வருதலும் ஆசிரியர் உடன்பட்டாராயிற்று.

பிரித்துக் குறினெடி லாயினாற்போல ஆகாரத்துப் பின்னின்ற அகரமுங் குற்றுகரமுங் குறிலிணையெனப்பட்டமையின் என்பது[1]. (317) ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். 'ஆஅழி' என்பது மூவெழுத்துப் பாதிரியாம். 'வடாஅ' என மூவெழுத்துப் புளிமாவாம். 'படா அகை' என நாலெழுத்துக் கணவிரியாம். 'ஆஅங்கு' என ஈரெழுத்துப் போரேறாம். 'ஆஅவது' மூவெழுத்துப் பூமருது. 'புகாஅர்த்து' என்பது கடியாறு. 'விராஅயது' என்பது மழகளிறு. இவை ஓரோர் சொல்லாகிநின்று எட்டியற் சீரானும் அளபெடை வந்தவாறு.

"தேஎந் தேரும் பூஉம் புறவிற்
போஒரி துள்ளுஞ் சோஒரி நண்ணிக்
குராஅம் பிணையல் விராஅங் குஞ்சிக்
குடாஅரிக் கோவலர் அடாஅரின் வைத்த
காஎனெறிச் சென்றனர் கொல்லோ
மேஎனெறிச் சென்று பொருள்படைப் போரே"

என இதனுள், இயலசை மயக்கமாகிய இயற்சீர் நான்குமாகி அளபெடை வந்தன. ஒழிந்த இயற்சீரும் மேல் நான்கனுள் அடங்குமாகலின் அளபெடை நான்கென்பாருமுளர். அவை தனிநிலை முதனிலை இடைநிலை இறுதிநிலை எனப்படுமென்ப[2] ஒழிந்த இயற்சீரான் அளபெடைவந்த செய்யுளுங் கண்டுகொள்க.

'வாஅழ்க' என மூவசைச்சீரான் வரும் அளபெடை மொழியுமுள. மற்றுப் 'படாஅகை' யெனவும் ஆஅழியெனவும் இவை மூவசைச் சீராகாவோவெனின், ஆகா;

"தனிக்குறின் முதலசை மொழிசிதைத் தாகாது"
(தொல் செய். 6)

என்புழி, முதற்கணல்லது விட்டிசைத்தல் நேர்ந்திலனாகலானுங் குறிலிணைந்தனவும் குறினெடிலிணைந்தனவும் நிரையாமென்றானாகலானுமென்பது; என்றார்க்குத்,

1. 'கடாஅ' என்புழி அளபெடையது ஆகாரம் முன்னுள்ள 'க' வுடன் சேர்ந்து 'கடா' எனக்குறினெடிலாயினாற்போல 'யாஅது' என்புழி யகரஆகாரத்துப்பின்னின்ற குறிலும் குற்றுகரமும் இணைந்து குறிலிணையெனப்பட்டன.

2. தனிநிலை - பாஅ - தேமா
முதனிலை - சோஒரி - பாதிரி
இடைநிலை - குடோஅரி - கணவிரி
இறுதிநிலை - குராஅ - புளிமா.

"தூஉமணி கெழூஉமணி"

என, நேர்நிரைப்பின் முற்றுகரம் வந்து நேர்பும் நிரைபுமா-மாகலின் அவற்றையும் ஆசிரியவுரிச்சீரென்னாமோவெனின், என்னாதவாறு: அங்ஙனம் அளபெடையான் நேர்பசை நிரைபசை கொள்வாரும் அளபெழுந்த குற்றெழுத்து வருமெழுத்தொடு கூட்டி,

"முதனிலை யளபெடை நேர்நே ரியற்றே
யிடைநிலை யளபெடை நிரைநே ரியற்றே"

என்பவாகலின், அளபெழுந்த மொழி நேர்பும் நிரைபுமாகா வென்பது.[1] அவ்வாறாயினும் ஓரோர்கால் அளபெடையுகரத் தைக்கூட்டி நேர்பு நிரைபுமென்னாமோ, காசு பிறப்பென்பன தேமா புளிமா வாயினவாறுபோல வெனின், அவை தேமா புளிமா வாகாமையுந் தளைவகையொக்குமத்துணை யென்பதூஉம் மேற் கூறப்பட்டதாகலின், அவைபோல இவையும் நேர்பசை நிரைபசை யாகாதென்பது.[2] அல்லதூஉம்,

"நீட்டம் வேண்டி னவ்வள புடைய"
(தொல்-எழுத்-நூன். 6)

எனப்பட்டது அளபெடையாகலானும்,

"நாணுத்தளை" (அகம். 29)

என்பதுபோலாது, இயல்பாக வந்து இயைந்த எழுத்தாகலானும் அவைபோல அளபெடை,

"இருவகை யுகரமொ டியைந்தவை வந்தன" (316)

1. தூஉமணி, கெழூஉமணி என்புழி அளபெடையாய் வந்த உகரத்தை முறையே நேரின்பின்னும் நிரையின் பின்னும் வந்த உகரமாக முறையே 'தூஉ' நேர்பு எனவும் 'கெழூஉ' நிரைபு எனவுங்கொண்டு தூஉமணி 'நேர்புநிரை' எனவும், 'கெழூஉமணி' 'நிரைபுநிரை' எனவும் ஆசிரியவுரிச்சீராகக்கொள்ளுதல் கூடாதா? என்பது வினா. தூஉ என்னும் முதனிலை அளபெடை நேர்நேர் எனவும் கெழூஉ என்னும் இடைநிலையளபெடை நிரைநேர் எனவும் கொள்ளப்-படும் என்பராதலின் அளபெழுந்த உகரம் நேர்பு நிரைபுஎன்னும் அசைகட்கு உறுப்பு ஆகா என்பது விடை.

2. காசு, பிறப்பு என்பன தளைவகையால் முறையே தேமா, புளிமா என்பவற்றையொக்கும் என்ற அத்துணையல்லது அவை தேமா புளிமா ஆகா. அவைபோலவே தூஉ, கெழூஉ என்றாங்குவரும் அளபெடையுகரமும் நேர்பசை நிரைபசையாதலில்லை.

வெனப்படாமையானும், நேர்பசை நிரைபசை யாகாவென்பது;[1] அற்றன்றியும், அவை நேர்பசை நிரைபசையாதல் ஒருவகை யான் நேர்ந்தானெனினும் அவை நாஉுத்தளை விரவுக்கொடி யென்னுஞ் சீராதற்கு இழுக்கென்னையெனவும்,

''நிரையிறு காலையும் ஆசிரிய வுரிச்சீர்''

என ஓதி, ஆசிரியவுரிச்சீரெட்டென்பான்போல விதந்தோதிப் பயந்ததென்னை யெனவுங் கூறி மறுக்க.[2]

இனி ஒருரை :

''தூஉமணி கெழூஉமணி''

என்பன, அளபெடை அசைநிலையாகியும் ஆகாதும் வருதலின் வெண்சீர்க்கும் இருநிலைமை கோடற்கென்ப. அது நீடுகொடி குளிறுபுலி என்பனவற்றிற்கும் ஒக்குமாதலானும்,

''அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்துங்கால்''

அங்ஙனம் அசையாகாமையானும் அது பொருந்தாதென்பது.[3] இங்ஙனஞ் சீர்நிலையெய்திநின்ற அளபெடைகளெல்லாம் வழக் கிற்குஞ் செய்யுட்கும் பொதுவாயினவுஞ் செய்யுட்கே உரியவாகிச் செய்யுள் செய்யும் புலவராற் செய்துகொள்ளப்படுவனவுமென இருவகைய. அவ்விருதிறத்தவும்,

"நீட்டம் வேண்டி னவ்வள புடைய" (தொல் - எழுத்து. 6)

---

1. நெடில் மூன்று மாத்திரையாய் நீண்டொலித்தல் வேண்டிக் கொள்ளப்பட்டது அளபெடை. 'நாஉுத்தளை' என்பதுபோலப் புணர்ச்சி விகாரத்தாலன்றி இயல்பாகவந்த எழுத்து அளபெடை. நிலைமொழித்தொழிலாகிய உகரம் பெற்றன அளபெடை எனப்படாமையின் நேர்பு நிரைபு என்னும் அசைகட்கு 'தூஉ' 'கெழூஉ' எனவரும் அளபெடை உறுப்பாதலில்லை என்பதாம்.

2. இத்தொடரில் பேராசிரியர் குறித்தபொருள் இதுவென விளங்கவில்லை.

3. இனி, தூஉமணி, கெழூஉமணி என்பவற்றிற்கு அளபெடையை அசைநிலையாகக்கொண்டு நேர்நிரை, நிரைநிரை, என ஈரசைச்சீராகவும், அளபெடையை அசைநிலைமை யாக்காது நேர்நிரைநேர், நிரைநிரைநேர் என வெண்சீராகவும் கொள்ளும் இருநிலைமையும் உண்டென்பர். இங்ஙனம் எழுத்தெண்ணப்படுதலும் படாமையும் நீடுகொடி குளிறுபுலி என்புழி இருவகையுகரத்திற்கும் ஒக்குமாதலானும் அசையுஞ்சீரும் இசையொடு சேர்த்துங்கால் அங்ஙனம் அசைநிலையாகாமையானும் ஓரிடத்திற்பயின்ற அளபெடைக்கே சீர்நிலையெய்தலும் அசைநிலையாதலுமாகிய இரு நிலைமையும் உண்டென்றல் பொருந்தாது என்பதாம்.

என்னும் இலக்கணத்துட்பட்டு அடங்கின.[1]

இனி, அவற்றுள் வழக்குக்குஞ் செய்யுட்கும் பொதுவாகிய தனை இயற்கையளபெடையென்றுஞ் செய்யுட்குப் புலவர்செய்து கொண்டதனைச் செயற்கையளபெடை யென்றும் பெயரிட்டு வழங்கப்படும். அவ்விரண்டனுள்ளும் ஈண்டு,

''அளபெடை அசைநிலை யாகலும் உரித்''

தெனப்பட்டது இயற்கை யளபெடையென்று பெயரிட்டு வழங் கப்படும். செயற்கையளபெடை சீர்நிலையாதல் செய்யுட்கே யுரியவாறுபோல இயற்கையளபெடை அசைநிலையாகலுஞ் செய்யுட்கே யுரியதென்பது.[2]

ஆகலுமுரித்தென்ற உம்மையான் அவையிரண்டானும் எவ்வாற்றானும் அசைநிலைப்படாது புணர்ச்சிவகையான் வந்த அளபெடைக்கண்ணும் பொருள்புலப்பாட்டிற்கு உரிய வாகச் செய்யுள் செய்யுமிடத்தும் அவ்வா றசைநிலையாக்கப் படுவதென்றவாறு.

உதாரணம்:

''பலாஅக்கோட்டுத் தீங்கனிமேற் பாய்ந்தாடு கடுவன்''
எனப் 'பலாஅக்கோ' டென்புழிக்,

''குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கு
மறியத் தோன்று மகரக் கிளவி'' (தொல் எழுத்-உயிர். 24)

எனப் பெற்ற அகரமுண்டன்றே? அதுவும் அளபெடையெனப்-படும். அதனைப் பலாஅவென்புழிப் புளிமாவென்னுஞ் சீராக அலகு வையாது நிரையசை நிலைமைத்தேயாக வைக்கப்படு மென்பது.

---

1. சீர்நிலையெய்திய அளபெடைகள் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது வாயினவும் செய்யுட்கேயுரியவாகிச் செய்யுள் செய்யும் புலவராற் செய்து-கொள்ளப்பட்டனவும் என இருவகைப்படும். இவ்விருவகையளபெடைகளும் 'நீட்டம் வேண்டினவ்வளபுடைய கூட்டியெழூஉதல்' என்னும் உயிரளபெடையிலக் கணத்துட்பட்டு அடங்குவனவாம்.

2. வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொதுவாகிவரும் அளபெடை இயற்கையள பெடை யெனப்படும். செய்யுட்குப் புலவர் செய்துகொண்ட அளபெடை செயற்கையளபெடை எனப்படும். அவ்விரண்டினுள்ளும் 'அசைநிலையாகலும் உரித்தே' எனப்பட்டது, இயற்கையளபெடை எனப்பெயரிட்டு வழங்கப்படும். செயற்கையளபெடை சீர்நிலையாதல் செய்யுட்கேயுரியவாதல் போன்று இயற்கை-அளபெடை அசைநிலையாதலும், செய்யுட்கேயுரியதாகும்.

"நிலம்பாஅய்ப் பாஅய்ப் பட்டன்று நீலமா மென்றோட்
கலம்போஒய்ப் போஒய்க் கெளவை தரும்"
(யா. வி. ப. 45, 347, 417)

என்புழிப், போஒய்ப் போஒயெனச் சேய்மைக்குறிப்புப்படச் செய்யுள் செய்தவழியும் அளபெடை அசைநிலையாயிற்று.[1] இனி, இவற்றை விளியும் பண்டமாற்றும் நாவல் கூற்றும் முதலாயவற்றுள் வருமென்பாருமுளர். அங்ஙனம் வந்தது **பிற்காலத்துச் செய்யுளென்ப.** அல்லதூஉம் அங்ஙனம் வரையறைப்படாமையானும், நாம் முன்னர்க் காட்டினவை ஆண்டு அவற்றுள் அடங்காமையானும் அவ்வாறும் இகந்து கூறானென்பதூஉம் படும்.[2]

"உப்போஒ வெனவுரைத்து மீள்வா ளொளிமுறுவல்"
(யா. வி. ப. 42)

எனப் பண்டமாற்றின்கண் வந்ததெனக் காட்டுப. பிறவும் இவ்வாறு வருவன அறிந்து அசைநிலைப்பாற்படுக்க என்றார்க்கு, இவை செய்யுளுள் தம்மோசை சிதையாவாயின் அலகிருக்கையுள் அழித்துப் பயந்ததென்னையெனின், அஃதன்றே இதனை எழுத்து நிலைப்படுமென்றற்குக் காரணமென்பது.[3] அஃதேற், செய்யுளின் ஓசையை அழிக்கவமையும் பிறவெனின், அற்றன்று; அவ்வோசையைச் செய்யுட்கண்ணே அழிப்பது சந்தியிலக்கணத்தின் வழீஇயிற்றாம், இனிப் பிறவற்றுக்கண்ணும் அளபெடையைச் சிதைத்துச் சொல்லின் அச்செய்யுளுட் கருதிய பொருண்மை விளங்காதாம்.

---

1. 'ஆகலும் உரித்து' என்ற உம்மை எதிர்மறையாதலின் அளபெடை எவ்விடத்தும் அசைநிலையாக்கப்படாது. 'பலாஅக் கோடு' என்றாற்போன்று புணர்ச்சி வகையால் வந்த அளபெடையும் 'கலம்போஒய்ப்போஒய்க் கெளவை-தரும்' எனச் சேய்மைக்குறிப்புப் புலப்படுமாறு பொருள் புலப்பாட்டிற்குரிய வகையில் வந்த அளபெடையும் அசைநிலையாகும் என்பதாம்.

2. விளி, பண்டமாற்று, நாவல்கூற்று முதலியன அளபெடைக்குரிய மூவளபிசைத்தல் என்னும் ஓசைவரையறையினைக் கடந்தனவாதலானும் முன்னர்க்காட்டிய அளபெடைவகைகளுள் அவையடங்காமையானும் அவ்வாறு அளபெடை யோசையைக் கடந்து செய்யுள் செய்தலை ஆசிரியர் உடன்-பட்டுரையார் என்பதாம்.

3. 'உப்போஒ வெனவுரைத்து' என்பது பண்டமாற்றின்கண் வந்தது என்பார்க்கு இவை செய்யுளுள் தம்மோசை சிதையாவாயின் அசைநிலையாக அழித்துப்பயனில்லை. ஆகவே இவ்வளபெடை அசைநிலைப்பாற்படாது எழுத்து-நிலைப்படுமென்றற்கு உதாரணமாயிற்று.

அது நோக்கிச் செய்யுளின்பத்தைச் சிதையாது ஈண்டு நாம் வேண்டப்பட்ட அலகிருக்கைக்கட் சிதைத்துக் கொள்க என்றா மென்பது.[1] (௧௭)

**நச்சினார்க்கினியம்:**

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

(இ - ள்.) எழுத்ததிகாரத்து "நெட்டெழுத் தேழேயோ ரெழுத்தொரு மொழி" (மொழி ௧௦)

என்றதனாற் சொல்லாந்தன்மையெய்திய அளபெடை ஈண்டு ஈரசைச்சீர் கூறிய அதிகாரத்தானும் இயற்சீராந் தன்மையெய்திற்று, அதனையே எழுத்துநிலைமைப் படுத்து அசைநிலையும் வேண்டலின். அளபெடை.........முரித்தே எ - து அளபெடை மேற்கூறிய இயற்சீர்நிலைமை பெறுதலேயன்றி ஓரசையாய் நிற்றலுமுரித்து எ - று.

உம்மையாற் சீர்நிலையாதலே வலியுடைத்து. நிலையென்ற தனால் எழுத்துநிலையும் நேர்ந்தார். அங்ஙனம் சீர்நிலை பெறுங்கால் முற்கூறிய ஈரசைச்சீர் பதினாறனுள் ஆசிரியவுரிச்சீ ராறும், போதுபூ விறகுதீ என்னுமிரண்டியற்சீரும் ஒழித்து ஒழிந்த நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை, நேர்நேர்பு, நேர்நிரைபு, நிரைநேர்பு, நிரைநிரைபு என்னும் இயற்சீர் எட்டு-மாம் அங்ஙனமாதல் ஒருமொழியகத்தேயுடைய என்பது. ஆஅ எனத் தேமாவாயிற்று. கடாஅ எனப் புளிமாவாயிற்று. யாஅது என ஈரெழுத்து ஞாயிறு ஆயிற்று;[2] என்னை? கடாஅ என்புழி அளபெடையது ஆகாரம் பிரித்துக் குறினெடிலாயினாற் போல (யகர)ஆகாரத்துப் பின்னின்ற அகரமுங் குற்றுகரமுங் குறிலிணை-யெனப்பட்டமையினென்பது. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும்.

---

1. அளபெடையோசை மிக்குவருமாயின் செய்யுளின் அவ்வோசையைக் குறைத்து விடலாமேயென்றால் அவ்வோசையைக்குறைப்பது புணர்ச்சியிலக்-கணத்தின் வழுவியதாகும். பிறவிடங்களிலும் அளபெடையைச் சிதைத்துக்கூறின் செய்யுளுட்கருதிய பொருண்மை விளங்காது. அதுநோக்கியே செய்யுளின் இன்னோசையைச்சிதையாது அளபெடையை அலகிடும் நிலைமைக்கண் அசை-நிலையாக்குக என்றார் தொல்காப்பியனார் என்பதாம்.

2. ''யாஅது'' என்புழி, 'யா' விற்குப் பின்னின்ற அளபெடை அகரமும் அதன்பின் நின்ற குற்றுகரமும் இணைந்து குறிலிணை எனப்பட்டமை யின் 'யாஅது' என்பது ஈரெழுத்து 'ஞாயிறு' ஆயிற்று.

ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரி. வடாஅது என்பது மூவெழுத்துக் கணவிரியாம். படாஅகையென நாலெழுத்துக் கணவிரியாம்.[1] ஆஅங்கு என ஈரெழுத்துப் போரேறாம். ஆஅவது என மூவெழுத்துப் பூமருது. புகாஅர்த்து என்பது கடியாறாம். பராஅயது என்பது மழகளிறாம். இவை ஒரே சொல்லாகி நின்று எட்டியற்சீரானும் அளபெடுத்தன.

"தேஎந் தேரும் பூஉம் புறவிற்
போஒரி துள்ளுஞ் சோஒரி நண்ணிக்
குராஅம் பிணையல் விராஅங் குஞ்சிக்
குடாஅரிக் கோவல ரடாஅரின் வைத்த
காஎனெறிச் சென்றனர் கொல்லோ
மேஎனெறிச் சென்று பொருள்படைப் போரே"

இதனுள் இயலசை மயங்கிய இயற்சீர் நான்கும் வந்தன. ஒழிந்த நான்கும் இவற்றுள் அடங்கும். இங்ஙனம் சீர்நிலையெய்திய வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாயது இயற்கையளபெடை என்றும், செய்யுட்குப் புலவர் ஓசை கருதிச் செய்து கொண்டது செயற்கையளபெடை என்றுங்கொள்க;[2] இவ்விதி கட்டளை யடிக்கென்றுணர்க. இவை சீர்நிலையடிக்காயிற் றனிநிலை, முதனிலை, இடைநிலை, இறுதிநிலை எனக்கொள்வர்.

"ஆஅ வளிய வலவன்"

எனவும்,

"ஏஎர் சிதைய வழாஅ லெல்லாநின்
சேஎயரி சிந்திய கண்"

எனவுமிவை நேர்நேரும் நிரைநேருமாக அலகிடுப. இனி ஓரசையாங்காற் செயற்கையளபெடை சீர்நிலையாதல் செய்யுட்-

1. "'வடாஅது'' என்பது மூவெழுத்துக் கணவிரியாம், 'படாஅகை' என நாலெழுத்துக் கணவிரியாம்'' என இத்தொடரைத் திருத்திப்படிக்க.
2. இயற்கையளபெடை என்பது, சீர்நிலையெய்தி வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாயது. செயற்கையளபெடை என்பது செய்யுட்கு ஓசை கருதிப் புலவர்களாற் செய்து கொள்ளப்படுவது. அளபெடை அசைநிலையாகும் என்ற இவ்விதி எழுத்தெண்ணி வகுக்கப்பெறும் கட்டளையடிக்குரியதாகும். இவ்வளபெடை சீர்நிலையடிக்காயின் தனி நிலை, முதனிலை, இடைநிலை, இறுதிநிலை என நால்வகைப்படுத்-துரைக்கப்படும். செயற்கையளபெடை ஓரசையாமிடத்துச் செய்யுட்-கேயுரியவாய்வரும். அது போன்றே இயற்கையளபெடை அசைநிலை-யாதல் செய்யுட்கேயுரியதாகும்.

கேயுரியவாதல்போல, இயற்கையளபெடை அசைநிலையாதல் செய்யுட்கேயுரியவாதலும், புணர்ச்சிவகையான் எழுத்துப் பேறாகிய அளபெடைகள் அசைநிலையாதலும், பொருள் புலப்பாட்டிற்குப் புலவர் செய்த செயற்கையளபெடையுட் சிலவும் அசைநிலையாதலுங்கொள்க.[1]

உ-ம். "உப்போஒ வெனவுரைத்து மீள்வாள்"

என்புழிப் பண்டமாற்றின்கட் பகரவோகாரத்திற்குள்ள ஓரலகே பெறுதலின் ஓரசையாயிற்று.

"நூறோஒ நூறு"

என்பதும் அது. இவை இயற்கையளபெடை யசைநிலையாயின.

"பலாஅக்கோட்டுத் தீங்கனிமேற் பாய்ந்த கடுவன்"

என்புழிப் 'பலாஅ' எனப் புளிமாவாகாது ஓரசையாய்க் கோடு என்பதுங் கூட்டிக் கணவிரியாக அலகு பெறும்.

"குறியதன் முன்னரும்" (எழுத்-உயிர்மயங்-௨௬)

என்னுஞ் சூத்திரத்தாற் பெற்ற அகரமும் அளபெடைபோல் அசைநிலையாயிற்று.[2]

"நிலம் பாஅய்ப்பாஅய்ப் பட்டன்று நீணிலா மென்றோள்
கலம் போஒய்ப்போஒய்க் கெளவை செய"

எனப் போஒய்ப்போஒய் எனச் செய்கைக் குறிப்புப் புலப்படச் செய்யுள் செய்தவழியும் அசைநிலையாயிற்று இவை ஓசை சிதைத்தாற் செய்யுளின்பஞ் சிதையுமென்று அலகிருக்கைக்கட் சிதைத்தார்.[3] இவை அலகுபெறாவெனவே, நெடிலின்றன்மையேயாயிற்று. இதனானே குற்றிகரம்போல் எழுத்தாந்தன்மையும் பெற்றாம். இனி, வாஅழ்க எனவும், தூஉமணி எனவும் மூவசைச்

---

1. புணர்ச்சி வகையால் எழுத்துப் பேறாகிய அளபெடை என்பது, பலா + கோடு - பலாஅக்கோடு என்றாற் போன்று புணர்ச்சியில் அளபெடையெழுத்துப் பெற்று வருவது.

2. பொருள் புலப்பாட்டிற்கெனப் புலவர்கள் செய்து கொண்ட அளபெடை என்பது, 'பாஅய்ப்பாஅய்', 'போஒய்ப்போஒய்' என்றாற்போன்று செய்கைத்திறம் புலப்படப் பொருள் புலப்பாடு குறித்து வருவது.

3. இவை ஓசை குறைத்தாற் செய்யுளின்பம் சிதையுமென்று அளபெடையோசையைக் குறைக்காமல், அலகிடுங்கால் எழுத்தெண்ணப்பெறா என எழுத்தாக எண்ணுதலைவிட்டும் குறைத்தார்.

சீரானும் வருதல் உம்மையாற் சீர்நிலை யெய்துமென்றதனாற் பெறுதும். அவை வெண்சீரும் வஞ்சிச்சீருமாம்.

**ஆய்வுரை :**

இது மேல் எழுத்ததிகாரத்தில் இயற்சீராம் தன்மை பெறும் எனக் கூறிய உயிரளபெடையை அசைநிலையாந் தன்மையும் பெறும் என்றலின் எய்தியதன் மேற் சிறப்புவிதி உணர்த்து-கின்றது.

(இ - ள்) உயிரளபெடை மேற்கூறிய இயற்சீராந்தன்மை-யைப் பெற்று வருதலேயன்றி அசையாந் தன்மையைப் பெற்று நிற்றலும் உரித்து எ - று.

உ - ம் : ''உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு''

என்புழி, 'உறாஅர்க்' என்பது 'புளிமா' எனச் சீர்நிலை எய்தி அலகு பெற்றும்,

''உப்போஓ வெனவுரைத்து மீள்வா ளொளிமுறுவற்
கொப்போநீர் வேலி யுலகு''

என்புழி 'உப்போஓ' என அசைநிலையெய்தி அலகு பெறாதும் உயிரளபெடை வந்தன.

அளபெடைகளெல்லாம் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது வாயினவும், செய்யுட்கேயுரியவாகிச் செய்யுள் செய்யும் புலவராற் செய்து கொள்ளப் படுவனவும் என இருவகைப்படும். அவற்றுள் வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாயின இயற்கை யளபெடை எனப்படும். செய்யுட்குப் புலவர் செய்து கொண்ட அளபெடை செயற்கையளபெடை எனப்படும். அவ்விரண்ட-னுள்ளும் 'அளபெடை யசைநிலையாகலு முரித்து' எனப்பட்டது இயற்கையளபெடையாகும். செய்யுட்கெனச் செய்து கொள்ளப் பட்ட செயற்கையளபெடை சீர்நிலையெய்தி அலகுபெறும். அதுபோல இயற்கையளபெடை அசைநிலையாகலும் செய்யுட்கே யுரியது என்பது பேராசிரியர் கருத்தாகும்.

**கஎ ஒற்றளபெடுப்பினும் அற்றென மொழிப.**

**இளம்பூரணம் :**

என்—எனின். ஒற்றளபெடைக் குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒற்று அளபெடுத்துவரினும் அசை நிலையாகலும் உரித்து என்றவாறு.

மாட்டேற்று வகையான் ஆகாமை பெரும்பான்மை.[1]

உதாரணம்

"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்"

(மலைபடு. ௩௫௨)

என வரும். (௧௭)

**பேராசிரியம் :**

இஃது, ஒற்றளபெடையும் உயிரளபெடைபோலச் சீர்நிலை யாதலேயன்றி அசைநிலையாகலும் உரித்தென மாட்டெறிந்த மையின் எய்தாத தெய்துவித்தது. இதனை அசைப்படுத்து எழுத்துநிலையும் வேண்டுகின்றமையின் வழுவமைத்ததூஉமாம்.

(இ-ள்.) ஒற்றளபெடுத்தாலும் உயிரளபெடைபோலச் சீர் நிலையெய்தலும் ஓரசையாய் நிற்றலும் உரித்து (எ-று.)

"ஒற்றள பெடுப்பினும்"

எனவே, ஒற்றுக்கள் அளபெடுத்து நிற்றற்கு உரியன; உரிய வழி எல்லாம் வரையாது கொள்ளப்படும். அவை வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் இருவாற்றான் ஒரு சொற்கு உறுப்பாய்நின்ற ஒற்றே அளபெழினும் பின் தோன்றிக் கொள்ளப்பட்ட ஒற்று அளபெழினுமென இருவகைப்படும்.

"அஃகிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கும்"

(தொல். எழுத்து. 102)

என்பது சொற்குறுப்பாய் நின்றது.

"ஆனா நோயொடு கான லஃகே" (குறுந். 97)

என்பது பின்றோன்றிக் கொண்ட புள்ளியெனப்படும்.

"அற்றென மொழிப"

என்றதனான் ஒற்றளபெடையும் உயிரளபெடைபோலத் தானுந் தன்னையொற்றிய எழுத்துங்கூடி அளபெடை மொழியாகிச்

---

1. அற்று-அத்தன்மைத்து; மேற்கூறிய உயிரளபெடை போன்று ஒற்றள-பெடையும் அசைநிலையாகலும் (அலகு பெறாமையும்) உரித்து என மாட்-டெறிந்து கூறவே அசைநிலையாகாமையே (அலகுபெறுதலே) பெரும்பான்மை-யென்பதாம்.

சீர்நிலையெய்தல் பெரும்பான்மையாகலானும் அவை இயற்கை யளபெடையாகியவழி அசையாதல் சிறுபான்மை யென்பதூஉம் உயிரளபெடை முதற்கணின்ற நெட்டெழுத்துப்போல ஒற்றள பெடை முதற்கணின்ற குற்றெழுத்தும்,

"தனிக்குறின் முதலசை மொழிசிதைத் தாகாது"
(தொல். செய். 6)

என்பதனான் விலக்குண்ணாது விட்டிசையாது முதற்கணின்று நேரசையாமென்பதூஉங் கூறியவாறு. வல்லெழுத்தாறும் ரகார ழகாரமும் ஒழித்தொழிந்த பதினோரொற்றுங் குறிற்கீழுங் குறிலிணைக்கீழும் அளபெய்திநிற்கும்வழிச் சீர்நிலையாதலேயன்றி அசைநிலையாகலு முரித்துச் சிறுபான்மை யென்றவாறு.[1] அவை,

"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்" (மலைபடு. 352)

என்றவழிக்,

"கண்ண்"

என்பது சீர்நிலையாகித் தேமாவாயிற்று.

"தண்ண்ணென"

என்ற வழித் தட்பத்துச் சிறப்பு உரைத்தற்கு ணகரவொற்றினை அளபேற்றிச் செய்யுள் செய்தான். ஆண்டு அது மாசெல்சுரம் என்னும் வஞ்சியுரிச் சீராவதனை (யாகற்க)ப் பாதிரியென்னுஞ்

---

1. வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் ஒருசொற்கு உறுப்பாய் நின்ற ஒற்று அளபெழுதலும் பின்தோற்றிக் கொள்ளப்பட்ட ஒற்று அளபெழுதலும் என ஒற்றளபெடை இருவகைப்படும். 'அஃது' என்புழி ஆய்தம் சொற்குறுப்பாய்-நின்றது, 'கானலதே' எனற்பாலது 'கானலஃதே' என்புழி ஆய்தம் பின்தோன்றிக் கொண்ட ஒற்றெனப்படும்.

உயிரளபெடைபோன்றே ஒற்றளபெடையும் தானும் ஒற்றாய்நின்ற எழுத்துங் கூடி அளபெடை மொழியாகிச் சீர்நிலை யெய்தல் பெரும்பான்மை-யென்பதும், அவை இயற்கையளபெடையாயவழி அசைநிலையாதல்சிறுபான்மை யென்பதும், உயிரளபெடையின் முதற்கண்நின்ற நெட்டெழுத்துப் பிரிந்து தனியசையாதல் போலவே ஒற்றளபெடையின் முதற்கண் நின்ற குற்றெழுத்தும் விட்டிசையாத நிலையிலும் தனியசையாம் என்பதும், மெய்களுள் வல்லெழுத்-தாறும் ரகாரமும் ழகாரமும் நீங்கலாகவுள்ள ஏனைய மெய்களும் ஆய்தமும் ஆகிய பதினோரெழுத்தும் குறிற்கீழும் குறிலிணைக்கீழும் அளபெடுத்துநிற்கும் என்பதும் அவ்வாறு அளபெய்திநிற்கும் நிலையில் அவை சீர்நிலையாதேலேயன்றிச் சிறுபான்மை அசைநிலையாதலும் உரியவென்பதும் 'ஒற்றளபெடையும் அற்று' என்னும் மாட்டேற்றால் உணரப்படும்.

சீரேயாமென வழுவமைத்தவாறு.[1] குற்றுகரங் குறிலோடுகூடி நிரையாவதனைக் குறிலிணையெனக் குற்றெழுத்தாக்கி ஓதினான். அதுபோல ஒற்றளபெடையும் ஒரு மாத்திரையாவதனைக் குற்றெழுத்தென் றோதானோவெனின், அங்ஙனம் ஓதின் அவ்வள பெடை குறிலாகித் தன்முன் வந்த குறிலோடும் பின்வந்த குறிலோடும் நெடிலோடுங் கூடி நிரையசையாகுவதாவான் செல்லுமென மறுக்க.[2]

மற்று,

“அரங்ங்கம்”

என்புழிப் புலிசெல்வாயென மூவசைச்சீருமாமாகலின் இதனை மூவசைச்சீரின்பின் வைக்கவெனின், அற்றன்று; அவ்விரண்டற்கும் பொதுவகையாக இடைவைத்தானென்பது. அல்லதூஉம் ஈரசைச் சீராதலே பெரும்பான்மையாதலின் ஈண்டு ஈரசைச் சீர்ப்பின் வைத்தான் இவ்விரண்டளபெடையினையுமென்பது.

மற்று, வழக்கினுள் வரும் இயற்கையளபெடையன்றே அசைநிலையாவன, ஒற்றளபெடை வழக்கினுள் வருமோவெனின், அவையுஞ் சிறுபான்மை வழக்கினுள் வருமென்பது. அவை,

“சுள்ள்ளென்றது” “புள்ள்ளென்றது” “கள்ள்ளென்றது”

“துண்ண்ணென்றது,” “திண்ண்ணென்றது”

என வரும். பிறவு மன்ன.

இவை, செய்யுளகத்தல்லது பரவைவழக்கினுள் வாரா வென்பாரு முளர். அவரறியார்; செய்யுட்குப் புலவர் செய்து

---

1. ‘கண்ண் தண்ண்ணெனக் கண்டுங்கேட்டும், எனவரும் மலைபடுகடாத்து அடியுள் கண்ண்-தேமா எனச் சீர்நிலை யெய்திற்று. தண்ண்ணென-பாதிரி என அசைநிலை யெய்திற்று. பரவைவழக்கு-உலகவழக்கு. செய்யுட்குப் புலவர்கள் செய்துகொண்ட அளபெடை பின்னர் அசைநிலையாதற்குக் காரணம் அவ்வள-பெடை உலக வழக்கிலும் பயிலுதலேயாம்.

2. குற்றுகரம் குறிலொடுங்கூடி நிரையாவதனைக் குறிலிணையெனக்-குற்றெழுத்தாக்கிக் கூறியவாறுபோன்று ஒற்றளபெடை ஒரு மாத்திரையாவ-தனைக் குற்றெழுத்தெனக் கூறின் அவ்வளபெடை குறிலெனப்பட்டுப் பின்வரும் குறிலோடும் நெடிலோடுங் கூடி நிரையசை யாகுமாதலால் அங்ஙனம் ஆகாமைப் பொருட்டு அதனைக்குற்றெழுத்தெனக் கூறிற்றிலர் ஆசிரியர்.

‘அரங்ங்கம்’ எனக் குறிலிணைக்கீழ்வந்த ஒற்றளபெடை ‘புலிசெல்வாய், என மூவசைச்சீருமாம் ஆதலின் இவ்வளபெடையினை ஈரசைச்சீர்க்கும் மூவசைச்சீர்க்கும் இடைவைத்தார் ஆசிரியர்.

கொண்ட அளபெடை பின்னர் அசைநிலையாதற்கு என்னை காரணமென மறுக்க. மற்று

"அளபெடை யசைநிலை யாகலு முரித்தே"
(தொல். செய். 17)

என வரையாது கூறவே இச் சூத்திரமும் அடங்குமாகலின் இது மிகையாம்பிறவெனின், அற்றன்று; எழுத்தோத்தினுள் ஒற்றள பெடுக்குமென்பது கூறாமையின் வேறு கூறினான். அல்லதூஉம் உயிரளபெடையின் வேறுபட்டதோர் இலக்கணமுடைமையின் இதனை வேறு கூறினானென்பது. என்னை ?

"பனா அட்டு"

என்றவழி உயிரளபெடை கடியாறு என்னுஞ் சீராயவாறுபோ லாகாது,

"கொங்கு குரங்கு எஃஃகு மின்னு"

என அளபெழுந்த இருவகை யுகரவீற்றுச் சொற்கள் போரேறு கடியாறு என்னுஞ் சீரானும் ஞாயிறு வலியது என்னுஞ் சீரானு மாகாது இருவகை உகரமொடு இயைபின்றி வருதலானும் அவை வண்டு வரகு எனவும் உரியசைச்சீர்ப்பாற்பட்டு அசையாகு மாதலானும் இருவகை யுகரமோடியையாதவழிக்.

"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்
(மலைபடு. 352)

எனவுங்,

"கஃஃ றென்னுங் கல்லதர்"

எனவுஞ் சீர்நிலை பெறுதலானுமென்பது. எனவே, இயற்கையுயி ரளபெடைபோலச் செயற்கை யொற்றளபெடையும் ஓரோவழி ஓசை சிதைக்கப்படாதாயிற்று. இதனானே உயிரளபெடை போல ஒற்றளபெடை வருகின்ற எழுத்தோடு கூடி அசையாகா தென்பதாம். ஈர்க்கு பீர்க்கு என ஈரொற்று நின்றவழி வேறோ ரசை யாகாதவாறுபோல ஒற்றளபெடையும் ஓரோவழி அசை நிலை பெறாதென்பதூஉங் கூறினானாம்.

இனி, இயற்கை யொற்றளபெடை சிறுபான்மை வருமாத லின், இஃது அசைநிலையாதலே பெரும்பான்மையாதனோக்கி

மாட்டெறிந்தான் எனவும் அமையுமெனக் கொள்க.[1] (கஅ)

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஒற்றளபெடையும் சீர்நிலையாதலேயன்றி அசை-நிலையுமாமென எய்தாததெய்துவித்தது.

இ-ள். ஒற்......மொழிப எ-து ஒற்றளபெடுத்தாலும் உயிரள-பெடைபோலச் சீர்நிலையெய்தலும் ஓரசையாய் நிற்றலுமுரித்து. எ-று.

ஒற்றெனவே, 'ங ஞ ண ந ம ன வ ய ல ள வாய்தம்' என்னும் பதினோரொற்றுங் குறிற்கீழும் குறிலிணைக்கீழும் அளபெடுத்தல் பெறுதும்.[2] மங்ங்கலம் எனவும் அரங்ங்கம் எனவும் வரும். ஏனைய-வற்றோடும் ஒட்டுக. சீராமெனவே, ஈரசைச்சீரும் மூவசைச்சீரு-மாதல் பெறுதும். மேல் மூவகைச்சீர் கூறுதலின் இதனை ஈண்டு வைத்தார். ஓரசையாதல் சிறுபான்மை. உ-ம். 'கண்ண் தண்ண்ணெனக் கண்டும்கேட்டும்' என்புழிக் கண்ண்ணென்பது சீர்நிலையெய்தித் தேமாவாயிற்று. தண்ண்ணென என்றவழித் தட்பத்திற் சிறப்புக் கூறுதற்காக இயற்சீர்க்கண் ணகர-வொற்றினை மிகக்கொடுத்து அளபெடுத்துச் செய்யுள் செய்-தான். அது, மாசெல்சுரம் என்னும் வஞ்சிச்சீராவதனை ஆகற்க. பாதிரி என முன்னின்ற இயற்சீரேயாக என வழுவமைத்தவாறு.

---

1. எழுத்ததிகாரத்துள் ஒற்று அளபெடுக்கும் என்று கூறாமையால், 'அளபெடை யசைநிலையாகலுமுரித்தே' என்புழி இச்சூத்திரம் அடங்காது. அன்றியும் இவ்வொற்றளபெடை முற்குறித்த உயிரளபெடையின் வேறுபட்டதோர் இலக்கணமுடையது. 'பனாஅட்டு' எனவரும் உயிரளபெடையில் முன்னுள்ள நெடிலும் குறிலும் வேறுபிரிந்தும் முன்னும்பின்னுமுள்ளவற்றோடு இயைந்து அலகிடப்படுமாறு போலன்றிக் கொங்ங்கு, குரங்ங்கு, என அளபெடையாய் வரும். ஒற்றுக்களிரண்டும் இணைந்து இருவகையுகரமோடியைபின்றித் தனித்து ஓரசை-யாய் அலகிடப்படுதலும் அவையே அசைநிலையாகும்வழி வண்டு குரங்கு என உரியசைச்சீர்ப்பாற் பட்டுவருதலும் ஆகிய வேறுபாடுடையது ஒற்றளபெடை-யாகும். எனவே உயிரளபெடை போல வருகின்ற எழுத்தொடு கூடி ஒற்றள-பெடை அசையாகாதென்பதும் ''ஈர்க்கு' 'பீர்க்கு' என்புழி இரண்டொற்றுக்கள் இணைந்து நின்றவழியும் அவை அசையாகாதவாறுபோல ஒற்றளபெடையும் ஒரோவிடங்களில் அசையாம்நிலைமை பெறாது வருதலும் உண்டென்பதும் ஒற்றளபெடை சிறுபான்மையாதலின் ஒற்றளபெடை அலகுபெறாமையும் நோக்கி 'ஒற்றளபெடையும் அற்று' என மாட்டெறிந்தார் ஆசிரியர் என்பதாம்.

2. ''ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாம் குறிலிணை குறிற்கீழ் இடைகடை'' என்பது நன்னூல்.

இதுவும் ஓரசை[1] சிதையாது நிற்கவும் அலகுபெறாதெனவே எழுத்தின்றன்மை எய்திற்று. இது வழக்கிற்குஞ் செய்யுட்கும் உறுப்பாய் நின்றன அளபெழுதலும், தோற்றிக் கொண்டன அளபெழுதலுமாம். சுள்ள்ளென்றது, புள்ள்ளென்றது, நள்ள்ளென்றது, கிண்ண்ணென்றது - இவை வழக்கிற்குஞ் செய்யுட்கு-முரிய. தோற்றினது, கண்ண்ணென முற்காட்டினாம். இரு-வகை யுகரமீறாய்க் கொங்ங்கு, குரங்ங்கு, மின்ன்னு, எஃஃகு என்பன உயிரளபெடையின் வருமெழுத்தோடு கூடிப் போரேறு, கடியாறென நிற்குமாறுபோலாது வண்டு வரகு என்னும் உரி-யசைப்பாற்படுதலின் உயிரளபெடையின் வேறாக[2] வோதினார். இருவகை யுகரத்தோ டியையாதவழிக்

'கண்ண்டண்ண்ணென'
'கஃஃஃறென்னுங் கல்லதரத்தம்'

எனத் தேமாவாக அலகுபெற்றன. இனி,

'நீட்டம் வேண்டின்' (எழுத்-நூன்-௬௱)

என்னுஞ் சூத்திரத்துட்காட்டிய

"செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபும்
ஐயப்பா டின்றி யணையுமாம்—மைதீரொற்
றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு
குன்றுமேல் ஒற்றளபுங் கொள்"

என்னும் **மாபுராணச் சூத்திரத்துள்** 'மைதீரொற்று' என்றதனானே, சீர்வகையடி யோசைகெடின் ஒற்றில்லாத சொல்லிற்கோசை அவ்-வொற்றை உண்டாக்கியுநிற்குமென்றும், 'குன்றுமேலொற்றளபுங் கொள்' என்றதனானே அவ்வொற்றானும் ஓசை நிறையா-விடின் அங்ஙனம் வருவித்த ஒற்றை அளபெடுத்துங் கொள்க வென்றுங் கூறிய விதியுங்கொள்க.

---

1. 'ஓரசை' என்பதனை 'ஓசை' எனத்திருத்துக.

2. 'பனாஅட்டு' என்றவழி உயிரளபெடை வருகின்ற எழுத்தோடு கூடிக் 'கடியாறு' என்னுஞ் சீராயவாறுபோன்று 'கொங்ங்கு', 'குரங்ங்கு' என ஒற்று அளபெழுந்தவழி அவ்வளபெடை வருகின்ற எழுத்தோடு கூடி முறையே போரேறு, கடியாறு என்னும் சீராகவோ, அன்றி ஞாயிறு, வலியது என்னும் சீராகவோ ஆகாமல் வண்டு, வரகு என்னும் உரியசைப்பாற்படுதலின் ஒற்றளபெடையினை உயிரளபெடையின் வேறாக ஓதினார் ஆசிரியர்.

"அம்பொரைந் துடைய்ய காம ணைய்ய னென்ன
வந்தனன்
அம்புநீர ரல்லர் நன்கு ரங்கு நீரராயினும்
தங்கு ரவ்வர் தாங்கொடுப்பி னெஞ்சு நொந்து
தாழ்வர்தாம்
பொங்க ரவ்வ வல்குவாரெ னப்பு கன்று சொல்லினான்"
(சீவக - சுரமஞ் 3)

இதனுள் யகர வகரவொற்றில்வழி ஓசை அவ்வொற்றையுண்டாக்கிற்று. அஃது அளபெடுத்தது வந்துழிக் காண்க.

## ஆய்வுரை:

இஃது எய்தாதது எய்துவித்தது.

(இ - ள்) ஒற்று அளபெடுத்துவரினும் முற்கூறிய உயிரளபெடை போன்று சீர்நிலையெய்தி அலகு பெறுதலேயன்றி அசைநிலையாகி அலகு பெறாமையும் உரித்து எ - று.

'ஒற்று அளபெடுப்பினும்' எனவே உயிரெழுத்தினைப் போன்று ஒற்றுக்களும் அளபெடுத்து நிற்றற்குரியன என்பதும் அங்ஙனம் ஒற்றெடுத்து அளபெடுத்து வருங்கால் உயிரளபெடை போன்று சீர்நிலையெய்தி அலகு பெறுதலும் அசைநிலையாகி அலகு பெறாமையும் ஆகிய இருநிலைமையும் ஒருங்குபெறும் என்பதும் பெற்றாம்.

"கண்ண் தண்ண்ணெனக் கண்டும் கேட்டும்"

என்புழி முதற்கண் நின்ற சீராகிய 'கண்ண்' என்பது சீர்நிலையெய்தித் 'தேமா' ஆயிற்று. அதனையடுத்து வந்த 'தண்ண்ணென' என்னும் இரண்டாஞ் சீர்க்கண் உள்ள ணகரவொற்று செய்யுளோசையினை நிறைத்தற்கன்றித் தட்பத்தின் மிகுதியினைப் புலப்படுத்தும் நிலையில் இயற்சீர்க்கண் அளபெடுத்து நின்றதாதலின் அசைநிலையாய் அலகுபெறாதாயிற்று. 'தண்ண்ணென' என்பது சீர்நிலையெய்தி வருமாயின் 'மாசெல்சுரம்' என வஞ்சிச் சீராகும். இங்கு அசைநிலையாய் வந்தமையின் 'பாதிரி' என இயற்சீராயிற்று.

௧௮ இயற்சீர் இறுதிமுன் நேரவண் நிற்பின்
உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப.

## இளம்பூரணம் :

என்—எனின். வெண்பாவுரிச்சீர் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) மேற்சொல்லப்பட்ட ஈரசைச்சீர் பதினாறோடு நான்கசையுங் கூட்டியுறழ, அறுபத்துநான்கு மூவசைச் சீராம். அவற்றுள் இயற்சீர்நான்கின்பின் நேரசை வந்த மூவசைச்சீர் நான்கும் வெண்பாவுரிச்சீராம் என்றவாறு.[1]

உதாரணம்

"மாவாழ்கான், மாவருகான், புலிவாழ்கான், புலிவருகான்" என்பன. (கஅ)

**பேராசிரியம் :**

இது, நிறுத்த முறையானே ஈரசை கொண்டு சீரியைந் திறுவன உணர்த்தி இனி மூவசை கொண்டு முடிவன உணர்த் துவானெழுந்தான்; அவற்றுள் இது வெண்பாவுரிச்சீருணர்த்து கின்றது.

(இ - ள்) மேனின்ற அதிகாரத்து இயலசையானாகிய இயற்சீரிறுதிக்கண் நேரசை பெறுவன நான்கும் வெண்பாவுரிச் சீராமென்று சொல்லுவர் புலவர் (எ - று).

'உரிச்சீர் வெண்பாவாகும்', வெண்பா வுரிச்சீராகுமென மொழி மாற்றி யுரைக்க.

உ - ம்: 1நேர்நேர்நேர் 2நிரைநேர்நேர் 3நேர்நிரைநேர் 4நிரை நிரைநேர். என வரும் இவற்றை,

1மாசெல்வாய் 2புலிசெல்வாய் 3மாவருவாய் 4புலிவருவாய். எனவும்,

1தேமாங்காய் 2புளிமாங்காய் 3கூவிளங்காய் 4கருவிளங்காய் எனவும் வேறுவே றுதாரணங் காட்டுப. பிறவும் அவ்வாறு வருவன அறிந்துகொள்க. அவற்றுக்குச் செய்யுள் :

"காமன்கா ணென்று கருவூரார் பாராட்டத்
தாமந்தாழ் கோதை தருவானை - யாமும்
இருகுடங்கை யானெதிரே கூப்பித் தொழக்கண்
டொருகுடங்கை யாயின கண்" (சிலப். மேற்)

---

1. இங்கு இயற்சீர் என்றது, நேர், நிரை என்னும் இயலசைகளால் ஆகிய நேர் நேர், நிரைநேர், நேர்நிரை, நிரைநிரை, யென்னும் ஈரசைச்சீர் நான்கினையும்,

இச்சூத்திரத்து 'வெண்பாவுரிச்சீர்' என்பது, 'உரிச்சீர் வெண்பா' என மொழிமாறிநின்றது.

இதனுட் 'காமன்காண்' எனவும், 'கருவூரார்' எனவும், 'இருகுடங்கை' எனவும், 'யானெதிரே' எனவும் நான்கு வெண்சீரும் வந்தன. இதுவும் ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெற்ற பெயர்; வெண்பாவிற்கும் அதன் பகுதியாகிய கலிப்பாவிற்கும் உரிமையாதலிற் குணங் காரணமாயிற்று. ஆட்சி,

*"வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ*
*ரின்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே"*
(தொல். செய். 23)

எனவும் பிறாண்டும் ஆளுமென்பது. மற்று இயற்சீரென்றவழிப் பத்து இயற்சீருங் கொள்ளாமோவெனின், அதற்கு விடை முன்னர்,

*"இயலசை மயக்கம்"* (தொல். செய். 13)

என்புழிச் சொல்லிப்போந்தாம். 'இயற்சீர் எனப் பொதுவகையான் ஓதியவழி இயற்சீர் பத்துங் கொள்ளாது இயலசை மயக்கமாகிய நான்கனையுங் கோடலும்[1] ஆசிரியவுரிச்சீரென்று பொதுவகையான் ஓதியவழி ஆறனையுங் கொள்ளாது உரியசை மயக்கமாகிய நான்கனையுமே கோடலும்[2] வேண்டினானென்பது. அஃது இச்சூத் திரத்தானும்,[3]

*"வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீர்"* (தொல். செய். 23)

என்பதனானும் பெறுதும். (கக)

**நச்சினார்க்கினியம்:**

இது முறையானே மூவசைச் சீருணர்த்துதறொடங்கி, அவற்றுள் வெண்பாவுரிச்சீர் உணர்த்துகின்றார்.

---

1. இயலசைமயக்கமாகிய இயற்சீர்நான்காவன: நேர் நேர், (தேமா) நிரைநேர் (புளிமா), நேர்நிரை (பாதிரி) நிரைநிரை (கணவிரி) என்னும் ஈரசைச் சீர்கள் நான்குமாம்.

2. உரியசைமயக்கமாகிய ஆசிரியவுரிச்சீர் நான்காவன : நேர்பு நேர்பு (வீடுபேறு), நிரைபுநேர்பு (வரகுசோறு), நேர்புநிரைபு (பாறுகுருகு), நிரைபு நிரைபு (தடவுமருது) என்னும் ஈரசைச்சீர்கள் நான்குமாம்.

3. இச்சூத்திரம் என்றது,
இயலசை மயக்கம் இயற்சீர் ஏனை
உரியசை மயக்கம் ஆசிரியவுரிச்சீர் (செய்-யிட)
என முற்கூறிய சூத்திரத்தினை.

(இ - ள்.) அவண் இயற்சீ ரிறுதிமுன் நேர்நிற்பின் எ-து அவ்விடத்திற் கூறிய இயலசையானாகிய இயற்சீ ரிறுதிக்கண் நேரசை வந்து நிற்பின்: வெண்பாவுரிச்சீராகுமென்ப எ-து அந்நான்கும் வெண்பாவுரிச்சீரா மென்று கூறுவர் புலவர். எ-று.

அவை - நேர்நேர்நேர், நிரைநிரைநேர், நேர்நிரைநேர், நிரைநேர்நேர் எனவரும். இவற்றை மாசெல்வாய், புலிவருவாய், மாவருவாய், புலிசெல்வாய் எனவும்; தேமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய், புளிமாங்காய் எனவுங்காட்டுக. செய்யுள்-

"காமன்கா ணென்று கருவூரார் பாராட்டத்
தாமந்தாழ் கோதை வருவானை - யாமு
மிருகுடங்கை யானெதிரே கூப்பித் தொழக்கண்
டொருகுடங்கை யாயின கண்"

என நான்கு வெண்சீருங் காண்க. இஃது ஆட்சியுங் குணமுங் காரணமாகப் பெற்ற பெயர், வெண்பாவிற்கும் அதன் பகுதியாகிய கலிப்பாவிற்கு முரிமையின். இனிப் பொதுவாக இயற்சீரென்றால் இயலிசை மயக்கமாகிய இயற்சீர் நான்கினையும், பொதுவாக உரிச்சீரென்றால் உரியசைமயக்கமாகிய உரிச்சீர் நான்கினையுமே கோடல்வேண்டினார் இத்தொல்காப்பியனா ரென்பது, இச் சூத்திரத்தானும்

"வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ
ரின்பா நேரடிக்கு" (செய்-உந)

என்பதனானும் பெறுதும்; இதனான் ஆட்சியும் பெற்றாம். இதுவுங் கட்டளையடிக்குஞ் சீர்வகையடிக்குமுரித்து.[1]

**ஆய்வுரை :**

இது, நிறுத்தமுறையானே மூவசைச்சீர் உணர்த்துதல் தொடங்கி அவற்றுள் வெண்பாவுரிச்சீர் உணர்த்துகின்றது.

(இ-ள்) இயற்சீராகிய ஈரசைச்சீர் நான்கின் பின்னரும் மூன்றாவதாக நேரசை வந்து நிற்பின் நேரீற்று மூவசைச்

1. கட்டளையடி என்றது, ஒற்றும் குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஆய்தமும் நீக்கி நாலெழுத்து முதல் இருபதெழுத்தின்காறும் எழுத்தெண்ணிக் கொள்ளப்படும் ஐவகையடிகளை. சீர்வகையடி என்றது, இருசீர் குறளடி, முச்சீர் சிந்தடி, நாற்சீர் அளவடி அல்லது நேரடி, ஐஞ்சீர் நெடிலடி, அறுசீர் முதலாயின கழிநெடிலடி எனச் சீர்வகையாற் பகுத்துரைக்கும் ஐவகையடிகளை.

சீராகிய அவை நான்கும் வெண்பாவுரிச்சீராம் என்று கூறுவர் புலவர் எ-று.

மேற்கூறப்பட்ட ஈரசைச்சீர் பதினாறின் பின் மூன்றாவது அசையாக நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கசைகளையும்சேர்த்துப் பெருக்க மூவசைச்சீர் அறுபத்து நான்காகும். மா, புலி, பாம்பு, களிறு என்னும் வாய்பாடுகளை முதலிலும் வாழ், வரு, போகு, வழங்கு, என்னும் வாய்பாடுகளை இடையிலும், கான், நெறி, காடு, பொருப்பு என்னும் வாய்பாடுகளை இறுதியிலும் கூட்டி உறழ மூவசைச்சீர் அறுபத்து நான்காகும். அவற்றுள் இயற்சீர் நான்கின்பின் நேரசை வந்த மூவசைச்சீர் நான்கும் வெண்பா வுரிச்சீர் எனப்படும்.

உ-ம்: மாவாழ்கான், புலிவாழ்கான், மாவருகான், புலிவருகான் எனவரும். இவ்வாய்பாடுகளை முறையே தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் எனவழங்குவர் பிற்கால யாப்பியல் நூலார்.

**௧௧ வஞ்சிச் சீரென வகைபெற் றனவே**
**வெண்சீ ரல்லா மூவசை என்ப**

## இளம்பூரணம் :

***இஃ—இனின்.*** வஞ்சியுரிச்சீர் ஆமா றுணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) வஞ்சியுரிச்சீரெனப் பாகுபட்டன மேற்சொல்லப்பட்ட மூவசைச்சீர் அறுபத்து நான்கு சீரினும் வெண்சீரல்லாத அறுபது மென்றவாறு.[1]

உதாரணம்

(௧)

| | |
|---|---|
| நேர் நேர் நிரை | - மா வாழ் நெறி |
| நேர் நேர் நேர்பு | - மா வாழ் காடு |
| நேர் நேர் நிரைபு | - மா வாழ் பொருப்பு |
| நேர் நிரை நிரை | - மா வரு நெறி |

'மூவசையான' என்பது பேராசிரியர் கொண்டபாடம்

1. இயற்சீரும் ஆசிரியவுரிச்சீருமாகிய ஈரசைச்சீர் பதினாறினோடு நான்கசைகளையுங்கூட்டிப் பெருக்க அறுபத்துமூன்று மூவசைச் சீர்களாகும். அவற்றுள் மேலைச் சூத்திரத்திற் குறிக்கப்பட்ட வெண்சீர் நான்குமல்லாத ஏனைய மூவசைச் சீர்கள் அறுபதும் வஞ்சிச்சீர் எனப்படும் என்பதாம்.

பொருளதிகாரம் — செய்யுளியல்

நேர் நிரை நேர்பு - மா வரு காடு
நேர் நிரை நிரைபு - மா வரு பொருப்பு
நேர் நேர்பு நேர் - மா போகு கான்
நேர் நேர்பு நிரை - மா போகு நெறி
நேர் நேர்பு நேர்பு - மா போகு காடு
நேர் நேர்பு நிரைபு - மா போகு பொருப்பு
நேர் நிரைபு நேர் - மா வழங்கு கான்
நேர் நிரைபு நிரை - மா வழங்கு நெறி
நேர் நிரைபு நேர்பு - மா வழங்கு காடு
நேர் நிரைபு நிரைபு - மா வழங்கு பொருப்பு

(உ)

நிரை நேர் நிரை - புலி வாழ் நெறி
நிரை நேர் நேர்பு - புலி வாழ் காடு
நிரை நேர் நிரைபு - புலி வாழ் பொருப்பு
நிரை நிரை நிரை - புலி வரு நெறி
நிரை நிரை நேர்பு - புலி வரு காடு
நிரை நிரை நிரைபு - புலி வரு பொருப்பு
நிரை நேர்பு நேர் - புலி போகு கான்
நிரை நேர்பு நிரை - புலி போகு நெறி
நிரை நேர்பு நேர்பு - புலி போகு காடு
நிரை நேர்பு நிரைபு - புலி போகு பொருப்பு
நிரை நிரைபு நேர் - புலி வழங்கு கான்
நிரை நிரைபு நிரை - புலி வழங்கு நெறி
நிரை நிரைபு நேர்பு - புலி வழங்கு காடு
நிரை நிரைபு நிரைபு - புலி வழங்கு பொருப்பு

(௩)

நேர்பு நேர் நேர் - பாம்பு வாழ் கான்
நேர்பு நேர் நிரை - பாம்பு வாழ் நெறி
நேர்பு நேர் நேர்பு - பாம்பு வாழ் காடு
நேர்பு நேர் நிரைபு - பாம்பு வாழ் பொருப்பு
நேர்பு நிரை நேர் - பாம்பு வரு கான்
நேர்பு நிரை நிரை - பாம்பு வரு நெறி
நேர்பு நிரை நேர்பு - பாம்பு வரு காடு
நேர்பு நிரை நிரைபு - பாம்பு வரு பொருப்பு
நேர்பு நேர்பு நேர் - பாம்பு போகு கான்

நேர்பு நேர்பு நிரை - பாம்பு போகு நெறி
நேர்பு நேர்பு நேர்பு - பாம்பு போகு காடு
நேர்பு நேர்பு நிரைபு - பாம்பு போகு பொருப்பு
நேர்பு நிரைபு நேர் - பாம்பு வழங்கு கான்
நேர்பு நிரைபு நிரை - பாம்பு வழங்கு நெறி
நேர்பு நிரைபு நேர்பு - பாம்பு வழங்கு காடு
நேர்பு நிரைபு நிரைபு - பாம்பு வழங்கு பொருப்பு

ச

நிரைபு நேர் நேர் - களிறு வாழ் கான்
நிரைபு நேர் நிரை - களிறு வாழ் நெறி
நிரைபு நேர் நேர்பு - களிறு வாழ் காடு
நிரைபு நேர் நிரைபு - களிறு வாழ் பொருப்பு
நிரைபு நிரை நேர் - களிறு வரு கான்
நிரைபு நிரை நிரை - களிறு வரு நெறி
நிரைபு நிரை நேர்பு - களிறு வரு காடு
நிரைபு நிரை நிரைபு - களிறு வரு பொருப்பு
நிரைபு நேர்பு நேர் - களிறு போகு கான்
நிரைபு நேர்பு நிரை - களிறு போகு நெறி
நிரைபு நேர்பு நேர்பு - களிறு போகு காடு
நிரைபு நேர்பு நிரைபு - களிறு போகு பொருப்பு
நிரைபு நிரைபு நேர் - களிறு வழங்கு கான்
நிரைபு நிரைபு நிரை - களிறு வழங்கு நெறி
நிரைபு நிரைபு நேர்பு - களிறு வழங்கு காடு
நிரைபு நிரைபு நிரைபு - களிறு வழங்கு பொருப்பு

ஆக அறுபதும்[1]. (௪

## பேராசிரியம் :

இஃது, ஒழிந்த மூவசைச்சீ ருணர்த்துகின்றது.

(இ - ள்.) வஞ்சிச்சீரெனக் கூறுபடுக்கப்பட்டன மேற் கூறிய வெண்சீரல்லா மூவசைச்சீரெல்லாம் (எ - று).

நேர் நிரை நேர்பு நிரைபு என்னும் நான்கனையும் மூன்று படியான் இழியவைத்து, முதற்கணின்ற நான்கசையும் இடை

1. இளம்பூரணம் உரையில் மூவசைச் சீராகிய வஞ்சி அறுபதுக்கும் மாவாழ்நெறி முதல் களிறுவழங்கு பொருப்பு ஈறாகவுள்ள அறுபது வாய்பாடுகளே உதாரணமாகக் காட்டப்பட்டன. அவற்றுக்குமுன் தரப்பட்ட அசையமைப்புப் பற்றிய 'நேர் நேர் நிரை' என்பது முதல் 'நிரைபு நிரைபு நிரைபு' என்பது ஈறாகத் தரப்பட்ட அசையமைப்புப் பற்றிய குறிப்புக்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவெளியீட்டில் விளக்கங்கருதி இணைக்கப் பெற்றனவாகும்.

நின்ற நான்கனோடும் ஓரோவொன்று நான்காகக் கூட்டி, இறுதி நின்ற நான்கசையோடும் ஓரோவொன்றற்குப் பதினாறாக நாற் காலுறழ அறுபத்து நான்கு மூவசைச்சீர் பிறக்கும். அவற் றுள், இயலசைமருங்கின் நேரிறுவன நான்குசீருள. அவை முன்னர் (331) வெண்சீர்நான்கெனக் கூறப்பட்டன. ஒழிந்த மூவசைச்சீர்களெல்லாம் வஞ்சியுரிச்சீரெனப்படும் என்றவாறு. அவை அறுபது வகைப்படும்.[1]

உதாரணம் : நேர்நேர்நேர் நேர்நிரைநேர் நேர்நேர்புநேர் நேர்நிரைபுநேர் எனவும், நிரைநேர்நேர் நிரைநிரைநேர் நிரை நேர்புநேர் நிரைநிரைபுநேர் எனவும், நேர்புநேர்நேர் நேர்புநிரை நேர் நேர்புநேர்புநேர் நேர்புநிரைபுநேர் எனவும், நிரைபுநேர்நேர் நிரைபுநிரைநேர் நிரைபுநேர்புநேர் நிரைபுநிரைபுநேர் எனவும் இவை நேரீற்று மூவசைச்சீர் பதினாறு.

இவற்றுள் வெண்சீரென மேற்காட்டிய நான்கும் ஒழித்து ஒழிந்த பன்னிரண்டும் வஞ்சியுரிச்சீர்.

இனி நிரையீற்று மூவசைச்சீர் பதினாறும் வருமாறு :

நேர்நேர்நிரை நேர்நிரைநிரை நேர்நேர்புநிரை நேர்நிரைபு நிரை எனவும், நிரைநேர்நிரை நிரைநிரைநிரை நிரைநேர்பு நிரை நிரைநிரைபுநிரை எனவும், நேர்புநேர்நிரை நேர்புநிரை நிரை நேர்புநேர்புநிரை நேர்புநிரைபுநிரை எனவும், நிரைபு நேர்நிரை நிரைபுநிரைநிரை நிரைபுநேர்புநிரை நிரைபுநிரைபு நிரை எனவும் நிரையீற்றுச்சீர் பதினாறும் வந்தன. நேர்நேர் நேர்பு நேர்நிரைநேர்பு நேர்நேர்புநேர்பு நேர்நிரைபுநேர்பு என வும், நிரைநேர்நேர்பு நிரைநிரைநேர்பு நிரைநேர்புநேர்பு நிரை நிரைபுநேர்பு எனவும், நேர்புநேர்நேர்பு நேர்புநிரைநேர்பு நேர்பு நேர்நேர்பு நேர்புநிரைபுநேர்பு எனவும், நிரைபுநேர்நேர்பு நிரைபு நிரைநேர்பு நிரைபுநேர்புநேர்பு நிரைபுநிரைபுநேர்பு எனவும் இவை நேர்பீற்றுச்சீர் பதினாறும் வந்தன.

---

1. நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கினையும் முதற்கண் நிறுத்தி அந்நான்கனோடு இரண்டாவது அசையாக அந்நான்கனையும் வைத்துப்பெருக்க ஈரசைச் சீர்கள் பதினாறாகும். பெருக்கிப்பெற்ற பதினாறு ஈரசைச்சீர்களோடு மூன்றாவது அசையாக மேற்குறித்த நான்கினையும் வைத்துப் பெருக்க மூவசைச் சீர்கள் அறுபத்து நான்காகும். அவற்றுள் இயற்சீர் நான்கினோடும் மூன்றாவது அசையாக நேர்நின்ற மூவசைச்சீர் நான்கும் வெண்பாவுரிச்சீர் எனப்படும் என்பதாம்.

நேர்நேர்நிரைபு நேர்நிரைநிரைபு நேர்நேர்புநிரைபு நேர்நிரைபுநிரைபு எனவும், நிரைநேர்நிரைபு நிரைநிரைநிரைபு நிரைநேர்புநிரைபு நிரைநிரைபுநிரைபு எனவும், நேர்புநேர்நிரைபு நேர்புநிரைநிரைபு நேர்புநேர்புநிரைபு நேர்புநிரைபுநிரைபு எனவும், நிரைபுநேர்நிரைபு நிரைபுநிரைநிரைபு நிரைநேர்புநிரைபு நிரைபுநிரைபுநிரைபு எனவும் இவை நிரைபீற்றுச்சீர் பதினாறும் வந்தன.

நேரீற்று வஞ்சியுரிச்சீர் பன்னிரண்டும், நிரையீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும், நேர்பீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும், நிரைபீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறுமாக வஞ்சியுரிச்சீர் அறுபதும் வந்தன : அவற்றுக்குச் செய்யுள்.

“மேற்கோட்டுநீர் கீழ்ப்பரந்துதன்
விழுக்கோட்டுமேல் வியல்விசும்புதோய்ந்
தோங்கு முன்னர்க் காம்புகழியப்
பாய்ந்து சென்றுசென் றாங்கு நலிபுநின்
றெதிர்த்து மீண்டாங் கதிர்த்துக்கரைகொன்
றலங்குகோட்டுமுத் திலங்குநிலவுசெய்
தூர்திரைக் காவிரி பரக்குந் தண்டலை
மூதா ரோனே பேரிசை வளவன்
சுரம்படர்ந்து வருந்துத லெவனோ
நிரம்பா வாழ்க்கைப் பாணர் கடும்பே.”

இதனுள், நேரீற்று மூவசைச்சீர் பதினாறுள்ளும் வெண்பாவுரிச்சீர் நான்குமொழித்து ஒழிந்த பன்னிரண்டு வஞ்சியுரிச்சீரும் முறையானே வந்தன.

“தண்டண்டலைத் தாதுரைத்தலின்
வண்டோடுவயல் வாய்ப்புகைபுகரந்
தயலாலையி னறைக்கடிகையின்
வழிபோகுவர மறித்துருபுகிளர்ந்
தோங்குசென்னிலை வாங்குகதிர்தரும்
போதுதூங்குசிலை மீதுபுகுந்துபுகுந்
தொடுங்குசெய்தொழில் வழங்குகிளிக்குழாந்
திருந்துகோட்டுமிசைக் குரங்குவிருந்துகொளு
நன்னர்நன்னாட் டென்னாகுவகொல்
பொன்னி நன்னாட்டுப் பொருந னெங்கோன்

தாடோய் தடக்கை மல்ல
னாடுகெழு திருவிற் பீடுகெழு வேந்தே''

இதனுள் நிரையீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும் வந்தன.

''வான்பொய்யாது தீம்பெயல்பெய்து
மால்யாறுபோந்து கால்சுரந்துபாய்ந்து
சுரைபொய்யாது நிறைவளஞ்சான்று
வரையாதுதந்து பலாப்பழுத்துவீழ்ந்து
பாம்புகொள்ளாது வீங்குசுடர்நீண்டு
வித்துநாறுவாய்த்து முத்துக்கரும்புபூத்து
வரம்புகொள்ளாது நிரம்புபெருங்கூட்டு
விசும்புநீங்குமஞ்சு துயின்றுபெயர்ந்துபோந்து
வாழை யோங்கிய கோழிலைப் பரக்குந்
தண்டா யாணர்த் தென்ப வென்றும்
படுவது கூட்டுண்டு கடவது நோக்கிக்
குடிபுறந் தரூஉம் வேந்த
னெடுநிலைத் தண்குடை நிழற்று நாடே''

இதனுள் நேர்பசை யிறுதியாகிய வஞ்சியுரிச்சீர் பதினாறும் முறையானே வந்தன.

''சீற்றமிகுபு செல்சினஞ்சிறந்து
கூற்றொத்துவிரைபு கோள்குறித்துமுயன்று
புலிப்போத்துலவு பொலங்கொடியெடுத்துப்
புகலேற்றுமலைந்து பகையரசுதொலைத்து
வேம்புமீதணிபு போந்துபடத்தொடுத்து
வீற்றுவீற்றுப் புணர்ந்து வேற்றுச்சுரும்புகிளர்ந்து
களிறுகால்கிளர்ந்து குளிறுகுரல்படைத்துச்
சொரிந்துதூங்குகடாத்து விரவுப்பலவுதொலைத்து
மணங்கமழ் தாரமொடு தயங்கச் சூடிய
வென்வேற் சென்னி பொன்னியற் புனைகழல்
பாடுபெறு பாணினும் பலவே
பாடா தோடிய நாடுகெழு வேந்தே''

இதனுள், நிரைபீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும் முறையானே வந்தன. (உம்)

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஒழிந்த மூவசைச்சீர் கூறுகின்றது.

இ-ள். வஞ்சிச்சீரென்று கூறுபடுக்கப்பட்டன, மேற்கூறிய வெண்சீரல்லா மூவசைச்சீரெல்லாம். எ-று[1].

அவை வருமாறு :- நேர், நிரை, நேர்பு, நிரைபு என நான்கனையும் நிறுத்தி, ஒருகால் நேர்முன்னாகவும், ஒருகால் நிரைமுன்னாகவும், ஒருகால் நேர்பு முன்னாகவும், ஒருகால் நிரைபு முன்னாகவும் எடுத்து நேரீறாக முடிக்கப் பதினாறாம்; அவ்வாறெடுத்து நிரையீறாக முடிக்கப் பதினாறாம்; அவ்வாறெடுத்து நேர்பீறாக முடிக்கப் பதினாறாம்; அவ்வாறெடுத்து நிரைபீறாக முடிக்கப் பதினாறாம்; ஆகவே, அறுபத்து நான்காயிற்று. அவ்வாறெடுத்து நான்கு முறைமைக்கு நடுவு நேரும் நிரையும் நேர்பும் நிரைபுமாக நிற்குமாறும் உணர்க.

அவை :— உதாரணம்

| | |
|---|---|
| நேர்நேர்நேர் | மாசேர்வாய் |
| நேர்நிரைநேர் | மாவருவாய் |
| நேர்நேர்புநேர் | மாபோகுவாய் |
| நேர்நிரைபுநேர் | மாவழங்குவாய் |
| நிரைநேர்நேர் | புலிசேர்வாய் |
| நிரைநிரைநேர் | புலிவருவாய் |
| நிரைநேர்புநேர் | புலிபோகுவாய் |
| நிரைநிரைபுநேர் | புலிவழங்குவாய் |
| நேர்புநேர்நேர் | பாம்புசேர்வாய் |
| நேர்புநிரைநேர் | பாம்புவருவாய் |
| நேர்புநேர்புநேர் | பாம்புபோகுவாய் |
| நேர்புநிரைபுநேர் | பாம்புவழங்குவாய் |
| நிரைபுநேர்நேர் | களிறுசேர்வாய் |
| நிரைபுநிரைநேர் | களிறுவருவாய் |
| நிரைபுநேர்புநேர் | களிறுபோகுவாய் |
| நிரைபுநிரைபுநேர் | களிறுவழங்குவாய் |

எனவும் நேரீற்று மூவசைச்சீர் பதினாறும் வந்தன.

வெண்சீரென மேற்காட்டிய நான்கு மொழித் தொழிந்த பன்னிரண்டும் வஞ்சியுரிச்சீர்.

---

1. நேரீற்று மூவசைச்சீர் நான்கும் அல்லாத ஏனைய அறுபது மூவசைச் சீர்களும் வஞ்சிச்சீர் என வகைப்படுத்தப்பெற்றன என்பதாம்.

| | |
|---|---|
| நேர்நேர்நிரை | மாசேர்சுரம் |
| நேர்நிரைநிரை | மாவருசுரம் |
| நேர்நேர்புநிரை | மாபோகுசுரம் |
| நேர்நிரைபுநிரை | மாவழங்குசுரம் |
| நிரைநேர்நிரை | புலிசேர்சுரம் |
| நிரைநிரைநிரை | புலிவருசுரம் |
| நிரைநேர்புநிரை | புலிபோகுசுரம் |
| நிரைநிரைபுநிரை | புலிவழங்குசுரம் |
| நேர்புநேர்நிரை | பாம்புசேர்சுரம் |
| நேர்புநிரைநிரை | பாம்புவருசுரம் |
| நேர்புநேர்புநிரை | பாம்புபோகுசுரம் |
| நேர்புநிரைபுநிரை | பாம்புவழங்குசுரம் |
| நிரைபுநேர்நிரை | களிறுசேர்சுரம் |
| நிரைபுநிரைநிரை | களிறுவருசுரம் |
| நிரைபுநேர்புநிரை | களிறுபோகுசுரம் |
| நிரைபுநிரைபுநிரை | களிறுவழங்குசுரம் |

எனவும் நிரையீற்று மூவசைச்சீர் பதினாறும் வந்தன.

| | |
|---|---|
| நேர்நேர்நேர்பு | மாசேர்காடு |
| நேர்நிரைநேர்பு | மாவருகாடு |
| நேர்நேர்புநேர்பு | மாபோகுகாடு |
| நேர்நிரைபுநேர்பு | மாவழங்குகாடு |
| நிரைநேர்நேர்பு | புலிசேர்காடு |
| நிரைநிரைநேர்பு | புலிவருகாடு |
| நிரைநேர்புநேர்பு | புலிபோகுகாடு |
| நிரைநிரைபுநேர்பு | புலிவழங்குகாடு |
| நேர்புநேர்நேர்பு | பாம்புசேர்காடு |
| நேர்புநிரைநேர்பு | பாம்புவருகாடு |
| நேர்புநேர்புநேர்பு | பாம்புபோகுகாடு |
| நேர்புநிரைபுநேர்பு | பாம்புவழங்குகாடு |
| நிரைபுநேர்நேர்பு | களிறுசேர்காடு |
| நிரைபுநிரைநேர்பு | களிறுவருகாடு |
| நிரைபுநேர்புநேர்பு | களிறுபோகுகாடு |
| நிரைபுநிரைபுநேர்பு | களிறுவழங்குகாடு |

எனவும் நேர்பீற்று மூவசைச்சீர் பதினாறும் வந்தன.

| | |
|---|---|
| நேர்நேர்நிரைபு | மாசேர்கடறு |
| நேர்நிரைநிரைபு | மாவருகடறு |
| நேர்நேர்புநிரைபு | மாபோகுகடறு |
| நேர்நிரைபுநிரைபு | மாவழங்குகடறு |
| நிரைநேர்நிரைபு | புலிசேர்கடறு |
| நிரைநிரைநிரைபு | புலிவருகடறு |
| நிரைநேர்புநிரைபு | புலிபோகுகடறு |
| நிரைநிரைபுநிரைபு | புலிவழங்குகடறு |
| நேர்புநேர்நிரைபு | பாம்புசேர்கடறு |
| நேர்புநிரைநிரைபு | பாம்பு வருகடறு |
| நேர்புநேர்புநிரைபு | பாம்புபோகுகடறு |
| நேர்புநிரைபுநிரைபு | பாம்புவழங்குகடறு |
| நிரைபுநேர்நிரைபு | களிறுசேர்கடறு |
| நிரைபுநிரைநிரைபு | களிறுவருகடறு |
| நிரைபுநேர்புநிரைபு | களிறுபோகுகடறு |
| நிரைபுநிரைபுநிரைபு | களிறுவழங்குகடறு |

எனவும் நிரைபீற்று மூவசைச்சீர் பதினாறும் வந்தன.

இவை அறுபத்து நான்கினும் நான்குநீக்கி, ஒழிந்த அறுபதும் வஞ்சியுரிச்சீராம். செய்யுள் :-

"மேற்கோட்டுநீர் கீழ்ப்பாரந்துதன்
விழுக்கோட்டுமெய் வியல்விசும்புதோய்ந்
தோங்குமுன்னர்க் காம்புகிழியப்
பாய்ந்துசென்றுசென் றாங்குநலிபுநின்
றெதிர்த்துமீண்டாங் கதிர்த்துக்கரைகொன்
றலங்குகோட்டுமுத் திலங்குநிலவுச்செய்
தூர்திரைக் காவிரி பரக்குந் தண்டலை
மூதூ ரோனே பேரிசை வளவன்
சுரம்படர்ந்து வருந்துவ தெவனோ
நிரம்பா வாழ்க்கைப் பாணர் கடும்பே"

இதனுள் நேரீற்று மூவசைச்சீர் பதினாறுள் வெண்சீர்நான்கு-மொழித்து ஒழிந்த பன்னிரண்டு வஞ்சியுரிச்சீரும் முறையானே வந்தன.

"தண்டண்டலைத் தாதுறைத்தலின்
வண்டோட்டுவயல் வாய்புகைபுகரந்
தயலாலையி னறைக்கடிகையின்
வழிபோகுவர மறித்துருபுகிளர்ந்

தோங்குசென்னிலை வாங்குகதிர்தரீஇப்
போதுதூங்குசிலை மீதுபுகுந்துபுகுந்
தொடுங்குசெய்தொழில் வழங்குகிளிக்குழாந்
திருந்துகோட்டுமிசைக் குரங்குவிருந்துகொளு
நன்னர் நன்னாட் டென்னா குங்கொல்
பொன்னிநன் னாட்டுப் பொருந ளெங்கோன்
தாடோய் தடக்கை மல்ல
னாடுகெழு திருவிற் பீடுகெழு வேந்தே''

இதனுள் நிரையீற்று வஞ்சிச்சீர் பதினாறும் வந்தன.

''வான்பொய்யாது தீம்பெயல்பெய்து
மால்யாறுபேர்ந்து கால்சுரந்துபாய்ந்து
சுரைபொய்யாது நிரைவளஞ்சான்று
வரையாதுதந்து பலாப்பழுத்துவீழ்ந்து
பாம்புகொள்ளாது வீங்குசுடர்நீண்டு
வித்துநாறுவாய்த்து முத்துக்கரும்புபூத்து
வரம்புகொள்ளாது நிரம்புபெருங்கூட்டு
விசும்புநீங்குமஞ்சு துயின்றுபெயர்ந்துபேர்ந்து
வாழை யோங்கிய கோழிலைப் பரக்குந்
தண்டா யாணர்த் தென்ப வென்றும்
படுவது கூட்டுண்டு கடவது நோக்கிக்
குடிபுறந் தரூஉம் வேந்த
னெடுநிலைத் தண்குடை நிழற்று நாடே''

இதனுள் நேர்பீறாகிய வஞ்சிச்சீர் பதினாறும் முறையானே வந்தன.

''சீற்றம்மிகுபு செல்சினஞ்சிறந்து
கூற்றொத்துவிரைபு கோள்குறித்துமுயன்று
புலிப்போத்துலவும் பொலங்கொடியெடுத்துப்
புகலேற்றுமலைந்து பகையரசு தொலைத்து
வேம்புமீதணிபு போந்துபடத்தொடுத்து
வீற்றுவீற்றுப்புனைந்து வேற்றுச்சுரும்புகிளர்பு
களிறுகால்கிளர்ந்து குளிறுகுரல்படைத்துச்
சொரித்துதூங்குகடாந்து விரைந்துமலைந்துதொலைத்து
மணங்கம ழாரமொடு தயங்கச் சூடிய
வென்வேற் சென்னி பொன்னியற் புனைகழல்
பாடுபெறு பாணினும் பலவே

பாடா தோடிய நாடுகெழு வேந்தே"

இதனுள் நிரைபீற்று வஞ்சிச்சீர் பதினாறும் முறையானே வந்தன.

**ஆய்வுரை:**

இது, வஞ்சியுரிச் சீராமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்குறித்த வெண்பாவுரிச் சீர் நான்குமல்லாத ஏனைய மூவசைச்சீர் அறுபதும் வஞ்சியுரிச்சீர் எனப்படும் எ-று.

அறுபது வஞ்சிச் சீர்களுக்கும் உரியவாக இளம்பூரணர், பேராசிரியர் உரைகளில் தனித்தனி வாய்பாடுகள் காட்டப்பெற்றுள்ளன.

**உ௰. தன்பா அல்வழித் தான்நடை இன்றே.**

**இளம்பூரணம் :**

என்—எனின். வஞ்சியுரிச்சீர்க்குரிய மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வஞ்சியுரிச்சீர் வஞ்சிப்பாவினு ளல்லது நடை பெறாது என்றவாறு.[1] (௨0)

**பேராசிரியம் :**

இஃது, அவற்றைப் பாவிற்குரிமை கூறுகின்றது.

(இ - ள்.) இவ்வறுபது வஞ்சியுரிச்சீருந் தன்பாவினு ளல்லாத ஆசிரியம் வெண்பாக் கலியினுள் வாரா (எ - று).

சிறுபான்மையா னாவன முன்னர்ச் சொல்லுதும். இவை ஆசிரியவுரிச்சீர் தூங்கலோசையா னாகுமாறுபோல ஆசிரிய வோசையும் ஆக்குங்கொல்லெனின் ஆக்காவென்பது இதனது பயன்.[2] (௨க)

---

1. மேற்குறித்த வஞ்சியுரிச்சீர் அறுபதும் வஞ்சிப்பாவினுளல்லது ஆசிரியம், வெண்பா, கலிப்பா ஆகிய ஏனைய பாக்களில் நடைபெறுதல் இல்லை.

2. 'வஞ்சியுரிச்சீர்' எனவே இவை வஞ்சிப்பாவுக்கே சிறப்புரிமையுடையன என்பது பெறப்படுமாயினும் ஆசிரியவுரிச்சீர் ஆசிரியப்பாவினுட் பயிலுதலோடு வஞ்சிப்பாவிலும் வந்து தூங்கலோசையினை ஆக்குமாறுபோன்று இவ்வஞ்சியுரிச் சீர்களும் ஆசிரியத்துள்வந்து அகவலோசையினை ஆக்குமோ என ஐயுற்ற மாணாக்கர்க்கு இவ்வஞ்சியுரிச்சீர்கள் வஞ்சிப் பாவினுளல்லது ஏனைய ஆசிரியம், வெண்பாக் கலிப்பாவினுள் வந்து அவற்றின் ஓசையினை ஆக்கமாட்டா என ஐயம் அகற்றும் முறையில் 'தன்பா அல்வழித் தான்நடை யின்றே' என்றார் ஆசிரியர்.

**நச்சினார்க்கினியம் :**

இஃது அவற்றைப் பாவிற்குரிமை கூறுகின்றது.

(இ - ள்.) இவ்வறுபது வஞ்சிச்சீரும் தன்தன் பாவல்லா ஆசிரியம், வெண்பா, கலியுள் வாரா[1] எ - று.

எனவே, சிறுபான்மையான் ஆவன மேற் கூறுதும். உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க. இதன்பயன் ஆசிரியவுரிச்சீர் தூங்கலோசையை ஆக்குமாறுபோல, இஃது அகவலோசையை ஆக்காதென்பதாம்.

**ஆய்வுரை :**

இது வஞ்சியுரிச்சீர்க்குரிய மரபுணர்த்துகின்றது.

(இ - ள்.) வஞ்சியுரிச்சீர் அறுபதும் வஞ்சிப்பாவினுளல்லது ஏனைய பாவினுள் வருதல் இல்லை. எ - று.

ஆசிரியவுரிச்சீர் ஆசிரிய நடைத்தாகிய வஞ்சிப்பாவினுள் வந்து தூங்கலோசையை ஆக்குவது போன்று ஆசிரியநடைத்-தாகிய வஞ்சிப்பாவுக்குரிய சீர்கள் ஆசிரியப்பாவினுள் வந்து அகவலோசையினை ஆக்குமோ என்று ஐயுறுவார்க்கு ஆக்கா என ஐயமறுத்தல் இச்சூத்திரத்தின் பயன் என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் ஆகியோர் கருத்தாகும்.

**உக. வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய.**

**இளம்பூரணம் :**

என்—எனின். இது வஞ்சிப்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வஞ்சிப் பாவினுள் ஒழிந்த சீர்கள்[2] வரப்பெறும் என்றவாறு. (உக)

**பேராசிரியம் :**

இது, மற்றைச்சீர் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

'தானடைவின்றே' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம்.

1. 'தான் அடைவு இன்று' என்னும் பயனிலைக்கு எழுவாயாக முன்னைச் சூத்திரத்திலுள்ள 'வஞ்சிச்சீர்' என்பது வருவித்துரைக்கப்பட்டது.

2. எஞ்சிய-வஞ்சியுரிச்சீரல்லாத ஒழிந்த இயற்சீர்; ஆசிரியவுரிச்சீர், வெண்-பாவுரிச்சீர் என்பன. இச்சீர்கள் வஞ்சிப்பாவினுள் வரப்பெறும் என்பார், 'எஞ்சிய வஞ்சிமருங்கின் உரிய' என்றார்.

(இ - ள்.) வஞ்சியுரிச்சீர் பிற பாக்களை ஆக்காதவாறு போலாது ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவுரிச்சீரும் இவ் வஞ்சிப்பாவினை யாக்கும் (எ - று).

உரிச்சீர் மேலதிகாரமாகலான், 'எஞ்சிய'வென இவ்விரண் டனையுமே கொண்டாமென்பது.[1] வஞ்சியது பாவினை வஞ்சி யென்றான் ஆகுபெயரான். மற்றுச் சீர்கூறும்வழிப் பாக்கூறுவ தென்னையெனின் அப் பாவினை யாக்குவன சீராகலிற் சீரிலக் கணம் எய்துமென்பது.[2] அவை யாமாறு,

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினுந்
தற்பாடிய தளியுணவின்" (பத்துப்-பட்டின. 1-3)

எனத் தன்சீர்வரத் தூங்கலோசை பிறந்தது.

"தாழ்தாழைத் தண்டண்டலை" (பத்துப்-பொருநர்-181)

என்பதும்,

"புட்டேம்பப் புயன்மாறி" (பத்துப்-பட்டின-4)

என்பதும் வெண்பாவுரிச்சீரால் தூங்கலோசை பிறந்தது.

"புட்டேம்பப் புயன்மாறி"

என்புழி,

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்"

எனத் தனது சீரானே தூங்கலோசை பிறந்தாங்குப் பிறந்தது.

"திசைதிரிந்து தெற்கேகினும்"

என இயற்சீர்நிற்பத் தன்சீரானே தூங்கலோசை பிறந்தது.

"புள்ளுந்துயின்று புலம்புகூர்ந்து"

என ஆசிரியவுரிச்சீரான் வஞ்சித்தூக்காயிற்று. பிறவும் அன்ன. (உஉ)

1. உரிச்சீர் பற்றியது மேலதிகாரமாதலால் இங்கு வஞ்சியுரிச்சீரல்லாத எஞ்சிய சீர்களாவன ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவுரிச்சீரும் என இவ்விரண்டி-னையுமே எனக் கொண்டோம் என்றார் பேராசிரியர்.

2. பா என்னும் உறுப்பினை ஆக்குவன சீர்கள். அத்தகைய சீரிலக்கணம் எய்துவன பாக்களாதலின் சீர்கூறும்வழிப் பாவினையும் சேர்த்தோதினார் ஆசிரியர்.

**நச்சினார்க்கினியம்**

இது மற்றைச்சீர்கள் வஞ்சியுண் மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்.) கட்டளையல்லா வஞ்சிப்பாவின்கண் ஈரசைச்சீர் பதினாறும் மூவசைச்சீர் அறுபத்துநான்கும் உரிய. எ-று

எனவே, கட்டளையிற் கூறுவாராயிற்று.[1]

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்" (பட்டினப்பாலை)
எனத் தன்முன்னர்த் தான்வந்தும்,

"திசைதிரிந்து தெற்கேகினும்" (பட்டினப்பாலை)
என இயற்சீர் நிற்பத் தன்சீர்வந்தும்,

"தற்பாடிய தளியுணவின்" (பட்டினப்பாலை)
எனத் தன்முன்னர் வெண்சீர் வந்தும்,

"புட்டேம்பப் புயன்மாறி" (பட்டினப்பாலை)
என இரண்டு வெண்சீர் வந்தும்,

"புள்ளுந்துயின்று புலம்புங்கூர்ந்து"
என ஆசிரியவுரிச்சீர் வந்தும் தூங்கலோசை பிறக்கும் என்றுணர்க.

**ஆய்வுரை :**

இது, வஞ்சிப்பாவிற்குரியதோர் மரபு உணர்த்துகின்றது.

(இ-ள்) வஞ்சிப்பாவினுள் ஏனைய சீர்கள் வருதற்குரியன எ-று

வஞ்சியுரிச்சீர் பிற பாக்களிற் பயின்று அப்பாக்களுக்குரிய ஓசையையுண்டாக்க மாட்டாது. அவ்வாறன்றி ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவுரிச்சீரும் வஞ்சிப்பாவினுள் வந்து வஞ்சிப்பாவின் ஓசையையுண்டாக்குந் தன்மையன. ஆதலின் 'வஞ்சி மருங்கின்

---

1. வஞ்சித்தளை மருங்கின் என்னாது வஞ்சி மருங்கின் எனவே கட்டளை யல்லா வஞ்சிப்பாவுக்குரியது இச்சூத்திரவிதி யென்பது பெறப்படும். 'எனவே கட்டளை பிற்கூறுவாராயிற்று' என்றிருத்தல் பொருத்தமாகும். "இனி, வஞ்சிப்பாவிற்கும் 'வஞ்சி மருங்கின் எஞ்சிய வுரிய' என முற்கூறியவாற்றான் ஈரசைச்சீர் பதினாறும் மூவசைச்சீர் அறுபத்து நான்குமென எண்பது சீரும் கட்டளையடி யல்வழி உரியவென்பது எய்துவித்ததாம்" (செய்யுளியல்-உரு) எனப் பேராசிரியர் தரும் விளக்கம் இங்கு ஒப்புநோக்கத்தகுவதாகும்.

எஞ்சிய உரிய' என்றார் தொல்காப்பியனார். 'எஞ்சிய' என்றது, ஒரு பாவுக்குச் சிறப்புரிமையுடையனவாகப் பெயர் பெற்ற ஆசிரியவுரிச்சீர், வெண்பாவுரிச்சீர், வஞ்சியுரிச்சீர் என்னும் மூவகைச் சீர்களுள் வஞ்சியுரிச்சீரல்லாத ஏனையிரண்டினையும்.

௨௨ வெண்பா உரிச்சீர் ஆசிரிய உரிச்சீர்
இன்பா நேரடிக் கொருங்குநிலை இலவே.

## இளம்பூரணம் :

என்—எனின் வெண்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வெண்பாவுரிச்சீரும் ஆசிரிய வுரிச்சீரும் வெண் பாவினது[1] நேரடிக்கண் ஒருங்கு நிற்றலில்லை என்றவாறு. (௨௨)

## பேராசிரியம் :

இது, கட்டளையாசிரியப்பாவினுள் அடியுறழப்படாத சீர் இவையென்கின்றது.

(இ - ள்.) வெண்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஆசிரியப்பாவிற்கு ஒப்ப வரும் நிலை இல (எ-று).

'இன்பா நேரடி' யென்பது ஆசிரியவடி யென்றவாறு.[2] 'ஒருங்கு' என்றதனான் இயற்சீராகிய தன்சீரேபோல வெண் சீரும் வாராதென்பதாம். இயலசை மயங்கினவே இயற்சீரெனப் படுவன எனவும், உரியசை மயங்கினவே ஆசிரியவுரிச்சீரெனப் படுவன எனவும் முன்னர்ச் சொல்லிப் போந்தானாகலின் ஈண்டு உரியசை மயக்கத்தினையே ஆசிரியவுரிச்சீரென்

1. இச்சூத்திரத்தில், 'இன்பா' என்றது வெண்பா எனக்கொண்டார் இளம்பூரணர். அவர்கருத்துப்படி வெண்பாவின் நேரடியாகிய நாற்சீரடிக்கண் வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் அடுத்தடுத்து ஒருசேரநிற்றல் இல்லை-யெனவே வெண்பாவுரிச்சீரல்லாத இயற்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஒருசேரநிற்றல் உண்டோ என ஐயுறுதற்கும் இடனுண்டாகின்றது.

வெண்பாவின்கண் இயற்சீரும் வெண்சீருமல்லாத ஏனைச்சீரும் அடியும் மயங்குதல் இலக்கணமன்றாதலின் இங்கு 'இன்பாநேரடி' யென்றது, ஆசிரிய அடியை எனப் பேராசிரியர் முதலியோர் கூறிய பொருளே இங்குப் பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது.

2. இங்கு 'இன்பாநேரடி' என்றது, நாற்சீரடியினையே எழுத்தெண்ணிக் குறளடி முதல் கழிநெடிலடி வரை ஐவகையடிகளாகப் பகுத்தெண்ணிக் கொள்ளப்பெறும் கட்டளையாசிரியப்பாவின் அடியினை என்பது பேராசிரியர் கருத்தாகும்.

றான். எனவே, நீடுகொடி குளிறுபுலி என்னும் இரண்டாசிரிய வுரிச்சீரும் ஆசிரியத்து வந்து அடியுறழுமென்பது ஈண்டுக் கொள்ளப்படும்[1] அல்லது,

'முன்னிரை யுறினு மன்ன வாகும்' (தொல்-செய். 14)

என்ற மாட்டேற்றான் இயற்சீர்த்தன்மை சிறுபான்மை வகையான் எய்துவித்ததூஉம் இப்பயனோக்கியாயிற்று. இக்கருத்து நோக்கிப் போலுங்,

'கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ' (தொல்-செய். 24)

என்ற உம்மை இறந்தது தழீஇயிற்றுமா மென்பது.[2]

இனி ஒருசாரார் வெண்சீரும் ஆசிரியப்பாவினுள் வருங்கால் இயற்சீரிடையிட்டன்றி உடனியைந்துவாரா என்ப. அங்ஙனங் கொள்ளிற் கட்டளையடிக்கண்ணும் ஆசிரியவடியுள் வெண்சீரும் வந்து உறழப்பெறு மென்றானாம். அல்லாத வடிக்காயின் அது போக்கி,

'இன்சீ ரியைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய வடிக்கே' (தொல்-செய் 30)

என்புழிக் கூறப்படுமென்பது ஈண்டு நேரடிக்கென்பது கட்டளையடிக்கென்றவாறு.[3] (உ௩)

---

1. வெண்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஒருங்கு நிலையில என்றது, கட்டளையாசிரியப்பாவினுள் இயலசை மயங்கிய இயற்சீராகிய தன்சீரேபோல, வெண்பாவுரிச்சீரும் உரியசைமயக்கமாகிய ஆசிரியவுரிச்சீரும் ஒப்பவரும் நிலையில என்றவாறாம். எனவே உரியசையும் இயலசையும் கூடிய ஈரசைச்சீர்களுள் நிரையீற்றுச் சீர்களாகிய நீடுகொடி, குளிறுபுலி என்னும் ஆசிரியவுரிச்சீரிரண்டும் ஆசிரியத்துள் வந்து அடியுறழும் என்பது ஈண்டுக்கொள்ளப்படும் என்றார் பேராசிரியர்.

2. 'முன்னிரையுறினும்' அன்னவாகும் என்னும் மாட்டேறு உரியசையும் இயலசையும் மயங்கிவந்த நீடுகொடி, குளிறுபுலி என்னும் அவ்வீரசைச்சீர்க்குச்சிறுபான்மை இயற்சீர்த்தன்மை எய்துவித்ததென்பதும், நிரையீற்றாசிரியவுரிச்சீராகிய இவ்விரண்டும் ஆசிரியத்து வருதலேயன்றிக் கலிப்பாவிலும் விலக்கப்படா என்னுங் கருத்து நோக்கிப் போலும் 'கலித்தளை' மருங்கிற்கடியவும் படாஅ எனப் பின் வருஞ் சூத்திரத்து ஆசிரியர் கூறியுள்ளார் என்பதும் 'கலித்தளை மருங்கினும் கடியப் படாஅ' என அவ்வும்மையை இறந்ததுதழீஇய எச்சவும்மையாகக் கொள்ளினும் பொருந்துமென்பதும் பேராசிரியர் தரும் விளக்கமாகும்.

3. 'வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஆசிரியப்பாவினுள் வருமிடத்து இயற்சீரிடையிட்டன்றி உடனியைந்துவாரா' என இச்சூத்திரத்துக்குப் பொருள் கொள்வர் ஒருசாராசிரியர். அவ்வாறு கொள்ளின் ஈண்டு 'இன்பாநேரடி' என்றது

**நச்சினார்க்கினியம் :**

இது கட்டளை ஆசிரியத்திற்கு அடியுறழப்படாத சீர் இவை யென்கின்றது.

(இ-ள்.)[1] வெண்சீரும் ஆசிரியவுரிச்சீரும் கட்டளை ஆசிரியப்பாவில் வரும் அளவடிக்குப் பொருந்தநிற்றலின்று. எ—று.

எனவே, நீடுகொடி, உரறுபுலி என முன்னிரையீற்றவிரண்டும் உறழும் என்பது ஈண்டுக்கொள்க. கட்டளையடி யிங்ஙனம் வருமெனவே, சீர்வகையடிக்கு வெண்சீரும் ஆசிரியவுரிச்சீரும் பொருந்தவரும் என்றுணர்க. வெண்சீர் வந்தன மேற்கூறுப[2].

> "வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு"
>
> (திருமுருகாற்றுப்படை)

என ஆசிரியவுரிச்சீர் பொருந்தவந்தது.

**ஆய்வுரை :**

இது வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீர் என்னும் இருவகைச் சீர்கட்கும் உரியதோர் மரபு கூறுகின்றது.

(இ-ள்) வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் இன்பா நேரடிக்கண் ஒருசேர நிற்றல் இல எ-று.

இங்கு, 'இன்பா நேரடி' யென்றது வெண்பாவினது நேரடியை யெனக் கொண்டார் இளம்பூரணர். வெண்பாவின் நாற்சீரடிக்கண் வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஒருங்கு நிற்றல் இல எனவே வெண்பாவுரிச்சீரும் இயற்சீரும் ஒருசேர நிற்றலை-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

கட்டளையடியாதலின் கட்டளையடிக்கண் ஆசிரியவடியுள் வெண்சீரும் வந்து உறழப் பெறும் என்றாராயிற்று. கட்டளையடியல்லாத சீர்வகையடிக்காயின், ''இன்சீரியையவருகுவதாயின், வெண்சீர்வரையார் ஆசிரியவடிக்கே'' (செய். 30) எனப் பின்னர்க் கூறப்படுகின்றது.

1. 'இன்பா' என்றது, ஆசிரியப்பா எனவும் 'நேரடி' என்றது கட்டளையடியெனவும் பேராசிரியர் பொருள் கொண்டவாறே நச்சினார்க்கினியரும் பொருள் கொண்டார்.

2. 'இன்சீரியைய வருகுவதாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய வடிக்கே'

(செய்யுளியல்-௫௰)

யுடைய எனவும் கொள்ள வைத்தாராயிற்று.

இனி, இச்சூத்திரத்தில் 'இன்பா நேரடி' யென்றது, ஆசிரிய அடியாகிய கட்டளையடியினையெனவும் 'வெண்சீரும் ஆசிரிய-வுரிச்சீரும் கட்டளை யாசிரியப்பாவில் வரும் நாற்சீரடிக்குப் பொருந்தி நிற்றல் இல்லை' என்பதே இச்சூத்திரத்தின் பொருள் எனவும் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். ஆசிரியர் தொல்காப்பியனார் இச்சூத்திரத்தால் உணர்த்தக் கருதிய பொருள் இதுவென்பது மேலும் ஆராய்தற்குரியதாகும்.

**௨௩. கலித்தளை மருங்கிற் கடியவும் பெறாஅ.[1]**

**இளம்பூரணம் :**

என் - எனின். கலிப்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கலித்தளை வரும்வழி மேற் சொல்லப்பட்ட இரு வகைச்சீரு மொருங்கு நிற்கவும் பெறும் என்றவாறு.[2] (௨௩)

**பேராசிரியம் :**

இது, கலிப்பாவிற் சீர்மயங்குமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேல் ஆசிரியவடி யுறழ்தற்கண் விலக்கப்படாத நிரையீற்றாசிரியவுரிச்சீர் இரண்டுங் கலிப்பாவின் அடங்குங்காற் கடிதலுமுடையகொல்லெனின் ஈண்டும் அவை விலக்கப்படா (எ-று)

எனவே, நிரையீற்றாசிரியவுரிச்சீர் இரண்டும் கலியடியுறழ் வனவாயின. 'கடியவும்படா' வென்பது இறந்ததுதழீஇய எச்ச வும்மை; ஆசிரியத்திற் கடியப்படாவாதலேயன்றி ஈண்டுக் கடித லும் படாவென்றமையின்.[3] 'கலித்தளை மருங்கின்' என்பது வினை செய்யிடத்துக்கண் ஏழாவது வந்தது; 'தளைத்தல்' என்பது சீர்த்தொழிலாகலின். அல்லாக்கல் இருசீரானாகிய-தொரு தளையிடனாகப் பிறிதொருசீர் ஆண்டு வரல்வேண்டு-

---

1. 'கடியவும் படா' என்பது பேராசிரியருரையிற் கண்ட பாடம்.

2. வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் கலித்தளையடியில் அடுத்தடுத்து ஒருங்குநிற்கவும் பெறும் என்பதாம்.

3. ஆசிரியத்திற் கடியப்படாவாதலேயன்றிக் கலித்தளை மருங்கில் ஈண்டுக் கடிதலும் படாஅ என்றமையின் 'கடியவும்படாஅ' என்புழி உம்மை இறந்தது-தழீஇய எச்சவும்மை.

மென மறுக்க[1]. மற்றுக் கலித்தளை மருங்கின் வெண்சீர் வருக வென்னாரோ வெனின், அது சொல்ல வேண்டுமோ ? ஆசிரியத்துத் தன்சீர் வாராதன கூறுவதன்றி வருமென்பது கூறான், வெண்பாவிற்கும் அவ்வாறே வெண்சீர் வருமென விதந்தோதான், அதுபோல அதனியற்றாகிய கலிப்பாவிற்கும் வெண்சீர் வருமென விதந்தோதல் வேண்டுவதன்று;[2] வஞ்சிப்-பாவிற்குப் போல வேறு சீரின்மையினென்பது அஃதேல்,

'வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய' (தொல் செய்-22)

என வஞ்சிப்பாவினுள் ஆசிரியவுரிச்சீர் வருமென்று கூறல் வேண்டாவெனின் வேண்டுமன்றே, வெண்சீர் வருமென விதந் தோதுவான் ஆசிரியவுரிச்சீர் ஆண்டு விலக்குண்ணுமாகலி னென்பது.[3]

அவற்றுக்குச் செய்யுள் :

"ஓங்குவரை யடுக்கம்பாய்ந் துயிர்செகுக்குந் துறைவகேள்'

"விளங்குமணிப் பசும்பொன்னின் வியலறைமேல் விளை-யாடி" என இவை நிரையீற்றாசிரியவுரிச்சீர் கலிப்பாவினுள் வந்தன.

நிறைரயீற் றாசிரியவுரிச்சீர் கலிப்பாவினுள் வந்தன. எனவும்,

"வஞ்சியே னென்றவன்ற னூருரைத்தான் யானவனை"

(யா-ப-330)

எனவும்,

1. 'கலித்தளைமருங்கின்' என்பது கலியோசைபடச் சீர்கள் தம்முள் தளைத்தற்கண் என வினைசெய்யிடமாகிய தொழில் நிகழ்ச்சிக்கண் ஏழாம் வேற்றுமை வந்தது. 'தளைமருங்கு' என்பதனைத் தளைத்தற்கண் எனத்தொழி-லிடமாகக் கொள்ளாக்கால், இருசீரானாகிய தளையிடமாகப் பிறிதொரு சீர் ஆண்டுவரும் எனத் தவறாகக் கொள்ளவேண்டிய நிலையேற்படும் என்பதாம்.

2. ஆசிரியத்தும் வெண்பாவிலும் அவ்வப்பாவுக்குரிய தன்சீர் வருமெனக் கூறவேண்டியதில்லை. அதுபோன்றே வெண்பாவியற்றாகிய கலிப்பாவின்கண் வெண் சீர்வரும் எனவிதந்து கூறவேண்டிய இன்றியமையாமையில்லை என்பதாம்.

3. ஆசிரியவியல்பினதாகிய வஞ்சிப்பாவினுள் ஆசிரியவுரிச்சீர் வருமெனக் கூறவேண்டிய இன்றியமையாமையில்லையாயினும் வஞ்சிப்பாவின்கண் ஆசிரிய-வுரிச்சீரேயன்றிப் பிற சீரும் கலத்தலுண்மையின் அங்கு வெண்சீர் வருமென எடுத்-தோதின் ஆசிரியவுரிச்சீர் விலக்குண்ணும். அதுபற்றியே 'வஞ்சிமருங்கின் எஞ்சிய-வுரிய' (செய். 22) என ஆசிரியவுரிச்சீரும் சேர்த்தோதினார் ஆசிரியர்.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" (கலி-11)

என இவையிரண்டும் வெண்சீரெனத் தொகுக்கப்படுதலின் வெண்சீரென்னுஞ் சொல்லின் முடியுமிலக்கணத்தான் விதந் தோதாமேயும் அவ்விருபாவிற்கும் உரியவாயின. மற்றுக் கலி மருங்கினென்னாது தளைமருங்கினென்ற தென்னையெனின், இவ்வாராய்ச்சியுடையன கட்டளையடியென்ற தென்பது. எனவே, தளையென்று ஓதுவனவெல்லாங் கட்டளையடியே நோக்குமென்பது பெற்றாம். இங்ஙனம் வரையறையுடையன கட்டளையடியெனவே, அல்லாத அடிக்கண் ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும் வருமென்பது பெறுதுமென்பது. மற்றுக் கட்டளையடி யல்லாத ஆசிரியவடியுள் உரியசைமயங்கிய ஆசிரியவுரிச்சீரும் வரு மென்பதூஉங் கூறுகவெனின், அவை விலக்குண்டது கட்டளை யடிக்காதலின் விலக்காதவழித் தன்சீர் வருதல் விதந்தோத வேண்டாவென்பது முற்கூறியவாறே கொள்க.[1] (உச)

**நச்சினார்க்கினியம் :**

இது கட்டளைக்கலிக்கட் சீர்மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்.) கலித்தளையானாய கலிப்பாவில்வரும் நேரடியிடத்து முற்கூறிய முன்னிரையீற்ற விரண்டுசீர்[2] வருதலும் நீக்கப்படா. எ-று.

உம்மை இறந்தது தழீஇயிற்று.[3]

"ஓங்குதிரை யடுக்கம்பாய்ந் துயிர்செகுக்குந் துறைவகேள்"
"விளங்குமணிப் பசும்பொன்னின் வியலறைமேல் விளையாடி"

---

1. 'தளை' என்று விதந்து கூறப்படுவனவெல்லாம் பதினேழ் நிலத்து ஐவகையடிகளாகி எழுத்தெண்ணிக்கொள்ளப்படும் நாற்சீரடிக்கேயுரியனவாதலின் இவ்வாறு எழுத்தெண்ணப்பெறாத சீர்வகையடியாகிய ஆசிரிய அடிக்கண் ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும் வரும் என்பது தானே பெறப்படும். உரியசைமயங்கிய ஆசிரிய வுரிச்சீர்வாரா என விலக்கப்பட்டது எழுத்தெண்ணிக்கொள்ளப்படும் ஆசிரியவடி யாகிய கட்டளையடிக்கேயாதலின், அங்ஙனம் விலக்கப்படாத சீர்வகையடிக்கண் ஆசிரிய வுரிச்சீராகிய தன்சீர் வருதல் விதந்தோதவேண்டிய இன்றியமையாமை யில்லையென்பதாம்.

2. நேர்புநிரை நிரைபுநிரை
நீடுகொடி, குளிறுபுலி என்னும் இருசீர்கள்,

3. ஆசிரியப்பாவிற் கடியப்படாவாதலேயன்றிக் கலிப்பாவிலுங் கடியப்படா என்ற பொருளில் ஆளப்பெற்றமையின் 'கடியவும் படாஅ' என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாயிற்று.

எனவரும் இவ்வாறு கூறவே, சீர்வகைக் கலியடிக்கு இவை-யொழிந்த ஆசிரியவுரிச்சீர்களும் ஏனைச்சீர்களும் வேண்டியவாறு வரப்பெறுமாயிற்று.

**ஆய்வுரை :**

இது, கலிப்பாவிற் சீர் மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) கலித்தளையடியின்கண் மேற்குறித்த இருவகைச் சீரும் ஒருங்கு நிற்கவும் பெறும் எ-று.

ஆசிரியத்திற் கடியப்படாமையேயன்றிக் கலிப்பாவிலும் கடியவும் படா என்றமையின் 'கடியவும்' என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாகும். தளையென்று ஓதுவன-வெல்லாம் எழுத்தெண்ணிச் சீர் வகுக்கப் பெறும் கட்டளையடி-யினையே குறிக்கும் என்பர் பேராசிரியர்.

உ௪ கலித்தளை யடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே.

**இளம்பூரணம் :**

என் - எனின். இதுவுமது.

(இ - ள்) கலிப்பாவிற்குரிய கலித்தளைக்கண் நேரீற்றியற் சீர் நிற்றற்குரித் தன்று ஆராய்வார்க் கென்றவாறு.[1] (உ௪)

**பேராசிரியம் :**

இதுவுங் கட்டளையடிக்கு எண்ணப்பட்டதொரு சீர்வரை யறை.

(இ - ள்) கலித்தளை அடிவயின்-கலிப்பாவினது கட்டளை யடிக்கண்; நேரீற்றியற்சீர் நிலைக்கு உரித்தன்று — தேமா புளிமா என்னும் இரண்டியற்சீரும் வரப்பெறா; தெரியு மோர்க்கே-துள்ளலோசையைத் தெளிவார்க்கு (எ - று).

ஆகாவென்றவற்றைக் காட்டலாவதில்லை; ஆகாவென்பதல் லது. கட்டளையடிக்கண் வரைந்தோதவே, அல்லனவற்றுக்கண் வருமென்பதாம்[2] அவை ;

1. கலிப்பாவின் ஓசையை ஆராய்வார்க்குத் தேமா, புளிமா என்னும் நேரீற்றியற்சீர் கலிப்பாவடியில் நிற்றற்குரியதன்று என்பது நன்கு புலனாம்.

2. தேமா, புளிமா என்னும் நேரீற்றியற்சீர் இரண்டும் கலிப்பாவினது கட்டளையடிக்கண்வாரா என ஆசிரியர் வரையறுத்துக் கூறுதலால், கலிப்பாவின் சீர்வகையடிக்கண் அவ்விருசீரும் அருகி வருதலுண்டு என்பதாம்.

''பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை'' (கலி-5)
எனவும்,

''உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையை" (கலி-38)
எனவும்,

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்" (கலி 39)
எனவுங் கலியடியுள் வந்தன. இயற்சீர் பத்துள்ளும் இவை யிரண்டினையுங் கலிக்கண் வாராவெனவே ஒழிந்த ஆசிரியத் துள்ளும் வெண்பாவுள்ளும் பத்தியற்சீரும் வேறுவேறு வந்து அடியுறழுமென்பதூஉம், இதற்காயின் எட்டியற்சீர் அடியுறழு மென்பதூஉங் கூறினானாம். எனவே ஆசிரியம், இயற்சீர்பத்தும் ஆசிரிய உரிச்சீரிரண்டுமெனப் பன்னிரண்டுசீர் பெறுவதா யிற்று. வெண்பாவும் இயற்சீர்பத்தும் வெண்சீர் நான்குமெனப் பதினான்குசீர் பெறுவதாயிற்று. கலிப்பாவடியின் இயற்சீரெட் டும் வெண்சீர் நான்கும் ஆசிரியவுரிச்சீரிரண்டுமெனப் பதி னான்குசீர் பெறுவதாயிற்று.[1] அசைச்சீருளாவன முன்னர்ச் (செய்யுள் உஎ.) சொல்லுதும். இனி, வஞ்சிப்பாவிற்கும்.

"வஞ்சி மருங்கி னெஞ்சிய உரிய'' (தொல்-செய்-22)
என முற்கூறியவாற்றான் ஈரசைச்சீர் பதினாறும் மூவசைச்சீர் அறுபத்துநான்குமென எண்பதுசீருங் கட்டளையடியல்வழி உரியவென எய்துவித்ததாம்.[2] அவற்றுள் தேமா புளிமா வென்னும் இரண்டுசீரும் ஆகாத இடம் இனிச் சொல்லு கின்றான். (உரு)

**நச்சினார்க்கினியம் :**

இதுவும் கட்டளையடிக்கோர் சீர்வரையறை கூறுகின்றது.

---

1. ஆசிரியப்பா இயற்சீர்பத்தும் ஆசிரியவுரிச்சீர் இரண்டும் ஆகப் பன்னி ரண்டு சீர்களும், வெண்பா இயற்சீர்பத்தும் வெண்சீர்நான்கும் எனப் பதினான்கு சீர்களும், கலிப்பா தேமா புளிமா என்னும் இரண்டும் நீங்கலாக இயற்சீர் எட்டும் வெண்சீர் நான்கும், ஆசிரியவுரிச்சீர் இரண்டும் ஆகப் பதினான்கு சீர்களும் பெறும்.

2. வஞ்சிப்பா கட்டளையடியல்லாதவழி 'வஞ்சி மருங்கினெஞ்சியவுரிய' (செய். 22) என முற்கூறியபடி ஈரசைச்சீர் பதினாறும் மூவசைச்சீர் அறுபத்து நான்கும் ஆக எண்பது சீரும் பெறும் என்பதாம். அவற்றுள் முற்கூறிய தேமா புளிமா என்னும் இயற்சீரிரண்டும் வஞ்சிப்பாவின் தூங்கலோசைப்பட அடியின் முதற்கண் நில்லா என்பது அடுத்துவருஞ் சூத்திரத்தாற் கூறப்படும்.

(இ-ள்.) கலித்தளையானாய கலிப்பாவில்வரும் நேரடி-யிடத்துத்[1] தேமா புளிமா என்னும் நேரீற்றியற்சீரிரண்டும் நிற்றற்குரித்தன்று, துள்ளலோசையைத் தெரிவோர்க்கு. எ-று.

இங்ஙனம் வரைந்தோதவே, சீர்வகையடிக்கண் இவ்-வீரண்டியற்சீரும் வருதல் பெறுதும்.

உ-ம். "ஐயிரு தலையி னரக்கர் கோமான்"

எனவரும். எனவே, நேரீற்றியற்சீர் ஒழிந்த எட்டியற்சீரும் கலிக்கு வருதலும் ஆசிரியத்திற்கும் வெண்பாவிற்கும் ஒழிந்த பத்தியற்-சீரும் வருதலும் பெற்றாம்.

**ஆய்வுரை :**

இது, கலியடிக்கு எண்ணப்படாததோர் சீர்வரையறை கூறுகின்றது.

(இ-ள்) கலித்தளையானாகிய கலிப்பாவில் வரும் நேரடியின்-கண் நேரீற்றியற்சீர் நிற்றற்குரியதன்று; (துள்ளலோசையினைத்) தெரிந்துணர்வார்க்கு எ-று.

நேரீற்றியற்சீராவன தேமா, புளிமா என்பன.

**உரு வஞ்சி மருங்கினும் இறுதி நில்லாது.[2]**

**இளம்பூரணம் :**

**என்-எனின். வஞ்சிக் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ-ள்.) வஞ்சிப்பாவினும் அடியினீற்றின்கண் நில்லாது நேரீற்றியற்சீர் என்றவாறு. எனவே, அடிமுதற்கண் நிற்கப் பெறும் என்றவாறாம்[3].

---

1. 'தளை' யென்று ஓதுவனவெல்லாம் எழுத்தெண்ணி வகுக்கப்பெறும் கட்டளையடியாகிய நாற்சீரடியையே குறிக்கும் என்பது பேராசிரியர் கருத்தாகும். இக்கருத்தினையே நச்சினார்க்கினியரும் ஏற்றுக்-கொண்டுள்ளாராதலின் 'கலித்தளையடி' என்பதற்குக் 'கலித்-தளையானாய கலிப்பாவில் வரும் நேரடி' எனப் பொருள் வரைந்துள்ளார்.

2. 'நில்லா' என்பது பேராசிரியருரையிற் கண்ட பாடம். 2 'வஞ்சி மருங்கினும் நேரீற்றியற்சீர் இறுதிநில்லாது' என நேரீற்றியற்சீர் என்பதனை அதிகாரத்தால் வருவித்துரைக்க.

3. 'இறுதி' என்றது, அடியின் ஈற்றினை. அடியின் ஈற்றின்கண் நில்லாது எனவே அடிமுதற்கண் நிற்கப்பெறும் எனக் கொள்வர் இளம்பூரணர்.

**பேராசிரியம் :**

இது, வஞ்சிப்பாவினுள் வாராஇயற்சீர் கூறுகின்றது.

(இ-ள்.) வஞ்சி மருங்கினும்—மேற்கூறிய இயற்சீர் இரண்டும் வஞ்சிப்பாவினும்; இறுதி நில்லா—ஈற்றில் நிலைமைப் படா (எ-று)

வஞ்சித்தளைமருங்கி னென்னாது வஞ்சி மருங்கினென வாளாது கூறினான், அது கட்டளையடிக்கல்லாமையின். வஞ்சிப் பாவினுட் சீர்வருங்கால் ஒழிந்த பாவிற்குப்போலச் சீரியைந்திறு தன் மாத்திரையன்றிச் சீர்தோறுந் தம்முள் வேறுபாடு தோன்றத் தூங்கப்படும். அவ்வாறு தூங்கலோசைப்பட நில்லா தேமா புளிமாவென்னும் இரண்டு சீருமென்றவாறாம். உம்மை இறந்தது தழீஇயிற்று. 'இறுதிநில்லா' வென்பது இறுதலோடு நில்லாவென்றவாறு. எனவே, தூங்கலோசைப்பட முதற்கண் வாராவென்றவாறாம். என்னை? இருசீரினுள் வருஞ்சீரோடு தொடருங்கால் இறுதற்றொழில்பெறுவது நின்றசீராகலினென் பது இதனானே ஒழிந்த இயற்சீரில் தூங்கலோசைப்பட நிற்கு மென்றவாறாம்[1]

"கொற்றக் கொடி யுயரிய"

எனவும்,

"களிறுங் கதவெறிந்தன"

எனவும் நேரீற்றியற்சீர் முதற்கண் தூங்காவாயின.

"அகவல்யன் மலைவேலி
நிலவுமணல் வியன்கானல்" (புறம்-17)

என ஒழிந்த இயற்சீர் தூங்கினவென்பது. இவையுங் கட்டளை யல்லவென்பது 'அசையுஞ் சீரும்' (தொல் செய்-11) என்பதனான் அறிக.[2] இறுதிக்கண் விலக்காமையின்,

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்" (புறம்.2)

என நேரீற்றியற்சீர் வந்தன.

---

1. தேமா புளிமா என்னும் நேரீற்றியற்சீர் இரண்டும் வஞ்சிப்பாவில் அடி முதல்நின்ற சீரின்கண் தூங்கலோசைப்பட வாரா. எனவே நேரீற்றியற்சீரல்லாத ஒழிந்த இயற்சீரின்கண் தூங்கலோசைப்படவரும் என்பதாம்.

2. இவையும் கட்டளையடியல்லாத சீர்வகையடிகளுக்கேயென்பது 'அசையுஞ் சீரும்' (செய். 11) என்பதனால் அறியப்படும்.

இனி, ஈற்றுக்கண் வருதல் சிறுபான்மை யென்பாரும், யாண்டும் இறுதிக்கண் வாராவென்பாரும் இச்சூத்திரத்தை யுரைக்குமாறு வஞ்சியடியிறுதிக்கண் இவை வாராவெனப் பெரும்பான்மைபற்றி ஓதினானெனவும், இஃதொருதலையாக விலக்கினானெனவுஞ் சொல்லுப. அவ்வாறு கூறின் முதற்கண் அவ்விருசீரும் வருதல் பெரும்பான்மையாதல் வேண்டுமென மறுக்க[1] என்றார்க்குத்,

"தன்பால் வெங்கள்ளி
னொலிவே லிலங்குதடக்கை"

எனவும்,

"புன்காற் புணர்மருதின்
போதப்பிய புனற்றாமரை"

எனவுந்,

தேன்றாட் டீங்கரும்பின்"

எனவும் வந்தனவாலெனின், அங்ஙனம் நலிந்து காட்டினவை அளபெடை வெண்சீராம்; அது செவிகருவியாக உணர்க. என்னை ?

"கொற்றக் கொடியுயரிய"

என அளபெழாதவழித் தூங்காமையின்: அல்லதூஉம், நேரீற் றியற்சீர் இறுதிக்கண் நிற்றல் பெரும்பான்மை யெனப்படும்;

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித்தலைஇய தீயுந்
தீமுரணிய நீரும்" (புறம்-2)

எனவும்,

---

1. இச்சூத்திரத்தில் உள்ள 'இறுதிநில்லா' என்னுந்தொடர்க்கு, வஞ்சியடியிறுதிக்கண் நேரீற்றியற்சீர் இரண்டும் வாராவெனப்பெரும்பான்மைபற்றி ஓதினாராதலின் ஈற்றுக்கண்வருதல் சிறுபான்மையென்பாரும், யாண்டும் இறுதிக்கண் வாரா என ஒரு தலையாக விலக்கினாரெனப் பொருள் கொள்வாருமுளர். அவ்வாறு பொருள் கொள்ளின் நேரீற்றியற்சீராகிய அவையிரண்டும் முதற்கண்வருதல் பெரும்பான்மையாதல் வேண்டும். அங்ஙனம் வாராமையின் அவர்கூறும் பொருள்கள் பொருந்தா என மறுக்க என்பதாம்.

"ஆழ்ந்துபட்ட கிடங்கி
னுயர்ந்தோங்கிய வாயில்"

எனவும், ஒரோ செய்யுட்கண்ணே பல வந்தமையினென்பது. மருங்கென்றதனானே நேர்நிலைவஞ்சிப்பகுதிக்கே இவ்வரையறை கொள்ளப்படும். கொள்ளவே வியனிலைவஞ்சிக்கு இவ்வரை-யறை யின்றென்பது. மற்று,

"மண்டிணிந்த நிலனும்"

என்பது நேர்நிலைவஞ்சியாகலின் அடிநிலையோடு அடிக் கூட்டத்துக்கண் அதற்குத் தூங்கலோசை கொள்ளுமா றென்னை யெனின், அஃது இலக்கண அடியன்மையின் ஈண்டாராய்ச்சியின் றென்பது.[1] நேர்நிலைவஞ்சியுள் இலக்கண அடிக்கண் இயற்சீரெல் லாம் வாரா வென்பது,

'குறளடி முதலா வளவடி காறும்' (தொல்·செய்-57)

என்புழிச் சொல்லுதும். (உ௬)

**நச்சினார்க்கினியம் :**

இது கட்டளையல்லா வஞ்சிப்பாவில் வரப்பெறா இயற்சீர் கூறுகின்றது; வஞ்சித்தளை மருங்கினும் என்னாது வஞ்சி-மருங்கினும் என வாளா கூறினமையின் கட்டளையன்மை பெறுதும் : தளைத்தற்றொழில்[2] கட்டளையடிக்கண்ணதாகலின்.

---

1. 'தன்பால் வெங்கள்ளின்'
'புன்காற் புணர்மருதின்'

'தேன்றாட் டீங்கரும்பின் என நலிந்து காட்டியவை தன்பாஅல், புன்காஅல் தேன்றாஅட் என அளபெடை வெண்சீராம் என்பது செவிகருவியாகவுணரப்படும். இங்ஙனம் அளபெடாதவழிக் கொற்றக்கொடியுரிய' என்றாங்கு நேரீற்றியற்சீர் வஞ்சியடியின் முதற்கண் இறுதற்றொழிற்பட (தூங்கலோசைப்பட) நில்லா என்பதே 'இறுதிநில்லா' என்பதன் பொருளாகும் எனவும், வஞ்சியடியின் இறுதிக்கண் ஆயின் நேரீற்றியற்சீர் நிற்றல் பெரும்பான்மையென்பது 'மண்டிணிந்த நிலனும்' (புறநா-2) எனவரும் புறப்பாடலில் ஒரு செய்யுட்-கண்ணே பல வந்தமையின் புலனாம் எனவும், 'வஞ்சிமருங்கின்' என்ற-தனானே நேரீற்றியற்சீர் முதற்கண் வாராவென்னும் இவ்வரையறை குறளடி-வஞ்சியாகிய நேர்நிலைவஞ்சிக்கே யுரியதெனவுங் கொள்வர் பேராசிரியர்.

நேர்நிலைவஞ்சி என்றது குறளடிவஞ்சிப்பாவினை; வியநிலைவஞ்சி என்றது சிந்தடி வஞ்சிப்பாவினை.

இலக்கண அடி என்றது எழுத்தெண்ணிக்கொள்ளப்படும் கட்டளையடியினை.

2. ஈண்டு தளைத்தற்றொழில் என்றது, நாற்சீரடியினையே எழுத் தெண்ணி ஐவகையடிகளாகப் பகுத்துக் கொள்ளுதலை.

(இ-ள்.) வஞ்சிப்பாவிடத்தும் அசைச்சீர் இரண்டும்[1] இறுதலோடு நில்லா முதற்சீர்க்கண். எ-று.

என்றது மற்றைப் பாக்களைப்போலச் சீரியைந்திறுதன்மாத்திரையன்றி முதற்சீர்தோறும் தம்முள் வேறுபாடுதோன்றத் தூக்கப்படும் ஓசை வஞ்சிக்கு வேண்டுதலின் அவ்வோசைபடப் பெரும்பான்மை நில்லா தேமா, புளிமா என்னும் இரண்டும் எ-று: என்னை ? முதற்சீர் வருஞ்சீரோடு தொடருங்கால் இறுதற்றொழில் பெறுவது நின்ற சீராகலின். எனவே, நலிந்து கூறியவிடத்துச் சிறுபான்மை தூக்கப்படுமோசைபடவும் நிற்கும் என்றுணர்க. உம்மை இறந்தது தழீஇயிற்று.

உ-ம். "கொற்றக் கொடியுயரிய"
"களிறுங் கதவெறிந் தனவே"

என நேரீற்றியற்சீர் முதற்கட் டூங்காவாயின.

"அகல்வயன் மலைவேலி
நிலவுமணல் வியன்கானல்" (புறம்-கஎ)

எனவும்,

"மேதக மிகப்பொலிந்த
வோங்குநிலை வயக்களிறு" (மதுரைக்காஞ்சி)

எனவும் ஒழிந்த இயற்சீர் முதற்கட் டூங்கின. இவை கட்டளையன்மையுணர்க.

"புன்காற் புணர்மருதின்"
"தேன்றாட் டீங்கரும்பின்"

என நலிந்து கூறியவழித் தூங்கின.[2]

இனி

"மண்டிணிந்த நிலனு
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரும் வளியும்
வளித்தலைஇய தீயுந்
தீமுரணிய நீரும்" (புறம்-உ)

---

1. 'அசைச்சீர் இரண்டும்' என்பது பிழை; 'அச்சீர் இரண்டும்' எனத் திருத்திக் கொள்க. 'அச்சீர் இரண்டும்' என்னும் சுட்டு, தேமா, புளிமா என்னும் நேரீற்றியச்சீர் இரண்டினையும் சுட்டி நின்றது.

2. நலிந்து கூறுதலாவது, 'புன்காற்' 'தேன்றாட்' என்னும் இயற்சீரையே 'புன்காஅற்' 'தேன்றாஅட்' என அளபெடையால் வெண்சீராக்கிக் கூறுதல்.

என ஈற்றுக்கண் வருதல் பெரும்பான்மையாதலின் இறுதி நில்லா எனப் பொருள் கூறலாகாமை யுணர்க. 'மருங்கு' என்றதனான் நேர்நிலைவஞ்சிக்கே இவ்வரையறை: வியனிலை வஞ்சிக்கு இன்றென உணர்க.

**ஆய்வுரை :**

இது, வஞ்சிக்குரியதோர் மரபு கூறுகின்றது.

(இ-ள்) முற்கூறிய நேரீற்றியற்சீர் இரண்டும் அடியின் ஈற்றின்கண் நில்லா எ-று.

'இறுதிநில்லாது' என்பதற்கு 'அடியீற்றின்கண் நில்லாது' எனப் பொருள் வரைந்து, எனவே அடிமுதற்கண் நிற்கப்பெறும் என்றவாறாம் என விளக்கம் தந்தார் இளம்பூரணர்.

> 'மண்டிணிந்த நிலனும்
> நிலனேந்திய விசும்பும்' (புறம்-2)

எனவரும் புறப்பாடலில் நேரீற்றியற்சீர் அடியிறுதிக்கண் பெரும்பான்மையும் பயின்றுவரக் காணுதலால் இச்சூத்திரத்துக்கு இளம்பூரணர் கூறும் பொருள் பொருந்தாதெனவுணர்ந்த பேராசிரியர், 'இறுதி நில்லா' என்பதற்கு, இறுதற்றொழிலாகிய தூங்கலோசைப்பட அடிமுதற்கண் வாரா எனப் பொருள் கொண்டு,

> 'கொற்றக் கொடியுயரிய'

எனவும்,

> 'களிறுங் கதவெறிந்தன'

எனவும் நேரீற்றியசீர் அடிமுதற்கண் தூங்கலோசைப்பட வாரா யின எனவும்

> 'அகல்வயல் மலைவேலி
> நிலவுமணல் வியன்கானல்'

என நேரீற் றியற்சீரல்லாத பிற சீர்கள் அடிமுதற்கண் தூங்கலோசைப்பட வந்தன எனவும் உதாரணங்காட்டி விளக்கினார். இருசீரான்வரும் குறளடிவஞ்சிப்பாவிற்கே இவ்வரையறை கொள்ளப்படும் என்பதும் முச்சீரான் வரும் வஞ்சிக்கு இத்தகைய வரையறையில்லை யென்பதும் பேராசிரியர் கருத்தாகும்.

உசு. இசைநிலை நிறைய நிற்குவ தாயின்[1]
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே.

**இளம்பூரணம் :**

என்-எனின். ஓரசைச்சீ ராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இசை நிற்கின்றநிலை நிரம்பா நிற்குமாயின் அசையும் சீராந் தன்மைபோல[2] வரையார் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம்

'நாள், மலர், காசு, பிறப்பு'

என வரும். உசு

**பேராசிரியம் :**

இது, நான்கசையுஞ் சீராகும் இடனுமுடைய என்கின்றது.

(இ - ள்.) ஓசை நிலைமையாற் சீர்த்தன்மைபட நிறைந்து நிற்குமாயின் அசைநிலைமைப்பட்ட சொற்களையெல்லாம் சீர்-நிலை பெறுதற்கண் வரையார் (எ-று).

"கழறொழா மன்னவர்தங் கை"

என்று நேரசை சீராயிற்று.

"புனனாடன் பேரே வரும்"

என நிரையசை சீராயிற்று.

"எய்போற் கிடந்தானென் னேறு"

(புறப்-வெண்பாமாலை-வாகை. 22)

என நேர்பசை சீராயிற்று.

"மேவாரை யட்ட களத்து" (களவழி-25,27,36)

என நிரைபசை சீராயிற்று. பிறவுமன்ன. இவற்றை உண்மை வகையாற் சீராமென்றான் அல்லன்:

"தொடர்மொழி யெல்லா நெட்டெழுத் தியல"

(தொல். எழுத்-மொழி. 17)

---

1. 'நிற்குபவாயின்' என்பது பேராசிரியருரையிற்கண்ட பாடம். அசை நிலை இசைநிலை நிறைய நிற்குவதாயின் சீர்நிலைபெறல் வரையார் என இயைத்துப் பொருள்கொள்க.

2. "அசையும் சீராந்தன்மைபோல வரையார்" எனவரும் இவ்வுரைத் தொடர், "அசையும் சீராந்தன்மைபெறல் வரையார்" என்றிருத்தல் பொருட் பொருத்தமுடையதாகும்.

என்றாற்போலக் கூறினானென்பது.[1] இவை இன்ன பாவினுள் வருமென்பது முன்னர்ச் (செய்-௭௩) சொல்லுதும். இங்ஙனங் கூறாக்கால் வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி யென்னுமாறு இல்லையென்பது.[2]

**நச்சினார்க்கினியம் :**

இது நான்கசையுஞ் சீராம்இடனும் உடைய என்கின்றது

(இ-ள்.) இசைநிலை — வாயின் எ-து ஓசைநிலைமையாற் சீர்த்தன்மைப்பட நிறைந்து நிற்குமாயின். அசை நிலைவரையார் சீர்நிலை பெறல்[3] — எ-து அசைநிலைப்பட்ட சொற்களை யெல்லாம் சீர்நிலை பெறுதற்கு வரையார். எ-று.

உ-ம். 'கழறொழா மன்னவர்தங் கை'
'புனனாடன் பேரே வரும்'
'எய்போற் கிடந்தானென் னேறு''
(வெண்பாமாலை-வாகை-௨௨)

''மேவாரை யட்ட களத்து''
(களவழி ௨௫, ௨௭, ௩௬)

என நேரசையும், நிரையசையும், நேர்பசையும், நிரைபசையும் ஆயிற்று. இவை ஒரோவோரோசைக்குக் காட்டிற்றேனும் ஒழிந்த அசைகட்குங் கூறிக்கொள்க.[4] இங்ஙனம் கூறாக்கால்

---

1. உயிரெழுத்துக்களில் குறுமையும் நெடுமையும் மாத்திரையென்னும் அளவு பற்றி வகுத்துக்கொள்ளப்படுதலின் இரண்டெழுத்துக்களைக் கடந்து மூன்றெழுத்து முதலாக வரும் மொழியிறுதியில் நின்ற எழுத்துக்களெல்லாம், நெடிற்கீழ்நின்ற எழுத்துக்களின் இயல்பையுடையன என்பது இச்சூத்திரத்தின் பொருளாகும். புகர், புகழ் எனக் குறிலிணைக்கீழ் நின்ற ரகார ழகாரங்கள் தார் தாழ் என நெடிற்கீழ்நின்ற ரகார ழகாரங்கள்போல் ஒப்புவகையான் கொள்ளப் படுதல் போன்று நேர், நிரை, நேர்பு, நிரைபு எனவரும் ஓசை நிறைந்து நிற்கும் நிலைமையிற் சீர்போன்று ஒப்புவகையாற் கொள்ளப்படுமென்பதாம்.

2. இவ்வாறு அசையே சீராய் வரும் எனக் கூறாதுபோனால் அசையே சீராக முடியும் வெண்பாவின் ஈற்றடியினை முச்சீரடி என்று வழங்குதற்கு இடமில்லாது போம் என்றவாறு.

3. 'அசைநிலை சீர்நிலைபெறல் வரையார்' என இயையும். அசைநிலை-அசையாம் நிலையிலுள்ள சொற்கள். சீராம்நிலை பெறுதலாவது, ஈரசை கொண்டும் மூவசை புணர்ந்தும் அமைந்த சீர் ஓசையறுதிப்பட நிற்றல் போன்று ஓசையறுதிப்படத் தனித்து நிற்றல்.

4. ''இவை ஒவ்வோரோசைக்குக் காட்டிற்றேனும் ஒழிந்த ஓசைகட்குங் கூறிக்கொள்க'' என இத்தொடர் இருத்தல் வேண்டும் எனக் கருத-

'வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்'
(செய் - ௭௨)

என்ற விதி ஆமாறின்று

**ஆய்வுரை :**

இஃது ஓரசைச்சீராமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) ஓரசையாய் நிற்பனவாகிய சொற்கள் ஓசை நிலைமையால் நிறைந்து நிற்குமாயின் சீராந்தன்மை பெற்று நிற்றலை விலக்கார் ஆசிரியர் எ-று.

அசைநிலை, இசைநிலை நிறைய நிற்குவவாயின் சீர்நிலை பெறல் வரையார் என இயைத்துப் பொருள் கொள்க. ஓரசைச் சீர்களாவன, நாள், மலர், காசு, பிறப்பு என்பன. இவை சீராந்-தன்மை பெற நிற்குமென ஈண்டு விதிக்காவிடின் வெண்பாவின் ஈற்றடியினை முச்சீரடியென வழங்குதற்கு இடமில்லாது போய்-விடும்.

உ-ம் : 'கணபதியைக் கைதொழுதக் கால்'
என நேரசை சீராயிற்று.
'நற்றா டொழாஅ ரெனின்'
என நிரையசை சீராயிற்று.
'உடையா னரசரு ளேறு'
என நேர்பசை சீராயிற்று.
'பகவன் முதற்றே யுலகு'
என நிரைபசை சீராயிற்று.

**௨௭.** இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான

**இளம்பூரணம் :**

என்—எனின். அவ்வோரசைச் சீர் தளை யாமாறு உணர்த்-துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஓரசைச்சீரைத் தளைவகை சிதையாத் தன்மை

முன்பக்கத் தொடர்ச்சி

வேண்டியுளது. நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நால்வகை அசைகளும் சீர்நிலை பெற்றுவரும் என்பதற்கு இங்குச் செப்பலோசை யொன்றற்கே உதாரணங்காட்டப்பட்டன. வெண்பா ஒழிந்த ஏனைப்பாவின் ஓசைகட்கும் இவ்வாறே உதாரணம் கூறிக் கொள்க என்பது இவ்வுரைத் தொடரின் பொருளாகும்.

வேண்டுமிடத்து இயற்சீர்போலக் கொள்க[1] என்றவாறு. (உஎ)

**பேராசிரியம் :**

இஃது எய்தியதொரு மருங்கு மறுத்தல் நுதலிற்று; இயலசை யிரண்டுஞ் சீர்நிலைபெறினுந் தளைகொள்ளப்படா வென்றமை-யின். இனி, எய்தாததெய்துவித்ததூஉமாம்; என்னை? உரியசை யால் தளைகொள்ளுமாறுணர்த்தினமையின்.[2]

(இ - ள்.) இயற்சீர்க்கண்ணே கூறுபடுத்து இயற்றப்படும் அவை தளைவகை சிதையாத் தன்மைக்கண் (எ - று).

'பாற்படுத்'தெனவே அதிகாரத்தான் இறுதிநின்ற உரியசை யிரண்டும் (நேர்பு, நிரைபு) பகுத்துக்கொள்ளப்படும்.[3]

நான்கியற்சீருள் இன்ன இயற்சீர்ப்பாற் படுமென்றானோ வெனின்,

''கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர்'' (தொல்-செய் 25) என அதிகாரம் வருகின்றமையின் தேமா புளிமா வென்னுஞ் சீர்போல இரண்டசையுந் தளைகொள்ளுமென்றமையின் 'இயற்றுக' வென்றானென்பது.[4] தானாக இயல்வதன்மையின் 'இயற்றுக' வெனப்பட்டது. 'தளைவகை சிதையாத் தன்மையான' வென்று இடம் நியமித்ததென்னையெனின், சீர்வகையான் அசைச்சீரென வேறாய் நிற்றலுடைய, தளைவகை சிதையாத்

1. மேற்குறித்த ஓரசைச்சீர்களை இயற்சீர்போலக் கொள்ளுதலாவது, மாச்சீர் விளச்சீர்போல இயற்சீர்களாகக் கருதி இவற்றின் முன்னும் பின்னுமுள்ள சீர்களோடு தளைகொள்ளுதல்.

2. நேர், நிரை என்னும் இயலசையிரண்டும் வெண்பாவின் இறுதிக்கண் சீராந்தன்மை பெற்று நிற்பினும் அவை முதற்கண் சீராய் நின்று பின்வருஞ்சீ-ரொடு உறழ்ந்து நிற்கும் நிலையின அல்ல என எய்தியது ஒருமருங்கு மறுத்தலும், நேர்பு, நிரைபு என்னும் உரியசையிரண்டும் வெண்பாவின் இறுதிக்கண் சீராய் நிற்றலேயன்றி ஆசிரியப்பாவின்கண்ணும் வெண்பாவின்கண் இடையே தேமா புளிமா என இயற்சீராய் நின்று வருஞ்சீருடன் உறழப் பெறுதலும் உண்டு என எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று என்பது, இக்கருத்துரையின் விளக்கமாகும்.

3. அசைச்சீர்நான்கனுள் இறுதிக்கண் நின்றன நேர்பு, நிரைபு என்னும் உரியசையிரண்டேயாகலின் இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றுதற்குரியன அவ்-விரண்டுமே என்பது பெறப்படும்.

4. கலித்தளைவயின் நேரீற்றியற்சீர் அதிகாரப்பட்டு வருதலின் நேர்பு நிரைபு என்னும் அசைச்சீர்களை முறையே தேமா, புளிமா என அவ்வியற்சீர்ப் பாற்படுத்து இயற்றிக்கொள்க என ஆசிரியர் உணர்த்தினாராயிற்று.

தன்மை நோக்கியே இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றுகவென அடங்கக்கூறிற்றென அறிவித்தற் கெனவுணர்க.[1]

எனவே, என் சொல்லப்பட்டதாம் ? இவ்வுரியசையிரண்டுஞ் சீர்வகையான் வேறு வேறு எண்ணித் தொகைபெற்றுத் தமக்கு ஓதிய அடியுறழுமெனவும், அஃதெண்ணப்பட்ட தளைவகை நோக்குங்கால் வேறுவேறுஎண்ணுத் தொகை பெற்று இயற்சீ ரெனவேயடங்குமெனவுங் கூறப்பட்டதாம்; இன்னுந் தளை வகைக் கண்ணெனவே, கட்டளையடிக்கண்ணதே இவ்வரையறை யென்பதூஉம் அல்லாதவழி இந்நான்கசையும் வரையறை-யின்மையின் தளை கொள்ளப்படாதென்பதூஉங் கூறப்பட்டதாம். அஃது ஓரசைச் சீரல்லாத சீராயின் கட்டளையடியல்வழியுந் தளை கொள்பவோவெனின், தளைகொள்ளிற் கட்டளையடி யெனப்படு மாதலின் அல்லாதவழி வந்தசீர் தளைகொண்டன-வென்றல் பயனில் கூற்றாமென மறுக்க.[2]

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு" (பத்து-திருமுரு. 1)

என்றவழி, ஆசிரியத்துட் பிறதளை வந்ததென்று இலக்கணம் கூறி வழுவமைக்கல் வேண்டா. என்னை ? அது பெருவரவிற் றாகலின்;[3] அதனான்வருஞ்சீர்வகையான் வந்ததென்று ஒழிதலே அமையும்,[4] வரையறை இல்லனவற்றுக்கு வரையறை கூறல் குற்றமாகலி னென்பது. மற்று இவ்வுரியசைச் சீரிரண்டும் வரையாது கூறினமையின் மூன்றுபாவிற்குஞ் செல்லும் பிற வெனின்:

"கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர், நிலைக்குரித் தன்று"
(தொல்-செய். 25)

---

1. உரியசையாகிய இவை சீர்வகையால் அசைச்சீர் என வேறாய் நிற்ற லுடைய தளைவகைசிதையாத்தன்மை நோக்கியே இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றுக என்பார், 'தளைவகை சிதையாத் தன்மை யான' என்றார்.

2. நேர்பு, நிரைபு என்னும் உரியசையிரண்டும் சீர்வகையான் வேறுவேறு எண்ணித் தொகைபெற்றுத் தமக்குச் சொல்லிய அடியுறழ்வன. தளைவகை-நோக்குங்கால் இயற்சீரெனவே அடங்குவன. கட்டளையடிக்கண்ணதே இவ்வரை-யறையாகும்.

3. உரியசைச்சீர் ஆசிரியத்துட்பெருவரவிற்றாதலின் ஆசிரியத்துட் பிற தளைவந்தது என்று கூறிவழுவமைக்க வேண்டுவதில்லை.

4. 'அதனானவருஞ் சீர்வகையான் வந்ததென்று ஒழிதலேயமையும்' என இயைந்து வாசித்தல் பொருத்தமாகும்.

எனக்கூறி, ஈண்டு இவற்றை இயற்சீர்ப்பாற்படு மென்றமையின் இவையுங் கலிப்பாவிற்கு விலக்குண்டனவென்பது. எனவே, ஆசிரியத்திற்கும் வெண்பாவிற்கும் உரியசைச் சீரிரண்டும் உரிய வாயின. ஆசிரியத்திற்கு மேற்கூறிய (25) சீர் பன்னிரண்டும் இவையிரண்டுமென அடியுறழுஞ்சீர் பதினான்காயின வெண்பா விற்கு முன்னரெய்தியசீர் பதினான்கும் இவையிரண்டுமாக அடியுறழுஞ்சீர் பதினாறாயின. கலிப்பாவிற்கு மேற்கூறியசீர் பதினான்குமேயாயின. இங்ஙனம் வகுக்கப்பட்ட சீர் நாற்பத்து நான்கினையும், சீர்வகையான் உண்மை நோக்கித் தொகுப்ப **இயற்சீர்பத்தும் ஆசிரியவுரிச்சீரிரண்டும் வெண்சீர் நான்கும் அசைச் சீரிரண்டுமெனப் பதினெட்டாம்.**

மேல் (50) ஐவகை அடியெனப்பட்ட அறுநூற்றிருபத்தைந் தடியும் இச்சீர் பதினெட்டானுந் தோற்றிக்கொள்ளப்படும். இப் பதினெட்டுச் சீரும் இரு நிலைமை யெய்துவனவும் எய்தாதனவு மாகி முப்பத்தொன்றாகி விரியுமாறு முன்னர்,

''எழுத்தள வெஞ்சினும்'' (தொல்-செய். 43)

என்புழிச் சொல்லுதும். (உஅ)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தியது ஒருமருங்கு மறுத்தது; இயலசையிரண்டுஞ் சீர் நிலையெய்தியுந் தளைபடா என்றலின். உரியசை தட்கும் என்றலின், எய்தாதது எய்துவித்தூஉமாம்.[1]

(இ-ள்.) இயற் ... படுத்து எ-து முன்னர்க் கூறிய உரியசை யிரண்டும் இயற்சீர்க்கண்ணே கூறுபடுத்து. தளைவகை ... யான எ-து அவ்வியற் சீர்க்குக் கூறுந்தளைவகை கெடாத தன்மைக் கண்ணே; இயற்றினர் கொளல் எ-து அவற்றையும் இயற்றிக் கொள்க. எ-று.

நேரீற்றியற்சீர் அதிகாரத்தால் தேமா புளிமாப்போலத் தட்டல் கொள்க. தளைவகை சிதையா என்றது எய்தியுந் தளையா என்று கொள்க.

'முலைவிலங்கிற் றென்று முனிவாள்'

'நெய்த்தோர் நிறைத்துக் கணம்புகல்'

என இரண்டசைச்சீரும் இயற்சீர் வெண்டளையாகத் தட்டன.

---

1. இச்சூத்திரத்தின் கருத்துரையும் பொருள் விளக்கமும் பேராசிரியருரை யைத் தழுவியமைந்தன.

'தளைவகை சிதையாத்தன்மையான'

என இடம் நியமித்தது, சீர்வகையான் அசை சீரெனவேறுநின்று அடியுறழ்ந்து எழுபது எனப்பட்ட தளைவகை நோக்குங்கால் வேறெண்ணுந் தொகைபெறாது இயற்சீர்க்கண் அடங்கும் என்றற்கு; எனவே, கட்டளையடிக்கே இவ்வரையறை: அல்லுழி வரையறையின்மையிற் றளைகொள்ளப்படாதென்றுணர்க. இக்காலத்தார் சீர்வகையடிக்குந் தளை கொள்வர்.

"இடைமண்டிச் செல்வதனைக் கண்டு
பெடைஞெண்டு"

என்றவழிக் கண்டு என்பதனை இயற்சீர் வெண்டளையென்பர். இனிக்

'கலித்தளை யடிவயின்' (செய்-௨௫)

என்றதன்பின் இச்சூத்திரங் கூறுதலின், இவையுங் கலிக்கு விலக்குண்டு ஆசிரியத்திற்கும் வெண்பாவிற்கும் உரியவாயின; எனவே, ஆசிரியத்திற்கு இயலசை மயங்கிய இயற்சீர் நான்கும் உரியசை மயங்கிய இயற்சீர் ஆறும் ஆக இயற்சீர் பத்தும், முன்னிரை யீற்ற ஆசிரியவுரிச்சீரிரண்டும் ஈண்டுக் கூறிய அசைச் சீரிரண்டும் ஆகப் பதினான்கும் அடியுறழுமாயிற்று. வெண்பாவிற்கு இருவகை இயற்சீர்பத்தும் வெண்சீர் நான்கும் அசைச்சீர் இரண்டும் எனப் பதினாறு சீரும் அடியுறழுமாயிற்று. கலிக்கு நேரீற்றியற்சீர் ஒழிந்த இயற்சீர் எட்டும் வெண்சீர் நான்கும் ஆசிரியவுரிச்சீர் இரண்டும் எனப் பதினான்கும் அடியுறழுமாயிற்று. இனி நாற்பத்து நான்கும் உண்மைவகையால் இயற்சீர்பத்தும் ஆசிரியவுரிச்சீர் இரண்டும் வெண்சீர் நான்கும் அசைச்சீர் இரண்டும் எனப் பதினெட்டாயிற்று. இவற்றுள் இருநிலைமைப் படுவனபட்டு முப்பத்தொன்றாமாறு 'சீர்நிலைதானே' (செய்-௩௬) என்னுஞ் சூத்திரத்துட் கூறுதும்.

**ஆய்வுரை :**

இஃது, ஓரசைச்சீர் தளை கொள்ளுமாறு உணர்த்துகின்றது.

(இ—ள்) தளைவகை சிதையாத் தன்மை வேண்டுமிடத்து ஓரசைச்சீரை இயற்சீரே போலக் கொள்க. எ-று.

நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் அசை நான்கினுள் முன்னர்க் குறித்த இயலசையிரண்டும் சீர்நிலையெய்தியும் தளை படா என்றலின் இச்சூத்திரம் எய்தியது ஒருமருங்கு மறுத்தது

'தளைவகை சிதையாத்தன்மையான'

என இடம் நியமித்தது, சீர்வகையான் அசை சீரெனவேறுநின்று அடியுறழ்ந்து எழுபது எனப்பட்ட தளைவகை நோக்குங்கால் வேறெண்ணுந் தொகைபெறாது இயற்சீர்க்கண் அடங்கும் என்றற்கு; எனவே, கட்டளையடிக்கே இவ்வரையறை: அல்லுழி வரையறையின்மையிற் றளைகொள்ளப்படாதென்றுணர்க. இக்-காலத்தார் சீர்வகையடிக்குந் தளை கொள்வர்.

''இடைமண்டிச் செல்வதனைக் கண்டு
பெடைஞெண்டு''

என்றவழிக் கண்டு என்பதனை இயற்சீர் வெண்டளையென்பர். இனிக்

'கலித்தளை யடிவயின்' (செய்-உ௫)

என்றதன்பின் இச்சூத்திரங் கூறுதலின், இவையுங் கலிக்கு விலக்குண்டு ஆசிரியத்திற்கும் வெண்பாவிற்கும் உரியவாயின; எனவே, ஆசிரியத்திற்கு இயலசை மயங்கிய இயற்சீர் நான்கும் உரியசை மயங்கிய இயற்சீர் ஆறும் ஆக இயற்சீர் பத்தும், முன்னிரை யீற்ற ஆசிரியவுரிச்சீரிரண்டும் ஈண்டுக் கூறிய அசைச் சீரிரண்டும் ஆகப் பதினான்கும் அடியுறழுமாயிற்று. வெண்பா விற்கு இருவகை இயற்சீர்பத்தும் வெண்சீர் நான்கும் அசைச்சீர் இரண்டும் எனப் பதினாறு சீரும் அடியுறழுமாயிற்று. கலிக்கு நேரீற்றியற்சீர் ஒழிந்த இயற்சீர் எட்டும் வெண்சீர் நான்கும் ஆசிரியவுரிச்சீர் இரண்டும் எனப் பதினான்கும் அடியுறழுமாயிற்று. இனி நாற்பத்து நான்கும் உண்மைவகையால் இயற்சீர்பத்தும் ஆசிரியவுரிச்சீர் இரண்டும் வெண்சீர் நான்கும் அசைச்சீர் இரண்டும் எனப் பதினெட்டாயிற்று. இவற்றுள் இருநிலைமைப் படு-வனபட்டு முப்பத்தொன்றாமாறு 'சீர்நிலைதானே' (செய்-௩௧) என்னுஞ் சூத்திரத்துட் கூறுதும்.

**ஆய்வுரை :**

இஃது, ஓரசைச்சீர் தளை கொள்ளுமாறு உணர்த்துகின்றது.

(இ—ள்) தளைவகை சிதையாத் தன்மை வேண்டுமிடத்து ஓரசைச்சீரை இயற்சீரே போலக் கொள்க. எ-று.

நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் அசை நான்கினுள் முன்னர்க் குறித்த இயலசையிரண்டும் சீர்நிலையெய்தியும் தளை படா என்றலின் இச்சூத்திரம் எய்தியது ஒருமருங்கு மறுத்தது

எனவும், பின்னர்க் குறித்த உரியசையிரண்டும் சீர்நிலையெய்தி இயற்சீரேபோலத் தளைக்கப்படும் என்றலின் எய்தாதது எய்து-வித்தது எனவும், இவை இயற்சீர்ப்பாற்படும் எனவே இவையும் கலிப்பாவிற்கு விலக்குண்டன எனவும் கருத்துரை வரைவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

உஅ வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே.

**இளம்பூரணம் :**

என் எனின் இதுவுந் தளைவழங்குந் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்:) வெண்சீ ரீற்றசை தளைவழங்குமிடத்து இயற் சீரசை நிரையீறு போலும் என்றவாறு.[1]

இயற்சீரென்பது அதிகாரத்தான் வந்தது. (உஅ)

**பேராசிரியம் :**

இது, வெண்சீராற் கலித்தளையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

"கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ" (தொல்-செய்.24)

என்புழி, அவ்வாசிரியவுரிச்சீராற் கலித்தளையா மென்றான், அவ்வதிகாரம் இடையறாது நின்றமையின் இதுவுங் கலித் தளைக்கே இலக்கணமாயிற்று, என்றார்க்கு,

"வஞ்சி மருங்கினும்" (தொல்-செய். 26)

எனவும்,

"இசைநிலை நிறைய" (தொல்-செய் 27)

எனவும்,

"இயற்சீர்ப் பாற்படுத்து" (தொல்-செய். 28)

எனவும், இம்மூன்று சூத்திரம் இடையிட்டனவாலெனின், அற் றன்று; கலிப்பாவிற்கு விலக்கப்பட்ட நேரீற்றியற்சீர் அதிகாரம் பற்றி இடைபுகுந்ததல்லது கலித்தளையதிகாரம் விலக்கினவல்ல வென்பது.

---

1. வெண்சீர்-வெண்பாவுரிச்சீர். அதன் ஈற்றசையானது நேரசை; 'அது தளை வழங்குமிடத்து இயற்சீரசை நிரையீறு போலும்' எனவுரைத்த இளம் பூரணர் அதற்கு உதாரணங்காட்டி விளக்கந்தரவில்லை. எனவே இந்நூற்பாவுக்கு இளம்பூரணர் கொண்ட பொருள் இதுவெனத் தெரிந்து கொள்ள இயலவில்லை.

(இ - ள்) வெண்சீர் பல தொடர்ந்து ஒரு கலியடியுள் நின்ற வழி அவ்வெண்சீருள் ஈற்று நின்ற சீரின் முதல்வந்த நேரசை[1] மற்றை நிரைமுதல் வெண்சீர்வந்து முன்னைய இரண்டுங் கலித் தளையாய வாறுபோலக் கலித்தளையாம் (எ-று).

மேனின்ற அதிகாரத்தால்,
"தளைவகை சிதையாத் தன்மைக்கண்" (28)

என்பது, கூட்டியுரைக்க. எனவே, வெண்சீர்ப்பின்னர் நிரை வந்து தட்டலே சிறந்ததெனவும் நேர்வந்து தோன்றினும் அவ் வோசையே பயந்து ஒருநிகர்த்தா மென்பதூஉங் கூறி அவ்வா றாங்காலும் இறுதிச்சீரின் முதலசையே நிரையியற்றாவதெனவுங் கூறினானாம். இது,

"மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்" (மரபு 110)

என்னும் உத்திவகை. 'வெண்சீரிறுதி' யென்பது ஏழாவதன் தொகை; என்னை? ஈறெனப்பட்டது சீராகலின். வெண்சீருள் ஈற்றுச்சீரெனவே வெண்சீர் பலவுந் தொடர்ந்து நிரைமுதல் வந்தவழியன்றி இறுதிச்சீரொன்றியது நிரையசையியற்றாகா தென்பதாம்.[2] இதனான் நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்குங் கால் இயற்சீரடி முதற்கண் வருமென்பதூஉங் கூறப்பட்ட தாம். மற்று, ஈறென்றது ஈற்றுச்சீரினையாயின் அச்சீரினிடையும் இறுதியும் நின்ற அசையினை நிரையசையியற்றென்று கொள்வ னெனின், நின்றசீரின் ஈற்றசை வருஞ்சீரின் முதலசையோடு தட்பின் தளையாவதன்றி ஒன்றிடையிட்ட அசையுஞ்சீரும்பற்றித் தளைகொள்வா ரின்மையின் அது கடாவன் றென்பது.[3]

---

1. 'வெண்சீர் ஈற்று அசை' என்பதற்கு, 'வெண்சீருள் ஈற்றுநின்ற சீரின் முதல்வந்த நேரசை' எனப்பொருள் கொண்டார் பேராசிரியர்.

2. 'வெண்சீர்ஈறு' என்புழி 'ஈறு' எனப்பட்டது வெண்சீருள் ஈற்றுநின்ற சீரினை. எனவே வெண்சீர் பலவுந் தொடர்ந்துவந்து நிரைமுதல் வெண்சீராய்த் தளைக்கும்வழியல்லது இறுதிநின்ற வெண்சீரின் முதலிலுள்ள நேரசை நிரை-யசையின் இயற்றாகாது என்பது பெற்றாம்.

3. வருஞ்சீரின் முதலசை நின்றசீரின் ஈற்றசையோடு தளைத்தலே தளை யாவதன்றி வருஞ்சீரின் இடையும் இறுதியும் நின்ற அசைபற்றித் தளைகொள்-வாரின்மையின், 'ஈற்றுச்சீரின் இடையும் இறுதியும் நின்ற அசையினை நிரை-யசையியற் றென்று கொள்வனெனின்'' என்பது வினாவாகாது என்பதாம்.

இனி, வெண்சீரென்பது அஃறிணை யியற்பெயராகலானும் பன்மைவினைகொண்டு பால் அறிய வந்ததன்றாயினும் அதனை, 'யானைக்கோடு' என்றாற்போல இறுதி யென்றமையானும் பன்மைப் பாற்பட உணர்க. என்னை ? 'பின்னோன் முன்னோன்' என்றவழி, அவர்க்கு முன்னும் பின்னும் வேறு சிலருளரென்பது உணர்த்துமாகலின்[1] என்றார்க்கு, வெண்சீரிறுதி நீடுகொடி குளிறுபுலி வந்தவழி அவற்று முன்னின்ற நேர்பசை நிரைபசைகளைக் கலிப்பாவினுள் கலித்தளையாக்குதற்கு 'நிரையசையியற்று' என்றா னென்னாமோவெனின், அற்றன்று; வெண்சீர்களின் இறுதியெனவே மூன்றாஞ்சீரும் நான்காஞ்சீரும் வெண்சீராகல் கூறி நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்டல் (372) எனவே, இரண்டாஞ்சீரும் வெண்சீர் வரல்வேண்டுமெனக் கூறி, நிரை தட்குமெனவே, இயற்சீரானும் ஆசிரியவுரிச்சீரானும் நிரையீறாயினவெல்லாம் முதற்கண் நிற்குமெனவுங் கூறினான்; கூறவே, ஆசிரியவுரிச்சீர் இடைநில்லாவெனவும் அங்ஙனம் நிற்பிற் கலியோசையழியு மென்பதூஉமாம் இவர் கருத்தென்பது. அல்லதூஉம் வெண்சீர்க்கு உரியசை யின்மையானும் அற்றன்றென்பது.[2] எனவே, ஈற்றுச்சீர் நிரைமுத லியற்சீர் வரினும் ஆண்டுத் துள்ளலோசை ஒடுங்குமென்பதாம்.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" (கலி. 11)

---

1. பின்னோன் முன்னோன் என இடஞ்சுட்டிக்கூறிய நிலையில் அவர்க்கு முன்னும் பின்னும் வேறுசிலர் உளர் என்பது புலனாதல்போன்று வெண்சீருள் ஈற்றின் கண் உள்ளது எனவே அதன்முன்னும் வெண்சீருள என்பது பெறப்படுதலான் பன்மைப் பாற்பட உணர்க என்றார்.

2. வெண்சீரிறுதி நீடுகொடி, குளிறுபுலி என ஆசிரியவுரிச்சீர் வந்தவிடத்து அவற்றின் முதற்கணுள்ள நேர்பு, நிரைபு என்னும் அசைகளை நிரையசையே போலக்கொண்டு கலிப்பாவிலுள் கலித்தளை யாக்குதற்கு 'வெண்சீர் இறுதி நிரையசையியற்றே' என்றார் எனக் கூறுதல் கூடாதோ என வினவினார்க்கு, 'அவ்வாறு கூறுதல் கூடாது; காரண மென்னவென்றால் வெண்சீர்களின் இறுதியெனவே மூன்றாஞ்சீரும் நான்காஞ்சீரும் வெண் சீராதல் கூறி 'நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்டல்' (செய். 60) எனவே இரண்டாஞ்சீரும்வெண்சீர் வருதல் வேண்டும் எனக்கூறி அவை நிரையாய் நின்று தளைக்கும் எனவே இயற்சீராயினும் ஆசிரியவுரிச்சீராயினும் நிரையீறாயினவெல்லாம் முதற்கண் நிற்கும் எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறவே, ஆசிரியவுரிச்சீர் கலியடியின் இடைநில்லா என்பதும் அவ்வாறு நிற்பின் கலியோசையழியும் என்பதும் அவர் கருத்தாதல் புலனாம். அன்றியும் வெண்சீர்க்கு உரியசையின்மையும் இங்கு உணரத்தகுவதாகும். அன்றியும் கலியடியின் ஈற்றுச்சீர் நிரைமுத லியற்சீர் வரினும் அவ்விடத்துத் துள்ளலோசை குன்றும் என்க.

என்பது, வெண்சீரிறுதி நிரையொடுதட்ட கலித்தளை[1]

"அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையான்" (கலி. 11)

என்பது, வெண்சீர்கள் பகைத்துவந்து ஈற்றுச்சீரின் முதற்க ணின்ற நேரசை நிரையசைபோலக் கலியோசை கொண்டமை யின் அது கலித்தளையெனப்பட்டது[2] இனி, வெண்சீர் நான்கும் ஒன்றிவரினுங் கலித்தளையாகுமேனும், அது வெண்பாவடியென வும்பட்டுத் திரிவுபடுதலின் அதனைக் கட்டளையடியென்னாது இறுதிக்கண் ஒரோவழி ஒருசீர் ஒன்றிவரினும் அதன் முதற்கட் பல வெண்சீர்வந்து பகைத்தலிற் கலியோசையே காட்டுமென் றானென்பது.[3] அஃதேற்

"பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்"
(கலி-கடவுள் வாழ்த்து.)

என்றவழி, இடைநின்ற சீரின் நேரசை நிரையசையியற் றென் னாமோவெனின், அது கட்டளையடியென்பது,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (தொல்-செய். 11)

என்பதனான் அறியப்படும். அல்லாதாரும் அவை செவிகருவியாக உணர்தற் கருமைநோக்கி அடியறியுந்தன்மை அரிதென்று சொல்லுப.[4] இனி, இயற்சீரானன்றித் தளைகொள்ளாமோ வென்பார்,

---

1. அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும் என்புழி நிரைமுதலியற் சீர் ஈற்றுச் சீராய் வந்து வெண்சீரிறுதி நிரையொடு தட்ட கலித்தளையாயினும் அங்குத் துள்ளலோசையொடுங்குதலாற் சிறவாதாயிற்று என்பதாம்.

2. இத்தொடரே இந்நூற்பாவுக்குரிய எடுத்துக்காட்டும் விளக்கமுமாகும்.

3. வெண்சீர் நான்கும் நேர்முதலாய் ஒன்றிவரினும் கலித்தளையாகுமெனி-னும் அது வெண்பாவடியெனவும் கொள்ளப்படுதலின் அதனைக் கட்டளையடி யென்னாது இறுதிக்கண் வெண்சீர் ஒரோவழி நேர்முதலாய் ஒன்றிவரினும் அதன்முதற்கண் பல வெண்சீர் நின்று நிரைமுதலாய் முரணிவருதலின் கலி-யோசையேகாட்டும் என்பார் 'வெண்சீர்ற்றசை நிரையசை யியற்றே' யென்றார் ஆசிரியர்.

4. பண்டரங்கம் ஆடுங்காற் பணையெழி லணைமென்றோள் எனவரும் கலியடியில் 'ஆடுங்கால்' எனவரும் இரண்டாஞ்சீர் நிரைமுதலாகவாராது நேர்-முதல்வெண்சீராய் ஒன்றி வந்ததாயினும் அசையுஞ்சீரும் இசையொடு புணர்ந்து வகுத் துணர்த்துங்கால் கலியோசையின் மாறுபடாது வந்தமை செவிகருவியாக உணரப்படுதலின் பதினான்கெழுத்துக்களால் இயன்று வந்த அவ்வடி கட்டளை-யடியாகும் என்பது பேராசிரியர் கருத்துப் போலும். 'அது கட்டளையன்-றென்பது' எனப் பாடம் இருந்திருக்குமோ என்பது ஆராய்தற்குரியதாகும்.

"தன்சீருள்வழித் தளைவகை வேண்டா" (தொல்-செய். 55) என்பதனான், வெண்சீர்க்குத் தளைவிலக்கல்வேண்டி அவ்வெண் சீரினையும் இயற்சீராக இயற்றிக்கொள்ளப்படுமென்றற்கு ஒரு வெண்சீரின் ஈற்றசை நிரையசையியற் றென்றானெனக் கூறி, ஞாயிறென்னும் இயற்சீரினை மாசெல்வாயெனப் பின்னுமொரு கால் திரித்ததனையே[1] திரியாமல் நிறுத்தி நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்பினுங் கலியாமெனக் காட்டுப. அது ஞாயிறு புலிசெல்வாய் மாசெல்வாய் எனவரும். இவ்வாறே,

"கலித்தளை மருங்கிற் கடியவும் படா" (தொல்-செய் 24)

என்று ஆசிரியவுரிச்சீர்க்குந் திரிபுகூறாரோவெனின், அது நினைந் திலர்போலுமென்று இகழ்ந்துரைப்பாராவர். மற்று, வெண் சீரிறுதி நிரைவந்தாற் கலித்தளையாமென்பதற்கு ஒத்து வேறுண் டாயினன்றே நேரும் நிரையுந் தட்டதனை நேரும் நிரையும் பகைத்ததெனவும் வேண்டுவதெனவும் அங்ஙனம் பொருளுரைப் பார்க்கு எவ்வாற்றானும் இச்சூத்திரம் ஏலாதெனவுந்,

"தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினும்"
(தொல்-செய். 54)

என்றவழித் தன்சீரானுந் தளைகோடுமாகலானும் அது பொருந்தாதென மறுக்க.[2] இனி, வெண்சீரின் ஈற்றசை

---

1. திரிந்ததனையே. உ. வே.

2. 'தன்சீருள்வழித் தளைவகைவேண்டா' என்றவாறு வெண்சீர்க்கு வெண்சீர் வந்து ஒன்றுவது கட்டளையடியெனப்படாதாகலின் வெண்சீர்க்குத் தளைவிலக்கல்வேண்டி அஃது இயற்சீராக இயற்றிக்கொள்ளப்படும் என்றற்கு ஒரு வெண்சீரின் ஈற்றசை 'நிரையசையியற்றே' என்றார் எனவும், அம்முறைப்படி ஞாயிறு என்னும் இயற்சீரினை மா செல்வாய் எனப் பின்னும் ஒருகால் திரித்து அதனையே திரியாமல் நிறுத்தி, 'ஞாயிறு புலிசெல்வாய்' என நிரை முதல் வெண்சீர்வந்து நிரை தட்பினும் கலியாமெனக்காட்டுவர். இவ்வாறே நீடுகொடி குளிறுபுலி என்னும் ஆசிரியவுரிச்சீர்க்குந் திரிபுகூறலாமாயினும் ஆசிரியர் நினைந்திலர் போலும் எனக் குறை கூறுவாருமுளர். வெண்சீரிறுதி நிரைவந்-தாற்கலித்தளையாம் என்பதற்கு இந்நூலில் விதியிலிருந்தாலல்லவா நேர்முன் நிரைவந்து தளைத்ததனை நேர்முன் நிரைவந்து ஒன்றாமை வந்ததெனக் கொள்ளல் வேண்டும். பிற்கால யாப்பிலக்கண வாசிரியர் கூறுமாறு 'காய்முன் நிரைவரிற் கலித்தளையாமே' என்பார்க்கு 'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' எனவரும் இத்தொல்காப்பியச் சூத்திரம் இடந்தராது எனவும், 'தன்சீர்வகை-யினுந் தளைநிலை வகையினும்' (தொல். செய். 54) என்றவழித் தன்சீரானுந்-தளைகொள்ளுமாதலால் நேர்முன் நிரையாக ஒன்றாது தளைத்தலே கலித்-தளை யென்பார் கூற்றைப் பேராசிரியர் மறுத்தவாறுகாண்க.

யொன்றேயாகலான் இயற்றென்று ஒருமை கூறினன்.[1] இடை நின்ற நேரும் நிரையுங் கோடுமென்னாமையின் இங்ஙனந் திரிந்த நிலைமை வஞ்சியுரிச்சீரெனப்படும்.[2] இனி, வெண்சீ-ரென்பது எழுவாயாயின் ஈற்றசை நிரையென்பது இயற்சீரின் பெயராதல் வேண்டும். அங்ஙனங் கருதினும் அசையென்பதனை ஒருகாற் சொல்லி ஈற்றசை நிரையசையென லாகாதென்பது. அல்லதூஉம் வெண்சீரினை இயற்சீராக்கி அவ்வியற்சீரினை வெண்சீராக்குதல் வினையிலுழப்பாகி வரம்பின்றாமென மறுக்க.[3] என்றார்க்குத் 'தன்சீருள்வழித் தளைவகை வேண்டா-னேல்'

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" (கலி. 11)

என்பதூஉங் கலித்தளையன்றாகிய செல்லுமென்பது.[4] கலிப்பா விற்கு ஒன்றாது வருதல் உரிமையுடைய வெண்சீரெனவே வெண்பாவிற்கு ஒன்றாது வருதல் யாண்டுமில்லை, ஒன்றி

---

1. வெண்சீரின் ஈற்று நின்ற சீரின்முதல் வந்த நேர் ஒன்றேயாதலின் நிரை-யசை இயற்று என ஒருமையாற் கூறினார்.

2. வெண்சீரின் ஈற்றசை வருஞ்சீர் முதலொடு தட்குங்கால் நிரையசை-யியற்றாய்த் திரியுமெனக் கூறின் அங்ஙனந்திரிந்தநிலைமை வஞ்சியுரிச்சீரெனப்-படும்.

3. இவ்வுரைப்பகுதி இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் எழுதியவுரையினை மறுப்பது போன்றுளது. 'வெண்சீரீற்றசை' என்பதை எழுவாயாக்கி 'இயற்சீர்' என்பதனை அதிகாரத்தால் வருவித்து, 'வெண்சீரீற்றசை (இயற்சீர்) நிரையசை-யியற்று' என இயைத்து, ''வெண்சீரீற்றசை தளைவழங்குமிடத்து இயற்சீரசை நிரையீறுபோலும்'' என உரைவரைந்தார் இளம்பூரணர். இவ்வுரையினை மறுக்கும் நிலைமையிற் பிறன்கோளாக அமைந்த மேற் காட்டியவுரைப்பகுதி ஏடுபெயர்த்தெழுதுவோரால் சொல்லமைப்பு மாறிப் பொருட்டெளிவின்றி-யுள்ளது. இது மேலும் ஆராய்தற்குரியதாகும்,

4. அவ்வப்பாவுக்குரிய தன்தன்சீர்வந்து பாவின் ஓசையை நிரைத்த நிலைமைக்கண் தளைகோள் ஆகிய தொழிலை நோக்குதல் இன்றியமையாததன்று என்னும் பொருளில் அமைந்ததே 'தன்சீருள்வழித்தளைவகை வேண்டா' என்னும் தொல்காப்பியச் சூத்திரமாகும். ''தன்சீருள்ள நிலைமைக்கண் தளைத்தற் றொழிலாகிய அமைப்பு தேவையில்லை'' எனத் தளையின் கட்டுக்கோப்பினை விலக்குதல் இச்சூத்திரத்தின் பொருளன்றாம். மாறாகத் தன்சீருள்வழித் தளை-யமைப்பே வேண்டுவதில்லை யென்பதே ஆசிரியரது கருத்தாகக் கொள்வோமானால்,

'அரியதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்'

எனக் கலித்தளைபிறழாது வந்த அடியும் கலியடி யன்றெனக்கூறும் தவறான நிலையேற்படும்.

வரினல்ல தென்பது உடம்படப்பட்டது.[1] (உகூ)

**நச்சினார்க்கினியம் :**

இது வெண்சீராற் கலித்தளையாமாறுணர்த்திற்று. கலிக்கு விலக்கிய நேரீற்றியற்சீரதிகாரம் பற்றி இயற்சீர் கூறியதல்லது கலியதிகாரம் விலக்காமை யுணர்க.[2]

(இ-ள்.) வெண்சீரீற்றசை எ-து வெண்சீர்கள் பலதொடர்ந்து ஒருகலியடியுள் நின்றவழி அவ்வெண்சீர்களுள் ஈற்றுநின்ற சீரின் முதல்வந்த நேரசை: நிரையசையியற்று எ-து மற்றை நிரைமுதல் வெண்சீர் வந்து கலிந்தளை யாயவாறு போலக் கலித்தளையாம் எ-று.

என்றது, வெண்சீர்ப்பின்னர் நிரைவந்து தட்டலே சிறந்தது என்றார். அதுவுமன்றி வெண்சீர் நான்கும் ஒன்றினும் அது வெள்ளோசையையும் தருதலிற் கட்டளையாகாமைகருதி முன்னர் மூன்றுசீரும் பகைத்தே வரல் வேண்டும் என்றும், அவை தம்முட்பகைத்தலிற் பின்வருஞ் சீர் ஒன்றினும் பகைத்த தன்மை யேயாய்த் துள்ளலோசையே நிகழ்த்துமென்றுங்கூறினார். வெண் சீர் என்றது அஃறிணையியற்பெயராதலிற் பன்மைப்பாற் படவுணர்க. வெண்சீர்களுள் என ஏழனுருபு தொக்கது. ஈறு என்றது இறுதிச்சீரை. ஈற்றசையென்றது இறுதிச்சீரினுடைய அசையென்றவாறு.[3]

உ-ம். அடிதாங்குமளவன்றி யழலன்ன வெம்மையால்''
(பாலைக்கலி-கO)

என இவ்வெண்சீர்கள் பகைத்து வந்து ஈற்றசைச்சீரின் முதற்கணின்ற நேரசை நிரையசை போலத் துள்ளலோசை கோடலிற் கலித்தளையாயிற்று. இது கட்டளைக்கே யென்பது.

'தளைவகை சிதையாத் தன்மை யான' (செய்-உஅ)
எனநின்ற அதிகாரத்தாற் கொள்க.

---

1. வெண்சீர், வெண்பாவிற்கும் கலிப்பாவிற்கும் தன்சீரேயாயினும் கலிப்பாவிற்கு ஒன்றாது வருதல் உரிமையுடையது. எனவே, வெண்பாவிற்கு ஒன்றி வரினல்லது ஒன்றாது வருதல் யாண்டும் இல்லை எனக் கலித்தளையினையும் வெண்டளையினையும் ஆசிரியர் தொல்காப்பியனார் இச்சூத்திரத்தால் உடன் பட்டமையுய்த்துணரத் தகுவதாகும்.

2. பேராசிரியர் உரையினையே அடியொற்றியது இவ்வுரைப் பகுதியாகும்.

3. ஈற்றசை யென்றது, ஈற்றுச்சீரின் முதல்நின்ற நேரசையினை.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்"
(பாலைக்கலி- ௧௦)

என்புழி வெண்சீரிறுதி நிரைமுதலியற் சீர் தட்டற்லிற்றுள்ள-லோசை சிறவாதாயிற்று,

பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்' போன்று. (கலித்தொகை-கடவுள் வாழ்த்து)

**ஆய்வுரை :**

இதுவும் தளை வழங்குந்திறம் உணர்த்துகின்றது.

(இ - ள்.) வெண்சீர் ஈற்றசை நிரையசையின் இயல்பினது எ-று.

"வெண்சீர் ஈற்றசை தளை வழங்குமிடத்து இயற்சீரிறுதி நிரையசை போலும்" என இதற்குப் பொருள் வரைந்து "இயற் சீர் என்பது அதிகாரத்தான் வந்தது" என்பர் இளம்பூரணர். மேல் "கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ" (செய்-23) என்புழி அவ் ஆசிரியவுரிச்சீராற் கலித்தளையாம் எனக் கூறிய ஆசிரியர், கலிப்பாவிற்கு விலக்கப்பட்ட நேரீற்றியற்சீர் என்பதன் தொடர்பாக, 'வஞ்சி மருங்கினும்' (செய்-25), 'இசைநிலை நிறைய' (செய்-26), 'இயற்சீர்ப்பாற்படுத்து' (செய்-27) என மூன்று சூத்திரத்தால் இடை புகுந்ததனைக் கூறிமுடித்து, முற் கூறிய கலித்தளையதிகாரம்பற்றி, 'வெண்சீரீற்றசை நிரையசை யியற்றே' (செய்-28) எனவரும் இச்சூத்திரத்தாற் கூறுகின்றார் எனவும் "வெண்சீர் பல தொடர்ந்து ஒரு கலியடியுள் நின்றவழி அவ்வெண்சீருள் ஈற்றுநின்ற சீரின் முதல் வந்த நேரசை மற்றை நிரைமுதல் வெண்சீர் வந்து முன்னைய விரண்டும் கலித்தளை-யாமாறு போலக் கலித்தளையாம்" என்பதே இச்சூத்திரத்தின் பொருள் எனவும், மேல்நின்ற 'தளைவகை சிதையாத் தன்மைக் கண்' என்பது மீண்டும் கூட்டியுரைக்கப்பட்டது எனவும், எனவே வெண்சீர்ப்பின்னர் நிரைவந்து தட்டலே சிறந்ததென்றும், நேர் வந்து தோன்றினும் அவ்வோசையே பயந்து ஒருநிகர்த்தா மென்றும் அவ்வாறாங்காலும் இறுதிச்சீரின் முதலசையே நிரை யியற்றாவதென்றும் ஆசிரியர் கூறினாரெனவும், கலிப்பாவிற்கு வெண்சீர் ஒன்றாது வருதல் உரிமையுடையதெனவே வெண்பா விற்கு ஒன்றிவரினல்லது ஒன்றாது வருதல் யாண்டுமில்லை யென்பது உடம்படப்பட்டதெனவும் இச்சூத்திரத்திற்கு விளக்கம் தருவர் பேராசிரியர்.

உகூ இன்சீ ரியைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய அடிக்கே

**இளம்பூரணம் :**

என்-எனின். ஆசிரியப்பாவிற்கு உரியசீர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இனிய ஓசை பொருந்தி வருகுவதாயின்[1] ஆசிரிய வடிக்கு வெண்பாவுரிச்சீர் வரையார் ஆசிரியர் என்றவாறு. (உகூ)

**பேராசிரியம் :**

இது, கட்டளையடியல்லாதவழிச் சீர்மயங்குமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இன்னோசைத்தாகிய துணிவிற்றாகிவரின் ஆசிரிய வடிக்கண் வெண்சீரும் வரப்பெறும் (எ-று.)

"இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" (புறம். 19)

எனத் 'தலையாலம்' என்றவழி ஆசிரியவடியுள் இன்சீரியைய வெண்சீர் வந்தது. முன்னர் வெண்சீரினை,

"இன்பா நேரடிக் கொருங்கு நிலையில" (தொல். செய். 23)

என விலக்கி, ஈண்டு வரையாரென் றமையின் அது கட்டளை-யடிக் கென்பதூஉம் இது கட்டளையடிக் கன்றென்பதூஉம் பெற்றாம். 'வருகுவதாயி'னென்று ஒருமை கூறினமையானும் இயைய வென்றதனானும் ஓரடிக்கண் ஒன்றே யாண்டும் வருவ-தெனக் கொள்க.[1] (௩௦)

---

1. இன்சீர் இசையவருதலாவது, இனியஓசைபொருந்தச் சீர்கள் தம்முள் இயைந்து வருதல்; ஆசிரியப்பாவின் இனியவோசைக்குப் பொருந்தவரு-மாயின் ஆசிரியவடியின்கண்ணே வெண்பாவுரிச்சீர் கலந்து வருதலை நல்லிசைப் புலவர்கள் விலக்கமாட்டார்கள். எனவே அகவலோசைக்கு முரண்படாதவாறு ஆசிரியவடியில் வெண்பாவுரிச்சீரும் கலந்துவருதல் உண்டு என்பதாகும்.

2. வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஆசிரியப்பாவில் ஒருங்கு நிற்றல் இல்லை என இவ்வியல் 23-ம் சூத்திரத்திற்கூறியது கட்டளையடியாசிரியப்-பாவுக்கு எனவும், ஆசிரியவடிக்கு வெண்சீர்வரையார் என ஈண்டுக் கூறியது சீர்வகையடிக்கு எனவும், 'வருகுவது' என ஒருமை கூறியவதனால் யாண்டும் வெண்பாவுரிச்சீர் ஓரடிக்கண் ஒன்றே வருவது எனவும் விளக்கந்தருவர் பேராசிரியர்.

நச்சினார்க்கினியம் :

இது கட்டளை யல்லுழி வெண்சீர் மயங்குமாறு உணர்த்-திற்று.

(இ-ள்) இனிய ஓசை பொருந்த வரும்[1] ஆசிரிய வடிக்கண் வெண்சீரும் வரப்பெறும். எ-று.

உ-ம் "இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடைக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" (புறம்-௧௯)

என்றவழித் தலையாலம் என ஆசிரியவடியுள் இன்சீர் இயைய வெண்சீர் வந்தது. வருகுவதாயின் என்ற ஒருமையான் ஓரடிக்கண் ஒன்றே வருதல் சிறப்புடைத்து: பல வருதல் சிறப்பின்றாம்.

ஆய்வுரை :

இஃது, ஆசிரியப்பாவுக்கு உரிய சீர் உணர்த்துகின்றது.

(இ-ள்) இனிய ஓசை பொருந்தி வருமாயின் ஆசிரிய அடிக்கண் வெண்சீர் வருதலை விலக்கார் ஆசிரியர் எ-று.

'வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீர்
இன்பா நேரடிக் கொருங்கு நிலையிலவே' (செய்-22)

என முன்னர் வந்த சூத்திரம் கட்டளையாசிரியப்பாவினுள் அடியுறழப்படாத சீர் இவையென வுணர்த்தியது எனவும் இச்சூத்திரம் கட்டளையடியல்லாதவழிச் சீர் மயங்குமாறு உணர்த்துவது எனவும் கொள்வர் பேராசிரியர்.

௩௰ அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீர்
ஒன்றுத லுடைய ஓரோவொரு வழியே.[2]

இளம்பூரணம் :

என்-எனின். இதுவுமது.

(இ-ள்.) இன்சீரியைய வருகுவதாயின் வஞ்சியுரிச்சீரும் ஓரோவழி ஆசிரிய அடிக்கண் வரும் என்றவாறு.[3]

---

முன் பக்கத் தொடர்ச்சி

'இன்சீரியையவருகுவதாயின்' என்றமையான் இது சீர்வகையடி யென்பது பெறப்படும்.

1. 'வரும்' என்பது, 'வரின்' என்றிருத்தல் வேண்டும்.

2. 'ஒரொருவழியே' என்பது பேராசிரியருரையிற்கண்டபாடம்.

3. இனிய ஓசை பொருந்தச் சீர்கள் தம்முள் இயைந்து வருமாயின் வஞ்சியுரிச்சீரும் ஓரோவழி ஆசிரியவடியின்கண் வரும் என்பதாம்.

"ஈரசைகொண்டு" (செய். ௰௧) என்பது முதலாக இத்துணையுஞ் சொல்லப்பட்டது ஓரசைச்சீர் நான்கு, ஈரசைச்சீர் பதினாறு, மூவசைச்சீர் அறுபத்துநான்கு, ஆகச்சீர் எண்பத்துநான்கில் ஓர் அசைச்சீர் நான்கெனவும் அது தளைவழங்கும்வழி இயற்சீரொக்கு மெனவும், ஈரசைச்சீர் பதினாறும் சிறப்புடைய இயற்சீர் நான்கும் சிறப்பிலியற் சீர் ஆறும் எனப் பத்தாம் எனவும், ஆசிரியவுரிச்சீர் ஆறு எனவும், மூவசைச்சீர் அறுபத்து நான்கில் வெண்பாவுரிச்சீர் நான்கெனவும் ஏனைய வஞ்சியுரிச்சீர் எனவும் கூறியவாறு.[1]

**பேராசிரியம் :**

இது, வஞ்சியுரிச்சீர் ஆசிரிய அடியுண் மயங்குமாறுணர்த்தல் நுதலிற்று.

(இ-ள்.) கட்டளையடியல்லாதவழி இன்சீரியைய வருகுவதாயின்[2] வஞ்சியுரிச்சீர்களும் ஓரொருவழி ஆசிரியத்துள் வரப்பெறும் (எ-று).

ஒருவழி யென்னாது 'ஓரொருவழி'யென்ற தென்னை யெனின் அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் பத்துச்சீரே வருமென்பதூஉம், அவை வருங்காலும் பயின்றுவாரா வென்பதூஉம் அறிவித்தற்கென்பது.[3] அவை: [1]மாசேர்சுரம், [2]புலிசேர்சுரம், [3]மாசெல்காடு, [4]புலிசெல்காடு, [5]மாசெல்கடறு, [6]புலிசெல்கடறு, [7]பாம்புசேர்வாய், [8]பாம்புவருவாய், [9]களிறுசேர்வாய் [10]களிறுவருவாய் என்பன. அவற்றுக்குச் செய்யுள் :

[1]"மாரியொடு மலர்ந்த மாத்தாட் கொன்றை" (யா. வி. ப 79)
[2]"குறிஞ்சியொடு கமழுங் குன்ற நாடன்" (யா. வி. ப. 80)

---

1. ஆசிரியர் தொல்காப்பியனார் இவ்வியல் ௰௧-முதல் ௩௰-முடியவுள்ள சூத்திரங்களிற் சீர்பற்றிக் கூறிய விதிகள் அனைத்தையும் தொகுத்துக்கூறும் முறையில் அமைந்தது இவ்வுரைப்பகுதியாகும்.

2. அந்நிலைமருங்கின் என்றது, மேலைச்சூத்திரத்தில் இன்சீர் இயையவருகுவதாகிய சீர்வகையினைச் சுட்டி நின்றது. எனவே கட்டளையடியல்லாதவழி என்பது பெற்றாம்.

3. 'ஒருவழி யென்னாது 'ஓரொருவழி' யென்றதனால் அறுபது வஞ்சிச்சீருள்ளும், மாசேர்சுரம், புலிசேர்சுரம், மாசெல்காடு, புலிசெல்காடு, மாசெல்கடறு, புலிகெல்கடறு, பாம்புசேர்வாய், பாம்புவருவாய், களிறுசேர்வாய், களிறு வருவாய் என்னும் இப்பத்துச் சீருமே ஆசிரியத்துள் அருகிவரப் பெறும் என்பதாம். இதுகாறும் சீருணர்த்தப்பெற்றன.

என மாசேர்சுரம் புலிசேர்சுரம் என்பன அடிமுதற்கண் வந்தன.

[3]"முன்றிலாடு மஞ்ஞை மூதிலை கறிக்கும்"

என மாசெல்காடு வந்தது.

[4]"அலரிநாறு துவர்வாய் அமர்த்த நோக்கின்" (யா. வி. பா. 72)

எனப் புலிசெல்காடு வந்தது.

[5]"கண்போன் மலர்ந்த வண்டுமயங்கு தாமரை"

என மாசெல்கடறு வந்தது.

[6]"கரடிவழங்கு குன்று கண்டு போகி"

எனப் புலிசெல்கடறு வந்தது.

[7]"காடுதேரா வுழிதரு கடுங்கண் யானை"

எனப் பாம்புசேர்வாய் வந்தது.

[8]"சந்துசிதைய வுழுத செங்குரற் சிறுதினை" (யா. வி. ப. 72)

எனப் பாம்புவருவாய் வந்தது.

[9]"மருந்துநாடாத் திருந்து சிலம்பிற் கைக்கும்"

எனக் களிறுசேர்வாய் வந்தது.

[10]"கடறுகவரா விழிந்து கான்யாறு வரிப்ப"

எனக் களிறுவருவாய் வந்தது பிறவுமன்ன. நேர்நிரையாகியும் நேர்புநிரைபாகியும் ஈறுமுதல்பெறச் சீர்வந்தது. (௩௪)

**நச்சினார்க்கினியம் :**

இது வஞ்சிச்சீர் ஆசிரியத்து தூங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்.) அந்நிலை மருங்கின் எ-து கட்டளை யல்வழி இன்சீரியையவரின். வஞ்சி....... வழியே எ-து வஞ்சிச்சீர்களும் ஒரோவோர்வழி ஆசிரியத்துடன் பொருந்துதல் உடைய. எ-று.

ஒருவழி யென்னாது ஓரோருவழியென்றது அறுபது வஞ்சிச் சீரினும் பத்துச்சீரேவருதலும் அவைபயின்று வாராமையும் அறிவித்தற்கு. உ-ம். மாசேர்சுரம், புலிசேர்சுரம், மாசெல்காடு, புலிசெல்காடு மாசெல்கடறு, புலிசெல்கடறு, பாம்புசேர்வாய், பாம்புவருவாய், களிறுசேர்வாய், களிறுவருவாய் எனவரும். செய்யுள் :

"மாரியொடு மலர்ந்த மாத்தாட் கொன்றை
குறிஞ்சியொடு கமழுங் குன்ற நாடன்"

என மாசேர்சுரமும், புலிசேர்சுரமும் வந்தன.[1]

“முன்றிலாடு மஞ்ஞை மூதிலை கறிக்கும்”
என மாசெல்காடு வந்தது.

“அலரிநாறு துவர்வா யமர்த்த நோக்கின்”
எனப் புலிசெல்காடு வந்தது.

“கண்போன் மலர்ந்த வண்டுமயங்கு தாமரை”
என மாசெல்கடறு வந்தது.

“கரடிவழங்கு குன்று கண்டு போகி”
எனப் புலிசெல்கடறு வந்தது.

“காடுதேரா வுழிதரும் கடுங்கண் யானை”
எனப் பாம்புசேர்வாய் வந்தது.

“சந்துசிதைய வுழுத செங்குரற் சிறுதினை”
எனப் பாம்புவருவாய் வந்தது.

“மருந்துநாடாத் திருந்து சிலம்பிற் சேக்கும்”
எனக் களிறுசெல்வாய் வந்தது.

“கடறுகவரா விழிந்து கான்யாறு வரித்த”
எனக் களிறுவருவாய் வந்தது. பாம்புவருவாய் களிறுவருவாய் என்ற இரண்டும் நேர்பும் நிரைபும் முன் வருதலின் நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரெனப்படா.[2]

1. மாரி, குறிஞ்சி என்னும் சொற்கள் இயல்பாகவே ஈரசையால் இயன்ற இயற்சீர்களாதலின் இவற்றுடன் நிரையசையாகிய ‘ஒடு’ என்னும் உருபினைச் சேர்த்து மூவசைச்சீர் ஆக்குங்கால், அச்சீர்கள் முறையே மா-ரி-யொடு (நேர் நேர் நிரை) குறிஞ்-சி-யொடு (நிரை நேர் நிரை) என வஞ்சியுரிச்சீராகவே ஓசைபயப்பன. எனவே இவற்றுக்கு மாரியொடு-மாசெல்சுரம் எனவும் குறிஞ்சியொடு-புலிசெல்சுரம் எனவும் பேராசிரிய-ரும் நச்சினார்க்கினியரும் வாய்பாடு காட்டுவர். இங்ஙனம் இயல்பாக அமைந்த இச்சீர்களின் ஓசையமைப்பினைக் கூர்ந்து நோக்காது, இவற்றை மா-ரியொ-டு (நேர் நிரை நேர் - கூவிளங்காய்) எனவும் குறிஞ்-சியொ-டு (நிரை நிரை நேர் - கருவிளங்காய்) எனவும் நேரீற்று மூவசைச் சீராகக் கொண்டு ஓசையூட்டுவர் பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்கள்.

2. நேர் நிரை நிரை (கூவிளங்கனி), நிரை நிரை நிரை (கருவிளங்கனி) என இயலசையால் வருவனவே நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீர் என வழங்கப்பெறுவனவாதலின் நேர்பு, நிரைபு என்னும் உரிச்சீரினை முதலாகக் கொண்டு நிரையசையினை நடுவிலும் கடையிலும் பெற்று வருவன நிரைநடுவாகிய வஞ்சியுரிச் சீர் என வழங்கப்பெறா என்பதாம்.

**ஆய்வுரை :**

இஃது ஆசிரியவடியுள் வஞ்சியுரிச்சீர் விரவுமாறு உணர்த்து-கின்றது.

(இ-ள்) அங்ஙனம் இன்னோசை யுடையதாகச் சீர் பொருந்தி வருமாயின் ஆசிரியத்துள் ஓரொருவழி வஞ்சியுரிச்சீர் பொருந்தி வருதல் உடைய எ-று.

உதாரணம் இச்சூத்திரத்தின் முன்னைய வுரைகளில் இடம்-பெற்றுள்ளமை காண்க.

ஓரசைச்சீர் நான்கு, ஈரசைச்சீர் பதினாறு, மூவசைச்சீர் அறுபத்து நான்கு, ஆகச் சீர் எண்பத்து நான்காகும். அவற்றுள் அசைச்சீர் நான்கும் தளை கொள்ளுமிடத்து இயற்சீரேபோலக் கொள்ளப்படும். ஈரசைச்சீர் பதினாறினும் இயற்சீர் சிறப்புடைய இயற்சீர் நான்கு, சிறப்பில்லாத இயற்சீர் ஆறு எனப் பத்தாகும். ஆசிரியவுரிச்சீர் ஆறாகும். இனி மூவசைச்சீர் அறுபத்துநான்கில் வெண்பாவுரிச்சீர் நான்கு எனவும் ஏனைய அறுபதும் வஞ்சி யுரிச்சீர் எனவும் கொள்ளப்படும் எனச் செய்யுட்குரிய உறுப்-புக்களுள் ஒன்றாகிய சீரின் இலக்கணம் இவ்வியல் 11 முதல் 30 முடியவுள்ள சூத்திரங்களால் விரித்துக் கூறப்பட்டன.

௩௧. நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே.

**இளம்பூரணம் :**

என்-எனின் நிறுத்தமுறையானே அடியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நான்குசீர் ஒருங்கு தொடுத்து வருவதனை அடியென்று சொல்லப்படு மென்றவாறு.[1]

இதன் வேறுபாடு முன்னர்க் கூறப்படும்.[2] (௩௧)

**பேராசிரியம் :**

இது, முதற்சூத்திரத்துள்,

"யாத்த சீரே யடியாப் பெனாஅ" (தொல்-செய். 1)

---

1. அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நாற்சீர்கொண்ட அடிகளே என்பதாம்.

2. இவ்வடிகளின் வேறுபாடு பின்னர்க் கூறப்படும்.

என நிறுத்தமுறையானே சீருணர்த்தி அடியுணர்த்திய[1] வெழுந் தான், அவற்றுள் இது நாற்சீரடி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நாற்சீரடி (எ-று).

எனவே, [1]இருசீரானும், [2]முச்சீரானும், [3]ஐஞ்சீரானும் [4]அறுசீர் முதலியவற்றானும் வருமாயினும் அவை சிறப்பில வென்றவாறாம். இருசீரான் வருவதனை என்ன அடியென்னுமோ வெனின் அடிக்கெல்லாம் எழுத்துவகையானே மேற்பெயர் கூறும். அவ்வாறே சீர்வகையானுங் கொள்ளப்படுமென்பது.[2] சுருங்கிய எழுத்தான் வருவன [1]குறளடியென்றும், அவற்றின் ஏறிய எழுத்தான் வருவன [2]சிந்தடியென்றும், இடைநின்றன [3]அளவடியென்றும், அவற்றின் நெடியன [4]நெடிலடியென்றும், அவற்றினும் நெடியன [5]கழிநெடிலடியென்றுங் கூறுமாகலான், அவ்வாறே இருசீரடி குறளடியென்றும் மூச்சீரடி சிந்தடியென்றும், நாற்சீரடி அளவடியென்றும், ஐஞ்சீரடி நெடிலடியென்றும், அறுசீர் முதலியன கழிநெடிலடியென்றுங் கோடுமென்பது. இவற்றினெல்லாம் நாற்சீரடி சிறந்த தென்றதென்னை யெனின், அளவிற்பட்டமைந்தமையானும் அது பயின்று வருதலானு-மென்பது உதாரணம்.

"திருமழை தலைஇய விருணிற விசும்பின்"

(பத்துப். மலைபடு1)

எனவும்,

"அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட" (நாலடி 1. 1)

எனவும்,

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" (கலி. 11)

எனவும் மூன்று பாவினும் அளவடி வந்தவாறு. இவற்றது விகற்பமெல்லாம் முன்னர்ச் சொல்லுதும். (௩௨)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்தமுறையானே சீருணர்த்தி அடியுணர்த்துகின்றது.

(இ-ள்.) நாற்சீர் கொண்ட அளவடியை அடியென்று சிறப்-பித்துக் கூறப்படும். எ-று.

---

1. அடியுணர்த்திய...அடியுணர்த்த

2. எழுத்துவகையாற்கொள்ளப்படும் அடி கட்டளையடியெனப்படும். சீர் வகையாற் கொள்ளப்படும் அடி சீர்வகையடி யெனப்படும்.

எனவே, ஒழிந்த நான்கடியும் சிறப்பிலவாயிற்று[1]

"திருமழை தலைஇய விருணிற விசும்பின்"

(மலைபடுகடாம்)

"அகர முதல வெழுத்தெல்லா மாதி"

(திருக்குறள்-க)

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்"

(பாலைக்கலி-உO)

என நாற்சீரடியாற் சான்றோர் மூன்றுபாவுங் கூறியவாறுணர்க. குறளடியானும் சிந்தடியானும் சிறுபான்மை கூறினார்.[2]

## ஆய்வுரை :

'யாத்த சீரே அடியாப்பு' என இவ்வியல் முதற்சூத்திரத்து நிறுத்த முறையானே சீர் உணர்த்திய ஆசிரியர் இவ்வியல் 31 முதல் 73 வரையுள்ள சூத்திரங்களால் செய்யுளுறுப்புக்களுள் ஒன்றாகிய அடியின் இலக்கணம் உணர்த்துகின்றார். அடி என்பது, மேற்கூறப்பட்ட சீர்கள் இரண்டும் மூன்றும் தொடர்ந்து ஆவ-தோர் உறுப்பாகும். நாற்சீரடிதன்னையே சிறப்புடைய அடியாகக் கொண்டு எழுத்தெண்ணி வகுக்கப்படும் கட்டளையடியும், சீர்களின் மிகுதி குறைவுபற்றி வகுக்கப்படும் சீர்வகையடியும் என அடிகளை வகுத்துக் கொள்ளும் முறை இருவகைப்படும். இவ்-விருவகைச் சீரமைப்புக்களும் ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்து வழக்கிலிருந்தன. பிற்காலத்தில் கட்டளையடியமைப்பு அருகி மறையவும் சீர்வகை யமைப்பே பெரும்பான்மையும் நிலை பெறுவதாயிற்று என்பதனைப் பேராசிரியரும் நச்சினார்க்கினிய-ரும் தம் உரையில் தெளிவாகக் குறித்துள்ளமை இங்கு மனங் கொளத்தகுவதாகும்.

இஃது இந்நூலிற் சிறப்புடைய அடியெனப்படுவது இதுவென உணர்த்துகின்றது.

(இ-ள்.) அடியெனச் சிறப்பித்துச் சொல்லப்படுவது நாற் சீரடியே எ-று.

இரு சீராலும் முச்சீராலும் ஐஞ்சீராலும் அறுசீர் முதலிய வற்றாலும் இயன்றுவரும் அடிகள் பலவுளவாயினும் அவை

1. அளவடி யொழிந்த நான்கடியாவன; குறளடி, சிந்தடி நெடிலடி, கழி-நெடிலடி என்பன.

2. குறளடியும் சிந்தடியும் வஞ்சிப்பாவிற்கும் ஒருசார் ஆசிரியப்பாவிற்கும் உரியனவாய் வருதலின் 'சிறுபான்மை கூறினார்' என்றார்.

அத்துணைச் சிறப்பில என்பதும், இவ்வியலில் ஒற்றும் குற்றிய லிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் நீங்கலாக உயிரும் உயிர் மெய்யுமாகிய எழுத்துக்களையெண்ணி அவ்வெழுத்து வரையறை யாற் பகுத்துரைக்கப்படும் குறளடி, சிந்தடி, நேரடி, நெடிலடி, கழிநெடிலடி யென்னும் ஐவகைப்பாகுபாடும் நாற்சீரடிக்கே ஏற்புடையனஎன்பதும் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தாகும்.

அடிக்கெல்லாம் எழுத்துவகையாற் பகுக்கப்படும் குறளடி, சிந்தடி, நேரடி, நெடிலடி, கழிநெடிலடி எனப்படும் ஐவகைப் பெயர்களும் சீர்வகையடிகட்கும் கொள்ளப்படும் என்பது, 'தன்சீர் வகையினும் தளைநிலை வகையினும், இன்சீர் வகையின் ஐந்தடிக்கும் உரிய' (செய்-52) எனவரும் சூத்திரத்தால் இனிது விளங்கும். நாலெழுத்து முதல் ஆறெழுத்து முடியச் சுருங்கிய எழுத்தால் வருவன குறளடியென்றும், ஏழெழுத்து முதல் ஒன்பதெழுத்து வரை ஏறிய எழுத்தால் வருவன சிந்தடி என்றும், பத்தெழுத்து முதல் பதினான்கு எழுத்து முடிய இடை நிகரனவாய் வருவன அளவடியென்றும், அவற்றில் நெடியன வாய்ப்பதினைந்தெழுத்து முதல் பதினேழெழுத்து முடிய வருவன நெடிலடியென்றும், அவற்றினும் நெடியனவாய்ப் பதினெட்டெழுத்து முதல் இருபதெழுத்து முடிய வருவன கழிநெடிலடியென்றும் இவ்வியலிற் பின்னர்க் கூறுவர் ஆசிரியர். இவ்வாறே இருசீரடி குறளடியெனவும் முச்சீரடி சிந்தடியெனவும் நாற்சீரடி அளவடியெனவும் ஐஞ்சீரடி நெடிலடி யெனவும் அறுசீர் முதலியனவாக மிக்கு வரும் அடிகள் கழிநெடிலடியெனவும் தொல்காப்பியனார் காலத்திற் சீர்வகையடிகள் பெயரிட்டு வழங்கப் பெற்றன என்பது, 'நாற்சீர் கொண்டது அடியெனப்படுமே' எனவரும் இச் சூத்திரத்தாலும், 'வஞ்சியடியே இருசீர்த்தாகும்' 'முச்சீரானும்வருமிடனுடைத்தே' 'ஐஞ்சீரடியும் உளவென மொழிப' 'அறுசீரடியே ஆசிரியத் தளையொடு நெறிபெற்று வரூஉம் நேரடி முன்னே' 'எழுசீரடியே முடுகியல் நடக்கும்' என இவ்வியலிற் பின்வரும் சூத்திரத்தொடர்களாலும் இனிது விளங்கும்.

௫௨. அடியுள் ளனவே தளையொடு தொடையே.

**இளம்பூரணம் :**

என் - எனின். தளைக்குந் தொடைக்கும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தளையுந் தொடையும் அடியின்கண்ண என்றவாறு.[1] (௬௨)

**பேராசிரியம் :**

இதுவுமது. நாற்சீரடியது சிறப்புணர்த்துதல் நுதலிற்று. எதிரது நோக்கியதொரு கருவியெனினும் அமையும்.

(இ - ள்). முன்னர்க்கூறிய நாற்சீரடியுள் உள்ளனவே தளையுந் தொடையும் (எ–று).[2]

மற்று, மாத்திரையும் எழுத்தும் அசையுஞ் சீரும் அவ்வடியுள்ளன அல்லவோவெனின், அற்றன்று; அவ்வடிக்கணுள்ளன வெல்லாங் கூறுகின்றானல்லன் இதுவென்பது. என்னை? நாம் தளைப்பகுதியாற் கட்டளையடியென உறழ்வதூஉம் அறுநூற்றிருபத்தைந்தடியென வரையறை கூறுவதூஉம் அவ்வளவடியே என்றற்கு 'நாற்சீர்க்கண்ணது தளை' யென்றானென்பது. முன்னுஞ் சீர்வகையான் வகுக்கும் அடியன்றிக் கட்டளையடியெல்லாந் தளைவகையுடையவென விதந்தோதி வந்ததனானே நாம்தளைகொள்வது நாற்சீரடிக்கணென்பான் 'அடியுள்ளன தளை' யென்றானென்பது. மற்றையடிக்கட் டளைகொள்ளின் அது வரையறையின்றா மாகலின் ஈண்டு வரைந்தோதினானென்

---

1. மேற்குறித்த நாற்சீரடியுள்வைத்து விளக்கத்தக்கனவே பாவுக்குரிய சீர்ப்பிணிப்பாகிய தளைத்தற்றொழிலும் மோனை யெதுகை முதலாகப் பின்னர்க் கூறப்படும் தொடையுறுப்புக்களும் என்பதாம்.

நாற்சீரடியின் மிக்க நெடிலடி கழிநெடிலடி யென்பவற்றில் தளைத்தற்றொழிலும் தொடைக் கூறுபாடும் உள்ளனவாயினும் அவை இத்துணைய என எண்ணி வரையறைப்படுத்தற்குரிய வரம்பினைக் கடந்தனவாதலானும் எல்லாப் பாநடைக்கும் மூலமாகிய ஆசிரியம் வெண்பா என்னும் இருவகைப்பாக்களும் நாற்சீரடியிலேயே இயன்றனவாதலாலும் நாற்சீரடியுள் உள்ளனவே தளையும் தொடையும் என்றார் தொல்காப்பியனார். தளையென்பது செய்யுளுறுப்பன்று; நின்றசீரின் ஈற்றசையும் வருஞ்சீரின் முதலசையும் நேர்முன்நேர், நிரைமுன்நிரை என ஒன்றியும், நேர்முன்நிரை, நிரைமுன்நேர் என ஒன்றாமலும் தளைக்கப்படுதலாகிய தொழிற்றன்மையேயாகும். எனவே இதனைச் செய்யுளுக்குரிய உறுப்புக்களுள் ஒன்றாகத் தொல்காப்பியர் தனித்தெடுத்துக் கூறிற்றிலர். இனித் தொடை என்பது தொடுத்தல் என்னுந் தொழிலையுணர்த்தாது மோனை முதலாகத் தொடுக்கப்பட்டுள்ள எழுத்துச் சொற்பொருட்கூறுபாடுகளையுணர்த்தி நிற்றலின் செய்யுட்குரிய உறுப்புக்களுள் ஒன்றாயிற்று.

2. அடியென்றது முன்னர்க்கூறிய நாற்சீரடியினை.

பது.[1] அது தக்கது, மற்றுப் பொழிப்பும் ஒரூஉவும் போலாத மோனை முதலிய தொடையெல்லாம் அடியிரண்டியையத் தொடுக்கல் வேண்டுமன்றே? அவற்றை 'அடியுள்ளனவே தொடையும்' என்ற தென்னையெனின், அற்றன்று; நாம் தொடையுறழச் சீர்கொள்வதூஉம் இவ் வளவடிக்க ணென்பது கூறினான். ஆண்டுத் தொடை கூறும்வழி வரையாது கூறுமாகலினென்பது.[2] எனவே, கட்டளைப்படுப்பதூஉந் தொடையுறழ்தற்கு இடனாவதூஉம் நேரடியேயெனச் சிறப்பித்தவாறு. (௯௯)

**நச்சினார்க்கினியம் :**

இது நாற்சீரடியின் சிறப்புக் கூறுகின்றது.

(இ-ள்) அந்நாற்சீரடியான் வருங் கட்டளையடிக்கண் உள்ளனவே எழுபது தளையும் பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொரு தொடையும் என் வரையறைப்படுவன எ-று.

எழுபது தளைப்பகுதியாற் கட்டளையடி யென்வுறழ்வதூஉம், அறுநூற்றிருபத்தைந்தடியென வரையறைப்படுவதூஉம், பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்றென்னும் தொடைப் பகுதி கொள்ளப்படுவதூஉம் நாற்சீரடியேயாயிற்று: எனவே, நாற்சீரான்வருஞ் சீர்வகையடிக்குத் தளையுந் தொடையுங் கொள்ளின், அவை, வரையறையின்றென உணர்க, அளவடி இரண்டியைந்தும் ஒன்று வந்துந் தொடைகோடலும்[3].

---

1. தளைப்பகுதியாற் கட்டளையடியெனப் பெருக்கிக் காட்டுவதும் அறுநூற்றிருபத்தைந்தடியெனவரையறுப்பதும் நாற்சீரடியாகிய அளவடியே யாதலின் அளவடியல்லாத ஏனைய அடிக்கண் தளை கொண்டால் அதுவரையறையின்றாமாகலின் ஈண்டு நாற்சீரடிக் கண்ணேயே தளைகொண்டார் ஆசிரியர்.

2. ஓரடிக்கண்கொள்ளப்படும் பொழிப்பு, ஒரூஉ முதலிய தொடை விகற்பம் அன்றி மோனை முதலிய தொடைகள்யாவும் அடியிரண்டு இயையத் தொடுக்கப் படுவனவே யாயினும் அத்தொடைகட்கு நிலைக்களமாகிய சீர்கொள்வது இந்நாற்சீரடிக்கண் ஆதலின் 'அடியுள்ளன தளையொடு தொடை' என்றார் தொல்காப்பியனார். எனவே எழுத்தெண்ணிச் சீர்வகுப்பதற்கும் தொடைகளைப் பெருக்குதற்கும் இடனாவது நாற்சீரடியே என்றவாறு.

3. தொடையெனச் சிறப்பித்துரைக்கப்படுவன மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்பன.

ஒழிந்தவடி நான்கும் விகற்பத்தொடை[1] கொள்ளாமையும் உணர்க.

**ஆய்வுரை :**

இது, தளைக்கும் தொடைக்கும் ஆவதோர் இடம் உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்கூறிய நாற்சீரடியின்கண் உள்ளனவே தளையும் தொடையும் எ-று.

ஈண்டுத் 'தளை' என்றது, எழுத்தெண்ணி வரையறுக்கப்படும் கட்டளையாகிய ஓசைக் கூறுபாட்டினை. எனவே ஓசைக் கூறுபாடாகிய கட்டளைப்படுத்துக் கூறப்படுவதும் இந்நூலில் தொடைகளை உறழ்ந்து தொகை கூறுதற்கு இடனாயமைந்ததும் நாற்சீரடியாகிய நேரடியே என்றாராயிற்று.

௩௩. அடி இறந்து வருதல் இல்லென மொழிப.

**இளம்பூரணம் :**

என்-எனின். மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தளையுந் தொடையும் நான்குசீரடியின் வருத லன்றி யடியி னீங்கிவருத லில்லை யென்றவாறு.

அடிவரையறை யில்லாதனவற்றிற் கொள்ளப்படாது என்றவாறாம்.[2] (௩௩)

**பேராசிரியம் :**

இதுவுங், கட்டளைப்பாட்டிற்குந் தொடைக்கும் ஆவதொரு கருவி யுணர்த்துதல் நுதலிற்று.

---

1. விகற்பத்தொடை என்பன மோனை முதலிய தொடைகளின் வகையாகிய இணை, பொழிப்பு, ஒரூஉ, கீழ்க்கதுவாய், மேற்கதுவாய், முற்று என்பன.

2. பாவின் அடியிற் கொள்ளுதற்குரியனவாகிய தளையும் தொடையும் அடிவரையறையில்லாதஉரை முதலியவற்றிற்கொள்ளப்படா என்பதாம்.

அடிவரையறையில்லாதனவாவன 'பாட்டு உரை நூல்' முதலாக எழுநிலத்தெழுந்த செய்யுட்களுள் பாட்டு நீங்கலாகவுள்ள ஏனைய உரைமுதலிய ஆறுமாகும்.

(இ-ள்.) அறுநூற்றிருபத்தைந்து அடியுள்ளும் ஓரடியின் இறந்துவாரா மேற்கூறிய தளையுந் தொடையும் (எ-று).[1]

என்றது, மேற்கூறிய தளைவகையேயன்றி அடியோடு அடிக்கூட்டத்துத் தளைகொள்ளுங்காலும் ஓரடிக்கண்ணே வழுவாமற் கோடல் வேண்டுமெனவும், அங்ஙனமே தொடை கொள்ளுங்காலும் வந்த வந்த அடியே வரப்பெறுவதெனவுங் கூறியவாறு.[2]

எனவே, தேமா தேமா தேமா தேமா வென்னும் அடிக்கண் தொடை கொள்ளுங்கால்,

''வாமா னேறி வந்தான் மன்ற''

என முன் வந்த அடியே வரல்வேண்டுமென்பதூஉம் அன்றித்

'தேமாஞ் சோலைத் தீந்தே னுண்ட
காமர் தும்பி யாதல் கண்டது'

என வரில் தளைவழுவாகிப் பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டெனப்பட்ட தொடைப்பகுதியுட் படாவென்பதூஉம் பெற்றாம். இனி வெண்பாவினுள் அவை வருமாறு :

சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யறைப பறையினை—நன்றேகாண்'' (நாலடி. 24.)

எனப் பன்னிரண்டெழுத்தடி ஒன்றினையும் இருகாற் சொல்லிக் கூட்டி எதுகைத்தொடை கொள்ளுங்கால் அடியோடு அடிக் கூட்டத்துத் தளைவகை சிதையாது வந்தமையின் அத்தொடை பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டென வரையறைப்பட்ட தொடையுட்பட்டது.

''யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்—றேனூடு''
(முத்தொள்ளாயிரம், 104)

என்றவழிப் பதினான்கெழுத்தடியே தொடுத்தமையின் அடி-

1. அடியிறந்துவருதல் இல்லையென்றது, தளையுந்தொடையும் உறழ்தற்கென எடுத்துக்கொள்ளப்பட்ட நாற்சீரடியின் அமைப்பினைக் கடந்து தளையும் தொடையும் கொள்ளப்படுதல் இல்லையென்பதாம்.

2. ஓரடியோடு மற்றோரடி இயைந்துகூடிய நிலைமைக்கண் தளைகொள்ளுமிடத்து அவ்வடியமைப்பின் வழுவாமையும் தளைகொள்ளுதலும், அவ்வாறே தொடை கொள்ளுமிடத்து முன்வந்த அடியமைப்பினையே பின்வந்த அடியும் பெற்றிருத்தலும் வேண்டும் என்பதாம்.

யிறந்து வந்ததன்றாயினுந் தளைவகை ஒன்றாமையின்[1] இது பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டினுட் படாதாயிற்று.

“வண்டு வரகு வரகு வரகு”

என்கின்ற அடியினை மீட்டுந் தந்து தொடைகொள்ளுங்கால் வண்டு வரகு வரகு வரகு என்றது நேரொன்றாசிரியத்தளை தட்கு மாதலான் இது வழுவெனப்படுமென்பது.[2] கலிப்பாவிற்கு அன்ன தொரு வரையறை இல்லை. இருவாற்றானும் வருமென்பது என்னை ?

‘வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே’ (தொல் செய் 92)

என்றாராகலின்[3]. மேலைச்சூத்திரத்தானே தளைவகை சிதை-யாமல் அறுநூற்றிருபத்தைந்து வகைப்படுவது நாற்சீரடியே என்பதூஉங் கூறி, அந்நாற்சீரடியே நாம் முன்னர் வேண்டுந் தொடை விகற்பத்திற் குரியவென்பதூஉங் கூறினான். இச்-சூத்திரத்தானே அத்தொடை கொள்வது தம்மின் வேறாகாத இரண்டடிக்கண் ணென்பதூஉம் அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஒன்றனை இருகாற் சொல்லித் தொடை கொள்ளப்படுமென்-பதூஉம் அங்ஙனந் தொடுக்குங்காலும் அடியோடு அடிக்கூட்டத்-தின் கண்ணுந் தளைவகை சிதையாமல் தொடுக்க வேண்டு-மென்பதூஉங் கூறியவாறாயிற்று. இவற்றானெல்லாம் நாற்

1. ‘தளைவகை ஒன்றுதலின்’ என அச்சுப்புத்தகத்திற் காணப்படும் பாடம் இங்குப் பேராசிரியர் தரும் விளக்கத்துடன் பொருந்தாமையால், ‘தளைவகை ஒன் றாமையின் எனத் திருத்தப் பெற்றது. இங்குத் தளைவகை ஒன்றாமை என்றது, மாத்திரைவகையால் செப்பலோசை சிதைதலை. இவ்வெண்பாவடிகள் பிறபாவுக்-குரிய சீருந்தளையும் விரவாது வரினும் அடிமுழுவதும் வெண்சீரே வந்தமையால் இவ்வடி வெண்பாவுக்குரிய செப்பலோசை கட்டளையுட் படாதாயிற்று.

2. ‘வண்டு வரகு வரகு வரகு’ எனவந்த அடியேவந்து தொடையொன்றிய தாயினும், முதலடியின் ஈற்றுச் சீரும் இரண்டாமடியின் முதற்சீரும் இணையும் நிலையில் நேரொன்றாசிரியத்தளைதட்டு வெண்டளைபிழைத்தலான் இது வழுப்பட்டது.

3. கலிப்பாவிற்குத் தளைகொள்ளுங்கால் வெண்பாவிற்குப்போன்று முதலடியின் இறுதியும் இரண்டாமடியின் முதலும் தளையியைந்து வருதல் வேண்டுமென்னும்வரையறையில்லை. தளை ஒன்றியும் ஒன்றாமலும் வரும் இருநிலைமை கலிப்பாவிற்கு உண்டு என்பதாம்.

சீரடியே சிறப்புடைத் தென்பது பெற்றாம்.[1] இன்னும் அதன் சிறப்புடைமையையே கூறுகின்றான்.[2] (௯௪)

**நச்சினார்க்கினியம் :**

இது கட்டளைப்பாட்டிற்குந் தொடைக்கும் ஓர் கருவி கூறுகின்றது.

(இ-ள்) அறுநூற்றிருபத்தைந் தடியுள்ளும் ஓரடி நின்றாங்கு வருகின்ற அடியும் முன்னின்றவடியை இறந்து வருதலில்லை என்று சொல்லுவர் ஆசிரியர். எ - று.

என்றது, முற்கூறிய தளைவகையேயன்றி, அடியோடு அடிக் கூட்டத்துத் தளைகொள்ளுங்காலும் வந்தவடியே வரவேண்டு மென்பதூஉம், தொடை கொள்ளுங்காலும் வந்தவடியே வர வேண்டுமென்பதூஉம் கூறியதாயிற்று; எனவே, தேமா தேமா தேமா தேமா என்னும் அடிக்கட் டொடைகொள்ளுங்கால் "வாமா னேறி வந்தோன் மன்ற" என வந்த அடியே வரல் வேண்டுமென்பதூஉம்,

"தேமாஞ் சோலைத் தீந்தே னுண்ட
காமர் தும்பி யாகல் கண்டது"

எனத் தளை வழுவாகித் தொடைப்பகுதியுட் படாதென்பதூஉம் கூறியவாறாயிற்று. இனி வெண்பாவினுள்

"சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யெறிப பறையினை நன்றேகாண்" (நாலடி-34)

எனப் பன்னிரண்டெழுத்தடியொன்றனையும் இருகாற் சொல்லி எதுகை கொள்ளுங்கால் அடியோ டடிக்கூட்டத்துத்[3] தளைவகை

---

1. தம்மின் மாறுபடாது ஒத்த இரண்டடிக்கண்ணேயே தொடைகொள்ளப்படும் என்பதும், அங்ஙனங்கொள்ளுங்கால் பின்னர் வகுத்துரைக்கப்படும் அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஓரடியினை இருமுறைவைத்து அவற்றிடையே தொடைகொள்ளப்படும் என்பதும், அங்ஙனம் தொடுக்குமிடத்து அடியொடு அடிகூடும் நிலைமைக்கண் தளைவகை சிதையாதிருத்தல் வேண்டும் என்பதும் இச்சூத்திரத்தால் உணர்த்தப்பெற்றன. தளையொடு தொடை வகுத்தற்குச் சிறந்தது நாற்சீரடியே என்பது இவற்றாற் புலனாம்.

2. இன்னும்...மேலும்; அடுத்த சூத்திரத்தும். அதன் சிறப்புடைமையே கூறுகின்றான்-அந்நாற்சீரடியின் சிறப்பினையே வற்புறுத்திக் கூறுகின்றார் ஆசிரியர்.

3. அடியோடடிக் கூட்டத்து' என்பதே பாடம் (இராகவையங்கார் பதிப்பு) 'அடியோடடித்துக் கூட்டத்து' எனக் கழகப் பதிப்பிலுள்ளது பிழை.

சிதையாது தொடைப்பகுதியுட் பட்டவாறு காண்க.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
றானூட யானுணர்த்தத் தானுணரான்—றேனூறு"

எனப் பதினான்கெழுத்தின் இகந்ததின்றேனும் தளைவகை யொன்றுதலிற் றொடைப் பகுதியுட் படாவாயிற்று.[1] வண்டு வரகு வரகு வரகு என நின்ற வடியை மீட்டும் வண்டு வரகு வரகு வரகு எனத்தந்து தொடை கொள்ளுங்கால் ஆசிரியத்தளை தட்டு வழுவாயிற்று. கலிக்கு அன்னதோர் வரையறையின்று. அது,

"வெண்சீரிற் றசை" (செய் - ௨௬)

என்னுஞ் சூத்திரத்தானும்,

"தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா" (செய் - ௫௫)

என்னுஞ் சூத்திரத்தானும் உணர்க. ஏனை அகவலும் வெள்ளையுமே வரையறைப்பட்டன. இதனானே, அறுநூற்றிருபத்தைந்தடியும் தம்முன்னர்த் தாமே வந்து தளையுந் தொடையும் வழுப்படாமற் கொள்ளுமென்றவாறு.

## ஆய்வுரை :

இது, கட்டளைப்படுப்பதற்கும் தொடைப்படுத்தற்கும் உரிய தோர் கருவி கூறுகின்றது.

(இ-ள்) தளையும் தொடையும் ஆகிய அவை மேற்குறித்த நாற்சீரடியின்கண் வருதலன்றி அவ்வடியினைக் கடந்து வருதல் இல்லை எ-று.

---

1. "பதினான்கெழுத்தின் இகந்ததின்றேனும் தளைவகையொன்றுதலின்மையிற் றொடைப்பகுதியுட் படாவாயிற்று" என இத்தொடரினைத் திருத்துக. தளைவகை சிதையாமையாவது மாத்திரை வகையால் செப்பலோசை மாறாமையாகும். இவ்வெண்பாவின் முன்னிரண்டடியிலும் பிறபாவுக்குரிய சீருந்தளையும் சிதையாது வரினும் அடி முழுவதும் மூவசைச் சீரே பயின்றமையால் வெண்பாவுக்குரிய செப்பலோசையாகிய கட்டளைக் கூறுபாடு சிதைவுற்றமையின் தொடைப்பகுதியுட் படாவாயிற்று என்பது பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய உரையாசிரியர் இருவரது கருத்தென்பது அவர்தம் உரைப்பகுதிகளாற் புலனாகின்றது. ஆகவே மேற்காட்டிய உரைத்தொடர் "பதினான்கெழுத்தின் இகந்ததின்றேனும் தளைவகையொன்றுத லின்மையிற் றொடைப்பகுதியுட் படாவாயிற்று" என்றிருத்தலே பொருத்த முடையதாகும் எனக் கொள்ளவேண்டியுளது.

எனவே இவ்வியலில் தளைப்பகுதியாற் கட்டளையடியென வைத்துப் பெருக்கிக் கூறப்படுதலும் அறுநூற்றிருபத்தைந்து என்னும் அடிவரையறையும் தொடைவகை பற்றிய தொகையும் எல்லாம் நாற்சீரடியாகிய அளவடிக்கேயுரியன என்பது நன்கு பெறப்படும்.

௩௪ அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே.

## இளம்பூரணம் :

என்-எனின் இதுவும் அடிக்குரியதோர் சிறப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அடியின் சிறப்பினானே பாட்டென்று சொல்லப்படுமென்றவாறு.[1]

எனவே, பாட்டென்னுஞ் செய்யுட்கு அடியின்றியமையாதென்றுகொள்க. பாட்டாவன :- வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்பன.

இனி அவ்வடியினை எழுத்தளவினாற் குறியிடுகின்றார்.

(௩௪)

## பேராசிரியம் :

இது, நாற்சீரடியை விசேடித்துக் கூறி, அதனது இடத்தானே[2] பாட்டென்பதொரு முதற்பொருள் தோன்றுமென்பதுணர்த்தியவாறு. 'எனப்படும்' என்றதனான் இவ்வடிகளான் வந்த செய்யுளே சிறப்புடையனவென்பதூஉஞ் சொல்லியவாறு. மாத்திரை முதலிய மற்றை உறுப்புக்களான் இத்துணை மாத்திரை கொண்டது செய்யுளென்றானும், இத்துணை அசையுஞ் சீருந் தொடையுங் கொண்டது செய்யுளென்றானும் அளவியல் கூறிய உறுப்புக்களான் வரையறுக்கப்படா. அடியளவே கூறச் செய்யுட்புலப்பாடாமென்பது[3]. 'எனப்படும்' என்றதனான்,

1. அடியின் சிறப்பமைதிகொண்டே இஃது இன்ன பாட்டு என்று பகுத்துரைக்கப்படும் என்பதாம்.

எனவே நால்வகைப் பாக்களுள் இஃது இன்ன பாட்டு என்று அறிந்து கொள்ளுதற்குக் குறளடி சிந்தடி அளவடி முதலிய அடியின் சிறப்பியல்பே காரணமாகும் என்பது கருத்து.

2. அதன் திட்பத் தானே - உ. வே.

3. இவ்வளவு மாத்திரை கொண்டது இன்ன செய்யுள் என்றோ இவ்வளவு, அசையும்சீரும் தொடையும் கொண்டது இன்ன செய்யுள் என்றோ மாத்திரை

ஒழிந்த அடிகளானும் அவ்வாறு வருமாயினும் அவை சிறப்பில வென்பது.[1]

(இ-ள்) 'அடியின் சிறப்பென்பது'—அடி இரண்டும்பலவும் அடுத்துவந்த தொடையே பாட்டு (எ-று.)[2]

தலை யிடை கடைச்சங்கத்தாரும் பிற சான்றோரும் நாற்சீரடியான் வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும்பான்மையுஞ் செய்தார்; வஞ்சிப்பாச் சிறுவரவிற்றெனக் கொள்க.[3]

"மாயோன் மார்பி லாரம் போல
மணிவரை யிழிதரு மணிகிள ரருவி
நன்பொன் வரன்று நாட
னன்புபெரி துடைய னின்சொல் லினனே"
(தொல். செய். 78, 157 பேர்.)

என நாற்சீரடியான் ஆசிரியம் வந்தவாறு.

"மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்" (நாலடி 21)

என அளவடியானே வெண்பா வந்தவாறு.

---

முன் பக்கத் தொடர்ச்சி

அசை சீர் தொடை முதலாக அளவியல் கூறிய மற்றையுறுப்புக்களைக் கொண்டு இன்ன செய்யுள் என்று வரையறுத்தல் இயலாதென்பதும் அடியின் அளவே கூறச் செய்யுள் இதுவென்பது நன்கு புலனாம் என்பதும் கருத்து.

1. 'எனப்படும்' என்றதனால் நாற்சீரடியொழிந்த நெடிலடி கழிநெடிலடி முதலியவற்றாலும் செய்யுள் வருமாயினும் அவை அத்துணைச் சிறப்பில என்பதாம்.

2. 'அடியின் சிறப்பு' என்றது, அடி இரண்டும் பலவும் அடுத்து வந்த தொடையினை எனக்கொண்டார் பேராசிரியர்.

3. தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாரும் கடைச்சங்கத்தாரும் ஆகிய நல்லிசைப் புலமைச் சான்றோரும் பிற்காலத்துச் சான்றோரும் நாற்சீரடியால் வரும் ஆசிரியப்பாவும் வெண்பாவும் கலிப்பாவும் ஆகிய பாக்களையே பெரும்பாலும் இயற்றினார்கள் என்பதும், அக்காலத்தில் அளவடியிற்குறைந்த வஞ்சிப்பா சிறுவரவினதாக இயற்றப்பெற்றதென்பதும் கூறி, இவ்வாறு சங்ககாலத்து நாற்சீரடியாலியன்ற பாக்களே பெரும்பாலும் இயற்றப்பெறுதற்கு 'அடியின் சிறப்பேபாட்டெனப்படுமே' எனவரும் இத் தொல்காப்பிய விதியே காரணம் எனப் பேராசிரியர் கூறும் விளக்கமாகும். இது தமிழிலக்கிய வரலாற்றிற் சிறப்பிடம் பெறத் தகுவதாகும்.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்"
(கலி. 11)

எனக் கலிப்பா அளவடியான் வந்தது. பிறவு மன்ன. (௩௫)

**நச்சினார்க்கினியம் :**

இதுவும் அந்நாற்சீரடியின் சிறப்புக் கூறுகின்றது.

(இ - ள்.) அடியின்பாட்டே எ-து அந்நாற்சீரடியென்னும் உறுப்பான் வந்த பாட்டையே எ-று. சிறப்பெனப்படுமே எ-து சிறப்புடைப்பாட்டென்று கூறப்படும்.[1] எ-று.

அடியினாற் செய்யுள் வரையறை கூறலின்றி மாத்திரை முதலிய உறுப்பான் இத்துணைப்படுஞ்செய்யுளென்று வரையறை கூறப்படாமையின் அடியான் வந்ததே பாட்டென்றார். அது மூவகைச் சங்கத்தாரும் பிறசான்றோரும் நாற்சீரடியானே மூன்று பாவும்வரப் பெரும்பான்மை செய்யுட் செய்து, வஞ்சிப்பா சிறு வரவிற்றாகச் செய்யுள் செய்தவாற்றானுணர்க.

**ஆய்வுரை :**

இதுவும் மேற்குறித்த அடிக்குரியதோர் சிறப்புணர்த்து-கின்றது.

(இ-ள்) அடி இரண்டும் பலவுமாகச் சிறந்து அடுக்கித் தொடர்ந்து வருவதே பாட்டென்று சொல்லப்படும் எ-று.

ஈண்டுச் 'சிறப்பு' என்றது இரண்டும் பலவுமாகித் தொடர்ந்து வருதலை. நாற்சீரடிகளான் வந்த செய்யுளே சிறப்புடையன எனவும், 'அடி இரண்டும் பலவும் அடுத்து வந்த தொடையே பாட்டு' எனவும், "தலைஇடை கடைச்சங்கத்தாரும் பிற சான்-றோரும் நாற்சீரான்வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே செய்தார்; வஞ்சிப்பா சிறுவரவிற்றெனக் கொள்க" எனவும் பேராசிரியர் கூறும் விளக்கம் இங்கு நினைத்தற்குரியதாகும்.

௩௬. நாலெழுத் தாதி ஆக ஆறெழுத்
தேறிய நிலத்தே குறளடி யென்ப.

**இளம்பூரணம் :**

என் — எனின். குறளடி வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

---

1. பேராசிரியர் உரையைத் தழுவி இச்சூத்திரத்திற்கு விளக்கம் எழுதியுள்ள நச்சினார்க்கினியர், அவ்விளக்கத்திற்கு மாறாக 'அடியின் பாட்டே சிறப்பெனப்படுமே' என இங்ஙனம் பொருள் தெளிவின்றி உரை எழுதியிருப்பாரா என்பது ஆராயத்தகுவதாகும்.

(இ-ள்.) நாலெழுத்து முதலாக ஆறெழுத்தீறாக ஏறிய மூன்றுநிலத்தை யுடைத்து குறளடியென்று சொல்லுவரென்றவாறு.

எனவே, குறளடிக்கு நிலம் நாலெழுத்தும் ஐந்தெழுத்தும் ஆறெழுத்துமாம்.[1] இதற்குரிய எழுத்து முன்னர்க் காட்டுதும். (௩௫)

௩௬. ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே
ஈரெழுத் தேற்றம் அல்வழி யான.

**இளம்பூரணம் :**

என் — எனின். சிந்தடி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏழெழுத்தென்று சொல்லுவர் சிந்தடிக்கு அளவு; ஒன்பதெழுத்து ஏற்றம் அல்லாத விடத்தென்றவாறு.[2]

எனவே ஏழும் எட்டும் ஒன்பதுமாகிய எழுத்தினாற் சிந்தடியாம் என்றவாறாம்.[3] (௩௬)

---

1. இனி மேற்குறித்த நாற்சீரடியாகிய அளவடியினையே எழுத்தளவினால் ஐவகையடிகளாக வகுத்துப் பெயரிடுகின்றார்.

நாலெழுத்துமுதல் ஆறெழுத்தீறாக எழுத்தளவினால் உயர்ந்த மூன்று நிலங்களையுடையது குறளடியென்று கூறுவர் ஆசிரியர்.

ஆகவே குறளடிக்கு நாலெழுத்து, ஐந்தெழுத்து, ஆறெழுத்து என மூன்று நிலங்கள் உள என்பதாம்.

நிலத்து-நிலத்தையுடைத்து. குறளடி என்னும் எழுவாய் நிலத்து என்னும் வினைக்குறிப்புக் கொண்டது. ஏகாரம், ஈற்றசை 'நிலத்த' என்றும் பாடம்.

2. சிந்தடிக்குத் தொடக்க அளவு ஏழெழுத்தென்பர்; அவ்வழி இரண்டெழுத்துக்கள் உயர்தல் உண்டு.

எனவே ஏழெழுத்து, எட்டெழுத்து, ஒன்பதெழுத்து எனச் சிந்தடிக்கு மூன்று நிலங்கள் உள என்பதாம்.

3. 'ஈரெழுத்தேற்ற மல்வழியான' எனப்பாடங்கொண்டனர் இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய தொல்காப்பியவுரையாசிரியர்கள். ஈரெழுத்தேற்றம் அல்லாதவிடத்துச் சிந்தடிக்கு அளவு ஏழெழுத்து எனவே, ஈரெழுத்தேற்றம் உள்வழிச் சிந்தடிக்கு எட்டெழுத்தும் ஒன்பதெழுத்தும் ஆம் என்பது பெறப்படுதலின், 'எனவே ஏழும் எட்டும் ஒன்பதுமாகிய எழுத்தினாற் சிந்தடியாம்' என்றார் இளம்பூரணர். எனினும் 'ஈரெழுத்தேற்றம் அவ்வழியான' என்ற பாடங்கொள்ளுதலே தொல்காப்பியர் சொல்நடைக்கு ஏற்புடையதாகத் தோன்றுகின்றது.

௩௭. பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
ஒத்த நாலெழுத் தேற்றலங்[1] கடையே.

**இளம்பூரணம் :**

என் – எனின். அளவடி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அளவடி யெனினும் நேரடியெனினும் ஒக்கும். பத்தெழுத்து முதலாகப் பதினான்கெழுத்தளவும் அளவடியாம் என்றவாறு.

எனவே, பத்தும் பதினொன்றும் பன்னிரண்டும் பதின்மூன்றும் பதினாலுமென ஐந்து நிலம்பெறும். (௩௭)

௩௮. மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப.

**இளம்பூரணம் :**

என்—எனின். நெடிலடி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பதினைந்தெழுத்து முதலாகப் பதினேழெழுத்தளவு நெடிலடியாம் என்றவாறு.[2]

எனவே, பதினைந்தும் பதினாறும் பதினேழும் என மூன்று நிலம் பெறும் என்றவாறாம். (௩௮)

---

1. 'ஒத்தநாலெழுத்தொற்றலங்கடையே' என்பது பேராசிரியருரையிற் கண்ட பாடம்.

நேரடிக்கு அளவு பத்தெழுத்து என்பர். ஒற்றெழுத்துக்கள் அல்லாத நிலைமைக்கண் அதன்மேல் நான்கு எழுத்தும் நேரடிக்கு அளவாதற்கு ஒத்தன என்பது அதன்பொருளாகும்.

எனவே பத்தெழுத்தும், பதினோரெழுத்தும், பன்னிரண்டெழுத்தும், பதின்மூன்றெழுத்தும், பதினான்கெழுத்தும் ஆகிய ஐந்துநிலம் பெறுவது அளவடியென்றவாறாம். அளவடி நேரடியெனவும் வழங்கப்பெறும்.

2. 'இவட்பெறுமென்ப' என்பது பேராசிரியருரையிற் கண்டபாடம்.

(இ - ள்.) நெடிலடிக்கு அளவு மூவைந்தெழுத்தே; ஈரெழுத்துமிகுதலும் இயல்பு என மொழிப - எழுத்தெண்ணி வகுக்கப்பெறும் கட்டளையடிகளுள் நெடிலடிக்குக் கீழெல்லை பதினைந்தெழுத்தாகும். பதினைந்தின்மேல் பதினாறு, பதினேழு என இரண்டெழுத்து மிக்குவருதலும் அவ்வடிக்குரிய இயல்பாகும்.

எனவே பதினைந்தெழுத்து, பதினாறெழுத்து, பதினேழெழுத்து என நெலடி மூன்றுநிலம் பெறும் என்பதாம்.

ந௯. மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப

**இளம்பூரணம் :**

என்—எனின். கழிநெடிலடி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பதினெட்டெழுத்து முதலாக இருபதெழுத்தளவுங் கழிநெடிலடியாம் என்றவாறு.

எனவே, பதினெட்டும் பத்தொன்பதும் இருபதும் என மூன்று நிலம் பெறும். (ந௯)

**பேராசிரியம் :**

இவை ஐந்து சூத்திரமும் உரையியைபுநோக்கி உடனெழுதப்பட்டன. நாற்சீரடி இத்துணைப்பகுதிப்படுமென அவற்றது பெயரும் முறையுந் தொகையு முணர்த்துகின்றன.

(இ - ள்.) நாலெழுத்து முதலாக ஆறெழுத்தளவும் வந்த நிலம் மூன்றுங் குறளடி யெனவும், ஏழெழுத்து முதன் மூன்று நிலனுஞ் சிந்தடியெனவும், பத்தெழுத்து முதல் ஐந்துநிலனும் அளவடியெனவும், பதினைந்தெழுத்துமுதன் மூன்றுநிலனும் நெடிலடியெனவும். பதினெட்டெழுத்துமுதல் இருபதெழுத்து வரை மூன்றுநிலனுங் கழிநெடிலடியெனவுஞ் சொல்லுப ஆசிரியர் (எ - று.)[1]

---

(இ-ள்) கழிநெடிலடிக்குரிய அளவு பதினெட்டெழுத்தாகும். அதன்மேல் (பத்தொன்பதெழுத்து, இருபதெழுத்து என) இரண்டெழுத்து மிக்குவருதலும் அவ்வடிக்குரிய இயல்பாகும்.

எனவே, பதினெட்டெழுத்தும், பத்தொன்பதெழுத்தும், இருபதெழுத்தும் எனக் கழிநெடிலடி மூன்று நிலம் பெறும் என்பதாம்.

பா. வே.

1. ''செய்யுளியலுடையார், நாற்சீரடி தன்னையே நான்கெழுத்து முதல் ஆறெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் குறளடி யென்றும், ஏழெழுத்துமுதலா ஒன்ப தெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் சிந்தடியென்றும், பத்தெழுத்து முதலாப் பதினான்கெழுத்தின்காறும் உயர்ந்த ஐந்தடியும் அளவடியென்றும், பதினைந்து முதலாகப் பதினேழெழுத்தின் காறும் உயர்ந்த மூன்றடியும் நெடிலடி-யென்றும், பதினெட்டெழுத்து முதலா இருபத்தெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் கழிநெடிலடியென்றும், இருபத்தெழுத்தின் மிக்க நாற்சீரடிப்பா இல்லையென்றும் வேண்டுவர். அவ்வெழுத்தெண்ணுகின்றுழிக் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் ஒற்றும் ஒழித்து நின்ற உயிரும் உயிர்மெய்யும் கூட்டி எண்ணப்பெறும்'' (யா. வி. ப.) என யாப்பருங்கலவிருத்தியுரையாசிரியர்

குறளடிநிலங்களை வகுத்தொழியாது, ஒழிந்தனவும் வகுத்துரைத்தான்; அவை முதல் இடை கடையென மூன்றுகூற்றான் ஒன்றொன்றனிற் சிறப்பு இழிபுடையனவென்று கொள்ளினுங் கொள்ளலாமென்பது[1]. அவற்றுக்குச் செய்யுள் :

குறளடி
"போந்து போந்து சார்ந்து சார்ந்து
நேர்ந்து நேர்ந்து மூசி நொந்து
வண்டு சூழ விண்டு வீங்கி

சிந்தடி
நீர்வாய் கொண்டு நீண்ட நீல
நீர்வா யூதை வீச ஊர்வாய்
மணியேர் நுண்டோ டொல்கி மாலை
நன்மணங் கமழும் பன்னெல் லூர

நேரடி
வமையேர் மென்றோ ளம்பரி நெடுங்க
ணிணையீ ரோதி யேந்திள வனமுலை
யிறும்பமன் மலரிடை யெழுந்த மாவி
னறுந்தழை துயல்வருஉஞ் செறிந்தேந் தல்கு

நெடிலடி
லணிநடை யசைஇய வரியமை சிலம்பின்
மணிமருள் வணர்குரல் வளரிளம் பிறைநுத
லொளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளிரொடு

கழிநெடில்
நளிமுழவு முழங்க வணிநிலவு மணிநக
ரிருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை
கலனளவு கலனளவு நலனளவு நலனளவு
பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ
தொருநீ மறைப்பி னொழிகுவ தன்றே"

---

முன் பக்கத் தொடர்ச்சி
கூறும் விளக்கம் செய்யுளியலுடையராகிய தொல்காப்பியனார் வகுத்துக்கூறும் இவகைக் கட்டளையடிகளையும் முறையே புலப்படுத்தல் காணலாம். இங்ஙனம் எழுத்தெண்ணி அடி வகுக்குங்கால் ஒற்றும் 'ஒற்றியல்பினவாகிய குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பனவும் எண்ணப்பெறுதல் இல்லையென்பது, பத்தெழுத்தென்ப நேரடிக்களவே, ஒத்த நாலெழுத்து ஒற்றலங்கடையே' (செய். ௩௬) என்புழி வரும் ஒற்றலங்கடையே (ஒற்றியல்பினவாகிய எழுத்துக்கள் அல்லாதவிடத்து) எனவரும் சொற்றொடராலும்

'உயிரில் லெழுத்து மெண்ணப் படாஅ
உயிர்த்திற மியக்க மின்மை யான (செய்-௪௪)

எனப்பின்வருஞ்சூத்திரத்தானும் இனிது புலனாம்.

1. இத்தொடரின் பொருள் தெளிவாக விளங்கவில்லை.

என இதனுட் பதினேழுநிலத்து ஐவகையடியும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க. குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடியென நாற்சீரடிதானே ஐவகைப்படுமென்று அவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறினான். தொகை பதினேழ்நிலத்து ஐவகையடியென்பது எண்ணிப் பார்க்க. இப் பெயரெல்லாங் காரணப்பெயர். மக்களுள் தீரக் குறியானைக் குறளனென்றும் அவனினெடியானைச் சிந்தனென்றும், ஒப்ப மைந்தானை அளவிற்பட்டா னென்றும், அவனினெடியானை நெடியானென்றும், அவனினெடியானைக் கழியநெடியானென்றுஞ் சொல்லுப. அவைபோற் கொள்க இப்பெயரென்பது.[1] (௬௦)

**நச்சினார்க்கினியம் :**

இவை ஐந்து சூத்திரமும் உதாரணச்சுருக்கமும் உரையியையபும் நோக்கி உடனெழுதப்பட்டன. இவை நாற்சீரடி இத்துணைப் பகுதிப்படுமென அவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றன.

(இ - ள்.) நாலெழுத்து முதலாக ஆறெழுத்துக்காறும் ஏறிய மூன்று நிலத்தையுமுடைத்து[2] குறளடி எ-று. சிந்தடிக் கெல்லை ஏழெழுத்தொன்றுமே என்று கூறுவர், எட்டு மொன்பதும் இரண்டுமல்லாதவிடத்து[3] எ-று. அளவடிக்கெல்லை பத்தெழுத்தொன்றுமே என்று கூறுவர், அதனோடொத்த பதினொன்றும் பன்னிரண்டும் பதின்மூன்றும் பதினான்குமாகிய நான்கெழுத்தானாகிய நான்கு நிலனும் ஏற்றமாய் வாராதவழி. எ-று. நெடிலடிக்கெல்லை பதினைந்தெழுத் தொன்றுமே என்று கூறுவர். அதற்குப் பதினாறும் பதினேழுமாகிய இரண்டெழுத்து மிக்குவரும் நிலமிரண்டும் இயல்பென்று கூறுவர் எ-று. கழிநெடிலடிக்கெல்லை பதினெட்டெழுத்தாமென்று கூறுவர், அதற்குப் பத்தொன்பதும் இருபதுமாகிய இரண்டெழுத்தும் மிக்குவருநிலமிரண்டையும் இவ்விடத்தே பெறுமென்று சொல்லுவர் எ-று.

---

1. தீரக்குறியான் - மிகவும் குறுமையுடையான்.
நெடியான் - நீண்டுயர்ந்தான்

ஒப்ப அமைதலவாது, குறுமையும் நெடுமையுமின்றி நடுத்தரத்தாக ஓர் அளவிற்பொருந்தியமைதல்.

2. நிலத்து - நிலத்தையுடையது.
3. 'ஒத்தநாலெழுத் தேற்றலங்கடையே' என இளம்பூரணர் கொண்ட பாடத்தை யொட்டியே இச்சூத்திரவுரை அமைந்துள்ளது.

குறளடியொழிந்தனவற்றை[1] இங்ஙனம் வகுத்துரைத்தார், தலை யிடை கடை யென்னும் மூன்று கூற்றான் ஒன்றற்கொன்று சிறப்புமிழிபு முடைமையின். உ-ம். 'பேர்ந்து…தன்றே' இதனுள் நாற்சீரடிக்கட் பதினேழு நிலத்து ஐவகையடியும் முறையானே வந்தவாறு காண்க. மக்களுள் தீரக்குறியானைக் குறளனென்றும், அவனிற் சிறிது நெடியானைச் சிந்தனென்றும், ஒப்பவமைந்தானை அளவிற்பட்டானென்றும், அவனிற் சிறிது நெடியானை நெடியா னென்றும், அவனின் மிகநெடியானைக் கழியநெடியா னென்றும் கூறுபவாகலின் அவைபோலக் கொள்க, இப்பெயர். இவை சீர்வகை யடிக்கும் ஒக்கும் : என்னை? சுருங்கிய வெழுத்தானும் இருசீரானும் வருவன குறளடி எனவும், ஏறியவெழுத்தானும் முச்சீரானும் வருவன சிந்தடி எனவும், இடைநிகரான வெழுத் தானும் நாற்சீரானும் வருவன அளவடி எனவும், மிக்கவெழுத் தானும் ஐஞ்சீரானும் வருவன நெடிலடி எனவும், அவற்றின் மிக்கவெழுத்தானும் அறுசீர் முதலிய சீரானும் வருவன கழிநெடி லடியெனவும் இங்ஙனம் இருவகையடிக்கும் ஒருபெயரே கொள்க. அவை

"ஓங்குதலை வியன்பரப்பின்"
(மதுரைக்காஞ்சி)

"வலமாதிரத்தான் வளிகொட்ப"
(மதுரைக்காஞ்சி)

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே"
(புறம்-௨௫)

"சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே"
(புறம்-௨௫)

---

1. எழுத்தெண்ணி வகுக்கப்படும் ஐவகையடிகளுள் நாலெழுத்து முதல் ஆறெழுத்து வரையுள்ள மூன்று நிலமும் குறளடி என ஒரு தொடராகத் தொகுத்துரைத்த தொல்காப்பியனார், ஏனைய நான்கடிகளைப் பற்றிக் கூறுமிடத்து 'ஏழெழுத்தென்ப சிந்தடி, ஈரெத்து ஏற்றம் அல்வழி' எனவும் 'பத்தெழுத்தென்ப நேரடி; ஒத்த நாலெழுத்து ஏற்றலங்கடை' எனவும், 'மூவைந்தெழுத்தே நெடிலடி, ஈரெழுத்துமிகுதலும் இயல்பு' எனவும், 'மூவாறெழுத்தே கழிநெடிலடி, ஈரெழுத்து மிகுதலும்பெறும்' எனவும இவ்வாறு அவ்வவ்வடிக்குரிய நிலங்களை முதன்மையும்முதன்மை யின்மையும் புலப்பட இரு தொடர்களாக வகுத்துரைத்தார் என்பது பேராசிரியர், நச்சினார்க்கினியர் என்னும் இருவரது கருத்தாகும். இக்கருத்து தொல்காப்பியனார்க்கு ஏற்புடையது தானா என்பது இங்குச் சிந்தித்தற்குரியதாகும்.

"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇ"
(குறிஞ்சிக்கலி)

"கவிரிதழ் கதுவிய துவரித ழரிவையர்
கலிமயிற் கணத்தொடு விளையாட"
"மூவடிவி னாலிரண்டு சூழ்சுடரு நாண
முழுதுலகுமூடி முளைவயிர நாறி"

என இவற்றை முறையானே குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி எனப்பெயர் கூறுப; எண்சீரின் மிக்கன சிறப்பில.

**ஆய்வுரை :**

நூற்பா-35

இஃது எழுத்தெண்ணி வகுக்கப்பெறும் ஐவகையடிகளுள் குறளடியின் எழுத்து வரையறை கூறுகின்றது.

(இ-ள்) நாலெத்து முதலாக ஆறெழுத்தீறாக ஏறிய மூன்று நிலத்தையுடையது குறளடி யென்று கூறுவர் ஆசிரியர் எ-று.

நிலத்து-நிலத்தினையுடையது எனக் குறிப்புவினை முற்றாகக் கொண்டு, 'குறளடி நாலெழுத்து ஆதியாக ஆறெழுத்துவரை ஏறிய நிலத்து' என முடிக்க. ஆதியாக - முதலாக. எனவே குறளடி நாலெழுத்து, ஐந்தெழுத்து, ஆறெழுத்து என மூன்று நிலம் பெறும் என்றாராயிற்று.

நூற்பா 36

இது, கட்டளையடியுட் சிந்தடியாமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஏழெழுத்தென்று சொல்லுவர் சிந்தடிக்கு அளவு; ஒன்பதெழுத்தினைக் கடந்து மிகாதவிடத்து எ-று.

எனவே சிந்தடியின் சிற்றெல்லை ஏழெழுத்து எனவும், பேரெல்லை ஒன்பதெழுத்தெனவும், சிந்தடி ஏழெழுத்து, எட்டெழுத்து, ஒன்பதெழுத்து என மூன்று நிலம் பெறும் எனவும் கூறினாராயிற்று.

'ஈரெழுத்தேற்றம் அல்வழியான' எனவே பாடங்கொண்டனர் பண்டையுரையாசிரியர்கள். லகரமும் வகரமும் ஏடெழுது-வோரால் வேறுபாடின்றியெழுதப் பெறுதலும் உண்டாதலின் 'அவ்வழியான' எனப் பாடங்கொண்டு, "சிந்தடிக்குச் சிற்றெல்லையாகிய அளவு ஏழெழுத்தென்று கூறுவர். அவ்விடத்து இரண்டெழுத்து மிக்குவருதல் அதன் பேரெல்லையாகும்" எனப்

பொருள் கூறுதற்கும் இடமுண்டு; தொல்காப்பியனார் எழுத்தெண்ணிக் கூறப்படும் ஐவகையடிகட்கும் எழுத்தளவின் சிற்றெல்லையும் பேரெல்லையும் ஒருங்குகூறும் முறை இதனாற் புலனாதல் காணலாம்.

நூற்பா 37:

இது கட்டளையடிகளுள் நேரடியாவது இதுவெனக் கூறுகின்றது.

(இ-ள்) பத்தெழுத்து என்று கூறுவது அளவடிக்குச் சிற்றெல்லை; அதன்மேல் நான்கெழுத்துக்கள் கூடி அளவடியாதற்கு ஒத்தன ஒற்றெழுத்துக்கள் எண்ணப்படாத நிலையில் இவ்வெழுத்தெண்ணிக்கை. எ-று.

எனவே அளவடியாகிய நேரடிக்கு எழுத்தளவின் சிற்றெல்லை பத்தெழுத்தெனவும் பேரெல்லை பதினான்கெழுத்து எனவும் இவற்றின் இடைப்பட்ட பதினொன்றும், பன்னிரண்டும், பதின் மூன்றும் நேரடியின் அளவெல்லை யெனவும் பத்தும் பதினொன்றும் பன்னிரண்டும் பதின்மூன்றும் பதினான்கும் என நேரடி எழுத்தளவால் ஐந்து நிலம் பெறும் எனவும் கொள்ளவைத்தாராயிற்று. இச்சூத்திரத்தில் 'ஒத்த நாலெழுத் தேற்றலங் கடையே' என இளம்பூரணர் முதலியோர் பாடங்கொண்டனர். 'ஒத்தநாலெழுத் தொற்றலங் கடையே' என யாப்பருங்கல விருத்தி வுரையாசிரியர் கொண்டனர். தொல்காப்பியவுரைகளிற் காணப்படும் 'ஏற்றலங்கடையே' என்ற தொடர் 'ஏற்றமாய் வாராதவழி' என்னும் பொருளைத் தெளிவாகத் தராமையானும் எழுத்துக்களை எண்ணி அடிகளை ஐவகையாகப் பகுக்குமிடத்து ஒற்றெழுத்துக்களும் ஒற்றின் தன்மையவாகிய குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்னும் எழுத்துக்களும் எண்ணப்படா என்பதனை வெளிப்படக் கூறுதல் ஆசிரியர் கடமையாதலானும் 'ஒற்றலங்கடையே' என யாப்பருங்கல விருத்தியாசிரியர் கொண்ட பாடமே பொருட்பொருத்த முடையதாகும். ஐவகையடிகட்கும் நடுவணதாகிய நேரடிக்குக் கூறிய 'ஒற்றலங்கடையே' என்றதொடர் இதன்முன் கூறப்பட்ட குறளடி சிந்தடிகளோடும் இதன்பின்னர்க் கூறப்படும் நெடிலடி கழிநெடிலடிகளோடும் சென்றியையும் வண்ணம் இச்சூத்திரத்துட் சிங்கநோக்காக அமைந்துள்ளமை நுணுகியுணரத்தகுவதாகும்.

நூற்பா 38 :

இது, கட்டளையடியுள் நெடிலடியாமாறு கூறுகின்றது.

(இ - ள்.) பதினைந்து நெடிலடியின் சிற்றெல்லையாகும். அதன் மேற் பதினாறு, பதினேழு என இரண்டெழுத்து மிக்கு வருதலும் அதன் பேரெல்லையின் இயல்பென்று கூறுவர் ஆசிரியர் எ-று.

எனவே, பதினைந்து, பதினாறு, பதினேழு என நெடிலடி மூன்று நிலம் பெறும் என்பதாம்.

நூற்பா 39 :

இது, கட்டளையடியுட் கழிநெடிலடியாமாறு கூறுகின்றது.

(இ - ள்.) பதினெட்டெழுத்து கழிநெடிலடியின் சிற்றெல்லை யாகும். அதன்மேல் பத்தொன்பது இருபது என இரண்டெழுத்து மிக்கு வருதலும் அதன் பேரெல்லையின் இயல்பென்று கூறுவர் ஆசிரியர் எ-று.

எனவே, பதினெட்டு, பத்தொன்பது இருபது எழுத்துக் களாகிய மூன்று நிலம் பெறுவது கழிநெடிலடி என்பது பெறப் படும். ஆகவே இருபதெழுத்தின் மிக்க கட்டளையடி இல்லை யென்றவாறு.

**சய. சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது**
**நேர்நிரை வஞ்சிக் காறும் ஆகும்.[1]**

**இளம்பூரணம் :**

என்—எனின். சீர்க்கு எழுத்து வரையறை உணர்த்துதல் நுதலிற்று.[2]

(இ-ள்) சீர்நிலை ஐந்தெழுத்தின் மிகாது நேர் இறுதி யாங் காலத்து; நிரையீறாகிய வஞ்சியுரிச்சீர்க்கு ஆறெழுத்தும் ஆகும் என்றவாறு.[3]

---

1. இதனை இரண்டு சூத்திரமாகப் பகுத்து உரைவரைவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். 'நேர்நிலை வஞ்சிக்கு' என்பது அவர்கள் கொண்ட பாடம்.

2. கட்டளையடியாகிய நாற்சீரடிகளுக்குக் கூறிய இவ்வெழுத்துவரையறை சீர் வகையடிகளில் குறளடியானும் சிந்தடியானும் வரும் வஞ்சியடிகளுக்கும் பொருந்துமாறு வஞ்சியுரிச் சீர்க்குரிய எழுத்து வரையறை கூறுகின்றது.

3. சீராம் நிலைமைக்கண் நேரீற்று வஞ்சியுரிச்சீராயின் அச்சீர் ஐந்தெழுத்- தினைக் கடந்து வருதல் இல்லை. நிரையீற்று வஞ்சியுரிச் சீராயின் ஆறெழுத்துக்- களால் வருதலும் உண்டு. எ-று

எனவே, இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடி யில்லை யென்ற வாறாம், வஞ்சிச்சீர் முச்சீரடியின்கண் வருதலின்.[1] (சO)

**பேராசிரியம் :**

இது, மேலெழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட ஐவகை யடிக்குஞ் சீரும் எழுத்தெண்ணியே வகுக்கின்றது.

(இ-ள்.) சீரது நிலைமைதான் ஐந்தெழுத்து இறந்து வாராது (எ-று.)

பெருமைக்கெல்லைகூறி வரையறுக்கவே சிறுமைக்கெல்லை வரையறைப்படாது ஒன்று முதலாக வருமென்பதாம். சீர்நிலை தானேயென்பது பிரிநிலையேகாரம். அதனை அசைநிலையிற் பிரித்துக் கூறியவாறு. அதனை அவ்வாறு பிரித்துக்கூறவே அசை சீராயவழி ஐந்தெழுத்திறவாமை அவற்றுக்கில்லையென் பது கொள்ளப்படும். அஃதேல் அவற்றுக்கெல்லை கூறானோ வெனின் அவை மூன்றெழுத்தி னிறவாதென்பது உரையிற் கொள்க[2]. தானென்பதனை இலேசுப்படுத்துக் கொள்ளினும் அமையும். மற்றிவற்றையுஞ் சீர்நிலைபெறுமென்ப வாதலாற் சீரென அடக்கானோவெனின், அடக்கானன்றே, அவை சீர்நிலை யெய்தியவழியும் அசையிரண்டாகாமையினென்பது.

‘தளைவகை சிதையாத் தன்மை யான’ (தொல். செய் 28.)

என்று ஆண்டு வரைந்தமையின் அதனைச் சீர்நிலையென வாளாது பொதுவகையா னோதான். அதுவே கருத்தாயின், அவற்றை நேர்பசை நிரைபசையெனக் கூறியதனானும், அவற்றை

‘ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே’ (தொல். செய். 12)

என்றதனானும் பயந்ததென்னையென மறுக்க. அல்ல

1. சீர்நிலைதானே ஐந்தெழுத்திறவாது என்றமையான் நாலைந்து இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடியில்லையென்பதும், நிரையீற்று வஞ்சிச்சீரான் இயன்ற சிந்தடியாயின் மூவாறு பதினெட்டெழுத்தின் மிக்கு வருதல் இல்லை-யென்பதும் நன்கு பெறப்படும்.

2. ‘சீர்நிலைதானே’ என்புழி ஏகாரம் அசைநிலையிற் பிரிக்கும் பிரிநிலை யேகாரமாதலின், ‘ஐந்தெழுத்திறவாது’ என்னும் வரையறை அசைநிலைக்கில்லை என்பது கொள்ளப்படும். அசைநிலை முன்றெழுத்தின் இறவாது என்பது உரையிற் கோடலாற் கொள்ளப்படும்.

தூஉம் 'இயற்சீர்ப் பாற்படுத்தியற்றுக' வெனவே இவைதா மியற் சீரல்ல, அவற்றது செய்கை இவற்றானுங் கொள்கவென்ற துணையே ஆண்டுக்கூறியதென்பது;[1] அல்லதூஉந் தேவரும் நரகரும் மக்கட்பாற் படுத்துத்(மரபியல்-33) திணைகொள்ளப்படு மென்ற துணையானே பிறப்பானும் பெற்றியானும் மக்களென வழங்கார். அதுபோல அசைநிலைத்தளையுஞ் சீர்நிலைத்-தளையும் ஒக்குமென்றதுணையானே அவை அசைச்சீரெனவே, அடையடுத்தே சொல்லவேண்டுவனவற்றையும் வாளாதே சீரெனப் படுவனவற்றையும் ஒருவகையானே சீர்நிலையென **மயங்கக்கூறல்** (மரபியல்-108) குற்றமாமென்பது.[2] **மயங்கக்கூறல்** குற்றமன் றென்பார் உளராயின் அவர்கருத்தினான் அதுவும் அமையுமென்பது. ஒருசாதியல்லனவற்றைச் சாதிப்பெயரொன்-றெனவும் புகலார்; அதுபோலச் சீரிலக்கணமுடைய இயற்சீர் உரிச்சீர்களைச் சீரெனக்கூறி அவ்வினத்தவல்லாத அசைச்சீரை **இலேசினாற்** கொண்டாமென்பது.

ஓரெழுத்துச்சீர் நுந்தையென ஒன்றேயாம்; இதனோடு வண்டு என்னும் அசைச்சீர்[3] கூட்ட இரண்டாம்.

ஈரெழுத்துச்சீர் நான்கு; அவை; தேமா ஞாயிறு போதுபூ போரேறு என வரும். மின்னு வரகு என்னும் அசைச்சீர் இரண்டனோடுங் கூட்ட ஆறாம்.

---

1. உரியசைச்சீரினைத் தளைவகை சிதையாத் தன்மைக்கண் இயற்சீர்ப்பாற் படுத்து இயற்றிக்கொண்டதல்லது அந்நிலையிலும் அசையிரண்டாகாமையின் அதனைப் பொதுவகையாற் சீரெனக்கொள்ளுதல் ஆசிரியர் கருத்தன்றாம். உரியசையும் சீராம் என்பது தொல்காப்பியர் கருத்தாயின்,

'ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே' (செய் - 12)

என வரையறை கூறமாட்டார். அன்றியும் அவற்றை 'இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றுக' எனவே அவை இயற்சீரல்ல என்பதும் சீரது செய்கை இவ்வசைகளானுங் கொள்க என்ற அளவே அங்குக் கூறியதென்பதும் புலனாம்.

2. தேவரையும் நரகரையும் மக்களொடுபடுத்து உயர்திணையெனக் கூறிய வழி, தேவரும் நரகரும் பிறப்பினாலும் பண்பினாலும் மக்களென வழங்கப் பெறுவாரல்லர்.

அதுபோலவே அசைநிலைத்தளையும் சீர்நிலைத்தளையும் ஒக்கும் எனக்கூறிய அளவினாலேயே அடையடுத்துக் கூறப்படுவதன்றிப் பொதுவாகச் சீர் எனவழங்கப் பெறுதல் இல்லை என்பதாம்.

3. வண்டு - நேர்பு; ஓரெழுத்து உரியசைச்சீர்; இது தேமாபோன்று இயற் சீர்ப்பாற்படுத்து இயற்றப்பெறும்.

மூவெழுத்துச்சீர் பத்து ; அவை: [1]புளிமா [2]பாதிரி [3]வலியது [4]மேவுசீர் [5]நன்னாணு [6]பூமருது [7]கடியாறு [8]விறகுதீ [9]மாசெல்வாய் [10]நீடுகொடி எனவிவை. அரவு என்னும் உரியசைச்சீரோடுங்[1] கூட்டப் பதினொன்றாம் :

நாலெழுத்துச்சீர் ஒன்பது; அவை: [1]கணவிரி [2]காருருமு [3]பெருநாணு [4]உருமுத்தீ [5]மழகளிறு [6]மாவருவாய் [7]புலிசெல்வாய் [8]நாணுத்தளை [9]உரறுபுலி எனவிவை.

ஐந்தெழுத்துச்சீர் மூன்று ; அவை : [1]நரையுருமு [2]புலிவரு வாய் [3]விரவுகொடி என வரும். இக்கூறுபட்டன வெல்லாம் ஈண்டுக் காட்டுவாமாயிற்று.

எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப' (தொல், செய். 43.)

என வருகின்ற சூத்திரத்தினை நோக்கியென்பது [2] 'முடவுமருது' என்பதனைக் குற்றுகரங் களைந்து ஐந்தெழுத்துச்சீரென்று காட்டு வாருமுளர். அஃது உரியசைமயக்கமாகிய ஆசிரியவுரிச்சீராகலின்

'இன்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே'
(தொல், செய். 23 )

என்பதனான் விலக்கப்பட்டதென்பது. இனி, நுந்தையென்பதனை ஈரெழுத்துச்சீ ரென்பாருமுளர். அங்ஙனங் கூறின்.

'இரண்டு தலையிட்ட முதலா கிருபஃது'
(தொல். எழுத். புணர் 1)

என்னும் எழுத்தோத்தினோடு மாறுகொள்ளுமென்பது. அது வழக்கிற்குக் கூறியது; செய்யுட்காயினவாறு கொள்ளாமோ வெனின், கொள்ளாம்; செய்யுட்கண்ணு மதனை வேறெழுத் தென்று வேண்டுமாகலின். என்னை ?

'முற்றிய லுகரமு மொழிசிதைத்துக் கொளாஅல்'
(தொல். செய். 9)

---

1. அரவு - நிரைபு; மூவெழுத்து ஓரசைச்சீர். இது புளிமா போன்று இயற்சீர்ப்பாற்படுத்துரைக்கப்படும்.

2. சீர் தத்தமக்குரிய எழுத்து மிக்கும் குறைந்தும் வரினும் செய்யுளுள் பின்னர் ஓசை குறையாமையும் மிகாமையும் வரும் என இவ்வியலிற் பின்னர் ௪௩-ஆம் சூத்திரத்து ஆசிரியர் கூறுதலால், ஓரெழுத்துச்சீர் முதல் ஐந்தெழுத்துச் சீர் ஈறாகச் சீர்கள் வகைப்படுத்திக் காட்டப்பெற்றன.

எனக் குற்றியலுகரமும் வருமொழியைச் சிதைத்துக்கொள்ளப் படாவென்பது கூறினானாகலினென்பது.[1] (சகூ)

**நச்சினார்க்கினியம் :**

இது மேலெழுத் தெண்ணி அடி வகுத்த கட்டளையடிக்குச் சீரும் எழுத்தெண்ணி வகுக்கின்றது.

(இ - ள்.) ஒரு சீரினது நிலைமைதான் ஐந்தெழுத்து இறந்துவராது. எ-று.

பெருமைக்கு எல்லைகூறி வரையறுப்பவே, சிறுமைக்கு எல்லை வரையறைப்படாது; ஒன்று முதலாக வருதல் பெற்றாம். அசைநிலையிற்[2] பிரித்துநிற்றலிற் றானே யென்பது பிரிநிலை யேகாரம். அவற்றையுஞ்[3] சீரென அடக்குக எனின் :- அவை இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றவேண்டா; இங்ஙனம் பாற்படுப்பன வற்றைச் சேரக்கூறலின் மயங்கக்கூறலென்னுங் குற்றமாம். இனி அவை மூன்றெழுத்தி னிகவாமை உரையிற் கொள்க. அச்சீர்கள் வருமாறு :- நுந்தையும் வண்டும் ஓரெழுத்துச் சீரென்ப; தேமா, ஞாயிறு, போதுபூ, போரேறு, மின்னு, வரகு என இயைந்த ஆறும் ஈரெழுத்துச் சீராகும் என்ப; புளிமா, பாதிரி, வலியது, மேவுசீர், நன்னாணு, பூமருது, கடியாறு, விறகுதீ, மாசெல்வாய், நீடுகொடி அரவொடுகூட மூவெழுத்துச்சீர் பதினொன்றாகும்; கணவிரி, பெருநாணு, காருருமு, உருமுத்தீ, மழகளிறு, மாவருவாய், புலிசெல்வாய், நாணுத்தளை, உரறுபுலியொடு ஒன்பதுசீரும் நாலெழுத்துச்சீராகு மென்ப; நரையுருமு, புலிவருவாய், விரவுகொடி மூன்றும் ஐயெழுத்துச் சீராகுமென்ப. 'எழுத்தளவெஞ்சினும்' (செய்-சங) என்னுஞ் சூத்திரத்தான் இங்ஙனங்காட்டினாம். ஆகச்சீர் முப்பத்தொன்றாம்.

---

1. 'நுந்தை' என்பது குற்றுகரமுதன்மொழியென்பது எழுத்ததிகாரத்திற் கூறப்பட்டமையானும், இங்குச் செய்யுளியலில் 'முற்றியலுகரமு மொழி சிதைத்துக்கொளாஅ' என்புழி உண்மையால் அதனைக்குற்றுகரமாகவே ஆசிரியர் கொண்டமையானும் 'நுந்தை என்புழிக் குற்றுகரத்தை ஒற்றியற்றென்று எண்ணாது விடவே அஃது ஓரெழுத்துச் சீராவதன்றி ஈரெழுத்துச் சீராகா தென்பதாம்.

2. 'அசைநிலை' என்றது, ஓரசையாகிய அசைச்சீரினை.

3. அவற்றையும் - அவ்வோரசைச் சீர்களையும்.

**பேராசிரியம் :**

இஃது, ஒழிந்த வஞ்சிப்பாவினுள் வருஞ்சீர் இத்துணை யெழுத்திறவாதென்கின்றது. நேர்நிலை வஞ்சியென்பது சமநிலை வஞ்சி; அஃது இருசீரான் வருதலிற் சமநிலைவஞ்சியெனப் பட்டது முச்சீரான் வருவதனை வியநிலைவஞ்சி (26) யென்பவாகலின்.[1]

(இ-ள்.) இருசீரடிவஞ்சியுள் ஒருசீர் ஆறெழுத்தாகவும் பெறும் (எ-று.)

இதற்கு, மேனின்ற அதிகாரத்தாற் பெருக்கத்திற்கெல்லை கூறினான், சுருக்கத்திற்கும் வரையறையுடைமையின். அது முன்னர்ச் (46) சொல்லுதும்[2] எனவே, அறுபது வஞ்சியுரிச் சீருள்ளும் ஆறெழுத்தான் வருஞ் சீருங் கட்டளையடியாய் வரப் பெறுமென்றவாறு. உம்மை இறந்தது தழீஇயிற்று[3]

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல். செய் 46)

என்றதனான், ஒன்றும் இரண்டும் எழுத்தான் வருதலொழித்து, ஒழிந்த எழுத்தான் ஆறெழுத்தளவும் வஞ்சியுரிச்சீர் வருமென்பது கொள்ளப்படும். இதனை எச்சவும்மை யென்பார் ஏழெழுத்தானும் வஞ்சியுரிச்சீர் வருமென்ப; அங்ஙனங் கொள்ளின் இரண்டுசீராற் பதினான்கெழுத்துளவாகிய செல்லும்; செல்லவே,

"குறளடி முதலா வளவடி காறும்
உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப." (தொல். செய். 57)

என்பதனொடு மாறுகொள்ளுமென்பது.[4]

---

1. நேர்நிலைவஞ்சியென்பது இருசீரடிவஞ்சிப்பா. இது சமனிலை வஞ்சியெனவும் குறளடி வஞ்சிப்பா எனவும் வழங்கப்பெறும். முச்சீரடியால் வருவது வியநிலை வஞ்சி யெனப்படும். இதனைச் சிந்தடிவஞ்சிப்பா எனவும் வழங்குவர்.

2. வஞ்சிச்சீரின் எழுத்துச் சுருக்கத்திற்கெல்லை 'தன்சீரெழுத்தின் சின்மை மூன்றே' (செய். 46) எனப் பின்னர்க் கூறப்படும்.

3. 'ஆறுமாகும்' என்புழி உம்மை முற்கூறியப்படி ஐந்தெழுத்தாதலேயன்றி ஆறெழுத்துமாகும் எனப் பொருள் தந்து நின்றமையின் இறந்தது தழீஇய எச்சவும்மையாகும்.

4. 'ஆறும்' என்பதனை எச்சமாகக்கொண்டு ஏழெழுத்தானும் வஞ்சியுரிச் சீர் வரப்பெறும் என்பாருமுளர். அங்ஙனம் குறளடியில் வஞ்சிச்சீர் ஏழெழுத்தானும் வருமெனக் கொண்டால் இருசீரால் ஆகிய அவ் வஞ்சியடியிற் பதினான்கெழுத்துளவாகும். அங்ஙனம் வருதல் நாலெழுத்து முதல் பதினான்கெழுத்தளவும் உறழும் நிலை வஞ்சியடிக்கு இல்லையென இவ்வியல் ருஎ-ஆம் சூத்திரத்தில் ஆசிரியர் கூறிய வரையறையொடு மாறுகொள்ளுமாதலின் வஞ்சிச்சீர் ஆறெழுத்தின் மேற்படவருதல் இல்லையென்க.

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல். செய் 46,)
என்புழி, இவற்றிற்கு உதாரணங் காட்டுதும். (௪௨)

**நச்சினார்க்கினியம்:**

இது வஞ்சிப்பாவினுள் வருஞ் சீர்க்கு எழுத்துவகை கூறுகின்றது.

இ-ள். சமநிலைவஞ்சிக்கு ஆறெழுத்துமாம். எ-று

அஃது இருசீரான் வரும்; மூச்சீரான் வருவது வியநிலைவஞ்சி. இறுதியதிகாரத்தாற் பெருமைக்கெல்லை கூறினார்; சிறுமைக்கெல்லை மேற்கூறுப.[1] எனவே, ஆறெழுத்தி னிகந்தன கட்டளையடிக்காகா வென உணர்க. உம்மை இறந்தது தழீஇயிற்று, ஐந்தேயன்றி ஆறுமாமென்றலின். அவை முற்கூறிய உதாரணங்களுட் காண்க.

**ஆய்வுரை :**

இது, மேல் எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட கட்டளையடியுட் பயிலுஞ் சீர்க்கு எழுத்து வரையறை கூறுகின்றது.

(இ - ள்) நேரீற்றுச் சீர்களில் எழுத்துக்கள் நிற்கும் நிலை ஐந்தெழுத்தின் மிகாது. நிரையிறுதியாய் வரும் வஞ்சியுரிச்சீர்க்கு ஆறெழுத்தும் ஆகும் எ-று.

இச்சூத்திரத்தின் இரண்டாமடியில் 'நேர்நிரை' எனப்பாடங் கொண்டு, நேர் சீர்நிலைதானே ஐந்தெழுத்து இறவாது; நிரை வஞ்சிக்கு ஆறுமாகும் என இருதொடராய் இயைத்துப் பொருள் கொண்டார் இளம்பூரணர். இரண்டடிகளாலியன்ற இச்சூத்திரத்தில் வரும்

'சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது'

என்னும் முதலடியை ஒரு சூத்திரமாகவும்,

'நேர்நிலை வஞ்சிக்கு ஆறு மாகும்'

என்னும் இரண்டாமடியினை மற்றொரு சூத்திரமாகவும் பிரித்து இரண்டு சூத்திரங்களாக்குவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். இரண்டாமடியில் 'நேர்நிலைவஞ்சி' என்பது இவ்விருவரும் கொண்ட பாடம். இங்கு "நேர்நிலை வஞ்சியென்பது சமநிலை வஞ்சி; அஃது இருசீரான் வருதலிற் சமநிலை வஞ்சியெனப்

1. இவ்வியல் ௪௯-ஆம் சூத்திரத்தாற் சிறுமைக்கெல்லை கூறப்பட்டது.

பட்டது. முச்சீரான் வருவதனை வியநிலைவஞ்சி என்ப" எனப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தரும் விளக்கம் இங்கு நினைவுகூர்தற்குரியதாகும்.

**௪௧ எழுத்தள வெஞ்சினும் சீர்நிலை தானே**
**குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப.**

## இளம்பூரணம் :

இதுவுஞ் சீர்க்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்,) ஈண்டோதப்பட்ட அடிகள் பலதொடுக்கும்வழி ஓரடிக்கோரடி எழுத்தளவு குறைந்து[1] வரினுஞ் சீர்நிலை நான்கின் இழிதலும் மிகுதலுமில்லை என்றவாறு. (௪௧)

## பேராசிரியம் :

இது, மேற்கூறிய சீரெல்லாவற்றிற்கும் பொதுவிதி.

(இ - ள்) ஒருசீர் இரண்டுமுதற் பதினெட்டு ஈறாகப்[2] பல நிலைமைப்பட்டுப் பல சீராகிச் செய்யுளுள் வருமாற்றாற் றத்த மெழுத்துக் குறைந்தும் மிகுந்தும் அளவிறப்பினும் அவ்வச் சீரெனப்பட்டுச் செய்யுளுள் ஒத்த ஓசை இருவகையும் ஒரு தன்மையவேயாகச்[3] சுருங்கிற்றும் பெருகிற்றுமில்லை (எ - று.)

எனவே அவை எழுத்தெண்ணி அடிவகுக்கு மாற்றான் இருநிலைமையும், இரண்டிறந்த பலநிலைமையும் படுவன படும். அவ்விடத்து எழுத்திற்கல்லது சுருக்கப்பெருக்கமில்லை யென்ப தூஉங் கூறியவாறாயிற்று.[4] 'தான்' என மிகுத்துச்சொல்லியவத னான் அசைச்சீர்க்கும் அவ்வாறே கொள்ளப்படும். 'தளைவகைக் குரிய'வென மேலோதிவந்த சீர் பதினாறும் அசைச்சீரிரண்டு மெனப் பதினெட்டினுள்ளும் இயற்சீர் பத்தினுட் புளிமாவும் வெண்சீர்நான்குமென ஐந்தும் ஒருநிலைமையவேயாம். ஒழிந்த சீர் பதின்மூன்றும் இருநிலைமையெய்தி இருபத்தாறாம். ஆகச் சீர் முப்பத்தொன்றாமென்பது. அவற்றுக்குதாரணம் :

---

1. எஞ்சுதல் - குறைதல்.
2. 'ஒருசீர் இரண்டு முதல் எட்டீறாக' என்றிருத்தல் வேண்டும்.
3. சீரின் எழுத்துப்பெருக்கமும் எழுத்துச் சுருக்கமும் ஆகிய இருதிறமும். ஒருதன்மையவேயாதல் - ஓசையால் ஒருதன்மையவாய் ஒத்திருத்தல்.
4. எழுத்திற்கல்லது ஓசைக்குச் சுருக்கமும் பெருக்கமும் இல்லை.

[1]நுந்தை, தேமா; [2]ஞாயிறு, பாதிரி; [3]வலியது, கணவிரி; [4]போதுபூ, மேவுசீர்; [5]போரேறு, நன்னாணு; [6]பூமருது; காருருமு; [7]கடியாறு, பெருநாணு; [8]விறகுதீ உருமுத்தீ; [9]மழகளிறு நரையுருமு என ஒன்பதியற்சீரும் இருநிலைமையாற் பதினெட்டாயின.[1] புளிமா வென்னும் இயற்சீர் ஒருநிலைமைத்தேயாம். அல்லாதார் வரகு என்பதனுட் குற்றுகரங் களைந்து புளிமாவிற்கு இரு நிலைமை காட்டுப; அங்ஙனங் காட்டின் வரகென்பதுபோலப் புளிமாவும் ஓரசையாகவானும், புளிமாவென்பதுபோல வரகு என்பது இரண்டசையாகவானும் கோடல்வேண்டும். கொள்ளவே, இச்சூத்திரத்தினோடு மாறுகோளாமென்பது; என்னை?

'எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப' (355)

என்றானாகலின் என்பது.[2]

நீடுகொடி நாணுத்தளை எனவும், உரறுபுலி விரவுகொடி எனவும் நிரையீற்றாசிரியவுரிச்சீ ரிரண்டும் இவ்விரண்டாகி இரு நிலைமை யெய்தியவாறு.

இனி, வெண்சீர் நான்கும் ஒரு நிலைமையவேயாம்.

வண்டு, மின்னு; வரகு, அரவு; என அசைச்சீரிரண்டும் நான்காய் இருநிலைமையவேயாம்.

இவ்வாற்றான் இவையெல்லாந் தொகுப்ப, **இயற்சீர் பத்தொன்பதும், ஆசிரியவுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்கும், வெண்சீர் நான்கும்** என முப்பத்தொன்றாயின. என்றார்க்கு,

---

1. குற்றுகரத்துடன் கூடியநிலையில் எழுத்தெண்ணப்படாமையும் முற்றுகரத்துடன் கூடியநிலையில் எழுத்தெண்ணப்படுதலும் ஆகிய இருநிலைமை.

2. 'வரகு' என்னும் உரியசையினைப் 'புளிமா' என்னும் ஈரசைச்சீராகக் கொண்டு 'வரகு' என்பதிற் குற்றியலுகரத்தை நீக்குதலாற் 'புளிமா' என்பது ஈரெழுத்துச் சீராதலும் உடையதென உதாரணங்காட்டுவாருமுளர். வரகு என்பது நிரைபு என்னும் ஓரசைச்சீராதலின் அதனைப் 'புளிமா' என்னும் ஈரசைச்சீராகக் கொள்ளுதல் பொருந்தாது. அவ்வாறு கொள்ளின் வரகு என்பதுபோலப் புளிமா என்பதும் ஓரசைச் சீராம் நிலைமையெய்துதல் வேண்டும். 'எழுத்தளவு எஞ்சினும் சீர்நிலைதானே குன்றலும் மிகுதலும் இல' என்னும் விதிப்படி 'புளிமா' என்னும் ஈரசைச்சீர் ஈரசைச்சீராதலேயன்றி ஓரசைச்சீராதல் இல்லை. எனவே வரகு என்னும் உரியசைச்சீரினைப் 'புளிமா' என்னும் ஈரசைச்சீராகக்கொண்டு எழுத்தளவினால் இருநிலைமையெய்துவிந்தல் ஆசிரியர் கூறும் சீரிலக்கணத்திற்கு முரணாகும் என்பதாம்.

'மாவருவாய், புலிவருவாய்'

என்பவற்றையும்

'ஞாயிறுகொல், வலியதுகொல்'

எனக் குற்றுகரம்பெய்து இருநிலைமை கொள்ளாமோ வெனிற், கொள்ளாம். அவை,

'எல்லா விறுதியு முகர நிறையும்' (தொல். எழுத். குற்றி. 3)

என்பதனான் முற்றுகரமேயாமென்பது[1] இனி, முதற்கணின்ற குற்றுகரமுங்கொண்டு இருநிலைமை கொள்ளாம்; என்னை ? நுந்தையென்பது ஈரசையாகலானும் அதனை 'நீநுந்தை' யென வேறோர் சொற்பெய்து வெண்சீரெனக் காட்டின், அது 'வந்து நின்றது' என்றதுபோலச் சீர்வகையான் வேறோர் சொல்லா மாகவே அது முற்றுகரமாகலானுமென விடுக்க, என்றார்க்குப் போதுபூ என்பதூஉம் இருநிலைமைத்தாகாதாம் பிறவெனின், அற்றன்று;

'சேற்றுக்கால், யாட்டுத்தாள், வட்டுப்போர்'

எனப் பலவும் வருமாகலின் அஃது இருநிலைமைத்தேயா மென்பது.[2] இனி, வஞ்சியுரிச்சீர்க்கும் இடைநின்ற குற்றுகரங்களை வன்றொடராக வருவித்துக்கொள்க. இனிச், சீரிறுதிக் குற்று கரங்கள் நிறையாது நிற்றலும் உடையவென்பது,

'சீரியைந் திற்றது சீரெனப் படுமே' (தொல். செய். 12.)

என்றவழிக் கூறியவாற்றானறிக[3]

---

1. ஞாயிறுகொல், வலியதுகொல் என்புழிக் குற்றுகரங்கள் 'எல்லாவிறுதியும் உகரம் நிறையும்' (தொல். எழுத்து-குற்றி-3) என்ற விதிப்படி முற்றுகரமேயாய் நின்றனவாதலால் அவற்றைக் குற்றுகரமாகக்கொண்டு எழுத்தெண்ணுதலும் எண்ணாமையுமாகிய இருநிலைமையுமுடையவெனக் கொள்ளுதற்கில்லை,

2. போதுபூ என்பது, சேற்றுக்கால், யாட்டுத்தாள், வட்டுப்போர் என வருமொழி வல்லெழுத்து இரட்டித்து வருமிடம் பலவாதலின் அஃது எழுத்து-வகையால் இருநிலைமைப்படுமியல்பினதேயாகும்,

3. இனிச் சீரிறுதிக்குற்றுகரங்கள் நிறையாது நின்று எழுத்தெண்ணப்-படாமையும் உடைய என்பது, 'பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து' என்றவழி, நேர்பசைச்சீர்கள் குற்றியலுகரம் விலக்கி ஓரெழுத்துச் சீர்களாகக் கொள்ளப்-படுதலாற் புலனாம்.

இனிச் சூத்திரம் வரையாது கூறினமையின்[1] அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் இருபத்துநான்குசீர் இருநிலைமையாகவும், இருபத்தெட்டுச்சீர் நான்குநிலைமையாகவும், எட்டுச்சீர் எட்டு நிலைமையாகவுங் கொள்ளப்படும். அவற்றுள்,

**இரு நிலைமைப்படுவன** நேரீற்றுச் சீரெட்டு, நிரையீற்றுச்சீரெட்டு, நேர்பீற்றுச்சீர்நான்கு, நிரைபீற்றுச்சீர்நான்கு என இருபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம். அவை, 1மாபோகுவாய், 2மாவழங்குவாய், 3பாம்புசேர்வாய், 4பாம்புவருவாய், 5புலிபோகுவாய் 6புலிவருவாய், 7களிறுசேர்வாய், 8களிறுவருவாய் எனவும்; மாசேர்சுரம், 2மாவருசுரம் 3மாபோகுசுரம், 4மாவழங்குசுரம்; 5புலிசேர்சுரம் 6புலிவருசுரம், 7புலிபோகுசுரம், 8புலிவழங்குசுரம் எனவும்; 1மாசேர்காடு, 2மாவருகாடு, 3புலிசேர்காடு 4புலிவருகாடு எனவும்; 1மாசேர் கடறு, 2மாவருகடறு, 3புலிசேர்கடறு 4புலிவருகடறு எனவும் வரும்.

இவ் விருபத்து நான்கும் இருநிலைமையால் நாற்பத்தெட்டாமென்பது[2]

---

1. இச்சூத்திரத்து இன்ன இன்னசீர்கள் ஒருநிலைமைப்படுவன இன்ன இன்ன சீர்கள் இருநிலைமைப்படுவன என ஆசிரியர் வரையாது கூறினமையால்- உரையிற்கோடலால் பின்வருமாறு சீர்களை எழுத்து நிலைமைக்கேற்பப் பகுத்துணர்ந்து கொள்ளுதல் ஏற்புடையதாம் என்றவாறு;

2. இருபத்து நான்கு சீர்களும் இருநிலைமைப்பட்டு நாற்பத்தெட்டாமாறு

1. மாபோகுவாய் - மாமன்னுவாய்
2. மாவழங்குவாய் - மாவிரவுவாய்
3. பாம்புசேர்வாய் - மின்னுசேர்வாய்
4. பாம்புவருவாய் - மின்னுவருவாய்
5. புலிபோகுவாய் - புலிமன்னுவாய்
6. புலி வழங்குவாய் - புலிவிரவுவாய்
7. களிறுசேர்வாய்- அரவுசேர்வாய்
8. களிறு வழங்குவாய் - அரவு விரவுவாய்.

என நேரீற்று மூவசைச்சீர்எட்டும் இருநிலைப்பட்டுப் பதினாறாயின.

1. மாசேர் சுரம் - மாசேர்வது
2. மாவருசுரம் - மாவருவது
3. மாபோகுசுரம் - மாமன்னுசுரம்
4. மாவழங்குசுரம் - மாவிரவுசுரம்
5. புலிசேர் சுரம் - புலிசேர்வது
6. புலிவருசுரம் - புலிவருவது
7. புலிபோகுசுரம் - புலிமன்னுசுரம்

இனி. நான்கு நிலைமைப்படுஞ்சீர் இருபத்தெட்டும் வருமாறு: [1]பாம்புபோகுவாய், [2]பாம்புவழங்குவாய், [3]களிறுபோகுவாய் [4]களிறுவழங்குவாய், எனவும்; [1]பாம்புசேர்சுரம், [2]பாம்புவருசுரம், [3]பாம்புபோகுசுரம், [4]பாம்புவழங்குசுரம் எனவும், [1]களிறுசேர்சுரம், [2]களிறுவருசுரம் [3]களிறுபோகுசுரம், [4]களிறுவழங்குசுரம் எனவும்: [1]மாபோகுகாடு, [2]மாவழங்குகாடு, [3]புலிபோகுகாடு, [4]புலிவழங்கு காடு எனவும்; [1]பாம்புசேர்காடு, [2]பாம்புவருகாடு [3]களிறுசேர்காடு [4]களிறுவருகாடு எனவும்; [1]மாபோகுகடறு, [2]மாவழங்குகடறு, [3]புலிபோகுகடறு, [4]புலிவழங்குகடறு எனவும்; [1]பாம்புசேர்கடறு' [2]பாம்புவருகடறு [3]களிறுசேர்கடறு, [4]களிறுவருகடறு எனவும் வரும். இவற்றைப்

'பாம்புபோகுவாய், பாம்புமன்னுவாய்,
மின்னுப்போகுவாய்,' மின்னுக்கோலுவாய்'

என ஒன்று நான்காக வாய்பாடுகொடுத்து ஓட்டியுணர்க.

இவற்றுள், உரியசை முதற்கணின்ற நிரையீற்று நான்கினை யும் ஒன்று நான்குசெய்யுங்கால்,

'பாம்புசேர்சுரம், பாம்புசேர்வது,
மின்னுச்சேர்சுரம், மின்னுச்சேர்வது'

---

முன் பக்கத் தொடர்ச்சி

8. புலிவழங்குசுரம் - புலிவிரவுசுரம் என நிரையீற்று மூவசைச் சீர் எட்டும் இரு நிலைமைப்பட்டுப் பதினாறாயின.

1. மாசேர்காடு - மாசேர் காவு
2. மாவருகாடு - மாவரு காவு
3. புலிசேர் காடு - புலிசேர் காவு
4. புலிவருகாடு - புலிவரு காவு

என நேர்பீற்று மூவசைச்சீர் நான்கும் இரு நிலைமைப்பட்டு எட்டாயின.

1. மாசேர் கடறு - மாசேர் கடவு
2. மாவரு கடறு - மாவரு கடவு
3. புலிசேர் கடறு - புலிசேர் கடவு
4. புலிவருகடறு - புலிவரு கடவு

என நிரைபீற்று மூவசைச்சீர் நான்கும் இருநிலைமைப்பட்டு எட்டாயின.

என்றாற்போல வெவ்வேறு வாய்பாடு கொடுத்துரைக்க. இவை யிருபத்தெட்டும் விரிப்ப நூற்றொருபத்திரண்டு வஞ்சியுரிச்சீராம்.[1]

இனி, எட்டுநிலைமைப்படுஞ்சீர் எட்டுமாவன,: [1]பாம்புபோகு காடு, [2]பாம்புவழங்குகாடு, [3]களிறுபோகுகாடு [4]களிறுவழங்குகாடு

1. 1. பாம்புபோகுவாய் - மின்னுப்போகுவாய், பாம்புமன்னுவாய் - மின்னுக்கோலுவாய்.
2. பாம்பு வழங்குவாய் - மின்னுவழங்குவாய், பாம்புவிரவுவாய் - மின்னுவிரவுவாய்.
3. களிறுபோகுவாய் - அரவுபோகுவாய், களிறு மன்னுவாய்; அரவுமன்னுவாய்.
4. களிறு வழங்குவாய்- அரவுவழங்குவாய், களிறுவிரவுவாய், அரவுவிரவுவாய்.
5. பாம்புசேர்சுரம் - மின்னுசேர்சுரம், பாம்புசேர்வது, மின்னுசேர்வது.
6. பாம்புவருசுரம் - மின்னுவருசுரம், பாம்புசேர்வது, மின்னுசேர்வது.
7. பாம்புபோகுசுரம் - மின்னுபோகுசுரம், பாம்பு மன்னுசுரம், மின்னுமன்னுசுரம்.
8. பாம்புவழங்குசுரம்-மின்னுவழங்குசுரம், பாம்புவிரவுசுரம்-மின்னுவிரவுசுரம்.
9. களிறுசேர்சுரம் - அரவுசேர்சுரம், களிறுசேர்வது, அரவுசேர்வது.
10. களிறுவருசுரம் - அரவுவருசுரம், களிறுவருவது, அரவுவருவது.
11. களிறுபோகுசுரம் , அரவுபோகுசுரம், களிறுமன்னுசுரம், அரவுமன்னுசுரம்.
12. களிறுவழங்குசுரம் - அரவுவழங்குசுரம், களிறுவிரவுசுரம், அரவுவிரவுசுரம்.
13. மாபோகுகாடு - மாமன்னுகாடு, மாபோகுகாவு, மாமன்னுகாவு.
14. மாவழங்குகாடு - மாவிரவுகாடு, மாவழங்குகாவு, மாவிரவுகாவு.
15. புலிபோகுகாடு - புலிமன்னுகாடு, புலிபோகுகாவு, புலிமன்னுகாவு
16. புலிவழங்குகாடு - புலிவிரவுகாடு, புலிவழங்குகாவு, புலிவிரவுகாவு.
17. பாம்புசேர்காடு - மின்னுசேர்காடு, பாம்புசேர்காவு, மின்னுசேர்காவு.
18. பாம்புவருகாடு - மின்னுவருகாடு, பாம்புவருகாவு, மின்னுவருகாவு.
19. களிறுசேர்காடு - அரவுசேர்காடு, களிறுசேர்காவு, அரவுசேர்காவு.
20. களிறுவருகாடு - அரவுவருகாடு, களிறுவருவுகாவு, அரவுவருகாவு.
21. மாபோகுகடறு - மாமன்னுகடறு, மாபோகுகடவு, மாமன்னுகடவு.
22. மாவழங்குகடறு - மாவிரவுகடறு, மாவழங்குகடவு மாவிரவுகடவு.
23. புலிபோகுகடறு - புலிமன்னுகடறு. புலிபோகுகடவு, புலிமன்னுகடவு.
24. புலிவழங்குகடறு - புலிவிரவுகடறு, புலிவழங்குகடவு, புலிவிரவுகடவு,
25. பாம்புசேர்கடறு - மின்னுசேர் கடறு, பாம்புசேர்கடவு, மின்னுசேர்கடவு.
26. பாம்புவருகடறு-மின்னுவருகடறு, பாம்புவரு கடவு, மின்னுவருகடவு.
27. களிறுசேர்கடறு - அரவுசேர்கடறு, களிறுசேர்கடவு, அரவுசேர்கடவு.
28. களிறுவருகடறு - அரவுவருகடறு, களிறுவருகடவு, அரவுவருகடவு.

என இவை இருபத்தெட்டும் ஒன்று நான்காய் விரிந்து நூற்றிருபத்திரண்டு வஞ்சியுரிச்சீராயின.

எனவும் [1]பாம்புபோகுகடறு [2]பாம்புவழங்குகடறு, [3]களிறுபோகு கடறு [4]களிறுவழங்குகடறு எனவும் வரும்.

இவை மும்மூன்று உரியசையுடைமையின் முதற்கணின்ற உரியசையிரண்டும் நான்குநிலை எய்தும். பின்னர் நின்ற உரியசை யொன்றனை இருநிலைமையாக்கி அவற்றோடு முன்னர் நின்ற நான்கினையும் வேறுவேறுகூட்ட எட்டாமென்பது.[1]
**உதாரணம்:** [1]பாம்புபோகுகாடு, [2]மின்னுப்போகுகாடு, [3]பாம்புமன்னுகாடு, [4]மின்னுமன்னுகாடு, [5]பாம்புபோகுகாவு, [6]மின்னுபோகுகாவு, [7]பாம்புமன்னுகாவு, [8]மின்னுமன்னுகாவு எனவரும்.
இவ்வாறே ஒழிந்தசீர் ஏழனையும் வெவ்வேறு வாய்பாடு கொடுத்துரைக்க அறுபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம்.[1]

---

1. எட்டு நிலைமைப்படுஞ்சீர்களாவன;

1. பாம்புபோகுகாடு - மின்னுப்போகுகாடு, பாம்புமன்னுகாடு, மின்னுமன்னுகாடு,
பாம்புபோகுகாவு மின்னுபோகுகாவு பாம்புமன்னுகாவு, மின்னுமன்னு காவு.
2. பாம்பு வழங்குகாடு - மின்னுவழங்குகாடு, பாம்புவிரவு காடு, மின்னு விரவுகாடு பாம்பு வழங்கு காவு, மின்னுவழங்குகாவு பாம்புவிரவு காவு. மின்னுவிரவுகாவு.
3. களிறு போகுகாடு - அரவுபோகுகாடு, களிறுமன்னுகாடு, அரவுமன்னு காடு களிறுபோகுகாவு, அரவுபோகுகாவு, களிறுமன்னுகாவு அரவு மன்னுகாவு;
4. களிறு வழங்குகாடு - அரவு வழங்குகாடு, களிறு விரவுகாடு; அரவுவிரவு காடு களிறு வழங்குகாவு; அரவு வழங்குகாவு, களிறுவிரவு காவு; அரவு விரவுகாவு;
5. பாம்புபோகு கடறு - மின்னுப்போகுகடறு, பாம்புமன்னுகடறு, மின்னு மன்னுகடறு, பாம்புபோகு கடவு, மின்னுப்போகு கடவு, பாம்புமன்னு கடவு, மின்னுமன்னுகடவு;
6. பாம்பு வழங்குகடறு-மின்னுவழங்கு கடறு, பாம்பு விரவுகடறு; மின்னு விரவு கடறு; பாம்பு வழங்குகடவு; மின்னுவழங்குகடவு பாம்புவிரவு கடவு; மின்னுவிரவுகடவு;
7. களிறுபோகுகடறு - அரவுபோகுகடறு, களிறுமன்னுகடறு; அரவுமன்னு கடறு. களிறுபோகுகடவு; அரவுபோகுகடவு களிறுமன்னுகடவு; அரவு மன்னுகடவு
8. களிறுவழங்குகடறு - அரவுவழங்குகடறு களிறு விரவுகடறு; அரவுவிரவு கடறு, களிறு வழங்குகடறு; அரவு வழங்குகடவு களிறுவிரவு, அரவு விரவுகடவு.

என எட்டுச் சீரும் எட்டு நிலைமைப்பட்டு அறுபத்துநான்கு வஞ்சியுரிச்சீராயின. இவ்வாறு இருநிலைமையும் நான்கு நிலைமையும் எட்டுநிலைமையும் உடையனவாய் விரிந்து வரும் வஞ்சிச்சீர்கள் எல்லாவற்றையும் தொகுப்ப வஞ்சியுரிச்சீர் இருநூற்றிருபத்து நான்காதல் காண்க.

இவ்வாற்றான் இருநிலைமையும் நான்கு நிலைமையும் எட்டு நிலைமையும்பட்ட சீரெல்லாந் தொகுப்ப **வஞ்சியுரிச்சீர் இருநூற்றிருபத்து நான்கெனப்படும்.** இவற்றுள் ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்தும் பெற்றசீர் இருபத்து மூன்றுள. அவை நேர்நிலை வஞ்சிக்காகாவென்பது,[1]

உறழ்நிலை யிலவே வஞ்சிக்கு' (தொல்-செய்-57)

என்புழிச் சொல்லுதும்.

இனி, ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒன்று நான்கு நிலைமைப் படுமென்பதூஉம் ஈண்டடங்கும்.[2] நீடுகொடி குளிறுபுலி என்பன இருநிலைமைப்படும் என்பது மேற்கூறினாம்[3] என்றார்க்கு, அவற்றை இருநிலைமை யென்பதென்னை ? நீடுகொடி நீடுவது எனவும் நாணுத்தளை நாணுவது எனவும் ஒன்று நான்காம் பிறவெனின், அற்றன்று; 'நீடுவது' என்பதனை அலகு வைக்குங்கால்,

'அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி' (தொல். செய். 11) என்பதனான் அவ்வச்சீராய் இசையாவாகலிற் பூமருது என்னுஞ் சீராக வைக்கப்படுமாகலானென்பது.[4] (௪௩)

**நச்சினார்க்கினியம் :**

இது முற்கூறிய சீர்கட்கெல்லாம் பொதுவிதி.

(இ - ள்) எழுத்தளவெஞ்சினும் எ-து முற்கூறிய சீர்களெல்லாம் கட்டளையடிக்குத் தத்தம் எழுத்துக் குறைந்தும்மிக்கும்

---

1. நேர்நிலை வஞ்சிப்பாவில் வரும் வஞ்சிச்சீர்கள் ஆறெழுத்தின் மிக்கு-வருவதில்லையாதலால் ஏழெழுத்து முதலாக ஒன்பதெழுத்து வரை வஞ்சிச்சீர்கள் இருசீரடி வஞ்சிப்பாவில் வருதல் இல்லை என்றார்.

2. ஆசிரியவுரிச்சீர் நான்காவன, நேர்புநேர்பு, நிரைபுநேர்பு, நேர்பு நிரைபு, நிரைபு நிரைபு என்பன.

3. நீடுகொடி-நாணுத்தளை எனவும், குளிறுபுலி - விரவுத்தளை எனவும் இருநிலைமைப்படும் என்பது இவ்வியல் ௰௪-ஆம் சூத்திரவுரையிற் காட்டப் பெற்றது.

4. நேர்புநிரை என்னும் ஈரசைச்சீரை நீடுகொடி-நீடுவது, நாணுத்தளை-நாணுவது-என நான்காக உறழ்ந்து காணுங்கால் அசையும் சீரும் இசையாமையின் நீடுவது, நாணுவது என்பன இரண்டும் 'பூமருது' என்னுஞ்சீராக வைக்கப்படும்.

தம் அளவிறந்துவரினும். சீர்நிலை...... மொழிப எ-து அவை அவ்வச்சீரெனவேபட்டுச் செய்யுளுள் அவ்வப்பாக்களின் ஓசையை யுணர்த்தி, ஒருதன்மையவாயே நிற்கும், சுருக்கப் பெருக்கம் இன்றென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

எனவே, அவை கட்டளையடிக்கு எழுத்தெண்ணி அடிவகுக்கு மாற்றான், இயற்சீரும் உரிச்சீரும் ஒருநிலைமைப்படுதலும், வஞ்சிச்சீர் பலநிலைமைப்படுதலும் உடையவேனும், அவ்வெழுத் திற்கல்லது சீர்க்குச் சுருக்கப் பெருக்கமின்றென்று கூறியவாறா யிற்று. தானே என்றதனான் அசைச் சீர்க்கும் இருநிலைமை கொள்க. அவை இருநிலைமைப்படுமாறு:

"இயலசை மயங்கிய வியற்சீர் நான்கனுட்
புளிமா வொழிந்த வியற்சீர் மூன்றும்
நுந்தை தேமா ஞாயிறு பாதிரி
வலியது கணவிரி யெனவிரு வகையாய்
இருமூன் றாக வியம்பினர் புலவர்"

நுந்தை – ஓரெழுத்துத் தேமா, ஞாயிறு – ஈரெழுத்துப்பாதிரி, வலியது - மூவெழுத்துக்கணவிரி: இவற்றுட் குற்றுகரம் எழுத் தெண்ணப்பெறாமையான் அலகு பெறுதலின்,[1] இருநிலைமை எய்திற்று. உரியசை மயங்கின இயற்சீராறும், போதுபூ, மேவுசீர், விறகுதீ, உருமுத்தீ, போரேறு, நன்னாணு, பூமருது, காருருமு, மழகளிறு, நரையுருமு, கடியாறு, பெருநாணு என்று ஈருகரத் தான் ஈராறாகும். இவை குற்றுகர முற்றுகரங்களான் இரு நிலைமை எய்தின. இருவகை இயற்சீராய பதினெட்டு, புளிமா வோடு பத்தொன்பதாகும்; ஆக இயற்சீர் பத்தொன்பது; இவற்றுள்,

"நுந்தை தேமா புளிமா நேரீறு
மன்றி வந்த வீரெண் சீராய்ப்
பாதிரி கணவிரி யாகிநின் றவையுள்
ஒன்றி வந்தன வாசிரி யத்தளை
ஒன்றா தனவே வெண்டளை யாகும்"

"முன்னிரை யீற்ற வாசிரிய வுரிச்சீர்
நீடு கொடியே நாணுத் தளையே
உரறு புலியே விரவு கொடியென

1. 'அலகுபெறுத லின்மையின்' என்றிருத்தல் வேண்டும்.

ஈருக ரத்தான் ஈரிரண் டாகிப்
பாதிரி கணவிரி போலத் தட்கும்"

என உரிச்சீர்கள் இருநிலைமை எய்தின.

"வண்டு மின்னும் வரகு மரவுமெனக்
கண்டவீ ருகர வசைச்சீர் நான்குந்
தேமா புளிமா வாகித் தட்கும்"

என அசைச்சீரும் இருநிலைமை எய்தின. வெண்சீர் நான்கும் ஒருநிலைமையவேயாம்.

"வெண்சீர் நான்குந் தம்முற் றாம்வந்து
தட்ட வெண்டளை கட்டளைக் காகா
சீர்வகை யான்வருங் கலிக்கும் வெள்ளைக்கும்
ஆகு மென்ப வறிந்திசி னோரே"

"வெண்சீர் தம்முண் மாறாங் கலித்தளை
கட்டளைக் கலிக்கென் றொட்டிய தாகும்
அதனோ டியற்சீர் ஒன்றி வரினது
கட்டளை வெள்ளைக் காகு மென்ப"

"இயற்சீ ரசைச்சீ ருரிச்சீர்வெண் சீரென
மயக்கற வகுத்த சீர்க ளெல்லாம்
ஒன்றுதலை யிட்ட வொருமுப் பஃதே"

-ஆக நால்வகைச்சீரும் முப்பத்தொன்று. இனி வஞ்சியுரிச்சீர் பலநிலைமைப்படுமாறு - 'குறளடி முதலா' (ருஎ) என்னுஞ் சூத்திரத்துட் காட்டுதும்.

**ஆய்வுரை :**

இது, சீர்களுக்குரியதோர் பொதுவிலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்) மேல் நாலெழுத்துமுதல் இருபதெழுத்தளவும் வகுத்துரைக்கப்பட்ட பதினேழ்நிலத்தனவாகிய ஐவகையடிகளும் ஓரடிக்கோரடி எழுத்தளவு குறைந்தும் மிகுந்தும் வருவனவாயினும் அவ்வடிகளில் அமைந்த சீரது நிலை ஓசைவகையாற் குறைதலும் மிகுதலும் இல்லை என்பர் ஆசிரியர் எ-று.

எஞ்சுதல்-குறைதல்; மிகுதல்-ஓசை நீளுதல்.

சஉ உயிரில் லெழுத்தும் எண்ணப் படாஅ
உயிர்த்திறம் இயக்கம் இன்மை யான.

**இளம்பூரணம் :**

என்—எனின். மேற் செல்லப்பட்ட அடிக்குரிய எழுத்து வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உயிரில்லாத எழுத்தும் எண்ணப்படா, உயிர் போல இயக்கமின்மையான் என்றவாறு.[1]

உம்மை எச்சவும்மை யாதலாற் குறுகிய வுயிர்த்தாகிய குற்றியலிகரமும் குற்றியலுகரமும் எண்ணப்படா என்று கொள்க. எனவே, எண்ணப்படுவன உயிரும் உயிர்மெய்யுமாகி ஒரு மாத்திரையிற் குறையாதன என்று கொள்ளப்படும்.[2] (சஉ)

**பேராசிரியம் :**

இது, மேல் எழுத்தெண்ணிச் சீர்வகுத்த முறையானே ஒற்றும் ஆய்தமுங் குற்றுகரமும் ஒருங்கெண்ணப்படுதலெய்தின-வற்றை விலக்கினவாறு.

(இ-ள்.) உயிர்இல் எழுத்தும்[3] எண்ணப்படாஅ-தத்தம் ஓசை இனிது விளங்கத் தத்தந் தன்மையான் ஒலித்தற்றொழி-லில்லாத எழுத்துக்கள் ஈண்டெண்ணப்படா; உயிர்த்திறம் இயக்கம் இன்மையான - அங்ஙனம் எண்ணப்படாதவும் எழுத்தெனப்படுதலிற் சிறிது நாப் புடைபெயருந் துணையான் ஒலித்தலும் மொழிசார்ந்து ஒலித்தலும் உடையவன்றே? அங்ஙனம்

---

1 'உயிர்த்திறம் இயக்கம் இன்மையான், உயிரிஇல் எழுத்தும் எண்ணப். படாஅ' என இயையும். உயிர்த்திறம் இயக்கம் ஆவன, நா சிறிது புடைபெயரும் அளவில் தனிநின்று ஒலித்தலும் மொழிசார்ந்து ஒலித்தலும் ஆகும். இங்ஙனம் செய்யுட்களில் தனி நின்றும் புடைபெயர்ந்தும் ஒலிக்குந் திறம் உயிர்க்கும் உயிர் மெய்க்குமன்றித் தனி மெய்கட்கின்மையின் அவை உயிரில்லெழுத்தெனப்பட்டன.

2. 'உயிரில்லெழுத்தும்' என்புழி உம்மை யெச்சவும்மையாதலால், ஒற்றுப்-போன்று குறுகியவுயிராகிய குற்றியலிகரமும் குற்றியலுகரமும் (ஆய்தமும்) எண்ணப்படா என்றார். எனவே கட்டளையடிக்கண் எழுத்தென எண்ணப்படுவன ஒரு மாத்திரையிற் குறையாதனவாய் உயிர்த்திறமியக்கமுடையவாகிய உயிரும் உயிர்மெய்யுமே என்பது புலனாம்.

3. உயிர் இல் எழுத்து-உயிர்த்தல் தொழில் இல்லாத ஒற்றும் குற்றுகரமும். 'உயிர்' என்றது இங்கு முதனிலைத் தொழிற்பெயராய் நின்றது. உயிர்-உயிர்த்தல்; ஒலித்தல்.

ஒருவாற்றான் உயிர்க்குந்திற முடையவாயினும் அவ்வுயிர்க்குந் திறம் ஈண்டுச் செய்யுட்பாற் படுங்கால் உபகாரப்பட இயங்கு மாறிலவாகலின் எண்ணப்படா (எ - று.)[1]

மேற் சீர்களை இருநிலைமைப்படுத்த அதிகாரத்தான் ஒற்றொடு குற்றுகரமுமே ஈண்டு விலக்கினானென்பது இச் சூத்திரம் வலித்ததாயிற்று;

'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' (தொல்-செய்-8)

என மேற்கூறினானாதலினென்பது.

'பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து'

என ஒற்றுங் குற்றுகரமும் ஒழித்து எண்ணப்பட்டமையினால் எழுத்தடியாயிற்று.[2] பிறவும் அன்ன. (ச௪)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தியது விலக்கிற்று.

இ-ள். உயிரில் .....படாஅ எ-து ஒற்றும் ஆய்தமுங் குற்றுகரமும் எழுத்தெனப் பெயர் கூறினாரேனும் எழுத்தாக எண்ணப்படா; என்னை? உயிர் ......யான எ-து அவை தத்தம் ஓசை இனிது விளங்க ஒலித்தற்குக் கூறிய எண்வகை நிலத்திலும் விளங்க இயங்காமையின். எ-று.

என்றது, எழுத்தெண்ணுமிடத்து அவை ஒழித்தெண்ணுக என்றவாறு. இது கட்டளையடிக்கு. 'பேர்ந்து சென்று' என்பதனுள் அவையொழித்து[3] எண்ணப்பட்டது. **பின்னுள்ளோர் கொண்ட கட்டளைக் கலித்துறை சந்தத் தாண்டகங்கட்கும்** இவ்வாறு எழுத்தெண்ணுதல் வேண்டுமென்றுணர்க.

**ஆய்வுரை :**

இது மேற்குறித்த கட்டளையடிகளில் எழுத்தென எண்ணப்படாதன இவை யென்கின்றது.

---

1. இவை ஒருவாற்றான் நாப் புடைபெயரும்அளவு மொழிசார்ந்து உயிர்க்குந்திற முடையவாயினும் இங்குச் செய்யுளிற்படுத்து இசைக்குங்கால் அவ்வொலியின் விரிந்த இயக்கம் இன்மையான் எழுத்தெனத் தனித்து எண்ணப் படாவாயின என்பதாம்.

2. 'எழுத்தடி' என்றது, எழுத்தே சீராம் நிலையில் இயன்ற அடி.

3. ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் ஆகியவற்றை நீக்கி.

(இ-ள்) தத்தம் ஓசை இனிது விளங்க ஒலித்தற்றொழில் இல்லாதனவாகிய எழுத்துக்கள் சொற்கு உறுப்பாவன எனினும் அவை மேல் ஐவகையாகப் பகுத்துரைக்கப்பட்ட கட்டளையடிக்கண் எழுத்தெனக் கொண்டு எண்ணப்பெறமாட்டா; அவை உயிருமெய்யுமாகிய எழுத்துக்களைப்போன்று விரிந்திசைத்தலும் தனித்தியங்குந் தன்மையும் இன்மையால் எ-று.

'உயிர் இல் எழுத்து' என்பன, ஒலித்தற்றொழில் இல்லாத ஒற்றும் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமுமாகிய அரைமாத்திரையளவுடைய எழுத்துக்கள். கட்டளையடிக்கண் இவை யெண்ணப்பெறுதல் இல்லை யென்பது,

"குற்றிகரம் குற்றுகரம் என்றிரண்டும் ஆய்தமும்
ஒற்றும் எனவொரு நான்கொழித்துக்-கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினார் எண்ணச்
செயிரகன்ற செய்யு ளடிக்கு" (யா-வி. அடியோத்து- )

எனவரும் யாப்பருங்கலவிருத்தி மேற்கோட்செய்யுளால் விரித்துரைக்கப் பெற்றமை காண்க.

௯௩ வஞ்சி அடியே இருசீர்த் தாகும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். வெண்பா ஆசிரியங் கலிக்குரித்தாகிய அடியிலக்கணங் கூறினார். இனி வஞ்சிப்பாவிற்குரிய அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வஞ்சிப்பாவிற்குரிய அடி இரண்டு சீரையுடைத்து[1] என்றவாறு. (௯௩)

**பேராசிரியம் :**

இது,

'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (தொல்-செய்-42)

எனவும்,

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல்-செய்-46)

எனவும்,

எழுத்தெண்ணி வரையறுக்கப்பட்ட சீரிரண்டு கொண்டது வஞ்சியடி யென்பதுணர்த்துதல் நுதலிற்று :

1. இரு சீர்த்து - இரண்டு சீரையுடைத்து.

(இ-ள்) குறளடியே வரையறையுடைய வஞ்சியடி யெனப் படுவது (எ-று.)

ஏகாரம் பிரிநிலை; என்னை? சிறப்புடை வஞ்சியடியைப் பிரித்து வாங்கிக் கொண்டமையின்.[1] எனவே, மூச்சீரான் வரும் வஞ்சியடியும் உள; அவை கட்டளையடியல்லவென்றா னாயிற்று.[2] இங்ஙனம் கூறவே, வஞ்சியடியும் ஒருவாற்றான் உறழ்ந்து கொள்ள வழிகாட்டியவாறு.[3] இவ்வாறு கூறாக்கால் மூன்று பாவிற்குங்கூறினான் இதற்குக் கூறியதிலனெனக் குன்றக் கூற (663) லென்னுங் குற்றமாமென்பது; இதனை மேல்,

"குறளடி முதலா வளவடி காறும்
உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப" (தொல்-செய்-57)

என உறழ்நிலை ஒருவாற்றானே கூறுமென்பது.[4] அச்சூத்திரத் தான் முச்சீரும் உறழ்பவென்று கொள்பவெனின், அஃதே கருத்தாயின் இருசீரும் முச்சீரும் வஞ்சிக்கென்பவென்று உடனோதுவான்மன் ஆசிரியனென மறுக்க.[5] (சரு)

---

1. இருசீரடிவஞ்சி, முச்சீரடிவஞ்சி என்னும் இருவகை வஞ்சியடிகளுள் இரு சீரடி வஞ்சியினையே பிரித்துவாங்கிக் கூறுதலால் 'வஞ்சியடியே' என்புழி ஏகாரம் பிரிநிலை யேகாரமாகும்.

2. ஆகவே முச்சீரால் வரும் வஞ்சியடி கட்டளையடியல்ல என்பது ஆசிரியர் கருத்தென்பது புலனாம்.

3. இவ்வாறு கூறவே நாற்சீரடிகளை எழுத்தெண்ணியுறழுமாறுபோலவே இருசீரடி வஞ்சிப்பாவின் அடிகளையும் ஒருவாற்றான் எழுத்தெண்ணி அடியுறழ்ந்து கொள்ள வழிகாட்டினாராயிற்று.

4. இங்ஙனம் கூறாக்கால் ஆசிரியம் வெண்பா கலி என்னும் மூன்றுபாவிற்கும் கட்டளையடி வகுத்த தொல்காப்பியனார் வஞ்சிப்பாவிற்குக் கட்டளையடி வகுத்துக்கூறாது விட்டார் என்ற குற்றந் தங்கும். ஆகவே 'குறளடி முதலா அளவடி காறும், உறழ்நிலை யிலவே வஞ்சிக்கென்ப' (செய். 57) எனவரும் சூத்திரத்தால் வஞ்சிப்பாவிற்குக் கட்டளையடி யுறழும் முறையினைப் பின்னர் ஒருவாற்றால் கூறுவர் ஆசிரியர்.

5. வஞ்சிப்பாவின் முச்சீரடிகளையும் கட்டளையடிகளாக வைத்து உறழ்தல் தொல்காப்பியனார் கருத்தாயிருக்குமானால் இச்சூத்திரத்தில் இருசீரும் முச்சீரும் உடனோதாது இருசீரடியினைமட்டும் பிரித்துக்கூறமாட்டாராதலின் வஞ்சிப்பா வின் முச்சீரடிகளைக் கட்டளையடிகளாகக் கொண்டு உறழ்ந்துகாட்டுதல் தொல் காப்பியனார் கருத்தன்றென்பது புலனாம்.

**நச்சினார்க்கினியம் :**

(இஃது) அதிகாரத்தானின்ற வஞ்சியடியாமாறு கூறுகின்றது.

(இ-ள்.) முற்கூறிய சமநிலைவஞ்சியினடி[1] இருசீரையுடைத்தாகிவரும். எ-று

ஏகாரம்[2] பிரிநிலை; சிறப்பில்லா வியநிலைவஞ்சியினின்றும்[3] பிரித்தலின். வியநிலை வஞ்சிக்குக் கட்டளை யின்று. இங்ஙனம் கூறவே, வஞ்சியடியும் ஒருவாற்றான் உறழப்படுமாயிற்று. அது 'குறளடி முதலா' (௬௭) என்பதனுட் காட்டுதும். இங்ஙனம் வஞ்சியுறழாவிடிற் குன்றக் கூறலென்னுங் குற்றந்தங்கும்.

**ஆய்வுரை :**

வெண்பா, ஆசிரியம், கலி என்னும் மூவகைப்பாக்களுக்கும் உரிய நாற்சீரடியாகிய அளவடியினையே குறளடி முதலாக ஐவகைப்படுத்து உணர்த்திய ஆசிரியர், இச்சூத்திரத்தால் வஞ்சிப்பாவுக்குரிய அடியின் இலக்கணம் உணர்த்துகின்றார்.

(இ-ள்) வஞ்சிப்பாவுக்குரிய அடி இரண்டு சீர்களையுடையதாகும் எ-று.

உ-ம்: ''வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி'' (பட்டினப்பாலை)

என வஞ்சியடி இருசீரால் இயன்றமை காண்க. இருசீரடிகளால் இயன்ற குறளடிவஞ்சிப்பா சமனிலை வஞ்சிப்பா எனவும் வழங்கப் பெறும்.

௪௪. தன்சீர் எழுத்தின் சிறுமை[4] மூன்றே.

**இளம்பூரணம் :**

என்—எனின். வஞ்சியுரிச்சீர் குறைந்தநிலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வஞ்சியுரிச்சீரின்[5] சிறுமை மூன்றெழுத்தென்று கொள்ளப்படும்.

1. சமநிலைவஞ்சி - இருசீரடிவஞ்சி.
2. 'வஞ்சியடியே' என்புழி ஏகாரம்.,
3. வியநிலைவஞ்சி - முச்சீரடிவஞ்சி,
4. 'சின்மை' என்பது பேராசிரியர் உரையிற் கண்ட பாடம்
5. மேலைச் சூத்திரத்து 'வஞ்சியடி' என அதிகாரப்பட்டமையின் ஈண்டுத் 'தன்சீர்' என்றது அவ்வடிக்குரிய வஞ்சியுரிச்சீரை யெனக்கொண்டார் இளம்பூரணர்.

எனவே, மூன்றெழுத்தும் நான்கெழுத்தும் ஐந்தெழுத்தும் ஆறெழுத்தும் வஞ்சியுரிச்சீ ரெழுத்தென்றவாறாம். (சூசூ)

**பேராசிரியம் :**

இது, மேற்கூறிய வஞ்சியடிக்கண்வரும் இருசீர்க்கும், பெருமைக் கெல்லை,

'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (தொல். செய். 42)

என்று கூறினான்; ஈண்டு அவை மூன்றெழுத்திற் சுருங்கா வெனச் சுருக்கத்திற் கெல்லையுணர்த்துதல் நுதலிற்று.[1]

(இ - ள்.) வஞ்சியடிச்சீர் மூன்றெழுத்துச் சிறுமை பெறும் (எ - று.)

சிறுமைக்கெல்லை வஞ்சிச்சீர்க்கல்லது இன்மையின் இதனை,

'வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்' (தொல்-செய்-45)

என்றதன்பின் வைத்தானென்பது[2] இது முச்சீர்க்குரித் தன்மையானும் மூன்றெழுத்தி னிழிந்துவரும் வஞ்சியுரிச்சீர் பெரும்பான்மையும் முச்சீரடிக்கு உரிமையானும் இதன்பின்,

'முச்சீ ரானும் வருமிட னுடைத்து' (தொல். செய். 47)

என்றானென்பது.

"கொன்றுகோடுநீடு கொலைக்களிறுகடாம்"

என்புழி, இருசீரடிமுதற்கண் மூவெழுத்தான் வஞ்சியுரிச்சீர் வந்தது. பிறவும் அன்ன. 'நுந்தைகாடு' என ஈரெழுத்தானும் வஞ்சியுரிச்சீர் வந்தவாறு.[3] (சூசா)

**நச்சினார்க்கினியம் :**

இது முன்னர்ச் சமநிலைவஞ்சிக்குப் பெருமைக் கெல்லை கூறினமையின் ஈண்டுச் சிறுமைக்கெல்லை கூறுகின்றது.

(இ-ள்.) அவ்வஞ்சிச் சீருக்கு எழுத்தின் சிறுமை மூன்றே, எ-று.

---

1. சின்மை - சிற்றெல்லை; ஈண்டு எழுத்துக்களது எண்ணின் சுருக்கத்தை யுணர்த்தியது.

2. மூன்றெழுத்துச் சிற்றெல்லையென்பது இருசீரடி வஞ்சிச்சீர்க்கல்லது முச்சீரடி வஞ்சிச்சீர்க்கு இன்மையின் இதனை 'வஞ்சியடியே யிருசீர்த்தாகும்' என்ற சூத்திரத்தின் பின் வைத்தார்.

3. இத்தொடர் உரைப்பகுதியொடு தொடர்பின்றியுளது. ஏடு பெயர்த்தெழுதுவோராற் பின்னர்ச் சேர்க்கப்பெற்றிருத்தலும் கூடும்.

'தன்' என்றது முற்கூறிய வஞ்சியை.[1] உ ம்: கொண்டுகோடு நீடு கொலைக்களிறுகடாஅய்.[2] எனவரும். ஏகாரத்தானே மேல் வருகின்ற வியநிலைவஞ்சிக்காயின் மூவெழுத்தி னிழிந்து ஈரெழுத்-தானும் வருமென்று கொள்க; நுந்தைகாடு என வரும்.

**ஆய்வுரை :**

இது மேற்குறித்த வஞ்சியடிக்கண்வரும் சீர்களின் எழுத்துச் சுருக்கத்தின் எல்லை கூறுகின்றது.

(இ-ள்) வஞ்சியடிக்கண் வரும் வஞ்சிச்சீரின் வரும் எழுத்தின் சிற்றெல்லை மூன்றெழுத்தாகும் எ-று.

வஞ்சிச்சீரின் எழுத்துப் பெருக்கமாகிய பேரெல்லை 'வஞ்சிக்கு ஆறுமாகும்' (செய்-40) என முன்னர்க் கூறப்பட்டது.

**சுரு. முச்சீ ரானும் வரும்இடன் உடைத்தே.**

**இளம்பூரணம் :**

என்-எனின். இதுவும் வஞ்சியடி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வஞ்சியடி மூன்று சீரானும் வரும் இடனுடைத்து என்றவாறு.

எனவே, வஞ்சியடி இருசீரடியானு முச்சீரடியானும் வரும் என்றவாறாம்.[3]

உதாரணம்

'தூங்குகையான் ஓங்குநடைய
உறழ்மணியான் உயர்மருப்பின'. (புறம்.உஉ)

இதனுள் மூன்றெழுத்து முதலாக ஆறெழுத்துக் காறுஞ் சீர் வந்தவாறும் இருசீரடி யாயினவாறுங் காண்க.

---

1. என்றது, சமநிலைவஞ்சியை.

2. 'கொன்றுகொடுநீடு கொலைக்களிறுகடாஅம்' என்பது யாப்பருங் கலவிருத்தியிலும் பேராசிரியருரையிலும் உள்ள பாடமாகும்.

3. 'முச்சீரானும்' என்புழி உம்மை 'இருசீரான் வருதலேயன்றி, மூன்று சீரானும் வரும் என இறந்தது தழீஇ நிற்றலின் இறந்தது தழீஇய எச்சவும்மை-யாகும்.

'தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோள்மேல்'.
(யாப். வி. பக். கO௮)
எனவும் வரும் (சரு)

**பேராசிரியம் :**

இஃது ஒழிந்த வியநிலைவஞ்சி[1] கூறுகின்றது.

(இ-ள்) வஞ்சியடி முச்சீரானும் வரப்பெறும் (எ-று)

'இடனுடைத்து' என்றதனான் இஃது உறழும் அடிக்கண்ண தன்று என்றவாறு.[2] மற்று இருசீரடி வஞ்சிக்கும் இத்துணை யென அடிவிரியுமாறு கூறியதிலனாகலின் இதற்கே வரையறை யின்றென்றது என்னையெனின், இருசீரடிக்காயின் ஒருவாற்றான் உறழ்ச்சிகூறி வரையறுப்பதோராறு கூறினான்; இதற்கு அன்னதூஉம் இன்றென்பது. மற்று உறழுமடி இல்வழி வஞ்சி யடி இருசீர்த்தாகப்பெறாதோவெனின், அதற்கன்றே முச் சீரானும் வருமென்று உம்மைகூறி இருசீரடியுந் தழீஇக் கொண்டு 'இடனுடைத்து' என வேறுபடுப்பானாயிற்றென்பது.[3] இவ்விரண்டனையும் வஞ்சியடியென வரையாது கூறவே, அவற் றான் வேறுவேறு வருதலும் அவை மயங்கிவருதலுமுடைத்து வஞ்சிப்பாட்டென்பதும் பெறுதும். இக்கருத்தானே அவற்றைக் **குறளடிவஞ்சியெனவுஞ் சிந்தடிவஞ்சியெனவும் மயக்கடிவஞ்சி** யெனவுஞ் சொல்லுப. சிந்தடியான் வருதல் சிறுபான்மையெனக் கொள்க.[4] (எச)

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஒழிந்த வியநிலைவஞ்சி கூறுகின்றது.

(இ-ள்) வஞ்சியடி இருசீரானன்றிச் சிறுபான்மை முச்சீரானும் வரப்பெறும். எ-று.

---

1. வியநிலைவஞ்சி-சிந்தடி வஞ்சிப்பா.

2. சிந்தடிவஞ்சிப்பாவாகிய இதன்கண் எழுத்தெண்ணிக் கட்டளையடி கொள்ளும் வழக்கம் இல்லையென்றவாறு.

3. வேறுபடுத்தலாவது இருசீரடி கட்டளையடியாக வைத்து உறழப்பெறுதலும், முச்சீரடி அங்ஙனம் உறழப்பெறாமையும் ஆகும்.

4. இருசீரடிகளால் இயன்றது குறளடி வஞ்சிப்பா. முச்சீரடிகளால் இயன்றது சிந்தடி வஞ்சிப்பா. இருசீரடிகளும் முச்சீரடிகளும் கலந்து வருவது மயக்கடி வஞ்சிப்பா.

'உடைத்து' என்றதனான் இது கட்டளையன்மையும் சான்றோர் செய்யுளுட் பயிலாமையும் பெறுதும். இரண்டனையும் வஞ்சியடி என வரையாது கூறவே இரண்டடியும் மயங்கிவந்த பாட்டை மயக்கடிவஞ்சியெனவும் வேறுவேறு வந்தனவற்றைக் குறளடிவஞ்சி, சிந்தடிவஞ்சியெனவுங் கூறிக்கொள்க.

உ-ம். "தோல்,
துவைத்தம்பிற் றுளைதோன்றுவ"
(புறம்-சு)

எனவும்

"நிலைக்கொராஅ விலக்கம் போன்றன"
(புறம்-சு)

எனவும் குறளடியும் சிந்தடியும் வந்தமையான் இப்பாட்டு மயக்கடிவஞ்சியாம்.[1]

## ஆய்வுரை :

இதுவும் வஞ்சிப்பாவுக்குரிய அடியுணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்குறித்த வஞ்சிப்பாவுக்குரிய அடி மூன்று சீராலும் வரும் இடம் உடையது எ-று.

**சுசு. அசைகூன் ஆகும் அவ்வயின் ஆன.**

## இளம்பூரணம் :

என்—எனின். மேற்சொல்லப்பட்ட வஞ்சியடிக்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்சொல்லப்பட்ட இருவகையடியினும் அசை கூனாகி வரும் என்றவாறு.[2] (சுசு)

---

1. 'தோல்', 'துவைத்தம்பில் துளைதோன்றுவ' இது குறளடி. நிலைக் கொராஅ இலக்கம் போன்றன' இது சிந்தடி. இவ்விருவகையடிகளும் கலந்து வந்த வஞ்சிப்பா வாதலின் 4-ஆம் புறப் பாடல் மயக்கடி வஞ்சியாயிற்று.

2. 'அவ்வயினான அசைகூனாகும்' என இயையும். அவ்வயின் ஆன- வஞ்சிப்பாவுக்குரிய இருசீரடியும் முச்சீரடியும் ஆகிய அவ்விடத்து. கூன் என்பது, பின்வரும் பொருளைச் சுட்டி அடியின்முதற்கண் நிற்கும் சொல்லாகும். மேற் சொல்லப்பட்ட குறள், சிந்து என்னும் இருவகையடியினும் அசைகூனாகி வரும் என்பதாம்.

**பேராசிரியம் :**

இதுவும், அதற்கெய்தியதோர் விதி.

(இ - ள்.) மேற்கூறிய வஞ்சியடி இரண்டன்கண்ணும் நான்கசையுங் கூனாகி வரப்பெறும் (எ - று.)

எனவே, அடியெனப்பட்ட இருசீர்க்கும் முச்சீர்க்கும் அசை கூட்டிக்கொண்டு சொல்லப்படாவென்றவாறு.[1] அவை,

"வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப்போன்றன" (புறம் 4)

எனவும்,

"அடி, அதர்சேறலின் அகஞ்சிவந்தன"

எனவும்,

"வண்டு, மலர்சேர்ந்து வரிபாடின"

எனவும்,

"களிறு, கதவெறியாச் சிவந்துராய்
நுதிமழுங்கிய வெண்கோட்டா
னுயிருண்ணுங் கூற்றுப்போன்றன"

எனவும் முறையே நான்கசையுங் கூனாயின.

இனி, இடையும் இறுதியுங் கூனா மென்பாருமுளர்.[2] அது வஞ்சித்தூக்கு இரண்டுகொள்ளவருமாயின் அமையுமென்பது.[3] என்றார்க்கு,

'வாள் வலந்தர'

என்பதனை ஒரு சீராகக் கோடுமெனின்

"யாத்தசீர்"

என்றதனான் வலந்தருதல் வாண்மேற்சென்று, வருகின்ற பயனிலை நின்று வற்றுமென்பது.[4] (சு அ)

---

1. வஞ்சிப்பாவில் அசை கூனாகி வருமிடத்து அதனை இருசீரடியோடும் முச்சீரடியோடும் கூட்டி முறையே சிந்தடியாகவும் நேரடியாகவும் சொல்லக்-கூடாது என்பதாம்.

2. இக்கருத்து நச்சினார்க்கினியருரையிலும் யாப்பருங்கலவிருத்தியிலும் இடம் பெற்றுளது.

3. அங்ஙனம் வஞ்சியடியின் இடையிலும் கூன்வருதல் வஞ்சித்தூக்கு இரு சீரடியாய் நின்று இரண்டுகொள்ளவருமாயின் பொருந்தும் என்பதாம்.

4. இங்கெடுத்துக்காட்டிய புறப்பாடலில் அடிமுதல் வந்த கூனாகிய 'வாள்' என்பதனைப் பின்வந்த 'வலந்தர' என்பதனோடு இயைத்து 'வாள்வலந்தர' என ஒருசீராகக் கொண்டால் 'யாத்தசீர்' என்றதற்கேற்ப 'வலந்தருதல்' வினைமுதல்

**நச்சினார்க்கினியம் :**

இதுவும் அதற்கெய்தியதோர் விதி.

இ-ள். அவ்விரண்டடியின்கண்ணும் நான்கசையும் கூனாய்வரப்பெறும். எ-று

உ-ம்: "வாள் வலந்தர மறுப்பட்டன" (புறம் ௪)

இதனை வாள்வலந்தர என ஒருசீர்[1] 'யாத்தசீர்' (செய்-க) என்றதனான் வலந்தருதல் வாள்மேற் சென்று மறுப்பட்டன என்னும் பயனிலை நின்றுவற்றுதலின் வாள் என நேரசை கூனாயிற்று.

"அடி, யதர்சேறலி னகஞ்சிவந்தன"

"வண்டு, மலர்தேர்ந்து வரிபாடின"

"களிறே[2] கதவெறியாச் சிவந்துராஅய்" (புறம்-௪)

என நான்கசை கூனாயிற்று : களிறே என்ற ஏகாரம் அசையாதலிற் பொருளின்றி நின்றது [3]

இனி இச்சூத்திரம் பொதுவாய் நிற்றலிற் றூக்கிரண்டுபட இடையினுங் கடையினுங் கூனாய்நிற்பனவுங் கொள்க. உ-ம். 'கலங்கழாஅலிற், றுறை, கலக்கானாதே' எனத் துறையென இடைக்கண் நிரையசை கூனாயிற்று. 'மாவழங்கலின் மயக்குற்றன, வழி' இதனுள் வழியென இறுதிக்கண் நிரையசை கூனாயிற்று. 'தேரோடத் துகள்கெழுமின, தெருவு' என இறுதிக்கண் நிரைபசை கூனாயிற்று. ஒழிந்தன வந்துழிக் காண்க.

**ஆய்வுரை :**

இது, வஞ்சியடிக்குரியதோர் மரபு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட இருசீரடியும் முச்சீரடியுமாகிய இருவகையிடத்தும் அசை கூனாகிவரும் எ-று.

---

முன்பக்கத் தொடர்ச்சி

மேற் செல்லாது கருவியாகிய வாண்மேற்சென்று, 'செவ்வானத்து வனப்புப் போன்றன' என அதன் பயனிலைக்குரிய எழுவாய் புலப்படுதலின்றி வறிதே நிற்கும் என்பதாம்.

1. "இதனை 'வாள்வலந்தர' என ஒரு சீராகக் கொள்ளின் ,யாத்தசீர்' (செய்-க) என்றதனான் வலந்தருதல் வாள்மேற் சென்று மறுப்பட்டன என்னும் பயனிலை நின்று எழுவாயின்றி வற்றுதலின் 'வாள்' என நேரசை கூனாயிற்று" எனப் பேராசிரியர் உரை நோக்கி இவ்வுரைத் தொடரில் விடுபட்ட சொற்களை நிரப்பிக் கொள்ளுதல் வேண்டும்.

2. 'களிறு' என்றிருத்தல் வேண்டும்.

3. இத்தொடர் பின்வந்தோராற் சேர்க்கப் பெற்றிருத்தல் வேண்டும்.

அசை கூனாகும் என்றது நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நால்வகை அசைகளுள் ஒன்று கூனாகி வரும் என்பதாம். அடிமுதற்கண் பாவினது பொருளைத் தழுவித் தனியே நிற்கும் சொல் கூன் என்று வழங்கப்படும்.

**சஎ. சீர்கூன் ஆதல் நேரடிக் குரித்தே.**

**இளம்பூரணம் :**

என் — எனின். இதுவுங் கூனாகுமிடன் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சீர்முழுதுங் கூனாகி வருதல் அளவடிக் குரித்து என்றவாறு.

நேரடி என்றதனான் வெண்பாவினும் ஆசிரியத்தினுங் கலியினுங் கொள்ளப்படும்.[1]

அவரே, 'கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே.' (குறுந் உகக)

இது ஆசிரியத்திற் கூன்,

"உதுக்காண்'' சுரந்தானா வண்மைச் சுவர்னமாப் பூதன்
பரந்தானாப் பல்புகழ் பாடி—இரந்தான்மாட்
டின்மை அகல்வது போல இருள்நீங்க
மன்னும் அளிதேர் மழை.'' (யாப். வி. பக் ௩௫௩)

இது வெண்பாவிற் கூன்.

"நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் வரீஇய அம்பு தெரிதியே.'' (கலித்-எ)

இது கலிப்பாவிற் கூன் (சஎ)

**பேராசிரியம் :**

இஃது, எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) தளைவகையானுஞ் சீர்வகையானும் நின்ற நேரடிக்காயின் அசை கூனாகாது சீர்கூனாகும் (எ - று.)

"அவரே, கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே" (குறுந். 216)

எனவும்,

---

1. நேரடி-அளவடி; நாற்சீரடி. 'சீர் கூனாதல் நேரடிக்கு உரித்து' என்றதனால் நாற்சீரடிப் பாக்களாகிய வெண்பா, ஆசிரியம், கலி என்னும் மூன்று பாவினும் சீர் கூனாகி வரும் என்பதாம்.

"உதுக்காண், சுரந்தானா வண்கைச் சுவரன்மாப் பூதன்"
எனவும்,

'அவனுந்தா, னேன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்' (கலி-39)
எனவும் இவை மூன்றுபாவினும் அளவடிக்கட் சீர் கூனாயின வாறு. என்றார்க்கு, நேர்பசை நிரைபசைகளையுஞ் சீர்நிலை பெறு மென்றானாகலின் அவற்றையுஞ்,

'சீர் கூனாத னேரடிக் குரித்தே'

என்றதனானே கொள்வலெனின், அசைச்சீரினை வாளாது சீரென்னானென்பது,

'சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது' (தொல்.செய்.41)

என்றவழிக் கூறியவதனான் அறிக. அசைச்சீரினை வாளாது சீரென்னாமைக்கு மேலைச்சூத்திரமும் இச்சூத்திரமுந் தாமே கரியாயின வென்பது.[1] என்றார்க்கு, இவற்றையும் முதற்கண்ணே காட்டியதென்னை? சூத்திரத்துள் அவ்வாறு வைத்துரைத்த-தில்லையாலெனின், ஏற்புழிக் கோடலென்பதனான் 'முதற் கணின்று' என்பது கொள்ளப்படும். இக்கருத்தானே வஞ்சிப் பாவிற்கும் அவ்வாறே கொள்க.[2] (௪௬)

**நச்சினார்க்கினியம் :**

இது, மூன்று பாவிற்கும் உரிய அளவடிக்கு எய்தாத தெய்துவிக்கின்றது

இ-ள். அளவடிக்குச் சீர் கூனாதல் உரித்து. எ-று.

இஃது. இருவகையடிக்கும் உரித்து.[3]

உ-ம்: "அவரே,
கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே"

(குறுந்தொகை-உ௧௬)

---

1. 'அசையினை அடைமொழியின்றிச் சீர்' என வழங்குதல் இல்லையென்பதற்கு, 'அசைகூனாகும்' என மேலைச்சூத்திரத்தும் 'சீர்கூனாதல்' என இச் சூத்திரத்தும் ஆசிரியர் குறித்துள்ள பெயர்களே சான்றாயின என்பதாம்.

2. அசையும் சீரும் கூனாகும் என்றதன்றி அவை கூனாய்வரும் இடம் 'அடிமுதற்கண்' என்பது ஆசிரியரால் தெரித்துமொழியப்படாதுபோயினும் கூன் வரும் இடம் அடிமுதற்கண் என்பது உரையிற்கோடல் என்னும் உத்தியாற் கொள்ளப்படும்.

3. இருவகையடியென்றது, கட்டளையடி, சீர்வகையடி என்னும் இரு வகையடிகளையும்.

"உதுக்காண்
சுரந்தானா வண்கைச் சுவணமாப் பூதன்"

"உலகினுட்
பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவே பிறழினும்',

என்று மூன்று பாவினும் வந்தன. ஏற்புழிக்கோடல் என்பதனால் அடிமுதற்கட் கோடும்,[1] தன்னினமுடித்தல் என்பதனான் வஞ்சிக்குங்கொள்க;[2]

"உலகே
முற்கொடுத்தார் பிற்கொளவும்"

எனவரும்.

## ஆய்வுரை :

இதுவும் கூன் வரும் இடம் உணர்த்துகின்றது.

(இ-ள்) சீர் முழுவதும் கூனாகி வருதல் நேரடியாகிய நாற்சீரடிக்கு உரியதாகும் எ-று.

இவற்றுக்கு உதாரணம் முன்னுரைகளிற் காண்க.

௩௮ ஐவகை அடியும் விரிக்குங் காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்தும்[3]
எழுபது வகையின்[4] வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே.

## இளம்பூரணம் :

என்—எனின். மேற்சொல்லப்பட்ட அடிக்கெல்லாம் விரியுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) **ஐவகை அடியும் விரிக்குங்காலை** என்பது—நாற்சீரடியை எழுத்தளவுபற்றி வகுக்கப்பட்ட குறளடி முதலாகிய ஐந்தடியினையும் விரித்துணர்த்துங் காலத்து என்றவாறு.

---

1. நேரடிக்கண் சீர் கூனாய் வரும் என்று ஆசிரியர் பொதுவிதியாகக் கூறினாராயினும் ஏற்புழிக்கோடல் என்னும் உத்தியால் சீர்கூனாய் வருதல் அடியின் முதற்கண் என்று கொள்வோம்.

2. அளவடியால் இயலும் மூவகைப்பாவிற்கும் உரிய இவ்விதி குறளடி சிந்தடியால் இயன்ற வஞ்சிப்பாவுக்கும் தன்னினமுடித்தல் என்னும் உத்தியாற் கொள்ளப்படும் என்பதாம்.

3. நிலத்த,

4. வகைமையின், என்பன பேராசிரியர் உரையிற் கண்ட பாடங்கள்.

மெய் என்பது—உடம்பு- அஃதாவது அசையுஞ் சீரும் தோற்றுதற் கிடமாகிய எழுத்து[1]

**மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்தும்** என்பது—எழுத்து அமைந்த நாலெழுத்து முதலாக இருபதெழுத் தீறாகச் சொல்லப்பட்ட பதினேழு நிலத்தும் என்றவாறு.[2]

**எழுபது வகையின் வழுவில வாகி** என்பது—எழுபது வகைப் பட்ட உறழ்ச்சியின் வழுவுதலின்றி என்றவாறு.

**எழுபது வகையாவது**—இரண்டுசீர் தம்முட் புணரும் புணர்ச்சி எழுபது வகையாம் என்றவாறு.

மேற் சொல்லப்பட்ட எண்பத்துநான்கு சீரினும்,[3]
(தொல். பொருள். செய்யுளியல். ௫0 உரை)

இயற்சீரான் வருவதனை இயற்சீரடி எனவும், ஆசிரியவுரிச் சீரான் வருவதனை ஆசிரியவுரிச்சீரடி எனவும், இயற்சீர் விகற் பித்து வருவதனை இயற்சீர் வெள்ளடி எனவும், வெண்சீரான் வருவதனை வெண்சீரடி எனவும், நிரையீற்று வஞ்சிச்சீரான் வருவதனை நிரையீற்று வஞ்சியடி எனவும், உரியசையீற்றான் வருவதனை உரியசையீற்று வஞ்சியடி எனவும், ஓரசைச்சீரான் வருவதனை அசைச்சீரடி எனவும் வழங்கப்படும்.

அவற்றுள், இயற்சீரடி நேரீற் றியற்சீரடி எனவும் நிரையீற் றியற் சீரடி எனவும் இருவகைப்படும். நேரீற் றியற்சீரடியாவது நேரீறு நேர்முதலாகிய இயற்சீர் வருதலும் நேர்புமுதலாசிரிய வுரிச்சீர் வருதலும் நேர்முதல் வெண்பா வுரிச்சீர் வருதலும் நேர்முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும் நேர்முதல் ஓரசைச்சீர் வருதலும் என ஐந்து வகைப்படும். நிரையீற் றியற்சீரும் இவ்வாறே நிரைமுதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐந்து வகைப்படும்.

---

1. மெய்-உடம்பு; இச்சொல் அசையுஞ்சீருந்தோற்றுதற்கிடமாகிய 'எழுத்து' என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றது.

2. பதினேழ் நிலம் என்பன நாற்சீரடியில் ஒற்றுங் குற்றியலுகரமும் குற்றிய லிகரமும் ஆய்தமும் நீக்கி நாலெழுத்து முதல் இருபதெழுத்தீறாக எண்ணப்படும் எழுத்தளவினால் அமைந்த பதினேழு நிலங்கள்.

3. மேற்கூறப்பட்ட எண்பத்துநான்கு சீரினும் இயற்சீரால் வருவது இயற்சீரடி. (1) ஆசிரியவுரிச்சீரால் வருவது ஆசிரியவுரிச்சீரடி, (2) இயற்சீர் விகற்பித்து வருவது இயற்சீர்வெள்ளடி; (3) வெண்சீரால் வருவது வெண்சீரடி;

ஆசிரியவுரிச்சீரடியும் இருவகைப்படும் நேர்பு ஈறும் நிரைபு ஈறும் என அவற்றுள், நேர்பீற்றுச் சீரை நேர்பு நேரு முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐந்து வகைப்படும். நிரைபீற்றுச்சீரும் அவ்வாறே நிரைபு நிரையு முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐந்துவகைப்படும்.

இயற்சீர் வெள்ளடியும் நேரீறும் நிரையீறும் என இருவகைப் படும். அவற்றுள், நேரீறு நிரைபு நிரையு முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐவகையாம். நிரையீறும் அவ்வாறே நேர்பு நேரு முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐவகையாம்.

வெண்சீர் நேர்முதலோடு உறழ்தலும் நிரைமுதலோடு உறழ்தலுமென இருவகைப்படும். அவற்றுள், நேர்பு நேரு

(முன்பக்கத் தொடர்ச்சி)

(4) நிரையீற்று வஞ்சிச் சீரால் வருவது நிரையீற்று வஞ்சியடி; (6) ஓரசைச் சீரால் வருவது அசைச் சீரடி; (7) எனச் சீர்வகையால் அடிகள் எழுவகைப் படும்.

அவற்றுள் இயற்சீரடி நேரீற்றியற் சீரடி நிரையீற்றியற் சீரடி என இருவகைப்படும். நேரீற்றியற் சீரடி நேரீற்றியற்சீரின் முன் நேர்முதல் இயற்-சீர், நேர்புமுத லாசிரியவுரிச்சீர், நேர்முதல் வெண்பாவுரிச்சீர், நேர்முதல் வஞ்சியுரிச்சீர், நேர்முதல் ஓரசைச்சீர் என உறழ ஐவகையடிகளும், நிரையீற்றியற்சீரின் முன் நிரைமுதலியயற்சீர், நிரைபுமுத லாசிரியவுரிச்சீர், நிரைமுதல் வெண்சீர், நிரை முதல் வஞ்சியுரிச்சீர், நிரைமுதல் ஓரசைச்சீர் என உறழ ஐவகையடிகளும் என இயற்சீர் நின்று உறழும் அடிகள் பத்தாகும். இவ்வாறே ஆசிரியவுரிச்சீரும் நேர்பீறாகவும் நிரைபீறாகவும் நின்று மேற்குறித்த ஐவகைச் சீர்களோடும் உறழ ஆசிரியவுரிச்சீரடி பத்தும், இயற்சீர் நேரீறும் நிரையீறுமாய் நின்று மேற்குறித்த ஐவகைச் சீர்களோடும் முறையே நிரையும் நிரைபும் எனவும் நேரும் நேர்பும் எனவும் மாறியுறழ இயற்சீர் வெள்ளடிபத்தும், வெண்சீர் நின்று மேற்குறித்த ஐவகைச் சீர்களுடன் நேர் நேர்பாய் ஒன்றியும் நிரைநிரைபாய் மாறுபட்டும் உறழ வரும் அடிகள் பத்தும், நிரையீற்று வஞ்சிச்சீர் நின்று மேற்குறித்த ஐவகைச் சீர்களுடன் கூடுங்கால் நிரை நிரைபாய் ஒன்றியும் நேர் நேர்பாய் ஒன்றாமலும் வரும் அடிகள் பத்தும் உரியசையீற்றுவஞ்சியடி அடிகள் பத்தும், அசைச் சீரடியும் மேற்குறித்த ஐவகைச் சீர்களுடன் ஒன்றியும் ஒன்றாமலும் வரும் அடிகள் பத்தும் ஆக அடிகள் எழுபது வகைப்படும் எனவும், அசைச்சீர், இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்சீர், வஞ்சிச்சீர் என்னும் ஐந்தினை யும் முதற்சீர்களாக நிறுத்தி அவற்றுடன் இரண்டாஞ்சீராக ஐந்துசீர்களையும் வருவித்துப் பெருக்க இருபத்தைந்தும், மூன்றாஞ்சீர்களாக மேற்குறித்த ஐந்து சீர்களையும் வருவித்துப் பெருக்க நூற்றிருபத்தைந்தும், அவற்றுடன் நான்காஞ் சீர்களாக முற்குறித்த ஐந்து சீர்களையும் வருவித்துப் பெருக்க அறுநூற்றிருபத் தைந்தும் ஆகவிரிதலின் அடிகள் அறுநூற்றிருபத்தைந்தாம் என்பதும் இச் சூத்திரத்திற்கு இளம்பூரணர் தரும் விளக்கமாகும்.

முதலாகிய சீர்களொடு உறழ்தல் ஐந்துவகைப்படும். நிரைபு நிரையுமுதலாகிய சீர்களொடு உறழ்தலும் ஐந்து வகைப்படும்.

நிரையீற்று வஞ்சியுரிச்சீர் முதலசையோ டொன்றுவனவும் ஒன்றாதனவும் என இருவகைப்படும். அவற்றுள், ஒன்றிவருவது நிரைபு நிரையு முதலாகிய சீரொடு உறழ ஐந்து வகைப்படும். ஒன்றாதது நேர்பு நேரு முதலிய சீரோடு உறழ ஐவகைப்படும்.

உரியசையீற்று வஞ்சியடியும் அவ்வாறே உறழப் பத்து வகைப்படும். அசைச்சீரடியும் அவ்வாறே இருவகையாக்கி உறழப் பத்து வகைப்படும்.

இவ்வகையால் தளை ஏழு பாகுபட்டன; இவை நேரொன் றாசிரியத்தளை, நிரையொன் றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை என ஏழுவகையாம். அவ்வழி ஓரசைச்சீர் இயற்சீர்ப்பாற்படும். ஆசிரியவுரிச்சீரு மதுவேயாம் மூவசைச்சீருள் வெண்பாவுரிச்சீ ரொழிந்தன-வெல்லாம் வஞ்சியுரிச்சீராம். அவ்வழி இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையொடு நேராய் ஒன்றுவது நேரொன் றாசிரியத் தளையாம்; நிரையாய் ஒன்றுவது நிரையொன் றாசிரியத்தளையாம்; மாறுபட்டு வருவது இயற்சீர்வெண்டளையாம்; வெண்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது வெண்சீர் வெண்டளையாம்; நிரையா யொன்றிற்[1] கலித்தளையாம்; வஞ்சியுரிச்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது ஒன்றியவஞ்சித்தளையாம்; ஒன்றாதது ஒன்றாவஞ்சித்தளையாம். இவ்வகையால் தளை ஏழாயின. இவ்வாறாகி வருதல் வருகின்ற சூத்திரங்களா னுணர்க.

இனி அடி அறுநூற்றிருபத்தைந்தாமாறு: அசைச்சீர் இயற்சீர் ஆசிரியவுரிச்சீர் வெண்சீர் வஞ்சியுரிச்சீர் என்னும் ஐந்தினையும் நிறுத்தி, இவ்வைந்துசீரும் வருஞ்சீராக வுறழும்வழி இருபத்-தைந்து விகற்பமாம். அவ்விருபத்தைந்தின் கண்ணும் மூன்றாவது ஐந்து சீரையும் உறழ நூற்றிருபத்தைந்து விகற்பமாகும். அந் நூற்றிருபத்தைந்தின் கண்ணும் நான்காவது ஐந்து சீரையும் உறழ அறுநூற்றிருபத்தைந்தாம் என்றவாறு. (சஅ)

---

1. 'ஒன்றாதது' என்றிருத்தல் வேண்டும்.

**பேராசிரியம் :**

இது, முன்னர்ச் சிறப்புடைத்தென வேண்டிய நாற்சீரடியினைக் குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடி யென வகுத்தமையாமாறு கூறினான் (தொல்-செய்-36, 37, 38, 39, 40) இனி அறுநூற்றிருபத்தைந்தென அவைபட்ட விகற்பமுங் கூறியவாறு

(இ-ள்.) மேற்கூறிய ஐவகையடியினையும் விரிக்குங்காலைப் பொருள்வகையமைந்த பதினேழ்நிலத்து எழுபதுவகைக் குற்ற நீங்கி அறுநூற்றிருபத்தைந்தாம் (எ-று.)

எனவே, பதினேழ்நிலத்து எறினும், எழுபதுவகைக்குற்றம் விரவிச்செயினும் அறுநூற்றிருபத்தைந்தெனப்படாவென்பதாம்[1] பதினேழ்நிலனும் ஆசிரியம்பெறுமென்பதூஉம், வெண்பாவுங் கலிப்பாவும் ஒரோவொன்று எட்டுநிலம் பெறுமென்பதூஉம் முன்னர்ச் சொல்லுப. அவை மூன்றுந் தொகுப்ப முப்பத்து மூன்று நிலனாயின.

வெள்ளை நிலம் பத்தென்பார்க்கு முப்பத்தைந்து நிலனாம் **எழுபது கூற்று வழுவெனப்பட்டன** தளைவழு. **தளைவழுவாவன** ஆசிரியநிலம் பதினேழனுள் வெண்டளையுங் கலித்தளையுமாகி வேற்றுத்தளை தட்ப முப்பத்துநான்கு தளை வழுவாம். வெள்ளை நிலம் பத்தினும் ஆசிரியத்தளை பத்துங் கலித்தளை பத்துந் தட்ப இருபது தளைவழுவாம். இனிக் கலிநில மெட்டனுள் ஆசிரியத் தளை எட்டுங் கலித்தளை எட்டுந் தட்பப் பதினாறு தளை வழுவாம். இவையெல்லாந் தொகுப்ப முப்பத்தைந்து நிலத்தும் ஒன்றிரண்டுசெய்து, எழுபது தளைவழுவாயினவாறு. இது வெள்ளை நிலம் பத்தென்பாருரை.[2]

---

1. நாற்சீரடிகளில் ஓரடிக்கு எழுத்தின் பேரெல்லை பதினேழெழுத்து என்னும் அளவினக் கடந்து எழுத்துமிக்குவந்தாலும் எழுபதுவகையின் வழுவிக் குற்றம் விரிவி வந்தாலும் 'அறுநூற்றிருபத்தைந்து' என்னும் அடிவரையறை கொள்ளப்படாது என்பதாம்.

2. இத்தொல்காப்பியச்சூத்திரத்திற்கு இங்ஙனம் உரைகாண்போர் கூறும் விளக்கம் யாப்பருங்கலவிருத்தியில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

'எழுபது வகையின் வழுவிலவாகி என்னுந் தொல்காப்பியத் தொடரில் 'எழுபதுவகை' என்பது சீர்கள் அடியாகுமிடத்துப் பொருந்திய சீர்களின் தொகையினையே குறிப்பதாகும் என்பது இளம்பூரணர் முதலிய உரையாசிரியர் களின் கருத்தாகும். அங்ஙனம் கொள்ளுமிடத்து 'எழுபதுவகையின் வழுவிலவாகி'

முன்பக்கத்தொடர்ச்சி

என்பதற்கு 'எழுபதுவகைப்பட்ட உறழ்ச்சியின் வழுவுதலின்றி, எனப்பொருள் கூறுதலே பொருத்தமுடையதாகும். வெள்ளைநிலம் பத்தென்பார் இவ்வாறு கொள்ளாது, 'எழுபதுவகையின் வழு' வெனக் கூட்டி 'எழுபது வகையின் வழுவிலவாகி' என்பதற்கு 'எழுபது தளைவழுவின் நீங்கி' எனப் பொருள் கொண்டனர். ''எழுபது தளைவழுவாவன: ஆசிரிய நிலம் பதினேழுள்ளும் வெண்டளைதட்பப் பதினேழும், கலித்தளைதட்பப் பதினேழுமாய் ஆசிரியப்பாவிற்கு முப்பத்துநான்கு தளைவழுவாம். வெள்ளை நிலம் பத்தினுள்ளும் ஆசிரியத் தளை தட்பப் பத்தும் கலித்தளை தட்பப் பத்துமாய் வெண்பாவிற்கு இருபது தளை வழுவாம். கலிநிலம் எட்டினுள்ளும் வெண்டளை தட்ப எட்டும் ஆசிரியத் தளை தட்ப எட்டுமாய்க் கலிப்பாவிற்குப் பதினாறு தளைவழுவாம். இவை எழுபது தளை வழுவாவன'' என்பர் யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர்.

ஆசிரிய அடித்தொகை 261

ஆசிரியப்பாவிற்கு இயற்சீர் பத்தும் ஆசிரியவுரிச்சீர் ஆறும் எனப் பதினாறு சீர்கள் உரியன. அவற்றுள் தன்சீர் ஆறும் தளை வகுக்கப்படாமையின் கொள்ளப்படா. ஒழிந்த இயற்சீர்பத்தும் கொண்டு தளை வழங்கப்படும். இரண்டெழுத்துச் சீர், மூன்றெழுத்துச்சீர், நான்கெழுத்துச்சீர், ஐந்தெழுத்துச்சீர் என இயற்சீர் நான்கு வகைப்படும்.

ஈரெழுத்துச் சீர்கள் - 4.

போதுபூ, போரேறு, பாதிரி, தேமா - சீர்கள். இவற்றுள் தேமாவும் பாதிரியும் ஐந்தெழுத்தடிமுதல் பதினேழெழுத்தடிவரை பதின்மூன்றடி பெற்று வருதலின் $13 \times 2 = 26$ அடிகளாயின. போதுபூ, போரேறு என்னும் இரண்டும் ஆறெழுத்தடி முதல் பதினேழெழுத்தடிவரை பன்னிரண்டடிகள் பெற்று வருதலின் $12 \times 2 = 24$ அடிகளாயின. ஆக ஈரெழுத்துச்சீர் பயிலும் ஆசிரிய அடிகளின் தொகை 50.

மூவெழுத்துச்சீர்கள் 7

பாதிரி, புளிமா, விறகுதீ, போதுபூ, போரேறு, பூமருது, கடியாறு.

இவற்றுள் போதுபூ, விறகுதீ, கடியாறு...என்னும் மூன்றுசீரும் ஏழெழுத்தடி முதல் பதினெட்டெழுத்தடிவரை பன்னிரண்டடிகள் பெற்று வருதலின் $12 \times 3 = 36$ அடிகளாயின்.

'பாதிரி' புளிமா, போரேறு, பூமருது' - என்னும் நான்கு சீரும் ஆறெழுத்தடி முதல் பதினெட்டெழுத்தடிவரை பதின்மூன்றடிகள் பெற்று வருதலின் $13 \times 4 = 52$ அடிகளாயின.

ஆக மூவெழுத்துச்சீர்பயிலும் ஆசிரிய அடிகளின் தொகை 88

நாலெழுத்துச்சீர்கள். 5.

கணவிரி, பூமருது, கடியாறு, விறகுதீ, மழகளிறு.

அவற்றுள் 'பூமருது,' ஏழெழுத்தடிமுதல் பத்தொன்பதெழுத்தடி வரை பதின்மூன்றடிகள் பெற்று வருதலின் 13 அடிகளாயின.

முன்பக்கத்தொடர்ச்சி

கணவிரி, கடியாறு. மழகளிறு, விறகுதீ என்னும் நான்குசீரும் எட்டெழுத்தடிமுதல் பத்தொன்பதெழுத்தடிவரை பன்னிரண்டடிகள் பெற்று வருதலின் $12 \times 4 = 48$ அடிகளாயின.

ஆக நாலெழுத்துச்சீர்பயிலும் ஆசிரியவடிகளின் தொகை 61.

ஐந்தெழுத்துச்சீர் 1.

'மழகளிறு' என்னும் ஐந்தெழுத்துச்சீர் ஒன்பதெழுத்தடி முதலாக இருபதெழுத்தடிவரை பன்னிரண்டடிகள்பெற்று வருதலின் 12.

இவ்வாறு இயற்சீர்களால் இயன்ற எல்லா அடித்தொகைகளையும் கூட்ட ஆசிரிய அடிகளின் தொகை 211 ஆகும்.

அசைச்சீர்கள்

அசைச்சீர்கள் ஆசிரியப்பாவினுள் ஓரெழுத்துச்சீரும் ஈரெழுத்துச்சீரும் மூவெழுத்துச் சீருமாகப் பகுத்துரைக்கப்படா.

நேர், நேர்பு என்னும் அசைகள் ஓரெழுத்தாகியவழி நான்கெழுத்தடிமுதலாகப் பதினைந்தெழுத்தடிவரையும் வருங்கால் அசையொன்றிற்குப் பன்னிரண்டடிகளாக இரண்டசைகட்கும் இருபத்து நான்காம். அவ்விரண்டசையும் 'தேமா' என்னும் ஒருசீரேயாமாதலின் அலகுநிலையாற் பன்னிரண்டடிகளே கொள்ளப்படும். இனி நேர்பு அசை இரண்டெழுத்தாகக் கொள்ளுமிடத்து ஐந்தெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடிகாறும் உயரப் பன்னிரண்டடியாம்.

நிரை, நிரைபு என்பன இரண்டெழுத்தாயவழி ஐந்தெழுத்தடிமுதல் பதினேழெழுத்தடி வரை ஒவ்வொன்று பதின்மூன்றடிகளாக இரண்டசைகட்கும் இருபத்தாறாகும். நிரை, நிரைபு என்னும் அவ்விரண்டசையும் 'புளிமா' என்னும் சீரேயாமாதலின் அலகுநிலையாற் பதின்மூன்றடிகளேயாகக்கொள்ளப்படும்.

'நிரைபு' அசை மூன்றெழுத்தாயவழி ஆறெழுத்தடிமுதல் பதினெட்டெழுத்தடிவரை பதின்மூன்றடிகளாம்,

''நேரசையும் நேர்பசையும் ஓரெழுத்தும் ஈரெழுத்துமா ஆங்கால் இருபத்து நான்கடி ஆக்கின. நிரையசையும் நிரைபசையும் ஈரெழுத்து மூவெழுத்துமா ஆங்கால் இருபத்தாறடி ஆக்கின. இவையெல்லாம் தலைப்பெய்ய, ஆசிரியத்துள் ஐம்பதடி அசைச்சீராயின. இவை ஐம்பதும் மேற்சொன்ன இருநூற்றொருபத்தொரடியும் தலைப்பெய்து எண்ண ஆசிரிய அடித்தொகை இருநூற்றறுபத்தொன்றாம்.

வஞ்சியடி

வஞ்சிப்பா நாலெழுத்து முதல் ஆறெழுத்துவரையமைந்த அடிகள் மூன்றும் ஏழெழுத்து முதல் ஒன்பதெழுத்துவரையமைந்த அடிகள் மூன்றும், அளவடியுள் பத்தெழுத்து முதல் பன்னிரண்டெழுத்துவரையுள்ள முதல் மூன்றும் ஆகிய ஒன்பது நிலமும், முச்சீர்கட்டளையடியாற் பெற்ற முச்சீரடியுமாய வஞ்சி பத்துநிலமும் பெற, அவையும் ஆசிரிய அடியுள்ளேயடங்கும்.

முன்பக்கத் தொடர்ச்சி

வெண்சீரடி 232.

இயற்சீர்பத்தும் வெண்சீர்நான்கும் என வெண்பாவிற்குப் பதினான்கு சீர் வரும். அவை இரண்டெழுத்துச்சீர், மூன்றெழுத்துச்சீர், நான்கெழுத்துச்சீர், ஐந்தெழுத்துச்சீர் என நான்கு வகைப்படும்,

ஈரெழுத்துச்சீர்கள் தேமா, பாதிரி, போதுபூ, போரேறு, என்பன. அவற்றுள் 'தேமா' எட்டெழுத்தடிமுதலாகப் பதினாறெழுத்தடிவரை 9 அடியாகும். பாதிரி, போதுபூ, போரேறு என்பன மூன்றும் ஏழெழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத் தடி வரை ஒன்பதடிகளாக $3 \times 9 = 27$ அடியாகும். ஆக ஈரெழுத்துச்சீர் நான்கினாலும் ஆக்கப்பட்ட வெண்பாவின் அடித்தொகை 36.

மூவெழுத்துச்சீர்கள் : பாதிரி, மாசெல்வாய், மாபடுவாய், புளிமா, போதுபூ, போரேறு, பூமருது, விறகுதீ, கடியாறு என ஒன்பது சீர்கள்.

அவற்றுள் 'விறகுதீ' 'கடியாறு' என்னும் இருசீரும் ஏழெழுத்தடிமுதல் பதினாறெழுத்தடிவரையுயர்ந்த அடிகள் ஒவ்வொன்றிற்கும் பத்துப்பத்தாக இரு பதடிகளாகும். ஒழிந்த சீர்கள் ஏழும் எட்டெழுத்தடிமுதலாகப் பதனாறெழுத்தடி வரை உயர்ந்த ஒன்பதடிகளும் பெற்று $7 \times 9 = 63$ அடிகளாகும். ஆக மூவெழுத்துச்சீர்கள் ஒன்பதினாலும் ஆக்கப்பட்ட வெண்பாவின் அடித் தொகை 83.

நான்கெழுத்துச்சீர்கள்: கணவிரி, பூமருது, கடியாறு, மழகளிறு, மாபடுவாய், விறகுதீ, புலிசெல்வாய், என ஏழாகும்.

இவற்றுள், 'பூமருது' 'மாபடுவாய்' என இரண்டும் ஒன்பதெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடி வரையுயர்ந்த எட்டு நிலமும் பெற்று $8 \times 2 = 16$ அடியாகும். ஒழிந்த ஐந்து சீர்களும் எட்டெழுத்தடி முதலாகப் பதினாறெழுத் தடிவரையுயர்ந்த ஒன்பது நிலமும் பெற்று $9 \times 5 = 45$ அடிகளாம், ஆக நாலெழுத்துச்சீர்கள் ஒன்பதினாலும் ஆக்கப்பட்ட வெண்பாவின் அடித்-தொகை 61.

ஐந்தெழுத்துச்சீர்கள்; மழகளிறு, புலிபடுவாய் - இவை இரண்டும் ஒன்பதெழுத் தடிமுதலாகப் பதினாறெழுத்தடி வரையும் உயர்ந்த எட்டு நிலமும் பெற்று $8 \times 2 = 16$ அடியாகும் ஆக, வெண்பாவிற்குச் சீராலாம் அடித்தொகை 196.

வெண்பாவினுள் அசைச்சீர்

வெண்பாவினுள் நான்கசைகளும் சீராகுமிடத்து ஓரெழுத்துச்சீர், ஈரெழுத்துச் சீர், மூவெழுத்துச்சீர் என மூன்று நிலைமையின.

ஓரெழுத்துச்சீர்கள் நேர், நேர்பு.

ஏழெழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத்தடிவரையுயர ஓரோஒன்றிற்கு ஒன்பதாக இரண்டிற்குமாய்ப் பதினெட்டாகும். அவ்விரண்டினையும் 'தேமா' என்னும் சீராகக் கொள்ள அலகு நிலையால் ஒன்பதடிகளேயாகும். (9)

முன்பக்கத் தொடர்ச்சி

ஈரெழுத்துச்சீர்கள் ;

நேர்பு ஈரெழுத்துச்சீராம் வழி எட்டெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடி வரையுயர்த்தெண்ண ஒன்பதடிகளாகும். (9)

இனி, நிரை, நிரைபு என்பன ஈரெழுத்தாயவழி ஏழெழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத்தடிவரையுயர்த்தெண்ண ஒரோவொன்று ஒன்பதாக இரண்டுமாய்ப் பதினெட்டடிகளாகும் இரண்டும் 'புளிமா' என்னுஞ்சீரே ஆகுமாதலால் இரண்டினையும் ஒன்பதாகக் கொள்க. (9)

மூவெழுத்துச்சீர்:

'நிரைபு மூவெழுத்துச்சீராகுமிடத்து எட்டெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடிவரை உயர ஒன்பதடிகளாம். இவ்வாறு வெண்பாவினுள் நான்கசையும் அசைச்சீராய்நின்று ஆக்கின அடித்தொகை 36. இவையெல்லாம் கூட்டியெண்ண வெண்பாவடித்தொகை 232.

கலியடி

வெண்பாவுரிச்சீர் நான்கும், 'நீடுகொடி', 'குளிறுபுலி' என்னும் ஆசிரியவுரிச்சீர் இரண்டும், தேமா, புளிமா என்னும் நேரீற்றியற்சீர் இரண்டுமொழித்து ஏனைய இயற்சீர் எட்டும் ஆகப் பதினான்கு சீரும் கலிப்பாவுக்குரியவாகும்,

இவை ஈரெழுத்துச்சீர், மூவெழுத்துச்சீர், நான்கெழுத்துச்சீர், ஐந்தெழுத்துச் சீர் என்னும் நான்கு நிலைமையின.

ஈரெழுத்துச்சீர்: 'பாதிரி, போதுபூ, போரேறு' இவை மூன்றும் பதின்மூன்றெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடிவரை உயர்ந்த ஐந்தடியும் ஒரோவொன்றிற்கு ஐந்தடியாக $3 \times 5 = 15$ அடியாம்.

மூவெழுத்துச்சீர் : 'பாதிரி, போதுபூ, விறகுதீ, போரேறு, பூமருது, கடியாறு, நீடுகொடி, மாசெல்வாய், மாபடுவாய் என்னும் ஒன்பதும் ஆகும்.

இவற்றுள், 'கடியாறு' மாசெல்வாய், மாபடுவாய்' என்னும் மூன்றும் பதின்மூன்றெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடிவரை உயர்ந்த ஆறடியும் பெற, $3 \times 6 = 18$ அடிகளாம்.

பாதிரி, போதுபூ, விறகுதீ, போரேறு, பூமருது, நீடுகொடி-என்னும் ஆறும் பதினான்கெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடி வரையும் உயர்ந்த ஐந்தடியும் பெற்று, ஓரோவொன்று ஐந்தடியாக $6 \times 5 = 30$ அடியாம். இவ்வாறு மூவெழுத்துச்சீராயவழிக் கலிப்பாவின் அடித்தொகை 48.

நாலெழுத்துச்சீர்கள் : 'கணவிரி, கடியாறு, விறகுதீ, பூமருது, நீடுகொடி, புலிசெல்வாய், மாபடுவாய், மழகளிறு, குளிறுபுலி-என்னும் ஒன்பதும்.

இவற்றுள். கணவிரி, கடியாறு, மழகளிறு, மூன்றும் பதினான்கெழுத்தடி முதலாகப் பத்தொன்பதெழுத்தடி வரையும் உயர்ந்த ஆறடியும் பெற $3 \times 6 = 18$ அடியாம். 'மாபடுவாய்' பதினான்கெழுத்தடி முதலாகப் பத்தொன்பதெழுத்தடி வரை உயர, 6 அடியாம்.

அது பொருந்தாது. என்னை ? ஆசிரியத்து நாலெழுத் தடியுள் இரண்டு தளைவழுவுங் காட்டுகவெனின் அவர்க்கு அவை காட்டலரிய. குறிப்பசைசெய்து காட்டின் அது கூறப்பட்ட உறுப்பினுளின்றென்றவாறு. எடுத்தோதிய எழுத்து முதல் உறுப்பினான் வந்த அடிக்கண்ணே காட்டாதொழிதலின் அது நூன்மாறுகோளாம்; அல்லதூஉம். அவ்வாறு . தளைகொள்ளின் முழுவதுங் குறிப்பசையானே வரும் அடியும், ஓரெழுத்தடிமுதன் மூன்றுநிலனுங் கொள்ளல்வேண்டும். கொள்ளவே, நிலம் இரு பத்தொன்றாகலுங், காட்டுந் தளைவழூத் தொண்ணூற்று நான் காகலும்பெற்று,

ஞாயிறு வரகுவண்டு வண்டு வண்டு

என்பது கலித்தளை தட்ப ஆசிரியவடி அன்றாவான் செல்லுமென வுங் கூறி மறுக்க.[1]

---

முன்பக்கத்தொடர்ச்சி

'புலிசெல்வாய்' பதிமூன்றெழுத்தடி முதலாகப் பத்தொன்பதெழுத்தடிவரை உயர 7 அடியாம்.

'விறகுதீ, பூமருது, நீறுகொடி, குளிறுபுலி' என்னும் நான்கும் பதினைந்தெழுத்தடி முதலாகப் பத்தொன்பதெழுத்தடிவரையும் உயர்ந்த ஐந்தடியும் பெற $4 \times 5 = 20$ அடியாம். இவ்வாறு நான்கெழுத்துச்சீராயவழிக் கலிப்பாவின் அடித்தொகை 51. ஐந்தெழுத்துச்சீர்கள்: 'மழகளிறு, புலிபடுவாய், குளிறுபுலி. அவற்றுள் 'குளிறுபுலி' பதினாறெழுத்தடிமுதலாக இருபதெழுத்தடி வரையுயர்த்து எண்ண ஐந்தடியாகும். 'மழகளிறு' பதினைந்தெழுத்தடி முதலாக இருபதெழுத்தடிவரை யுயர்த்தெண்ண ஆறடியாகும். 'புலிபடுவாய்' பதினான்கெழுத்தடிமுதலாக இருபதெழுத்தடிவரை உயர்த்தெண்ண ஏழடியாம். ஆக ஐந்தெழுத்துச்சீரான்-வரும் கலிப்பாவின் அடித்தொகை 18. கலியடியெல்லாம் கூட்டியெண்ண 132 அடியாம். கலியடியுள் அசைச்சீராயின அடி இல்லை.

ஆசிரியவடி இருநூற்றறுபத்தொன்று (261) ; வெண்பாவடி இருநூற்று முப்பத்திரண்டு. (232) ; கலியடி நூற்றுமுப்பத்திரண்டு (132) ஆக அறுநூற்றிருபத்தைந்து (625) அடியாம். என இத்தொல்காப்பியச் சூத்தரத்திற்கு விளக்கந்தருவர் யாப்பருங் கலவிருத்தியுரையாசிரியர். (பக். 352 - 366)

1. ஆசிரியப்பாவினுள், வெண்டளை கலித்தளை என்னும் இரண்டு தளை வழுவும் காட்டுக என்றால் அவர்களாற் காட்டுதல் இயலாது. அவ்வழுவினைக் குறிப்பசை செய்து காட்டுவாராயின் குறிப்பசையென்பதோர் உறுப்பு செய்யுட்-குரியதாகத் தொல்காப்பியனாராற் கூறப்படாமையின் அங்ஙனம் காட்டுதல் நூன்மாறுகோளாம். அன்றியும் தளைகொள்ளின் முழுவதும் குறிப்பசையாலே-வரும் அடியும் ஓரெழுத்தடிமுதல் மூன்று நிலனுங்கொள்ளவேண்டிவரும். அவ்-வாறு கொள்ளவே எழுதளைகட்கும் நிலம் இருபத்தொன்றாகவும், ஆசிரியநிலம்

இனி, ஆசிரியத்துட் கலித்தளை தட்குங்கால் அவர் தாந் தளைவேண்டுமாற்றான் வெண்சீர்நிற்ப இறுதி நிரை வரவேண்டுமாகலானுங், கட்டளையடிக்கண் வெண்சீர் வருமென்றிலனாகலானும்.

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே'
(தொல். செய் 29)

என்பதனான் இயற்சீரை வெண்சீராக்கிக்கொள்ளினும் அச் சூத்திரத்துக்கு அவ்வாறு பொருளுரைப்பிற் படுங் குற்றம் ஆண்டுக் கூறினாமாகலானும் அது நிரம்பாதென்பது. அற்றன்றியும், ஓரெழுத்து முதலிய நிலங்கள் ஓரோநிலத்து இரண்டும் மூன்றுந் தளைவழுக் காட்டலாமாகலின் எழுபது வகையின் வழு வெனலுமாகாது என்பது. இனி,

'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய' (தொல், செய் 58)

என்னும் எடுத்தோத்துக் கிடப்ப இலேசினான் இரண்டுநில னேற்றி வெள்ளைநிலம் பத்தெனலுமாகாது. என்னை?

'அளவடி மிகுதி யுளப்படத்தோன்றி
யிருநெடி லடியுங் கலியிற் குரிய' (தொல். செய் 29.)

என ஓதினான்; இதனினுஞ் சிறந்த வெண்பாவிற்கும் அங்ஙனம் ஓதுவான்மன் ஆசிரியன் அதுவே கருத்தாயினென்பது. அல்லதூஉங் கலிப்பாவினுள் வெண்சீரொன்றினுங் கலியோசை பிறக்கு

---

முன்பக்கத்தொடர்ச்சி

இருபத்தொன்றிலும் வெண்டளையும் கலித்தளையுமாகி வேற்றுத்தளை தட்ப 42 தளைவழுவுதலும் வெள்ளைநிலம் பதின் மூன்றனுள்ளும் ஆசிரியத்தளை பதின்மூன்றும் கலித்தளை பதின்மூன்றும்தட்ப இருபத்தாறு தளை வழூவும், கலிநிலம் பதினொன்றினுள்ளும் ஆசிரியத்தளை பதின்மூன்றும் வெண்டளை பதின்மூன்றும் தட்ப இருபத்தாறு தளைவழூவும் எனத் தளைவழூ தொண்ணூற்று நான்காதலும் கொள்ள வேண்டிய நிலையேற்படும்.

'ஞாயிறு வரகுவண்டு வண்டு வண்டு' என்றஅடி நிரையீற்றியற்சீரின் முன் நிரைமுதல் வெண்சீர் வந்து தளைத்தமையால், அவர்கருத்துப்படி கலித்தளையாகிய அவ்வடி ஆசிரியவடியன்று எனல் வேண்டும். ஆகவே அன்னோர் கூறுமாறு தளைவழூ, எழுபது என வரையறுத்தல் எவ்வாற்றானும் பொருந்தாது என மறுத்தார் பேராசிரியர்.

மென்று பதினேழெழுத்தடியான் வந்த வெண்பாவடியினைத் தாமுங் களைபவாகலானும் அது கூறி நிரம்பாதென்பது.[1]

மற்றென்னை தளைகொள்ளுமாறெனின், ஆசிரியத்துள் இயற்சீர் பத்தொன்பதும், ஆசிரியவுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்குமென இருபத்தேழாகி,

'எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே-குன்றலு மிகுதலும்' (தொல். செய். 43)

இன்றி வரும்.

**வெண்பாவினுள்** ஆசிரியவுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்கும் ஒழித்து ஒழிந்தசீர் இருபத்து மூன்றும் வெண்சீர் நான்கினோடுந் தலைப்பெய்ய அவையும் அவ்வாறு இருபத்தேழாம்.

---

1. இனி, ஆசிரியப்பாவினுள் கலித்தளை தட்குங்கால் அன்னோர் தளைகொள்ளும் முறையில் வெண்சீர் நிற்ப அதன் இறுதியில் நிரைமுதற்சீர் வருதல்வேண்டும். கட்டளையடியாசிரியப்பாவின்கண் வெண்சீர் வரும் எனத் தொல்காப்பியனார் கூறினாரல்லர். எனவே அங்குத் தளைவழுவுக்கு இடமில்லை. 'வெண்சீரிறுதிநிரையசையிற்றே' (செய்-29) என்பதனால் ஞாயிறு என்னும் இயற்சீர் 'மாசெல்வாய்' என வெண்சீராக்கித் தளை கொள்ளலாம் எனக் கூறலாமெனின் வெண்சீரின் இயல்பினதாய் அங்ஙனம் கொள்ளின் வரும் குற்றம் 'வெண்சீரிறுதிநிரையசையியற்றே' என்னும் அச்சூத்திரவுரையில் முன்னர்க் கூறப்பட்டது. எனவே இயற்சீரை வெண்சீராக்கி அமைதி கூறுதலும் நிரம்பாது. அதுவன்றியும் ஓரெழுத்து முதலிய நிலங்களில் ஓரோர்நிலத்து இரண்டு மூன்று என்ற அளவில் தளைவழுக் காட்டுதல் இயலுமாயினும் மூவகைப்பாக்களிலும் எழுபது வகையினவாகிய தளைவழுக்களைக் காட்டல் இயலாது. இனி ஏழெழுத்து முதல் பதினான்கெழுத்தளவும் எட்டுநிலங்களே வெண்பாவுக்குரிய என ஆசிரியர் தெளிவாக எடுத்துரைத்தாராகவும் அவர்கருத்துக்கு மாறாக இரண்டு நிலங்களையேற்றி வெள்ளைநிலம் பத்து எனக் கூறுதலும் பொருந்தாது. வெள்ளைநிலம் பத்தென்றலே தொல்காப்பினார் கருத்தாயின், 'அளவடி மிகுதி யுளப்படத்தோன்றி, யிருநெடி லடியுங்கலியிற் குரிய' (செய். 59) எனக்கலிப்பாவிற்கு எழுத்துக்களின் சிற்றெல்லையும் பேரெல்லையும் வரையறுத்தாற்போன்று, கலிப்பாவினுஞ் சிறப்புடையதாகிய வெண்பாவிற்கும் எட்டின் மேற்பட இரண்டு நிலனும் ஏற்றி வெண்பா பெறும் எழுத்துக்களின் பேரெல்லையினை வரையறுத்திருப்பர். அன்றியும் கலிப்பாவினுள் வெண்சீரொன்றினுங்கலியோசை பிறக்கும் எனக்கொண்டு பதினேழெழுத்தால் ஆகிய வெண்பாவடியினை வெண்பா அன்றென விலக்குவர் ஆசிரியர். எனவே தொல்காப்பியனார் காலத்திற்குப் பின் வந்தோர் வகுத்துரைக்கும் தளையமைப்பினை அடிப்படையாகக் கொண்டு எழுபது தளைவழுக் காட்டுதல் நிரம்பிய இலக்கணமாகாதென்பது பேராசிரியார் கருத்தாதல் இவ்வுரைப் பகுதிகளால் உய்த்துணரப்படும்.

**கலிப்பாவிற்கு** நேரீற்றியற்சீர் மூன்றொழித்து ஒழிந்த இயற்சீர் பதினாறும், ஆசிரியவுரிச்சீர் நான்கும், வெண்சீர் நான்கும் என இருபத்துநான்காம். இவை மூன்று பகுதியுந் தொகுப்ப எழுபத்தெட்டாயின. அவற்றுள், ஆசிரியத்துள் வந்த அசைச்சீர் நான்கினையும் வெண்பாவினுள் வந்த அசைச்சீர் நான்கினையும் ஈண்டுத் தளைகொள்ளுங்கால், இயற்சீர்ப்பாற்படுத்து அடக்குகவென்று ஆண்டுக் (28) கூறினமையின் ஈண்டு அவற்றை இயற்சீர்ப்பாற் படுத்தடக்கின் எழுபதாகக் கொள்ளப்படும். அங்ஙனங் கொள்ளப்பட்ட சீர் ஒன்றொன்றனோடு தட்குங்கால் அவ்வெழுபது வகையானுமன்றித் தட்குமாறில்லை. அதுநோக்கி 'எழுபதுவகையின் வழுவிலவாகி, யென்றானென்பது.[1] அவை தட்குமாறு முன்னர்ச் (340) சொல்லுதும்.[2]

அங்ஙனந் தளைசிதையா அடி அறுநூற்றிருபத்தைந்தும் மூன்று பாவிற்கும் உரிய பகுதியவாம். யாங்ஙனம்? **ஆசிரியவடி முந்நூற்றிருபத்து நான்கும், வெண்பாவடி நூற்றெண்பத்தொன்றும், கலியடி நூற்றிருபதுமென அறுநூற்றிருபத்தைந்தாம்.** 'மெய்வகையமைந்த' என்றதனான் நான்குசீருள்ளும் உறழ்கின்ற சீரினை அடிமுதற்கண்ணே வெளிப்படவைத்து அச்சீரின் அடியாக்கி உறழப்படுமென்பது கொள்க.[3] அல்லாக்கால் இடையும் இறுதியும் வைத்துறழ்தன் முதற்கணின்றதோர் சீர் இரண்டான் அடியாகியும் அவ்வடி மயங்குமாகலான் அது மயங்கக் கூறலென்னுங் குற்றமாமென மறுக்க.[4]

---

1. இவ்வுரைப்பகுதி, எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட கட்டளையடிகளில் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தின்படி தளைகொள்ளும் முறைமை எழுபது வகையாதலை விளங்க விரித்துரைக்கும் நிலையில் அமைந்துள்ளமை காணலாம்.

2. முன்னர்ச் சொல்லுதும் - பின்னர்க் கூறுவோம்.

3. அடியுறழ்தற்குரிய இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்பாவுரிச்சீர் வஞ்சியுரிச்சீர் என்னும் சீர்கள் நான்கினுள்ளும் உறழ்தற்குரிய சீர்களை நாற்சீரடியின் முதற்கண்ணே வெளிப்படவைத்து, அச்சீரினால் அடியாக்கி உறழப்பெறும் என்பார் 'மெய்வகையமைந்த பதினேழ்நிலம்' என அடைகொடுத்தோதினார். உறழ்தல் - பெருக்குதல்.

4. சீர்களை அடிமுதற்கண் வைத்துப்பெருக்கிக் காணும் இம்முறையினை விடுத்து இடையும் இறுதியும் உள்ளசீர்களை உறழ்ந்து காணுதல், அடிமுதற்கண் நின்ற சீர் இரண்டால் அடியாகி அங்ஙனம் முதற்கண்வைத்துறழும் அடிகளும் இடைக்கண்ணும் இறுதிக்கண்ணும் வைத்துறழும் அடிகளும் தம்முள்வேறுபட்டு மயங்குமாதலின் அங்ஙனம் உறழ்தல் மயங்கக்கூறல் என்னுங் குற்றமாமாதலின் அங்ஙனம் உறழ்ந்து காணுதல் பொருந்தாது என்பதாம்.

"எள்ளற்ற முந்நூற் றிருபத்து நான்ககவல்
வெள்ளைக்கு நூற்றெண்பத் தொன்றாகுந்—துள்ளல்
நவையறு நூற்றிருபத் தைந்தா மடி நாடின்
அவையறு நூற்றிருபத் தைந்து."

**ஆசிரியத்துள்** வருமெனப்பட்ட சீர் இருபத்தேழும் ஒரோ வொன்று பன்னிரண்டாயுறழ அகவலடி முந்நூற்றிருபத்து நான்காம்[1] இது பயனில் வெளி.

"நால்வே றுரியசைச்சீர் நால்வே றகவற்சீர்
பால்வேறு பட்டியற்சீர் பத்தெஈன்ப தாக
இருபஃதேழ் சீரகவற் கீரிரண் டாதி
இருப தெழுத்தளவு மேற்று."

"ஆசிரியப் பாவினான் கைந்தாறே ழெட்டொன்ப
தாதி நிலமாறா மைஞ்சீரான் ஈறு
நிரையாஞ்சீர் நேரசைச் சீர்க்கொன்றொன் றேற்ற
வரையாதொன் றேறிற்றே வந்து."

ஓரெழுத்துச்சீரும் ஓரெழுத்தசைச்சீருஞ் சுருக்கத்திற் கெல்லை யாகிய சீராகலான் அவை சுருக்கத்திற்கு எல்லையாகிய நாலெழுத்தடி முதற் பதினைந்தெழுத்தடியளவும் உயரும். அவை:

'நுந்தை வண்டு வண்டு வண்டு'

எனவும்,

'நுந்தை காருருமு நனிமுழவு நனிமுழவு'

எனவும், ஓரெழுத்துத் தேமாவடி பன்னிரண்டற்கும் முதலடியும் முடிந்தவடியுங் கண்டுகொள்க.

'வண்டு வண்டு வண்டு வண்டு'

1. ஆசிரியத்துள் 27 சீர்களும், வெண்பாவினுள் 27 சீர்களும், கலிப்பாவில் 24 சீர்களும் ஆக இவை மூன்று பகுதியையும் கூட்ட 78 சீர்களாகும். அவற்றுள் ஆசிரியத்துள் வந்த அசைச்சீர்நான்கியையும் வெண்பாவினுள் வந்த அசைச்சீர்-நான்கினையும் இயற்சீர்ப் பாற்படுத்து அடக்கின் பாக்களிற் பயிலும் சீர்கள் எழுபதாதல் புலனாம். இங்ஙனம் கொள்ளப்பட்ட சீர்கள் தளைக்குமிடத்து இவ்வெழுபது வகையானன்றித் தளைக்குமாறில்லை யென்பார் 'எழுபது வகையின் வழுவிலவாகி' என்றார் ஆசிரியர்.

ஆசிரியத்துள் வருமெனப்பட்ட இருபத்தேழுசீர்களுள் ஒவ்வொன்றும் நாலெழுத்தடி முதல் பதினைந்தெழுத்தடியளவும் பன்னிரண்டடிகளாய் உறழ ஆசிரியவடி முந்நூற்றிருபத்து நான்காகும்.

எனவும், வண்டு காருருமு நனிமுழவு நனிமுழவு எனவும், இவை வண்டு முதலும் முடிவுங் காட்டிய அடி.

இனி, நேரீற்று ஈரெழுத்துச்சீர் ஒன்றும் ஐந்தெழுத்தடி முதலாகவும், பதினாறெழுத்தடி யிறுதியாகவும் வரும். அது :

[1]தேமா, [2]வண்டு, [3]வண்டு, [4]வண்டு, —எனவும்,
[1]தேமா, [2]காருருமு. [3]நனிமுழவு, [4]நனிமுழவு

எனவும் வரும். [1]மின்னு [2]வரகு என்னும் ஈரெழுத்தசைச் சீரிரண்டும் அவ்வாறே யுறழும். நிரையீற்றீரெழுத்துச்சீர் மூன்றும் ஆறெழுத்தடி முதற் பதினேழெழுத்தடியளவும் உறழும். அவை, [1]ஞாயிறு, [2]போதுபூ, [3]போரேறு என்பனவற்றை முதனிறீஇ [1]வரகு [2]வண்டு [3]வண்டு எனவும், [1]நனிமுழவு [2]நனிமுழவு [3]நனிமுழவு எனவும் தந்து இங்ஙனமாயினவாறு கண்டுகொள்க.

இனி, மூன்றெழுத்தான் வருவன ஒன்பதுசீரும் அசைச் சீருமெனப் பத்து. அவை:

[1]புளிமா, [2]பாதிரி, [3]வலியது, [4]மேவுசீர் [5]நன்னாணு,
[6]பூமருது, [7]கடியாறு, [8]விறகுதீ, [9]நீடுகொடி' [10]அரவு

என்பன. இவற்றுட் [9]புளிமாவும்[10] அரவும் ஆறெழுத்தடி முத-லாகப் பதினேழெழுத்தடியளவும் உறழ்ந்து ஒரொன்று பன்னிரண்டு நிலம்பெறும்.

ஒழிந்தசீர் எட்டும் நிரையீறாகலின் ஏழெழுத்தாதி பதினெட்டெழுத்தடியளவும் உறழும்; அவை

[1]புளிமா, [2]வண்டு, [3]வண்டு, [4]வண்டு எனவும்,
[1]புளிமா, [2]காருருமு, [3]நனிமுழவு, [4]நனிமுழவு எனவும்,
[1]பாதிரி, [2]வரகு, [3]வண்டு, [4]வண்டு எனவும்,
[1]பாதிரி, [2]நனிமுழவு, [3]நனிமுழவு, [4]நனிமுழவு எனவும்

உறழ்ந்தவழிப் புளிமா ஆறெழுத்துமுதற் பதினேழன் காறும் உறழ்ந்தவாறும், பாதிரி ஏழெழுத்துமுதற் பதினெட்டன் காறும் உறழ்ந்தவாறுங் கண்டுகொள்க. ஒழிந்தனவும் அன்ன.

இனி, நாலெழுத்துச்சீர் ஏழுவகைய. அவை
[1]கணவிரி, [2]காருருமு, [3]பெருநாணு, [4]உருமுத்தீ
[5]மழகளிறு, [6]நாணுத்தளை, [7]உரறுபுலி

என்பன. இவையெல்லாம் எட்டெழுத்தடிமுதற் பத்தொன்பதள வும் உயர்ந்தே ஒரோவொன்று பன்னிரண்டடி பெறும். அவை

[1]கணவிரி, [2]வரகு, [3]வண்டு, [4]வண்டு
எனவும்,

[1]கணவிரி, [2]நரையுருமு, [3]நரையுருமு, [4]நரையுருமு
எனவும் வரும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

ஐந்தெழுத்துச்சீர், [1]நரையுருமு, [2]விரவுகொடி என இரண்டு. இவை ஒன்பது முதல் இருபதின்காறும் உயரும்; அவை;

[1]நரையுருமு, [2]வரகு, [3]வண்டு, [4]வண்டு
எனவும்,

"கலனளவு கலனளவு கலனளவு கலனளவு" (ப. 178)
எனவும் வரும். விரவு கொடிக்கும் இஃதொக்கும்.

இவ்வாற்றான் ஓரெழுத்துச் சீரிரண்டும், ஈரெழுத்துச்சீர் ஆறும், மூவெழுத்துச்சீர் பத்தும், நாலெழுத்துச்சீர் ஏழும், ஐயெழுத்துச்சீர் இரண்டுமாகச் சீர் இருபத்தேழினையும் பன்னிரண்டிற் பெருக்கிப் பெற்ற ஆசிரியவடி முந்நூற்றிருபத்து நான்கும் பாட்டினுந் தொகையினும் வருமாறு கண்டுகொள்க,

இனி, வெண்பாவடி நூற்றெண்பத்தொன்றும் உறழுங்கால் ஏழெழுத்தடியும் எட்டெழுத்தடியும் ஒன்பதெழுத்தடியும் பத்தெழுத்தடியும் முதலாய் நிற்பப் பதினான்கெழுத்தடியளவும் ஏறி ஓரோசீர் எட்டடி பெறுவனவும் ஏழடி பெறுவனவும் ஆறடி பெறுவனவும் ஐந்தடி பெறுவனவுமாகிய முறையானே வருமென்பது.[1]

"இயற்சீ ரசைச்சீ ரிருபத்து மூன்றோ
டுரிச்சீர்நான் கேற்றச்சீ ரொன்பதிற்று மூன்று
மயக்கறு வெள்ளைக்க ணேழே தொடங்கி
யுயர்ச்சி பதினான்கென் றொட்டு"

"நாலெழுத்துச் சீரெல்லா மேலெழுத்தா னாசிரியத்
தாதிபெறா தொன்றேறிற் றாங்கதுபோ—னாலெழுத்தான்
வந்தசீர் வெண்பாவிற் பத்தெழுத்தான் வாராவா
யைஞ்சீர்க்கு நான்கா முதல்"

---

1. வெண்பாவினுள் ஏழெழுத்தடியும், எட்டெழுத்தடியும், ஒன்பதெழுத்தடியும் பத்தெழுத்தடியும் நிற்பப் பதினான்கெழுத்தளவும் ஏறி ஓரோர் சீர் எட்டடிபெறுவனவும், ஏழடிபெறுவனவும், ஆறடிபெறுவனவும், ஐந்தடி பெறுவனவும் ஆகி முறையானே வருமிடத்து எட்டடியுறழப்பெற்ற அடிநாற்பதும், ஏழடியுறழப்பெற்ற அடி எழுபத்தேழும், ஆறடியுறழப்பெற்ற அடி ஐம்பத்து, நான்கும், ஐந்தடியுறழப்பெற்ற அடி பத்தும் ஆக வெண்பாவடி நூற்றெண்பத்தொன்றாகும்.

[1]நுந்தை, [2]வண்டு, [3]ஞாயிறு, [4]போதுபூ [5]போரேறு என ஐந்தும் ஏழெழுத்தடிமுதற் பதினான்கெழுத்தடியளவும் உயர்ந்து ஒரோவொன்று எட்டடியுறழப் பெற்ற அடி நாற்பதாம்.

"ஞாயிறு போதுபூ போரேறு நுந்தைவண்
டேழாதி யெட்டா மடி"

[1]தேமா, [2]மின்னு, [3]வரகு, [4]பாதிரி, [5]வலியது, [6]மேவுசீர் [7]நன்னாணு, [8]பூமருது, [9]கடியாறு [10]விறகுதீ [11]மாசெல்வாய் எனப் பதினொன்றும் எட்டெழுத்தடிமுதற் பதினான்கெழுத்தடியளவும் ஒரொன்று ஏழடியுறழப்பெற்ற அடி எழுபத்தேழாம்.

"மின்னு வரகு வலியது மேவுசீர்
நன்னாணு பாதிரி பூமருதே யாறுதீ
மன்னாத மாசெல்வாய் தேமா வெனப்பதினோ
ரெண்ணாகு மெட்டாதி யேழ்."

[1]புளிமா, [2]அரவு, [3]கணவிரி, [4]காருருமு, [5]பெருவேணு, [6]உருமுத்தீ, [7]மழகளிறு, [8]மாவருவாய், [9]புலிசெல்வாய் என இவை ஒன்பதுசீரும் ஒன்பதெழுத்தடிமுதற் பதினான்கெழுத்தடியளவும் உயர்ந்து ஒரோவொன்று ஆறடியுறழப் பெற்ற அடி ஐம்பத்து நான்காம்.

"அரவு புளிமா கணவிரி பெருவேணு
புலிசெல்வாய் காருருமுப் பேருருமுத் தீயே

"மழகளிறு மாவருவா யொன்பது மொன்ப
தெழுவா யிருமூன் றெனல்"

[1]நனிமுழவு, [2]புலிவருவாய் என்னும் இரண்டுசீரும் பத்தெழுத்தடிமுதற் பதினான்கெழுத்தடியளவும் உயர்ந்து ஒரோவொன்று ஐந்தடியுறழப்பெற்ற அடி பத்தாயின.

"புலிவரு வாயு நனிமுழவு மென்னுமிவை
யீரைந்தீ ரேழுற்றீ ரைந்து"

இவையெல்லாந் தொகுப்ப வெண்பாவடி நூற்றெண்பத்தொன்றாயின.

அவற்றுட் சில வருமாறு:

[1]நுந்தை [2]வரகு [3]வாகு [4]வாகு-எனவும்,

1நுந்தை 2நனிமுழவு 3காருருமு 4காருருமு எனவும் இவை ஏழெழுத் தடிமுதற் பதினான் கெழுத்தளவும் நுந்தை வந்தவாறு. வண்டென்பதற்கும் இஃதொக்கும்.

1ஞாயிறு 2வண்டு 3வரகு 4வரகு-எனவும், 1ஞாயிறு 2காருருமு 3மாவருவாய் 4காருருமு-எனவும் இவை ஏழெழுத்தடியும் பதினான்கெழுத்தடியுமாயினவாறு. 1போதுபூ 2போரேறு என்பன வற்றிற்கும் இஃதொக்கும்.

1தேமா 2வரகு 3வரகு 4வரகு-எனவும், 1தேமா 2நனிமுழவு 3காருருமு 4பாதிரி எனவும் எட்டெழுத்தடி முதலாகப் பதினான் கெழுத்தடியளவும் உயர்ந்து தேமா ஏழடிபெற்றது. ஒழிந்த பத்துச்சீர்க்கும் இஃதொக்கும்.

1புளிமா 2வரகு 3வரகு 4வரகு-எனவும், 1புளிமா 2புலி வருவாய் 3காருருமு 4தேமா-எனவும் இவை ஒன்பதெழுத்தடி முதலாகப் பதினான்கெழுத்தடியளவும் உயர்ந்து ஆறடிபெற்றது; ஒழிந்த எட்டுச்சீர்க்கும் இஃதொக்கும்.

1நனிமுழவு 2வண்டு 3வரகு 4வரகு-எனவும், 1நனிமுழவு 2காருருமு 3பாதிரி 4தேமா-எனவும் இவை பத்தெழுத்தடி முதற் பதினான்கெழுத்தளவும் ஏறி ஐயெழுத்து நனிமுழவு ஐந்தடி பெற்றது; புலிவருவாய்க்கும் இஃதொக்கும்.

இவற்றுக்கெல்லாம் பதினான்கெழுத்தின் ஏறியக்காற் செப்பலோசை திரிபுடையவென்பது வல்லார்வாய்க் கேட்டு உணர்க. என்னை ?

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே" (தொல்.செய்.11)

என்றமையின்.

"அடியி னுட்ப மறிவருங் குரைத்தே"

எனப் பிறருஞ் சொல்லுப.

இனிக் கலியடிக்குரியசீர் இருபத்துநான்கும் ஒரோவொன்று ஐந்தடியுறழ அதன் அடித்தொகை நூற்றிருபதாம்.

"அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
யிருநெடி லடியுங் கலியிற் குரிய" (தொல். செய். 59)

என்பதனான், பதின்மூன்றெழுத்தும் பதினான்கெழுத்தும் பதினைந்தெழுத்தும் பதினாறெழுத்தும் முதலாக ஒரோவொன்று ஐந்தடி உறழ்ந்து கலியடியளவு பதினேழெழுத்து முதல் இருபதின்காறும் உயருமென்றது.

"நிரையீற் றியற்சீர் பதினாறு மேனை
நிரையீற் றகவற்சீர் நான்கு மொருநான்கு
வெண்சீருந் துள்ளற்கு வெவ்வே றொருசீரா
னைந்தா முறழ்ந்த வடி"

"ஈரெழுத்துச் சீர்பதின்மூன் றாகி யிருபதின்கா
றோதியசீர் நான்கற் குயர்வு."

[1]ஞாயிறு, [2]போதுபூ, [3]போரேறு என்னும் ஈரெழுத்துச்சீர் மூன்றும் பதின்மூன்றெழுத்துமுதற் பதினேழெழுத்துவரை ஒரோவொன்று ஐந்தடி யுறழும்.

[1]பாதிரி, [2]வலியது, [3]மேவுசீர், [4]நன்னாணு, [5]பூமருது [6]கடியாறு, [7]விறகுதீ, [8]மாசெல்வாய், [9]நீடுகொடி என மூவெழுத்துச்சீர் ஒன்பதும் பதினான்கெழுத்துமுதல் பதினெட்டளவும் ஒரோவொன்று ஐந்தடியுறழும்.

[1]கணவிரி, [2]காருருமு, [3]பெருநாணு, [4]உருமுத்தீ, [5]மழகளிறு, [6]மாவருவாய், [7]புலிசெல்வாய், [8]நாணுத்தளை, [9]உரறுபுலி என நாலெழுத்துச்சீர் ஒன்பதும் பதினைந்தெழுத்துமுதற் பத்தொன்பதளவும் ஒரோவொன்று ஐந்தடியுறழும்.

[1]நரையுருமு, [2]புலிவருவாய், [3]விரவுகொடி என்னும் ஐந்தெழுத்துச்சீர் மூன்றும் பதினாறெழுத்தடிமுதல் இருபதெழுத்தடியளவும் உயர்ந்து ஒரோவொன்று ஐந்தடி பெறும்.

இவ்வாற்றாற் கட்டளைக் கலியடி நூற்றிருபதாமென்பது.[1]

---

1. கலியடிக்குரிய சீர் இருபத்து நான்கும் ஒரோவொன்று ஐந்தடியுறழ நூற்றிருபதடிகளாகும்.

ஞாயிறு, போதுபூ, போரேறு என்னும் ஈரெழுத்துச்சீர் மூன்றும் 13, 14, 15, 16 எழுத்து முதலாக 17 முதல் 20 எழுத்துவரை ஒரோவொன்று ஐந்தடியுறழ 15 அடிகள்.

பாதிரி, வலியது, மேவுசீர், நன்னாணு, பூமருது, கடியாறு, விறகுதீ, மாசெல்வாய், நீடுகொடி என மூவெழுத்துச்சீர் ஒன்பதும் 14, 15, 16, 17, 18 வரை ஐந்தடியுறழ 45 அடிகள்.

அவற்றுட் சில வருமாறு : [1]ஞாயிறு [2]புலிசெல்வாய் [3]மாசெல்வாய் [4]புலிசெல்வாய்-எனவும், [1]ஞாயிறு [2]புலிவருவாய் [3]புலிவருவாய் [4]புலிவருவாய்-எனவும் முதலும் முடிவும் பதின் மூன்றும் பதினேழுமாகி ஈரெழுத்துப் பாதிரி ஐந்தடி யுறழ்ந்த வாறு. [1]ஞாயிறு [2]புலிவருவாய் என முதற்கண் ஆசிரியத்தளை தட்டதென்னாமோவெனின், என்னாம்;

'நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்டல்
வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப' (தொல். செய். ருo)

என்புழி அதனைக் கலித்தளை யென்னுமாகலின்.[1] [1]புலிசெல்வாய் [2]மாசெல்வாய் என ஈற்றுக்கண் வெண்டளைவந்த தென்னாமோ வெனின், என்னாம்;

வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' (தொல். செய். 29) என்றானாகலின்.[2]

ஒழிந்தமூவெழுத்துச் சீரும், நாலெழுத்துச் சீரும், ஐயெழுத்துச் சீரும் அவ்வாறே உறழ்ந்துகொள்க. (ருO)

---

முன் பக்கத் தொடர்ச்சி

கணவிரி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, மாவருவாய், புலி செல்வாய், நாணுவளை, உரறுபுலி என நாலெழுத்துச்சீர் ஒன்பதும் 15, 16, 17, 18, 19 வரை ஒரோவொன்று ஐந்தடியுறழ 45 அடிகள்.

வலியுருமு, புலிவருவாய், விரவுக்கொடி என்னும் ஐந்தெழுத்துச்சீர் மூன்றும் 16 முதல் இருபதெழுத்துக்கள் வரை ஐந்தடியுறழ 15 அடிகள்.

இவ்வாற்றாற் கலிப்பாவின் கட்டளைக்கலியடி 120.

1. நிரையீற்றியற்சீரும் நிரையீற்றாசிரியவுரிச்சீரும் நிற்ப நிரைமுதல் வெண்சீர்வந்து நிரையொன்றியக்காலும் கலித்தளையாம் என்பது ஆசிரியர் கருத்தாகலின் 'ஞாயிறு புலிவருவாய்' என்புழிக் கலித்தளை தளைத்ததே எனக் கொள்ளுதல் வேண்டும் என்பதாம்.

2. ஒரு கலியடியுள் வெண்சீர்பல தொடர்ந்த நிலையில் ஈற்றுநின்ற சீரின் முதல் நின்ற நேரசை மற்றை நிரைமுதல் வெண்சீர்வந்து முன்னையவிரண்டும் கலித்தளையாம் என்பது, 'வெண்சீரிற்றசைநிரையசையியற்றே' என்னுஞ் சூத்திரத்தாற் கூறப்பட்டமையின் கலியடியின் முதற்பகுதியின்கண் புலிசெல்வாய் மாசெல்வாய், என்புழி வந்தது வெண்டளையன்றெனவும் அங்குவந்தது கலித்-தளையே எனவும் கொள்க எனவே 'காய்முன்நிரை வரிற் கலித்தளையாமே' எனப் பிற்கால யாப்பிலக்கண நூலார் பருமை நிலையிற் கூறுந் தளையிலக்கணம் பாவின் ஓசையைச் செவிகருவியாக உணரும் நுண்மை நிலைக்கு ஒவ்வாது என்பது பேராசிரியர் கருத்தாதலறிக.

**நச்சினார்க்கினியம் :**

மேல் நாற்சீரடியினை ஐவகையாகக்கூறி இதனானே அறுநூற்றிருபத்தைந்தாகுமென அவற்றின் விகற்பமுங் கூறினார்.

(இ-ள்) ஐவகை... .. காலை எ-து மேற்கூறிய ஐவகையடியும் விரிக்குமிடத்து. மெய்......நிலத்த எ-து பொருள்வகையமைந்த பதினேழ் நிலத்தவாய். எழுபது......வாகி எ-து எழுபதுவகைக் குற்றம் நீங்கி. அறு ... மே எ-து அறுநூற்றிருபத்தைந்தாம் எ-று.

எனவே, பதினேழ்நிலத்தேறினும் எழுபதுவகைக்குற்றம் விரவினும் அறுநூற்றிருபத்தைந்து என்ற கட்டளை யாகா-வாயிற்று. அகவற்கு இயற்சீர் பத்தொன்பதும் உரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் ஆக இருபத்தேழும், வெள்ளைக்கு இயற்சீர் பத்தொன்பதும் வெண்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் ஆக இருபத்தேழும், கலிக்கு நேரீற்றியற்சீர் மூன்றொழிந்த இயற்சீர் பதினாறும் உரிச்சீர் நான்கும் வெண்சீர் நான்கும் ஆக இருபத்து நான்கும், ஆக எழுபத்தெட்டுச் சீர்களுள் அகவற்கும் வெள்ளைக்கும் அசைச்சீர் எட்டும் இயற்சீர்ப்பாற்படுத்துத் தளைகோடலின் அவற்றை இயற்சீர்க்கண் அடக்க எழுபதாம்.[1] சீர்கள் ஒன்று ஒன்றனோடு தட்குங்கால் அவை பொருளானன்றி[2] ஓசையைக் கடக்குமாறின்மையின்[3] அவ்வோசைகெடாது வருதற்கு எழுபதுதளை வழுவின்றிவரல் வேண்டும் என்பார் 'எழுபது வகையின் வழுவில' என்றார். இவ்வண்ணந் தளைகொண்டா-ரேனுந் தளைக்குக் கழித்த அசைச்சீரெட்டும் சீராய்நின்று அடி-யுறழுமெனவுணர்க.[4] அகவற்கு ஆசிரியத்தளையும், வெள்ளைக்கு

1. இவ்வுரைப்பகுதி பேராசிரியர் உரையைத் தழுவியமைந்தது.

2. அவைபொருளானன்றி - அவ்வெழுபதுவகையானன்றி,

3. 'ஓசையைத்தட்குமாறின்மையின்' என்றிருத்தல் வேண்டும். ''அங்ஙனங் கொள்ளப்பட்ட சீர்கள் ஒன்றொன்றனோடு தட்குங்கால் அவ்வெழுபது வகையானுமன்றித் தட்குமாறில்லை. அதுநோக்கி 'எழுபது வகையின் வழூஉவிலவாகி' என்றான் என்பது'' எனவரும் பேராசிரியர் உரைப்-பகுதி இங்கு ஒப்புநோக்கத்தகுவதாகும். தட்குதல் - பாவின் ஓசை பொருந்தத் தளைத்தல்.

4. 'தளை' என்றது கட்டளையடியினை. கட்டளையடிக்கண் அகவற்கும் வெண்பாவிற்கும் எண்ணப்படா எனக்கழித்த அசைச்சீர்கள் எட்டும் இயற்சீர்போல நின்று அடியுறழும் என்பதாம்.

இயற்சீர்வெண்டளையும், இயற்சீரொடுதட்ட வெண்சீர்-வெண்டளையும், துள்ளற்குக் கலித்தளையும் ஆக அறுநூற்-றிருபத்தைந்து தளையும் மூன்று பாவிற்கும் பகுக்குங்கால் அகவற்கு முந்நூற்றிருபத்து நான்கும், வெள்ளைக்கு நூற்-றெண்பத்தொன்றும், கலிக்கு நூற்றிருபதுமாம்.

'மெய்வகை யமைந்த' என்றதனான் நான்கு சீரினும் உறழ்கின்ற சீரினை அடிமுதற்கண்ணே வெளிப்படவைத்து அவ்வச்சீரி னடியாக்கிப் பெயருங் கொடுத்து அகவற்கு ஒரோ-வொன்று பன்னீரடியாகவும்[1] ஒழிந்த இரண்டற்கும் பிறவாறாக-வும் உறழப்படும்.

இனி அகவற்கு உறழுமாறு :-

''இயற்சீ ருரிச்சீ ரசைச்சீர் கூடி
யிரண்டு தலையிட்ட வையைந்து சீரா[2]
யகவற் கொரோவொன் றுறழு மடித்தொகை
யீரா றென்ப வியல்புணர்ந் தோரே''

''அகவற் குரியசீ ரிருபத் தேழனுள்
நுந்தையும் வண்டும் முதல்வரு மடிக்க
ணந்நான் கெழுத்து முதலாய்க் கொண்டு
பதினைந் தளவு மேறிப் பெறுந்தொகை
யீரா றீரா றாகுமென்ப''

1. அகவற்பாவில் வரும் நாற்சீரடியில் அமைதற்குரிய நான்கு சீர்களுள் முதல்நிற்கும் சீரால் அவ்வடிக்குப் பெயர் தந்து, அம்முதற்சீருடன் இரண்டாஞ்சீர் மூன்றாஞ்சீர் நான்காஞ்சீர்களைப் புணர்த்து அடியமைக்-கும் நிலையில் ஒற்றும் குற்றுகரமும் ஆய்தமும் நீங்கலாக அவ்வடியில் மொத்த எழுத்துக்கள் நான்கு முதல் பதினைந்து வரையமைய முதற்சீர் ஒவ்வொன்றும் பன்னிரண்டடிகளாகப் பெருக்கப்பெறும்.

2. இரண்டுதலையிட்ட ஐயைந்துசீர்-இரண்டினைக்கூட்டிய இருபத்தைந்து-சீர்; எனவே இருபத்தெழு சீர்கள் என்பதாம். அவையாவன : (1) நுந்தை, (2) வண்டு (ஓரெழுத்துத்தேமா), (3) தேமா, (4) மின்னு, (5) வரகு, (ஈரெழுத்துத் தேமா), (6) ஞாயிறு, (7) போதுபூ (8) போரேறு, (9) புளிமா, (10) அரவு, (11) பாதிரி, (12) வலியது, (13) மேவுசீர், (14) நன்னாணு, (15) பூமருது (16) கடியாறு, (17) விறகுதீ, (18) நீடுகொடி, (19) கணவிரி, (20) உரறுபுலி, [21] காருருமு, [22] பெருநாணு, [23] உருமுத்தீ, [24] மழகளிறு, [25] நாணுத்தளை, [26] விரவுகொடி, [27] நரையுருமு என்பன. இவ்வாய்பாடுகள் இவ்வுரையில் மேற்கோளாக ஆளப் பெறும் உரைச் சூத்திரங்களில் இடம்பெற்றுள்ளமை காணலாம்.

உ-ம். நுந்தை வண்டு வண்டு வண்டு எனவும், நுந்தை காருருமு நளிமுழவு நளிமுழவு எனவும் ஓரெழுத்துத் தேமாவடி நான்குமுதற் பன்னிரண்டளவும் உயர்வனவற்றிற்கு முதலடியும் முடிவிலடியுங் காட்டினாம். இதற்கு மேல் வருவனவற்றிற்கும் இடைநின்றனவற்றையு மிவ்வாறே சீர்தளைப்பெய்து ஒட்டிக் கொள்க. வண்டு வண்டு வண்டு வண்டு எனவும் வண்டு காருருமு நளிமுழவு நளிமுழவு எனவும் வண்டு என்னும் ஓரெழுத்துச் சீரடி பன்னிரண்டற்கும் முதலும் முடிவுங்காட்டினாம்.

"தேமா மின்னு வரகுமுதல் வருமடி
யைந்துமுத லீரெட் டளவு முயர்ந்து
வந்த தொகைமூ வொருபத் தாறே"

தேமா வண்டு வண்டு வண்டு எனவும், தேமா காருருமு நளிமுழவு நளிமுழவு எனவும் தேமாஅடி பன்னிரண்டற்கும் முதலும் முடிவும் காட்டினாம்; மின்னு வரகு என்னும் இரண்டற்கும் இஃதொக்கும்.

"ஞாயிறு போதுபூப் போரேறு புளிமா
அரவு முதலா வந்தவைந் தடியு
மாறு தொட்டுப் பதினே ழளவு
முயர்ந்த தொகையா றொருபஃ தாகும்"

ஞாயிறு வரகு வண்டு வண்டு எனவும் ஞாயிறு நளிமுழவு நளிமுழவு நளிமுழவு எனவும், ஞாயிற்றடி பன்னிரண்டற்கும் முதலும் முடிவுங்காட்டினாம். போதுபூ போரேறு என்னும் இரண்டற்கும் ஈதொக்கும். புளிமா வண்டு வண்டு வண்டு எனவும் புளிமாக் காருருமு நளிமுழவு எனவும் ஒட்டுக. அரவுக்கும் இவ்வாறே ஒட்டுக என்றைந்தடிக்கும் முதலும் முடிவுங் காண்க.

"பாதிரி வலியது மேவுசீர் நன்னாணுப்
பூமருது கடியாறு விறகுதீ நீலிகொடி
யாதி யாகிய வடிக டாமே
யேழுமுதன் மூவா றளவு முயர்ந்த
தொகையாறு முடிவிட்ட தொண்ணூ றாகும்"

பாதிரி வரகு வண்டு வண்டு எனவும் பாதிரி நளிமுழவு நளிமுழவு நளிமுழவு எனவும் பாதிரியடி பன்னிரண்டற்கும் முதலுங் முடிவுங்காட்டினாம். ஒழிந்த ஏழற்கும் இவ்வாறே பொட்டிக்காண்க.

"கணவிரி யுரறுபுலி காருருமு பெருநாணு
உருமுத்தீ மழகளிறு நாணுத்தளை முதலா
வந்த வடிக ளிருநான்கு தொட்டுப்
பத்தொன் பானள வும்முயர்ந்த தொகை
நான்குமுடி விட்ட வெண்ணொரு பஃதாம்" ௮௪

கணவிரி வரகு வண்டு வண்டு எனவும் கணவிரி நரையுருமு நரையுருமு நரையுருமு எனவும் கணவிரியடி பன்னிரண்டற்கும் முதலும் முடிவுங்காட்டினாம். ஒழிந்தவற்றிற்கும் இவ்வாறே யொட்டிக்கொள்க.

"விரவுகொடி நரையுருமு முதல்வரு மடிக
ளொன்று தலையிட்ட விருநான்கு தொட்டே
யைந்நான் களவு முயர்ந்த தொகைதா
மூவெட் டாக மொழிந்தனர் புலவர்" உ௪

விரவுகொடி வரகு வண்டு வண்டு எனவும், விரவுகொடி நளிமுழவு நளிமுழவு நளிமுழவு எனவும் விரவுகொடியடி பன்னிரண்டற்கும் முதலும் முடிவுங் காட்டினாம். ஒழிந்ததற்கும் இவ்வாறே யொட்டிக்காண்க.

"அகவற் குறழ்ந்த வடித்தொகை கூறின்
நான்குதலை யிட்ட நாலைந் தனோடு
மூவொரு நூறா மொழிந்தனர் புலவர்"
ஆக அடி முந்நூற்றிருபத்து நான்கு;[1] ௩௨௪

இனி வெள்ளைக்கு உறழுங்கால் ஏழும் எட்டும் ஒன்பதும் பத்தும் ஆகிய எழுத்தானாய வடிகள் முதலா வந்தவை பதினான்கெழுத்தளவும் உயருங்கால் ஓர் சீர் எட்டடியும் ஏழடியும் ஆறடியும் ஐந்தடியும் பெற்று நூற்றெண்பத்தொன்றாம்.

"இயற்சீ ரசைச்சீர் வெண்சீர் கூடி
யிரண்டு தலையிட்ட வையைந்து சீராய்
வெள்ளை யுறழு மாறு கூறி
னெட்டு மேழு மாறு மைந்துமென்
றொட்டு மடிகளைப் பெறுமவை தாமே"

1. மேற்குறித்த இருபத்தேழு சீர்களுள் ஒன்று முதற்சீராய் நின்று பின்வரும் மூன்று சீர்களோடும் புணர்ந்து அடியாகுங்கால் ஒவ்வொன்றும் பன்னிரண்டடிகளைப் பெறுதலின் $27 \times 12 = 324$ அகவல் அடிகளாயின.

"வெள்ளைக் குரியசீ ரிருபத் தேழனுள்
நுந்தை வண்டு ஞாயிறு போதுபூப்
போரேறு முதலா வந்த வடிக
ளேழு தொட்டே யீரே ழளவு
முயர்ந்த தொகைநா லொருபஃ தாகும்"[1] ௪0

உ-ம். நுந்தை நளிமுழவு வரகு வரகு எனவும், நுந்தை மழகளிறு காருருமு காருருமு எனவும் நுந்தையடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். வண்டிற்கும் இஃதொக்கும். ஞாயிறு வண்டு வரகு வரகு எனவும், ஞாயிறு காருருமு மாவருவாய் காருருமு எனவும் ஞாயிற்றடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். போதுபூ, போரேறு என்னும் இரண்டற்கும் இஃதொக்கும்.

"தேமா மின்னு வரகு வலியது
பாதிரி மேவுசீர் நன்னாணுப் பூமருது
கடியாறு விறகுதீ மாசெல் வாய்முதல்
வந்த வடிக ளிருநான்கு தொட்டே
யீரே ழளவு முயர்ந்து பெறுந்தொகை
யேழுமுடி விட்டவே ழொருபஃ தாகும்"[2] எஎ

தேமா வரகு வரகு வரகு எனவும் தேமா நளிமுழவு காருருமு பாதிரி எனவும் தேமாவடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். மின்னு வரகு என்னுமிரண்டற்கும் இஃதொக்கும் வலியது வண்டு வரகு வரகு எனவும், வலியது காருருமு காருருமு பாதிரி எனவும் ஒட்டுக. ஒழிந்தவற்றையும் இவ்வாறேயொட்டுக.

"கணவிரி பெருவேணுக் காருருமு புலிசெல்வாய்
மழகளி றுருமுத்தீ மாவரு வாய்புளிமா
வரவுத் தீமுத லாக வந்த

---

1. வெண்பாவிற்பயிலும் இருபத்தேழுசீர்களுள் நுந்தை, வண்டு, ஞாயிறு, போதுபூ, போரேறு என்னும் ஐந்தும் முதற்சீராய் நின்று பின்வரும் சீர்களோடு புணர்ந்து அடியாகுமிடத்து ஏழெழுத்து முதல் பதினான்கெழுத்துவரை ஒவ்வொன்றும் எட்டடிகளைப்பெறுதலின் $5 \times 8 = 40$ அடிகளாகும்.

2. தேமா, மின்னு, வரகு, வலியது, பாதிரி, மேவுசீர், நன்னாணு, பூமருது, கடியாறு, விறகுதீ, மாசெல்வாய் எனவரும் பதினொன்றும் முதற்சீராய் நின்று பின்வரும் சீர்களோடு புணர்ந்து அடியாகுமிடத்து எட்டெழுத்து-முதல் பதினான்கெழுத்து வரையுயர்ந்து ஒவ்வொன்றும் ஏழடிகளைப் பெறுதலின் $11 \times 7 = 77$ அடிகளாகும்.

வடிக ளொன்பது மீரே ழளவு
முயர்ந்து பெறுந்தொகை யுணரக் கூறின்
நான்குதலை யிட்ட வையொரு பஃதாம்''[1] ருச

கணவிரி வண்டு வரகு வரகு எனவும் கணவிரி காருருமு காருருமு தேமா எனவும் கணவிரியடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். காருருமு வண்டு வரகு வரகு எனவும் காருருமு காருருமு காருருமு ஞாயிறு எனவும் ஒட்டுக. புளிமா வரகு வரகு வரகு எனவும் புளிமா புலிவருவாய் காருருமு தேமா எனவும் ஒட்டுக. ஒழிந்தவற்றிற்கும் ஏற்குமாறறிந் தொட்டுக.

"நரையுருமு புலிவருவாய் முதலா மடிக
வீரைந்து தொட்டே யீரே ழளவு
முயர்ந்து பெறுந்தொகை யீரைந் தாகும்''[2] ய

நரையுருமு வண்டு வரகு வரகு எனவும் நரையுருமு காருருமு பாதிரி தேமா எனவும் நரையுருமு அடிக்கு முதலும் முடிவுங் காட்டினாம். புலி வருவாங்க்கும் இஃதொக்கும். பதினான்கெழுத்-தினேறியக்காற் செப்பலோசை திரிபுடைய கட்டளைக்கென்பது இசையொடுசேர்த்தியுணர்க.

"வெள்ளைக் குறழ்ந்த வடித்தொகை கூறி
னொன்று முடிவிட்டவெண் ணொருபது நூறாம்''[3]
எஅக

1. கணவிரி, பெருவேணு, காருருமு, புலிசெல்வாய், மழகளிறு, உருமுத்தீ, மாவருவாய், புளிமா, வரகுத்தீ - எனவரும் ஒன்பதும் முதற்சீராய் நின்று பின்வரும் சீர்களோடு புணர்ந்து அடியாகுமிடத்து ஒன்பதெழுத்து முதல் பதினான்கெழுத்து வரையுயர்ந்து ஒவ்வொன்றும் ஆறடிகளைப் பெறுதலின் $9 \times 6 = 54$ அடிகளாகும். நான்கு தலையிட்ட ஐயொருபது - ஐம்பத்துநான்கு.

2. நரையுருமு, புலிவருவாய் - என்னும் இரண்டும் முதற்சீராய் நின்று பின்வரும் சீர்களோடு புணர்ந்து அடியாகுமிடத்துப் பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்துவரை யுயர்ந்து ஒவ்வொன்றும் ஐந்தடிகளைப் பெறுதலின் $2 \times 5 = 10$ அடிகளாகும்.

3. ஒன்று முடிவுஇட்ட எண்ணொருபது நூறு - என்றது நூற்றெண்பத்தொன்று என்னுந்தொகையினை. 'எண்ணொருபது' என்பது எண்பது என்னும் பொருளில் ஆளப்பெற்றது. எண்பதும் நூறும் என எண்ணும்மை விரித்துக் கொள்க. எனவே வெண்பாவுக்குரிய கட்டளையடி 181 என்பது புலனாம்.

இனிக் கலிக்கு உறழுமாறு :-

"நேரீ றொழிந்த வியற்சீ ரெட்டும்
வெண்சீ ரிருசீர் தம்மொடு கூட்டி
நான்குதலை யிட்ட நாலைந் தாதி[1]
யொரோ வொன்றைந்தடி யுறழப் பெறுமே"

"கலிக்குற ழுஞ்சீ ரிருபத்து நான்கனுண்
ஞாயிறு போதுபூப் போரேறு முதலா
வந்த வடிகள் பதின்மூன்று தொட்டே
யொன்றுதலை யிட்ட வீரெட் டளவு
முயர்ந்து பெறுந்தொகை மூவைந் தாகும்"[2] ௰௫

ஞாயிறு புலிசெல்வாய் புலிசெல்வாய் மாசெல்வாய் எனவும் ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசெல்வாய் எனவும் ஞாயிற்றடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். ஒழிந்தவற்றிற்கும் இஃதொக்கும். இவற்றிற்கு முதலே ஆசிரியத்தளையும் ஈற்றிலே வெண்சீர் வெண்டளையுந் தட்குமாலெனின்,

'நிரைமுதல் வெண்சீர்' (செய் - ௬௰)

என்னுஞ் சூத்திரத்தானும்

'வெண்சீ ரீற்றசை' (செய் - உ௬௰)

என்னுஞ் சூத்திரத்தானும் அவை கலித்தளையாமாறு காண்க.

'பாதிரி வலியது மேவுசீர் நன்னாணுப்
பூமருது கடியாறு விறகுதீ மாசெல்வாய்
நீடுகொடி முதலா வந்த வடிக
ளீரேழ் தொட்டே மூவா றளவும்

1. கலிக்கு உறழுஞ்சீர்கள் 24. அவையாவன : ஞாயிறு, போதுபூ போரேறு, பாதிரி, வலியது, மேவுசீர், நன்னாணு, பூமருது, கடியாறு விறகுதீ, மாசெல்வாய், நீடுகொடி, கணவிரி. உரறுபுலி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, நாணுத்தளை, புலிசெல்வாய், மாவருவாய், விரவுகொடி, நரையுருமு, புலிவருவாய் - என்பன.

2. ஞாயிறு, போதுபூ, போரேறு - என்னும் மூன்றும் முதற்சீராய் நின்று பின்வருஞ் சீர்களோடு புணர்ந்து கலியடியாகுமிடத்துப் பதின்மூன்-றெழுத்து முதல் பதினேழெழுத்துவரை உயர்ந்து ஒவ்வொன்றும் ஐந்தடிகளைப் பெறுதலின் $3 \times 5 = 15$ அடிகளாகும்.

இனிக் கலிக்கு உறழுமாறு :-

"நேரீ றொழிந்த வியற்சீ ரெட்டும்
வெண்சீ ரிருசீர் தம்மொடு கூட்டி
நான்குதலை யிட்ட நாலைந் தாதி[1]
யொரோ வொன்றைந்தடி யுறழப் பெறுமே"

"கலிக்குற ழுஞ்சீ ரிருபத்து நான்கனுண்
ஞாயிறு போதுபூப் போரேறு முதலா
வந்த வடிகள் பதின்மூன்று தொட்டே
யொன்றுதலை யிட்ட வீரெட் டளவு
முயர்ந்து பெறுந்தொகை மூவைந் தாகும்"[2] ௰௫

ஞாயிறு புலிசெல்வாய் புலிசெல்வாய் மாசெல்வாய் எனவும் ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசெல்வாய் எனவும் ஞாயிற்றடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். ஒழிந்தவற்றிற்கும் இஃதொக்கும். இவற்றிற்கு முதலே ஆசிரியத்தளையும் ஈற்றிலே வெண்சீர் வெண்டளையுந் தட்குமாலெனின்,

'நிரைமுதல் வெண்சீர்' (செய் - ௬௯)

என்னுஞ் சூத்திரத்தானும்

'வெண்சீ ரீற்றசை' (செய் - உ௯)

என்னுஞ் சூத்திரத்தானும் அவை கலித்தளையாமாறு காண்க.

'பாதிரி வலியது மேவுசீர் நன்னாணுப்
பூமருது கடியாறு விறகுதீ மாசெல்வாய்
நீடுகொடி முதலா வந்த வடிக
ளீரேழ் தொட்டே மூவா றளவும்

1. கலிக்கு உறழுஞ்சீர்கள் 24. அவையாவன : ஞாயிறு, போதுபூ போரேறு, பாதிரி, வலியது, மேவுசீர், நன்னாணு, பூமருது, கடியாறு விறகுதீ, மாசெல்வாய், நீடுகொடி, கணவிரி, உரறுபுலி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, நாணுத்தளை, புலிசெல்வாய், மாவருவாய், விரவுகொடி, நரையுருமு, புலிவருவாய் - என்பன.

2. ஞாயிறு, போதுபூ, போரேறு - என்னும் மூன்றும் முதற்சீராய் நின்று பின்வருஞ் சீர்களோடு புணர்ந்து கலியடியாகுமிடத்துப் பதின்மூன்-றெழுத்து முதல் பதினேழெழுத்துவரை உயர்ந்து ஒவ்வொன்றும் ஐந்தடிகளைப் பெறுதலின் $3 \times 5 = 15$ அடிகளாகும்.

வந்து பெறுந்தொகை யுரைப்பி னதுவென
வைந்துமுடி விட்டநா லொருபஃ தாகும்''[1] சரு

பாதிரி புலிசெல்வாய் புலிசெல்வாய் மாசெல்வாய் எனவும் பாதிரி புலிவருவாய் புலிவருவாய் மாவருவாய் எனவும் பாதிரி யடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். ஒழிந்தவற்றிக்கும் இஃதொக்கும்.

"கணவிரி யுரறுபுலி காருருமு பெருநா
ணுருமுத்தீ மழகளிறு நாணுத்தளை புலிசெல்வாய்
மாவருவாய் முதலா வந்த வடிகள்
மூவைந்து தொட்டுப் பத்தொன்பா னளவு
முயர்ந்து பெறுந்தொகை முன்ன ரஃதே''[2] சரு

கணவிரி புலிசெல்வாய் புலிசெல்வாய் மாசெல்வாய் எனவும், கணவிரி புலிவருவாய் புலிவருவாய் மாவருவாய் எனவும் கணவிரியடிக்கு முதலும் முடிவுங்காட்டினாம். ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும்.

''விரவுகொடி நரையுருமு புலிவருவாய் முதலா
வந்த வடிக ளீரெட்டுத் தொட்டே
யைந்நான் களவு முயர்ந்து பெறுந்தொகை
மூவைந் தாக மொழிந்தனர் புலவர்''[3] யரு

1. பாதிரி, வலியது, மேவுசீர், நன்னாணு, பூமருது, கடியாறு, விறகுதீ மாசெல்வாய், நீடுகொடி - என்னும் ஒன்பதும் முதற் சீராய் நின்று பின்வருஞ் சீர்களோடு புணர்ந்து கலியடியாகுமிடத்து பதினான்கெழுத்து முதல் பதினெட்டெழுத்து வரை உயர்ந்து ஒவ்வொன்றும் ஐந்தடிகளைப் பெறுதலின் $9 \times 5 = 45$ அடிகளாம். ஐந்து முடிவு இட்ட நாலொருபது-நாற்பத்தைந்து.

2. கணவிரி, உரறுபுலி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, நாணுத்தளை, புலிசெல்வாய், மாவருவாய்-என்னும் ஒன்பதும் முதற் சீராய் நின்று பின்வரும் சீர்களோடு புணருங்கால் பதினைந்தெழுத்து முதல் பத்தொன்பதெழுத்து வரை உயர்ந்து ஒவ்வொன்றும் ஐந்தடிகளைப் பெறுதலின் $9 \times 5 = 45$ அடிகளாம். 'முன்னரஃது' என்றது முற்சூத்திரத்திற் குறித்த 'ஐந்து முடிவிட்ட நாலொரு பஃது' என்னுந் தொகையினை.

3. விரவுகொடி, நரையுருமு, புலிவருவாய் - என்னும் மூன்றும் பதினாறெழுத்து முதல் இருபதெழுத்து வரை உயர்ந்து ஒவ்வொன்றும் ஐந்தடிகளைப் பெறுதலின் $3 \times 5 = 15$ அடிகளாகும்.

விரவுகொடி புலிசெல்வாய் புலிசெல்வாய் மாசெல்வாய் எனவும் விரவுகொடி புலிவருவாய் புலிவருவாய் புலிவருவாய் எனவும் விரவுகொடியடிக்கு முதலும் முடிவுங் காட்டினாம். ஒழிந்தனவற்றுற்கும் இஃதொக்கும்.

"கலிக்குரித் தாக வுறழ்ந்த வடித்தொகை
யீரைம் பதனொடு நாலைந் தாகும்"[1]

"மூவகைப் பாவிற்கு முறழ்ந்த தொகை
யறுநூற் றிருபத் தைந்தா கும்மே"

ஆக அடி ௬உ௫ இவற்றுள் அகவற்கு நாற்பத்தொன்றும் வெள்ளைக்குப் பதினெட்டும் ஆக ஐம்பத்தொன்பதடிக்குத் தளைவழுப்படுதலின்[2] அவை களைந்து தொடைகொள்ளுமாறு 'மெய்பெறு மரபின்' (செய்-௧0௧) என்னுஞ் சூத்திரத்துட் காட்டுதும்.

---

1. முற்கூறிய வண்ணம் கலிப்பாவிற்குரிய அடிகள் நூற்றிருபதாகும். ஈரைம்பது - நூறு. நாலைந்து - இருபது. ஈரைம்பதனொடு நாலைந்து- நூற்றிருபது.

2. கட்டளையடி அறுநூற்றிருபத்தைந்தும் தொடை கொள்ளுங்கால் ஐம்பத்தொன்பது வழுவுள. அவையாவன :

நுந்தை, வண்டு, தேமா, மின்னு, ஞாயிறு, போதுபூ, போரேறு, பாதிரி, மேவுசீர், நன்னாணு, பூமருது, நீடுகொடி, காருருமு, நாணுத்தளை - எனவரும் நேர்முதலிய இவை பதினான்கும் அடிமுதற்சீராய் அடிமோனைத் தொடையாய் வரும் ஈரடிக் கூட்டத்தில் அகவலுக்கு எழுத்துப் பெருகிய நிலத்தில் இவ்விரண்டடி தளை வழுப்படும்.

வரகு, புளிமா, அரவு, வலியது, கடியாறு, விறகுதீ, கணவிரி, உரறுபுலி, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, விரவுகொடி, நரையுருமு- எனவரும் நிரை முதலிய இவை பதின்மூன்றும் எழுத்துச் சுருங்கிய நிலத்தில் ஒவ்வோரடி தளைவழுப்படும். ஆக அகவற்கு நாற்பத்தொரு தளைவழுவாயின.

இனி வெண்பாவுக்கு முற்கூறிய சீர்களுள் ஆசிரியவுரிச்சீர் நான்கும் நீக்கி வெண்பாவுரிச்சீர் நான்கும் கூட்ட இருபத்தேழு சீர்களாகும். இவற்றுள் நேர் முதலிய பதினான்கு சீரும் அடி முதற்சீராய்த் தொடையாய் வரும் ஈரடிக் கூட்டத்தில் எழுத்துச் சுருங்கிய நிலத்தில் ஒவ்வொன்று தளை வழுப்படும். நிரை முதலாய சீர்களில் வரகு, கடியாறு, விறகுதீ, வலியது - என்னும் நான்கும் எழுத்துப் பெருகிய நிலத்தில் ஒவ்வொன்று தளை வழுப்படும். ஆக வெண்பாவுக்குத் தளைவழுப் பதினெட்டாயிற்று. ஆகத்தளைவழு ஐம்பத்தொன்பதாயிற்று என்பது நச்சினார்க்கினியர் தரும் விளக்கமாகும். (செய்யுளியல்- ௧0௧. ஆம் சூத்திரவுரை நோக்குக).

**ஆய்வுரை :**

இது, மேல் எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட கட்டளை யடிகளாய ஐந்தடிகளையும் உறழ்ந்து இத்துணையவாம் என அவற்றின் விரியாகிய தொகை கூறுகின்றது.

(இ-ள்) நாற்சீரடியை எழுத்தளவுபற்றி வகுக்கப்பட்ட குறளடி முதலாகிய ஐவகையடிகளையும் விரித்துணர்த்துங் காலத்து (அவ்வடிகள்) அசையும் சீரும் தோற்றுதற்கு இடமாயமைந்த நாலெழுத்து முதல் இருபதெழுத்தீறாகச் சொல்லப்பட்ட பதினேழ் நிலத்தின்கண்ணும் எழுபது வகைப் பட்ட உறழ்ச்சியின் (பெருக்குதலில்) வழுவுதலின்றி அறுநூற்றிருபத்தைந்தாகும் எ-று

இங்கு 'எழுபதுவகை' என்பது, இரண்டு சீர் தம்முட் புணர்ச்சியை என்பர் இளம்பூரணர். அவற்றின் விரிவை முன்னுள்ள இளம்பூரணருரையிலும் அதன் அடிக்குறிப்பிலும் காண்க.

அங்ஙனம் உறழுங்கால் ஓரசைச்சீர் இயற்சீர்ப்பாற்படும். ஆசிரிய வுரிச்சீரும் இயற்சீரே போலக் கொள்ளப்படும். மூவசைச் சீருள் வெண்பாவுரிச்சீர் ஒழிந்தனவெல்லாம் வஞ்சியுரிச்சீராம். அவ்வழி இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு நேராய் ஒன்றுவது நேரொன்றாசிரியத்தளை; நிரையாய் ஒன்றுவது நிரையொன்றாசிரியத்தளை; மாமுன் நிரையும் விளமுன் நேருமாக மாறுபட்டுத் தளைப்பது இயற்சீர் வெண்டளையாம். வெண்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது வெண்சீர் வெண்டளை; நிரைவரிற் கலித்தளையாம். வஞ்சியுரிச்சீர்நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது ஒன்றிய வஞ்சித்தளை; ஒன்றாதது ஒன்றா வஞ்சித்தளையாகும். இவ்வகையில் தளை ஏழாயின.

அசைச்சீர், இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்சீர், வஞ்சியுரிச் சீர் என்னும் ஐந்தினையும் நிறுத்தி இவ்வைந்து சீரும் வருஞ்சீராக உறழும்வழி இருபத்தைந்து விகற்பமாகும். அவ்விருபத்தைந்தின் முன்னும் மூன்றாவது ஐந்து சீரையும் வருவித்து உறழ நூற்றிருபத்தைந்து விகற்பமாகும். அந் நூற்றிருபத்தைந்தின் முன்னும் நான்காவது ஐந்துசீரையும் உறழ நாற்சீரடி அறுநூற்றிருபத்தைந்தாகும் என்பர் இளம்பூரணர்.

இனி, 'எழுபதுவகையின் வழூவிலவாகிவரும் அடிகள் அறுநூற்றிருபத்தைந்து என்னும் தொகைக்குப் பேராசிரியர் பின்வருமாறு' வகைகூறி விளக்குவர் :-

ஆசிரியத்துள் இயற்சீர் 19, ஆசிரியவுரிச்சீர் 4, அசைச்சீர் 4, என இருபத்தேழாகி வரும். வெண்பாவில் ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒழித்து ஒழிந்த சீர் இருபத்துமூன்றும் வெண்சீர் நான்கினொடுஞ் சேர அவையும் அவ்வாறே இருபத்தேழாக வரும். கலிப்பாவிற்கு நேரீற்றியற்சீர் மூன்றொழித்து ஒழிந்த இயற்சீர் பதினாறும் ஆசிரியவுரிச்சீர் நான்கும் வெண்சீர் நான்கும் என இருபத்து நான்காம். இவை மூன்று பகுதியும் தொகுப்ப எழுபத்தெட்டாயின. அவற்றுள் ஆசிரியத்துள் வந்த அசைச்சீர் நான்கினையும் வெண்பாவினுள் வந்த அசைச்சீர் நான்கினையும் இயற்சீர்ப்பாற் படுத்து அடக்குக என்று ஆண்டுக் கூறினமையின், ஈண்டு அவற்றை இயற்சீர்ப்பாற்படுத்து அடக்கின் எழுபதாகக் கொள்ளப்படும். அங்ஙனம் கொள்ளப்பட்ட சீர் ஒன்று ஒன்றனோடு தளைக்குங்கால் அவ்வெழுபது வகையானன்றித் தளைக்குமாறில்லை. அதுநோக்கி 'எழுபது வகையின் வழூவில வாகி' என்றார். அங்ஙனம் தளை சிதையா அடி ஆசிரியஅடி 324, வெண்பாவடி 181, கலியடி 121 என அறுநூற்றிருபத்தைந்தாகும். இவற்றின் விரிவெல்லாம் பேராசிரியருரையிலும் அதன் அடிக்குறிப்பிலும் கண்டு தெளியத்தக்கனவாகும்.

இனி, இச்சூத்திரத்திலுள்ள "எழுபது வகையின் வழூவிலவாகி" என்ற தொடர்க்கு 'எழுபதுதளை வழூவின்நீங்கி' எனப் பொருள் கொண்டு, "எழுபது தளை வழூவாவன : ஆசிரியநிலம் பதினேழுள்ளும் வெண்டளை தட்பப் பதினேழும், கலித்தளை தட்பப் பதினேழுமாய் ஆசிரியப்பாவிற்கு முப்பத்து நான்கு தளை வழூவாம். வெள்ளை நிலம் பத்தினுள்ளும் ஆசிரியத்தளை தட்பப் பத்தும், கலித்தளை தட்பப் பத்துமாய் வெண்பாவிற்கு இருபது தளை வழூவாம். கலிநிலம் எட்டினுள்ளும் வெண்டளைதட்ப எட்டும் ஆசிரியத்தளை தட்ப எட்டுமாய்க் கலிப்பாவிற்குப் பதினாறுதளை வழூவாம்[1] இவையெல்லாந்தொகுப்ப "எழுபது தளை வழூவாம்" என்பர் யாப்பருங்கலவிருத்தியாசிரியர். 'அளவும் சிந்தும் வெள்ளைக் குரிய' (செய். 58) எனவரும் சிறப்பு விதியால் வெண்பாவிற்கு எட்டு நிலமே கூறப்படுதலின் அதற்கு மாறாக வெள்ளைநிலம் பத்தெனக்கொண்டு கூறும் இவ்வுரை பொருந்தாது என்பர் பேராசிரியர்.

தொல்காப்பியனார் காலத்தில் இவ்வாறு எழுத்தெண்ணி வகுக்கப்பெறும் கட்டளையடிகளும் எழுத்தெண்ணாது வகுக்கப்பெறும் சீர்வகையடிகளும் ஆகிய இருதிறமும் அமைய நல்லிசைப்புலவர்கள் செய்யுள் செய்தனர் எனவும் அவர்க்குப்பின் கடைச்சங்க காலத்திற் கட்டளையடிகளாற் செய்யுள் செய்யும் பழக்கம் அருகி மறையலாயிற்று எனவும் கருதவேண்டியுள்ளது. "இந்நூல் செய்த காலத்தில் தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாரும் கட்டளையடி பயின்றுவரச் செய்யுள் செய்தார் என்பது இச்சூத்திரங்களாற் பெறுதும். பின்பு கடைச்சங்கத்தார்க்கு அஃது அரிதாகலிற் சீர்வகையடி பயிலச் செய்யுள் செய்தார் என்றுணர்க" எனவரும் நச்சினார்க்கினியர் உரைப்பகுதி இங்கு நோக்கத்தகுவதாகும்.

**௪௬. ஆங்ஙனம் விரிப்பின் அளவிறந் தனவே**
**பாங்குற உணர்ந்தோர் பன்னுங் காலை**

**இளம்பூரணம் :**

என் - எனின். அடி விரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஈண்டுறழ்ந்த முறையானே அஞ்சடி முதலாக மேன்மேலும் உறழ வரம்பிலவாம் என்றவாறு.

அஃதாவது அறுநூற்றிருபத்தைந்தினோடும் ஐந்தாவது வரும் ஐஞ்சீரையும் உறழ மூவாயிரத்தொருநூற் றிருபத்தைந்து விகற்பமாம். அதன்கண் ஆறாவது இவ்வகை யைந்துசீரையும் உறழப் பதினையாயிரத்து அறுநூற்றிருபத்தைந்து விகற்பமாம். அதன்கண் ஏழாவது வரும்சீ ரைந்தினையும் உறழ எழுபத்தெண்ணாயிரத் தொருநூற்றிருபத்தைந்து விகற்பமாம். இவ்வகையினா னுறழ வரம்பிலவாய் விரியும். அன்றியும், இச்சொல்லப்பட்ட அடியினை அசையானும் எழுத்தானும் விரிக்க வரம்பிலவாம்.[1] (௪௬)

---

1. நாற்சீரடியாகிய அளவடிகளைப் பெருக்கிக்கண்டாற்போன்று அளவடியின் மிக்கு ஐஞ்சீரடிமுதலாகவரும் ஏனைய அடிகளையும் சீராலும் அசையாலும் பெருக்கிக் காணின் அவை வரம்பிலவாய் விரியும் என்பார் 'ஆங்ஙனம் விரிப்பின் அளவிறந் தனவே' என்றார்.

ஈண்டுப் பாங்குற உணர்தல் என்றது, அசையுஞ்சீரும் நோக்கி அடிகளைப் பகுதிப்படப் பெருக்கிக்காணுதல்.

**பேராசிரியம் :**

இஃது ஒழிந்த அடி இந்நாற்சீரடிபோல உறழ்கவென்றார்க்கு அவையுறழாவென உறழாமைக்குக் காரணம் கூறுகின்றது.

(இ-ள்) அந்நாற்சீரடிபோல் மற்றையடிகளையும் விரிப்பின், அஃது இலக்கணக் கட்டளையின் இகந்துபட்டதாம், அப்பகுதி யெல்லாம் அறிந்தோர் விரிக்குங்காலத்து (எ-று)

அளவிறந்தன, எண்ணிறந்தன. அஃது இலக்கணங்கூறு மாறன்றென்றவாறு. அஃதெற்றாற்பெறுதுமெனின் முதனூல் செய்த ஆசிரியன் **அகத்தியனார்** சொல்லுமாற்றாற் பெறுது மென்றவாறு [1]

எனவே என்சொல்லப்பட்டதாம்? அங்ஙனம் வரையாது சிறப்புடையனவற்றுக்குஞ் சிறப்பில்லனவற்றுக்கும் ஒருங்கு இலக்கணங் கூறின் அவையெல்லாம் எடுத்தோதப்பெறாத இலக் கணத்தவாம்; அதனால் வரையறையுடையனவற்றுக்கன்றி. வாளாதே பரந்துபட்டவகையான் இலக்கணங்கூறல் பயனில் கூற்றாமெனவும் அது கருதி இதன் முதனூல்செய்த ஆசிரியருங் கூறிற்றிலரெனவுங் கூறியவாறு.

வடநூலாசிரியர் ஆறுவகைப் பிரத்தியங்களான் எழுத்துக் களைக் குருவும் இலகுவுமென இருகூறு செய்து உறழ்ந்து பெருக் கிக் காட்டுவதோ ராறுமுண்டு.[2] அவரும் இருபத்தாறெழுத்தள வும் உறழ்ந்து காட்டி, ஒழிந்தன ஞெகிழ்ந்துபோவர்.[3] அவ்வாறே சீர்களையுங் குருவும் இலகுவும்போல இருசீரடி இத்துணை யெனப் பெருக்குமாறும் ஒழிந்தனவும் இவ்வாறே பெருக்கவுஞ் சிதைந்ததில்லை.[4] அங்ஙனம் பெருக்குமாறும் ஓரடிக்குரிய சீர் பத்தும் நூறும் ஆயிரமுமாக வைத்து உறழ்ந்தக்காலும் வருவ தொன்றில்லை.[5] அங்ஙனம் உறழினும்[6] இத்துணைச் சீரான் வந்த

1. அகத்தியனார் கூறிய சூத்திரம்.

2. ஆறுவகைப்பிரத்தியங்களாவன: பிரத்தாரம், நஷ்டம், உத்திஷ்டம், ஒன்று இரண்டு மூன்று லகுகுருச் செய்கை, எண், அலகிட்டு நிலவளவை.

3. ஞெகிழ்ந்து போதலாவது, அடிகளை இருபத்தாறெழுத்தளவும் பெருக்கிக் காட்டி அதற்குமேலும் காட்டின் எண்ணிறத்தல் கருதி மேலும் எழுத்தெண்ணி அடிவகுக்கும் தம்முயற்சியினை நெகிழவிடுதல்.

4. சிதைந்ததில்லை - கேடில்லை.

5. வருவதொன்றில்லை - வருவதொரு பயனுமில்லை.

6. உறழ்தல் - பெருக்குதல்.

அடிக்கே உறழ்ச்சி கூறுவதென்று ஓரெல்லை கூறிக்கொள்ளல் வேண்டும். கொள்ளவே, எத்துணையிடஞ் சென்றக்காலும், இத்துணையென வரையறைப்பாடு உடையனவல்ல அவ்வரையறை இன்மையின் அதனை அளவிலவென்பதற்கொரு காரணங் கூறல்வேண்டு மாதலான் அதுநோக்கி நாற்சீரடி சிறப்புடைத்தென வேறுபல காரணங்கூறி, அவற்றுக்கே வரையறைகூறி அல்லனவற்றுக்கட் சொல்லப்படாதென்றான் இச்சூத்திரத்தானென்பது.[1] அஃதேல் அவை சிறப்புடையவாயினமைக்குக் காரணங் கூறியவாற்றாற் சான்றோர் செய்யுளுட் பயின்றுவரல் வேண்டும் பிறவெனின், இந்நூல் செய்த காலத்துத் **தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாரும்** அவ்வாறு கட்டளையடியாற் பயின்றுவரச் செய்யுள் செய்தாரென்பது இச்சூத்திரங்களாற் பெறுதுமென்பது.[2] **இதன் முதனூல் செய்த ஆசிரியனாற் செய்யப்பட்ட யாழ்நூலுள்ளுஞ் சாதியும் உவமத்துருவுந் திருவிரியிசையுமெனக்** கூறப்பட்டவற்றுட் கட்டளைப்பாட்டுச் சிறப்புடையன சாதிப்

---

1. சீராலும் எழுத்தாலும் அடிகளைப் பெருக்கிக்காணுவோர் இத்துணைச் சீர்களால் இயன்ற அடிக்கே பெருக்குத் தொகை கூறுவதென்று ஓரெல்லை கூறிக் கொள்ளுதல் இன்றியமையாதது. இவ்வாறு கொள்ளவே எத்துணையளவு ஓரடிக்குரிய சீர்களை மிகுதியாக வைத்து அடிப்பெருக்கம் கூறத்தொடங்கினாலும் அவ்வடிகள் இன்னதொகையின என அடக்கும் வரையறையில்லாதனவாய் விரிதலில், இங்ஙனம் பெருக்கிக்காணும் அடிகள் ஓர் வரையறைக்கு உட்பட்டன அல்ல என்ற முடிவுக்கே வரவேண்டிய நிலையேற்படும். ஆகவே ஆசிரியர் தொல்காப்பியனார் நாற்சீரடியினையே சிறப்புடைய அடியாகக்கொண்டு எழுத்தளவாற் பதினேழ்நிலத்தனவாகிய அவ்வடிகளைக் குறள், சிந்து, அளவு, நெடில், கழிநெடில் என ஐவகையடிகளாகப் பகுத்துக்கொண்டு அவ்வடிகளுக்கே அறுநூற்றிருபத்தைந்தாகும் என மேலைச் சூத்திரத்தில் வரையறை கூறி, இந் நாற்சீரடிபோன்று ஐஞ்சீரடிமுதலிய ஏனைய அடிகளைப் பெருக்கிக் காணப்புகின் அச்செயல், எழுத்தெண்ணி வரையறுக்கப்பட்ட இலக்கணக்கட்டளையின் வரையறைக்கு அடங்காமையால், நாற்சீரடியின் இகந்த அவையெல்லாம் எழுத்தெண்ணிக் கட்டளையடியாக உறழ்ந்து காட்டப்படா என இச்சூத்திரத்தால் தெளிவுபடுத்தினார் என்பதாம்.

2. ஆசிரியர் தொல்காப்பியனாரால் இந்நூல் செய்த தலைச்சங்கத்திறுதியிலும் இடைச்சங்கத்திலும் வாழ்ந்த தலைச்சங்கப்புலவர்களும் இடைச்சங்கப்புலவர்களும் நாற்சீரடிக்கண் எழுத்தெண்ணிவகுக்கப்பெறும் கட்டளையடிபயிலச் செய்யுள் செய்தார்கள் என்பது இத்தொல்காப்பியச் சூத்திரங்களால் அறியப்பெறுகின்றோமாதலால் இவை சிறப்புடையவாயின என்னும் காரணம் பற்றியே கட்டளையடிகள் இங்கு விரித்துரைக்கப்பெற்றன என்பது கருத்து.

பாட்டுக்களே.[1] அவை இக்காலத்துப் பயின்றிலவென்று மற்றையவற்றோடு ஒக்குமெனப்படாவென்பது.

அல்லதூஉம், உலகத்து மக்கட்பிறவி பலவாயினும் நால்வகை வருணமென்ப, அவர் வரையறை யிலக்கணத்தாரா கலினென்பது. இனி, அவருள்ளும் அந்தணரும் வேளாளரும் போல இடையிருவகையோரும் பயின்றிலரென்று சிறப்பில ராகாரென்பது.[2]

இனிக் கடைச்சங்கத்தார் அறுநூற்றிருபத்தைந்தடியும் பயின்றுவரச் செய்யுள் செய்திலராலெனின் கட்டளையடியாற் செய்தவல்லன வேண்டாவென்பதோர் ஆணையுடைமையின-ரல்லர். உடையவரும் இவ்வாசிரியனாற் சிறப்புடைத்தென்று சொல்லப்பட்ட அளவடியாற் செய்யுள் செய்தாரென்பது[3] இனிப்

1. இத்தொல்காப்பியத்தின் முதனூலாகிய அகத்தியமென்னும்முத்தமிழி-லக்கண நூலையியற்றிய அகத்தியனார் செய்த யாழ்நூல் எனப்படும் 'இசைநூலி-னுள்ளும் சாதி, உவமத்துரு, திருவிரியிசை என்னும் மூவகையிசைப்பாடல்களுள் எழுத்தெண்ணி அடிவகுக்கப் பெற்ற கட்டளையடிகளால் இயன்ற சிறப்புடையன சாதிப்பாட்டுக்களேயாகும். இசைச் சிறப்புடைய சாதிப் பாடல்கள் இக்காலத்தில் நமக்குக்கிடைக்காமையால் ஏனைய இசைப்பாடல்களோடு அவையும் ஒத்தன என அவற்றின் சிறப்பினைக் குறைத்து எண்ணுதல் கூடாது. அதுபோலவே ஆசிரியர் தொல்காப்பியனார் எழுத்தெண்ணி வகுத்த கட்டளையடிகளால் இயன்ற செய்யுள் இக்காலத்திற் கிடைக்காமைகொண்டு அவற்றின் சிறப்பினைக் குறைத்து எண்ணுதல் கூடாதென்பதாம். 'கட்டளைப்பாட்டுட்சிறப்புடையன சாதிப் பாட்டுக்களே' என்றிருத்தல் வேண்டும்.

2. அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என நால்வகையோருள் அந்தணரும் வேளாளரும் உலகியலில் தனிப்பிரிவினராக எண்ணப்படுதல்போன்று, அரசரும் வணிகரும் தனித் தனிப் பிரிவினராக எண்ணப்பெறும் பயிற்சியின்மைபற்றி இடையிருவகையோராகிய அவர்தம் சிறப்பினைக் குறைத்தெண்ணுதல் கூடாது. எனப் பேராசிரியர் கூறும் எடுத்துக்காட்டு அவர்காலத்தில் நால்வகைவருணப்-பாகுபாடுகளுள் இடையிருவகையோராகிய வணிகர் அரசர் என்னும் பாகுபாடு வழக்கிற்குன்றி ஏனை இருவகை வருணப்பாகுபாடுகளே பெரு வழக்கிலிருந்த சமுதாய அமைப்பினைப் புலப்படுத்தல் கூர்ந்துணரத்தகுவதாகும்.

3. ஆசிரியர் தொல்காப்பியனார் தம் காலத்திற் பயின்ற கட்டளையடியின் இயல்புணர்த்தியதன்றிப் பின்வருவோரெல்லாரும் கட்டளையடியினாலேயே செய்யுள் செய்தல் வேண்டும் என ஆணை கூறினாரல்லர். எனவே கடைச்சங்கத்-தார் அறுநூற்றிருபத்தைந்தடியும் பயின்றுவரச் செய்யுள் செய்திலர். எனினும் 'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே' (செய் . ) எனத் தொல்காப்பியனாரால் சிறப்புடைத்தென்று சொல்லப்பட்ட அளவடியாற் செய்யுள் செய்துள்ளமை யறியத் தருவாதகும்.

பிற்காலத்தார் அளவடியாற் பயின்றுவரச் செய்யுள் செய்தில ரென்று கடைச்சங்கத்தார் செய்யுள் செய்த அடியுஞ் சிறப்பில வாமோவென்பது.[1] வஞ்சியடிக்கும் இங்ஙனம் வரையறை-யின்மைய தொக்கும். அது முன்னர்ச் சொல்லுதும். (ருக)

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஒழிந்த நான்கடியையும் நாற்சீரடிபோல வுறழ்க என்பார்க்கு அவையுறழாமைக்குக் காரணங்கூறுகின்றது.

இ-ள். ஆங்ஙனம் ...... தனவே எ-து அந்நாற்சீரடிபோல மற்றை நான்கடியினையும் விரிப்பின் அவை இலக்கணங்கூறுதற்கு வரையறைப்படாது எண்ணிறந்தனவாம். பாங்கு......காலை எ-து பகுதியுற வறிந்தோர் விரிக்குங்காலத்து. எ-று.

முதனூலாசிரியர் சிறப்புடையனவற்றிற்கும் சிறப்பில்லன-வற்றிற்கும் ஒருங்கிலக்கணங்கூறின் அவையொத்த விலக்கணத்-தவாமென்று கருதி வரையறைப் படுவனவற்றிற்கே இலக்கணங்-கூறி வரையறையின்றிப் பரந்தனவற்றிற்கு இலக்கணங் கூறிற்றிலர். அவர் கருத்து நோக்கி இவ்வாசிரியரும் யானும் அவ்வாறே கூறினேமென்று கூறியதாயிற்று இதன் கருத்து . ஆயிற் சிறப்புடைய கட்டளையடி சான்றோர் செய்யுளுட் பயின்றுவரல் வேண்டும் பிறவெனின்; இந்நூல் செய்த காலத்திற் றலைச்சங்கத்-தாரும் இடைச்சங்கத்தாருங் கட்டளையடி பயின்றுவரச் செய்யுள் செய்தார் என்பது இச்சூத்திரங்களாற் பெறுதும். பின்பு கடைச் சங்கத்தார்க்கு அஃதரிதாகலிற் சீர்வகையடிபயிலச் செய்யுள் செய்தாரென்றுணர்க. இக்காலத்தார் அளவடியாற் செய்யுள் செய்திலரென்று கடைச் சங்கத்தார் செய்த அளவடி சிறப்-பின்றாகாததுபோல அதுவும் கொள்க.[2] வஞ்சிக்கு வரையறைப்-படும்படி ‘குறளடி முதலா’ (செய்-ருஎ)என்பதனுட் கூறுதும்.

---

1. பிற்காலத்தார் அளவடியாற் செய்திலர் என்பதுகொண்டு முற்காலத்துச் சங்கத்தார் செய்த அளவடியும் சிறப்பிலவென்று கூறுதல் பொருந்தாதவாறு-போலக் கடைச்சங்கத்தார் கட்டளையடியமையச் செய்யாமை கொண்டு அவர்க்கு முற்பட்ட தொல்காப்பியனார் காலத்து வழங்கிய கட்டளையடியினைச் சிறப்பிலவென்றுகொள்ளுதலும் பொருந்தாது என்பதாம்.

2. இக்காலத்தார் அளவடியிற் செய்யுள் செய்திலர் என்று கொண்டு அளவடி சிறப்புடையதன்று எனக் கொள்ளுதல் பொருந்தாது. அதுபோலவே கடைச்சங்கத்தார் கட்டளையடி பயின்றுவரச் செய்யுள் செய்திலர் எனக்கொண்டு கட்டளையடி சிறப்புடையதன்று எனக்-கொள்ளுதல் பொருந்தாது என்பதாம்.

**ஆய்வுரை :**

இது, நாற்சீரடிகளை விரித்தது போல ஏனையடிகளையும் விரித்துரைப்பின் வரம்பிலவாய் விரியும் என்கின்றது.

(இ - ள்.) அடிகளின் பாகுபாட்டினை நன்குணர்ந்தோர் நாற்சீரடிகளைக் கட்டளைப்படுத்து விரித்தாற்போன்று ஐஞ்சீரடி முதலாக வரும் ஏனையடிகளையும் உறழ்ந்து காணுமிடத்து அவை வரம்பிலவாய் விரியும் எ-று.

அஃதாவது முற்குறித்த நாற்சீரடிகள் அறுநூற்றிருபத்தைந் தோடும் ஐந்தாஞ்சீராக இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்பா வுரிச்சீர், வஞ்சியுரிச்சீர், ஓரசைச்சீர் எனமுற்கூறிய ஐந்து சீர் களையும் சேர்த்துப் பெருக்க ஐஞ்சீரடிகள் 3125 விகற்பமாகும். அவற்றுடன் ஆறாஞ்சீராக ஐஞ்சீரையும் பெருக்க 15625 விகற்ப மாகும். அவற்றுடன் ஏழாஞ்சீராக ஐஞ்சீரையும் பெருக்க 78125 விகற்பமாகும். இவ்வகையினால் எட்டாஞ்சீர் முதலாக மேலும் மேலும் பெருக்க வரம்பிலவாய் விரியும். அன்றியும் இங்குக் கூறப்பட்ட அடிகளை அசையாலும் எழுத்தாலும் விரிக்க வரம்பிலவாய் விரியும் என்பர் இளம்பூரணர்.

**௫௰. ஐவகை அடியும் ஆசிரியக் குரிய.**

**இளம்பூரணம் :**

என்—எனின். ஆசிரியப்பா நாற்சீரான் வரும் என்பதூஉம் அதன்கண் விரிக்கப்பட்ட ஐவகையடியும் உரித்தென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நாற்சீரடிக்கண் வகுக்கப்பட்ட ஐவகையடியும் ஆசிரியப்பாவிற் குரிய என்றவாறு.[1]

ஐவகையடியு முரியவென, அவற்றிற்கு முதலாகிய நாற்சீரடியும் உரித்தாயிற்று.

---

1. ஐவகையடிகளாவன; நாற்சீரடி தன்னையே நாலெழுத்து முதலாக இருப தெழுத்து முடியவுள்ள பதினேழு நிலத்தும் எழுத்தெண்ணி வகைப்படுத்தப்பெற்ற கட்டளையடிகளாகிய குறளடி, சிந்தடி, நேரடி, நெடிலடி, கழிநெடிலடி என்பன.

ஆசிரியக்கு-ஆசிரியத்துக்கு; குவ்வுருபு அத்துச் சாரியையின்றிப்புணர்ந்தது. நேரடியில் எழுத்தெண்ணிவகுக்கப்பெற்ற ஐவகையடியும் ஆசிரியத்துக்கு உரிய எனவே வெண்பா, கலிப்பாவாகிய ஏனைப்பாக்களுக்கு அவற்றுட்சில வருதல் இல்லை என்பதாம்.

உதாரணம்

"தேர்ந்து தேர்ந்து சார்ந்து சார்ந்து
நேர்ந்து வாமனை நினையின்
சேர்ந்த வல்வினை தேய்ந்தக லும்மே."

இதன்கண் முதலடி நாலெழுத்தான் வந்தவாறு காண்க.

"குன்று கொண்டு நின்ற மாடு
பொன்ற வந்த மாரி
சென்று காத்த திறலடி தொழுமே."

இதன்கண் முதலடி ஐந்தெழுத்தான் வந்தது.

"ஆறு சூடி நீறு பூசி
ஏறும் ஏறும் இறைவனைக்
கூறு நெஞ்சே குறையிலை நினக்கே."

இதன்கண் முதலடி ஆறெழுத்தான் வந்தது.

"போது சாந்தம் பொற்ப வேந்தி
யாதி நாதற் சேர்வோர்
சோதி வானந் துன்னு வாரே." (யாப். வி. ௪௯)

என்பது முதலடி ஏழெழுத்தான் வந்தது.

"தன்தோள் நான்கின் ஒன்று கைம்மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினும்
ஒளிபெரிது சிறந்தன் றளியஎன் நெஞ்சே"

இது முதலடி எட்டெழுத்தான் வந்தது.

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி, (குறுந். ௨)

என்பது ஒன்பதெழுத்தான் வந்தது.

"காமம் செப்பாது கண்டன மொழிமோ." (குறுந். ௨)

என்பது பத்தெழுத்தான் வந்தது.

"தாமரை புரையுங் காமர் சேவடி." (குறுந். கடவுள்வாழ்த்து)

என்பது பதினொரெழுத்தான் வந்தது.

"நாயுடை முதுநீர்க் கலித்த தாமரை" (அகம். ௬௧)

என்பது பன்னிரண்டெழுத்தான் வந்தது.

"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி" (பெரும்பாண். ௧)

என்பது பதின்மூன்றெழுத்தான் வந்தது.

"யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை."
(அகம். ௯௯)

என்பது பதினாலெழுத்தான் வந்தது

"ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை" (புறம் ௫௬௭)
என்பது பதினைந்தெழுத்தான் வந்தது.

"விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்."
(குறுந் ௧0௧)

என்பது பதினாறெழுத்தான் வந்தது.

"தேன்தூங்கும் உயர்சிமைய மலைநாறிய வியன்ஞாலம்."
(மதுரைக் ௩)

என்பது பதினேழெழுத்தான் வந்தது.

"கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்,"
(புறம் ௫௫)

என்பது பதினெட்டெழுத்தான் வந்தது.

"நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மறவரும்."
(புறம். ௫௫)

என்பது பத்தொன்பதெழுத்தான் வந்தது.

"அமர்காணின் அமர்கடந்தவர் படைவிலக்கி எதிர்நிற்றலின்"
(புறம். ௧௯௭ ௫0)

என்பது இருபதெழுத்தான் வந்தது.

**பேராசிரியம் :**

இஃது, எய்தாததெய்துவித்தது; மேல் வகுக்கப்பட்ட அடியினை இன்ன பாவிற்குரிய அடி இவையென்று கூறாதான் அது கூறினமையின்.

(இ - ள்.) நாலெழுத்துமுதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ்நிலனும் ஆசிரியத்திற்குரிய (எ - று.)

"மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்த
.........அறுநூற்றிருபத் தைந்தாகும்." (தொல்-செய்-50)

என்றான், அதனை ஈண்டுப் போத்தந்து ஆசிரியத்திற்கு எய்து வித்தவாறு. அவற்றுக்குச் செய்யுள் ஐந்தடியுங் கூறியவழிக் காட்டப்பட்டது. மற்று,

'மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்தும்' (362)

எனவே இதுவும் அடங்காதோவெனின், அடங்காது; பாத் தோன்றும் அந்நிலங்கள் பகுத்துக்கொள்ளப் பொதுவகையால் ஆண்டோதினானென்பது.[1] மற்றும் ஐவகையடியும் ஓராசிரியத் துக்கண் வரல்வேண்டுமோவெனின், அன்னதொரு வரையறை யுண்டே? வரையாது கூறினமையின் அவையெல்லாவற்றானும் வருக; வருங்கால் ஐந்தும் ஆசிரியத்துக்கு உரியவென்பதே கருத்து.[2] ஒழிந்த பாவிற்கு நிலங் கூறாரோவெனின், ஆசிரியம் பதினேழ் நிலனுமுடைமையின் அக்கூறிய பதினேழ்நிலனுந் தளை விரவுதலின் தளை அதற்குப் பின் கூறித் தளையதிகாரம்பட்ட மையின் அவற்றின்பின் ஒழிந்த பாவிற்கு நிலனுங் கூறு மென்பது.[3] மற்று ஆசிரியமே மகரவீறாதலின்

"மஃகான் புள்ளிமுன் னத்தே சாரியை"

(தொல். எழுத்-உரு. 14)

என்பதனான் அத்துச்சாரியை பெறல் வேண்டுமெனின், அது செய்யுள் விகார மென்பாருமுளர். அற்றன்று, ஆண்டு நின்றது நான்காமுருபாயினன்றே அது கடாவாவது; அதனை ஏழாவ தன் பொருண்மைக்கண் அக்குச்சாரியை ஈறுதிரியாது வந்த தென்று கொள்ளப்படும்.[4]                                                    (ருஉ)

1. 'மெய்வகையமைந்த பதினேழ்நிலத்தும்' என்றது, பாத்தோன்றும் நிலங்கள் பதினேழும் ஐவகையடிகளாகப்பகுத்துக்கொள்ளப் பொதுவகையாற் கூறியது. அதுகொண்டு ஐவகையடியும் ஆசிரியத்துக்கண்வரும் என்பது அங்குப் பெறப்படாது.

2. ஐவகையடியும் ஓர் ஆசிரியப்பாவிலேயே வருதல் வேண்டும் என்னும் வரையறையில்லை; ஐவகையடியும் அம்முறையே வருதல் வேண்டும் என வரையறுத்துரையாமையின். ஐவகையடியும் ஆசிரியப்பாவின்கண் வருதற்குரியன என்ற அளவிற் பொதுப்படக்கூறியதாகவே அதனைக் கொள்ளுதல் வேண்டும்.

3. பதினேழ்நிலனும் உடையது ஆசிரியப்பாவேயாதலின் அதனை முற்கூறித் தளையதிகாரம்பட்டமையின் ஒழிந்தபாவிற்கும் நிலம் கூறுகின்றார்.

4. ஆசிரியம் என்பது மகரவீறாதலின் அது குவ்வுருபேற்குங்கால் அத்துச்சாரியை பெற்று 'ஆசிரியத்துக்கு' எனவருதல் வேண்டும் எனக்கூறி, ஈண்டு 'ஆசிரியக்கு' என வந்தது செய்யுள் விகாரம் என்பாருமுளர். 'ஆசிரியக்கு' என்பதனைக் குவ்வுருபேற்ற வேற்றுமைவிரியாகக் கொள்ளாது 'ஆசிரியக்குரிய' என்பது ஏழாம் வேற்றுமைப்பொருண்மைக்கண் அக்குச்சாரியை ஈறுதிரியாது வந்தது என்று கொள்ளப்படும் என்பதாம். இவ்விளக்கம் பேராசிரியரால் எழுதப்பெற்றதெனக் கொள்ளின் ''நாலெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ்நிலனும் ஆசிரியத்தின்கண் உரிய'' என இச்சூத்திரத்தின் உரையினைத்திருத்திக்கொள்ளுதல் வேண்டும்,

**நச்சினார்க்கினியம் :**

இது முன்னர்க்கூறிய கட்டளையடி இன்னபாவிற்கு உரிய என்கிறது.

(இ - ள்) நாலெழுத்துமுதல் இருபதெழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ் நிலனும் ஆசிரியப்பாவிற்குரித்து. எ-று.

எனவே தளைவழுவின்றி இருபத்தேழ் சீரான்வந்த முந்நூற்றிருபத்து நான்கடியும் ஆசிரியத்திற்கு உரித்து எ-று. முன்னர்ப் பொதுவாக வோதியதனை மீண்டுப் பகுத்தார்.

உ - ம். 'பேர்ந்து பேர்ந்து சென்று சென்று'

என்பது. இவ்வாறு ஓராசிரியத்துக்கண் ஐந்தடியுங் கூறின முறையே நிற்க வேண்டுமென வோதினமையின்[1] எவ்வாற்றானும் அவ்வைந்தும் ஆசிரியத்துக்கண் வருதற்குரியவென்பதே ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று. இக்கருத்தானன்றே 'பேர்ந்து சென்று' என்ற உதாரணத்து ஈரடிக்கூட்டத்துத் தளைவழுப் பலவும் வருவதாயிற்று.

**ஆய்வுரை :**

இஃது ஆசிரியப்பா நாற்சீரால் வரும் என்பதும் அதன்கண் விரிக்கப்பட்ட ஐவகையடியும் அதற்கு உரிய என்பதும் உணர்த்துகின்றது.

(இ-ள்) பதினேழ் நிலத்தனவாக மேல் வகுக்கப்பட்ட ஐவகையடிகளும் ஆசிரியப்பாவிற்கு உரிய எ-று.

உதாரணம் இளம்பூரணருரை முதலிய உரைகளிற் காண்க.

**ருக. விராஅய் வரினும் ஒரூஉநிலை இலவே.**

**இளம்பூரணம் :**

என்—எனின், மேற்சொல்லப்பட்ட அடி விரவி வருமாறு வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

---

1. 'இங்ஙனம் ஓராசிரியத்துக்கண் ஐந்தடியுங் கூறின முறையே நிற்க வேண்டும் என வரையாது வோதினமையின்' என இத்தொடரைத் திருத்திக் கொள்ளுதல் வேண்டும். இத்திருத்தம் பேராசிரியர் உரை நோக்கிச் செய்யப்பெற்றதாகும்.

(இ - ள்.) மேற் சொல்லப்பட்ட ஐந்தடியுந் தனித்தனி ஆசிரியப்பாவிற் குரித்தாகி வருதலே யன்றி விரவிவரினும் நீக்கப்படாது என்றவாறு.[1]

'ஒரூஉ நிலை'[2] என்றதனால் தனித்தனிவரினும் விரவிவரினும் ஒக்கும் என்று கொள்க.

உதாரணம்

"செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழறொடிச் சேய குன்றங்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே."                (குறுந். க)

இதனுட் பலவடியும் வந்தவாறு காண்க.                (ருக)

**பேராசிரியம்** :

இஃது, எய்தியதிகந்து படாமைக் காக்கின்றது; மெய்வகை யமைந்த பதினேழ் நிலமெனவும், எழுபது வகையின் வழு வெனவும் மேனிறுத்த (ருய) முறையானே ஆசிரியத்திற்குப் பதினேழ் நிலமாமாறு கூறினான். இனி, எழுபது வகையின் வழுவாயின அப் பதினேழ் நிலத்து யாண்டு மாகாதென்பது பட்டதனை இகந்து படாமைக் கூறினமையின்.[3]

(இ - ள்.) தளைவிரவி விரினும் ஒருவப்படா (எ - று.)

மற்று, இதனைத் தளை விரவிவரினுங் கட்டளையாமெனப் புறனடுத்தானென்று கோடுமோ, தளைவிரவிற் கட்டளையடி- யாகாதென்று கோடுமோவெனின், தளைமயங்காதனவே தளை வகையடியெனவும் அல்லன கட்டளையடி யாகாவெனவுங் கோடுமென்பது அஃதேல் தளைமயங்கின அடிக்கும் பதினேழ்

1. விராய் வருதலாவது, மேற்குறித்த பதினேழ் நிலத்துக் கட்டளையடிகள் ஐந்தும் தனித்தனி வருதலேயன்றித் தம்முட் பலவாய்க்கலந்து வருதல்.

2. ஒரூஉ நிலை - ஒருவும் நிலை; நீக்கும் நிலை.

3. பதினேழ்நிலத்து ஐவகையடிகளும் ஆசிரியப்பாவுக்குரியன எனக்கூறிய ஆசிரியர், எழுபது வகையின் வழுவிய வழுவாயின அப்பதினேழ்நிலத்து எவ்- விடத்தும் வரப்பெறா என இச்சூத்திரத்தாற் காத்தலின் 'இஃது எய்தியது இகந்துபடாமைக்காக்கின்றது' எனக் கருத்துரைவரையப்பெற்றது.

நிலனுங் கோடுமோ வெனின், கோடுமன்றே? 'விராய்வரினும்' என்ற உம்மை இறந்தது தழீஇயிற்றாகலினென்பது [1] (ருங)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தியது இகந்துபடாமைக்காத்தது; தளைவழுவியதியாது மாகாதோவென்று கருதியதனைச் சீர்வகையடியாமென்றலின்.[2]

(இ-ள்) ஆசிரியம் இருபத்துமூன்றுதளையிற் சில வழுவினும் முற்கூறிய பதினேழ் நிலத்தினொன்று குறைந்து பதினாறு நிலத்தினீங்கிவாரா எ-று.

உம்மை இறந்ததுதழீஇயிற்றாகலான் ஓரடிக்கட் டளைவழுப்படவரினும் அவை கட்டளையாகாமற் சீர்வகையடியாய் ஐந்தெழுத்து முதல் இருபதெழுத்தளவும் வரும் எ-று. அது சான்றோர் செய்யுளுள் வந்துழிக் காண்க.

**ஆய்வுரை**

இது, மேற்குறித்த பதினேழ்நிலத்து ஐவகையடியும் விரவி வருமாறு கூறுகின்றது.

(இ-ள்) பதினேழ் நிலத்து ஐவகையடியும் ஆசிரியத்திற்குத் தனித்தனி யுரியவாகி வருதலேயன்றிப் பிற அடிகளோடும் விரவி வரினும் விலக்கப்படா எ-று.

'விராஅய்வருதல்' என்பதற்கு மேற்கூறப்பட்ட பதினேழ் நிலத்து ஐவகையடிகளும் ஆசிரியப்பாவிற்குத் தனித்தனியுரிய

---

1. 'விராய்வரினும்' என்ற உம்மை, முற்குறித்த வண்ணம் 'தளைவிரவாது வருதலே யன்றி' என இறந்தது தழீஇயதாதலின், தளைவிரவாதனவே தளைவகையடியெனவும் தளைவிரவி வந்தன கட்டளையடியாகாவெனவும், கட்டளையடியன்றியும் தளைமயங்கின அளவடிக்கும் பதினேழ்நிலனும் கொள்ளப்படும் எனவும் குறித்தவாறாம். கோடும்-கொள்வோம். கோடுமன்றே-கொள்வோமல்லவா ? ஒரூஉ நிலையில-நீக்கும் நிலையில்லாதன; எனவே ஏற்றுக்கொள்ளப்படுவன என்பதாம்.

2. பதினேழ் நிலத்தின் எழுத்தெண்ணிக் கொள்ளப்படும் கட்டளையடியே தளைவழுவாதது என்றமையின், இங்ஙனம் தளை வழுவியது அடியாகாதோ என்று ஐயுற்றார்க்கு, அத்தகைய அடி சீர்வகையடியாகக் கொள்ளப்படும் எனக்கூறி, முற்கூறிய தளைவகையின் இலக்கணம் மாறாதபடிக் காத்தலின் 'இஃது எய்தியது இகந்து படாமைக் காத்தது' எனக் கருத்துரை வரையப்பட்டது என்பதாம்.

வாகி வருதலேயன்றிப் பல வடிகளோடும் விரவிவருதல் எனப் பொருள் கொண்டார் இளம்பூரணர். 'தளைவிரவிவருதல்' எனப் பொருளுரைத்தார் பேராசிரியர். 'தளை வழுவிவருதல்' என்பர் நச்சினார்க்கினியர். தளைமயங்காதனவே தளைவகையடியாகும் எனவும் தளைவிரவிவரும் அடிக்கும் பதினேழ் நிலம் கொள்ளப்படும் எனவும் 'விராஅய்வரினும்' என்னும் உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மையாதலின் இவ்வாறு கட்டளையடியோடு சீர்வகையடிகள் ஆசிரியத்தில் விரவி வந்தாலும் அளவடிகளாகிய அவை கட்டளையாகாமற் சீர்வகையடியாய் ஐந்தெழுத்துமுதல் இருபதெழுத்தளவும் வரும் எனவும் எனவே இங்ஙனம் கலந்து வரும் சீர்வகையடிகள் விலக்கத்தக்கன அல்ல எனவும் இச்சூத்திரத்திற்கு விளக்கம் தருவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

**ருஉ. தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினும்**
**இன்சீர் வகையின் ஐந்தடிக்கும் உரிய**
**தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா.[1]**

**இளம்பூரணம் :**

என்—எனின். இத்துணையும் அடியும் அடிக்குரிய எழுத்துக்களும் ஓதினார்; இனி அவ்வடிக்கண் ஓசை வேறுபாடுந் தளையிலக்கணமு முணர்த்துவார் அத் தளைக்கண் வருவதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தத்தஞ் சீர்நிலை வகையானுந் தளைநிலை வகையானும் இனிய ஓசைவேறுபாட்டினையுடைய ஐந்தடிக்கு முரிய தன் சீருள்வழித் தளைவேறுபாடு கோடல் வேண்டா என்றவாறு.

எனவே, சீர்தானே ஓசையைத் தரும் என்றவாறாம்.[2]

உரிய தன்சீர் என்றது ஐந்தடியினும் ஏற்றவழி நிலைபெறுந் தன் சீரென்றுகொள்க அஃதாவது குறளடியாகிய ஐந்தெழுத்தி

1. இதன் முதலிரண்டடி ஒருசூத்திரமாகவும் மூன்றாமடி ஒரு சூத்திரமாகவும் கொண்டனர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

2. குறளடி முதலாக எண்ணப்பட்ட ஐந்தடிகளையும் சீர்வகை பற்றியும் தளைவகை பற்றியும் பகுத்துரைத்தல் மரபென்பதும், அவ்வப் பாக்களுக்குரிய சீர்கள் வருமிடத்து அச்சீர்களே அந்தப்பாவின் ஓசையைத் தருமென்பதும், அவ்விடத்துத் தளைவேறுபாடு கொள்ளவேண்டிய இன்றியமையாமையில்லையென்பதும் இச்சூத்திரத்தாற் புலனாம்.

னும் ஆறெழுத்தினும் ஓரசைச்சீரும் ஈரசைச்சீரும் வருதலன்றி மூவசைச்சீர் வாராமை. பிறவாசிரியர் கொண்ட நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர்வெண்டளை, கலித்தளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை என எழுவகையினும், வஞ்சித்தளை நிலைமொழி வஞ்சியுரிச்சீராக வருஞ்சீர்க்கு முதலசையோடு ஒன்றியது ஒன்றியவஞ்சித்தளை எனவும் ஒன்றாதது ஒன்றாவஞ்சித்தளை எனவும் வழங்குபவாதலின் அவ்விருவாற்றானும் தளையாற் பயனின்றி நிலைமொழியாகிய வஞ்சியுரிச்சீர் தானே ஓசையுணர்த்துதலின் வஞ்சித்தளை கோடல் வேண்டாராயினார்.[1] இனி, வெண்சீர் வெண்டளையும் வெண்சீர் நிற்ப வருஞ்சீர் வெள்ளையும் வெண்சீராதல் இயற்சீராதல் வந்து வெண்டளையாக வேண்டுதலின் நிலைமொழியாகிய வெண்சீரை "வெண்சீரீற்றசை நிரையசை யியற்றே" (செய்யு-உஅ) என ஓதுதலின், அதனை நிரையீற்றியற்சீர் ஆக்கினால் வருஞ்சீர் நேர்முத லியற்சீராயின் அதுவும் இயற்சீர் வெண்டளையாம்.

அவ்வாறன்றி வருமொழியும் வெண்சீராயின் 'தன்சீருள்வழித் தளைவகை வேண்டா' என்பதனான் அடங்கும். அதனான் இருவாற்றானும் வெண்சீர் வெண்டளை கொள்ளாராயினார்.[2] இனி

---

1. எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட ஐந்தடியினும் ஏற்றவழி நிலைபெறும் அவ்வப்பாவிற்குரிய சீர்கள் என்பார் 'உரிய தன்சீர்' என்றார். குறளடியாகிய ஐந்தெழுத்தினும் ஆறெழுத்தினும் ஓரசைச்சீரும் ஈரசைச்சீருமே வரும்; மூவசைச்சீர் வராது. நிலைமொழியாகிய வஞ்சியுரிச்சீர் வருஞ்சீரின் முதலசையோடு ஒன்றியது ஒன்றிய வஞ்சித்தளையெனவும் ஒன்றாதது ஒன்றாவஞ்சித்தளை-யெனவும் வழங்குபவாதலின், அவ்விருதிறத்தானும் தளையாற்பயனின்றி வஞ்சி-யுரிச்சீர்தானே வஞ்சிப்பாவின் ஓசையுணர்த்துதலின் வஞ்சித்தளை கோடல் இன்றியமையாததன்று என்பதாம்.

2. இனி, வெண்சீர் வெண்டளையென்பது, வெண்சீர் நிற்ப வருஞ்சீர் வெண்சீராவது இயற்சீராவது வந்து பொருந்துவது. 'வெண்சீரிற்றசை நிரையசை-யியற்றே' (செய்யுளியல்-உஅ) என்ற விதிப்படி நிலைமொழியாக நின்ற வெண்சீரை நிரையீற் றியற்சீர் போலக் கொண்டால் அதன்முன் வருஞ்சீர் நேர்முத லியற்-சீராயின் இயற்சீர் வெண்டளையாகும். அவ்வாறன்றிச் வெண்சீர்முன் வருஞ்-சீரும் வெண்சீராயின் 'தன்சீருள்வழித்தளைவகை வேண்டா' என்றவிதிப்படி தளை கொள்ள வேண்டிய இன்றியமையாமை நேராது. எனவே வெண்சீர் முன் இயற்சீர் வரினும் தன்சீர் வரினும் இருநிலைமைக்கண்ணும் தளை வகுக்க வேண்டிய இன்றியமையாமையில்லை. எனவே எழுவகைத்தளைகளுள் ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை, வெண்டளை என்னும் மூன்றும் தன்சீர்-

ஒழிந்த நான்கு தளையுங் கூறுகின்றாராயின் ஆசிரியத்தளையுங் கூறல் வேண்டா, அதுவும் இயற்சீரான் வருதலின் எனின், அதன்கண்ணே இயற்சீர் வெண்டளை கூறவேண்டுதலின் ஆசிரியத்தளையுங் கூறவேண்டு மென்க.[1] (ருஉ)

## பேராசிரியம் :

இஃது, எய்தாத தெய்துவித்தது; என்னை? இயற்சீராற் கட்டளையடியாமாறெல்லாம், "ஐவகை யடியு மாசிரியக் குரிய" (தொல் செய். 52) என்னுந் துணையும் கூறிப் பின்னும், 'விராஅய் வரினும் ஒருஉநிலை யிலவே" (தொல்-செய். 53) எனக் கட்டளையடியன்றியும் அளவடி வருமெனவும் அவை பதினேழ் நிலத்தவெனவுங் கூறி, இனி உரிச்சீரானுஞ் சீர்வரை யறையடி உளவென்பதூஉம் அவ்வுரிச்சீரால் தளைவகையடி உள வென்பதூஉம் அவை பதினேழ் நிலத்தின் இகந்துவாராவென் பதூஉங் கூறுகின்றமையின்.[2]

---

முன் பக்கத் தொடர்ச்சி
வகையின் பாவின் ஓசையினைத் தருவனவாதலின் அவை மூன்றும் நீங்கலாக, நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, கலித்தளை என்னும் நான்குதளைகளை மட்டும் தொல்காப்பியனார் இவ்வியலிற் சுட்டி விளக்குகின்றார்.

1. இவற்றுள் நேரொன்றாசிரியத்தளையும் நிரையொன்றாசிரியத்தளையும் 'உரியதன்சீர்' எனச்சீர்வகையுளடங்குமாயினும் அவற்றால் இயற்சீர் வெண்டளை கொள்ளவேண்டுதலின் ஆசிரியத்தளையும் உடன்கூறவேண்டிய இன்றியமையாமை நேர்ந்தது என்பதாம். எனவே நேரொன்றாசிரியத்தளை நிரையொன்றாசிரியத்-தளை, வெண்சீர் வெண்டளை, ஒன்றிய வஞ்சித்தளை எனவரும் இந்நான்கும் உரியதன்சீர் ஒன்றிவருதலாற் கொள்ளப்படும் தளைகள் என்பதும், இயற்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றாவஞ்சித்தளை இவை மூன்றும் ஒன்றாமையால் தளைக்கப்படும் தளை யென்பதும் நன்குபுலனாம். இங்ஙனம் ஆசிரியர் தொல்-காப்பியனார் தன்சீர்வகையினும் தளைநிலைவகையினும் பாவின் அடியே ஓசை-யினைப் பாகுபடுத்துந்திறத்தினை வகைப்படுத்தி விளக்கிய முறையில் அமைந்தது,

''தன்சீர் தனதொன்றிற் றன்றளையாந் தணவாதவஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக்குரித்து வல்லோர் வகுத்த
வெண்சீர் விகற்பங்கலித்தளையாய் விடும், வெண்டளையாம்
ஒண் சீரகவலுரிச்சீர் விகற்பமும் ஒண்ணுதலே'' (யா. காரிகை-10)

எனவரும் யாப்பருங்கலக்காரிகையாகும்.

2. உரிச்சீராலும் சீர்வகையடி யுளவெனவும் அவ்வுரிச்சீரால் தளைவகை யடியுளவெனவும் அவை முற்குறித்த பதினேழ்நிலத்தினைக்கடந்து வருதல் இல்லை யெனவும் இச்சூத்திரத்தில் முன்னர்க்கூறப்படாத விதியைக் கூறுகின்றமையின் 'எய்தாதது எய்துவித்தது' எனக்கருத்துரைவரையப்பெற்றது.

(இ - ள்) தன்சீர்வகையினும்—ஆசிரிய வுரிச்சீரானும்; அதனை அதிகாரத்தாற் கொள்ளப்படும்;[1] தளைநிலைவகையினும்—அவ்வாசிரியவுரிச்சீரானாகிய தளைநிலைமைப் பகுதியானும்; [2]இன்சீர்வகையினும்— இன்சீர்ப்பகுதியானும்; [3]ஐந்தடிக் குமுரிய— அவையும் மேற்கூறிய ஐவகையடிக்கும் உரியவாம் (எ - று).

'ஐந்தடிக்கு முரிய' வெனவே பதினேழ் நிலத்தின் இகந்து வாராவென்பதாம்.[4] தன்சீரென்னாது 'வகை' யென்றது, அவற்றை இருபகுதியானே,

"முன்னிரை யுறினு மன்ன வாகும்" (தொல்-செய். 14)

என்றதும்,

"வெண்பா வுரிச்சீர் ஆசிரிய வுரிச்சீர்" (தொல்-செய். 23)

என்புழி உடன்கூறாது கூறிய வேறுபாடும் நோக்கியென்பது.[5] அதனது பயம்: வருகின்ற தளைவகைக்காயின் ஆசிரியவுரிச் சீராறுந் தளைகொள்ளப்படா, முன்னிரையீற்ற இரண்டுமல்ல தென்றவாறு. தளைநிலைவகை சிறப்புடைமையின் அது முற் கூறுகவெனின், அங்ஙனமாயினும் அறுவகைச் சீரானுஞ் சீர்வகை யடி வருதல் பெரும்பான்மையாகலானும், அவற்றுள்ளும் நீடு கொடி, குளிறுபுலி என்னும் இரண்டுமே பற்றித் தளைகோடல் சிறுபான்மை நோக்கியுந் 'தன்சீர்வகை' முற்கூறப்பட்டது. அல்லதூஉந் 'தளைநிலைவகை' முற்கூறின் மேற்கூறிய வியற் சீர்த்தளைமேற் செல்லும்; அவ்வாறன்றித் தன் சீர்த்தளையே கோடற்கும் அது பிற் கூறினானென்பது. மற்றுத் தன்சீரா னாவதனை இன்சீர்வகையொடு ஐந்தடிக்கு முரித்தென்றதென் னையெனின், ஆசிரியவுரிச்சீர் நான்கும் நிரலே நின்றுழி அகவல்

---

1. ஆசிரியப்பா அதிகாரப்பட்டமையின் 'தன்சீர்' என்றது ஆசிரியவுரிச்சீரை.

2. 'தளைநிலைவகை' என்றது, அவ்வாசிரியவுரிச்சீராலாகிய தளைநிலைமைப் பகுதியினை.

3. 'இன்சீர்வகை' என்றது இயற்சீர் வகையினை.

4. 'ஐந்தடிக்குமுரிய' எனவே எழுத்தெண்ணிவகுக்கப்பட்ட பதினேழ்நிலத்தினைக் கடந்து வருதல் இல்லை என்பதாம்.

5. நீடுகொடி, குளிறுபுலி என்னும் இருசீர்களையும் ஆசிரியவுரிச்சீர் எனத் தழுவிக் கொண்ட திறம் பற்றித் 'தன்சீர்' என்னாது 'தன்சீர்வகை' எனக்குறித்தார்.

ஓசை பிறவாதென்பது அறிவித்தற்கென்பது. எனவே, ஒன் றிடையிட்டும் இரண்டிடையிட்டும் இன்சீர் வரல்வேண்டுவதாம்.

'இன்சீர்வகையின்' என இயற்சீர்களான் உரிச்சீர்களை வகுத்து நிறீஇக் கொள்ளப்படும்.

உ - ம் : "ஓங்குகோட்டுத் தொடுத்த பாம்புபுரை யருவி" எனவும்,

"நிவந்துதோன்று களிற்றி னிலங்குகோடு புரைய" எனவும் இவை இயற்சீரொன்று இடையிட்ட ஆசிரியவுரிச்சீரான் வந்த நேரடி.

"பாம்புமணி யுமிழும் பானா ளீங்குவரல்" என்பது இயற்சீரிரண்டு இடையிட்டு வந்தது. இதுவும்

"அசையுஞ் சீருமிசையொடு சேர்த்தி" (தொல்-செய். 11) என்பதனான் அகவலோசை வழுவினவா றறிந்துகொள்க.

இனி, தன் சீரால்[1] தளைநிலையடி வருமாறு :

"ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ" (புறம். 55)

"உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை" (புறம். 3)

என வரும்.

தளைவகை யென்னாது 'நிலை' யென்றதனான், அவற்று இரண்டாசிரியவுரிச்சீரும்[2] அடிமுதற்கணின்று சீராவதன்றி இடைவாரா வென்பது கொள்க தளைநிலை யென்னாது 'வகை' யென்ற தென்னையெனின், உரிச்சீரால் தளைவழங்கின் ஓரடிக் கண் இரண்டுவரின் ஓசையுண்ணா தென்பதுணர்வித்தற்கென்பது. இவையும் இன்சீர் வகையொடு வருமெனவே தன்சீர் இயற்சீ ரொடு தட்குமென்பதாம்[3] அஃதேல்,

'தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா' (தொல்-செய். 55)

---

1. தன்சீர் என்றது, ஆசிரியவுரிச்சீரை.

2. இரண்டாசிரியவுரிச்சீர் என்றது, நீடுகொடி, குளிறுபுலி என உரியசைப் பின் நிரைவந்த இருசீர்களையும். இவையிரண்டும், அடிமுதற்கணன்றி இடையே வாரா.

3. ஆசிரியவுரிச்சீரால் தளைகொள்ளுங்கால் ஓரடிக்கண் இரண்டு தொடர்ந்துவரின் ஓசையுண்ணாதெனவும் எனவே இயற்சீர் ஒன்றும் இரண்டும் இடையிட்டு வருமெனவும் அங்ஙனம் வருங்கால் ஆசிரியவுரிச்சீர் இயற்சீரொடு தளைக்கும் எனவும் கொள்வர் பேராசிரியர்.

என வருகின்ற சூத்திரத்தானே தன்சீர் போதுமாகலின் ஈண்டுத் தளை நிலைவகையே கூறுகவெனின், இஃது ஆசிரியத்திற்குக் கூறினான்; அது வெண்பாவிற்குக் கூறினான்; அல்லாக்கால், அது மிகையாமென்பது[1]. எனவே, தன்சீர்வகை நாலெழுத்திற்கு உரித்தன்றென்பதூஉம், தளைவகையடி. குறளடி முதன் மூன்று நிலத்திற்கும் உரித்தென்பதூஉம் உரையிற் கொள்க.[2]

"ஓங்கு கோட்டுமீது பாய்ந்து பாய்ந்து
முசுக்கலை யாடு நாடற்கு
உரைப்பதை யெவன்கொனந் தோளே தோழீஇ"

என்பது ஐந்தெழுத்தால் தன்சீரடி வந்தது.

"ஆடுகொடி நுடங்கு காடு போந்து
விளங்கிழை கோயிற் சேர்ந்தனம்
முழங்குக வானந் தழங்குகுரல் சிறந்தே"

என்பது ஏழெழுத்தால் தளைநிலையடி வந்தது. பிறவும் அன்ன

இன்சீரென்னாது 'வகை' யென்றதனால் இயற்சீர்ப்பாற் படுத்து இயற்றிக்கொள்ளப்பட்ட அசைச்சீரும் (செய்-28) இன் சீரேயாம்[3] தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினும் இடை-யிட்டு வந்ததென்பது. இவை மேற்காட்டியவற்றுள் காணப்படும்

(௫௪)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தாத தெய்துவித்தது; உரிச்சீராற் சீர்வகையடியும் உரிச்சீராற் றளைவகையடியும் உள, அவையும் முற்கூறிய ஐவகைநிலனும் பெறுமென்றலின். தன்சீரெனவே அதிகாரத்தான் ஆசிரியவுரிச்சீராயிற்று.

---

1. 'தன்சீர்வகையினுந்தளைநிலைவகையினும்' என இங்குக் கூறியவிதி ஆசிரியப்பாவுக்கு எனவும், 'தன்சீருள்வழித்தளைவகைவேண்டா' என அடுத்து-வரும் நூற்பாவிற் கூறியவிதி வெண்பாவுக்கு எனவும் பகுத்துணர்தல் வேண்டும்.

2. தன்சீராகிய ஆசிரியவுரிச்சீரடி நாலெழுத்துக்கு உரித்தன்றென்பதும், தளைவகையடி குறளடிமுதன் மூன்றுநிலத்திற் குரித்தென்பதும் உரையிற்கோடல் என்னும் உத்தியாற் கொள்ளப்படும்.

3. 'இன்சீர்' என்ற அளவிலமையாது 'இன்சீர்வகை' என விரித்துக்-கூறினமையால், இயற்சீர்பாற்படுத்து இயற்றிக்கொள்ளப்பட்ட நேர்பு, நிரைபு என்னும் அசைச் சீரும், 'இயற்சீர்பாற்படுத்தியற்றினர் கொளலே; தளைவகை சிதையாத் தன்மையான' (செய். 28) என்ற விதிப்படி இயற்சீராகவே வைத்துத் தளைகொள்ளப்படும் என்பதாம்.

(இ-ள்.) தன்சீர்வகையினும் எ-து ஆசிரியவுரிச்சீரின் கூற்றானும். தளைநிலைவகையினும் எ-து அச்சீரானாய தளைநிலைக் கூற்றானும். இன் ..... முரிய எ-து இன்சீர்ப்பகுதியோடே அவ்வாசிரியம் முற்கூறிய ஐவகையடியான் வந்து பதினேழ் நிலத்தி னிகந்து வாரா. எ-று.

தன்சீரென்னாது வகையென்றது முன்னிரையீற்ற விரண்டி-னையுந் தளை கொள்ளுமென்றற்கும், ஏனை நான்குரிச்சீருந் தளைகொள்ளா வென்றற்கும். தளைநிலைவகையென்றது, உரிச்-சீராற் றளைவருங்கால் ஓரடியின் இரண்டுவரின் ஓசையுண்ணா-தென்றற்கு இன்சீர்வகையின் என்றது, ஆசிரியவுரிச்சீர் நான்கு நிரலே நின்றுழித் தூங்கலோசை பிறத்தலின் இயற்சீர்கள் ஒன்றிடையிட்டு வரவேண்டும் சீர்வகைக்கென்பதூஉம், அதற்கும் இன்னோசை மிகவுமின்றென்பதூஉம், முன்னிரையீற்ற விரண்டும் இடையில் வாராது அடிமுதற்கண்ணே வந்து இயற்சீரோடு தட்டு இன்னோசைத்தாமென்பதூஉம், அசை[1] யோரடிக்-கிரண்டுவந்து தட்டாலும் இன்னோசைத்தாமென்பதூஉம் அறிவித்தற்கு.

உ-ம். ஓங்குகோட்டுத் தொடுத்த பாம்புபுரை யருவி
நிவந்துதோன்று களிற்றி னிலங்குகோடு புரைய'

இவை இயற்சீரொன்றிடையிட்டு உரிச்சீரான் வந்தன.

'பாம்புமணி யுமிழும் பானா ளீங்குவரல்'

இஃது இரண்டிடையிட்டது.

'ஓங்குமலைப் பெருவிற் பாம்புநாண் கொளீஇ' (புறம்-௫௫)
'உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை' (புறம்-௩)

இவை தளைநிலைவகையான் வருதலாற் கட்டளையாய் இன்னோசை பெற்றன.

இனி, ஐந்தெழுத்துமுதலாத் தன்சீர்வகை வருதலும், தளை-வகை யேழெழுத்து முதலாக வருதலும் உரையிற்கொள்க. அவை:

'ஓங்குகோட்டு மீது பாய்ந்து பாய்ந்து
முசுக்கலை யாடு நாடற்
குரைப்பதை யெவன்கொனந் தோளே தோழீ'

1. 'அவை' எனத் திருத்திக் கொள்க. அவை என்றது முற்கூறிய முன்னிரையிற்ற நேர்புநிரை. நிரைபுநிரை என்னும் ஆசிரியவுரிச் சீர்கள் இரண்டினையும்.

இஃது ஐந்தெழுத்தாற் றன்சீரடிவந்தது.

'ஆடுகொடி நுடங்கு காடு போந்து
விளங்கிழை நகர்வயிற் சேர்ந்தன
முழங்குக வானந் தழங்குகுரல் சிறந்தே'

இஃது ஏழெழுத்தாற் றளைநிலையடி வந்தது. வகையென்ற தனான் இயற்சீர்ப்பாற்படுத்திய அசைச்சீர் இன்சீராய்த் தன்சீர் வகையினுந் தளைநிலைவகையினும் வரும். இஃது இருவகை யடிக்கு மிலக்கணங் கூறிற்று.

**பேராசிரியம் :**

இது, மேல் ஆசிரியத்திற்குத் தன் சீர்வகையுந் தன்றளை வகையுங் கூறிய வழியானே வெண்பாவிற்குச் சீர்வகையுந் தளை வகையுங் கூறுகின்றது.

(இ - ள்.) தன்சீர்—வெண்சீர்; உள்வழி—வெண்சீரே வருஞ் சீராகியும் வந்தவழி; என்னை ? தளைவகைக்கு இரண்டுசீர் வேண்டுதலானுந் தளைவகை வேண்டாத நிலம் இதுவென்கின் றானாகலானுமென்பது; தளைவகை வேண்டா—தளைவகை நிலைமை கொள்ளப்படா மற்று அவ்வடிக்கண் (எ - று)

எனவே, வெண்சீர்நிற்ப இயற்சீர்வந்தொன்றின் வெண் டளையாமென்பதே கருத்தாயிற்று. இஃது உய்த்துக்கொண் டுணர்தலென்னும் உத்திவகை. (மரபு 110) இதனானே வெண் சீர்க்கு வெண்சீர்வந்தொன்றுவது கட்டளையடியெனப்படாது சீர்வகையடியாமென்பது பெற்றாம்.[1]

"வெண்சீ ரொன்றின் வெண்டளை கொளாஅல்"

"வெண்சீ ரொன்றினும் வெண்டளை யாகும்
இன்சீர் விரவிய காலை யான"

என்றார் காக்கைபாடினியாரும்.[2]

---

1. ஈண்டுத் 'தன்சீர்' என்றது, வெண்பாவுக்குரிய தன்சீராகிய வெண்சீரினை. வெண்சீரே வருஞ்சீராகியும் வந்தவழி அவ்வடிக்கண் தளைவகை நிலைமை கொள்ளப்படா. எனவே வெண்சீர்நிற்ப இயற்சீர் வந்து ஒன்றின் வெண்டளையா மென்பதும் வெண்சீர்க்கு வெண்சீர்வந்து ஒன்றுவது சீர்வகையடியாம் என்பதும் பெறப்படும்.

2. இவ்விரு நூற்பாக்களையும் இயற்றிய காக்கைபாடினியார் என்பவர் தொல்காப்பியனார் காலத்தவர் ஆவர்.

வெண்சீ ரொன்றியது வெண்டளை யாகாதென்றற்குக் காரணமென்னை யெனின்,

“அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான” (தொல்-செய்-58)

என்புழி, அளவுஞ் சிந்தும் அல்லாத ஏறிய நிலமெல்லாம் வெண்பாவுங் கலிப்பாவுந் தம்மில் தளைவகையொக்குமென்றா னாகலினென்பது.[1] எனவே, வெண்சீர் நான்கும் ஒன்றிவரின் அது கலிப்பாவிற்குஞ் சீர்வகையடியாவதாயிற்று.

மற்று, வஞ்சியுரிச்சீருந் தன்சீராகலின் இன்னவாறு தளை கொள்ளு மென்றானோவெனின்,[2] அவை தன்சீருள்வழி ஒன்றி னும் ஒன்றாவாயினும், பிறசீர் வந்துழி ஒன்றினும் ஒன்றாவாயி னும் வஞ்சித்தளையாகி வரையறையின்மையானும் வஞ்சியடி அறுநூற்றிருபத்தைந்தடியுட் படாமையானும் அவை கூறா னாயினான் ஆசிரியனென்பது.[3] (ருரு)

**நச்சினார்க்கினியம்** :

இது முன் ஆசிரியத்திற்குச் சீர்வகையுந் தளைவகையுங் கூறியமுறையே வெண்பாவிற்கும் அவ்விரண்டுங் கூறுகின்றது.

(இ - ள்.) வெண்சீர்நிற்ப வெண்சீர்வந்தொன்றிய வெண்ட ளை கட்டளை வெண்பாவிற்கு வேண்டா. எ-று.

எனவே வெண்சீர் நிற்ப வெண்சீர் வந்தொன்றிய வெண்ட ளை கட்டளைக் கலிக்கு ஈரடிக்கூட்டத்துத் தொடைகொள்வழி வேண்டும் என்று கொள்க. இது தொடைகொள்வழிக் காண்க.

---

1. வெண்பாவுக்குரியவாகிய அளவடி ஐந்தும்சிந்தடி மூன்றும் என எட்டு நிலத்தின் மிக்கு ஏறிய நிலம் யாவும், வெண்பாவும் கலிப்பாவும் தம்மில் தளை-வகையொக்கும் என ஆசிரியர் கூறுதலால், வெண்சீர்களே ஒன்றிவரும் அடி வெண்டளையாகாதாயிற்று.

2. இன்னவாறு தளை கொள்ளுமென்னானோவெனின் - எனத் திருத்திக் கொள்க.

3. வஞ்சிப்பா, தன்சீர்களாக வஞ்சியுரிச்சீர்களைப் பெற்றிருத்தலின், அது பற்றித் தளைகொண்டு அடிவகுத்தல் முறையாயினும், அவை தன்சீருள்வழி ஒன்றிவரினும் ஒன்றாதுவரினும் பிறசீர்வந்துழி ஒன்றினும் ஒன்றாதுவரினும் வஞ்சித்தளையாகித் தளைபற்றிய வரையறையின்மையானும் எழுத்தெண்ணி-வகுக்கப்பெற்ற அறுநூற்றிருபத்தைந்தடியுள் வஞ்சியடி சேர்க்கப்படாமையானும் வஞ்சியுரிச்சீர் இன்னவாறு தளைகொள்ளப்பெற்று இத்தனையடியாம் எனத் தொல்காப்பியர் தனித்தெடுத்துக்கூறாது விட்டார் என்பதாம்.

தன்சீரென்றது வெண்சீரை; உள்வழியென்றது அவ்வெண்சீரே வருஞ்சீராயவழி யென்றவாறு; எனவே வெண்சீர் நிற்ப இயற்சீர் வந்தொன்றிய வெண்டளை வேண்டும் என்றவாறாயிற்று; இது நுதலியதறிதற்பாற்படும்.[1]

'வெண்சீ ரொன்றின் வெண்டளை கொளாஅல்'[2]

'வெண்சீ ரொன்றினும் வெண்டளை யாகும்
இன்சீர்விரவிய காலை யான'[3]

என்றார் **காக்கைபாடினியார்.**[4] இது தளை கொள்ளாமைக்குக் காரணம் "அளவுஞ் சிந்தும்" (செய்-ருஅ) என்னுஞ் சூத்திரத்துட் கூறுதும்,

**ஆய்வுரை :**

இது, தளைக்கண் வருவதோர் மரபு உணர்த்துகின்றது.

(இ-ள்) பாவுக்குரிய தன்தன் சீர்நிலை வகையானும் தளை-நிலை வகையானும் இனிய ஓசை வேறுபாட்டினையுடையனவாய் வரும் ஐந்தடிக்கும் நிலைபெறுதற்குரிய தன்தன்சீர் உள்ள-விடத்துத் தளை வேறுபாடு கொள்ளுதல் வேண்டா. எனவே சீர்தானே ஓசையைத்தரும் எ-று.

குறளடி முதலாக எண்ணப்பட்ட ஐந்தடிகளையும் சீர்வகை பற்றியும் தளைவகை பற்றியும் பகுத்துரைத்தல் மரபென்பதும், அவ்வப்பாக்களுக்குரிய சீர்கள் வருமிடத்து அச்சீர்களே அந்தப் பாவின் ஓசையைத் தரும் என்பதும், அவ்விடத்துத் தளைவேறு-பாடு கொள்ளவேண்டிய இன்றியமையாமையில்லை யென்பதும்

1. நுதலியதறிதல் என்பது ஓர் உத்தி. சூத்திரத்துள் ஓதிய பொருளாற் சொல்லப் படும் பயன் இல்லது போலச் சொல்லியதனானே அதற்கேற்ற வகையாற் கருதியுணரப்படும் பொருள் இன்னதென்று கொள்ள வைத்தல்.

2. 'வெண்சீர் நிற்ப வெண்சீர் வந்து ஒன்றிய வெண்டளையினைக் கட்டளை வெண்பாவிற்குக் கொள்ளற்க' என்பது இதன் பொருளாகும்.

3. வெண்சீர் நிற்ப இயற்சீர் வந்து ஒன்றிய வெண்டளை கட்டளையடிக்கு வேண்டப்படும் என்பதாம்.

4. இவர் தொல்காப்பியனார்க்கு அகவையிற் குறைந்தவராய் அவர் காலத்து வாழ்ந்த காக்கைபாடினியாராவர். யாப்பருங்கல விருத்தியுட் குறிக்கப்படுபவர் பிற்காலத்துக் காக்கைபாடினியார். இருவரும் வெவ்வேறு காலத்தவர்.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் வரைந்தஉரையாற் புலனாம். இதுபற்றிய விளக்கத்தை முன்னுள்ள இளம்பூரணருரையிலும் அதன் அடிக்குறிப்பிலும் காண்க.

இனி, இச்சூத்திரத்தின் முதலிரண்டடியினை ஒரு சூத்திரமாகவும் இறுதியடியினை மற்றொரு சூத்திரமாகவும் கொண்டு உரை வரைந்து விளக்குவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். அவ்விரண்டு சூத்திரங்களுள் முதற் கண்ணதாகிய

''தன்சீர் வகையினும் தளைநிலை வகையினும்
இன்சீர் வகையின் ஐந்தடிக்கு முரிய''

எனவரும் சூத்திரம், ஆசிரியத்திற்கு உரிச்சீராலும் சீர்வகையடியுள என்பதும் அவ்வுரிச்சீரால் தளைவகையடியும் உள என்பதும் அவையும் பதினேழ் நிலத்தின் இகந்து வாரா என்பதும் கூறுகின்றமையின் எய்தாதது எய்துவித்தது என்றும், 'தன்சீருள்வழித் தளைவகை வேண்டா' என அடுத்து வரும் சூத்திரம், வெண்பாவிற்குச் சீர்வகையுந் தளைவகையும் கூறுகின்றது என்றும் கருத்துரை வரைந்தனர். இவற்றின் பொருள் விளக்கம் முன்னுள்ள பேராசிரியருரையிலும் அதன் அடிக்குறிப்பிலும் நச்சினார்க்கினியருரையிலும் அதன் அடிக்குறிப்பிலும் இடம் பெற்றுள்ளமை காண்க.

ருங. சீரியல் [1]மருங்கின் ஓரசை யொப்பின்
ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும்.

## இளம்பூரணம் :

என் - எனின். ஆசிரியத்தளை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சீர்கள் தம்முட்பொருந்தும்வழி நிலைமொழியாகிய இயற்சீரினீறும்[2] வருமொழியாகிய சீரின் முதலசையும் நேராய் ஒன்றின் நேரொன்றாசிரியத் தளையாம்; நிரையாய் ஒன்றின் நிரையொன்றாசிரியத் தளையாம் என்றவாறு.

---

1. 'சீரியைமருங்கின்' என்பது, பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

2. 'சீரியன் மருங்கின்' என்பதனை 'இயற்சீர் மருங்கின்' என மொழிமாற்றிக்கொள்க.

இரண்டையும் ஆசிரியத்தளை என வேண்டுதலின் பொதுப் படக் கூறினார்[1]. அவ்வழி வருஞ்சீர் இயற்சீராயிற் சிறப்பின்-றெனவுங்கொள்க [2] (ருஙு)

**பேராசிரியம் :**

இது, கட்டளையடிக்கண் இயற்சீர் தட்குமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இயற்சீர்பத்தும்[3] பிறிதொன்றனோடு இயையுங் கால் அவை தத்தம் ஈற்றசை ஒன்றி, வருஞ்சீரின் முதலசை யோடொப்ப நிற்பின் ஆசிரியவடிக்குந் தட்கும்[4] முறைமையென் றறியப்படும் (எ - று).

'ஒப்பின் ஆசிரியத்தளை' யெனவே ஒவ்வாதொழியின் வெண்டளை யென்று எதிர்மறுத்துக் கொள்ளப்படும். என்னை?

'எடுத்த மொழி யினஞ் செப்பலு முரித்தே'
(தொல்-சொல்-கிளவி 61)

என்றமையின்.

---

1. நேரீற்றியற்சீரும் நிரையீற்றியற்சீரும் நின்று வருஞ்சீருடன் நேராய் ஒன்றின் நேரொன்றாசிரியத்தளையும் நிரையாயொன்றின் நிரையொன்-றாசிரியத்தளையும் ஆம் என்பார், 'இயற்சீர் மருங்கின் ஓரசையொப்பின் ஆசிரியத்தளை' என இரண்டற்கும் பொதுப்படக் கூறினார்.

2. 'அவ்வழிவருஞ்சீர் இயற்சீராயிற்சிறப்பின்றெனவுங் கொள்க' எனவரும் இவ்வுரைத்தொடரைக் கூர்ந்து நோக்கும் வழி, இயற்சீரொடு ஆசிரிய-வுரிச்சீரும் ஓரோவழிவெண்சீரும் விரவி வருதல் அகவலோசைக்குச் சிறப்பாகும் எனக் கொண்டார் இளம்பூரணர் எனக் கருதவேண்டியுளது.

3. 'சீரியன் மருங்கின்' என்ற பாடம் இளம்பூரணருரையில் முதலாவதாக வும், பேராசிரியருரையில் இரண்டாவதாகவும் குறிக்கப்பெற்றிருத்தலால் 'சீரியன் மருங்கின்' என்பதனை 'இயற்சீர்மருங்கின்' என மொழிமாற்றி, ''இயற்சீர் பத்தும் பிறிதொன்றனோடு இயையுங்கால்'' என உரையாசிரியர்கள் மூவரும் பொருள்கொண்டிருத்தல் வேண்டும் எனத் தெரிகின்றது. 'வெண்பாவுரிச்சீர்' எனற்பாலதனை 'உரிச்சீர் வெண்பா' (செய். கக) எனமொழிமாற்றியுரைத் தாற்போன்று 'இயற்சீர் மருங்கின்' எனற்பாலதனைச் 'சீரியன் மருங்கின் என ஆசிரியர் மொழிமாற்றியுரைத்தார் எனக்கொள்ளுதல் பொருத்தமாகும். இச் சூத்திரத்தில் 'சீரியன் மருங்கின்' என்ற பாடங்கொள்ளாக்கால், வருஞ்சீரோடு நின்று இசையுஞ்சீர் இன்னதெனத் தெரித்து மொழியப்படாத நிலையில் ''இது கட்டளையடிக்கண் இயற்சீர்தட்குமாறுணர்த்துதல் நுதலிற்று'' எனக் கருத்து வரைதற்கு இடமின்மையும் அறிக.

4. 'ஆசிரியவடிக்குத் தட்கும்' என்றிருத்தல் பொருத்தம்.

"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி"
(பத்துப்-பெரும்பாண்-1)

என்றவழி நேரும் நிரையும் சீரியை மருங்கின் ஓரசை ஒன்றி ஆசிரியத்தளையாயின.

"மல்லற் கடந்தா னிறம்போ லிருண்டெழுந்து"
(ஐந்திணை, ஐம்-1)

என்புழி முதலடி இயற்சீர் ஒன்றாது வெண்டளையாயிற்று.

மற்றுச் சீரியை மருங்கின் ஓரசையே வரினென்னாது 'ஒப்பின்' என்றதென்னையெனின், உரியசை முதலும் ஈறு மாகியவழி அவை இயலசையோடு ஒப்புமை நோக்கித் தளை கொள்ளினல்லது தம்மோடு தாம் ஒன்றுதல் கொள்ளாரென்றற் கென்பது இதனானும் பெற்றாம்.[1] போதுபூ என்பது வருஞ் சீராயவழிப் போரேறு என்பது ஓரசை யொன்றிற்றென்று ஆசிரியத்தளை யென்னாமையென்பது. இனி, அவை நின்ற சீராய வழி நிரையீறாதல், 'அறியல்வேண்டு' மென்ற மிகையானுங் கொள்ளப்படும்.[2] இனி, 'ஈரசை யொப்பி' னென்பது பாடமாக உரைப்பின் நேரும்நிரையும்ஒன்றி னென்றவாறுமாமெனக்-கொள்க.[3] (ருக)

**நச்சினார்க்கினியம்:**

இது கட்டளையடிக்கட் பத்தியற்சீருந் தட்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) இயற்சீர்பத்தும் பிறசீரோ டியையுங்காற் றத்த-மீற்றசை வருஞ்சீரின் முதலசையோடொன்றின் அஃது ஆசிரிய-வடிக்குத் தட்கு முறைமையென்றறியல்வேண்டும். எ-று

ஒப்பினெனவே ஒவ்வாதது இயற்சீர்வெண்டளையென் றெதிர்மறுத்துக்கொள்ளப்படும்.

1. இயற்சீர்பத்தனுள் உரியசை முதலும் ஈறுமாய், போதுபூ, போரேறு-என நின்றவழி, இயலசையோடு ஒப்புமைநோக்கி இயற்சீராகத் தளைகொள்வதல்லது உரியசை தம்மொடுதாம் ஒன்றிய ஆசிரியத்தளையெனக் கொள்ளார் என்றற்கு ஓரசையே வரின் என்னாது 'ஓரசை ஒப்பின்' என்றார்.

2. உரியசையினை முதற்கண்பெற்றதும் இறுதிக்கண் பெற்றதும் ஆகிய இயற்சீர், நின்றசீராயவழி, நிரையீறுபோலக் கொள்ளப்படும் என்பது, 'அறிய'ல் வேண்டும்' என்னும் மிகையாற் கொள்க என்றவாறு.

3. 'ஈரசையொப்பின்' என்பது பாடமாயின், நேரும் நேரும், நிரையும் நிரையுமாக 'ஒன்றின்' எனப் பொருள்கொள்க என்பதாம்.

உ-ம். 'அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி' (பெரும்பாண்) என்றவழி நேரும் நிரையும் ஒன்றி நேரொன்றாசிரியத்தளை நிரையொன்றாசிரியத்தளையாயிற்று.

'கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக' (திருக்குறள்-391)

என நேரும் நிரையும் ஒன்றாது இயற்சீர் வெண்டளையாயிற்று.

'நீத்துநீர்ப் பரப்பி னிவந்துசென் மான்றேர்'

என்புழி நீத்துநீர் என்பது நேர்புநேர் பாதிரிபோல நின்று பரப்பின் என்பதனோடு நிரையொன்றாசிரியத்தளையாயிற்று. 'சேற்றுக்கா னீலம்' இது நேர்புநேர் பாதிரிபோல நின்று ஒன்றாது இயற்சீர் வெண்டளையாயிற்று இனிக் 'காரேறு பொருத கண்ணகன் செறுவின்' என்புழிக் காரேறு என்னும் நேர்நேர்பு பாதிரிபோல நின்று பொருத என்பதனோடு நிரையொன்றாசிரியத் தளையாயிற்று. 'வானூடு போய' என நேர் நேர்புஒன்றாது இயற்சீர் வெண்டளையாயிற்று. 'வானிரைத்து மணந்து' என நேர்நிரைபு பாதிரி போல நின்று மணந்து என்பதனோடு நிரை யொன்றாசிரியத்தளையாயிற்று 'யானிருந்துதூங்கும்' என நேர் நிரைபு ஒன்றாது இயற்சீர்வெண்டளையாயிற்று. 'வெயிலாடு-முசுவின்' என நிரைநேர்பு கணவிரிபோல நின்று முசு என்பத னோடு நிரையொன் றாசிரியத்தளையாயிற்று. 'வரையாடு வன்பறழ்' என நிரைநேர்பு ஒன்றாமையின் இயற்சீர் வெண்டளை யாயிற்று. 'கடலுடுத்து விசும்புசூடி' என நிரைநிரைபு ஒன்றி நிரையொன் றாசிரியத்தளையாயிற்று. 'சிலைவிலங்கு நீள்புருவம்' என நிரைநிரைபு ஒன்றாமையின் இயற்சீர் வெண்டளையாயிற்று என உரியசைமயங்கிய இயற்சீராறும் ஒன்றியும் ஒன்றாதும் வந்தன. ஓரசைச்சீ ரிரண்டும் இயற்சீருமாய்த் தட்குமாறு முற் கூறினாம்.[1]

## ஆய்வுரை :

இஃது, ஆசிரியத்தளையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) இயற்சீர்கள் தம்முட் பொருந்தும்வழி நிலை மொழியாகிய இயற்சீரின் ஈற்றசையும் வருமொழியாகிய சீரின் முதலசையும் ஓரசையாய் ஒத்துவரின் ஆசிரியத்தளையாம் எ-று.

1. செய்யுளியல் உ அ-ஆம் சூத்திரம் நச்சினார்க்கினியர் உரை நோக்குக.

நேரும் நிரையும் இரண்டசைக்கும் பொதுப்படக் கூறினமை யின், நேராய் ஒன்றின் நேரொன்றாசிரியத் தளையெனவும் நிரையாய் ஒன்றின் நிரையொன்றாசிரியத் தளையெனவும் கொள்க என்றாராயிற்று.

ருச. குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப.

## இளம்பூரணம் :

என்—எனின். மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குறளடி முதலாக அளவடியளவும் வஞ்சியுரிச் சீர்வந்து உறழுநிலையில; இவ்வடிகள் இயற்சீரும் ஆசிரியவுரிச் சீருமாம் என்றவாறு.[1]

எனவே, பதினைந்தெழுத்து முதலாக நெடிலடியினுங் கழி நெடிலடியினு மெய் யுறழப்பெறுவ தென்றவாறாம்[2] எடுத்-தோத்துப் பெரும்பான்மை. அளவடிக்கண் வஞ்சியுரிச்சீர் மயங்குப வுளவேல் மேற் கொள்க. (ருச)

## பேராசிரியம் :

இது, வஞ்சியடி யுறழுமாறும் அதுபெறும் நிலனும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) நாலெழுத்து முதலாகப் பதினான் கெழுத்தளவும் உறழும் நிலையில வஞ்சியடிக்கு (எ - று).

இனி, முதலும் ஈறும் யாதெனப்படுமோவெனின்,

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல்-செய்-46)

---

1. நாலெழுத்து முதலாக வரும் குறளடி முதல் பதினான்கெழுத்தீறாக வரும் அளவடியீறாக வரும் ஆசிரியவடியின்கண்ணே வந்து உறழும் நிலை வஞ்சி யுரிச்சீர்க்கு இல்லையெனவே ஆசிரியப்பாவின்கண்ணே வரும் குறளடி, சிந்தடி, அளவடி யென்னும் இவ்வடிகள் இயற்சீரும் ஆசிரியவுரிச்சீருமாக வரப்பெறும் என்பதாம்.

2. 'மெய் யுறழப்பெறா தென்றவாறாம்' என்ற பாடமே பொருத்தமுடைய தாகும். இங்ஙனம் கூறவே பதினைந்தெழுத்து முதல் பதினேழுவரையுள்ள நெடிலடியினும் பதினெட்டுமுதல் இருபத்தெழுத்தீறாக வரும் கழிநெடிலடியினும் வஞ்சியுரிச்சீர்கள் வரப்பெறா என்பதாம். சிறப்புவிதியாகிய இது, பெரும் பான்மைபற்றியமைந்ததாதலின், சிறுபான்மை ஆசிரியப்பாவின் அளவடிக்கண் வஞ்சியுரிச்சீர் வந்து கலப்பனவுளவேற்கொள்க என்றார்.

என்றதனான் ஆறெழுத்தடி முதலாகவும்,

'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (தொல்-செய்-42)

என்றதனாற் பன்னிரெண்டெழுத்தடி யீறாகவும் உறழுமென்ற வாறு. எனவே வஞ்சியடிக்கு நிலன் ஏழென்பது சொல்லிய வாறு. அதுவே கருத்தெனின், இச்சூத்திரம் மிகையாம் பிற வெனின், அற்றன்று; வஞ்சியுரிச்சீர் மூன்றெழுத்திற் சுருங்கா, ஆறெழுத்தின் ஏறாவெனவே நேர்நிலைவஞ்சிக்கு மூவெழுத்துச் சீர் இரண்டுவந்த இருசீரடிக்கு ஆறெழுத்துமுதலாமென்பதூஉம் ஆறெழுத்துச்சீர் இரண்டுவரிற் பன்னிரண்டெழுத்தடி ஈறா மென்பதூஉம் பெறுதுமால் அவ்வச்சூத்திரங்களானே யெனின், ஆண்டு வஞ்சியுரிச்சீர்க்கு எழுத்துவரையறை கூறினான்; அவ்வடி இத்துணைநிலம் பெறுமென்றற்கு இது கூறல்வேண்டுமென்பது[1] அல்லதூஉம், அங்ஙனம் கொள்ளின் உய்த்துணர்ச்சியாம், இஃது எடுத்தோத்தாகலின் எடுத்தோத்துக் களைந்து உய்த்துணரார் என்பது. இனி, இது கூறாக்காற் கட்டளையடிக்கண் இயற்சீர் வாராதென்பதூஉம் பெறலாகாதாம். ஆகவே, 'ஞாயிறு' 'புலி செல்சுரம்' என்பது கட்டளையடியாகிய செல்லும்; வஞ்சித் தூக்கின் அது கொள்ளாமையின் அது விலக்கல் வேண்டி இது கூறினான்; என்னை? இயற்சீர்கொள்ளின் ஓரெழுத்தானாகிய இயற்சீரும் ஆண்டே கோடல்வேண்டும்; அது கொள்ளின் இச்சூத்திரத்திற்கு ஏலாமையினென்பது.[2]

---

1. 'தன்சீரெழுத்தின் சின்மை மூன்றே' 'நேர்நிலை வஞ்சிக்கு ஆறுமாகும்' என்ற சூத்திரங்கள், வஞ்சியுரிச்சீர்க்குரிய எழுத்துக்களின் சுருக்கமும் பெருக்கமுங் கூறின. இருசீரடியாகிய வஞ்சியடி ஆறெழுத்தடி முதலாகப் பன்னிரண்டெழுத்தடி-யீறாக ஏழுநிலம் பெறும் என்றற்கு இச்சூத்திரம் கூறப்பட்டது. எடுத்தோத்து இல்வழியே உய்த்துணர்தல் வேண்டும். இச்சூத்திரமாகிய எடுத்தோத்து உள்வழி உய்த்துணர்ச்சி வேண்டுவதில்லை யென்பதாம்.

2. 'குறளடியின் கீழெல்லையாகிய நாலெழுத்து முதலாக அளவடியின் மேலெல்லையாகிய பதினான்கெழுத்தீறாகப் பெருக்கிப்பெறும் நிலன்கள் வஞ்சியடி பெறுதல் இல' எனவே குறளடியின் மேலெல்லையாகிய ஆறெழுத்தடிமுதல் அளவடியின் நடுவெல்லையாகிய பன்னிரண்டெழுத்தடியீறாக வஞ்சியடி ஏழுநிலம் பெறும் எனக்கொள்வர் பேராசிரியர்.

இவ்விதி கூறாதொழியின், 'ஞாயிறு புலிசெல்சுரம்', என்பது கட்டளையாகக் கொள்ளவேண்டி வரும். வஞ்சித்தூக்கின்கண் அதுகொள்ளத்தக்கது அன்மையின் அதனை விலக்குதல் வேண்டியும், வஞ்சியடியின்கண் இயற்சீர்வருமெனக்கொள்ளின் ஓரொழுத்தாகிய இயற்சீரும் கொள்ளவேண்டிவரும், அவ்வாறு கொள்ளுதல்

இனி, வஞ்சியுரிச்சீர் அறுபதும் இருநிலைமைப்படுவன இருபத்து நான்கும், நான்கு நிலைமைப்படுவன இருபத்தெட்டும், எட்டு நிலைமைப்படுவன எட்டுச்சீருமாகி இருநூற்றிருபத்து நான்காய் விரியும்.

"இரண்டுநான் கெட்டு நிலைமைய வாகித்
திரண்ட நிலைவஞ்சிச் சீர்க - ளொருங்கே
யிருபத்து நான்கிருபத் தெட்டுட னெட்டாய்
இருநூற் றிருபத்து நான்கு"

அவ்வஞ்சியுரிச்சீர் இருநூற்றிருபத்து நான்கினுள்ளும் ஒன்பதெழுத்துச்சீ ரொன்றும், எட்டெழுத்துச்சீ ரொன்பதும் ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றுமாக நாற்பத்து மூன்று வகையான் உறழும் நிலம் இல; இச்சூத்திரத்தான் ஓதியவாற்றா னென்பது.[1]

"நாலாதி யீற்றன நான்கு பதினாற
னாதிய வெண்சீ ரகப்பட்ட மூவைந்து
பொய்ப்பினவ் வஞ்சி யடியுற ழாமோனை
மூவைந்து மூன்றுமூன் றொன்று".

"இரண்டெட்டு மூவெட்டு நாலேழா றைந்தொன்
றகன்றநாற் பஃதுநான் காறேழைம் பத்திரண்டு
நான்கைந்தெட் டொன்பா னறுபஃ தொன்றுநான்
காறேழு பெற்றனமூ வைந்து"

"நாலெட்டே யேழெட் டறுபத் திரண்டிவற்றா
னேழெழுத்தா றெட்டெழு பத்துமூன் றேழா
மேழெழு மும்மூன்றா யெட்டெழுத்தா னோரொன்றா
மாறெட் டறுபஃது மூன்று"

"எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை யொக்கு
மசைக்கு வரையறை யின்மை யான"

---

(முன்பக்கத்தொடர்ச்சி)

கூடாது என விலக்குதல் வேண்டியும் 'வஞ்சியடிக்குநிலன் ஏழ்' என்பது உணர்த்தல் வேண்டியும் இச்சூத்திரம் எடுத்தோத்து (சிறப்புவிதி) ஆகக் கூறப்பட்டதென்பது பேராசிரியர் கருத்தாகும்.

1. வஞ்சியுரிச்சீர் அறுபதினுள் நேரீறு எட்டும் நிரையீறு எட்டும் நேர்பீறு நான்கும் நிரைபீறு நான்கும் ஆக இருபத்து நான்கு சீர்களும் இருநிலைமைப்பட்டு நாற்பத்தெட்டாய் விரிவன ;

முன்பக்கத்தொடர்ச்சி

1. மாபோகுவாய் - மாமேவுவாய்
மாவழங்குவாய் - மாவிரவுவாய்
புலிபோகுவாய் - புலிமேவுவாய்
புலிவழங்குவாய் - புலிவிரவுவாய்
பாம்புசேர்வாய் - மின்னுச் சேர்வாய்
பாம்புவருவாய் - மின்னுவருவாய்
களிறுசேர்வாய் - அரவுசேர்வாய்
களிறுவருவாய் - அரவுவருவாய்

2. மாசேர் சுரம் - நாண் ஞாயிறு
மாவருசுரம் - மாவலியது
மாபோகுசுரம் - மாமேவுசுரம்,
மாவழங்கும்சுரம் - மாவிரவுசுரம்
புலிசேர்சுரம் - வருஞாயிறு
புலிபோகுசுரம் - புலிமேவுசுரம்,
புலிவழங்குசுரம் - புலிவிரவுசுரம்
புலிவருசுரம் - திருவலியது

3. மாசேர்காடு - மாசேர்காவு
மாவருகாடு - மாவருகாவு
புலிசேர்காடு - புலிசேர்காவு
புலிவருகாடு - புலிவருகாவு.

4. மாசேர்கடறு - மாசேர்கடவு
மாவருகடறு - மாவருகடவு
புலிசேர்கடறு - புலிசேர்கடவு.
புலிவருகடறு - புலிவருகடவு.

இனி நான்கு நிலைமைப்படும் இருபத்தெட்டுச்சீர்களாவன:

நேரீறு 4.

பாம்புபோகுவாய், பாம்புமேவுவாய், மின்னுபோகுவாய், மின்னுமன்னுவாய்.
பாம்புவழங்குவாய், பாம்புவிரவுவாய், மின்னுவழங்குவாய், மின்னுவிரவுவாய்,
களிறுபோகுவாய், களிறுமேவுவாய், அரவுபோகுவாய், அரவுமேவுவாய்.
களிறுவழங்குவாய், களிறுவிரவுவாய் அரவுவழங்குவாய், அரவுவிரவுவாய்.

நிரையீறு. 8.

பாம்புசேர்சுரம், பாம்புசேர்வது, மின்னுச்சேர்சுரம், மின்னுசேர்வது
பாம்புவருசுரம், பாம்புவலியது, மின்னுவருசுரம், மின்னுவலியது
பாம்புபோகுசுரம், பாம்புமேவுசுரம், மின்னுமேவுசுரம் பாம்புவலியது
பாம்புவழங்குசுரம், பாம்புவிரவுசுரம், மின்னுவிரவுசுரம், மின்னுவழங்குவது
களிறுசேர்சுரம், அரவுசேர்சுரம், பரவுஞாயிறு, ஒளிறுஞாயிறு
களிறுவருசுரம், அரவுவருசுரம், களிறுவலியது, அரவுவலியது
களிறுபோகுசுரம், அரவுபோகுசுரம், அரவுமேவுசுரம், களிறுமேவுசுரம்
களிறுவழங்குசுரம், அரவுவிரவுசுரம், அரவுவழங்குசுரம், களிறுவிரவுசுரம்

முன்பக்கத்தொடர்ச்சி

நேர்பீறு 8

மாபோகுகாடு, மாமேவுகாடு மாபோகுகாவு மாமேவுகாவு
மாவழங்குகாடு மாவிரவுகாடு மாவழங்குகாவு மாவிரவுகாவு
புலிபோகுகாடு புலிமேவுகாடு புலிபோகுகாவு புலிமேவுகாவு
புலிவழங்குகாடு புலிவிரவுகாடு புலிவழங்குகாவு புலிவிரவுகாவு
பாம்புசேர்காடு மின்னுச்சேர்காடு பாம்புசேர்காவு மின்னுச்சேர்காவு
பாம்புவருகாடு மின்னுவருகாடு பாம்புவருகாவு மின்னுவருகாவு
களிறுசேர்காடு அரவுசேர்காடு களிறுசேர்காவு அரவுசேர்காவு
களிறுவருகாடு அரவுவருகாடு களிறுவருகாவு அரவுவருகாவு

நிரைபீறு 8

மாபோகுகடறு மாமேவுகடறு, மாபோகுகடவு மாமேவுகடவு
மாவழங்குகடறு மாவிரவுகடறு மாவழங்குகடவு மாவிரவுகடவு
புலிபோகுகடறு புலிமேவுகடறு, புலிபோகுகடவு புலிமேவுகடவு
புலிவழங்குகடறு புலிவிரவுகடறு, புலிவழங்குகடவு புலிவிரவுகடவு
பாம்புசேர்கடறு மின்னுச்சேர்கடறு' பாம்புசேர்கடவு, மின்னுச்சேர்கடவு
பாம்புவருகடறு மின்னுவருகடறு, பாம்புவருகடவு, மின்னுவருகடவு
களிறுசேர்கடறு அரவுசேர்கடறு, களிறுசேர்கடவுவு, அரசேர்கடவு
களிறுவருகடவு அரவுவருகடவு களிறுவருகடவு அரவுவருகடவு
இனி எட்டுநிலைமைப்படுஞ்சீர்கள் நேர்பீறுநான்கும் நிரைபீறு நான்கும்.

நேர்பீறு 4

பாம்புபோகுகாடு பாம்புமேவுகாடு, மின்னுப்போகுகாடு, மின்னுமேவுகாடு
பாம்புபோகுகாவு பாம்புமேவுகாவு மின்னுப்போகுகாவு, மின்னுமேவு காவு
பாம்புவழங்குகாடு பாம்புவிரவுகாடு, மின்னுவழங்குகாடு, மின்னுவிரவுகாடு
பாம்புவழங்குகாவு பாம்புவிரவுகாவு, மின்னுவழங்குகாவு, மின்னுவிரவுகாவு
களிறுபோகுகாடு களிறுமேவுகாடு, அரவுபோகுகாடு, அரவுமேவுகாடு
களிறுபோகுகாவு, களிறுமேவுகாவு, அரவுபோகுகாவு, அரவுமேவுகாவு.
களிறுவழங்குகாடு, களிறுவிரவுகாடு, அரவுவழங்குகாடு, அரவுவிரவுகாடு.
களிறுவழங்குகாவு, களிறுவிரவுகாவு' அரவுவழங்குகாவு. அரவுவிரவுகாவு,

நிரைபீறு- 4

பாம்புபோகுகடறு பாம்புமேவுகடறு, மின்னுப்போகுகடறு, மின்னுமேவுகடறு
பாம்புபோகுகடவு, பாம்புமேவுகடவு, மின்னுப்போகுகடவு, மின்னுமேவுகடவு
பாம்புவழங்குகடறு பாம்புவிரவுகடறு, மின்னுவழங்குகடறு, மின்னுவிரவுகடவு
பாம்பு வழங்குகடவு, பாம்புவிரவுகடவு, மின்னுவழங்குகடவு, மின்னுவிரவுகடவு
களிறுபோகுகடறு களிறுமேவுகடறு, அரவுபோகுகடறு, அரவுமேவுகடறு,
களிறுபோகுகடவு, களிறுமேவுகடவு, அரவுபோகுகடவு, களிறுமேவுகடவு.
களிறுவழங்குகடறு களிறுவிரவுகடறு, அரவுவழங்குகடறு, அரவுவிரவுகடறு
களிறு வழங்குகடவு, களிறுவிரவுகடவு, அரவுவழங்குகடவு, அரவுவிரவுகடவு,

"வஞ்சி யுரிச்சீர் நிரையுரி யுறழ்ந்து
மெல்லாங் குறைத்து மிகுத்துக் கொளாஅல்"

எனவே, இவ்வாற்றான் வஞ்சியுரிச்சீர் ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்துமாகி வரும். அவையறிந்து மாற்றுக. அவையாவன :

1களிறு போகுவாய், 2களிறுவழங்குவாய், 3புலிவழங்குசுரம், 4மாவழங்குசுரம், 5களிறுவருசுரம், 6களிறுபோகுசுரம், 7புலிவழங்குகாடு, 8பாம்புவழங்குகாடு, 9களிறுவருகாடு, 10களிறுபோகுகாடு, 11மாவழங்குகாடு, 12புலிபோகுகடறு, 13பாம்புவருகடறு, 14பாம்புபோகுகடறு, 15களிறுசெல்கடறு

என இவை பதினைந்தும் ஏழெழுத்தாங்கால் உறழ்நிலை இலவெனப்படும் 'களிறுவழங்குவாய்' என்பதனை அரவுவிரவுவாய் என ஏழெழுத்துச் சீராம். ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க. இவை பதினைந்தும் ஏழெழுத்தின் இகவாதன.[1]

---

1. 1. களிறு போகுவாய் களிறு மேவுவாய் அரவு போகுவாய் அரவு மேவுவாய்
2. களிறு வழங்குவாய் - களிறுவிரவுவாய் அரவு வழங்குவாய் அரவுவிரவுவாய்
3. புலி வழங்குசுரம் - புலிவிரவுசுரம்
4. மாவழங்குசுரம் - மாவிரவுசுரம்
5. களிறு வருசுரம் - அரவு வருசுரம்
6. களிறு போகுசுரம் - அரவுமேவுசுரம்
7. புலிவழங்குகாடு - புலிவிரவு காடு - புலிவிரவுகாவு புலி வழங்கு காடு
8. பாம்பு வழங்குகாடு - பாம்புவிரவுகாடு - பாம்புவழங்குகாவு அரவு விரவு காவு
9. களிறுவருகாடு - அரவுவருகாடு - களிறுவரு காடு - அரவுவருகாவு
10. களிறுபோகுகாடு - அரவுபோகுகாடு - களிறுமேவுகாடு -அரவுமேவுகாடு களிறுபோகுகாவு- அரவுபோகுகாவு - களிறுமேவிகாவு - அரவுமேவு காவு
11. மாவழங்குகடறு - மாவிரவுகடறு - மாவழங்குகுரவு - மா விரவு குரவு
12. புலிபோகு கடறு - புலிமேவு கடறு - புலிபோகு குரவு - புலிமேவு குரவு
13. பாம்புவருகடறு - மின்னுவருகடறு - பாம்புவருகுரவு - மின்னுவருகுரவு
14. பாம்பு போகுகடறு - பாம்பு மேவுகடறு - மின்னுபோகுகடறு - மின்னுமேவுகடறு

இனி, ஏழெழுத்துச்சீரின் இவ்விரண்டும் எட்டெழுத்துச் சீர் ஒரோவொன்றுமாகி வருவன மூன்றுசீர் உள; அவை:

[1]களிறுவழங்குசுரம், [2]புலிவழங்குகடறு, [3]களிறுவருகடறு என்பன. இவற்றைக் களிறுவிரவுசுரம், அரவுவழங்குசுரம், அரவு-விரவு சுரம் என்றாற்போல வாய்பாடுபடுத்து ஒட்டிக்காணவே ஏழெழுத்துச்சீர் ஆறும் எட்டெழுத்துச்சீர் மூன்றுமென ஒன்பதாம்.[1]

களிறுவழங்குகாடு, பாம்புவழங்குகடறு, களிறுபோகுகடறு என இவை மூன்றுசீரும் ஒரோவொன்று ஏழெழுத்துச்சீர் மூன்றும் எட்டெழுத்துச்சீர் ஒன்றுமாக முந்நான்கு பன்னிரண்டும் உறழ்நிலையில எனப்படும். அவை :

களிறுவிரவுகாவு, களிறுவழங்குகுரவு, அரவுவிரவுகாடு, அரவு விரவுகுரவு என ஏழெழுத்துச்சீர் மூன்றும் எட்டெழுத்துச்சீர் ஒன்றும் ஆயினவாறு கண்டுகொள்க. ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க.

இனிக், களிறுவழங்குகடறு என்பது ஆறெழுத்துச்சீர் ஒன்றும், ஏழெழுத்துச்சீர் மூன்றும், எட்டெழுத்துச்சீர் மூன்றும், ஒன்பதெழுத்துச்சீர் ஒன்றுமென அதுவும் எட்டுநிலைமைத்தாம். அவற்றுள் ஆறெழுத்துச்சீர் ஒன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்-சீர்ஏழும் உறழ்நிலையில வஞ்சிக்கெனப்பட்டன. அவை:

---

முன்பக்கத்தொடர்ச்சி

பாம்புபோகு குரவு - பாம்பு மேவு குரவு - மின்னுபோகு குரவு - மின்னுமேவுகுரவு

15. களிறு செல்கடறு - அரவுசெல்கடறு - களிறு செல்குரவு - அரவுசெல்குரவு

இவை பதினைந்தும் ஏழெழுத்தின் மேற்படாதன. இவை ஏழெழுத்து-ஆமிடத்து வஞ்சியடியில் வைத்துப்பெருக்கும் நிலையில,

1. 1 களிறு வழங்குசுரம் - களிறு விரவுசுரம் - அரவுவழங்குசுரம் அரவுவிரவுசுரம்

2 புலிவழங்குகடறு - புலிவிரவுகடறு - புலிவழங்குகுரவு புலிவிரவுகுரவு

3 களிறுவருகடறு - அரவுவருகடறு - களிறுவருகுரவு அரவுவரு குரவு

ஏழெழுத்துச்சீர் ஆறும் எட்டெழுத்துச்சீர் மூன்றும் வந்தன. இவற்றுள் ஆறெழுத்துச் சீர் நீங்கலாக ஏனைய ஏழும் வஞ்சியடியில் வைத்து உறழும் நிலையில்லாதன,

களிறுவழங்குகுரவு, களிறுவிரவுகடறு, அரவுவழங்கு கடறு என மூன்றும் ஏழெழுத்துச்சீர்;

களிறுவிரவுகுரவு, அரவுவழங்குகுரவு, அரவுவிரவுகடறு என மூன்றும் எட்டெழுத்துச்சீர்;

அரவுவிரவுகுரவு என்பது ஒன்பதெழுத்துச்சீர்: இவையெல்லாந்தொகுப்ப ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றும் எட்டெழுத்துச் சீர் ஒன்பதும் ஒன்பதெழுத்துச்சீர் ஒன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீர் நூற்றெண்பத்தொன்றும் உறழ்நிலையுடையவெனக் கொள்க.[1]

ஏழெழுத்துச்சீரும் எட்டெழுத்துச்சீரும் ஒன்பதெழுத்துச் சீரும் அடியுறழ்வனவாக்கி மேன்மூன்று சீரானும் மூன்று நிலனேற்றிப் பதினைந்தெழுத்தடியளவும் உறழும் வஞ்சியடி என்பாருமுளர். அங்ஙனம் ஒன்பதெழுத்துச்சீர் இரண்டு வந்த குறளடி பதினெட்டெனப்படுதலின், வஞ்சிநிலம் பதின்மூன்றாதல் வேண்டும். ஓசை நோக்காது சீர்நோக்கி உறழ்ச்சி கொள்ளினென மறுக்க.[2]

அவை அளவடியோடு ஒத்த சிறப்பினவன்மையானும், அவற்றுக்குத் தளைவகையின்மையானும் எடுத்தோதித் தொகை கூறிற்றிலனாயினும், நாம் அவற்றை எண்ணி உணர்ந்து கூறுங்-

1. 1 களிறுவழங்குகாடு - அரவுவழங்குகாடு - களிறு விரவுகாடு - அரவுவிரவு - காடு (7) களிறுவழங்கு காவு - அரவுவழங்கு காவு7- களிறு விரவு- காவு7- அரவு விரவு காவு(8)

2 பாம்புவழங்குகடறு - மின்னுவழங்குகடறு - பாம்பு விரவுகடறு- மின்னுவிரவுகடறு (7) பாம்புவழங்கு குரவு - மின்னு வழங்கு குரவு(7) பாம்பு விரவுகுரவு 7 மின்னுவிரவுகுரவு (8)

3 களிறுபோகு கடறு - அரவு போகுகடறு - களிறு மேவு கடறு - அரவு மேவுகடறு (7) களிறுவழங்கு குரவு - 7 அரவு விரவுகுரவு - 9 களிறு மேவுகுரவு 7 -அரவுமேவுகுரவு (8)

224 ஆக விரிந்த வஞ்சியுரிச்சீர்களில் ஏழெழுத்துச் சீர் 33, எட்டெழுத்துச் சீர் 9, ஒன்பதெழுத்துச் சீர் 1 ஆக நாற்பத்துமூன்று சீர்களையும் நீக்கி எஞ்சிய 181 சீர்களும் வஞ்சியடியில் வைத்து உறழும் நிலையினையுடைய என்பர் பேராசிரியர்,

2. ஏழெழுத்துச்சீரும எட்டெழுத்துச்சீரும் ஒன்பதெழுத்துச்சீரும் வஞ்சியடியுள் உறழ்வனவாகக்கொள்ளின் ஒன்பதெழுத்துச்சீர் இரண்டுவந்து குறளடி பதினெட்டெழுத்துடைமையான் வஞ்சிநிலம் ஆறெழுத்துமுதல் பதினெட்டுவரை பதின்மூன்றாகி வஞ்சிக்குரிய தூங்க லோசை கெடும் எனமறுப்பர் பேராசிரியர்.

கால், ஒருசீர்க்கு அடிநான்காக வஞ்சியடி எழுநூற்றிருபத்து நான்காமெனக் கொள்க.[1] அவையுறழுங்கால் மூன்றெழுத்துச் சீர் ஆறாதி ஒன்பது உயர்வும், நாலெழுத்துச்சீர் ஏழாதி பத் தெழுத்துயர்வும், ஐயெழுத்துச்சீர் எட்டாதி பதினொன்றுயர் வும், ஆறெழுத்துச்சீர் ஒன்பதுமுதல் பன்னிரண்டுயர்வும் பெற்று நின்ற சீரோடு மூன்றெழுத்துச்சீரும் நாலெழுத்துச்சீரும் ஐயெழுத்துச்சீரும் ஆறெழுத்துச்சீருந் தந்துறழ்கவென்பது. அவை:

"கால்காய்ந்தது காம்புநீடி"

என்பது ஆறெழுத்தடி.

"நல்கூர்ந்தது வில்லோர்சுரம்"

என்பது ஏழெழுத்தடி.

"வான்பெய்தது மண்குளிர்ப்புற"

என்பது எட்டெழுத்தடி

"தேன்பெய்தது செழுநகர்தொறும்"

என்பது ஒன்பதெழுத்தடி.

இவை மூவெழுத்து மாசெல்காடு நின்றுறழ்ந்த நான்கடியும் வந்தவாறு ஒழிந்தனவும் அன்ன.

"மண்மாய்ந்தென வுள்வீழ்ந்தது"

என்பது ஏழெழுத்தடி.

"விண்பாய்ந்தென மேற்றொடுத்தது

என்பது எட்டெழுத்தடி.

"காடோங்கிய கல்கெழுசுரம்"

என்பது ஒன்பதெழுத்தடி.

"கோடோங்கிய குறும்பொறைமருங்கு"

என்பது பத்தெழுத்தடி.

---

1. வஞ்சியடி அளவடியோடு ஒத்த சிறப்பின்மையாலும் அவற்றுக்குத் தளைவகை யில்லாமையாலும் ஆசிரியர் தொல்காப்பியனார் வஞ்சியடிகளை எடுத்தோதித் தொகை கூறாது விட்டார். எனினும் உரைவரைந்த பேராசிரியர் நாற்சீரடியாகிய அளவடிக்குரிய எழுத்தெண்ணிக்கையை யுளங்கொண்டு இரு-சீரடியாகிய வஞ்சியடிகளையுமெண்ணியுறழ்ந்து, இருநூற்று இருபத்துநான்காய் விரியும் வஞ்சியுரிச்சீர்களுள் வஞ்சியடியுள் வைத்து உறழத்தக்கன நூற்றெண்பத்-தொன்றேயெனவும் அவை உறழுங்கால் ஒருசீர்க்கு எழுத்துவகையால் அடி-நான்காக ($181 \times 4 = 724$) எழுநூற்று இருபத்துநான்காம் எனவும் வரை-யறுத்துக் கூறியுள்ளமை காணலாம்.

இவை நான்கடியும் நாலெழுத்து மாசெல்சுரம் நின்றுறழ்ந்த அடி.

"மழைபெய்தென வான்வெள்ளென்று"

என்பது எட்டெழுத்தடி.

"தழைபச்செனுந் தண்ணெனென்காவு"

என்பது ஒன்பதெழுத்தடி

"கமழ்பூந்துணர் கள்ளவிழ்தொறும்"

இது பத்தெழுத்தடி.

"இமிழ்தூங்கிசை யிசைசுருப்புவர"

என்பது பதினோரெழுத்தடி

இவை நான்கும் ஐயெழுத்துப் புலிசெல்சுரம் நின்றுறழ்ந்த அடி.

இனி[1] ஒன்பதெழுததுமுதற் பன்னிரண்டளவும் உயர மற்றையனபோல நான்கடி பெறும்.

"அமைவிடுகொடி யஞ்சியோர்ந்து"

என்பது ஒன்பதெழுத்தடி.

"கனைகுரலன கானத்தளகு"

என்பது பத்தெழுத்தடி.

"தினைப்புனத்தித ணயற்பிரியாது"

என்பது பதினோரெழுத்தடி.

"மனைக்குறமகள் கடைப்புறந்தரும்"

என்பது பன்னிரண்டெழுத்தடி.

இவ்வாறே ஒழிந்தனவும் உறழ்ந்து கொள்க.

மூன்றுபாவின்றுணைச் சிறப்பின்மையின் வஞ்சியடி ஈண்டுப் போதந்து கூறினானென்பது, ஒழிந்த முச்சீரடி சிறுவரவிற்றாகலின் அதற்குக் கூறிய திலனென்பது[2] (௫௭)

---

1. "ஆறெழுத்துப் புலிவருசுரம்' என்ற தொடரை எழுவாயாகக் கூட்டிப் பொருள் கொள்க.

2. ஆசிரியம், வெண்பா, கலியென்னும் மூன்று பாக்களின் அடிகளை நோக்க வஞ்சிப்பாவின் அடிகள் அத்துணைச் சிறப்பிலவாதலின் இங்கு அவற்றின் பின் வஞ்சிப்பாவின் அடிகளைக் கூறினார் ஆசிரியர். வஞ்சிப்பாவுக்குரிய குறள் சிந்து என்னும் இருவகையடிகளில் இருசீரடியாகிய குறளடியே பெரும்பான்மையும் பயிலச் சிந்தடியாகிய முச்சீரடி சிறுபான்மையாய் வருதலின் அதனை இங்குக் கூறாது விட்டார்.

**நச்சினார்க்கினியம் :**

இது வஞ்சியடி யுறழுமாறும் அது பெறுநிலனு முணர்த்திற்று.

(இ-ள்.) நாலெழுத்து முதலாகப் பதினான்கெழுத்தளவும் உறழுநிலையில, வஞ்சியடிக்கு. எ-று.[1]

முற்கூறிய அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் இருபத்துநான்குசீர் ஒரோன்று இருநிலைமையவாகவும் இருபத்தெட்டுச்சீர் ஒரோ-வொன்று நான்கு நிலைமையவாகவும் எட்டுச்சீர் ஒரோவொன்று எட்டு நிலைமையவாகவும் கொள்ளப்படும். அங்ஙனம்கொள்ளவே இருநூற்றிருபத்துநான்காம்.

அவற்றுள் இருநிலைமைப்படும் இருபத்துநான்கும் நேரீறெட்-டும், நிரையீறெட்டும், நேர்பீறு நான்கும், நிரைபீறு நான்குமாம். அவை மாபோகுவாய், மாவழங்குவாய், புலிபோகுவாய், புலி-வழங்குவாய், பாம்புசேர்வாய், பாம்புவருவாய், களிறுசேர்வாய், களிறுவருவாய் எனவும், மாசேர்சுரம்,மாவருசுரம், மாபோகுசுரம், மாவழங்குசுரம், புலிசேர்சுரம், புலிவருசுரம், புலிபோகுசுரம், புலிவழங்குசுரம் எனவும், மாசேர்காடு, மாவருகாடு, புலிசேர்-காடு, புலிவருகாடு எனவும், மாசேர்கடறு, மாவருகடறு, புலிசேர் கடறு, புலிவருகடறு எனவும் வரும். மாபோகுவாய் என்றதற்கு மாமேவுவாய் என முற்றுகரங்கொடுத்து இருநிலைமையாக்குக. ஒழிந்தனவற்றுட் குற்றுகரங்கட்கு மிவ்வாறே முற்றுகரம் பெய்-தொட்டுக. இவற்றுள் மாசேர்சுரத்திற்கு ஞாண் ஞாயிறு எனவும் மாவருசுரத்திற்கு மாவலியதெனவும் புலிசேர் சுரத்திற்கு வருஞாயிறு எனவும் புலிவருசுரத்திற்குத் திருவலியது எனவும் எழுத்துக்குறையுஞ் சொற்பெய்து இருநிலைமைபெய்க. இங்ஙனம் இருநிலைமையான் நாற்பத்தெட்டாயிற்று. இவற்றுள் ஏழெழுத்-துச்சீர் இரண்டாம்.

இனி நான்கு நிலைமைப்படும் சீர்இருபத்தெட்டும் நேரீறு-நான்கும், நிரையீறெட்டும். நேர்பீறெட்டும், நிரைபீறெட்டுமாம். அவை பாம்புபோகுவாய், பாம்புவழங்குவாய், களிறுபோகுவாய், களிறுவழங்குவாய் எனவும் பாம்புசேர்சுரம், பாம்புவருசுரம், பாம்புபோகுசுரம், பாம்புவழங்குசுரம், களிறுசேர்சுரம், களிறு-வருசுரம், களிறுபோகுசுரம், களிறுவழங்குசுரம் எனவும்

---

1. இச்சூத்திரவுரை பேராசிரியர் உரையினை முழுவதும் அடியொற்றி யமைந்துள்ளமை காண்க.

மாபோகுகாடு, மாவழங்குகாடு, புலிபோகுகாடு, புலிவழங்குகாடு, பாம்புசேர்காடு, பாம்புவருகாடு. களிறுசேர்காடு, களிறுவருகாடு எனவும், மாபோகுகடறு, மாவழங்குகடறு, புலிபோகுகடறு, புலிவழங்குகடறு, பாம்புசேர்கடறு, பாம்புவருகடறு, களிறு-சேர்கடறு, களிறுவருகடறு எனவும், இவற்றைப் பாம்புபோகு-வாய், மின்னுப்போகுவாய், பாம்புமேவுவாய், மின்னுமன்னுவாய் என ஒன்று நான்காக வாய்பாடுபடுத்து எல்லாவற்றோடும் ஒட்டுக. இவ் விருபத்தெட்டனுட் பாம்புசேர்சுரத்திற்குப் பாம்புசேர்வது, மின்னுச்சேர்சுரத்திற்கு மின்னுச்சேர்வது எனவும் பாம்புவருசுரத்திற்குப் பாம்புவலியது, மின்னுவருசுரத்திற்கு மின்னுவலியது எனவும், களிறுசேர்சுரத்திற்கு ஒளிறுஞாயிறு, அரவுசேர்சுரத்திற்குப் பரவுஞாயிறு எனவும், களிறுவருசுரத்திற்-குக் களிறுவலியது, அரவுவருசுரத்திற்கு அரவுவலியது எனவும், கொள்க. இங்ஙனம் நான்குநிலைமை கொள்ளவே நூற்றொரு பத்திரண்டாயிற்று. இவ்விருபத்தெட்டனுள் முற்றுகரம் பெய்-தால் ஏழெத்தாகுசீர் பதினாறும் எட்டெழுத்தாகுசீர் மூன்றுமாம்.

இனி எட்டுநிலைமைப்படுஞ் சீரெட்டும் நேர்பீறுநான்கும் நிரைபீறுநான்குமாம். அவை பாம்புபோகுகாடு, பாம்புவழங்கு-காடு, களிறுபோகுகாடு, களிறுவழங்குகாடு எனவும், பாம்புபோகு கடறு, பாம்புவழங்குகடறு, களிறுபோகுகடறு, களிறுவழங்கு-கடறு, எனவும் வரும். இவற்றுள் ஒன்றற்கு மூன்றுரியசை யுண்மையின் முதற்கணின்றவற்றை யுரியசை யிரண்டற்குந் தனித்தனி முற்றுகரம்பெய்து பின்னிரண்டற்கும் முற்றுகரம்-பெய்து நான்கு நிலைமை யெய்துவித்துப் பின்னர் ஈற்றினிரை உரியசையொன்றனையும்[1] முற்றுகரமாக்கி யதனோடு முன்னர் நின்றவற்றை வேறுவேறு முற்றுகரம் பெய்து நான்குநிலைமை யெய்துவிக்க எட்டாயிற்று. இவற்றுள் ஏழெழுத்தாஞ் சீர் பதினைந்தும் எட்டெழுத்தாஞ் சீர் ஆறும் ஒன்பதெழுத்தாஞ் சீர் ஒன்றுமாம்; ஆக இருநூற்றிருபத்துநான்காயிற்று.

"அறுபஃ தாக வகுத்த வஞ்சியுண்
மூவெண் சீர்க ளிருநிலைமை யெய்தி
நாலேழ் சீராக நான்குநிலை யெய்தி

1. ஈற்றினின்ற உரியசையொன்றனையும் - எனத்திருத்திக் கொள்க.

யிருநான் கிருசீ ரிருநான்கு நிலையெய்தி
யிருநூற் றிருபத்து நான்காய் விரியும்''

''அவற்று ளொன்பதெழுத் தாஞ்சீ ரொன்று
மிருநான் கெழுத்தா குஞ்சீ ரொன்பது
மேழெழுத் தெய்துவ முப்பத்து மூன்று
மாகநாற் பத்து மூன்று மாக
நூற்றெண் பத்தொன் றடியுற ழும்மே''

இனி யடியுறழாத நாற்பத்துமூன்று முறழுமாறு:- எட்டு நிலைமையெய்துவனவற்றில் அரவுவிரவுகுரவு என ஒன்ப-தெழுத்துச் சீரொன்று : நான்குநிலை யெய்துவனவற்றில் அரவு விரவுசுரம், புலிவிரவுகுரவு, அரவுவருகுரவு என எட்டெழுத்துச் சீர் மூன்று : எட்டுநிலைமை யெய்துவனவற்றில் அரவுவிரவு-குரவு, மின்னுவிரவுகுரவு, அரமேவுகுரவு, அரவுவிரவுகடறு, அரவு-வழங்குகுரவு, களிறுவிரவுகுரவு என எட்டெழுத்துச்சீர் ஆறு: ஆக எட்டெழுத்துச்சீர் ஒன்பது ; இரண்டுநிலைமை யெய்துவனவற்-றில் புலிவிரவுசுரம், புலிவருகுரவு என ஏழெழுத்துச்சீர் இரண்டு. நான்குநிலைமை யெய்துவனவற்றில் அரவுவிரவுவாய். மின்னு-விரவுசுரம், அரவுவருசுரம், அரவுமேவுசுரம், அரவுவழங்குசுரம், களிறுவிரவுசுரம், புலிவிரவுகாவு, அரவுவருகாவு, மாவிரவுகுரவு, புலிமேவுகுரவு. புலிவிரவுகடறு, புலிவழங்குகுரவு, மின்னுவரு-குரவு அரவுமேவுகுரவு, அரவுவருகடறு, களிறுவருகுரவு என ஏழெழுத்துச்சீர் பதினாறு. எட்டுநிலைமை யெய்துவனவற்றில் மின்னுவிரவுகாவு, அரவுமேவுகாவு, அரவுவிரவுகாடு, அரவுவழங்கு காவு, களிறுவிரவுகாவு மின்னுமேவுகாவு, மின்னுவிரவுகடறு, மின்னுவழங்குகுரவு, பாம்புவிரவுகுரவு, அரவுமேவுகடறு. அரவு-போகுகுரவு, களிறுமேவுகுரவு, அரவுவழங்குகடறு, களிறுவிரவு-கடறு, களிறுவழங்குகுரவு என ஏழெழுத்துச்சீர் பதினைந்து. ஆக ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்று.

இனி ஒழிந்த நூற்றெண்பத்தொன்றும் அடியுறழுமாறு :-

''மூவெழுத்துச்சீர் ஆறாதி யொன்பானு
நாலெழுத் துச்சீர் ஏழாதி பத்தும்
ஐயெழுத் துச்சீர் எட்டாதி பதினொன்றும்
ஆறெழுத் துச்சீர் ஒன்பது முதலீ

ராறு முயருங் காலை மேல்வருஞ்
சீர்களு மூன்று நான்கு மைந்து
மாறு மெழுத்தா னாகுஞ் சீர்வந்
தாங்கவ் வெண்களை யுறழ்ந்த வடித்தொகை
எழுநூற் றிருபத்து நான்கென மொழிப"

இங்ஙனங் கூறியவற்றான் இயற்சீர் கட்டளையடிக்குஉறழா வென்றுணர்க.

உ - ம். 'கால்காய்ந்தது காம்புநீடி'
என்பது ஆறெழுத்தடி.

'நல்கூர்ந்தது வில்லோர்சுரம்'
என்பது ஏழெழுத்தடி.

'வான்பெய்தது மண்குளிர்ப்புற'
என்பது எட்டெழுத்தடி.

'தேன்பெய்தது செழுநகர்தொறும்'
என்பது ஒன்பெதழுத்தடி; இவை மூவெழுத்துச்சீர் மாசேர்காடு நான்கடியும் வந்தவாறு; ஒழிந்தனவுமன்ன.

'மண்மாய்ந்தென வுள்வீழ்ந்தது'
என்பது ஏழெழுத்தடி.

'விணமாய்ந்தென மேற்றொடுத்தது'
என்பது எட்டெழுத்தடி.

'காடோங்கிய கல்கெழுசுரம்'
என்பது ஒன்பதெழுத்தடி

'கோடோங்கிய குறும்பொறைமருங்கு'
என்பது பத்தெழுத்தடி. இவை நான்கடி நாலெழுத்து மாசேர்சுரம் நின்றுறழ்ந்த வடி: ஒழிந்தனவும் அன்ன.

'மழைபெய்தென வான்வெள்ளென்று'
என்பது எட்டெழுத்தடி.

'தழைபச்செனத் தண்ணென்காவு'
என்பது ஒன்பதெழுத்தடி.

'கமழ்பூந்துணர் கள்ளவிழ்தொறும்'
என்பது பத்தெழுத்தடி.

'இமிழ்தூங்கிசை யினச்சுரும்புவர'

என்பது பதினோரெழுத்தடி. இவை நான்கும் ஐயெழுத்துப்-புலிசேர்சுரம் நின்றுறழ்ந்தவடி. இனி ஆறெழுத்துச்சீர் வருமாறு:

'அமைவிடுநொடி யஞ்சியோர்த்து'

என்பது ஒன்பதெழுத்தடி.

'கனைகுரலன கானத்தளகு'

என்பது பத்தெழுத்தடி.

'தினைப்புனத்தித ணயற்பிரியாது'

என்பது பதினோரெழுத்தடி.

'மனைக்குறமகள் கடைப்புறந்தரும்'

என்பது பன்னீரெழுத்தடி. இவ்வாறே யொழிந்தனவு முறழ்ந்து-கொள்க. வஞ்சி மூன்றுபாவும்போலச் சிறப்பின்மையின் ஈண்டுப்-போதந்து கூறினார். ஒழிந்த முச்சீரடி சிறுவரவிற்றாகலின் அதற்குக் கட்டளையடிக்குக் கூறிற்றிலர்.

**ஆய்வுரை :**

இது வஞ்சிப்பாவிற் பயிலும் அடிவரையறைபற்றியதோர் ஐயம் அகற்றுகின்றது.

(இ-ள்) குறளடியின் சிற்றெல்லையாகிய நாலெழுத்து முதலாக அளவடியின் பேரெல்லையாகிய பதினான்கெழுத்தளவும் உறழும் நிலையினை வஞ்சியடிகள் உடையன அல்ல எ-று.

எனவே குறளடியின் பேரெல்லையாகிய ஆறெழுத்து முதலாக அளவடியின் நடுவெல்லையாகிய பன்னிரண்டெழுத்-தளவும் வஞ்சியடி உறழும் எனவும், எனவே வஞ்சியடிக்கு நிலம் ஏழென்பது சொல்லியவாறாம் எனவும் கொள்வர் பேராசிரியர்.

ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா என்னும் மூவகைப் பாக்-களுக்கும் உரிய நாற்சீரடியின்கண்ணேயே ஐவகையடியும் வந்து உறழக் கட்டளை கூறியது கண்ட மாணவன், நாற்சீரடி பெறாத வஞ்சிப்பாவிற்குரிய குறளடி சிந்தடி என்பவற்றிலும் இவ்வாறு எழுத்தளவுபற்றிச் சீர்களை உறழ்ந்து காணுதலுண்டோ என வினவினாற்கு, 'அவை அங்ஙனம் உறழும் நிலைஇல' என இச்-சூத்திரத்தால் ஐயமகற்றினார் தொல்காப்பியனார் எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

௫௫ அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை ஒன்றாத் தன்மை யான.

**இளம்பூரணம் :**

என்—எனின். வெண்பாவிற்குரிய அடியுந் தளையும் வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) அளவடியும் சிந்தடியும் வெண்பாவிற்குரிய; தளைவகை ஒன்றாத் தன்மைக்கண் என்றவாறு [1]

எனவே, ஒன்றுந் தன்மைக்கண் நெடிலடியும் சில வரும் என்று கொள்க.[2]

இச்சூத்திரத்தால் வெண்பாவிற் குரியதோர் தளை உணர்த்தினாராம். சிந்தடியாவது ஏழெழுத்து முதல் ஒன்பதெழுத்தீறாகிய அடி. அளவடியாவது பத்தெழுத்து முதலாகப் பதினான்கெழுத்தீறாகிய அடி. தளைவகை ஒன்றாமையாவது, நிலைமொழியும் வருமொழியும் ஆகிய இயற்சீர் நேராயொன்றுவதும் நிரையாயொன்றுவதுமன்றி மாறுபட வருவது. அவ்வழி நிரையீற்றியற்சீர் நிற்ப நேர்வரினும் நேரீற்றியற்சீர் நிற்ப நிரை வரினும் இயற்சீர் வெண்டளையாம். இனி ஒன்றுந் தன்மையாவது வெண்சீர் நிற்க வருஞ்சீர் முதலசையோ டொன்றுவது வெண்டளையாம். இவ்விரண்டும் வெண்பாவிற்குத் தளையாமென்று கொள்க.

உதாரணம்

"மட்டுத்தா னுண்டு மணஞ்சேர்ந்து விட்டுக்
களியானை கொண்டுவா வென்றான் அளியார்முன்
யாரோ வெதிர்நிற் பவர்." (யாப். வி. பக் ௪௬௩)

1. ஒன்றாமையாற்கொள்ளப்படும் இயற்சீர் வெண்டளைக்கண் பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்தீறாய அளவடியும் ஏழெழுத்துமுதல் ஒன்பதெழுத்தீறாய சிந்தடியும் வெண்பாவுக்கு உரியன என்பதாம்.

தளைவகையொன்றாத்தன்மையாவது நிரையீற் றியற்சீர்நிற்ப நேரசையும், நேரியற்றியற்சீர்நிற்ப நிரையசையும் என மாறாகத் தளைக்கப்படுதல். இஃது இயற்சீர் வெண்டளையெனப்படும்.

2. தளைவகையொன்றுந்தமையாவது வெண்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு நேராயொன்றுதல். இதுவெண்சீர் வெண்டளையெனப்படும். தளைவகை ஒன்றாத் தன்மைக்கண் (அஃதாவது இயற்சீர் வெண்டளைவருமிடத்து) அளவடியும் சிந்தடியும் வெண்பாவுக்கு உரிய எனவே, தளைவகையொன்றுந் தன்மைக்கண் (அஃதாவது வெண்சீர் வெண்டளைவருமிடத்து) நெடிலடியும் சில வரும் என்பது பெறப்படும்.

இஃது ஏழெழுத்தான் வந்த அடி.

"இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது."

இஃது எட்டெழுத்தான் வந்த அடி. (நாலடி. ௩௬)

"சென்று முகந்து நுதல்சுட்டி மாறேரார்த்து
வென்று வியர்த்தா னென்கோ" (யாப் வி. பக ௪௬௪)

இஃது ஒன்பதெழுத்தான் வந்த அடி.

'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு.' (குறள் க௨)

இது பத்தெழுத்தான் வந்த அடி.

'ஏரி னுழாஅர் உழவர் புயலென்னும்.' (குறள். க௪)

இது பதினோரெழுத்தான் வந்த அடி

'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்.' (குறள் ௩)

இது பன்னிரண்டெழுத்தான் வந்த அடி.

'இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்.' (குறள் ரு)

இது பதின்மூன்றெழுத்தான் வந்த அடி.

'கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்.' (குறள் உ)

இது பதினான்கெழுத்தான் வந்த அடி.

"முகமறியார் மூதுணர்ந்தார் முள்ளெயிற்றார் காமம்
அகமறைந்தான் வாழுமென் றார—மகமறையாம்
மன்னைநீ வார்குழை வையெயிற்றா யென்றோமற்
றென்னையும் வாழு மெனின்." (யாப். வி. பக். ௪கரு)

இது பதினைந்தெழுத்தான் வந்த அடி,

'படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்.'
(குறள். ௬0௬)

இது பதினாறெழுத்தான் வந்த அடி. இவையிரண்டும் நெடிலடி
(ருரு)

**பேராசிரியம் :**

இஃது ஆசிரியவடிக்கும் அதன் நடைத்தாகிய வஞ்சியடிக்கும் உரிய நிலங்கூறி வெண்பாவிற்குரிய நிலங் கூறுகின்றது.

(இ - ள்.) அளவடி ஐந்துஞ் சிந்தடி மூன்றுமென எட்டு நிலம்பெறுந் தளைவிரவாதவாற்றான் வெண்பாவடி (எ - று)

அளவடி முதற்கூறியதென்னையெனின், மேல் நிறுத்த முறையாற்கொள்ளாது ஈண்டுச் சொல்லும் முறைமையாற் கூறினானென்பது.[1]

"நின்று நினைந்து நெடிது பெயர்ந்து"
என்பது ஏழெழுத்தடி.

"அறிவறிந்தார்த் தேறியக்கா லஞ்சுவ தில்லை"
என்பது பதினான்கெழுத்தடி.

இதனும்பர் நெடிலடியானும் வெண்பாவடி வருவன உள. அவை கட்டளையடி யெனப்படா, செப்பிக்கூறும் பாவாகாது செய்கை தோன்றியே நிற்குமாகலினென்பது.[2] பிறிது காரணம் உண்டாயினும் அறிந்துகொள்க. தளைவகை ஒன்றாமையென்பது[3] வெண்பாவும் வெண்பா நடைத்தாகிய கலிப்பாவும் மயங்காமை காரணத்தானென்றவாறு. கலியோசை மயங்கி வருவனவும் வெண்பாவடியு ளுள. அவை நெடிலடி மூன்றானும் வருமெனக் கொள்க. ஒரோவடியே வெண்பா வடியுமாய்த், துள்ளிக் கலி யடியுமாகித் தளைவகை ஒன்றுமாகலான் அம்மயக்கந் தீராதென[4]

---

1, சிந்து, அளவு என மேல் எழுத்தெண்ணி நிறுத்த வரிசையின்றி 'அளவும் சிந்தும்' என இங்கு முறைமாறிக் கூறியது, இங்கு வெண்பாவடிக்குச் சிறப்புரிமை யுடைய நிலங்கள் இவை என விதி சொல்லும் முறையால் கூறினார் என்பதாம்.

2. இதன் உம்பர் - (அளவடிக்குரிய பதினான்கெழுத்தாகிய) இவ்வெல்லைக்குமேல். இங்கு நெடிலடியென்றது, பதினைந்து முதல் பதினேழெழுத்துவரையமைந்த நாற்சீரடியாகிய கட்டளையடியினை. இவ்வாறு பதினாலெழுத்தடியின் மிக்கன செப்பலோசையினவாகாது துள்ளுதலாகிய செய்கைதோன்ற நிற்குமாதலால், அவை கட்டளையடி யெனப்படா; சீர் வகையடியெனவே கொள்ளப்படும் என்பதாம். 'செய்கைதோன்றியே' என்பது 'செய்கைதோன்றிய' என்றிருத்தல் பொருத்தமாகும். தோன்றிய-தோன்ற .

3. 'தளைவகையொன்றாத் தன்மையான் என்பது'' என்றிருத்தல் வேண்டும். ஒன்றுதல் விரவுதல்; ஓரேயடி வெண்பாவுக்குரிய செப்பலோசைக்கும் கலிப்பாவுக்குரிய துள்ளலோசைக்கும் பொதுவாக அமைதல். ஒன்றாத்தன்மையாவது அவ்வாறு அடியொன்றே வெண்பாவடியெனவும் கலியடி யெனவும் இருநிலைமையும் பொருந்த மயங்கித் தோன்றாது கலியடியின் வேறுபட்டு வெண்பாவடியே யாகத் தனித்து அமைதல்.

4. ''அம்மயக்கந் தராதன' என்றிருத்தல் பொருட்பொருத்தமுடையதாகும். பதினைந்து, பதினாறு, பதினேழெழுத்துக்களான் இயன்ற நெடிலடி மூன்றாலும் வரும் வெண்பாவடிகள் கலியோசையோடு ஒன்றி மயங்கிவருவனவாதலின் அம்மயக்கந் தராதனவாகிய 'அளவும் சிந்தும் வெள்ளைக்கு உரிய'

'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய'
என்றானென்பது.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்"
என்றக்கால், இதனை

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (தொல், செய்-11)
என்றதனாற் கலியோசை பிறப்பவுஞ் சொல்லிக் கண்டுகொள்க.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்
மாவருவாய் தேமா வரகு"
என்றிதனையே ஓசையூட்ட வெண்பாவாயிற்று. இது,

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாற்றினரே"
எனக் கலியோசையாயினவாறறிக. (ருஅ)

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஆசிரியவடிக்கும் அதனடைத்தாகிய வஞ்சியடிக்கும் உரிய நிலங்கூறி வெண்பாவிற்குரிய நிலங்கூறுகின்றது.

(இ-ள்) அளவடியைந்தும் சிந்தடிமூன்றும் என்ற எட்டுநிலனும் வெண்பாவிற்குரிய; தளைவகையொன்றாத தன்மையான்.[1] எ-று.

'ஒன்றாத்தன்மையான்' என்றதனானே ஒன்றிய ஆகாவாயிற்று[2]. அஃது இயற்சீரொன்றிய வாசிரியத்தளை வாராமையும் வெண்சீர்நிற்ப வெண்சீர் வந்தொன்றிய வெண்டளை செப்பலோசைக்குந் துள்ளலோசைக்கு மொப்பவுரியவாகலின் அது வாராவென்றலும் கூறிற்றாம். ஒன்றாதென்றதனானே கலித்தளை யொன்றுமென்று பொருடருமேனும் அஃதிலக்கணமன்மையுணர்க. எனவே முற்கூறிய இயற்சீர்

---

முன் பக்கத் தொடர்ச்சி

என்றார் ஆசிரியர். எனவே சிந்தடிக்குரிய 7, 8, 9, எழுத்துக்களும் அளவடிக்குரிய 10, 11, 12, 13, 14, எழுத்துக்களும் ஆகிய எட்டு நிலங்களும் வெண்பாவுக்குரியன என்பதாம்.

1. இயற்சீர் நின்று வருஞ்சீர் முதலசையோடு நேர்முன்நேர், நிரை முன்நிரையாக ஒன்றாமையும், வெண்சீர் நிற்ப வெண்சீர் வந்து ஒன்றாமையும் பெற்ற வெண்பா, கட்டளையடிகளாகிய அளவடியைந்தும் சிந்தடி மூன்றும் என்ற எட்டு நிலமும் பெறும் என்பதாம்,

2. மேற்குறித்தவாறு ஒன்றாத தன்மைக்கண் அளவடியும் சிந்தடியும் உரிய என்றதனானே ஒன்றியன கட்டளையடிக்கு ஆகா என்றாராயிற்று.

வெண்டளையையும் வெண்சீரியற்சீரோடு தட்ட வெண்சீர்-வெண்டளையையும் விலக்காமையுணர்க

உ-ம் 'நின்று நினைந்து நெடிது பெயர்ந்து'
என்பது ஏழெழுத்தடியா யிசைநிலை நிறையநின்ற அசைச்சீர் இயற்சீராய்த் தட்டது.

'கற்றவரைச் சேர்வர் கலைநிறையுங் காட்சியார்
பெற்றன மென்றே பெயர்ந்து'

இது பதினான்கெழுத்தடி.

'அறிவறிந்தார்த் தேற்றியக்கா லஞ்சுவ தில்லை'

இது பதினான்கெழுத்தென்னுஞ் சீர்வகையொன்றலிற் கட்டளை-யாகா. இதனும்பர் நெடிலடியான் வந்தன சீர்வகை யடியாம்.

'வானவரு நான்முகனும் வாசவனு மாமுனிவ
ரானவருங் காணா வரன்'

எனப் பதினாறெழுத்தான்வந்த வெண்சீரொன்றிய சீர்வகையடி.

'வானவரு நான்முகனும் வாசவனுங் காணாரே'

என்பது துள்ளலோசைக்குணர்க; இவ்வெண்பாவை ஏந்திசைச்-செப்பலெனப் பின்னுள்ளோர் கூறுவர். அவர் கூறும் ஒழுகிசையுந் தூங்கிசையும் பெரும்பான்மை பதினான்கெழுத்தி னிகந்து வாரா வென்றுணர்க. முச்சீரான்வரும் ஈற்றடியு முதலிய மூன்று நிலத்தி னிகந்து வாராமை யுரையிற் கொள்க.[1]

'மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்
மாவருவாய் தேமா வரகு'

இது

'மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாற்றினரே'

என இரண்டற்கும் ஒப்ப நின்றவாறுங் காண்க. இதனானே மேல் ஈரடிக் கூட்டத்துத் தொடைகொள்ளுங்காற் கலிக்கு வெண் சீரோடு தட்ட வெண்சீர் வெண்டளை கொள்ளுமாறுணர்க.

**ஆய்வுரை :**

இது வெண்பாவிற்குரிய அடியும் தளையும் வரையறுத்து உணர்த்துகின்றது.

---

1. ''முச்சீரான்வரும் ஈற்றடியும் (ஏழெழுத்து) முதலிய மூன்று நிலத்தி-னிகந்து வாராமை யுரையிற்கொள்க'' என்றிருத்தல் வேண்டும். எனவே ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்தும் ஆகிய மூன்று நிலங்கள் வெண்பாவின் ஈற்றடியாகிய சிந்தடிக்குரியன என்றாராயிற்று.

(இ-ள்) அளவடியும் சிந்தடியும் வெண்பாவிற்கு உரியன; (அவை உரியவாதல்) தளைவகை ஒன்றாத் தன்மைக்கண் எ-று.

"எனவே தளைவகை ஒன்றுந்தன்மைக்கண் நெடிலடியுஞ்சில வருமென்று கொள்க" எனவும், தளைவகை ஒன்றாமையாவது, நிலைமொழியும் வருமொழியுமாகிய இயற்சீர் நேராய் ஒன்றுவதும் நிரையாய் ஒன்றுவதும் அன்றி மாறுபட வருவது; அவ்வழி நிரையீற்றியற்சீர் நிற்ப நேர்வரினும், நேரீற்றியற்சீர் நிற்ப நிரைவரினும் இயற்சீர் வெண்டளையாம் எனவும், ஒன்றுந் தன்மையாவது வெண்சீர்நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது வெண்சீர் வெண்டளையாம் எனவும் இவ்விரண்டும் வெண்பாவிற்குத் தளையாம் எனவும், ஒன்றாத் தன்மைய தாகிய இயற்சீர்வெண்டளை வருமிடத்து அளவடியும் சிந்தடியும் வெண்பாவுக்கு உரிய என இச்சூத்திரத்தாற் கூறவே, ஒன்றுந் தன்மையதாகிய வெண்சீர் வெண்டளை வருமிடத்து நெடிலடியும் சிலவரும் என்பது பெறப்படும் எனவும் இச்சூத்திரப் பொருளை விளக்குவர் இளம்பூரணர்.

இனி, தளைவகை ஒன்றுந் தன்மையாவது, வெண்பாவும் வெண்பா நடைத்தாகிய கலிப்பாவும் அடிவகையால் ஒத்தன-வாதலின் அடியொன்றே வெண்பாவுக்குரிய செப்பலோசைக்கும் கலிப்பாவுக்குரிய துள்ளலோசைக்கும் பொதுவாய் மயங்கி வருதல் எனவும், ஒன்றாத்தன்மையாவது, அங்ஙனம் இரு பாவுக்கும் பொதுவாய் மயங்கி வாராது கலியின் வேறுபட்டு வெண்பா அடியேயாகத் தனித்து வருதல் எனவும், கலியோசை மயங்கி வரும் வெண்பா அடிகளும் உள, அவை நெடிலடி மூன்றானும் வருமெனவும் கூறுவர் பேராசிரியர்.

**ருகூ அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி**
**இருநெடில் அடியுங் கலியிற் குரிய.**

**இளம்பூரணம் :**

என்—எனின். இது கலிப்பாவிற்கு அடியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அளவடியின் மிக்க பதின்மூன்றெழுத்து முதலாக[1] நெடிலடியுங் கழிநெடிலடியுமாகிய இருபதெழுத்தின்காறும் வரும் அடி கலிப்பாவிற்கு அடியாம் என்றவாறு.

1. அளவடியென்பது, பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்து முடியவரும் அடி. அவ்வளவடிகள் ஐந்தனுள் பன்னிரண்டெழுத்தாகிய நடுப்பகுதியைக்

இவ்விலக்கணங் கலித்தளை வருமிடத்தே கொள்க. கலியடி-யென்னாது கலித்தளையடி என்றதூஉம் இவ்வேறுபாடு குறித்-தென்க.[1]

'மரல்சாய மலைவெம்ப மந்தி உயங்க.' (கலித். ௧௩)
இது பதின்மூன்றெழுத்தான் வந்தது.

'வீங்குநீர் அவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட.'
இது பதினான்கெழுத்தான் வந்த அடி. (கலித் ௬௪)

'அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்.'
இது பதினைந்தெழுத்தான் வந்த அடி. (கலித். ௧௧)

'அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்.'
இது பதினாறெழுத்தான் வந்த அடி. (கலித் ௧௧)

'முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையென.'
இது பதினேழெழுத்தான் வந்த அடி. (கலித் ௫௬)

'அறனின்ற விதையொழியா னவலங்கொண் டதுநினையான்.'
இது பதினெட்டெழுத்தான் வந்த அடி. (யாப்.வி பக் ௪௬அ)

'உகுபனிகண் உறைப்பவுநீ ஒழிபொல்லாய் செலவலித்தல்'.
இது பத்தொன்பதெழுத்தான் வந்த அடி. (யாப்.வி பக்.௪௬அ)

'நிலங்கிளையா நெடிதுயிரா நிறைதளரா நிரைதொடியாள்''.
(யாப். வி. பக். ௪௬அ)
இது இருபதெழுத்தான் வந்த அடி. (௫௬)

---

முன் பக்கத் தொடர்ச்சி

கடந்து எழுத்து மிக்குவருவன பதின்மூன்றெழுத்தும் பதினான்கெழுத்துமாகிய அடிகளாதலின் அவை 'அளவடி மிகுதி' எனப்பட்டன. இருநெடிலடியாவன நெடிலடியும் கழிநெடிலடியும்.

1. இவ்வெழுத்து வரையறை வெண்சீர்நிற்ப வருஞ்சீர் நிரையாய் வரும் கலித்தளை யடியின்கண்ணேயே கொள்ளத்தக்கது என்பார், 'இவ்விலக்கணங் கலித்தளை வரு மிடத்தே கொள்க' எனவும், 'கலியடி' எனப் பொதுப்படக்-கூறாது, 'கலித்தளையடி' (செய். உ௪.) என ஆசிரியர் தெரித்து மொழிந்ததும் இவ்வேறுபாடு கருதியே எனவும் விளக்கந்தருவர் இளம்பூரணர்.

**பேராசிரியம் :**

இது முறையானே கலிக்குரிய நிலமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஐவகையடியினும் அளவடி மிகுதியாகிய பதின் மூன்றெழுத்தும் பதினான்கெழுத்தும் நெடிலடியும் கழிநெடிலடியுங் கலியடிக்குரிய (எ - று).

எனவே, அதுவுந் தன் முதற்பாவாகிய வெண்பாப் போல எட்டுநிலம் பெறுவதாயிற்று.[1] ஒழிந்த அடி மூன்றனோடும் ஒவ்வாது மிக்க நிலம் இரண்டனையும் மிகுதியென்றானென்பது.[2] இனி,

"ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே" (தொல் செய்.38)

என்பதே கொண்டு பதினோரெழுத்தடி முதல் நான்கு நிலனும் அளவடி மிகுதியெனப்படும் எனவும், அவை கலிக்குரிய எனவுங் கொள்வாருமுளர்[3] அங்ஙனங் கொள்வார்க்கு,

"ஞாயிறு கடியாறு கடியாறு கடியாறு'

என்றதனைப் பதினோரெழுத்தடியென்று காட்டல் வேண்டும். அஃது ஆசிரியவடியாம். ஆகலான் அற்றன்றென்பது. இனி,

ஞாயிறு மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்'

என்பதோவெனின், அது கலிப்பாவோடு தளைவகை ஒன்றிய வெண்பாவடியாகலானும், நிரைமுதல் வெண்சீர்வந்து நிரை தட்பினன்றி ஞாயிறு என நின்ற நிரையீற்று இயற்சீர்ப்பின்னர் நேர்வந்தாற் கலித்தளையாகாது வெண்டளையாமாகலானுங்

---

1. கலிப்பாவாகிய அது, தன் தோற்றத்திற்கு அடிப்படையாயுள்ள வெண்பாப் போன்று எட்டுநிலம் பெறும் என்பதாயிற்று.

2. 10, 11, 12, 13, 14 என்னும் எழுத்துக்களாலாய ஐவகையளவடிகளுள் 10, 11, 12 எழுத்துக்களாலாகிய மூன்றடிகளோடும் ஒவ்வாது பதின்மூன்றும், பதினான்கும் ஆக எழுத்துக்களால் மிகுந்த அடியிரண்டனையும் 'அளவடி மிகுதி' என்றார். இருநெடிலடி யாவன : நெடிலடியும், கழிநெடிலடியும்.

3, 'பத்தெழுத்தென்ப நேரடிக்களவே' என அதன் சிற்றெல்லை கூறி அதன் மேல் 'ஒத்தநாலெழுத்து' என ஆசிரியர் குறிப்பிடுதல் கொண்டு, பதினோரெழுத்து முதல் நான்கு நிலனும் அளவடி மிகுதியெனக்கொள்வாருமுளர். இங்ஙனங்-கொள்வார் இன்னாரெனத் தெரியவில்லை. இங்ஙனங்கொள்வோர் கலிப்பாவுக்-குரிய பதினோரெழுத்தடியாக

'ஞாயிறு கடியாறு கடியாறு கடியாறு'

என்பதனைக் காட்டுவர், இஃது ஆசிரியவடியாவதன்றிக் கலியடியாகாது.

கட்டளையடிக்கு அவ்வாறு கோடல் குற்றமென்பது. அல்லதூஉங் கலிப்பாவிற்குப் பத்துநிலங் கொள்ளிற் கட்டளையடி அறுநூற் றிருபத்தைந்தன்றிப் பல்குமென்பது [1] (௫௯)

## நச்சினார்க்கினியம் :

இது முறையானே கலிக்குரிய நிலங் கூறுகின்றது.

(இ-ள்.) இருநெடிலடியும் எ-து நெடிலடியுங் கழிநெடிலடியும். அளவடி ......... தோன்றி எ-து அளவடிக்குரித்தென ஐவகையடியின் மிகுதியாகிய பதின்மூன்றும் பதினான்குமாகிய எழுத்துக்களோடு தோற்றப்பட்டு. கலியிற்குரிய எ-து கலிப்பாவிற் குரியவாம். எ று.

அளவடி யைந்தனுள் மிகுதியெனவே பதின்மூன்றும் பதினான்குமென்பது பெறுதும். இனிச் சீர்வகையடியாய் இந்நிலங்களைத் தப்பி வருவனவுங் கொள்க.[2]

உ-ம் ' ஐயிரு தலையி னரக்கர் கோமான்'' (குறிஞ்சிக்கலி)
''சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தையர்'' (பாலைக்கலி- )

எனப் பதினொன்றும் பன்னிரண்டும் எழுத்தான் வந்தன.

## ஆய்வுரை :

இது, கலிப்பாவிற்குரிய கட்டளையடியாமாறு கூறுகின்றது.

(இ-ள்) அளவடியின் மிக்க பதின்மூன்றெழுத்து முதலாக நெடிலடியும் கழிநெடிலடியும் ஆகிய இருபதெழுத்தின்காறும் வரும் அடிகள் கலிப்பாவிற்கு உரியன எ-று.

---

1. இனி, 'ஞாயிறு மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்' என்பதனைக் காட்டின் அது கலிப்பாவோடு தளைவகையொன்றிய வெண்பாவடியாகும். அது கலியடியாகவேண்டுமாயின் 'ஞாயிறு' என்னும் நிரையீற்றியற்சீர்க்குப்பின் 'புலி-சேர்வாய்' என நிரைமுதல் வெண்சீர் வந்து தளைத்தல் வேண்டும். 'ஞாயிறு மாசேர்வாய்' என நிரையீற்றியற்சீர்ப்பின் நேர்வந்தமையால் கலித்தளையாகாது வெண்டளையேயாகும். அன்றியும் கலிப்பாவிற்குப் பதின்மூன்றெழுத்துமுதல் இருபதெழுத்துவரை எட்டு நிலமே கொள்ளாது பதினோரெழுத்தும் பன்னிரண்டழுத்தும் என இரண்டு நிலன் ஏற்றிப் பத்துநிலங் கொண்டால் கட்டளையடி 625 என மேற்குறித்த வரையறையைக் கடந்து மேலும்பலவாய் மிகும். ஆகவே பதினோரெழுத்து முதலாகக் கொள்ளுதல் குற்றமாம் என்பது.

2. ஈண்டுத் தப்பி வருதலாவது பதின்மூன்றும் பதினான்கும் ஆகிய எழுத்தளவிற் பிறழ்ந்து பதினொன்றும் பன்னிரண்டும் ஆகக் குறைந்து வருதல்.

அளவடி என்றது, பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்-தளவும் உள்ள எழுத்துக்களாலாய அடிகளை அளவடி மிகுதி-யென்றது, மேற்குறித்த அளவடி ஐந்தனுள் பதின்மூன்றும் பதினான்கும் ஆகிய எழுத்துக்களாலாய அடியினை. இரு நெடிலடியாவன நெடிலடியும் கழிநெடிலடியும் ஆகிய அடிகள்.

**ருஎ நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்டல்[1]**
**வரைநிலை இன்றே அவ்வடிக் கென்ப.**

## இளம்பூரணம் :

என் எனின், கலித்தளையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட அடி கலித்தளை தட்ட வழியே கொள்ளப்படுவது என உணர்த்தியவாறாம். வெண்-பாவுரிச்சீர் நிற்ப நிரைமுதல் வெண்சீர்வந்து அதன்கண் நிரை யாய்த் தளைத்தல் கலியடிக்கு வரைநிலையில்லை என்ற-வாறு.[2]

'நிரைதட்டல்' என்றதனால் பிறிதாகிவருஞ்சீர் முதலாகிய நிரையோடு தளைப்பினுங் கலித்தளையாம் என்று கொள்க.[3]

நிரைமுதல் வெண்சீர் என்பது, உய்த்துணர்ந்து கொள்ளப்-பட்டது.[4]

உதாரணம் மேற்காட்டிய அடிகளுட் காண்க. (ருஎ)

## பேராசிரியம் :

இதுவும், கலித்தளை விகற்பங் கூறுகின்றது,

---

1. 'தட்பினும்' என்பது, பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

2. வெண்சீர் முதல் நிற்ப அதன்முன் நிரைமுதலாகிய வெண்சீர் வந்து நேர்முன் நிரையாய்த் தளைத்து நிற்றல் கட்டளையடியாகிய அக் கலியடிக்கு விலக்கும் நிலைமையில்லை எ-று.

3. வெண்சீர் நின்று நிரைதட்டல் எனப் பொதுப்படக் கூறவே பிறிதாகி-வருஞ்சீர் முதலாகிய நிரையொடு தளைத்து நிற்றலும் கலித்தளையாம் என்றவாறு.

4. 'நிரை முதல் வெண்சீர் வந்து' என வருஞ்சீரைக் குறிப்பிட்டுரைக்கவே அதன்முன் நின்ற சீரும் நிரைமுதல் வெண்சீர் என்பது உய்த்துணர்ந்து கொள்ளப்-பட்டது என்றார் இளம்பூரணர். 'நிரைமுதல் வெண்சீர் வந்து' என வருஞ்சீர் இதுவெனத்தெரித்து மொழிந்தமையால் முதல்நின்றசீர் நிரையீற்றியற்சீரும் நிரையீற்றாசிரியவுரிச்சீரும் ஆம் என உய்த்துணர்ந்துரைப்பர் பேராசிரியர்.

(இ - ள்) நிரையீற்றியற்சீரும் நிரையீற்றாசிரியவுரிச்சீரும் நிற்ப[1] நிரைமுதல் வெண்சீர் வந்து நிரையொன்றியக்காலுங் கலித்தளையாம் (எ - று).

"மணிபுரை திருமார்பின் மறுத்தயங்கத் தோன்றுங்கால்" என்புழித் 'திருமார்பின்' என நிரைமுதல் வெண்சீர் வந்து 'மணிபுரை' யென்னுஞ்சீர் இறுதி நிரையொடு தட்டுக் கலித்தளை யாயிற்று. எனவே, நிரைமுதலியற்சீர் வந்து நிரைதட்பினும் நேர்முதல் வெண்சீர் வந்து ஒன்றாதொழியினும் அது கட்டளை வகையாற் கலியடியாகாதென்றவாறு; என்னை? துள்ளாத இயற்சீர்ப்பின் நிரைமுதல்வெண்சீர் வந்து துள்ளுவிக்கல் வேண்டுமாதலானும், ஞாயிறு மாசேர்வா யென்பது வெண்பா வடியுமாம் ஆகலானுமென்பது. 'அவ்அடிக்கென்ப' என்றதனான் இதுவுங் கட்டளையடிக்கே யென்பது கொள்க.[1] மற்று நிரைமுதல் வெண்சீர் வருவது, முதனின்ற இயற்சீர்ப்பின்னர் இடைநின்ற இயற்சீர்ப்பின்னரென்ப தறியுமாறென்னையெனின், அங்ஙனம் வரையாது கூறினமையின் முதற்கண்ணதே இவ்விதியென்ப தாம். அல்லதூஉம் அவ்வாறு இயற்சீரினை இடையும் வருமென்று கொள்ளிற் பதின்மூன்றெழுத்திற் சுருங்கிய நிலனும் அது பெறுவான் செல்லும். செல்லவே கலியோசை இனிது பெறலாகாவென மறுக்க, என்றார்க்குப் பின்வருஞ்சீர் மூன்றும் நிரைமுதல்வெண்சீர் வருவதென்றிலனாதலின் மூன்றாஞ்சீர் நேர் முதல் வெண்சீர் வந்தும்,

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே" (தொல். செய்.29)

என்றதனானும் இடைநிற்பன வெண்சீரென்பது பெறுதுமாக லானும் அது கட்டளையன்றென்பது. இனி முதனின்றது நிரை

---

1. வருஞ்சீரினை 'நிரைமுதல் வெண்சீர்' என ஆசிரியர் கிளந்தெடுத்தோதினமையால் அதற்குமுன் நின்ற சீர் நிரையீற்று இயற்சீராகவோ அன்றி நிரையீற்று ஆசிரியவுரிச்சீராகவோ நின்று நிரைமுதல் வெண்சீரோடு நிரையாய் ஒன்றுதலுங் கலித்தளை விகற்பமாம் எனவும், எனவே நிரைமுதலியற்சீர் வருஞ்சீராய் வந்து நிரையாய்த் தளைத்தாலும் நேர்முதல் வெண்சீர் வந்து நிரையீறாய் நின்ற இயற்சீரொடு ஒன்றாதொழியினும் அது கட்டளை வகையாற் கலியடியாகாதெனவும், துள்ளலோசையில்லாத இயற்சீர்ப்பின் துள்ளலோசை யினைத் தோற்றுவித்தல் வேண்டின் நிரைமுதல் வெண்சீர் வருதல் வேண்டுமெனவும், 'அவ்வடிக்கென்ப' என்றதனால் இவ்விதியும் கட்டளையடிக்கேயுரிய தெனவும், இவ்வாறு இயற்சீர் நிற்பது அடிமுதற்கண்ணேயெனவும் இங்குப் பேராசிரியர் தரும் விளக்கம் மனங்கொளத் தகுவதாகும்.

யீற்றியற்சீராகலான் துள்ளலோசை பிறவாமையின் அவற்றோசை குறைதீரக் கலித்தளை பலவாகி வரல்வேண்டு- மென்பது. இவ்வாற்றான் ஓசைச்சுருக்கம் பெருக்கம் உணர்தற்கு அருமை நோக்கி,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே" (தொல் செய். 11)

என்பானாயிற்றென வுணர்க. இக்கருத்தினானன்றே நிரைமுதல் வெண்சீர் வருகவெனவும் நிரையீற்றியற்சீர்ப் பின்னர் மாசெல் வாய் மூன்றுவரினுஞ் சிறிது கலியோசை பிறக்குமாயினும் அதனைக் கட்டளையடியென நேரானாயிற்றுமென்பது. (௬௦)

**நச்சினார்க்கினியம் :**

இதுவும் அவ்வடிக்கெய்தியதோர் தளைவிகற்பங் கூறு கின்றது.[1]

(இ-ள்.) நிரை .. ... தட்பினும் எ-து நிரையீற் றியற்சீரும் நிரையீற் றாசிரிய வுரிச்சீரும் நிற்ப நிரைமுதல் வெண்சீர்வந்து நிரையாயொன்றியக் காலும். வரைநிலை ...... கென்ப எ-து கட்டளையடிக்கு நீக்கு நிலையின்று; எனவே கலித்தளையாம். எ-று.

உ-ம். "மணிபுரை திருமார்பின் மறுத்தயங்கத் தோன்றுங்கால்" என்புழித் திருமார்பின் என்னும் நிரைமுதல் வெண்சீர்வந்து மணிபுரை யென்னும் நிரையீற் றியற்சீரோடு தட்டுக் கலித்- தளையாயிற்று.

"ஓங்குநிலை யகன்மார்பி னொளிதிகழு மாமேனி"

இது நிரையீற் றாசிரியவுரிச்சீரோடு அவ்வாறு தட்டது; எனவே நிரைமுதலியற்சீர் வந்து நிரைதட்பினும் அதனோடு நேர்முதல் வெண்சீர் வந்து ஒன்றாதொழியினுந் துள்ளலோசை பிறவாமையிற் கட்டளையடியாகா என்றவாறு. 'அவ்வடிக்கு' எனவே இவ்விதி கட்டளையடிக்குக் கூறியது. இதனானே நிரை யீற் றியற்சீர்ப்பின்னர் நிரைமுதல் வெண்சீரும் நேர்முதல் வெண்சீரு முதல்வந்து பின்னர் வெண்சீர் அடுக்கிய வெண்டளை வரினுஞ் சிறிது துள்ளலோசை பிறத்தலின் அதனைச் சீர்வகை யடியென்றுணர்க.

---

1. மேலைச் சூத்திரம் போன்று இச்சூத்திரமும் கலிக்குரிய கட்டளையடி பற்றியதோர் விகற்பம் கூறுகின்றது என்பதாம்.

உ-ம் 'அணிமுக மதியேய்ப்ப வம்மதியை நனியேய்க்கு
மணிதிகழ் மாமழைநின் பின்னொப்பப் பின்னின்கண்'
எனவருவனவும் பிறவுமாம். (குறிஞ்சிக்கலி-உஅ)

## ஆய்வுரை :

(இ-ள்) வெண்பாவுரிச்சீர் நிற்ப நிரைமுதல் வெண்சீர் வந்து (நேர்முன்) நிரையாய்த் தளைத்தல் கலியடிக்கு விலக்கத்தக்கதன்றாம். எ - று.

தட்டல் - தளைத்தல். அவ்வடி என்றது, மேற்சூத்திரத்திற் கூறப்பட்ட கலியடியினை.

'நிரைமுதல் வெண்சீர்வந்து' என வருஞ்சீரினை இன்னசீர் என வெளிப்பட எடுத்துரைத்தலால் அதற்குமுன் நின்று அதனொடு தளைக்குஞ்சீர் நிரையீற்றியற்சீராகவோ அன்றி ஆசிரியவுரிச்சீராகவோ நின்று நிரைமுதல்வெண்சீரோடு நிரையாய் ஒன்றுதலும் கலித்தளை விகற்பமாம் என்பர் பேராசிரியர்.

௫அ. விராஅய தளையு மொரூஉநிலை யிலவே.[1]

## இளம்பூரணம் :

என்—எனின். இதுவுங் கலியடிக் குரியதோர் தளை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பிறவாகி விரவிய தளையும் நீக்குதலில்லை என்றவாறு.

அஃதாவது வெண்டளையும் ஆசிரியத்தளையும் விரவுதல்.[2]

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமையமர்ந் துயர்மலை இருந்தனன் ஆக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்." (கலித். ௩அ)

இதன்கண் முந்துற்ற இரண்டு சீரும் வெண்சீர் வெண்டளை.[3] இரண்டாஞ்சீரோடு மூன்றாஞ்சீர் இயற்சீர் வெண்டளை.

---

1. 'ஒரூஉ நிலையின்றே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

2. தளைவிராவுதலாவது, பிறபாக்களுக்குரியவாகிய பலதளைகளும் ஒருபாவின் அடிக்கண்வந்து கலத்தல். கலியடியிற் கலத்தற்குரியன வெண்டளையும் ஆசிரியத்தளையுமே.

3. இவ்வுரைத்தொடர் பிழையாகவுள்ளது.

நாலாஞ்சீரோடு மற்றையடிமுதற்சீர் நிரையொன்றாசிரியத்தளை. 'அரக்கர் கோமான்' நேரொன்றாசிரியத்தளை. அஃதேல், நேரீற்றியற்சீர் கலிக்கண் வரப்பெறா தென்றதென்னை? ஈண்டுக் கோமான் வந்ததால் எனின், அவ்விலக்கணங் கலித்தளையான் வரும் அடிக்கென்க. சிறுபான்மை வஞ்சித்தளை வருதலும் கொள்க.[1] (ருஅ)

## பேராசிரியம் :

இது. சீர்வகையான்வருங் கலியடி தளைவிரவினுங் கடியப்படாதென்கின்றது; யாதனொடு விரவியோவெனின், வெண்பாவினோடு விராய்த் தட்பினுமென்றவாறு; என்னை?

"தளைவகை யொன்றாத் தன்மையான" (தொல்-செய். 58) என வெண்பாவிற்குங் கூறினமையின்.

(இ - ள்) வெண்சீர் ஒன்றிவருதலுங் கடியப்படா கலிக்கு (எ - று.)

'சீர்வகையடிக்கண்' என்பது என்னை பெறுமாறெனின்,

'விராஅய தளை'யென்றமையிற் பெறுதுமென்பது.[2]

உதாரணம்,

"தளைவகை யொன்றாத் தன்மை யான" (தொல்-செய்.58) என்புழிக் காட்டப்பட்டது.[3] (சுக)

## நச்சினார்க்கினியம் :

இதுவும் அவ்வடி சீர்வகையான் வருவதற்கோர் விதி[4]

---

1. நேரீற்றியற்சீர் கலிக்கண் வரப்பெறாது என்ற இலக்கணம் எழுத்தெண்ணித் தளைநிலைவகையாற் கொள்ளப்படும் கலித்தளையடிக்கேயாம் என்பதும் கலியடிக்கண் சிறுபான்மை வஞ்சித்தளை வருதலும் கொள்ளப்படும் என்பதும் இளம்பூரணர் கருத்தாகும்.

2. விராயதளையென்றது, வெண்சீர் முன் நிரைவருதலேயன்றி நேர்வந்து தளைத்தலாகிய வெண்டளை விரவிய கலியடி. ஒரூஉ நிலை இன்று - விலக்கும் நிலையில்லை. எனவே சீர்வகைக்கலியடிக்கண் வெண்டளையும் விரவிவரும் என்பதாம்.

3. 'மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்' என்புழி வெண்டளை விரவிவந்தாலும், இதனை 'அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி' (செய். 11) என்ற விதிப்படி கலியோசை தோன்றுமாறு சொல்லிக் காண்க.

4. 'அவ்வடி' என்றது மேற்கூறிய கலியடியினை. 'விராயதளையும்' என்றதனால் அது சீர்வகையான் வரும் கலியடி என்பது பெறப்படும்.

(இ-ள்.) சீர்வகையான் வருங்கலியடி தளைவிரவினுங் கடியப் படா. எ-று.

என்றது வெண்சீரோடும் ஒழிந்த சீரோடும் விராஅய்த் தட்பினும். எ-று.

உ-ம். 'மடியிலான் செல்வம்போன் மரனந்த வச்செல்வம்'
எனவும் (பாலைக்கலி-34)

'வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற'
(பாலைக்கலி-24)

எனவும் பிறவாறும் வரும்.

**ஆய்வுரை :**

இதுவும் கலியடியாமாறு கூறுகின்றது.

(இ-ள்) பிறவாகி விரவியதளையும் கலிப்பாவிற்கு நீக்கும் நிலைமை இல எ-று.

பிறவாகி விரவுதல் என்றது, ஆசிரியத் தளையும் வெண்டளையும் விரவி வருதல் என்பர் இளம்பூரணர். விராய தளை யென்றது, வெண்பாவினோடு விரவித் தளைத்த வெண்டளை யெனவும், இச்சூத்திரம் சீர்வகையான் வருங் கலியடி தளைவிரவினும் நீக்கப்படாது என்கின்றது எனவும் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

௫௧. இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்பவும் உளவே.[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். இஃது ஆசிரியப்பாவின்கண் வெண்பாவடி மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இயற்சீர்வெண்டளையா னாகிய வெண்பாவடி[2] ஆசிரியப்பாவின்கண் நிற்றற்குரிய மரபினான் நிற்பனவுமுள என்றவாறு.

---

1. 'நிற்கவும் பெறுமே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்டபாடம்.

2. இயற்சீர் வெள்ளடி - மாச்சீர் விளச்சீர் ஆகிய இயற்சீர்களாற் கொள்ளப்படும் வெண்டளையானாகிய அடி. மாமுன் நிரையும் விளமுன் நேரும் ஆகத் தளைப்பது இயற்சீர் வெண்டளையாகும்.

வெள்ளை யென்பது ஒப்பினான் ஆகிய பெயரென்பதூஉம் பெற்றாம்.[1]

"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்க லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்" (குறுந்-12)

இவ்வாசிரியத்துள் எல்லாவடியும் பாவேறுபட்டு இசை யாமையின் முதற்கணின்ற இயற்சீர் வெள்ளடி நிலைக்குரிமரபின் நின்றதாயிற்று.[2]

"கொலைநவில் வேட்டுவன் கோள்வேட் டெழுந்த
புகர்நுதல் யானை நுதன்மீ தழுத்திய
செங்கோற் கடுங்கணை போலு மெனாஅது
நெஞ்சங் கவர்ந்தோ ணிரையிதழ்க் கண்ணே"

என்பது, செய்யுண் முழுவதும் இயற்சீர் வெள்ளடியான் வந்தது.

மற்று இயற்சீர்வெள்ளடியல்லது பிறவடி ஆசிரியத்துண் மயங்கப்பெறாதோவெனின், அது நிலைக்குரிமரபின் நில்லாமை யின் உம்மையால் தழீஇக்கொள்ளப்படுஞ் சிறுபான்மையென்பது[3]

"பாஅல் புளிப்பினும் பகலிருளினும்"

என்றாற்போல்வன.[4]

1. இயற்சீர் வெள்ளடியான் வரும் அடி ஆசிரியவடியோடுகூடிய கூட்டத்துக்கண் ஆசிரியப்பாவிற்கு உரிமைபூண்டு நிற்கும் நிலையில் நிற்கவும் பெறும் என்றமையால், வெண்பாவினுளாயின் ஆசிரியவடி முழுவதும் தன்தளையொடு-வாராதெனவும் முழுவதும் ஆசிரியத் தளைவரின் வெண்பா சிதையும் எனவும், ஆசிரியமாயின் அவ்வாறு சிதையாதெனவும் வேறோசை கலந்தவழி தன்னோசை-யழிதல் வெண்பாவிற்குப் பெரும்பான்மையென்பது 'வெண்பா' என்ற பெயரினாலேயே பெறப்படுதலின் 'வெண்பா' என்றது சொல்லின் முடியும் இலக்கணத்தது எனவும், வெள்ளை என்பது வெண்பாவிற்கு ஒப்பினானாய பெயராகலின் அதன்கண் பிறபாவின் அடி விரவின் பளிங்குடன் அடுத்த செம் பஞ்சின் வேற்றுமையால் பளிங்கு வேறுபடுமாறு போன்று வெண்பா சிதையும் எனவும் விளக்குவது இவ்வுரைப்பகுதியாகும்.

2. 'இவ்வாசிரியத்துள் வந்த எல்லாவடியும் பாவேறுபட்டு இசையாது ஒன்றினமையின் இதன் முதற்கண் அமைந்த இயற்சீர் வெள்ளடி பின் வந்த ஆசிரிய அடியுடன் ஓசையொத்து நிற்றற் குரிய மரபினையுடையதாயிற்று.

3. அது (பிறவடி) ஆசிரியத்துள் நிலைக்குரிமரபின் நில்லாமையின் (நிற்கவும் பெறும் என்ற) உம்மையால் சிறுபான்மை தழீஇக் கொள்ளப்படும் என்பது என இயைத்துப் பொருள் கொள்க.

4. 'பாஅல் புளிப்பினும் பகலிருளினும்' என வஞ்சியடி மயங்கியது.

"மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது" (யா. வி. 30)

என்னும் ஆசிரியவடியினைக் கலிப்பா மயங்கிற்று என்பாரும் உளர். 'அது துள்ளச்செல்லுங்கால் அளபெடுக்கவேண்டுமென'க் கூறிமறுக்க.[1] (சுஉ)

**நச்சினார்க்கினியம் :**

இது வெள்ளடி ஆசிரியத்துள் வருமாறு கூறுகின்றது.

(இ ள்.) இயற்சீர் வெள்ளடி எ-து இயற்சீர் வெண்டளை யாசிரியச் சீரான்வரும் வெள்ளடி. ஆசிரிய.........பெறுமே எ-து ஆசிரியப்பாவின்கண் நிற்றற்குரிய மரபிலே நிற்கப்பெறும் எ-று.

உம்மை எதிர்மறை. ஆசிரியவடியோடு மயங்கி அதற்குரிமை பூண்டு நிற்குமென்பார் நிலைக்குரிமரபினென்றார்.[2] இதனானே மயங்காமல் இயற்சீர் வெள்ளடி முழுதும் வரவும் பெறுமென்றுங் கொள்வாருமுளர்.[3]

உ-ம். 'எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்கல் லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்' (குறுந்தொகை-கஉ)

என இயற்சீர் வெள்ளடி பின்வருகின்ற ஆசிரியவடியோடு மயங்கி வந்தது. இனி

'கொலைநவில் வேட்டுவன் கோள்வேட் டெழுந்த
புகர்முக யானை நுதன்மீ தழுத்திய
செங்கோற் கடுங்கணை போலு மெனாஅது
நெஞ்சங் கவர்ந்தோ ணிரையிதழ்க் கண்ணே'

இது வெள்ளடி முழுதும் வந்ததென்று பேராசிரியர் காட்டினார். இதனை அகவலோசை பிறக்குமென்று கொள்ளின் இயற்சீர்

---

1. 'மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது'
என்பது 'நேர்நிரைபு நிரைநேர்பு நிரைநிரைபு நேர்நேர்பு' என ஆசிரியவுரிச் சீரால் வந்த அடியாதலின் ஆசிரிய அடியாயிற்று. இதனைத் துள்ளலோசையினை-யுடைய கலியடியாக்க வேண்டுமாயின்,
'மாஅவழங்கு பெருங்காஅட்டு மழகளிறு காஅணாது'
என அளபெடை சேர்த்துக்கூறுதல் வேண்டும் என்பது பேராசிரியர் கருத்தாகும்.

2. நிலைக்குரிமரபின் நிற்றலாவது ஆசிரியவடியொடு கலந்து அப் பாவிற்கு உரிமைபூண்டு நிற்றல். 'நிற்கவும்' என்புழி உம்மை எதிர்மறை எனக் குறித்தலால் நில்லாமையே பெரும்பான்மை என்றாராயிற்று.

3. இங்ஙனங் கொள்பவர் பேராசிரியர்.

'உள' என்றதனாற் பலவடியும் வரப்பெறும் என்று கொள்க.[1] வெண்டளை என்னாது 'அடி' என்றதனால் தளைவிரவுதல் பெரும்பான்மை, அடிவிரவுதல் சிறுபான்மை என்று கொள்க.

உதாரணம்

'நெடுங்கயிறு வலந்த' என்னும் பாட்டினுள்,
'கடல்பா டொழிய இனமீன் முகந்து' (அகம். நூ0)

என்றது இயற்சீர் வெண்டளை யடி. பிறவு மன்ன. (ருகூ)

**பேராசிரியம் :**

இது, வெண்சீரொன்றிவரும் அடி கலிப்பாவிற்கும் உரித்தென்ற முறையானே, இயற்சீர் வெள்ளடியான் வரும் ஆசிரியத்திற்கு மயங்கியல் வகையான் நிலைக்குரித்தாகி நிற்கவும் பெறுமென்கின்றது.

(இ-ள்.) அம் மயங்கியல்வகைதான் அப் பாவிற்கு உரிமை பூண்டு நிற்கும்; ஆசிரிய அடியோடு கூடிய கூட்டத்துக்கண் (எ-று).

வெண்பாவினுளாயின் ஆசிரியவடி முழுவதுந் தன்றளையோடு வாராது; என்னை?

"தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொன்
மாஅ மிசையான்கொ னன்ன னறுநுதலார்
மாஅமை யெல்லாம் பசப்பு" (மலைபடுகடாம்)

என்பதன் முதலடியுள்ளே 'தூஉத் தீம்புகை'யென ஓர் ஆசிரியத் தளைவர மற்றையன வெண்டளையாகி வந்தமையின். அற்றன்றி முழுவதூஉம் ஆசிரியத்தளை வரின் வெண்பா சிதையுமாகலின் இதனையே சொல்லின் முடிவிலக்கணத்தான் வெண்பா வென்றான். எனவே, வேறோசை விராயவழித் தன்னோசை அழிதல் இதற்குப் பெரும்பான்மையாயிற்று. ஆசிரியமாயின் அவ்வாறு துஅழியாதென்ப கருத்து. என்போலவோ வெனின் பளிங்குடன் அடுத்த பஞ்சி வேற்றுமையால், பளிங்கு வேறுபடினல்லது பஞ்சி வேறுபடாததுபோல வென்பது. இதனான்

1 'உள' எனப்பன்மையாற் கூறியவதனால் ஆசிரியப்பாவின்கண் இயற்சீர் வெள்ளடி பலவும் வரப்பெறும் என்பதாம்.

வெண்டளையான் வருமென்ற கட்டளை வெண்பா வின்றாமென மறுக்க.[1] இனி ஆசிரியத்துள் இங்ஙனம் வருமெனவே வெண்பாவினுள் ஆசிரியவடி முழுவதூஉந் தன்றளையோடு வாரா சிறிது வருமென்று கொள்க. அது கலிக்கும் பரிபாடற்கும் உறுப்பாய்வரும் வெண்பாக்களில் ஆசிரியத்தளை வருமேனும் அவை வெள்ளைக்கொச்சகமாமாறுமுணர்க.

## ஆய்வுரை :

இஃது, ஆசிரியப்பாவின்கண் வெண்பாவடி மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) இயற்சீர் வெண்டளையாலாகிய வெண்பாவடி ஆசிரியப்பாவின்கண் நிற்றற்குரிய மரபினால் நிற்பனவும் உள எ-று.

நிற்றற்குரிய மரபாவது, முதற்கண் வந்த இயற்சீர் வெள்ளடி பின்வரும் ஆசிரியவடியுடன் ஓசையொத்து இயைந்து நிற்கும் முறைமை. நிற்கவும் என்ற உம்மையால் சிறுபான்மை வஞ்சியடியும் கலியடியும் மயங்கி வருதலும் கொள்ளப்படும்.

**௩௰ வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்**
**ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப.**

## இளம்பூரணம் :

என்—எனின். இதுவும் ஆசிரியப்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இயற்சீர் வெண்டளை விரவியும் ஆசிரியத்தளை விரவியும் ஐஞ்சீரடியும் ஆசிரியப்பாவின்கண் வருவன உள என்றவாறு.

---

1. இயற்சீரான் இயன்ற வெண்பா அடி ஆசிரியத்தின்கண் முழுவதும் வந்தமைக்கே பேராசிரியர் 'கொலைநவில் வேட்டுவன்' என்ற பாடலை மேற்கோளாகக் காட்டியுள்ளார். இப்பாடல் அகவலோசைத்தாய் வந்துள்ளதென்பது இப்பாடலைச் 'செவிகருவியாக ஓர்த்துணர்வார் எல்லார்க்கும் ஒப்பமுடிந்த முடிபேயாகும். இயற்சீர் வெள்ளடிகள் விரவிய நிலையிலும் அகவலோசை பிறக்கும் என்பதே இச்சூத்திரத்தின் கருத்தாகும். ''இதனை அகவலோசை பிறக்குமென்று கொள்ளின் இயற்சீர் வெண்டளையான் வருமென்ற கட்டளைவெண்பா இன்றாமென மறுக்க'' எனவரும் இவ்வுரைத்தொடர் பிற்காலத்தில் ஏடெழுதினோரால் இடையிற் சேர்க்கப்பெற்றிருத்தல் கூடுமோ என ஐயுறவேண்டியுளது.

'உண்டு' என்னாது 'உள' என்றதனான் ஒருபாட்டிற் பல வருதலும் கொள்க. ஆசிரியமென்பது அதிகாரத்தான் வந்தது.[1] உதாரணம் முன்னர்க் காட்டுதும். (௬௰)

## பேராசிரியம் :

இஃது, ஐஞ்சீரடியும் வருமாறு கூறுகின்றது.

(இ - ள்) மேனின்ற அதிகாரத்தாற் கலிப்பாவிற்கு ஐஞ்சீரடியும் உள (எ - று).[2]

"வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்"

என்றது என்னையெனின், அவ்வைஞ்சீரடி வெண்பாவோடு விராயும் ஆசிரியப்பாவோடு விராயும் வருமென்றவாறு. ஈண்டுத் தளையென்றது அப்பாக்களையாதலால் அப்பாக்களோடு விரவு மெனவே, அப்பாக்களை உறுப்பாகக்கொண்டு வரும் பிற செய்யுட் கண்ணும் அவ்வைஞ்சீரடி வருமென்பது பெற்றாம்.[3] வெண்டளை யொடு விரவுமெனவே ஐஞ்சீரடி அவற்றுக்கு உரியவல்ல வென்பதாம். எனவே, கலிப்பாவின்கண் வரும் ஐஞ்சீரடியாயின் அக் கலியோசைக்கு உரிமையுடைத்தென்பதாம்.[4]

'உள' வெனவே, ஐஞ்சீரடி கலியினுட் பயின்றுவருமென் பதூஉம் அல்லனவற்றுட் பயிலாவெனவுங் கொள்க.

---

1. 'உண்டு' என்பது 'உளது' என்னும் பொருள்பட வரும் ஒன்றன்பால் வினைக் குறிப்புமுற்று.

'உள' என்பது 'உள்ளன' என்னும்பொருள்பட வரும் பலவின்பால் வினைக் குறிப்புமுற்று.

மேலைச்சூத்திரத்து 'ஆசிரியமருங்கின்' என ஆசிரியப்பா அதிகாரப்பட்டமை யின் இச்சூத்திரவிதியும் ஆசிரியப்பாவிற்குரியதோர் மரபுணர்த்தியது எனக்-கொண்டார் இளம்பூரணர்.

2. வெண்பாவோடு விரவியும் ஆசிரியப்பாவோடு விரவியும் ஐஞ்சீரடியும் உள எனவே அங்ஙனம் உளவாதல் அவ்விருபாக்களும் அல்லாத கலிப்பாவின்கண் என்பது தானே பெறப்படும்.

3. 'தளை' என்றது பாக்களையாதலால், அப்பாக்களோடு விரவிவரும் எனவே அப்பாக்களை உறுப்பாகப் பெற்று வரும் பிற செய்யுட்கண்ணும் ஐஞ்சீரடிவரும் என்பது பெறப்படும்.

4. ஐஞ்சீரடி வெண்பாவோடும் ஆசிரியத்தோடும் விரவுமெனவே அவ்வடி அப்பாக்களுக்கு உரியதன்று என்பதும் கலிப்பாவின்கண்வரும் ஐஞ்சீரடியாயின் அக்கலியோசைக்கும் உரிமையுடையதென்பதும் நன்குபுலனாகும்.

'விராஅய தளையு மொரூஉநிலை யின்று' (தொல்-செய்-61) எனப்பட்ட கலிப்பாவினோடு இயைபுபட்ட வெண்பாவடியும் அதனோடு இயைபுபட்ட ஆசிரியவடியுங் கூறி, அம்மூன்றனையும் உடன் கூறினானாயினும் ஆண்டுச் சிறந்தவாறே ஈண்டும் அவ்வதிகாரத்ததாக நாட்டி, ஐஞ்சீரடியும் உளவென்று ஆண்டு நின்ற கலிக்குக் கூறிய அவ்வடி வெண்டளைவிரவியும் ஆசிரியம்விரவியும் வருமெனப் பிறவற்றுக்குங் கூறினானென்பது.[1]

'ஐஞ்சீரடி என்பதனை அளவடி மூன்றுபாவிற்கும் உரித்தென்றால் அவ்வப்பாவிற்கு வேறுவேறாகக் கொண்டாற்போல ஐஞ்சீரடியையும் பாத்தோறும் வேறுபடுத்துக்கொள்க.[2]

உதாரணம்:

"தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக" (கலி39)

எனக் கலிப்பாவினுள் ஐஞ்சீரடி வந்தது.

"அரவணிந்த கொடிவெய்யோ னகம்புக்கா னரசவையன் றகற்றியே" எனக் கலியடி வெண்சீரான் வந்தது.

"கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
வொண்செங் குருதியி னோஒ கிடப்பதே கெண்டிக்
கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்னா
ளழுதகண் ணீர்துடைத்த கை" (யா. வி. 93)

என்னும் வெண்பாவினுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது.

"சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே" (புறம் 235)

---

1. கலிப்பாவிற்குரிய நிலமும் கலித்தளை விகற்பமுங்கூறிய ஆசிரியர், கலிப்பாவினோடு தொடர்புடைய வெண்பாவடியும் அதனோடு தொடர்புடைய ஆசிரியஅடியும் கூறி அம்மூன்றனையும் உடன் கூறினாராயினும் தொடர்ந்து வருவது கலியடியினைப்பற்றிய அதிகார மாதலின், கலிக்குச்சிறப்புடையதாகக் கூறிய ஐஞ்சீரடி அதிகாரப்பட்டமைபற்றி வெண்பாவிற்கும் ஆசிரியத்திற்கும் உரியதாகக் கூறப்பட்டது என்பது கருத்து.

2. அளவடியால் நடக்கும் ஆசிரியம், வெண்பா, கலி என்னும் மூன்று பாவிற்கும் 'ஐஞ்சீரடியும் உள' எனப் பொதுவாகக்கூறினாராயினும், அம்மூன்றுபாவுக்கும் உரிய அளவடி பாத்தோறும் வெவ்வேறோசையினதாய் இயலுமாறுபோன்று, மூவகைப் பாக்களிற்பயிலும் ஐஞ்சீரடியும் பாத்தோறும் வேறுவே றோசையினதாய் இயலும் என்பது கருத்து.

என்பன ஐஞ்சீரான் வந்த ஆசிரியவடி. ஆசிரியத்துள் இவ்வாறு இரண்டடி ஒருங்கு நிற்குமென்பது அறிவித்தற்கு ஐஞ்சீரடிக்குச் சிறந்த கலிப்பாவோடு வைத்தான் அதனை முறை பிறழவென்பது.[1] எனவே வெண்பாவிற்கு ஐஞ்சீரடி ஒன்றல்லது வாராதாயிற்று. இக் கருத்தேபற்றி,

"ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல"

என்றார் பிறருமென்க.

உம்மையான்[2] இருசீரடியும் கலியடியாம்

"மன்று பார்த்து
நின்று தாயைக்
கன்று பார்க்கு
மின்றும் வாரா" (467)

எனக் கொச்சகக்கலியுள் இருசீர் வந்தது.

மூன்றுபாவிற்கும் முச்சீரடி உரித்தென்பது முன்னர்ச் சொல்லுதும்[3] வரையாது கூறினமையின் கலிப்பாவிற்காயின் ஐஞ்சீரடி வருங்கால் தளைவிரவியும் விரவாதும் வேண்டியவாறு வரப் பெறுமென்பது[4] (சுங)

**நச்சினார்க்கினியம்:**

இது மூன்றுபாவிற்கும் ஐஞ்சீரடியும் வருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) வெண்பாவோடுங் கலிப்பாவோடும் விராஅயும் ஆசிரியப்பாவோடு விராஅயும் வரும் ஐஞ்சீரடிகளும் உளவென்று கூறுவர் புலவர் எ-று.

---

1. முறைபிறழ வைத்தலாவது, 'ஆசிரியம் விரவியும் வெண்டளைவிரவியும்' என ஆசிரியத்தை முன்னே கூறாது 'வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்' என வெண்பாவை முன்னர்க்கூறி ஆசிரியத்தினைக் கலிக்குக்கூறிய விதியொடு தொடர்புபடப் பின்னே வைத்தல்.

2. 'ஐஞ்சீரடியும்' என்ற உம்மையால்

3. மூன்று பாவிற்கும் முச்சீரடியுரித்தென்பதனைச் செய்யுளியலிற் பின் சஅ, சகூ, எ௰, எஉ-ஆம் சூத்திரங்களிற் கூறுவர் ஆசிரியர்.

4. 'வெண்டளைவிரவியும்' என வெண்பாவிற்கும் 'ஆசிரியம் விரவியும்' என ஆசிரியப்பாவிற்கும் ஐஞ்சீரடிவரும் என வரைந்து கூறிய ஆசிரியர், 'இன்னதளையுடன் வரும்' எனவரைந்தோதாது 'ஐஞ்சீரடியும் உள' என வரையாது கூறினமையால் கலிப்பாவில் ஐஞ்சீரடிவருங்கால் பிறபாவின் தளைவிரவியும் விரவாதும் வேண்டியவாறு வரப்பெறும் என்பதாம்.

ஈண்டுத் தளையென்றது அப் பாக்களை. வெண்டளை-யெனவே இரண்டு வெண்டளையும் அடங்கலின் அவற்றுள் வெண்சீர் வெண்டளையான் வருஞ் சீர்வகை வெண்பாவுஞ் சீர்வகைக்கலியும் அடங்கிற்று. இனி 'நிரைமுதல் வெண்சீர்' (௬௰) என்னுஞ் சூத்திரம் இதற்கதிகாரமாதலின் கட்டளைக் கலிக்கும் ஐஞ்சீரடி கொள்க. தளையென்றதனாற் கட்டளை-வெண்பாவிற்குங் கொள்க. அடியும் என்ற உம்மையான் வெண்பாவினுண் மிகவுஞ் சிறுபான்மை வருதல் கொள்க. உளவென்றதனாற் கலிப்பாவினுள்ளும் அதற்குறுப்பாய் வரும் பாக்களுள்ளும் பெரும்பான்மை வருதலும் ஆசிரியத்துள் அடுக்கி வருதலும் கொள்க.

உ ம். 'கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
வொண்செங் குருதியு ளோஒ கிடப்பதேகெண்டிக்
கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்னா
ளழுதகண் ணீர்துடைத்த கை'

எனவும்

'கிடங்கிற் கிடங்கிற் கிடந்த கயலைத்
தடங்கட் டடங்கட் டளிரியல் கொள்ளாள் கிடங்கில்
வளையாற் பொலிந்தகை வையெயிற்றுச் செவ்வா
யிளையாடன் கண்ணொக்கு மென்று'

எனவும் இவற்றுள் இரண்டாமடி ஐஞ்சீரடி வந்தவாறு காண்க.

'அரவணிந்த கொடிவெய்யோ னகம்புக்கா னரசவையஞ் றகற்றியே' எனவும்,

'அணிகிள ரவிர்பொறித் துத்திமா நாகத் தெருத்தேறித்
துணியிரும் பனிமுந்நீர்த் தொட்டுழந்து மலைந்தனையே'

எனவும் இவை கலியுள் ஐஞ்சீரடி வந்தன.

'தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக'
(குறிஞ்சிக்கலி - ௩)

என்று கலிக்குறுப்பாகிய ஆசிரியத்துள் ஐஞ்சீரடி வந்தது. பிறவுறுப்புக்களிலுங் கலித்தொகையுள் ஐஞ்சீரடி வருமாறு காண்க.

'சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே' (புறம் -உ௩௫) என்பது முதலாக நான்கடி ஆசிரியத்துள் ஐஞ்சீரடுக்கி வந்தன. தன்னின முடித்தல் என்பதனாற் கட்டளை யாசிரியத்திற்கு

வருமேனு முணர்க. இன்னும் ஐஞ்சீரடியும் என்ற உம்மையாற் கொச்சகக்கலிக்கு ஐஞ்சீரடியும் வருமாறு கொள்க;[1]

'மன்றுபார்த்து நின்றுதாயைக் கன்றுபார்க்கு மின்னும் வாரார்' எனவரும்; இதனை இனமெனபாருமுளர் பின்னுள்ளோர்.[2]

## ஆய்வுரை :

இதுவும் ஆசிரியப்பாவுக்குரியதோர் மரபு கூறுகின்றது.

(இ-ள்) இயற்சீர் வெண்டளை விரவியும் ஆசிரியத்தளை விரவியும் ஐஞ்சீரடியும் ஆசிரியப்பாவின்கண் வருவனவுள எ-று.

'அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி' என்னும் சூத்திர முதலாகக் கலிப்பாவிற்குரிய நிலமும் கலித்தளை விகற்பமுங் கூறிய ஆசிரியர், கலிப்பாவினோடு தொடர்புடைய வெண்பா-வடியும் அதனோடு தொடர்புடைய ஆசிரிய அடியும் கூறி, அம்மூன்றனையும் உடன் கூறினாராயினும் தொடர்ந்து வருவது கலியடியினைப்பற்றிய அதிகாரமாதலின், கலிக்குச் சிறப்புடையதாக ஐஞ்சீரடி கூறுவது இச்சூத்திரமெனவும் ஐஞ்சீரடி அதிகாரப்பட்டமைபற்றி அவ்வடி வெண்பாவிற்கும் ஆசிரியத்திற்கும் உரியதாகக் கூறப்பட்டதெனவுங் கொள்வர் பேராசிரியர்.

௬௯ அறுசீர் அடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉம் நேரடி முன்னே.

## இளம்பூரணம் :

என்-எனின். இதுவுமது.[3]

---

1. இவ்வடி இருசீரடி நான்காகத் துணிக்கப்பெற்று இயலுதலின் இதனை ஐஞ்சீரடியாகக் கொள்ளுதல் பொருந்தாது.

''மன்றுபார்த்து நின்றுதாயைக்
கன்றுபார்க்கும், இன்றுவாரார்''

என இருசீரடிகளாகக் கொண்டு கொச்சகக்கலியுள் இருசீரடி வந்ததற்கு மேற்கோளாகக் காட்டினார் பேராசிரியர். எனவே ''கொச்சகக்கலிக்கு இருசீரடியும் வருமாறு கொள்க'' என இவ்வுரைத் தொடரைத் திருத்திக் கொள்க'

2. இதனை வஞ்சிப்பாவின் இனமாகிய வஞ்சித்தாழிசையெனக் கொள்வர் பிற்கால யாப்பிலக்கண நூலார்.

3. மேற்குறித்தபடியே இச்சூத்திரவிதியும் ஆசிரியப்பாவிற்குரியது. ஆசிரியப்பா என்பது அதிகாரத்தால் வருவித்துரைக்கப்பட்டது,

இதுவும் அடுத்த நூற்பாவும் முறையே அறுசீரும் ஏழுசீருமாகிய கழி-நெடிலடி யுணர்த்துகின்றது.

(இ-ள்) அறுசீரடி யாசிரியத்தளையொடு பொருந்தி நடைபெற்று வரூஉம், நேரடிக்கு முன்னாக ஆசிரியப்பாவின்கண் என்றவாறு.

ஆசிரியப்பா என்ப ததிகாரத்தான் வந்தது.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு
மன்னே" (புறம்.௨௩௫)

என்பதன்கண் முதலடி நாற்சீரான் வந்தது; இரண்டாமடி ஆசிரியத் தளையொடு பொருந்தி யறுசீரடியாகி வந்தது.

'பொருந்தி' என்றதனான் அத்தளை சில வருதல் கொள்க. ஏனையவை புணருஞ்சீரான் வந்தன. (௬௧)

**பேராசிரியம் :**

இது, முறையானே அறுசீரடியுங் கலிப்பாவிற்கு உரித்தென்கின்றது.

(இ-ள்.) நாற்சீரடிக்கு முன்னும் பின்னும் அறுசீரடியும் வருதலுமுண்டு. அன்னது வருங்கால் தனக்குரிய வெண்டளையே யன்றி ஆசிரியத்தளையொடும் வழக்குப் பெற்று நடக்குங் கலிப் பாவினுள். (எ – று).[1]

'நெறிபெற்றுவரூஉம்' என்றதனாற் சிறுபான்மை நேரடி இடையிட்டன்றி ஒரு செய்யுள் முழுவதூஉந் தானே வருதலுங் கொள்க. 'ஆசிரியத்தளையொடும்' என்ற உம்மையாற் கலி தனக்குரிய வெண்டளையான் வருதலும் மயங்கிவருதலும் உரிய வாம்.

"முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோதம் மூழ்கிப் பேர
அன்னைக் குரைப்ப னறிவாய் கடலேயென் றலறிப் பெருந்
தன்மை மடவார் தளந்துகுத்த வெண்முத்தம்
புன்னையரும் பென்னப் போவாரைப் பேதுறுக்கும் புகாரே
யெம்மூர்'

என்பது, மூன்றாம் அடி நேரடியாக முன்னும் பின்னும் அறுசீர் வந்தது. பிறவுமன்ன.

1. 'நேரடிமுன் அறுசீரடியே ஆசிரியத்தளையொடும் நெறி பெற்று வரூஉம்' என இயைத்துப்பொருளுரைப்பர். நேரடி - நாற்சீரடி. 'முன்' என்றது, காலமுன் இடமுன் ஆகிய இரண்டினையும். நாற்சீரடிக்கு முன்னும் பின்னும் ஆசிரியத்தளையொடும் அறுசீரடி வரும் என்பதாம்.

"கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி வருதி ராயின்
அரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக
நரையுருமே றுங்கைவே லஞ்சுக நும்மை
வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வார லையோ"

என்பதன் முதலடியுள் 'வருதி ராயின்' என்பது ஆசிரியத்தளை; ஒழிந்தன வெண்டளை. 'முன்' னென்றதனான் இடமுன்னுங் காலமுன்னுங் கொள்ளப்படும்.

"தொக்குத் துறைபடியுந் தொண்டையஞ்செவ் வாய்மகளிர்
தோண்மேற் பெய்வான்
கைக்கொண்ட நீருட் கருங்கண் பிறழ்வ
கயலென் றெண்ணி
மெய்க்கண்ணும் பெய்கலார் மீண்டுகரைக் கேசொரிந்து
மீள்வார் காணா
ரெக்கர் மணற்கிளைக்கு மேழை மகளிர்த்தே
யெறிநீர்க் கொற்கை"

எனச் செய்யுள் முழுவதும் அறுசீரடியே வந்தது.

"வரைபுரை திரைபோழ்ந்து மணநாறு நறுநுதல்
பொருட்டு வந்தோய்"

என ஆசிரியத்தளையானும் அறுசீரடி வந்தது.

மற்றுத் தளையென்றோதுவது 'கட்டளையடிக்கென்றிரால் ஈண்டுத் தளையென்றதென்னையெனின், அவ்வரையறை[1] ஒருவன் சொல்லுவது: அறுசீரடி வருங்கான் முதற்கண் நேரடி தூங்கிப் பின் இருசீரொடு தொடுத்தல் வேண்டும் என்னும்[2] அஃது இச்சூத்திரத்திற்கேலாது; நேரடிமுன் அறுசீர் வரினென்பது பதின் சீரடியாமாகலின்; அல்லதூஉங் குறளடி தூங்கியுஞ் சிந்தடி தூங்கியும் அறுசீரடி வருதலின் அஃது அமையாதென்பது. என்னை,

1. அவ்வரையறை' என்பது, 'அடிவரையறை' என்றிருத்தல் வேண்டும். 'தளையென்றதென்னை யெனின், அடி வரையறை. என முற்றுப்புள்ளியிட்டு முடிக்க. 'ஒருவன் சொல்வது; என்பதனை வேறு தொடராகக் கொள்ளுதல் வேண்டும்.

2. அறுசீரடிவருங்கால், முதற்கண் நாற்சீரடியாய் நின்று, பின்னர் இரு சீருடன் தொடுத்தல் வேண்டும் என்று கூறுவான். என்னும்-என்று கூறுவான்; செய்யுமென்னும் வினைமுற்று.

'வாராது நீத்தகன்றார், வருமாறு பார்த்திருந்தார், வடிக்கண் போல''

என்றவழி இருசீரான் யாத்தமையின் அது தூக்கெனப்படாது;

''செங்காந்தள் கைகாட்டுங் காலஞ்,
சேட்சென்றார் வாரார்கொல் பாவம்''

என முச்சீரான் யாத்தமையின் அதுவுந் தூக்கெனப்படாது; அறுசீரடியே தூக்காகக் கொண்டமையின், நேரடிமுன் இரு சீரடி வந்ததென்றதூஉம் பிழைக்குமென்பது.[1] (௯௪)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி; கலிக்கு ஐஞ்சீரடி யெய்தியதன் மேலே அறுசீரடியும் எய்துவித்தலின்.

(இ-ள்.) நேரடி முன்னே எ-து நாற்சீரடிக்கு முன்னும் பின்னும். அறுசீர் .........வரூஉம் எ-து அறுசீரடி தனக்குரிய வெண்டளையோடன்றி ஆசிரியத்தளையோடு வழங்கப்பெற்று நடக்குங் கலியினுள். எ-று.

முன் என்றதனை இடமுன்னாகவுங் காலமுன்னாகவுங் கொள்க. தளையொடும் என்ற உம்மையாற் றனக்குரிய வெண்சீர்வெண்டளையான் வருதலும் மயங்கிவருதலும் பெற்றாம். உ-ம். 'முன்னைத்தஞ்சிற்றின்... புகாரேயெம்மூர்'[2]

'கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி...... வாரலையோ' இவை மூன்றாமடி நேரடியாக முன்னும் பின்னும் அறு-

---

1. 'நாற்சீரடிமுன் அறுசீரடிவரின்' எனப் பொருள் கொள்ளின் அங்ஙனம் வந்து முடிவது பதின்சீரடியாதல் வேண்டும். அன்றியும் இருசீரடி மூன்றடுக்கியும் முச்சீரடி இரண்டடுக்கியும் அறுசீராய் வருதலுண்டு. அவ்வாறு வருவன தம்முள் தொடர்பின்றித் துணிக்கப்பெறுதலால் அளவும் சிந்தும் குறளும் ஆகத் தனித் தனியே துணிக்கப்பெறும், அவற்றை அறுசீரடி யென்றல் பொருந்தாது. இரு சீரடியும் முச்சீரடியும் நாற்சீரடியும் என இடையிடையே தனித்தனியடிகளாகத் துணிக்கப்பெறாது ஆறுசீர்களும் அடிமுழுவதும் தொடர்புறவரும் அடியே அறுசீரடியெனப்படும் என்பதாம்,

2. இப்பாடலில் வரும் 'தன்மைமடவார் தளர்ந் துகுத்த வெண்முத்தம்' என்னும் மூன்றாமடியினை நாற்சீரடியாகவே பேராசிரியரும் எடுத்துக் காட்டியுள்ளார். இவ்வடி பிற்கால யாப்பிலக்கணவுரைகளில் ''தன்மை மடவாய தளர்ந்துகுத்த வெண்முத்தம் தயங்கு கானல்'' என அறுசீரடியாகக் காட்டப்பெற்றுளது. இவ்வடியில் 'தயங்கு கானல்' எனவரும் இருசீரும் பிற்காலத்திற் சேர்க்கப்பெற்றன எனக் கருதவேண்டியுளது.

சீரடி வந்தன. இவற்றுக்கு ஆறாஞ்சீர்க்கு ஆசிரியத்தளையான் வந்தன. நெறிபெற்று என்றதனாற் பாக் கட்டளை விட்டன்றி[1] யொருசெய்யுள் முழுவதூஉந் தானே வருதலுங் கொள்க.

"தொக்குத் துறைபடியுந் தொண்டை யஞ்செவ் வாய்மகளிர்
தோண்மேற் பெய்வான்
கைக்கொண்ட நீருட் கருங்கண் பிறழ்வ கயலென் றெண்ணி
மெய்க்கண்ணும் பெய்கல்லார் மீண்டுங் கரைக்கே சொரிந்து
மிளிர்வ காணா
ரெக்கர் மணற்கிளைக்கு மேழை மகளிர்க்கே யெறிநீர்க்
கொற்கை" எனவரும்; இவை கொச்சகக்கலி

"வரைபுரை திரைபோழ்ந்து மணநாறு நறுநுதல் பொருட்டு வந்தோய்" என ஆசிரியத்தளையானும் அறுசீரடி வந்தது. கட்டளையன்றேற் றளையென்றதனை நாற்சீரடிக்குத் தளை-கோட லின்றென்றார்; இவற்றிற்குத் தளை வரையறை யின்று. இவற்றைப் பின்னுள்ளோர் இனமென்பர்.[2]

## ஆய்வுரை :

இதுவும் அது.

(இ-ள்) அறுசீரடி ஆசிரியத்தளையொடு பொருந்தி (ஆசிரியப்-பாவின்கண்) நேரடிக்கு முன்னாக நடைபெற்றுவரும் எ-று.

நேரடி - நாற்சீரடி.

உதாரணம் : முன்னையுரைகளிற் காண்க.

இச்சூத்திரமும் கலிப்பாவிற்குரிய அடி கூறியதாகக் கொள்வர் பேராசிரியர்.

---

1. 'பாக்கட்டளை யிடைவிட்டகறி' என்றிருத்தல் பொருத்தமாகும்.

2. இவ்வுரைப் பகுதியின் பொருள் நன்கு விளங்கவில்லை. 'தளை' என்று ஓதும் வழியெல்லாம் எழுத்தெண்ணி வகுக்கப்படும் கட்டளையடிக்குரிய இலக்கணமாகக் கொள்ளவேண்டும் என்பது தொல்காப்பியனார் கருத்தாகும். அங்ஙனம் எழுத்தெண்ணிக் கொள்ளப்படுவன நாற்சீராகிய அளவடிகளேயாம். இந்நூற்பாவிற் கூறப்படும் அறுசீரடியினை ஆசிரியத் தளையென்றல் பொருந்துமா என்பது கேள்வி. இக்கேள்விக்கு விடை-யாகத் 'தளையென்றது அடிவரையறை' என இச்சூத்திரவுரையிற் பேராசிரியர் விளக்கந் தருவர். பேராசிரியர் உரைப்பகுதி கொண்டு மேற்குறித்த நச்சினார்க்கினியர் உரைப்பகுதிக்கு விளக்கம் காண-முயலுதல் வேண்டும்.

௬௨ எழுசீ ரடியே முடுகியல் நடக்கும்.

**இளம்பூரணம் :**

என் — எனின். எழுசீரடிக்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுசீரான் வரும் முடுகியலடி என்றவாறு.[1] உதாரணம் முன்னர்க் காட்டுதும். (௬௨)

**பேராசிரியம் :**

இஃது, எழுசீரான் வரும் அடி கூறுகின்றது.

(இ - ள்.) எழுசீரான் வருமளவும்[2] அடியுள்; அவை பயின்று நடப்பது முடுகியற்கண் (எ - று).

எனவே முடுகாதவழி அத்துணை நடையாட்டம் இல எழுசீரடிக்கு என்பதாம்.[3] பாவென்னும் உறுப்பு இடனாகும்.[4] ஏகாரம் பிரிநிலை.

> "தாதுறு முறிசெறி தடமல ரிடையிட
> தழலென விரிவன பொழில்" (யா. வி. 229)

எனவும்,

> "கவிரிதழ் கதுவிய துவரித ழரிவையர்
> கவிமயிற் கணமொடு விளையாட"

எனவும், எழுசீரடி முடுகிவந்தது.[5] இவை பரிபாடலுள்ளுங் கலியுள்ளுங் காணப்படும் முடுகாது வரும் எழுசீரடி வந்தவழிக் கண்டுகொள்க. (௬௫)

**நச்சினார்க்கினியம்:**

இது முறையானே கலிக்கு எழுசீரடியாமாறு கூறுகின்றது.

(இ-ள்) எழுசீரான் வரும் அடியே முடுகியற்கண்ணே பயின்று நடக்கும். எ-று

---

1. எழுசீரடி முடுகியலாய்வரும்.

2. 'வருமளவும்' என்பது 'வருவனவும்' என்றிருத்தல் வேண்டும்.

3. 'ஏழுசீரடி அத்துணை நடையாட்டம்இல' விரைவுநடையமையா-நிலைமைக்கண் எழுசீரடி கலிப்பாலின்கன் அத்துணையியக்கம் இல்லன என்பதாம்.

4. எழுசீரடி நடத்தற்கு இடமாவது பா என்னும் செய்யுளுறுப்பு என்பதாம்.

5. முடுகியலாவது விரைந்த நடையினதாதல்.

ஏகாரம் பிரிநிலை.

உ-ம். "கவிரிதழ் கதுவிய துவரித ழரிவையர் கலிமயிற் கணத்-தொடு விளையாட" என எழுசீரடி முடுகிவந்தது. இவை கலிக்கும் பரிபாடற்கும் உரிய. முடுகாத எழுசீரடி வந்துழிக் காண்க.[1]

## ஆய்வுரை :

இஃது எழுசீரடிக்குரியதோர் இயல்பு கூறுகின்றது.

(இ-ள்) எழுசீரால் வரும் அடி முடுகியற்கண் நடக்கும்.

முடுகியலில் நடத்தலாவது விரைந்த நடையினதாய்த் தாள அறுதிப்படச் செல்லுதல்.

சுரு முடுகியல் வரையார் முதலிரண் டடிக்கும்.[2]

## இளம்பூரணம்:

என்—எனின் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட ஐஞ் சீரடிக்கும் அறுசீரடிக்கும் முடுகியல் நீக்கப்படாதென்றவாறு.[3] (சுரு)

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

## பேராசிரியம் :

இஃது, எய்தாத தெய்துவித்தது; எழுசீரடியேயன்றி ஐஞ் சீரடியும் அறுசீரடியும் அராகந் தொடுக்குமென்றமையின்.

(இ-ள்) எழுசீரடிக்கு முன்னர் இடைநின்ற ஐஞ்சீரடியும் அறுசீரடியும் முடுகியல் நீக்கார். (எ-று)[4].

1. இவ்வுரைப்பகுதி பேராசிரியர் உரையைத் தழுவியமைந்ததாகும்.

2. 'முதலீரடிக்கும்' எனப் பாடங் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

3. இங்கு முதலிரண்டடி என்பன ஐஞ்சீரடியும், அறுசீரடியும். இவ்வடிகள் முடுகியவாய் வருதல் நீக்கப்படா என்றவாறு.

4. முதல் ஈரடிக்கும் முடுகியல் வரையார் என இயைத்துப் பொருள் கொண்டார் பேராசிரியர். இங்கு 'முதலீரடி' என்றது, எழுசீரடிக்கு முதற்கண் உள்ள அறுசீரடி, ஐஞ்சீரடி என்னும் இரண்டடியினையும்.

அவற்றுக்குச் செய்யுள் :

"காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்ப(கலி.105)

என்பது ஐஞ்சீரடி முடுகிவந்தன.

"மலர்மலி புகலெழ வலர்மலிர்
மணிபுரை நிமிர்தோள் பிணைஇ" (கலி. 102)

என்பது அறுசீரடி முடுகிற்று.

முதல் ஈரடிக்கும் என்ற உம்மை எச்சவும்மை. அவ் வும்மை யால் நாற்சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்பது.[1]

"புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின வேறு" (கலி. 103)

என வரும்.

"இரிபெழு பதிர்பதிர் பிகழ்ந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று"

என்பதனுண் முடுகியலடி இரண்டும் வந்தன. (கலி. 104)

மற்று இவற்றை அராகமென்னாமோவெனின், அதனைப் பரிபாடற்கு உறுப்பென்றமையாற் பிறவடியொடு தொடராவுற்று வரவேண்டும். இஃது அன்னது அன்றென்பது.[2] எழுசீரடியிற் சிறுவரவினவாகலான் ஐஞ்சீரடியினையும் அறுசீரடியினையும்

---

1. முதலீரடிக்கும் என்ற உம்மையால், ஐஞ்சீரடி அறுசீரடி என்னும் இரண்டு மன்றி நாற்சீரடியாகிய அளவடியும் முடுகியலாய்ச் சிறுபான்மை வரும் எனக்கொண்டார் பேராசிரியர். ஐஞ்சீரடியும் அறுசீரடியும் போன்று முடுகியலாய் அளவடி வருதல் என்பது பெரும்பான்மையன்று; சிறுபான்மையே அருகி வரும் என்பார் 'நாற்சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகும்' என்றார்.

2. விரைந்த நடையினதாகிய அராகம் என்பது, பரிபாடற்கு உறுப்பாய் வருதலின் அது பிறவடியொடு தொடர்பற்று வரும்; முடுகியலாகிய இது அத்தன்மையதன்றிப் பிறவடியுடன் தொடர்ந்து வரும். இவ்விரண்டற்கும் உள்ள வேறுபாடு இதுவாகும்.

'பிறவடியொடு தொடராவுற்றுவரவேண்டும்' என வரும் இவ்வுரைத் தொடரைப் 'பிறவடியொடு தொடர்பற்று வரவேண்டும்' என்றோ, 'பிறவடியொடு தொடராவற்று வரவேண்டும்' என்றோ திருத்திப் பொருள் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்,

வரையாரென்றான். அவற்றினுஞ்[1] சிறுவரவிற்றாகலின் இதனை[2] உம்மையாற்கொண்டான், முற்றும்மையாகாதோ வெனின் அதுவும் எச்சப்படுதலின் அமையுமென்பது. அல்லதூஉம் முதலடியிரண்டே அன்மையின் முற்றாகாதென்பது.[3] (௬௬)

**நச்சினார்க்கினியம்:**

இஃது எய்தாத தெய்துவித்தது; எழுசீரடியே யன்றி அறுசீரடியும் ஐஞ்சீரடியும் முடுகு மென்றலின்.

(இ-ள்) எழுசீரடிக்கும் ஐஞ்சீரடிக்கு முன்னின்ற அறுசீரடிக்-கும் ஐஞ்சீரடிக்கும் இம்முடுகியல் நீக்கார்— எ-று [4]

முதலீரடிக்கும் என்ற வும்மை எச்சவும்மை யாதலின் நாற்-சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்க. உதாரணம் மேலைச்சூத்திரத்துட் காட்டுதும்.

**ஆய்வுரை :**

இஃது எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்) எழுசீரடிக்கு முன்னர்ச் சொல்லப்பட்ட அறுசீரடிக்-கும் ஐஞ்சீரடிக்கும் முடுகியல் வருதலை விலக்கார் ஆசிரியர் எ-று.

'முதலீரடிக்கும்' என்ற உம்மையால், ஐஞ்சீரடி அறுசீரடி என்னும் இரண்டுமன்றி நாற்சீரடியாகிய அளவடியும் சிறு-பான்மை முடுகியலாய் வரும் எனக்கொள்வர் பேராசிரியர். உதாரணம் பேராசிரியர் உரையிற் காண்க.

௬௪ **ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினும்**
**மூவகை யடியு முன்னுதல் இலவே.**

**இளம்பூரணம் :**

என்—எனின். எய்தியது விலக்குதல் நுதலிற்று.

---

1, அவற்றினும்-ஐஞ்சீரடி அறுசீரடிகளைக் காட்டிலும். சிறுவரவிற்றாகலின்-சிறுபான்மையதாய் வருதலின். 2 இதனை-நாற்சீரடியை. 3 எழுசீரடியின் முதற்கண் உள்ள அடிகள் 'இரண்டு' என்னுந் தொகைக்குள் அடங்காமையின் 'முதலீரடிக்கும்' என்புழி உம்மை முற்றும்மையாகாதென்பதாம்.

4. ''எழுசீரடிக்கும் முன்னின்ற அறுசீரடிக்கும் ஐஞ்சீரடிக்கும் இம் முடுகியல் நீக்கார் - எ-று'' என இவ்வுரைப்பகுதியினைத் திருத்திக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

(இ-ள்.) முடுகியலாகி வரு மூவகை யடியும் ஆசிரியப்பா வினும் வெண்பாவினும் நிற்றல் இல என்றவாறு.[1]

எனவே கலிப்பாவினுள் நிற்கப்பெறும் என்றவாறாயிற்று. உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

'நாற்சீர் கொண்டதடி' எனவோதிப் பின்னும் இருசீரடி வஞ்சிக்கண் உரித்தென ஓதி ஐஞ்சீரடியும் அறுசீரடியும் எழுசீரடியும் உள என ஓதினமையான், அடியாவது இரண்டு முதலாக வருமெனவும், அவற்றுள் இருசீரடி குறளடி எனவும், முச்சீரடி சிந்தடி எனவும், நாற்சீரடி அளவடி எனவும், ஐஞ்சீரடி நெடிலடி எனவும், அறுசீர் முதலாக வரும் அடியெல்லாங் கழி-நெடிலடியா மெனவும் பிறநூலாசிரியர் கூறிய இலக்கணமும் இவ்வாசிரியர்க்கு உடம்பாடென்றுகொள்க. அறுசீர் முதலான அடிகளுள் எழுசீர் எண்சீர் சிறப்புடையன எனவும் எண்சீரின் மிக்கன சிறப்பில்லன எனவும் அவ்வாசிரியருரைப்ப. இவ்வாசிரி-யரும் அடிக்குச் சீர் வரையறையின்மை ஆங்கனம் விரிப்ப வளவிறந் தனவே, பாங்குற வுணர்ந்தோர் பன்னுங் காலை' (செய்யுளியல். ௪௬) என்றதனான் உணர்த்தினார் என்று-கொள்க. ஈண்டு நாற்சீரடியை எடுத்தோதியது வெண்பாவும் ஆசிரியப்பாவுங் கலிப்பாவும் அவ்வடியினால் வருதலின் என்று கொள்க. (௬௪)

**பேராசிரியம்** :

இது, முடுகியல் இன்னபாவிற்கு உரித்தென்கின்றது; எய் திய திகந்துபடாமற் காக்கின்றதூஉமாம்; என்னை? நாற்சீரடி முதன் மூன்றும் அகவலோசைக்குஞ் செப்பலோசைக்கும் உரிய-வெனவே, அவை முடுகி ஆண்டுஞ் சேறலெய்தியதனைக் கலிப்பாவிற்கல்லது ஆகாதென்றமையின்.

(இ-ள்) ஆசிரியம் வெண்பா என்னும் இரண்டு பாவினும் முடுகியலடி மூன்றும் புகா (எ-று).

உம்மை, முற்றும்மை மற்றை முச்சீரடியோடு நான்கென்னா-னோவெனின் அஃது இவற்றுக்கு ஈண்டு ஒவ்வாது முடுகிவருதல்

1. இங்கு மூவகையடியென்பன ஐஞ்சீரடி, அறுசீரடி, எழுசீரடி என்றும் மூவகை-யடிகளுமாகும். முடுகியலாய் வரும் இவ்வடிகள் ஆசிரியப்பாவினும் வெண்பாவிலும் வரப்பெறா என்பதாம்.

2. எனவே இவை கலிப்பாவினுள் வரப்பெறும் எனக் கொண்டார் இளம்பூரணர்.

பெரும்பான்மைத்தாகலின் 'மூவகையடி' யென வகையென்னும் அடையடுத்துக் கூறினானென்பது. அல்லதூஉம் எழுசீரடி விலக்கா னன்றே, அதனை ஆசிரியமருங்கினும் வெண்பாமருங்கினும் மயங்குமென்ப தின்மையினென்பது.[1]

இனி, அறுசீரடி ஆசிரியத்தளையோடும் வருமென்றது (46) அகவலோசைக்கு உரித்தென்றமையானும்,

"வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும் ஐஞ்சீரடியும் வரும்" (63)

என்றமையானும் அவற்றை அளவடியுடன் எடுத்தோதி விலக்கினான். மூவகை அடியுமென்றது ஐஞ்சீரடி முதன்மூன்று மெனப்படுமென்பார், அளவடி முடுகுதல் ஆசிரியத்திற்கும் உரிமை யின் அது வரையறையின் றென்றலும் ஒன்று; அது,

"திருமழை தலைஇய விருணிற விசும்பின்"

(பத்துப்-மலைபடு. 1)

என வரும். அதற்கு முடுகியற்றன்மை இன்றென்றது கருத்து. வஞ்சிப்பாவிற்குக் குறளுஞ் சிந்தும் அல்லது இன்மையின் இவ் வாராய்ச்சி இன்றென்பது.

எனவே, ஆசிரியத்தளையோடு முடுகிய லடியினைக் கலியடி யென்றும் முடுகாத அறுசீரடி ஆசிரியத்தளையோடு நெறிபெற்று வருவதற்கும் கலிப்பாவிற்குச் சிறுபான்மையான் வருமென்ப தூஉஞ் சொல்லப்பட்டது[2] அல்லாதார் ஐஞ்சீரடி முதலிய மூன்றுங்

---

1. மூவகையடியாவன 'முதலீரடி' எனப்பட்ட ஐஞ்சீரடியும் அறுசீரடியும் 'முதலீரடிக்கும்' என்ற உம்மையால் தழுவிக்கொள்ளப்பட்ட நாற்சீரடியும் ஆகிய மூன்றும் எனவும், எழுசீரடி ஆசிரியமருங்கினும் வெண்பாமருங்கினும் மயங்கு-மெனக்கூறாமையான் அதனை ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினும் வாராது என விலக்கவேண்டுவதில்லையெனவும் கொள்வர் பேராசிரியர். இனி, மூவகையடியும் என்றது ஐஞ்சீரடி, அறுசீரடி, எழுசீரடி ஆகிய மூன்றடியும் எனக் கொள்வோர், அளவடி முடுகுதல் ஆசிரியத்திற்கும் உண்மையால் அது வரையறையின்று என்பர்.

2. ஆசிரியத் தளையொடு முடுகியலும் பெற்ற அடியினைக் கலியடி யெனவும், முடுகாத அறுசீரடி ஆசிரியத் தளையொடு நெறிபெற்று வருதற்கும் சிறுபான்மை கலிப்பாவின்கண் வருதற்கும் உரியது எனவும் கொள்வர் பேராசிரியர்.

ஐஞ்சீரடி அறுசீரடி எழுசீரடியாகிய மூன்றும் கலிக்குரிய, ஆசிரியம் வெண்பாவென்னும் பிறபாக்களுக்கு உரியன அல்ல என விதிப்பதே இச்சூத்திரம்

கலிக்குரிய, பிறபாவிற்கு உரியவல்ல என்றற்கு வந்தது இச்-சூத்திர மென்ப; அற்றன்று; அங்ஙனம் கூறில் தாம் வேண்டும் ஐஞ்சீரடி ஆசிரியத்துள்ளும் புகாதென்று மறுக்க. 'முன்னுதலில' வென்றது யாண்டுமாகா தென்றவாறு.[1] இவ்விலக்கணமெல்லாம் மேற்காட்டிய செய்யுளுட் கண்டு கொள்க. (௯௭)

**நச்சினார்க்கினியம் :**

இது முடுகியல் இன்ன பாவிற்கு உரித்தென்கிறது.

(இ-ள்.) தனியேவரும் ஆசிரியப்பாவினும் வெண்பாவினும் முடுகியலடி மூன்றும் வரப்பெறா எ-று.

மூன்றென்றது, நாற்சீரடியும் ஐஞ்சீரடியும் அறுசீரடியுமான அடிகளை. எழுசீரடி முன்னுதலின்று என்றதனால் முற்கூறிய மூன்றடியானும் வரும் முடுகியலோடு விராஅய்த்தொடர்ந்து ஒன்றாய்க் கலிக்குறுப்பாய்வரும் ஆசிரியமும் வெண்பாவுமுள என்று கொள்க.

உ-ம் "நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசலையு மம்பலு
மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே"
(கலி, குறிஞ்சி-௩)

இஃது அறுசீரடியும் ஐஞ்சீரடியும் முடுகி ஒரு தொடராய்வந்த ஆசிரியம்.

'தகைவகை மிசைமிசைப் பாயிய ரார்த்துட
னெதிரெதிர் சென்றார் பலர்" (கலி, முல்லை-௨)

எனவும்,

---

முன் பக்கத் தொடர்ச்சி

எனக்கூறுவாரும் உளர். அங்ஙனம் கூறின், ஆசிரியத்துள் ஐஞ்சீரடி வருதலுண்-டெனத் தொல்காப்பியனார் விதித்த வண்ணம் ஆசிரியத்துள்ளும் ஐஞ்சீரடி புகாது என்ற நிலையேற்படும். எனவே இச்சூத்திரத்திற்கு அவர்கள் கூறும் பொருள் பொருந்தாது என மறுக்க என்பதாம்.

1. முன்னுதல் - முற்பட நெருங்குதல். நெருங்குதல் இல எனவே முடுகியலுடைய அம்மூவகையடிகளும் ஆசிரியத்திலும் வெண்பாவிலும் யாண்டும் வருதலில்லை என்பதாம்.

"இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று
வெருவெரு தூரம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம்" (கலி, முல்லை ச)

எனவும் இவை நாற்சீரடி முடுகியலோடொன்றாய் வந்த வெண்பா. இதனுள் ஐஞ்சீரடியும் வந்தது.

"மேனிலை மிசலிகலின் மிடைகழி பிழிபுமேற் சென்று
வேனுதி புரைவிரற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்
பானிற வெள்ளை யெருத்தத்துப் பாய்ந்தானை
நோனாது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம்" (கலி, முல்லை-௩)

என ஐஞ்சீரடி முடுகியலோ டொன்றாய் வந்த வெண்பா.

"மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள் பிணைஇ
யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் றோன்றி
வருத்தினான் மன்றவிவ் வேறு" (கலி, முல்லை-௨)

இஃது அறுசீரடி முடுகியலோ டொன்றாய் வந்த வெண்பா. இவற்றை அராக மென்னாமோ வெனின் :- என்னாம்; அராகமாவது பிறிதொன்றனோடு கூட்டி ஆற்றுவியாமற் றானேபோய் அற்று நிற்பதாம். அது பரிபாடற் செய்யுளுறுப்பென்பர்; இது பிறிதொன்றனோடு கூட்டி ஆற்றுவித்துக்கோடற் குரித்தாம்[1] இவ்வேறுபாடு அறிக.

**ஆய்வுரை :**

இது, முடுகியல் இன்ன பாவிற்கு உரித்து என்கின்றது

(இ ள்) முடுகியலாகி வரும் மூவகையடிகளும் ஆசிரியப்பாவினும் வெண்பாவினும் பொருந்தி நில்லா எ-று.

முன்னுதல் - பொருந்தி நிற்றல்

இங்கு 'மூவகையடி' எனப்பட்டன அறுசீரடி, ஐஞ்சீரடி என்னும் இரண்டுடன் 'முதலீரடிக்கும்' என்றவும்மையால்

---

1. ஆற்றுவித்தலாவது, பின்வரும் உறுப்பினுடன் இயைபுபடுத்தல்.

தழுவிக்கொள்ளப்பட்ட நாற்சீரடியும் ஆகிய மூன்றும் எனவும் எழுசீரடி ஆசிரியத்தும் வெண்பாவினும் மயங்கும் எனக் கூறாமையால் அதனையெடுத்துக்கூறி விலக்க வேண்டுவதில்லை யெனவும் இச்சூத்திரவுரையிற் பேராசிரியர் கூறியுள்ளமை முன்னர்க் கூறப்பட்டது.

'நாற்சீர் கொண்டது அடியெனப்படும்' எனக்கூறி அதனை எழுத்தெண்ணி ஐவகையடிகளாகப் பகுத்துணர்த்திய தொல்காப்பியனார், 'வஞ்சியடியே இருசீர்த் தாகும்', 'முச்சீரானும் வருமிடனுடைத்தே', 'ஐஞ்சீரடியும் உளவென மொழிப', 'அறுசீரடியே ஆசிரியத் தளையொடு நெறிபெற்றியலும்', 'எழுசீரடியே முடுகியல் நடக்கும்' என நாற்சீரல்லாத ஏனைச் சீர்வகையடிகளையும் குறிப்பிட்டு விதி கூறுதலால், எழுத்தளவு பற்றி வகுக்கப்படும் கட்டளையடிக்கேயன்றிப் பெருவழக்குடைய சீர்வகையடிக்கும் இவ்வியலில் இலக்கணங் கூறியுள்ளார் தொல்காப்பியனார் என்பது நன்கு புலனாகும்.

**சாரு ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கில்**
**தோற்ற முச்சீர்த் தாகு மென்ப.**

## இளம்பூரணம் :

என் — எனின். இதுவும் ஆசிரியப்பாவிற் குரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஆசிரியப்பாவின் ஈற்றயலடி தோன்றுமிடத்து முச்சீர்த்தாகவும் பெறும் என்றவாறு.

உதாரணம் :

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே" (சிற்றெட்டகம்)

இதனுள் ஈற்றயலடி முச்சீரான்[1] வந்தது. (சாரு)

**சாசா இடையும் வரையார் தொடையுணர்ந்[2] தோரே.**

## இளம்பூரணம் :

என்-எனின். இதுவுமது.

---

1. இவ்வாறு, ஈற்றயலடி மட்டும் முச்சீர்த்தாய் ஏனையடிகள் நாற்சீரவாய் வரும் ஆசிரியப்பா நேரிசையாசிரியம் என வழங்கப்பெறும்.

2. 'தொடையுணர்வோரே' என்பது பேராசிரியர், நச்சினார்க்கினியர் உரைகளிற் கண்டபாடம்.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட முச்சீரடி ஆசிரியப்பாவினுள் இடையும் வரப்பெறும் என்றவாறு.

'நீரின் தண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாவே". (யா. வி. எக)

இதனுள் மூன்றாமடியும் நான்காமடியும் முச்சீரான் வந்த-வாறு கண்டு கொள்க.[1] (சாசா)

**பேராசிரியம்:**

இவை இரண்டு சூத்திரமும் உரை யியைபுநோக்கி உட னெழுதப்பட்டன. இவை, ஆசிரியத்துட் சிந்தடி இன்னுழி வரு-மென்றமையின் எய்தாத தெய்துவித்தனவாம்.

(இ-ள்.) ஆசிரியத்துள் எருத்தடியொன்றும் இடையடி யிரண்டுமாகி முச்சீரடி வரும் (எ-று).

'முச்சீர்த்'தென்று ஒருமை கூறினமையின் அஃது ஒன்றா கலும், தொடையுணர்வோ ரென்றமையின் இடைவருவன இரண்டாகலுங் கூறினானென்பது.[2] 'இடையும்வரையார்' என்ற மையான் ஈற்றயன் முச்சீர்த்தாதல் பெரும்பான்மை.

உதாரணம்:

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
... ... ... ...
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே" (புறம்.1)

என அப்பாட்டினை முழுவதூஉங்கொள்ள ஈற்றயலடி முச்சீர்த் தாயிற்று;

---

1. இங்ஙனம் முச்சீரடிகள் ஈற்றயலிலே மட்டுமின்றி யிடையிலும் வரும் ஆசிரியப்பா இணைக்குறளாசிரியம் என வழங்கப்பெறும்.

2. சாரு-ஆம் சூத்திரத்தில் 'முச்சீர்த்து' என ஒருமைகூறிய அதனால் ஆசிரியத்துள் ஈற்றயலடியொன்றே முச்சீர்த்தாய் வருதலும், சாசா-ஆம் சூத்திரத்துள் 'தொடையுணர் வோர்' என்றதனால் முச்சீரடி இரண்டாய்த் தொடைபெற்று வருதலும் குறிப்பிற் புலப்பட ஆசிரியர் கூறினார் என்பதாம்.

"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே" (யா.வி.253)

என்பதனுட் 'சார னாடன் கேண்மை' எனவுஞ் 'சாரச் சாரச் சார்ந்து' எனவும் முச்சீரடி இரண்டு வந்தன. ஏகாரம் பிரிநிலை. மற்று,

"நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே" (புறம்.235)

என முச்சீரடி இடையும் ஒன்று வந்ததாலெனின், 'தோற்ற' மென்றதனான் எருத்தடி முச்சீராய காலத்துக் குட்டம்பட்டு இனிது விளங்கும். இடையிடை ஒன்று வருதலும் உண்டாயினும் அத்துணை இனிதன்று அது வென்பது கொள்க.[1]

"பெரியகட் பெறினே" (புறம் 235)

என இருசீரடி வந்ததாலெனின், அதனைச் சொற்சீரடி[2] யென்று களைக.

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்-கைக்கொண்டு பிறக்கு நோக்காது" (புறம் 363)

எனவுங் காட்டுப. இவை வஞ்சியடியெனப் படுமென்பது. வெண்சீரான் வஞ்சியடி வருமோவெனின், வாரா; வஞ்சிச்சீர் விரவினல்லதென்பது.

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்"

என்பதோவெனின், அது மற்றை இருசீரடியொடு கூட்டத்துக் காட்டலானும் வஞ்சியடி போன்றது. (௬௯)

---

1. எருத்தடி - ஈற்றயலடி. குட்டம்படுதல் - குறைதல். அகவலின் ஈற்றயலடி முச்சீராய்க்குறைந்து ஒலிக்கவே அஃது அப்பாவின்கண் உள்ள ஏனைய நாற்சீரடிகளிலும் சிறப்புடையதாய் இனிது விளங்கும். முச்சீரடி அகவலின் இடையிடையே ஒன்றுவரின் அவ்வளவு இனிமையுடையதாய்த் தோன்றாது.

2. சொற்சீரடியாவது, சொல் தானே சீராந்தன்மையைப்பெற்று அடியாய் நிற்பது.

**நச்சினார்க்கினியம் :**

இரண்டு சூத்திரமும் உரையியைபு நோக்கி உடன்கூறிற்று.[1] இவை ஆசிரியத்துட் சிந்தடிவருமென எய்தாததெய்துவித்தது.[2]

(இ-ள்.) ஆசிரிய மருங்கி னீற்றயலடியே தன் தோற்றரவு முச்சீரையுடைத்தாய் வரத்தோன்றும்; தொடையுணர்வோர் இடையிலும் வருதலும் நீக்கார். எ று.

ஏகாரம் பிரிநிலை. முச்சீர்த்து என ஒருமை கூறியவதனால் ஈற்றயலடிக்கண் ஒன்றே வருதல் பெரும்பான்மையென்றும், தொடையுணர்வோர் என்றதனால் இடை இரண்டிணைந்து வருதலும், தோற்றம் என்றதனால் இடையொன்று வருதலும் கொள்க.

உ - ம். ''நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே"
(குறுந்தொகை ௩)

இஃது ஈற்றயலடி முச்சீர்த்தாயிற்று.

''நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாவே''

இஃது இடையிரண்டிணைந்து வந்தது.

''சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணுமன்னே
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
யென்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
யம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே

1. பேராசிரியர் உரையைத் தழுவியே இவ்விரு சூத்திரங்களுக்கும் நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளார்.

2. 'எய்தாததெய்துவித்தன' என்றிருத்தல் பொருத்தம்.

நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
யருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
யிரப்போர் கையுளும் போகிப் புரப்போர்
புன்கண் பாவை சோர வஞ்சொனுண் டேர்ச்சிப்
புலவர் நாவிற் சென்றுவீழ்ந் தன்றவ
னருநிறத் தியங்கிய வேலே
யாசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
வினிப், பாடுநரு மில்லைப் பாடுநர்க்கொன் றீகுநரு மில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே'' (புறம் - உ௩௫)

இதனுள் 'நரந்த நாறுந் தன்கையால்' எனவும், 'அருநிறத்-தியங்கியவேலே' எனவும் தனித்து வந்தன. 'பெரியகட் பெறினே' என்பது சொற்சீரடி. இதனைக் குறளடியாக்கிக் குறளடியும் வருமென்பர் பின்பு நூல் செய்தவாசிரியர்.[1]

'உப்பிலாஅ வவிப்புழுக்கல்' (புறம் - ௩௬௩)

முதலிய வஞ்சியடி.

**ஆய்வுரை :**

இஃது ஆசிரியப்பாவிற்கு அடிவகையான் வருவதோர் வேறு-பாடு கூறுகின்றது.

(இ-ள்) ஆசிரியப்பாவின் ஈற்றயலடி முச்சீரடியாகத் தோன்றுதலுண்டு என்பர் ஆசிரியர் எ-று.

1. ''இணைக்குறளிடை பல இணைந்திறினியல்பே' என்ற சூத்திரவுரையில், 'சிறியகட்பெறினே' என்னும் இப்புறநானூற்றுப் பாடலை யெடுத்துக் காட்டி ''இஃது இருசீரடியும் முச்சீரடியும் இடையிடைவந்த இணைக் குறளாசிரியப்பா. பிறவும் அன்ன. என்னை?

''அளவடி யந்தமும் ஆதியு மாகிக்
குறளடி சிந்தடி யென்றா யிரண்டும்
இடைவர நிற்ப திணைக்குற ளாகும்''

என்றார் காக்கைபாடினியார்'' என யாப்பருங்கலவுரையாசிரியர் தரும் விளக்கம் இங்கு நினைக்கத்தகுவதாகும்.

இடையே குறளடியும் சிந்தடியும் வந்து ஈற்றயலடி முச்சீர்த்தாகி வந்த சிலப்பதிகாரப் பதிகப்பாட்டினைக் குட்டச் செந்தூக்கு என்பர் அடியார்க்குநல்லார்.

ஈற்றயலடி முச்சீராம் எனவே ஏனையவடிகள் நாற்சீராதல் பெறப்படும். இவ்வாறு ஈற்றயலடியொன்றும் முச்சீர்த்தாய் ஏனைய நாற்சீரடிகளாய் வரும் ஆசிரியத்தைப் பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர் நேரிசையாசிரியப்பா எனப் பெயரிட்டு வழங்குவர்.

இதுவும் அது.

(இ-ள்) மேற்கூறப்பட்ட முச்சீரடி ஈற்றயலிலன்றி இடையில் வருதலையும் விலக்கார் தொடைவகை யுணர்ந்த புலவர் எ-று.

மோனை, எதுகை முதலிய தொடைகளின் அமைப்பினை யுணர்ந்தோர் என்பார் 'தொடையுணர்வோர்' என்றார். எனவே ஆசிரியப்பாவின் இடையிடையே முச்சீரடி வருதல் தொடை வகைக்குச் சிறப்பளிக்கும் என்றாராயிற்று

**கூஎ முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும்.**

**இளம்பூரணம் :**

என்—எனின். கலிப்பாவிற்கு ஈற்று வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஈற்றயலடி முச்சீரென வோதப்பட்டது கலிப்பா விண்கண் நாற்சீர் ஆகியும் வரும் என்றவாறு [1]

இச்சூத்திரம் எதிரது நோக்கிக் கூறப்பட்டது; 'எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே' (செய்யுளியல் எஉ) என ஓதுகின்றாராதலின்.

---

1 'முரற்கை என்பது கலிப்பாவிற்கு வழங்கும்பெயர். வண்டுமுரலுதல்போலும் இன்னோசை துள்ளலோசையுடைய கலிப்பாவுக்கு அமைந்தமைபற்றி அது முரற்கை என்னும் பெயர்த்தாயிற்று எனக்கருதுதல் பொருந்தும்.

'நிறையவும் நிற்கும்' என்பது முச்சீர் நாற்சீராகி நிறைந்து நிற்கவும் பெறும் என்பதாம். இவ்வியலில், 'எழுசீரிறுதி ஆசிரியங் கலியே' (சூத். எஉ) எனப் பின்வருஞ்சூத்திரத்துள் ஈற்றயலடி முச்சீர்த்தாய் வந்த ஆசிரியத்தால் கலிப்பா முடியுமெனக் கூறுதலின் அங்ஙனம் முடியும் ஆசிரியப்பாவின் ஈற்றயலடியின் முச்சீர் 'முளைநிரை முறுவ லாயத் தெடுத்த, இளமையுந் தருவதோ விறந்தபின்னே' என்றாங்கு நாற்சீராய் நிறைந்து நிற்றலும் உண்டு என இச்சூத்திரத்தால் எதிரது நோக்கிக் கூறப்பட்டது என்பது இளம்பூரணர் கருத்தாகும். நிறையவும் நிற்கும் என்பதற்கு முச்சீரடி கலிப்பாவினுள் பலவாக நிரம்பவும் நிற்கும் எனக் கொண்டார் பேராசிரியர்.

உதாரணம் :

'அரிமான் இடித்தன்ன'' என்னும் பாலைக்கலியுள், சுரிதகம்

''முளைநிரை முறுவல் ஆயத்துள் எடுத்தாய்ந்த
இளமையுந் தருவதோ இறந்த பின்னே'' (கலித் கரு)

என ஈற்றயலடி நாற்சீரான் வந்தது. (கூஎ)

**பேராசிரியம் :**

இது, கலிப்பாவிற்கு அளவடியும் நெடிலடியும் அதனி னிறந்த அடியும் உரிமை கூறி, இனிச் சிந்தடியும் உரித்தென்கிறது.

**(இ-ள்)** கலிப்பாவினுள் முச்சீரடி நிரம்பவும் நிற்கும் **(எ-று)**[1]

'நிறைய நிற்றல்' என்பது அச்செய்யுண் முழுவதும் அவ் வடியே வருதலாம். உம்மையான் ஒரு செய்யுணிறைய வாராது ஒன்றும் இரண்டும் பலவுமாகி அம்முச்சீரடி வருதல் பெருவர விற்றென்பது. தாம்குறைந்த அடியாதலிற் கலிப்பாவிற்கு உறுப்பாகிய சின்னத்திற் குறைய நிற்கும் இயல்பினவாயினும், நிறைய நிற்றலுடைய கொச்சகத்துளென்றவாறு[2]

''செய்தானக் கள்வன் மகன்'' (கலி 51)

எனவே **வெண்கலியுள்** இறுதிக்கணல்லது வாராது

''நின்கண்ணாற் காண்பென் மனயான்'' (கலி-39)

என்பது இடைவந்தது. எண் உறுப்பின்கண் இரண்டும் நான் கும் வருமாறு கண்டு கொள்க.

''நீர்வரக் கண்கலுழ்ந் தாங்குக்
கார்வரக் கண்டனங் காதலர்
தேர்வரக் கண்டில மன்னோ
பீர்வரக் கண்டனந் தோளே''

என முச்சீரடி ஒரு செய்யுள் நிறையவும் வந்தவாறு. (எO)

---

1. 'முரற்கை' என்பது கலிப்பாவுக்குரிய பெயர். முரலுதல் - இன்னோசை பொருந்த ஒலித்தலாதலின் துள்ளலோசை பொருந்திய கலிப்பாவிற்கு 'முரற்கை' என்பது காரணப்பெயர் என்பது முன்னர்க் கூறப்பட்டது. 'கலி' என்பதும் அப்பொருளில் வழங்கும் காரணப்பெயரேயாகும்.

2. முச்சீரடி அளவடியை நோக்கக் குறைந்தனவாய்க் கலிப்பாவின் உறுப்பாகிய சின்னம் என்னும் எண்ணாய்க் குறையநிற்பனவாயினும் கொச்சகத்துள் நிறைய நிற்றலுடைய என்பார், 'முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும்' என்றார் ஆசிரியர்.

**நச்சினார்க்கினியம்**

இது கலிக்குச் சிந்தடியும் வருமென எய்தாததெய்துவித்தது.

(இ-ள்.) முரற்கையுள் எ-து கலிப்பாவினுள். முச்சீர்......... நிற்கும் எ-து முச்சீரடி ஒருசெய்யுண்முழுதும் நிறையவு நிற்கும். எ-று.

உம்மையான்[1] முதலிடைகடை என்னும் மூன்றிடத்தும் ஒரோவடியாயும் இரண்டும் பலவுமாய வடியாயும் நிற்கும் என்றவாறு.

உ-ம். 'நீர்வரக் கண்கலுழ்ந் தாங்குக்
கார்வரக் கண்டனங் காதலர்
தேர்வரக் கண்டில மன்னோ
பீர்வரக் கண்டனந் தோளே'

முச்சீரடி முழுதும் வந்தது.[2]

'அரிபரி பறுப்பன சுற்றி
யெரிதிகழ் கணிச்சியோன சூடிய பிறைக்க
ணுருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர்வ லந்தன'
(முல்லைக்கலி-௩)

இது முடுகியலான் முதலடியும் மூன்றாமடியும் முச்சீராய் வந்தது.

'நின்கண்ணாற் காண்பென்மன் யான்' (குறிஞ்சிக்கலி-௩).
இதுவும் இடையில் வந்தது.

'செய்தானக் கள்வன் மகன்' (குறிஞ்சிக்கலி - கரு)
இஃது ஈற்றில் வந்தது. பலவும் வந்தன வந்துழிக் காண்க.

**ஆய்வுரை :**

இது, முச்சீரடி கலிப்பாவிற் பயிலுமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) முச்சீரடி கலிப்பாவினுள் நிரம்பவும் நிற்கும் எ-று.

ஈண்டு 'முரற்கை'என்றது, கலிவகையனைத்தையும் சுட்டி நின்றது.

நிறைய நிற்றலாவது, செய்யுள் முழுவதும் முச்சீரடியாகவே வருதல். முச்சீரடி கலிப்பாவின் உறுப்புக்களு ளொன்றாகிய

1. உம்மையால் - 'நிறையவும்' என்ற உம்மையால்.
2. இப்பாடல் 'முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் முச்சீரடியாகிய ஒரேயடியால் வந்தமையின்' 'முச்சீரடி முழுதும் வந்தது' என்றார்.

எண்ணுறுப்பிற் சின்னத்திற்குறைய நிற்கும் இயல்பினவாயினும் கொச்சகத்தில் நிறைய நிற்றலுடைய என்பார் 'முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும் என்றார் ஆசிரியர். 'நிறையவும்' என்புழி உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை.

உதாரணம் பேராசிரியர் உரையிற் காண்க.

**௬௮ வஞ்சித் தூக்கே [1]செந்தூக் கியற்றே[2].**

## இளம்பூரணம் :

என் — எனின் வஞ்சிப்பாவிற்கு ஈறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியப்பாவின் இயல் பிற்று என்றவாறு.

தூக்கெனினும் இறுதியெனினும் ஒக்கும். செந்தூக்கெனினும் ஆசிரிய வீறு எனினும் ஒக்கும். 'செந்தூக் கியற்று' என்றமையால் ஈற்றயலடி முச்சீரான் வருதலும் நாற்சீரான் வருதலுங் கொள்க

உதாரணம் :

"தொடியுடைய தோள்மணந்தனன்'' என்னும் பாட்டுள்,

''இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் தலையே.''

(புறம். ௨௯)

இதனுள் ஈற்றயலடி நாற்சீரான் வந்தது.

'பூந்தாமரைப் போதலமர' என்னும் பாட்டுள்,

''மகிழு மகிழ்தூங் கூரன்
புகழ்த லானாப் பெருவண் மையனே''. (யாப்.வி.பக். ௭௪)

இதனுள் ஈற்றயலடி முச்சீரான் வந்தது. (௬௮)

## பேராசிரியம் :

இது, முறையானே அடியுரிமை கூறியவாற்றான் வஞ்சிப்பாவிற்குக் கூறியதிலன்; ஈண்டுக் கூறினன். எற்றுக்கு? அது,

''வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்'' (தொல்-செய்-43)

எனவும்,

---

1. வஞ்சித்தூக்கு-வஞ்சிப்பாவின் ஈறு.
2. செந்தூக்கு-ஆசிரியப்பாவின் ஈறு.

"முச்சீ ரானும் வருமிட னுடைத்து" (தொல்-செய்-45) எனவும் மேற் கூறப்பட்டமையின். அது நோக்கி அடியுரிமை கூறப்படாத வஞ்சிப்பாவிற்கு [வஞ்சியினது] ஈற்றடியும் அவ்விரு சீரடியும் முச்சீரடியுமாவான் சென்றதனை விலக்கி இன்ன அடியான் முடியுமென்கின்றது.[1]

(இ-ள்.) வஞ்சிப்பாவினது இறுதியடி ஆசிரியவடி இறுதி போன்று இறுக (எ - று) [2]

எனவே, ஆசிரியத்திற்கு ஓதிய சீரானுந் தளையானும் இறுமென்றவாறு.

"மாக்கட னிவந்தெழுதரு
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ
வனையை யாகன்மாறே
தாயி றூவாக் குழவி போல
வோவாது கூஉநின் னுடற்றியோர் நாடே" (புறம்-4)

என **மண்டிலவாசிரியத்தா** னிற்றது.

'செந்தூக் கியற்றே' யென்ற மாட்டேற்றானே,

"ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப" (தொல்-செய்௲௫)

எனவும்,

'இடையும் வரையார் தொடையுணர் வோரே'
(தொல்-செய் ௲௲)

எனவும் எய்திய விதி ஈண்டும் எய்துவிக்க.

"அனையை யாகன் மாறே" (புறம்-4)

என முச்சீரடி இடைவந்தது.

"இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்மே யெனவாங்
கொள்ளழற் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே". (புறம்-11)

---

1. 'வஞ்சியடியே இருசீர்த்தாகும்', 'முச்சீரானும் வருமினுடைத்தே' என வஞ்சிப்பாவிற்கு அடியுரிமை கூறப்பட்டது. அம்முறைப்படி வஞ்சிப்பாவின் இறுதி அவ்விரு சீரடியும் முச்சீரடியுமாய் முடிவதனைவிலக்கி ஆசிரியத்திற்குரிய சீரானுந் தளையானும் முடியும் என அறிவுறுத்துவது இச்சூத்திரமாகும்.

2. வஞ்சித்தூக்கு-வஞ்சிப்பாவின் இறுதி. செந்தூக்கு-ஆசிரியப்பாவின் இறுதி.

இஃது ஈற்றயலடி முச்சீர்த்தாகி வந்த செந்தூக்கியற்றாகி இற்ற வஞ்சிப்பா பிறவும் அன்ன ஈண்டுத் தனிச்சொல் வேண்டு-மென்று பிற்காலத்து நூல் செய்தாரும் உளர். அது சான்றோர் செய்யுள் எல்லாவற்றோடும் பொருந்தாமையானும், பிற்காலத்தில் செய்த நூல்பற்றி முற்காலத்துச் செய்யுட்கெல்லாம் இலக்கணஞ் சேர்த்துதல் பயமின்றாதலானும் அஃதமையாதென்பது.[1] வஞ்சிப்-பாவின் ஈற்றடி வரைந்தோதவே இடையாயின எல்லா அடியும் வரப்பெறுமென்பதாம்.[2]

'நேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
(பத்துப்-பட்டி 23 24)

என ஆசிரியவடியும் வெண்பாவடியும் இடைவந்தன. (௬௮)

**நச்சினார்க்கினியம்:**

இது வஞ்சிக்குஞ் சிந்தடி வரும் என்கின்றது.

(இ-ள்.) வஞ்சிப்பாவினிறுதி ஆசிரியப்பாவினிறுதி போன்று இறுக. எ-று.

'செந்தூக்கியற்று' என்ற மாட்டேற்றானே, ஆசிரியத்திற் கோதிய சீரானுந் தளையானும் ஈற்றயலடி முச்சீரடியாய்-வருதலும், இடைக்கண் முச்சீரடி வருதலும் பெறப்பட்டது.

உ-ம். "வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வா னத்து வனப்புப் போன்றன
தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல் லேற்றின் மருப்புப் போன்றன
தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ

---

1. வஞ்சிப்பாவுக்குத் தனிச்சொல்வேண்டுமென்று நூல் செய்தார் அமித சாகரர் முதலியோர். வஞ்சி தனிச் சொற்பெற்று வரும் என்னும் அவ்விதி சான்றோர் செய்யுட்கள் எல்லாவற்றொடும் பொருந்தாமையானும், பிற்காலத்-திற் செய்த இலக்கண நூல்பற்றி முற்காலச் செய்யுட்கட்கு இலக்கண அமைதி காணல் பயனற்றதாகலானும் வஞ்சிப்பா தனிச் சொற்பெற்று வரும் எனப் பிற்காலத்தார் கூறிய அவ்விதி முற்கால இலக்கியங்களுக்குப் பொருந்தா-தென்பதாம்.

2. வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியவடியால் முடியும் எனவரையறை கூறவே, வஞ்சிப்பாவின் இடையிலாயின் வரையறையின்றி எல்லாவடிவும் வரப்பெறும் என்பதாம்.

நிலைக்கொரா விலக்கம் போன்றன
மர்வே, யெறிபதத்தா னிடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயா
னெருத்துவவ்விய புலிபோன்றன
களிறே, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டா
னுயிருண்ணுங் கூற்றுப்போன்றன
நீயே, யலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிவுதோன்றி
மாக்கட னிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
யனையை யாகன் மாறே
தாயி றூவாக் குழவி போல
வோவாது கூஉநின் னுடற்றியோர் நாடே"
(புறம் - ௩)

என முச்சீரடியிடைவந்து மண்டலவாசிரியத்தானிற்றது.[1]

"அரிமயிர்த் திரண்முன்கை"

என்னும் பாட்டினுள் 'இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்மே
எனவாங்

கொள்ளழற் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே'
(புறம் - ௧௧)

இஃது ஈற்றயலடி முச்சீர்த்தாகிச் செந்தூக்கியற்றாயிற்ற வஞ்சிப்பா[2] : தனிச்சொற் பெறுமென்று பின்னுள்ளோர் கூறிய நூல்கள் சான்றோர் செய்யுட் காகாவென்று கொள்க. ஈற்றடி வரைந்தோதவே, இடையினெல்லாவடியும் வரப்பெறுமாயிற்று.

---

1. இவ்வஞ்சிப்பாவின் இறுதி,
"தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே"
என நிலைமண்டில ஆசிரியத்தால் முடிதலின் 'மண்டலவாசிரியத்தான் இற்றது' என்றார். மண்டலம் - நிலைமண்டிலம்; எல்லாவடியும் நாற்சீராய் வரும். அகவற்பா. இறுதல் - முடிதல்.

2. செந்தூக்கு என்றது, எல்லாவடிகளும் நாற்சீரானியன்று ஈற்றயலடி யொன்றும் முச்சீர்த்தாய் வரும் நேரிசை ஆசிரியப்பாவினை.

'நேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை'
(பட்டினப்பாலை)

என ஆசிரியவடியும் வெள்ளடியும் இடைவந்தன.

**ஆய்வுரை :**

இது, வஞ்சிப்பாவின் ஈறு உணர்த்துகின்றது.

(இ-ள்) வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியப்பாவின் இறுதியின் இயல்பினதாய் முடியும் எ-று.

ஈண்டுத் 'தூக்கு' என்பது, துணித்து முடிப்பதாகிய இறுதி என்னும் பொருளில் ஆளப்பெற்றது. வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியப்பாவின் இயல்பினதாய் முடியும். எனவே வஞ்சிப்பாவின் ஈற்றயலடி ஆசிரியப்பாவின் ஈற்றயலடி போன்று முச்சீரான் வருதலும் நாற்சீரால் வருதலும் கொள்ளப்படும்.

உதாரணம் முன்னைய உரைகளிற் காண்க.

**௱௬** [1]வெண்பா ஈற்றடி முச்சீர்த் தாகும்
அசைச்சீர்த் தாகும்[2] அவ்வழி யான.

**இளம்பூரணம் :**

என் — எனின். வெண்பாவிற்கு இறுதியடியும் இறுதிச்சீரும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெண்பாவினீற்றடி மூன்றுசீரையுடைத்தாகும்; அதன்கண் இறுதிச்சீர் அசைச்சீரான்வரும் என்றவாறு.

உதாரணம் முன்னர்க் காட்டுதும் (௱௬)

**பேராசிரியம் :**

இது வெண்பாவிற்கு ஈறு உணர்த்துகின்றது. ஆசிரியத்துக்-கோவெனின், தனக்கோதிய அளவடியானே இறுதலின் வேறுபாடு

---

1. இதனை இரண்டு சூத்திரங்களாகப் பகுத்துரைவரைவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும், 'வெண்பாட்டீற்றடி' என்பதும், 'அவ்வயினான' என்பதும் அவர்கள் கொண்ட பாடம்.

2. அசைச்சீர்த்தாகும் - அசைச்சீரையுடையதாகும், ஆகும் என்னும் பயனிலைக்கு 'வெண்பாவீற்றடி' என்பதனை எழுவாயாக வருவித்துரைக்க.

'அசைச்சீராகும்' என்பது பாடமாயின் அசைச்சீர் அவ்வயினான ஆகும் என அசைச்சீர் என்பதனையே எழுவாயாகக் கொள்க.

கூறவேண்டா. எருத்தடியும் இடையடியும் முச்சீரான் வருமென வேறுபட்டவழிக் கூறி, அல்லாதன அளவடியாதல் கொள்ள வைத்தானென்பது.[1]

(இ-ள்) வெண்பாவின் இறுதியடி ஒன்றும் முச்சீரான் அன்றி வாராது (எ-று).

அவை முன்னர்க் காட்டுதும். அஃதேல்,

"அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர் (மூதுரை 4)

என முச்சீரடி இடையும் வந்ததால் வெண்பாவினுளெனின்[2] முச்சீர்த்தென்னாது 'ஆகும்' என்று ஆக்கங் கொடுத்துக் கூறினமையான்[3] அத்துணை ஆக்கமின்றி இடையுஞ் சிறுபான்மை வருமெனக் கொள்க. அல்லாதார் அதனை வெண்பாவன்றென்ப. (எஉ)

**நச்சினார்க்கினியம் :**

இது வெண்பாவிற்கு முச்சீர் வருமாறு கூறுகின்றது.

இ-ள். வெண்பாவினிறுதியடி முச்சீரான் வருதலை உடைத்தாகும். எ-று.

உதாரணம் மேற்காட்டுதும். சீர்த்தென்னாது 'ஆகும்' என ஆக்கங் கொடுத்தமையான், அத்துணையாக்கமின்றி நாற்சீரான் மண்டலித்து வருதலும், இடையினும் முதலினுஞ் சிறுபான்மை முச்சீரான் வருதலுங் கொள்க.

உதாரணம் :

"அறையருவி யாடா டினைப்புனமுங் காவாள்
பொறையுயர் தண்சிலம்பிற் பூந்தழையுங் கொய்யாள்

1. ஆசிரியப்பா தனக்கோதிய அளவடியாலே முடிதலின் அதற்குவேறுபாடு கூற வேண்டியதில்லையாதலின் ஈற்றயலடியும் இடையடியும் முச்சீரால் வரும் என வேறுபாடுள்ள பகுதியை மட்டும் சுட்டிக்கூறி, ஆசிரியத்தில் முன்னும் பின்னும் உள்ள எல்லா அடிகளும் அளவடியாதலைக் கொள்ளவைத்த ஆசிரியர், இச்சூத்திரத்தால் வெண்பாவிற்கு இறுதி உணர்த்துகின்றார்.

2. 'முச்சீரடி வெண்பாவினுள் இடையும் வந்ததாலெனின்' என இயைத்துரைக்க.

3. ஆக்கங் கூறக் கொடுத்தமையான். பா.வே.

உறைகவுள் வேழமொன் றுண்டென்றா னென்னை
மறையறநீர் வாழிய மையிருங் குன்று"

என மண்டலித்து[1] வந்தது.

"அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலு மேன்மக்கண் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்"

இது மூதுரை.

"நாளுமொன் றீயாப் பகலும்
பகாஅ நண்புடைக் கேளிர்ப் பிரிவித்
தகாஅ னிவனென்னுஞ் சொல்லுமிந் நான்கும்
வகாஅ தொழிக வெமக்கு"

இது சான்றோரெல்லாரும் பிறைதொழுததேனும், பாட்டாய் வருதலின் மந்திரமாகாது.[2] இனி,

"வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவ
னான்மாடக் கூடலிற் கல்வலிது
சோழ னுறந்தைக் கரும்பினிது தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது"

"கறைப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்
கரைத்திருந்த சாந்துதொட் டப்பேய்
மறைக்குமா மாட்டாது மற்றுந்தன் கையைக்
குறைக்குமாங் கூர்ங்கத்தி கொண்டு"

இவை ஔவையுங் காரைக்காலம்மையுங் கூறியன[3]

---

1. மண்டலித்து வருதலாவது, எல்லாவடிகளும் நாற்சீரடிகளாய் ஒத்துமுடிதல்.

2. இப்பாடல் சான்றோர் எல்லோரும் கூடிப் பிறைதொழும் நிலையிற் பாடுதற்குரிய தோத்திரப் பாடலாகும். இது மந்திரம் போன்று அமைந்ததாயினும் அடிவரையறையுடைய பாட்டாகி வருதலின் அடி வரையில்லாத மந்திரமாகாது என்றார்.

3. 'வஞ்சிவெளியகுருகெல்லாம்' என்ற பாடல் ஔவையார் பாடியது எனவும் 'கறைப்பற் பெருமோட்டு' என்ற பாடல் காரைக் காலம்மையார் பாடியது எனவும் முறையே கொள்க. 'வஞ்சி வெளிய' என்ற பாடலின் மூன்றாமடியில் 'சோழனுறந்தைக் கரும் பெளிது' என்றிருத்தலே பொருட்பொருத்தமுடையதாகும்.

"உலகு பசிப்பப் பசிக்கு முலகு
துயர்தீரத் தீரு நிலவு
நிறுத்திவாழ் வஞ்சி யுடையாழ்வி யென்னு
மொருத்தியா லுண்டிவ் வுலகு"

அங்ஙனம் செய்யுள்செய்த முன்னோரைக்கண்டு பின்னுள்ளோர் இதனைச் செய்யுளாகச் செய்தலின் இவற்றை ஆரிடமென்பார் இவ்விதி யறியாதார்.[1]

**பேராசிரியம் :**

அசைச்சீர்த் தாகும் அவ்வயி னான.

---

1. இங்கெடுத்துக்காட்டிய செய்யுட்கள் யாவும் முன்னோர் பாடிய செய்யுட்களை யடியொற்றிப் பின்வந்தோர் பாடிய பாடல்கள் ஆதலின் இவை நல்லிசைப் புலவர் பாடிய உலகியல் விதிமுறைச் செய்யுட்களெனவே கொள்ளத்தக்கன. இவற்றை உலகியற் செய்யுள்கட்கெய்திய உறுப்புக்களின் மிக்குங் குறைந்தும் வந்த ஆரிடச் செய்யுட்களுக்கு மேற்கோளாகக் காட்டுவர் யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர். அவர் கூற்றை மறுக்கும் நிலையில் அமைந்தது நச்சினார்க்கினியர் எழுதிய இவ்வுரைத் தொடராகும்.

"ஆரிடமென்பது உலகியற் செய்யுள்கட் கெய்திய உறுப்புக்களின் மிக்குங் குறைந்துங் கிடப்பன. ... ... அவ்வாரிடச் செய்யுள் பாடுதற்குரியார் ஆக்குதற்குங் கெடுத்தற்கும் ஆற்றலுடையோராயினார். அவர் இம்மை மறுமை முக்காலமு முணர்ந்த இருடிகளெனக் கொள்க; என்னை?

"உலகியற் செய்யுட் கோதிய வகையிற்
குறையவும் விதப்பவுங் குறையா வாற்றல்
இருடிகள் மொழிதலின் ஆரிடம் என்ப"

எனவும்,

"ஆரிடச் செய்யுள் பாடுதற் குரியோர்
கற்றோ ரறியா வறிவுமிக் குடையோர்
மூவகைக் காலப் பண்புமுறை யுணரும்
ஆற்றல் சான்ற அருந்தவத் தோரே"

எனவும் சொன்னார் பாட்டியன் மரபுடையார்" என ஆரிடச் செய்யுளாவன இவையென விளக்குவர் யாப்பருங்கலவிருத்தியாசிரியர். கற்றோரறியா அறிவுமிக்குடைய இருடிகள் உலகியல் மொழிநடை விதிகளைக் கடந்து பாடிய செய்யுட்களே வடமொழியில் ஆரிடம் என வழங்கப்பெறுகின்றன. யாப்பருங்கல விருத்தியில் பொய்கையார், குடமூக்கிற்பகவர், ஔவையார் முதலிய புலவர் பெருமக்கள் பாடியனவாக எடுத்துக்காட்டப்பெற்றுள்ள பாடல்கள் நல்லிசைப் புலவர்களாகிய முன்னைப் புலவர் பெருமக்கள் பாடியுள்ள யாப்பியல் விதிகளை அடியொற்றிப் பாடப் பெற்றனவாகக் காணப்படுதலால் 'இவற்றை ஆரிடமென்பார் விதியறியாதார்' என்றார் நச்சினார்க்கினியர்.

இது, மேலதற் கெய்தியதொரு விதி.

(இ-ள்.) வெண்பாவின் இறுதிவரும் முச்சீரடியின் ஈற்றுச் சீர் வரப்பெறாது அசைச்சீரல்லாது (எ-று).[1]

மேல்,

'அசைநிலை வரையார் சீர்நிலை பெறல்' (தொல்-செய்-27)

என்றான், அவற்றுள் உரியசைச்சீர் முதலும் இடையும் இறுதியும் வருமென்பான்,

'இயற்சீர்ப்பாற்படுத்து (தொல்-செய்28)

இயற்றுக என்றான் அவ்வாறே இயலசைச்சீரும் முச்சீரடி[2] இறுதிவருமென்பது ஈண்டுக் கூறியவாறு.[3] (எசா)

**நச்சினார்க்கினியம் :**

இது மேலதற்கு எய்தியதோர் விதி.

(இ-ள்.) அவ்வெண்பாவின் ஈற்றில்வரும் முச்சீரடியின் இறுதிச்சீர் அசைச்சீராய் நிற்கும். எ-று

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே' (செய் உஅ) என்பதனுள் வெண்பாவின் முதலுமிடையும் இயலசைச்சீரிரண்டும் வாரா : உரியசைச் சீரிரண்டும் வரும் : என்றதனை, ஈண்டு இறுதிக்கண் இயலசைச்சீரும் உரியசைச்சீரும் வருமென்றவாறு [4]

---

1. 'அவ்வயினான அசைச்சீர்த்து ஆகும்' என இயைத்துப் பொருளுரைக்கப்பட்டது. அவ்வயினான-வெண்பாவின் இறுதிவரும் முச்சீரடியின் ஈற்றின்கண். அசைச்சீர்த்து ஆகும்-அசைச்சீர் ஆவதல்லது ஏனைச்சீர் வரப்பெறாது.

2. இயலசைச்சீ ருரியசைச்சீரு மல்லா முச்சீரடி.. பா. வே.

3. செய்யுளியல் உஎ-ஆம் சூத்திரத்து, ஓசைநிலை நிறையாமையாற் சீர்த் தன்மைப்பட நிறைந்து நிற்குமாயின் அசைநிலைமைப்பட்ட சொற்களையெல்லாம் சீர்நிலை பெறுதற்கண் நீக்காது கொள்வர் என்றார், அவற்றுள் நேர்பு, நிரைபு என்னும் உரியசைச்சீர் முதலும் இடையும் இறுதியும் வந்து இயற்சீரேபோலத் தளை கொள்ளப்படும் என்பதனை இவ்வியல் உஅ-ஆம் சூத்திரத்திற் கூறினார். நேர், நிரை என்னும் இயலசையிரண்டும் சீராய் நிலை, பெறினுந் தளைகொள்ளப்படா என அச்சூத்திரத்தால் விலக்கிய ஆசிரியர்-உரியசைச்சீர்போன்றே இயலசைச்சீரும் முச்சீரடி இறுதிக்கண்வரும் என்பதனை இச்சூத்திரத்தாற் கூறுகின்றார், என்பது பேராசிரியர் கருத்தாகும்.

4. வெண்பாவின் முதலும் இடையும் உரியசைச்சீர் வந்து இயற்சீரே போலத் தளை கொள்ளப்படும் என முன்னர்க் கூறிய ஆசிரியர் வெண்பாவின் இறுதிக்கண் அவ்வுரியசைகளேயன்றி முதலும் இடையும் வாராவென்று விலக்கப்பட்ட இயலசையும் சீராய் வரும் என்றார் என்பதாம்.

**ஆய்வுரை :**

இது, வெண்பாவிற்கு ஈறு உணர்த்துகின்றது.

(இ-ள்) வெண்பாவின் இறுதியடி மூன்று சீரையுடைய-தாகும். அவ்விடத்து (நேர், நிரை, நேர்பு, நிரைபு, என்னும்) அசைகளில் ஒன்றே சீராய் நின்று முடியும் எ-று.

இச்சூத்திரத்தின் முதலடியினை ஒரு சூத்திரமாகவும் இரண்டாமடியினை மற்றொரு சூத்திரமாகவும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் பகுத்து உரை கூறுவர். இளம்பூரணர் ஒரு சூத்திரமாகக் கொண்டவாறே இங்கும் கொள்ளப்பெற்றது.

எய் **நேரீற் றியற்சீர் நிரையும் நிரைபும்**
**சீரேற் றிறூஉம் இயற்கைய என்ப.**

**இளம்பூரணம் :**

என் — எனின். மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெண்பாவி னிறுதிச்சீரின் அயற்சீர் நேரீற்றியற்-சீராயின்[1] நிரையசையும் நிரைபு அசையுஞ் சீராந்தன்மையைப் பெற்று முடியும் இயற்கையை யுடைய என்றவாறு

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை" (குறள். ௯)

"தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது" (குறள். எ)

என வரும். (எ൦)

**பேராசிரியம் :**

இது, மேற் கூறப்பட்ட இயற்சீர் நான்கும் வருங்கால் இன்னுழி நின்று இன்னவாறு கொள்ளப்படுமென்ப துணர்த்து தல் நுதலிற்று

---

1. நேரீற்றியற்சீர் என்பன தேமா, புளிமா என்னும் வாய்பாட்டு இயற் சீர்கள், 'நிரையும் நிரைபும் சீர் ஏற்று இறூஉம்' என்றதனால், இந் நேரீற்றியற்-சீர்கள் இறுதியடியின் ஈற்றயலில் நிற்பன என்பது புலனாம்.

ஏற்றல் - வருஞ்சீராக ஏற்றுப்பொருந்துதல்.

இறூஉதல் - முடிதல். எனவே மாச்சீர்முன் நிரையும் நிரைபும் ஆகிய அசைச்சீர்களுள் ஒன்றுவரின் இயற்சீர் வெண்டளையெனப்படும் என்பதாம்.

(இ - ள்) நேரிறுதி வந்த நிரையும் நிரைபுமே இறுதிச் சீராய் நிற்பன (எ - று)[1]

எனவே, தனிவந்த நிரையும் நிரைபும் நிரைமுதற்சீர் போலத் தளைகொள்ளப்படு மென்பதாம்.[2] 'ஏற்றிறூஉம்' என்ற இலேசினான் இடைவந்த நிரைபசையும் அவ்வாறு கொள்க.

அஃது,

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே'

(தொல்-செய்-28)

என்பதனான் அடங்காதோவெனின் அடங்காது. என்னை? அசைச்சீர்தான் அடங்குமாற்றுக்கு ஆண்டுக் கூறினான், அது பிறிதுசீர் அசைச்சீரொடு தட்குமாற்றுக்குங் கூறல்வேண்டு மென்பது. அல்லதூஉம் ஆண்டு அளவடிக்குக் கூறினான் இது சிந்தடிக்கென்பது[3] வரலாறு;

"வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோ
லேரிய வாயினு மென்செய்வ—கூரிய
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை"

(முத்தொள்ளாயிரம்-71)

எனவும்,

"அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாழித்தேர் குத்தி
யெயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற் பனிக்கடலுட்
பாய்செய்த நாவாய்போற் றோன்றிற்றே யெங்கோமான்
காய்சினவேற் கோதை களிறு." (முத்தொள்ளாயிரம்-17)

---

1. நிரைநிரைபு என்னும் அசைச்சீர்கள் வெண்பாவின் இறுதிச்சீராய் நிற்றல் என்பது, தேமா புளிமா என்னும் இயற்சீர்களில் ஒன்றன்பின்னரேயே என இடம் வரையறுத்துணர்த்துவது இச்சூத்திரமாகும்.

2. எனவே ஈற்றில் வந்த நிரை, நிரைபு, என்னும் இவ்வசைச்சீர்கள் இரண்டும் நிரைமுதற்சீர்போல வந்து முன்னின்ற சீரோடு தளை கொள்ளப்படும் என்பதாயிற்று.

3. 'இயற்சீர்ப்பாற்படுத்து' எனவரும் சூத்திரம், அசைச்சீர் இயற்சீருள் அடங்குமாற்றிற்குக் கூறப்பட்டது. பிறிது சீர்நின்று அசைச்சீரொடு தளைக்குமாறு கூறுவது இச்சூத்திரமாகும். அன்றியும்' இயற்சீர்ப்பாற்படுத்து' என்பது அளவடிக்குக் கூறியது. இது சிந்தடிக்குக் கூறியது. எனவே இவ்விதி அதன்கண் அடங்காது என்க.

எனவும் இவற்றினுட் 'கொள்ளா' எனவுங் 'கோதை' எனவும் நின்ற நேரீற்றியற்சீர் முன்னர் முலையெனவுங் களிறெனவும் நிரையும் நிரைபுஞ் சீரேற்றவாறும் வெண்பாட்டீற்றடி முச்சீர்த் தாயவாறும் ஆண்டு அசைச்சீர் வந்தவாறுங் கண்டுகொள்க.

என்றார்க்கு, முச்சீரடியின் முதற்சீர்க்குத் தளை கூறாரோ வெனின், ஆண்டுத் தளைவகையின்றியும் வருதலின், அதனை வரைந்து கூறாரென்பது; என்னை? 'கோட்டுமண் கொள்ளா முலை' எனவுங் 'காய்சினவேற் கோதை களிறு' எனவுந் தளை வகையான் வந்தன

> ''உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
> செறாஅஅய்[1] வாழியென் நெஞ்சு'' (குறள். 120)

எனவும்,

> ''கலாஅற் கிளிகடியுங் கானக நாட
> விலாஅர்க் கில்லை தமர்'' (நாலடி. 298)

எனவும் தளைவகையின்றி வந்தன. (எசு)

**நச்சினார்க்கினியம்:**

இஃது அவ்வசைச்சீர் நான்கனுள் நிரையும் நிரைபும் இன்னுழி நின்று இன்னவாறு தட்கும் என்கின்றது

(இ-ள் ) நிரையும் நிரைபும் நேரீற்றியற்சீர்ப்பின்னே தளை-கொண்டிறும் இயல்பின. எ-று.

> 'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றுக' (செய்-உஅ)

என்றவைதாம் வருஞ்சீரோடு தட்குமாறுகூறி, ஈண்டு அவை முன்னின்ற சீரோடு தட்குமாறு கூறுகின்றது.[2]

---

1. 'செறாஅய் வாழியென் நெஞ்சு' எனவும் 'இலாஅர்க் கில்லை தமர்' எனவும் வரும் அடிமுதற் சீரின்கண் ஓரளபே கொண்டு, முச்சீரடியின் முதற்சீர் தளைவகை யின்றி வந்தன என்றார் பேராசிரியர். வெண்பா தளைபிழையாமல் வருதல் வேண்டுமாதலின் 'செறாஅஅய் வாழியென் நெஞ்சு' எனவும் 'இலா-அஅர்க்கில்லை தமர்' எனவும் ஈரளபு கொள்ளுவர் நச்சினார்க்கினியர் முதலிய ஏனைய உரையாசிரியர்கள். இங்ஙனம் வெண்பாவில் வெண்டளை பிழையாது கொள்ளுதலே ஆசிரியர் கருத்துக்கு ஏற்புடையதாகும்.

2. ''இயற்சீர்ப் பாற்படுத் தியற்றுக'' (செய்-உஅ) என்ற நூற்பா உரியசைச்சீர் முன்னர் நின்று பின்வருஞ்சீரோடு தளைகொள்ளுமாறு கூறியது. 'நேரீற்றியற்சீர். எனவரும் இச்சூத்திரம் அசைச்சீர் இறுதிக்கண் நின்று முன்னின்ற சீருடன் தளை கொள்ளுமாறு கூறியது என்பதாம்.

உ-ம். "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை" (திருக்குறள்-௧௫)

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்
நெஞ்சத் தவல மிலர்" (திருக்குறள்-௧0௭௨)

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது" (திருக்குறள்-௭)

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு" (திருக்குறள்-௧)

இவை தேமா புளிமா என்னும் நேரீற்றியற்சீர் நிரையசைச்-சீரோடும் நிரைபசைச் சீரோடுந் தட்டன.

**ஆய்வுரை :**

இது, மேற்குறித்த அசைகளுள் நிரையும் நிரைபும் சீராய் நின்று முடியும் இடம் இதுவெனவுணர்த்துகின்றது.

(இ-ள்) வெண்பாவின் ஈற்றயற்சீர் நேரீற்றியற் சீராயின் அதன்முன் நிரையசையும் நிரைபசையும் சீராந்தன்மையைப் பெற்று முடியும் இயல்பினையுடையன எ-று.

உ-ம். 'தாளை வணங்காத் தலை'

எனவும்,

'மனக்கவலை மாற்ற லரிது'

எனவும் நேரீற்றியற்சீர்ப்பின் நிரையசையும் நிரைபசையும் வந்து இறுதிச் சீராய் முடிந்தன.

**௭௧** **நிரையவண் நிற்பின் நேரு நேர்பும்**
**வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர்.**

**இளம்பூரணம் :**

என் - எனின். இதுவுமது.

(இ-ள்.) வெண்பாவி னீற்றயற்சீர் நிரையீற் றியற்சீராயின் நேரசையும் நேர்பசையும் முடிபாம் என்றவாறு.[1]

---

1, அவண் நிரைநிற்பின் நேரும் நேர்பும் வரைவின்று என இயையும். அவண்-வெண்பாவீற்றடியின் இறுதிச்சீரின் அயலில். நிரை நிற்பின்; கூவிளம், கருவிளம் என்னும் நிரையீற்றியற்சீர் நிற்குமானால். அவ்வழிவருஞ்சீராக நேரும் வரைவின்று, நேர்பும் வரைவின்று எனத் தனித்தனி இயைத்துரைக்க. வரைவின்று-விலக்கத்தக்கதன்று. எனவே விளச்சீர்முன் நேர், நேர்பு ஆகிய அசைச்சீர்களுள் ஒன்று வரின் இயற்சீர் வெண்டளையெனப்படும் என்பதாம்.

உதாரணம் :

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்" (குறள். ௧௱௨௧)
"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று" (குறள். ௧௱௮)

என வரும்.

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே.'
(செய்யுளியல். ௨௮)

என்பதனான் ஈற்றயற்சீர் முதலசையான் வரினும் நேரும் நேர்பும் முடிபாகக் கொள்ளப்படும்.[1]

உதாரணம் :

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்" (குறள். ௧0)
'இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு". (குறள். ௫)

என வரும். (எக)

## பேராசிரியம்:

இஃது, ஒழிந்த அசைச்சீர் நிரையீற்றுப் பின்னன்றி வாரா வென்கின்றது.

(இ - ள் ) நேரீற்றியற்சீர் நின்ற வழி நிறையீற்றியற்சீர் நிற்பினென்பான் 'நிரையவண் நிற்பின்' என்றான்.[2] ஆண்டு நிரை

---

1. நேரீற்று மூவசைச்சீராகிய வெண்சீரின் ஈற்றசை தளைவழங்குமிடத்து இயற்சீரசை நிரையீறுபோலும் என்பதனை 'வெண்சீரீற்றசை நிரையசையியற்றே' (செய். ௨௮) என்பதனால் ஆசிரியர் முன்னர்க் கூறுதலின், வெண்பாவடியின் ஈற்றடியின் ஈற்றயற்சீர் வெண்பாவுரிச்சீராய் (நேரசையால்) வரினும் நேர், நேர்பு என்னும் அசைச்சீர்களுளொன்று முடிபாகக்கொள்ளப்படும் என்பதாம். முதலசை-நேரசை.

2. முதற்சூத்திரத்திற் குறித்தபடி நேரீற்றியற்சீர் நின்றவிடத்திலே (முச்சீரடியின் இரண்டாஞ்சீராக) நிரையீற்றியற்சீர் நிற்பின் என்னும் கருத்தில் 'நிரைஅவண் நிற்பின்' என்றார் ஆசிரியர்.

யும் நிரையும் வரில் தளைவழுவாமாதலான் நேரும் நேர்புமே வந்து சீரேற்று முடிதல் வரைவின்று (எ - று).[1]

> "கொழுநனை மைந்தன் கொணர்ந்ததற் காக
> முழுமுலை பாய்ந்தன பால்"

எனவும்,

> "வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
> பண்டன்று பட்டினங் காப்பு" (முத்தொள்ளாயிரம். 97)

எனவும் இவற்றுட் பாய்ந்தன வெனவும் பட்டின மெனவும் வந்த நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நேரும் நேர்பும் வந்தன. முன்னர்,

"நேரீற் றியற்சீர் நிரையு நிரைபும்" (தொல். செய் 74)

எனக் கூறி ஈண்டு நிரையவண் நிற்பினெனச் சுட்டிக்கூறியவத னானே அதுவும் நிரையீற்றியற்சீரென்பதூஉம் அஃதிரண்டாஞ் சீரென்பதூஉங் கொள்க.[2] அல்லாதார், அதனை வெண்சீர்க்கும் பொதுவெனக் கூறி,

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே (தொல்-செய். 29)

என்றதனான் வெண்சீரிறுதி நிரையாக இயற்றி அதன் அடிப்பின் நேர்பசை கொடுப்ப;[3]

"எய்போற் கிடந்தானென் னேறு" (பு. வெ. வாகை. 22)

என்புழிக் 'கிடந்தானென்' என நின்ற 'புலிசெல்வா'யினைக் கணவிரி' யாக இயற்றி,

'நிரையவ ணிற்பின் நேரும் நேர்பும்'

---

1. அங்ஙனம் முச்சீரடியில் இரண்டாஞ்சீராய் நின்ற நிரையீற்றியற்சீரின் முன் (நிரை, நிரைபுவரின் தளைவழுவாமாதலால்) நேர், நேர்பு என்னும் அசை களுள் ஒன்று சீராய் வந்து முடியும் என்பதாம்.

2. இவ்வுரைத் தொடர், மேற் கூறிய விளக்கத்தை வலியுறுத்தல் காண்க.

3. ஒருசாராசிரியர் இச்சூத்திரத்தில் நிரையவண் நிற்பின், என்ற தொடர் நிரையீற்றியற்சீருடன் வெண்பாவுரிச்சீரினையும் பொதுப்படக் குறித்ததெனக் கூறி,

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' (செய் - 29) என்ற சூத்திரத்துக்கு 'வெண்சீர்இறுதிநேரசை நிரையசையின் இயல்பினது' எனப்பொருள் கூறி நேரசையை நிரையசையாக இயற்றி, அதன்பின் நேர், நேர்பு என்னும் அசை-யினைக் கூட்டி முடிப்பர்.

என்றதனான் ஏறு என்னும் நேர்பசை கொடுப்பர். அஃது ஈண்டு ஆராய்ச்சி யின்றென்பது. என்னை? இது கட்டளையடி யன்மையின்.[1]

**நச்சினார்க்கினியம்**

இஃது ஒழிந்த நேருநேர்பும் இன்னுழிநின்று இன்னவாறு தட்குமென்கின்றது.

(இ-ள்) நேரீற்றியற்சீர் நின்ற விரண்டாஞ் சீரிடத்து நிரை யீற்றியற்சீர் நின்றபின் அதன்பின் நேரும் நேர்பும்[2] வந்து தட்டல் நீக்கப்படா வென்பர் மெய்ம் மொழிப்புலவர். எ-று.

உ-ம். "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்" (திருக்குறள்-ககஉக)

"அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்" (திருக்குறள்·சுச)

"இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" (திருக்குறள்-கOO)

"படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு" (திருக்குறள் ௩அக)

எனப் பாதிரி கணவிரி நிரையீற்றியற் சீரோடும் நேரசைச் சீரோடும் நேர்பசைச்சீரோடுந் தட்டன.[3] இனி, ஒன்றென-முடித்தலான் வெண்பாவுரிச்சீர் நின்று நேரசைச் சீரோடும் நேர்பசைச் சீரோடும் தட்டலும், ஒழிந்தன விரண்டொடும் தளையாமையுங் கொள்க.[4]

---

1. 'எய்போற் கிடந்தானென் னேறு' (பு. வெ. வாகை - 22) எனவரும் வெண்பாவின் ஈற்றடியில் 'கிடந்தானென்' புலிசெல்-புலிவாய் மாங்காய் என-வரும் நேரீற்று மூவசைச்சீரினைக் கணவிரி (கருவிளம்) என நிறையீற்றியற்சீராக மாற்றி 'நிரையவண் நிற்பின் நேரும் நேர்பும்' எனவரும் இச்சூத்திரவிதிப்படி 'ஏறு' என நேர்பசை கொடுத்து முடிப்பர். 'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே (செய். 29) என்னும் விதி கட்டளையடிபற்றியதாதலின் அதனைச் சீர்வகையடிபற்றிய இச்சூத்திர விதியுடன் தொடர்புபடுத்திக் காணும் ஆராய்ச்சி இங்கு வேண்டுவதில்லை என்பது பேராசிரியர் கருத்தாகும்.

2. 'அதன்பின்னொரு நேர்பும்' எனப் பழைய அச்சுப்பிரதியிற் கண்ட பாடம் 'அதன்பின் னேரும் நேர்பும்' எனத் திருத்தப்பட்டது.

3. "பாதிரி, கணவிரி என்னும் நிரையீற்றியற்சீர் நின்று நேரசைச் சீரோடும் நேர்பசைச் சீரோடும் தட்டன" என்றிருத்தல் வேண்டும்.

4. 'ஒழிந்தன' என்றது, நிரை, நிரைபு என்னும் அசையிரண்டினையும்.

உ-ம். "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்" (திருக்குறள்-௧0)

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" (திருக்குறள்-ரு)

எனத்தட்டன.

**ஆய்வுரை :**

இது, நேரும் நேர்பும் அசைகள் சீராய் நின்று முடியும் இடம் கூறுகின்றது.

(இ — ள்) வெண்பாவின் ஈற்றயற்சீர் நிரையீற்றியற்சீராயின் அதன்முன் நேரசையும் நேர்பசையும் சீராந்தன்மையைப் பெற்று முடியும் எ — று.

உ — ம். 'கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'

எனவும்,

"அன்றே மறப்பது நன்று"

எனவும் நிரையீற்றியற்சீர்ப் பின் நேரசையும் நேர்பசையும் வந்து சீராய் முடிந்தன.

**எஉ  எழுசீர் இறுதி யாசிரியங் கலியே.**

**இளம்பூரணம் :**

என்—எனின். கலிப்பாவிற்கு முடிபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கலிப்பாவிற்கு ஈற்றயலடி முச்சீரான்வரும் ஆசிரிய-முடிபாகும் என்றவாறு.[1]

உதாரணம்

"தொடங்கற்கட் டோன்றிய" என்னுங் கலியுள், சுரிதகம்.

"தொல்கவின் தொலைதல் அஞ்சியென்
சொல்வரைத் தங்கினர் காதலோரே" (கலித். உ)

என வந்தது ஈற்றலயடி நாற்சீரான் வருமென்பது மேற்கூறப் பட்டது. (எஉ)

---

1. 'எழுசீர் இறுதியாசிரியம், என்றது, ஈற்றயலடிமுச்சீரும் இறுதியடி நாற்சீருமாக வரும் ஆசிரியப்பகுதியினை, இவ்வாறு முச்சீரடியும் நாற்சீரடியுமாய் (எழுசீரால்) முடியும் ஆசிரியப்பகுதி கலிப்பாவிற்கு முடிபாகும் என்பார்.

'எழுசீரிறுதியாசிரியம்கலி' என்றார். 'எழுசீர் ஆசிரியம் கலியிறுதி' என இயைத்துப்பொருள் கொள்க,

இவ்வாறு ஆசிரியத்தால் முடியும் கலிப்பாவில் ஈற்றயலடி நாற்சீரானும் வருமென்பது 'முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும்' (செய். சஎ) என மேற்கூறப்பட்டது என்பதாம்.

எ௩ வெண்பா இயலினும் பண்புற முடியும்.

**இளம்பூரணம் :**

(இ - ள்) கலிப்பா வெண்பாச்சுரிதகமாக முடியும் என்றவாறு.*

உதாரணம் :

''அறனின்றி அயல் தூற்றும்'' என்னும் கலியுள், சுரிதகம்

'யாநிற் கூறவும் எமகொள்ளாய் ஆயினை
ஆனா திவள்போல் அருள்வந் தவைகாட்டி
மேனின்று மெய்கூறுங் கேளிர்போல் நீசெல்லுங்
கானந் தகைப்ப செலவு'' (கலித். ௩)

என வெண்பாவினியலான் இற்றவாறு காண்க.

இத்துணையும் அடியிலக்கணம். (எ௩)

**பேராசிரியம் :**

இவை. இரண்டு சூத்திரமும் முறையானே கலிப்பாவிற்கு அன்னதோர் அடி அதற்கு வகுத்தில்லாமையின் வகுக்கின்றது...

[2]என்றார்க்கு, முதலது நேரடியும் ஈற்றது சிந்தடியுமாகக் கொள்ளல் அவ்வெழு நிலையுமெனின்[3] அங்ஙனங் கொள்ளாமைக் கன்றே,

---

* வெண்பாச் சுரிதகமாகி முடியவும் பெறும் எ-து பா.வே.

1. 'முடியும் என்னும் பயனிலைக்கு எழுவாயாக மேலைச் சூத்திரத்திலுள்ள 'கலி' யென்பது அதிகாரத்தால் வந்தியைந்தது. 'வெண்பாவியல்' என்றது வெண்பாவடியினாலியன்ற வெள்ளைச் சுரிதகத்தினை. பண்புறமுடிதலாவது கலிப்பாவிற் குறித்த பொருளோடும் ஓசையோடும் இயைந்து முடிதல். இவ்வியல் ௩௧-ஆம் சூத்திரமுதல் எ௩-ஆம் சூத்திரம் முடிய இத்துணையும் செய்யுளுறுப்பாகிய அடியின் இலக்கணம் கூறப்பட்டது என்பதாம்.

2. இங்கு இடம்பெறுதற்குரிய இவ்விரு சூத்திரப்பொருள்களும் முன்னுள்ள அச்சுப் புத்தகங்களிலும் அவற்றுக்கு மூலமாகக் கிடைத்த ஓலைச் சுவடிகளிலும் காணப்படவில்லை.

3. இவ்விரு சூத்திரங்களிலும் முதற்சூத்திரத்திலுள்ள ஆசிரியம் என்பது, நாற்சீரடியினையும் இரண்டாம் சூத்திரத்திலுள்ள 'வெண்பாவியல்' என்பது முச்சீரடியினையும் குறித்தன வெனக்கொண்டு, முச்சீரடியும் நாற்சீரடியுமாகவும் நாற்சீரடியும் முச்சீரடியுமாகவும் எழுசீரால் முடிவதே கலிப்பா எனக் கொண்டாலென்னை என்பது இங்குத் தோன்றும் வினாவாகும்.

"ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப" (தொல்-செய்.68)

எனவும்,

"இடையும் வரையார் தொடையுணர் வோரே"
(தொல்-செய்69)

எனவுங் கூறிற்றென்பது. எழுசீர் இறுதி ஆசிரியமெனவே, ஆசிரியவடி பலவும் வந்து எருத்தடி முச்சீராக வருமென்பது கொள்க.[1]

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" என்னும் (11) கலிப்பாவினுள்,

இனைநல முடைய கானஞ் சென்றோர்"

என்பது ஈற்றயன் முச்சீரிறுதி ஆசிரியத்தாற் கலிப்பா இற்றது.

"மணிநிற மலர்ப்பொய்கை"

என்னும் (70) கலிப்பாவினுள்,

"மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோ
லெல்லாந் துயிலோ வெடுப்புக நின்பெண்டி
ரில்லி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணங் புகுதாக் கால்"

என வெண்பாவியலினானும் பண்புற வந்தவாறு.

பண்புறவென்பது, விசேடம்மிக, முடியுமென்றவாறு.[2] எனவே, ஈண்டுக்கூறாத இருசீரடியானும் நாற்சீரான்வந்த கலிப்பா வடியானும் ஐஞ்சீரடியானும் முடிவன கொச்சகக் கலியுள்;[3] அவை இத்துணை விசேடமிலவென்றவாறு. ஈண்டு விதந்து ஓதிய வெல்லாம் பெரும்பான்மையும் ஒத்தாழிசைக் கலிக்கெனவுணர்க.

---

1. ஈற்றயலடி முச்சீரும் இறுதியடி நாற்சீரும் ஆக ஏழுசீரளவில் மட்டும் ஆசிரியப்பா வந்து கலிக்கிறுதல் இல்லையென்ப. அதற்கு முன்னும் ஒன்றும் பலவும் ஆசிரிய அடிகள் உளவென்பதும், 'எழுசீரிறுதியாசிரியம்' என அடை கொடுத் தோதினமையாற் புலனாம் ஆதலின், ஆசிரியவடி பலவும் வந்து ஈற்றயலடி முச்சீராகவரும் ஆசிரியப்பகுதியே கலிப்பாவின் இறுதியாம் என்பது கொள்க என்பது மேற்குறித்த வினாவுக்குப் பேராசிரியர் தரும் விடையாகும்.

2. 'பண்புற முடியுமென்பது, விசேடம் மிக முடியுமென்றவாறு'. என இத்தொடர் இருத்தல் வேண்டும்.

3. 'கொச்சகக்கலியுள' எனத் திருத்திக்கொள்க.

'இயல்' என்றதனாற் கட்டளை வெண்பாவே வரல் வேண்டு வதில்லை எனக்கொள்க.[1] 'பண்புற' என்றதனான் மூன்றடியின் இழியிற் பண்புபட வாரா வெள்ளைச்சுரிதக மெனவுங் கொள்க.[2]
(எசா எள)

**நச்சினார்க்கினியம் :**

இரண்டும் உரையியைபுநோக்கி ஒன்றாகக் கூறிற்று. இது கலிக்குஞ் சிந்தடிகூறி ஈறுவருமாறு கூறுகின்றது.

(இ-ள்) கலிப்பா எழுசீரிறுதியாகி ஆசிரியத்தாலும் வெண்பா வினிறுதியாலும் முடியும். எ-று.

'எழுசீரிறுதி யாசிரியம்' எனவே, ஆசிரியவடி பலவும் வந்து எருத்தடி முச்சீராகவே வருமென்பதூஉம், 'வெண்பாவியல்' எனவே, கட்டளைவெண்பாவானும், சீர்வகைவெண்பாவானும் வந்து ஈற்றடி முச்சீரான் வருமென்பதூஉம் பெற்றாம். உ-ம்.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்"
(பாலைக்கலி-கO)

என்னும் கலியிறுதியின் 'இனைநலமுடைய' என்னும் ஆசிரியம் ஈற்றடி நாற்சீரும் அயலடி முச்சீருமாக எழுசீரான்இற்றது.

'மணிநிற மலர்ப்பொய்கை' (மருதக்கலி-ரு)

என்னுங் கலியினிறுதி

'மெல்லியான் செவிமுதன் மேல்வந்தான் காலைபோ
லெல்லாந் துயிலோ வெடுப்புக நின்பெண்டி
ரில்லி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணன் புகுதராக் கால்'

என வெண்பாவியலான்இற்றது இது கலிக்குறுப்பாய் வருதலின் ஆசிரியத்தளையும் வந்தது. இஃது ஒத்தாழிசைக்கும் பெரும்-பான்மைவிதி[3]. 'பண்புற' என்றது விசேடமிக முடியுமென்றவாறு;

---

1. வெண்பாவென்னாது வெண்பாவியலினும் என்றதனால், கட்டளை-யடியால் இயன்ற வெண்பாவே வருதல் வேண்டும் என்பதில்லை, சீர்வகையடி யால் வரும் வெண்பாவும் கலிக்குஈறாம் என்பது கொள்ளப்படும்.

2. கலிப்பாவின் இறுதிக்கண் வருதற்குரிய வெள்ளைச்சுரிதகம் மூன்றடியிற் குறையின் சிறப்புப் பொருந்த வாராது என்பதாம்.

3. "இஃது ஒத்தாழிசைக்குப் பெரும்பான்மை விதி" என்றிருத்தல் வேண்டும் என்பது, "ஈண்டு விதந்து ஓதியனவெல்லாம் பெரும்பான்மை-யும் ஒத்தாழிசைக்கலிக்கெனவுணர்க" எனவரும் பேராசிரியருரையால் உய்த்துணரப்படும்.

எனவே, இருசீரும் நாற்சீரும் ஐஞ்சீருமாயவடிகளான் முடிவன-வெல்லாங் கொச்சகம்: அவை இத்துணை விசேடமின்று என்றவாறு. ஆசிரியம் என்றதனான் மூன்றடியிற் குறைந்த வெள்ளைச் சுரிதகம் வரிற் பண்புறமுடியாவாம்.

**ஆய்வுரை :**

இது, கலிப்பாவிற்கு முடிபு உணர்த்துகின்றது.

(இ-ள்) ஈற்றயலடி முச்சீராய் வரும் ஆசிரியத்தின் முடிபே கலிப்பாவிற்கும் முடிபாகும் எ-று.

'எழுசீரிறுதி கலி' என்னாது 'எழுசீரிறுதி யாசிரியம் கலியே' என்று கூறவே ஆசிரியவடி பல வந்து, ஈற்றயலடி முச்சீரும் ஈற்றடி நாற்சீரும் ஆக எழுசீரான் முடிவதே ஈண்டுக் குறித்த கலிப்பாவின் முடிபு எனக்கொள்க.

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) (மேற்குறித்த கலிப்பா) வெண்பாவியல்பினாலும் பண்புற முடிதல் உண்டு எ-று.

வெண்பா என்னாது, வெண்பாவியல் எனக்கூறவே, கட்டளை வெண்பாவாலும் சீர்வகை வெண்பாவாலும் வந்து ஈற்றடி முச்சீரால் முடியும் என்பது பெறப்படும்.

இவ்விரண்டு சூத்திரங்களுக்கும் பொருட்டொடர்பு கருதி ஒருங்கே உரைவரைந்து விளக்குவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். இங்குக் கூறிய விதிகள் பெரும்பாலும் ஒத்தாழிசைக்கு உரியன என்பது அவ்விருவர் கருத்துமாகும்.

இத்துணையும் அடியிலக்கணம் கூறப்பட்டது.

௭௪ எழுத்து முதலா ஈண்டிய அடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்.

**இளம்பூரணம் :**

என்—எனின், யாப்பாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) எழுத்து முதலாக அசை சீர் அடி என ஈண்டோதப்-பட்ட அடியினாற் றான் குறித்த பொருளை யிறுதியடியளவு முற்றுப்பெற நிறுத்துதல் யாப்பென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

இது சொல்ல வேண்டிய தென்னை? 'செய்யுட்பாடுவார்க்கு இயல் பன்றோ எனின்' ஈண்டுச் செய்யுளுறுப்புள் ஓதுகின்றா-ராதலின் யாதானு மொருபொருட்கட் பலசொற் றொடுத்து வழங்குங்கால் குறித்த பொருளை முடிக்கவேண்டுஞ் சொல்லே சேர்த்துக் கூறல்வேண்டும் எனவும் அது மிகாமற் குறையாமற் கூறல்வேண்டும் எனவும் இலக்கணங் கூறல் வேண்டும் என்க. அதன் வகை முன்னர்க் காட்டுதும்.[1] (எச)

## பேராசிரியம் :

இஃது,

"யாத்த சீரே யடியாப் பெனாஅ" (தொல்-செய்-1)

என நிறுத்த முறையானே அடியுணர்த்தி யாப்புணர்த்து கின்றது.

(இ - ள்.) எழுத்துமுதலா ஈண்டிய அடியிற் குறித்த பொருள்-களை முடிய யாத்தல் யாப்பாவதென்று சொல்லுவர் புலவர் (எ - று).

அடிக்கண்ணே முடியுமெனவே இருசீரு முச்சீருங் கிடப்ப முடியநாட்டினும்[2] நாற்சீர் கொண்டு முடியநாட்டினும் அமையு-மென்பது. மாத்திரை முதலாக வென்னாது 'எழுத்து' என்ற தென்னையெனின், எழுத்தும் அசையுஞ் சீருங்கொண்டியன்ற ஒரோவடிக்கண்ணே இன்பஞ் செய்யும்; அது பொருட்காய் இன்றியமையாமையின் எழுத்து முதலாக வென்றா னென்பது. 'ஈண்டியவடி'யென்பது அவை மூன்றும்[3] ஒன்றாகத் தொடர்ந்து

---

1. மேற்கூறப்பட்ட அடிகளால் தாம் குறித்தபொருளை முற்றுப்பெற அமைத்தலாகிய யாப்பு என்னும் உறுப்பமையச் செய்யுள் செய்தல் செய்யுள் செய்வாரெல்லார்க்கும் இயல்பாயினும், யாதானுமொரு பொருளின்கண் பல-சொற்றொடுத்து வழங்கும்போது தாம் குறித்தபொருளை முடித்தற்குவேண்டிய சொல்லையே சேர்த்துக் கூறுதல் வேண்டும் எனவும் அந்நிலையிற் சொற்கள் மிகாமலும் குறையாமலும் சேர்த்தமைத்தலே யாப்பு என்னும் உறுப்பாம் எனவும் அதற்கு இலக்கணங்கூற வேண்டுதல் இன்றியமை யாமையின், இச்சூத்திரத்தால் யாப்பாவது இதுவென ஆசிரியர் இலக்கணங்கூறினார் என்பது இங்கு இளம்-பூரணர்தரும் விளக்கமாகும். அதன்வகை முன்னர்க்காட்டுதும்- அவ் யாப்பின் வகையினைப் பின்னே அடுத்த சூத்திரவுரையிற்காட்டுவோம்.

2. நாட்டல் - யாப்புற அமைத்தல்.

3. அவை மூன்றும் - எழுத்து, அசை, சீர் என்பன மூன்றும்.

ஈண்டிய அடியென்றவாறு. எனவே, இவற்றைப் பொருளன்றி வேறுவேறு செய்யாது, பொருட்டொடர்படச் செய்யவேண்டு மென்பதூஉங் கூறி, ஓரடிக்கட் பொருளாற் செய்யாது, ஒழிந்த அடிக்கண் ஒருசொல்லினைப் பகுத்து வாங்கிக்கொண்டு போய் வைத்திலானென்பதூஉங் கூறியவாறாயிற்று. குறித்த பொருளென்றது[1] அவ்வடியில் தான் வைக்கக் கருதிய பொருளைப் பிறிதோர் அடியுங்கொண்டு கூட்டாது அமைந்து மாறச் செய்தல். "யாப்பறிபுலவர்" என்பது அவ்வாறு செய்தல்வல்ல புலவர்[2] அது கூறினாரென்றவாறு. அது, இதுபோலச் சீரும் பொருண்முடிய நிற்றலின் யாத்தசீரென்றானென்பது.

"மாயோன் மார்பி லாரம் போல
மணிவரை யிழிதரு மணிகிள ரருவி
நன்பொன் வரன்று நாடன்
அன்புபெரி துடைய வின்சொல் லினனே"

என இது குறித்த பொருளை நாற்சீரடிதோறும் முடிய நாட்டின வாறு.

"மண்டில மழுங்க மறுநிறங் கிளர
வண்டின மலர்பாய்ந் தூத மீமிசைக்
கண்டற் கானற் குருகின மொலிப்ப" (அகம். 260)

என்றவழி, இருசீரானும் முச்சீரானும் நாற்சீரானுங் குறித்த பொருளை முடிய நாட்டினவாறு கண்டுகொள்க.[3]

முச்சீரான் முடிய நாட்டுவன ஒருசார் வெண்பாட்டினுட் பயின்று வருமென வுணர்க.

"முயற்கோடு சீவி முதுவிசும்பு போழ்ந்தான்"

என்றவழி, எழுத்தும் அசையுஞ் சீரும் பொருளிலவாகி வந்தமையின் அஃதமையாது, யாப்பெனப்படாது; சொல்லிலக்கணத்தாற் சொற்றொறும் பொருளுடையவாயினுமென்பது.[4]

1. குறித்த பொருளை முடிய நாட்டல் என்றது - என்றிருத்தல்வேண்டும்.

2. யாப்பறி புலவர் - அவ்வாறு யாத்தல் (செய்தல்) வல்ல புலவர்.

3. 'மண்டில மழுங்க', 'மறுநிறங் கிளர' என்பன இருசீரால் முடியநாட்டின. 'வண்டின மலர்பாய்ந் தூத' என்பது முச்சீரால் முடியநாட்டிற்று. 'கண்டற் கானற் குருகின மொலிப்ப' என்பது நாற்சீரால் முடிய நாட்டிற்று.

4. 'முயற்கோடு சீவி முதுவிசும்பு போழ்ந்தான்'' என்றவழி சொல்லிலக்கணத்தாற் சொற்றொறும் பொருளுடையவாயினும் எழுத்தும் அசையும் சீரும் பொருளிலவாகி வந்தமையின் அஃதமையாது; யாப்பெனப்படாது'' என இயைத்துப் பொருள் கொள்க.

"மணிவெண் ணகைவன முலைமதி முகமலர்
விழியிணைச் செவ்வாய் மென்னடைப் பேதை"

என்றவழியும், முதலடிக்கட் பொருட்டொடர்பினை அறுத்துங் குறைத்துஞ் செய்தமையின் அதுவும் யாப்பறிபுலவரான் யாப்பெனப்படாதென்றவாறு.[1]                                                    (எஅ)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்தமுறையானே யாப்புணர்த்துகின்றது.

(இ-ள்.) எழுத்து ... வடியின் எ-து எழுத்துமுதலாக அசையுஞ் சீரு மொன்றாகத் தொடர்ந்தீண்டிய வடியிலே. குறித்த ... நாட்டல் எ-து தான் வைப்பக்கருதிய பொருளைப் பிறி-தோரடியுங் கொண்டு கூட்டாதமைந்து மாறச்செய்தல். யாப்-பென ... ... புலவர் எ-து யாப்பென்று சொல்லுவர் அவ்வாறி யாத்தலை வல்ல புலவர். எ-று.

உ-ம். "நீரின் றண்மையுந் தீயின் வெம்மையும்"
எனவும்,

"துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டு"
(நாலடி-உ)

எனவும்,

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்"
(பாலைக்கலி-௧0)

எனவும்,

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்" (பட்டினப்பாலை)

எனவும் இந்நால்வகைச் செய்யுட்கண் முடியுந்துணையும் அடி-தோறுங் குறித்த பொருளை முடிய நாட்டியவாறு காண்க. 'யாப்பறிபுலவர்' என்றதனான் இருசீரானும் முச்சீரானும் குறித்த பொருளை முடிப்பனவும், அங்ஙன முடித்தொழிந்து அச்சீரை மேல்வருகின்றவடியோடு பொருண்முடியச் செய்வன-வும் சிறுபான்மை யாப்பென்று கொள்க. உ-ம்:

"மண்டில மழுங்க மலைநிறங் கிளர
வண்டின மலர்பாய்ந் தூத மீமிசைக்
கண்டற் கானற் குருகின மொலிப்ப"

---

1. இதன்முதலடிக்கண்ணே, "மணிவெண்ணகை, வனமுலை, மதிமுகம், மலர்விழி' என இயைந்து வரவேண்டிய சொற்களைப் பொருட்டொடர்நிலை அறுத்துங் குறைத்துஞ் செய்யுள் செய்தமையின் இதனை யாப்பறி புலவர் யாப் பென உடன்படமாட்டார் என்பதாம்.

என[1] முச்சீரா னாட்டுவன வெண்பாவிற் பயின்றுவருமாறு உரையிற் கொள்க.

**ஆய்வுரை :**

இது, நிறுத்த முறையானே 'யாப்பு' என்னும் உறுப்பு உணர்த்துகின்றது. யாப்பு என்பது மேற்கூறிய அடிதோறும் பொருள் ஏற்றுநிற்பச் செய்வதோர் செய்கையாகும்.

(இ-ள்) எழுத்து முதலாக அசை சீர் அடி எனத் தொடர்புற்று இயன்ற அடியினால் புலவன் தான் சொல்லக்கருதிய பொருளை (ச் சொற்கள் மிகாமலும் குறையாமலும்) இறுதியளவும் முற்றுப்பெற நிறுத்துதல் யாப்பு என்னும் உறுப்பாகும் என்பர் செய்யுள் செய்யவல்ல புலவர் எ-று.

எரு பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பே ரெல்லை[2] அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்.

**இளம்பூரணம் :**

என் — எனின். இதுவும் அதன்பகுதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பாட்டுமுதலாக முதுசொல்லீறாகச் சொல்லப்பட்ட எழுநிலத்தினும் வளவிய புகழையுடைய சேரன் பாண்டியன் சோழன் என்னும் மூவரது தமிழ்நாட்டகத்தவர் வழங்கும் தொடர்மொழிக்கண் வரும் மொழி யாப்பாவது என்றவாறு.

எனவே யாப்பாவது :- பாட்டியாப்பு, உரையாப்பு, நூலியாப்பு, மொழியாப்பு, பிசியாப்பு, அங்கதயாப்பு, பழமொழியாப்பு என எழுவகைப்படும். மேலைச் சூத்திரத்துள்,

'குறித்த பொருளை முடிய நாட்டல்'

என்றமையானும், இச் சூத்திரத்துள்,

---

1. 'எனவரும்' என்றிருத்தல் வேண்டும்.

2. 'அங்கத முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்' 'நாற்பெயரெல்லை' என்பன பேராசிரியருரையிற் கண்ட பாடங்கள்.

'நாற்பேரெல்லை யகத்தவர் வழங்கும் யாப்பின் வழியது' என்று ஓதினமையானும், குறித்த பொருள் முடியுமாறு சொற்றொடுத்தல் என்று கொள்ளப்படும்.[1]

உதாரணம் :

"தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே."

(குறுந். கடவுள் வாழ்த்து)

இதனுட் குறித்த பொருள் முருகவேள் காப்ப உலகங் காவற் பட்டது என்னும் பொருள். இதனை முடித்தற்பொருட்டு எழுத்து முதலாகி வந்து ஈண்டிய அடிகளெல்லாவற்றானும் நாட்டியவாறு கண்டு கொள்க. (எரு)

**பேராசிரியம் :**

இச்சூத்திரம் அரிமாநோக்கு, மேற்கூறிய யாப்பிற்கும் வருகின்ற மரபிற்கும் அப்பகுதியுரிமை கூறினமையின்.[2]

(இ - ள்) பாட்டும், உரையும், (கஎஉ) நூலும், (கசுஎ) வாய் மொழியும், பிசியும், (கஎசு) அங்கதமும், (கஎஅ )முதுசொல்லும், (கஎஎ )என்று சொல்லப்பட்ட அவ்வேழுநிலத்தும்

'வடவேங்கடந் தென்குமரி யாயிடை" (தொல்-பாயிரம்)

நாட்டார் நடாத்துகின்ற செய்யுளின் பெயரே தனக்குப் பெயராகவு முடைத்து மேற்கூறிய யாப்பு (எ - று).

எனவே, மேற் குறித்த பொருளை அடிக்கண் முடிய நாட்டல் யாப்பென்றான்; அதுவேயன்றி இப்பகுதிப்படச் செய்தலும் யாப்புறுப்பே யென்றானாம். இவ்வேழு வகையானுஞ் செய்தன் மரபென எதிரது நோக்கிற்று. பாட்டு உரை நூல் என்பவற்

1. பாட்டு, உரை, நூல், வாய்மொழி (மந்திரம்) பிசி, அங்கதம், முதுசொல் (பழமொழி) ஆகிய ஏழுநிலத்தினும் தாம் குறித்தபொருள் முடியுமாறு சொற்றொடுத்தல் யாப்பின் வகையாகும் என்பதாம்.

2. முற்கூறிய யாப்பிற்கும் பிற்கூறும் மரபிற்கும் இடையே இச்சூத்திரத்துட் கூறும் எழுவகைச் செய்யுட்பகுதிகளும் உரிய என்றமையின் இச்சூத்திரம் அரிமா-நோக்கு (சிங்கநோக்கு) என்றார்.

றிலக்கணம் முன்னர்ச் சொல்லுதும். யாப்பின் வழியதென்பது இவ்வேழு வகைப்பட்ட யாப்பின் பெயரது மரபாகும் யாப்பாகிய உறுப்பென்றவாறு. இதனை நூல்யாப்புப்போற் கொள்க. இப்பகுதிதாந் தமிழ்நாட்டு மரபாகலின் மரபென்னும் உறுப்பு மரபென எதிரது நோக்கிற்று[1] 'வண்புகழ் மூவர்' என்பது வளனுடைமையாற் புகழ்பெற்றா ரென்றவாறு. அஃதாவது கொடுத்துப்பெறும் புகழெனக் கொள்க.[2] மூவரெனப்படுவார் தமிழ்நாட்டு மூவேந்தருமாயினார். 'தண்பொழில் வரைப்பு' என்பது நிலத்துக்கு நிழல் செய்யும் நாவலம்பொழிலுள் வரைந்து கொள்ளப்படும் வரைப்பினையுடைய வென்றவாறு. தண்பொழில் உடைமையின் நாவலந்தண் பொழிலெனப்பட்டது. நாற்பெயரெல்லையக மென்பது தமிழ்நாடென்றவாறு. *வடவேங்கடந் தென்குமரியன்றிக் கிழக்கும் மேற்கும் கடலெல்லை கூறினானோவெனின், அறியாது கடாயினாய். வரையறையில வென்று கூறாதனவெல்லாங் களைந்து கொள்ளப்படுவனவல்ல. வகைகூறாமையுந் தமிழ் கொள்ளப்படுங் கண்டாய்.[3] அவர் வழங்கும் யாப்பின் வழியதென்பது அந்நாட்டார் வழங்கும் யாப்புப்பகுதி அவை என்றவாறு. தமிழ் நாட்டார் வழங்கும் மரபுப் பகுதி அவையெனவே யாப்பும் மரபுங் கருதியதாயிற்று இச்சூத்திரமென்பது இதனாற்

1. குறித்த பொருளை அடிக்கண் முடியநாட்டல் யாப்பு என்னும் உறுப்பாம் என மேற்கூறினார். அதுவேயன்றிப் பாட்டு, உரை முதலாக எழுவகைப்பகுதிப்படச் செய்தலும் முற்குறித்த யாப்பு என்னும் உறுப்பேயாம் எனவும் இங்குக் குறித்த ஏழுவகை யானும் செய்யுள் செய்தல் தமிழ்நாட்டில் வழங்கும் யாப்பியல் மரபாய் இனிக்கூறும் மரபென்னும் உறுப்பாமெனவும் கொள்க.

2. வண்புகழ் - வண்மையாற் பெற்ற புகழ், அஃது கொடைத்திறத்தாற் பெற்ற புகழ்.

3. வரையறையில்லாதன என்னுங் கருத்தினால் கூறாது விட்டன எல்லாம் நீக்கப் படுவன அல்ல; தமிழ்நாட்டின் கிழக்கும் மேற்கும் பிறநாடின்மையின் கடலே எல்லை யென்பது எல்லார்க்குந் தெரிந்த செய்தியாதலின் தொல்காப்பியப்பாயிரத்திற் கிழக்கும் மேற்கும் எல்லைகூறாது விட்டார். குறிப்பிடாது விட்டமையினாலேயே தமிழ்நாட்டின் மேற்குங்கிழக்கும் கடல் எல்லையென்பது நீக்கப்பட்டுவிடாது. அது எதுபோல என்றால், இயல் இசை நாடகம் என வகை கூறாது போயினும் தமிழ் என்ற அளவில் முத்தமிழும் கொள்ளப்படுமாறு போன்று, நாற்பெயர் எல்லையகம் என்ற அளவிலேயே தெற்கே குமரியும், வடக்கே வேங்கடமும், கிழக்கும் மேற்கும் கடலும் எல்லையாகவுடைய தமிழ்நாடு என்பது தானே பெறப்படும் என்பதாம்.

பெற்றாம். 'வடவேங்கடந் தென்குமரி யாயிடை' யென்புழி நான்கெல்லையுங் கூறினானென்பது. (எ௬)

**நச்சினார்க்கினியம் :**

இது முற்கூறிய யாப்பிற்கோர் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்). பாட்டுரை...... நிலத்தும் எ-து பாட்டுக்களும் உரைகளும் நூல்களும் மந்திரங்களும் பிசிகளும் அங்கதமும் முதுசொல்லும் எனப்பட்ட அவ்வேழுபொருளிடத்தும். வண்........ மூவர் எ-து கொடையாற் பெற்ற புகழினையுடைய சேரசோழ பாண்டியருடைய. தண் ...... வரைப்பின் எ-து குளிர்ச்சியையுடைய நாவலம் பொழிலுட் டமக்கு வரைந்து கொண்ட வடவேங்கடந் தென்குமரி யிடத்து நாற்பெய..... வழங்கும் எ-து மலைமண்டலம் சோழமண்டலம் பாண்டியமண்டலம் தொண்டைமண்டல மென்னும் நான்கு பெயரையுடைய தமிழ் நாட்டார்[1] நடாத்தும் யாப்பின்........ புலவர் எ-து செய்யுளின் பெயர் தனக்குப் பெயராகவு முடைத்து மேற்கூறிய யாப்பு. எ-று.

---

1. 'நாற்பேரெல்லை' எனப்பாடங் கொண்டார் இளம்பூரணர். அவர் கொண்ட பாடத்திற்கு ஏற்ப வடக்கே வேங்கடமும் தெற்கே குமரியும் கிழக்கும் மேற்கும் கடலும் ஆகிய நான்கு பெரிய எல்லையையுடைய தமிழ்நாடு எனப்பொருள் கொண்டார் பேராசிரியர். 'நாற்பெயரெல்லை' என்ற பாடத்திற்கு ஏற்ப 'மலைமண்டலம், சோழமண்டலம், பாண்டிய மண்டலம், தொண்டை மண்டலம்' என்னும் நான்கு பெயரையுடைய தமிழ்நாடு' எனப் பொருள் வரைந்தார் நச்சினார்க்கினியர். சேர சோழ பாண்டியர் என்னும் வேந்தர் மூவராலும் ஆளப்பெறும் தமிழ்நிலப் பகுதிகளை முறையே குடபுலம் குணபுலம் தென்புலம் என மூன்றாகப் பகுத்துரைத்தல் சங்ககால மரபாகும். கடைச்சங்க காலத்தை யொட்டி மலைநாடு கொங்குநாடு சேரநாடு என இருபகுதியாகவும், சோழநாடு, தொண்டைநாடு எனச் சோழநாடு எனஇருபகுதி யாகவும் பிரிவுற்ற நிலையில் பாண்டியநாட்டுடன் சேர்த்துத் தமிழ்நாடு ஐந்து மண்டலங்களாக வழங்கப்பெறுவதாயிற்று. இச்செய்தி 'தமிழ்மண்டிலம் ஐந்தும் தாவியஞானம்' எனவரும் திருமந்திரத்தாற் புலனாகின்றது. நச்சினார்க்கினியர் கருதுவது போன்று தமிழ்நாடு நான்கு மண்டலங்களாக வழக்கிலும் செய்யுளிலும் குறிக்கப்படாமையானும் 'வண்புகழ்மூவர் தண்பொழில் வரைப்பு' என ஆசிரியர் தொல்காப்பியனார் தமிழகத்தைப் பொதுப்பட மூன்று பகுதியுடையதாகவே குறிப்பிடுதலானும் 'நாற்பெயரெல்லையகத்தவர்' என்ற தொடர்க்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

என்றது, குறித்த பொருளை அடிக்கண் முடிய நாட்டுதலே யன்றி இப்பகுதிப்படச் செய்தலும் யாப்புறுப்பென்றதாம். பாட்டுச்செய்யுள் உரைச்செய்யுள் நூற்செய்யுள் எனத்தமிழ் நாட்டார் வழங்கியவாறே பெயர் பெறுமென்றவாறு. எனவே, அந்நாட்டார் வழங்கும் யாப்புப்பகுதி கூறினாராயிற்று.

**ஆய்வுரை :**

இது யாப்பின் வகை உணர்த்துகின்றது.

(இ - ள்) பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் எனச் சொல்லப்பட்ட ஏழுநிலத்தினும் வளவிய புகழையுடைய மூவேந்தராகிய சேர சோழ பாண்டிய வேந்தரது ஆட்சியுட்பட்ட குளிர்ந்த தமிழகத்தில் (வடக்கே வேங்கடமும் தெற்கே குமரியும் கிழக்கும் மேற்கும் கடலும் ஆகிய) நான்கு பேரெல்லைக்கு உட்பட்ட நிலப்பகுதியிலே வாழும் தமிழ் மக்கள் வழங்கும் தொடர்மொழி யமைப்பின்வழி நடைபெறுவ-தாகும் என்று கூறுவர் புலவர் எ-று.

முற்சூத்திரத்திற் கூறியவாறு புலவன் தான் குறித்த பொருளை முடிய நாட்டுதல் யாப்பென்னும் உறுப்பாதலோடு பாட்டு உரை முதலாக எழுவகைப்படச் செய்யுள் செய்தலும் தமிழகத்தார் தொன்றுதொட்டு வழங்கி வரும் யாப்பென்னும் உறுப்பாம் என்றவாறு.

எகூ மரபே தானும்
நாற்சொல் லியலான் யாப்புவழிப் பட்டன்று.[1]

**இளம்பூரணம் :**

என்—எனின், மரபு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மரபாவதுதான் இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்னும் நாற்சொல்லின் இயற்கையானே யாப்பின் வழிப்பட்டது என்றவாறு.

குறித்த ஒருபொருளை முடியச் சொற்றொடுக்குங்கால் இயற்சொல்லாகிய பெயர் வினை யிடை யுரியானும், ஏனைத்

1. 'பட்டன' என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைகளிற் கண்டபாடம். உரைக்கு ஒத்துவராமையால் அது பிழை பட்ட பாடமே.

திரிசொல் திசைச் சொல் வடசொல்லானும், எழுவகை வழுவும் படாமல் புணர்ப்பது என்றவாறாம்.[1]

அவற்றுள் இயற்சொல் மரபாவது சொல்லதிகார இலக்கணத்தோடு பொருந்துதல்.

திரிசொல் மரபாவது தமிழ்நாட்டகத்தும் பலவகை நாட்டினும் தத்தமக்குரித்தாக வழங்கும் மரபு.

திசைச்சொன் மரபாவது செந்தமிழ்சூழ்ந்த பன்னிருநிலத்தினும் வழங்கும் மரபு.

வடசொன் மரபாவது திரிந்தவகையாகிய சொல்மரபு.[2]

யாதானும் ஒருசெய்யுட் செய்யுங் காலத்துப் பொருள்உணர்த்துஞ் சொற்கள் இவையாதலின் இவை ஒருபொருட்குரித்தாகிய ஆண் பெயரும் பெண்பெயரும் குழவிப் பெயரும் முதலாயின பிறபொருட்கண் வாராமையான், அவற்றை அவ்வம்மரபினாற் கூறுதலும், ஒருமை பன்மை மயங்காமையும் பெயரும் வினையும் முடிவுபெறக் கூறுதலும் வேண்டுதலின், இவ்விலக்சணமுங் கூறல் வேண்டிற்று. (எசு)

**பேராசிரியம் :**

இது, நிறுத்தமுறையானே மரபினை விளங்கக் கூறுகின்றது.

(இ-ள்) மரபேதானும் — அங்ஙனங் கூறப்பட்ட மரபு தானும்; ஏகாரம் பிரிநிலை; உம்மை இறந்தது தழீஇயிற்று;[3] மேல் எழுவகையான் யாக்கப்படுதன் மரபென்றமையின், மரபேதானு

1. செய்யுளீட்டச் சொற்களாகிய இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்னும் நால்வகைச் சொற்களாலும் செய்யுட் செய்யுங்காலத்து எழுவகை வழுவும் படாமல்ஒரு பொருட்குரித்தாகிய ஆண்மை பெண்மை இளமை முதலிய மரபு பற்றிய சொற்களை அவ்வம்மரபு திரியாதவாறு யாப்பின் வழி அமைத்தலே மரபு என்னும் செய்யுளுறுப்பாகும் என்பதாம்.

2. சொல்லதிகார இலக்கணத்தொடு பொருந்துதல் இயற்சொல் மரபெனவும், தமிழ்நாட்டகத்தும் பலவகை நாட்டிலும் சொற்கள் தத்தமக்குரித்தாக வழங்கிவரும் முறைமை திரிசொல் மரபெனவும், செந்தமிழ் சூழ்ந்த பன்னிருநிலத்தினும் தத்தமக் குரிய பொருளில் வழங்குதல் திசைச்சொல் மரபெனவும், ஆரியமொழியின் சிறப்பெழுத்துக்கள் தமிழொலிக்கேற்பத் திரிந்த வகையாகிய சொல்மரபு வடசொல் மரபெனவும் இளம்பூரணர் தரும் விளக்கம் தமிழ்மரபு கெடாதவாறு செய்யுள் செய்வார்க்கு இன்றியமையாததாகும்.

3. தானும்' என்புழி உம்மை 'முற்கூறிய யாப்பேயன்றி மரபும்' எனப் பொருள் தருதலின் இறந்தது தழீஇய எச்சவும்மையாகும்.

மென்றானென்பது: நாற்சொல்—பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல்; இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லெனினும் அமையும். இயலான்—நாற் சொல்லினை-யும் உலகத்தார் வழங்குகின்ற வழக்குவடிவினான்; யாப்புவழிப் பட்டன[1] மேற்பகுத்த யாப்புவழிப் பொருத்த முடைத்தாகிக் கிடப்பது (எ - று).

அஃதாவது, வழக்கெனவுஞ் செய்யுளெனவும் இடைதெரி யாமல்[2] ஒரு வாய்பாட்டான் வழக்குஞ் செய்யுளுமாகி ஒரு சொற்றொடரினைச் சொல்லியது போலச் செய்யுள் செய்த-லென்றவாறு.

'சாத்தனுண்டான் கொற்றனுண்டான்'

எனவும்,

'சாத்தனுறங்கினான் கொற்றனுறங்கினான்'

எனவும்,

'சாத்தனை யறியாதார் ஒருவரையு மறியாதார்'

எனவும்,

'சாத்தனிற் கொற்றன்போமே'

எனவும் நின்ற வழக்கியலை முறையானே ஆசிரியமும் வெண்பா வுங் கலியும் வஞ்சியுமாகப் பரப்பப்பட்ட யாப்புவழிப் படுத்துக் கண்டுகொள்க.

"ஓதியு மோதா ருணர்விலார்" (நாலடி 270)

என்னுஞ் செய்யுள் வழக்கிற்றாகவுஞ் சொல்லப்படும். வழக்கு வடிவினானெனவே சொன்மரபும் பொருண்மரபும் அடங்கக் கூறினான்; என்னை? பொருளன்றி நாற்சொல்லையும் வழங்கா ராகலின்; எனவே, சொல்லும் பொருளும் அவ்வக்காலத்தார் வழங்கு மாற்றானே செய்யுள் செய்க என்பதாயிற்று.[3] இதனது பயன்: ஒருகாலத்து வழங்கப்பட்ட சொல் ஒருகாலத்து இலவா-கலும் பொருள் வேறுபடுதலும் உடைய. அவை அதோளி இதோளி உதோளி (கலி-116) எனவுங் குயின் எனவும் இவை ஒரு காலத்துளவாகி இக்காலத்திலவாயின. அவை முற்காலத்துள

1. பட்டன என்ற பாடம் பிழை; உரையொடு பொருந்தாமையின், பட்டன்று என்றிருத்தல் வேண்டும்.

2. வேறுபாடு தெரியாமல்.

3. சொல்லும் பொருளும் அவ்வக்காலத்தில் வாழ்வோர் வழங்கும் முறை யானே செய்யுள் செய்யப்பெறுதல் 'மரபு' என்னும் செய்யுளுறுப்பாகும்.

வென்பதேகொண்டு வீழ்ந்த காலத்துஞ் செய்யுள் செய்யப் படா. அவை ஆசிரியர் நூல்செய்த காலத்துளவாயினுங் கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற் பாட்டினுந்தொகை யினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர்; அவற் றுக்கு இது மரபிலக்கணமாகலினென்பது.[1]

இனிப், பாட்டினுந் தொகையினும் உள்ள சொல்லே மீட் டொருகாலத்துக்கு உரித்தன்றிப்போயினவும் உள; அவை முற்காலத்துளவென்பதேகொண்டு பிற்காலத்து நாட்டிச் செய்யுள் செய்யப்பெறா என்பது.

இனிப், பொருளும் இவ்வாறே காலத்தானும் இடத்தானும் வேறுபடுதலுடைய. ஒருகாலத்து அணியுங் கோலமும் ஒரு காலத்து வழங்காதனவுள. ஓரிடத்து நிகழும் பொருண் மற்றோ ரிடத்து நிகழாதனவுமுள. அவ்வக்காலமும் இடனும்பற்றி ஏற்றவாற்றாற் செய்யுள் செய்யவேண்டுமென்பது. ஒருகாலத் துக் குழை பெய்தாரென்றும், ஒருகாலத்துக் குழல்பட முடித்தா ரென்றும், ஆண்மக்களை ஒழிந்தகாலத்தும் அது கூறார்[2]. பதி னெண்பாடைத் தேசிகமாக்கள் அணியினையுங் கோலத்தினையும் விரவிக்கூறாது அவ்வந்நாட்டாரே பூணுமாற்றானும் புனையுமாற்றானும் ஏற்பச்சொல்லுதல் மரபு.

இனி, நான்கு நிலத்தினும் ஓரிடத்துப் பொருளை ஓரிடத்த வாகச் சொல்லுதலும் உலகொடு மலைதலுஞ் சமயங்களொடு

---

1. தொல்காப்பியனார் காலத்து வழக்கிலிருந்த அதோளி, இதோளி, உதோளி என்னும் இகரவீற்று உயர்திணைச் சுட்டுப்பெயர்களும் மேகத்தைக் குறிக்கும் 'குயின்' என்னும் னகர வீற்று அஃறிணைப்பெயரும் கடைச்சங்கத்தார் காலத்து வழக்கு வீழ்ந்தன. வழக்கு வீழ்ந்த அச்சொற்களைக் கடைச்சங்கத்தார் தாம் பாடிய பத்துப்பாட்டிலும் எட்டுத் தொகையிலும் மீளவும் நாட்டிக் கொண்டு செய்யுள் செய்யாமைக்கு இச்சூத்திரங் கூறும் மரபிலக்கணத்தினை அவர்கள் பின்பற்றினமையே காரணமாகும். பாட்டு-பத்துப்பாட்டு. தொகை-எட்டுத்தொகை.

2. தமிழகத்தில் வாழ்ந்த ஆடவர்கள் முன்னொரு காலத்தில் வடிகாதிற் பெய்தற்குரிய குழை என்னும் காதணியினை அணிந்திருந்தார் எனவும், தலை மயிரைக் குழல் பட முடித்துக்கொண்டிருந்தார் எனவும் சங்க இலக்கியம் கூறுகின்றது. அக்காலத்து ஆண்மக்கள் கொண்டகோலம் பிற்காலத்து மாறிவிட்டது. அவ்வாறு மாறிய பிற்காலத்திலும் குழைபெய்தார் என்றும் குழல்பட முடித்தார் என்றும் ஆண்மக்களைக் குறித்துச் செய்யுள் செய்தல் மரபு நிலைக்கு மாறுபட்டதாகும்.

மலைதலுங் கலையொடு மலைதலும் பிறவும் இன்னோரன்னவும் பொருண்மரபின்பாற்பட்டடங்கும். இவை நாடகவழக்கின் ஆமென்பது முன்னர் **அகத்திணையியலுட் கூறினாம்.**

"புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
யொலிக்குழைச் செயலை யுடைமா ணல்குல்"
(அகம். 7)

என்பது பருவத்துக்கேற்ற அணி கூறியது.

"கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் பெஃகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
வப்புநுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
செப்பட ரன்ன செங்குழை யகந்தோ
றிழுதின் அன்ன தீம்புழல் துய்வாய்
உழுதுகாண் துளைய வாகி ஆர்கழல்
பாலி வானிற் காலொடு பாறித்
துப்பின் அன்ன செங்கோட் டியவின்
நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும்
அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோதி மகளிர் ஓக்கிய
தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
குன்றுபி னொழியப் போகி உரந்துரந்து
ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவி
னெம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மாண்
ஓங்கிய நல்லில் ஒருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோள் எய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறனசைஇச் சென்றஎன் நெஞ்சே"
(அகம் 9)

என்றவழிக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்றபொருள் தத்தம் மரபிற்றாய் வந்தன பலவுங் கண்டு கொள்க.

மற்றும் நாற்சொல்லிய லென்பது வழக்காயின் அது செய்யுட்குரிய திரிசொற்கும் ஏற்றவாறென்னையெனின், அவையுஞ் சான்றோர் வழங்கினவாறன்றி வேறுபட நாட்டப்படாவெனவும் அவற்றுள்ளுங் காலம் பற்றித் திரிந்தனவும் உளவாயினும் அவை தவிர்த்துச் செய்யுள் செய்யப்படுமென்றற்கும் நாற்சொல்லியலான், என அடங்கக் கூறினானென்பது, மலையென்றதனைப் பிறங்கலென்றாரென்று இக்காலத்துச் செய்யுள் செய்யுங்கால் அப்பொருண்மையானே உயரென்று செப்பவோ வெனின் அது மரபன்று.

இனிக் குடவாயிலென்பதனைக்,

"கொற்றச் சோழர் குடந்தை வைத்த", (அகம் 60)

எனவும், உறையூரென்பதனைப்,

"பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கி" (அகம்69)

எனவும் மேலையார் திரித்தவகையானே இக்காலத்துந் திரித்துக் கொள்ளப்படுவன உள. அவை "களந்தை" என்றற் றொடக்கத்தன. பிறவும் இவ்வாறு வருவனவும் அறிந்து கொள்க.

"கடையாயார் நட்பிற் கமுகனையர்" (நாலடி. 216)

என இதனுள் ஓரினத்தவாகிய புல்லே கூறி ஒழிந்த மரங்களொப்பன உளவாயினும் உடன் கூறாராயினார். இன்னோரன்னவுஞ் செய்யுட்கு மரபெனப்படுமென்பது,

மற்றுப், 'பாட்டுரை நூலே'யென எழுவகை வகுத்த பகுதியையுஞ் செய்யுட்கு மரபென மேற்கூறினான்; அதனானே இவ்வெழுவகையானன்றி ஆசிரியர்[1] வேண்டுமாற்றானும் பிறபாடைமாக்கள் வேண்டுங் கட்டளையானுந் தமிழ்ச்செய்யுள் செய்தல் மரபன்றென்றவாறு. (அ0)

---

1. அச்சிடப்பெற்று வழங்கும் பேராசிரியருரை பழைய பதிப்பில் இச்சொல் 'ஆசிரியர்' என்றிருத்தல் ஏடெழுதுவோரால் நேர்ந்த பிழையென்பதும், இஃது 'ஆரியர்' என்றே இருத்தல் வேண்டும் என்பதும், ''இனித் தமிழ்நூற்கண் வழுவமைத்தவாறன்றி ஆரியரும் பிறபாடைமாக்களும் வேண்டுமாற்றாற் றமிழ்ச் செய்யுள் செய்தல் மரபன் றென்றுணர்க'' எனவரும் நச்சினார்க்கினியர் உரைப் பகுதியால் நன்கு விளங்கும்.

**நச்சினார்க்கினியம்:**

இது நிறுத்தமுறையானே மரபென்னு முறுப்பு யாப்பின்கண் வருமாறு கூறுகின்றது.

(இ-ள்) மரபேதானும்[1]-மரபென்ற வுறுப்புத்தானும்; நாற்-சொல்லியலான் - நான்கு சொல்லையும் உலகத்தோர் எழுவகை வழுவும் படாமல் வழங்குகின்ற வழக்கு வழுவாதன. யாப்பு வழிப்பட்டன - முற்கூறிய யாப்பிலக்கணத்தின் வழியிலே பொருத்தமுடையவாய்க்கிடப்பன. எ - று.

இந்நூலிடத்து இதற்கு முன்னும் பின்னும் கூறப்படும் மரபுளதாகலின், இந்நூலுட் கூறிய இலக்கணங்களினின்றும் இதனைப்பிரித்துப் பிரிநிலையேகாரத்தாற் கூறினார். நாற்-சொல்லாவன :- இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வட-சொல். பெயர் வினை யிடை யுரி என்பன இயற்சொல்லின் பாகுபாடாகலின், இயற்சொல் அந்நான்கு பாகுபாட்டானும் செய்யுட்குரித்தாயிற்று இந்நான்கு சொல்லானுங் காலந்தோறும் இடந்தோறும் வழங்குகின்ற வழக்குஞ் செய்யுளு மிடைதெரி-யாமற் றொடர்வுபடுத்தி முறைமை பிறழாமற் செய்யுட்செய்க என்றவாறு. உ - ம்.

'ஓதியு மோதா ருணர்விலா ரோதாது
மோதி யனைய ருணர்வுடையார் - தூய்தாக
நல்கூர்ந்துஞ் செல்வ ரிரவாதார் செல்வரு
நல்கூர்ந்தா ரீயா ரெனின்' (நாலடி-உ௭0)

இது வழக்காகவும் கூறப்படும். ஒருகாலத்து வழங்கிய சொற்-களும் பொருள்களும் அணிகளும் கோலமுமுதலியன ஒருகாலத்து வழங்காதனவுமுள. ஓரிடத்து நிகழும்பொருண் மற்றோரிடத்து நிகழாதனவுமுள. அக்காலமும் இடமும்பற்றி ஏற்றவாற்றாற் செய்யுள்செய்க எற்றவாறு. அதோளி, இதோளி, உதோளி, குயின் என்றாற்போல்வன இடைச்சங்கத்திற்காகாவாயின.[2]

'அட்டா னானே குட்டுவன்' (பதிற்றுப்பத்து ரு,௪௭)
'உச்சிக் கூப்பிய கையினர்' (திருமுருகாற்றுப்படை)

1. 'மரபேதானும் என்னும் பிரிநிலையேகாரத்தால், இந்நூலின் முன்னும் பின்னும் கூறப்படும் ஏனைய மரபுகளினின்றும் செய்யுளுறுப்பாகிய மரபினை வேறு பிரித்துக் கூறினார் என்பதாம்.

2. கடைச் சங்கத்திற்காகலவாயின என்றிருத்தல் பொருத்தமாகும்.

என்றாற் போல்வன கடைச்சங்கத்திற்காயின சொற்கள், இக் காலத்திற்காகாவாயின.

'வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்'
'பெருமிதப் பகட்டிற்குத் துறையு முண்டோ'
(புறம் - சுoO)

'கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன'
(புறம்-கOஉ)

என்றாற்போலும் உவமப்பொருள்களும் இக்காலத்திற்காகா-வாயின. இன்னும் அந் நான்கு நிலத்தும் ஓரிடத்துப்பொருள் ஓரிடத்துவரக் கூறலும், உலகொடு மலைதலும், சமய நூல்-களோடு மலைதலும், கலைகளோடு மலைதலும், பிறவும் இன்னோரன்னவை பொருண்மரபிற் றப்பாம். இவை நாடக-வழக்கிற்காமாறு அகத்திணையியலுட் கூறிற்று.

'குண்டல மொருபுடை குலாவி வில்விட
விண்டலர்ந் தொருபுடை தோடு மின்செய'
(சிந். குண. கருசு)

'வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்ப' (திருமுருகாற்றுப்படை)

''அம்மல ரடியுங் கையு மணிகிளர் பவள வாயுஞ்
செம்மலர் நுதலு நாவுந் திருந்தொளி யுகிரோ டங்கேழ்
விம்மிதப் பட்டு வீழ வலத்தக மெழுதி யிட்டா
ளம்மலர்க் கண்ட முள்ளிட் டரிவையைத் தெரிவை
தானே''
(சிந். இலக். சுoசு)

என்றாற்போலும் அணியுங் கோலமும் இக்காலத்திற்காகா-வாயின.

'புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
யொலிக்குழைச் செயலை யுடைமா ணல்குல்'
(அகம் - எ)

இது பருவத்துக்கேற்ற அணி.

'கொல்வினைப்பொலிந்த' (அகம்-சுo)

என்னும் பாட்டுக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்றபொருள் தத்தமரபிற்றாய் வந்தன. பிறவுமன்ன. மலையைப் பிறங்க-

லென்று பின்பு திரித்தாற்போல, இக்காலத்தார் உயர் என்று மலையைக் கூறலாகாது. இனிக் குடவாயிலைக்

'கொற்றச் சோழர் குடந்தை வைத்த (அகம்-௬0)

எனவும்,

'பிறங்குநிலை மாடத் துறந்தை' (புறம்-௬௯)

எனவும் முன்னோர் திரித்தவகையானே, இக்காலத்துக் களத்-தூரைக் களந்தை யென்றாற்போலத் திரிப்பனவும் அறிக. இனித் தமிழ்நூற்கண் வழுவமைத்த வாறன்றி ஆரியரும் பிறபாடை-மாக்களும் வேண்டுமாற்றாற் றமிழ்ச் செய்யுள் செய்தல் மரபன்றென் றுணர்க.

**ஆய்வுரை :**

இது. செய்யுளுறுப்பாகிய மரபாமாறு இதுவென உணர்த்து கின்றது.

(இ-ள்) மரபாவது, இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச் சொற்களின் இயல்பினானே யாப்பின்வழிப் பொருந்தி அமைவது எ-று.

குறித்த பொருளை முடிய நாட்டும் நிலையில் சொல் தொடுக்குங்கால், பெயர் வினை இடை உரி ஆகிய இயற்-சொல்லானும், எனைத் திரிசொல் திசைச்சொல் வடசொல்-லானும் எழுவகை வழுவும் படாமற் புணர்ப்பது செய்யுளுக்-குரிய மரபாகும். அவற்றுள் இயற்சொல் மரபாவது சொல்லதி-கார இலக்கணத்தொடு பொருந்துதல்; திரிசொல் மரபாவது தமிழ் நாட்டகத்தும் பலவகை நாட்டினும் தத்தமக்குரித்தாக வழங்கும் மரபு; திசைச்சொல் மரபாவது செந்தமிழ் சூழ்ந்த பன்னிரு நிலத்தினும் வழங்கும் மரபு; வடசொல் மரபாவது திரிந்த வகையாகிய சொல்மரபு என விளக்கந்தருவர் இளம்-பூரணர்.

மரபாவது, வழக்கெனவும் செய்யுளெனவும் வேறு பிரித்-துணர வொண்ணாதபடி ஒரு வாய்பாட்டால் வழக்கும் செய்-யுளும் ஆகி, ஒரு சொற்றொடரினைச் சொல்லியது போலச் செய்யுள் செய்தல். அஃதாவது உலக வழக்கில் வழங்கும் தொடரை யாப்பு வடிவில் அமைத்தல். எனவே "சொல்லும் பொருளும் அவ்வக்காலத்தார் வழங்குமாற்றானே செய்யுள்

செய்வது'' மரபு என்பதாயிற்று என விளக்கந்தருவர் பேரா-சிரியர்.

எஎ அகவ லென்ப தாசிரி யம்மே.

## இளம்பூரணம்:

என்—எனின். இது தூக்காமாறு உணர்த்துவார் அவற்றுள் ஆசிரியத்திற்குரிய ஓசை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) அகவல் என்னும் ஓசை ஆசிரியத்திற் கென்றவாறு.

தூக்கெனினும் ஓசையெனினுமொக்கும்.[1] அகவல் என்பது ஆசிரியன் இட்டதோர் குறி. அது வருமாறு:

"செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோல் அம்பின் செங்கோட் டியானை
கழல்தொடிச் சேஎய் குன்றங்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந்.க)

இதனுள் எழுத்தளவு மிகாமற் குறையாமல் உச்சரிக்க அவ்வழி நின்ற ஓசையால் ஆசிரியம் வந்தவாறு காண்க. எஎ

## பேராசிரியம்:

இது, நிறுத்த முறையானே தூக்கு உணர்த்துவானெழுந் தான், அஃதாவது பாவினைத்* துணிக்கப்படுவதாகலான் அப் பாவினை உணர்த்துகின்றானென்பது நிறுக்கப்படுபொருள் பொன்னானும் வெள்ளியானும் ஒன்று பெற்றவழியன்றிக் கழஞ்சுந் தொடியுந் துலாமுமெனத் துலைக்கோலால் தூக்கி அளக்குமாறில்லை. அதுபோலப் பாவின்றித் தூக்கியளக்கப் படும்பொருள் இன்மையானும், பாவினை எழுநிலத்தெழுந்த செய்யுளடி (79) வரையறையுடைய பாட்டிற்கு இன்னவாறு வந்ததென்றறிவிப்பது தூக்காகலானும், எல்லாப் பாவினுக்குந் தூக்குப் பொதுவாகலானும் பாவொடு புணர்த்தே தூக்குணர்த் தப்பட்டது.[2]

---

1. தூக்காவது பாக்களை அடிதோறுந் துணித்து நிறுத்துதலாகிய ஓசை-விகற்ப மாதலின் 'தூக்கெனினும் ஓசையெனினும் ஒக்கும்' என்றார் இளம்பூரணர்.

* பழைய பதிப்பில் 'மரபினை' என்றிருத்தல் பிழை'

2. தூக்கு என்பது, பாக்களை அடிதோறுந் துணித்து நிறுத்துதலாகிய ஓசை விகற்பமாகும். தூக்கு என்னும் இச்சொல், துணித்தல், நிறுத்தல், பாடுதல்

(இ-ள்) அகவல் என்பது ஆசிரியம்மே — வழக்கினுள் அகவலென்று வழங்கப்படும் பாவினை ஆசிரியத்திற்குரிய பாவென்ப (எ-று)

அகவிக் கூறுதலான் அகவலெனக் கூறப்பட்டது. அஃதாவது, கூற்றும் மாற்றமுமாகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங்கருதியவாறெல்லாம் வரையாது சொல்லுவதோராறும் உண்டு. அதனை வழக்கினுள்ளார் அழைத்தலென்றுஞ் சொல்லுப. அங்ஙனஞ் சொல்லுவார் சொல்லின்கண் எல்லாந் தொடர்ந்து கிடந்த ஓசை அகவலெனப்படும்.[1] அவை **தச்சுவினைமாக்கள்கண்ணும், களம்பாடும் வினைஞர்கண்ணும், கட்டுங்கழங்குமிட்டு உரைப்பார்கண்ணும், தம்மில் உறழ்ந்துரைப்பார்கண்ணும், பூசலிசைப்பார்கண்ணுங்** கேட்கப்படும்.[2]

முன் பக்கத் தொடர்ச்சி

என்ற பொருளில் வழங்குவதாகலின், பாக்களை அடிதோறுந் துணித்து நிறுத்து இசைத்தலாகிய ஓசை விகற்பத்தைக் குறிக்கும் பெயராயிற்று. நிறுத்தற் குரிய பொருள்களாகிய பொன் வெள்ளி முதலியவற்றுள் ஒன்றைப் பெற்றாலல்லது, அப்பொருளைத் தொடியும் துலாமும் எனத் துலைக்கோலால் தூக்கி அளந்து அறுதியிடுதல் இயலாது. அதுபோலவே அளக்கப்படு பொருளாகிய பாக்களை யின்றி அவற்றையளந்து நிறுத்தலாகிய தூக்கென்னும் ஓசைவரையறையினை அளந்து உணர்த்துதலும் இயலாதசெயலாகும். ஆகவே 'பா' என்னும் செய்யுளுறுப்பொடு கூட்டியே 'தூக்கு' என்னும் உறுப்பாகிய ஓசைவிகற்பத்தையும் ஆசிரியர் இங்கு உணர்த்துகின்றார்.

1. ஒருவர் தாம் சொல்லக்கருதியனவெல்லாவற்றையும் விடாது தொடர்ந்து கூறுதலாகிய உரையாடல் முறையினை உலகியலிற் பலதிறத்தாரிடத்துங் காண்கின்றோம். அங்ஙனஞ் சொல்லுவார் சொற்போக்கின்கணெல்லாந் தொடர்ந்து அமைந்த ஓசை 'அகவல்' எனப்படும் என்பது பேராசிரியர் கருத்தாகும்.

2. தச்சுவினைமாக்கள் - பெருமரங்களை வெட்டிக்கொணர்ந்து செதுக்கிக் கட்டிடங்களுக்குரிய உத்தரம், தூண், நிலை முதலியனவாகவும், தேர் முதலியவற்றுக்குரிய பதுமை முதலிய பல்வேறு பொருள்களாகவும் அமைக்குந் தச்சுத் தொழிலைச் செய்யும் தச்சர்களாகிய தொழிலாளர்கள்.

களம்பாடும் வினைஞர் - ஏர்க்களம் போர்க்களம் ஆகியவிடங்களிற் சென்று ஏர்த்தொழிலையும் போர்த்தொழிலையும் புகழ்ந்துபாடும் கிணைஞர் முதலாய பாடலாளர்கள்.

கட்டு இட்டு உரைப்போர் என்றது, நெல்முதலிய தானியங்களைச் சேர்த்தும் பிரித்தும் எண்ணிச் சோதிடங்கூறுவோரை, கழங்கு இட்டுரைப்போர் என்றது. கழற்சிக்காய்களைக்கொண்டு ஒற்றை இரட்டையெண்ணிச் சோதிடங்கூறுவோரை. தம்மில் உறழ்ந்துரைப்போராவார், ஒருபொருளின் இயல்புகுறித்துத் தம்முள் மாறுபட்ட கருத்தினராய் வாதம் புரிவோர் ஆவர்.

கழங்கிட்டுரைப்பார் அங்ஙனமே வழக்கினுள்ளதாய்க் கூறும் ஓசை ஆசிரியப்பாவெனப்படுமென்றவாறு. (அக)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்த முறையானே தூக்குணர்த்துகின்றது; நிறுக்கப்படும் பொன் வெள்ளிமுதலிய பொருள்களைப் பெற்றுழியன்றிக் கழஞ்சு, தொடி, துலாம் எனத் துலைக்கோலாற் றூக்கி யளக்குமாறில்லை; அதுபோல அடிவரையறை யுடையவாய்ப் பரந்த பாவினை யடிகளாற் றுணித்துத் தூக்கி ஓசைவேறுபாடுணர்த்துதலிற் றூக்கு எல்லாப் பாவிற்கும் பொதுவாயிற்று.

(இ—ள்.) வழக்கினுள் அகவல் என்று வழங்கப்படும் ஓசையை ஆசிரியத்திற்குரிய என்ப. (எ.று.)[1]

அகவிக் கூறலின் அகவலாயிற்று. அஃதாவது கூற்றும் மாற்றமும் ஆகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக்கூறாது தாங் கருதியவாறெல்லாம் வரையாது கூறுவது. அதனை வழக்கினுள் அழைத்தலென்ப அங்ஙனம் கூறுமிடத்துத் தொடர்ந்து கிடந்தவோசை அகவலாம். அவை களம்பாடு பொருநர் கண்ணும், கட்டுங் கழங்கும் இட்டுரைப்பார்கண்ணும், தம்மின் உறழ்ந்துரைப்பார் கண்ணும், பூசலிசைப்பார்கண்ணும் கேட்கப்படும். வழக்கின்கணுள்ளதாய் அங்ஙனம் அழைத்துக் கூறும் ஓசை ஆசிரியப்பா. (எ—று.)

**ஆய்வுரை :**

இது, தூக்கு என்னும் உறுப்பு உணர்த்தத் தொடங்கி அகவற்பாவிற்குரிய ஓசையுணர்த்துகின்றது.

(இ-ள்) அகவல் என்று வழங்கப்படும் ஓசை ஆசிரியப்பாவிற்கு உரியதாகும் (எ று.)

---

முன் பக்கத் தொடர்ச்சி

பூசலிசைப்போர் - பகைகொண்டு பேசுவோர்,

பலதிறத்தினராக இங்குக் குறிக்கப்பட்ட எல்லோருடைய அழைத்தலாகிய தொழிலாரவாரங்களிலும் அழைத்துக்கூறும் உரையாடல்களிலும் அகவலோசையின் அமைப்பு செவிவாயிலாகப் புலனாகும் என்பதாம்.

1. 'அகவல் என்பது' - என்பதற்கு 'அகவல் என வழங்கப்படுவது' எனப் பொருள் கொண்டமையால் 'வழக்கினுள்' என்னும் சொல்லும் 'என்ப' என்னும் முற்றுவினையும் உரையின்கண் வருவித்துரைக்கப்பெற்றன.

அகவிக் கூறுதலால் அகவல் என்னும் பெயர்த்தாயிற்று. ஒருவன் ஒரு பொருளைப்பற்றிக் கூறுதலும் அது கேட்டு மற்றொருவன் மறுமொழி கூறுதலுமாகிய இம்முறையிலன்றி, ஒருவன் தான் கருதியன எல்லாவற்றையும் விடாது தொடர்ந்து சொல்லுதலாகிய உரையாடல் முறையை உலகியலிற் காண்கின்றோம். அங்ஙனம் சொல்லுவார் சொல்லின்கண் எல்லாந் தொடர்ந்து கிடந்த ஓசை 'அகவல்' எனப்படும் என்பர் பேராசிரியர்.

'தூக்கு' என்பது பாக்களை அடிதோறுந் துணித்து நிறுத்துதலாகிய ஓசை விகற்பமாகும். தூக்கு என்னும் இச்சொல், துணித்தல் நிறுத்தல் பாடுதல் என்ற பொருளில் வழங்குவதாகலின், பாக்களை அடிதோறுந் துணித்து நிறுத்து இசைத்தலாகிய ஓசை விகற்பத்தைக் குறிக்கும் பெயராயிற்று. நிறுத்தற்குரிய பொருள்களாகிய பொன் வெள்ளி முதலியவற்றுள் ஒன்றைப் பெற்றாலன்றி அப்பொருளைத் தொடியும் துலாமும் எனத் துலைக்கோலால் தூக்கி நிறுத்து அளந்து அறுதியிடுதல் இயலாது. அதுபோலவே அளக்கப்படுபொருளாகிய பாக்களையின்றி அவற்றை அளந்து நிறுத்தலாகிய தூக்கு என்னும் ஓசை வரையறையை அறுதியிட்டுரைத்தலும் இயலாத செயலாம். எனவே 'பா' என்னும் உறுப்பொடுபுணர்த்தே 'தூக்கு' என்னும் ஓசை விகற்பத்தினைத் தொல்காப்பியனார் இங்கு உணர்த்துகின்றார் எனப் பேராசிரியர் தரும் விளக்கம் 'தூக்கு' என்னும் உறுப்பிற்கும் 'பா' என்னும் உறுப்பிற்கும் அமைந்த நெருங்கிய தொடர்பினை நன்கு புலப்படுத்துவதாகும்.

௭௮ அஃதன் றென்ப[1] வெண்பா யாப்பே.

**இளம்பூரணம்** :

என் – எனின். வெண்பாவிற்குரிய ஓசை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வெண்பாவாக யாக்கப்பட்டது அகவலோசையன்று என்றவாறு.[2]

---

1. 'அதாஅன்றென்ப' எனப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் பாடம் கொண்டனர்.

2. 'வெண்பாயாப்பு 'அஃது அன்று என்ப' என இயையும். 'அஃது' என்பது மேலைச்சூத்திரத்திற்குறிக்கப்பட்ட அகவலோசையைச் சுட்டிநின்றது. அகவலோசையல்லாதது வெண்பா ஓசை என்பதாம். இதனைப் பிற நூலாசிரியர்

எனவே அகவுதலில்லாத ஓசையாம். இதனைப் பிற நூலாசிரியர் செப்பலோசை என்ப. அகவுதல் என்பது ஒரு தொழில். அத்தொழில் இதன்கண் இல்லாமையின் 'அஃதன்று' என்றார்.

உதாரணம் :

"பொன்னார மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபேர்
உன்னேனென் றூழுலக்கை பற்றினேற்—கன்னோ
மனனோடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்
புனல்நாடன் பேரே வரும்" (முத்தொள். கOச)

இது மேற்சொல்லப்பட்டதுபோல இசைகுறித்து வருத-லின்றிச் செப்புதலாகிய வாக்கியம்போன்ற ஓசைத்தாகி வந்த-வாறு காண்க. (எஅ).

**பேராசிரியம் :**

இது, வெண்பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேற் கூறிய அகவலோசையன்றிச் செப்பிக் கூறும் ஓசையெல்லாம் வெண்பா வெனப்படும். (எ-று).

யாப்பென்றதனான் அப் பாக்கள் செய்யுண் முழுவதும் ஒருங்கு தழீஇக் கிடக்குமென்பது கொள்க. அகவிக் கூறாது[1] ஒருவற் கொருவன் இயல்புவகையானே ஒரு பொருண்மை கட்டுரைக் குங்கால் எழும் ஓசை செப்பலோசை யெனப்படும். இவ்விரண்டு மல்லது வழக்கினுள் இன்மையான் அதாஅன்றெனவே அதனிலக் கணம் போல்வதாயிற்று. (அ௨)

**நச்சினார்க்கினியம் :**

இது வெண்பாவிற்குரிய செப்பலோசை கூறுகின்றது

முன் பக்கத் தொடர்ச்சி

செப்பலோசையென வழங்குவர். இசைகுறித்துவருவது அகவலோசை. வெண்பா-வோசையாகிய இது செப்புதலாகிய சொற்றொடர் போன்ற ஓசையுடையதாகி வருதலின் செப்பலோசையென்னும் பெயருடையதாயிற்று.

1. அகவிக்கூறாது-அழைத்துக்கூறாது.

2. அகவலும் வெண்பாவும் ஆகிய இவ்விரண்டோசையுமல்லது உலக-வழக்கினுட் பிறிதொன்றின்மையால் அகவலோசையல்லாத தெல்லாம் வெண்பா வமைப்பமாகிய செப்பலோசையுள் அடங்கிவிடும் என்பார், அவ்வகவல் அல்லாதது வெண்பாயாப்பு' என அவ்வகவலோடு சமமாய் எதிர்நிற்கும் வெண்பாவின் இலக்கணம் உணர்த்தினார்.

(இ-ள்.) மேற்கூறிய அகவிக்கூறு மோசையன்றிச் செப்பிக்கூறு மோசை யெல்லாம் வெண்பா எனப்படும் என்று சொல்லுவர் ஆசிரியர். (எ-று)

யாப்பு[1] என்றதனான் அவ்வோசை செய்யுண் முழுவதூஉம் ஒருங்கு தழீஇக் கிடக்கும் எ று. அழைத்துக்கூறா தொருவற் கொருவன் இயல்புவகையான் ஒரு பொருண்மையைக் கட்டுரைக் குங்கால் எழுந்த வோசை செப்பலோசை யெனப்படும். அவ்விரண்டு மல்லது வழக்கினு ளின்மையின் 'அதாஅன் றென்ப' என அவைகளி னிலக்கணம் பெறலாயிற்று.

**ஆய்வுரை :**

இது, வெண்பாவிற்குரிய ஓசையுணர்த்துகின்றது.

(இ-ள்) வெண்பாவாக யாக்கப்பட்டது அகவலோசை அல்லாதது என்பர் ஆசிரியர் எ-று.

"எனவே அகவுதல் இல்லாத ஓசையாம். இதனைப் பிற நூலாசிரியர் செப்பலோசை என்ப. அகவுதல் என்பது ஒரு தொழில். அத்தொழில் இதன்கண் இல்லாமையின் 'அஃதன்று' என்றார் என இளம்பூரணரும், "அழைத்துக்கூறாது ஒருவற்கு ஒருவன் இயல்புவகையான் ஒரு பொருண்மையைக் கட்டுரைக்குங்கால் எழுந்த ஓசை செப்பலோசை யெனப்படும். (அகவலும் செப்பலும் ஆகிய) அவ்விரண்டுமல்லது வழக்கினுள் (பிறிது) இன்மையின் 'அதா அன்று' என அவைகளின் இலக்கணம் பெறலாயிற்று" எனப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கூறும் விளக்கம் இங்கு அறியத்தக்கனவாகும்.

௭௬ துள்ளல் ஓசை கலியென மொழிப.

**இளம்பூரணம் :**

என்—எனின், கலிப்பாவிற்கு ஓசையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) துள்ளலோசை கலிப்பாவிற்காம் என்றவாறு.

1. யாப்பு என்றது, மேற்குறித்த அகவலோசை யல்லாத ஓசையினை. 'அஃது அன்று யாப்பு வெண்பா என்ப' என இயைத்துப் பொருள் கொள்ளப்பட்டது.

துள்ளுதலாவது ஒழுகுநடைத்தன்றி இடையிடை யுயர்ந்து வருதல்; கன்று துள்ளிற்றென்றாற் போலக் கொள்க.[1]

உதாரணம்

“அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி”
(கலித். கூகூ)

என்றவழி ‘அரிதாய வறன்’ என நின்றவழிச் செப்பலோசைத்தாகிய வெண்சீர்ப் பின்னும் வெண்டளைக்கேற்ற சொல்லொடு புணராது ஆண்டெழுந்த ஓசை துள்ளிவந்தமையால் துள்ளலோசை யாயிற்று (எகூ)

**பேராசிரியம்:**

இனித், துள்ளலுந் தூங்கலும் செய்யுட்கணன்றி வழக்கினுஞ் செய்யுளிலும் ஒப்பவருவனவல்ல; அவற்றுள் துள்ளலோசை உணர்த்துகின்றது

(இ-ள்) துள்ளலோசை யென்பது வழக்கியலாற் சொல்லாது முரற்கைப்படுமாற்றால்[2] துள்ளச்சொல்லும்[3] ஓசை; அது கலிப்பா வெனப்படும் (எ-று). (அ௩)

**நச்சினார்க்கினியம்:**

இது செய்யுட்கண் நிகழுதற்குரிய துள்ளலோசை கூறுகின்றது.

(இ-ள்.) வழக்கியலாற் கூறாது[4] முரற்கைப்படுமாற்றாற் றுள்ளச்சொல்லு மோசை கலிப்பா எனப்படும். எ-று.

---

1. கன்று துள்ளியோடுமாறுபோன்று இடையிடையேயுயர்ந்து செல்லும் பாவின் ஓசையமைப்பு துள்ளலோசையாகும்.

2. முரற்கைப்படுமாறாவது ஆரவாரமுண்டாதல்.

3. துள்ளலோசையாவது, ஒழுகு நடையின்றி இடையிடை உயர்ந்து வரும் ஓசை.

4. வழக்கியலாற் கூறுதலாவது, செய்யுட்கேயுரிய அகவலோசையும் துள்ளலோசையும் தனியே வெளிப்பட்டுத் தோன்றாதபடி இயல்பாக உரையாடுதல். முரற்கைப்படுதலாவது, ஒழுகிய ஓசைத்தன்றி இடையிடை உயர்ந்து துள்ளலோசைப்பட ஒலித்தல்.

**ஆய்வுரை :**

இது, கலிப்பாவிற்குரிய ஓசையுணர்த்துகின்றது.

(இ-ள்) துள்ளலோசை கலிப்பாவிற்கு உரியதாகும் என்று கூறுவர் ஆசிரியர் எ-று

துள்ளுதலாவது ஒழுகுநடையின்றி இடையிடை உயர்ந்து வருதல். செப்பலோசைத்தாகிய வெண்சீர்ப் பின்னும் வெண்டளைக்கேற்ற சொல்லொடு புணராது ஆண்டு எழுந்த ஓசை துள்ளித் துள்ளி வந்தமையால் துள்ளலோசையாயிற்று.

**அ௰ தூங்கல் ஓசை வஞ்சி யாகும்.**

**இளம்பூரணம் :**

என் — எனின். வஞ்சிப்பாவிற் குரிய ஓசை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள் ) தூங்கலாவது[1] அறுதியற்ற ஓசைத்தாகி[2] வரும் வஞ்சி என்றவாறு

*"சுரமறிவன துறையெல்லாம்*
*இறவீன்பன இல்லெல்லாம்*
*மீன்திரிவன கிடங்கெல்லாந்*
*தேன்தாழ்வன பொழிலெல்லாம், எனத்*
*தண்பணை தழீஇய இருக்கை*
*மண்கெழு நெடுமதில் மன்னன் ஊரே."* (யாப். வி. பக். ௬௩)

இதனுட் சீர்தோறும் ஓசை யற்றவாறு கண்டுகொள்க (அ0)

**பேராசிரியம்**

இது, தூங்கலோசை யுணர்த்துதல் நுதலிற்று

1. 'தூங்கலாவது அறுதியற்றவோசைத்தாகிவரும் வஞ்சி. . 'சுரமறிவன துறை யெல்லாம்' இதனுட் சீர் தோறும் ஓசையற்றவாறு கண்டுகொள்க, எனவும், 'தூங்கலாவது இறுதியற்றவோசைத்தாகிவரும் வஞ்சி ... 'சுறமறிவன துறையெல்லாம்' இதனுட் சீர்தோறும் ஓசையறாதவாறுகாண்க' எனவும் இளம்பூரணருரை இருவேறு பாடவேறுபாடுகளுடன் காணப்படுகின்றது. இவ்விருபாட-வேறுபாடுகட்கும் ஏற்கும்வண்ணம் ''சீர்தோறும் முடிந்தும் முடியாத நிலையில் தொடர்ந்தும் செல்லும் ஓசைவிகற்பமே வஞ்சிப்பாவுக்குரிய தூங்கலோசையாம்'' எனக் கூறுதல் பொருத்த முடையதாகும்.

2. அறுதியற்றவோசையாவது, சீர்தோறும் முடிந்தும் முடியாதநிலையில் தொடர்ந்து செல்லும் ஓசையாகும்.

(இ-ள்) அடியிற்றூங்காது சீர்தொறுந் தூங்குமோசை தூங்கலோசை யெனப்படும்.[1] அதுபோலும் வஞ்சிப்பாவாவது (எ-று).

**நச்சினார்க்கினியம் :**

இஃது அச்செய்யுட்க ணிகழ்தற்குரிய தூங்கலோசை கூறு-கின்றது.

(இ-ள்.) அடியிறுதியிற் றூங்காது சீர்தொறுந் தூங்கப்படும்[2] ஓசை வஞ்சிப்பாவாகும் எ-று.

துள்ளலுந் தூங்கலும் வழக்கின்கண் நிகழாவென்றுணர்க.[3]

**ஆய்வுரை :**

இது, வஞ்சிப்பாவிற்குரிய ஓசையுணர்த்துகின்றது.

(இ-ள்) தூங்கலோசை வஞ்சிப்பாவிற்கு உரியதாகும் எ-று.

தூங்கல்-அறுதிப்பட்டு உயராது தாழ்தல். அடியிறுதியில் தூங்காது சீர்தோறும் தூங்கப்படும் ஓசை தூங்கலோசை யெனப்படும். துள்ளலும் தூங்கலும் செய்யுட்கண் வருவன; வழக்கினுஞ் செய்யுளினும் ஒப்ப வருவன அல்ல என்பர் பேராசிரியர்.

**அக. மருட்பா ஏனை இருசார் அல்லது**
**தானிது என்னுந் தன்மை யின்றே.[4]**

**இளம்பூரணம் :**

என் - எனின். மருட்பாவிற்கு ஓசை இதுவென உணர்த்துதல் நுதலிற்று.

---

1. தூங்கலோசை, சீர்தோறுந் தாழ்ந்த நடையினதாகிய ஓசை.

2. தூங்குதல் - அறுதிப்பட முடிவுறுதல்.

3. இவ்விரண்டோசைகளும் செய்யுட்கேயுரியன என்பதாம்.

'தானிது வென்னுந் தனிநிலையின்றே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்டபாடம்.

4. 'ஏனைஇருசார்' என்றது, தமக்கெனத் தனியோசையினையுடைய வெண்பாவும் ஆசிரியமும் ஆகிய இரண்டினையும்.

வெண்பாவும் ஆசிரியமும் முன்னும் பின்னும் உறுப்பாக விரவியமைந்த யாப்பே மருட்பாவாதலின், அதற்கெனத் தனியோசையில்லையென்பார், ''ஏனை இரு சாரல்லது தான் இதுவென்னுந் தன்மை (மருட்பாவுக்கு) இன்று'' என்றார். 'திருநுதல்...அணங்கே' எனவரும் இம்மருட்பாவில் முன்னிரண்டடிகளினும் வெண்பாவிற்குரிய செப்பலோசையும் பின்னிரண்டடிகளினும் ஆசிரியப் பாவுக்குரிய அகவலோசையும் அமைந்துள்ளமை காண்க.

(இ-ள்.) மருட்பாவிற்கு ஓசை இதுவென்னுந் தன்மை இல்லை; அதற்கு வெண்பாவும் ஆசிரியப்பாவும் உறுப்பாக, இவ் விரண்டின் ஓசையே அதற்கு ஓசை என்றவாறு.

"திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடும்
இருநிலனுஞ் சேவடி யெய்தும்—அரிபரந்த
போகிதழ் உண்கண் இமைக்கும்
ஆகு மற்றிவள் அகலிடத் தணங்கே" (பு.வெ.கைக்கிளை ௩)

என்பதனுட்கண்டு கொள்க. (அக)

**பேராசிரியம் :**

இது, மருட்பாவிற்கு வேறுபாடு இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மருட்பாவிற்கு உறுப்பாவது ஒழிந்த இரு கூறு மல்லது, தானாக வேறுபடுத்து இதுவெனக் காட்டுந் தனி நிலையின்று (எ-று).

எனவே, இரண்டன் கூட்டத்துக்கண்ணது மருட்பாவாவ தென்றவாறு. பரிபாடற்கு இருசார் இன்மையின் ஈண்டுக் கூறிற் றிலர்; அது மேற்கூறுப. 'ஏனை இருசார்' என்ற தென்னை யெனின் இச்சூத்திரத்து முன்னர் அதிகாரப்பட்டு நின்ற துள்ள-லோசையுந் தூங்கலோசையுமல்லது, அங்ஙனஞ் செய்யுட்கு உரியவன்றி வழக்கிற்கு வருவனவாகி ஒழிந்துநின்ற செப்பலும் அகவலுமே யென்றற்கு அவ்வாறு கூறினானென்பது. அவை இரண்டுங் கொள்ளுங்கால் நிறுத்தமுறையாற் கொள்ளாது, எதிர்சென்று கொள்ளப்படும். கொள்ளவே, செப்பல் முன்னாக-வும் அகவல் பின்னாகவும் வருவதாயிற்று மருட்பா[1]. இனி நிறுத்த முறையானே கொள்வார் வெண்பாமுதல் அகவல் பின்னாக வருவது மருட்பாவன்றெனவும், வெண்பா வொழித்து

1. அகவல் முதலாகத் தூங்கல் இறுதியாக மேற்கூறப்பட்ட நால்வகை-யோசைகளையும் அடியிலிருந்து எண்ணுமிடத்துத் தூங்கல், துள்ளல், செப்பல், அகவல் என எண்ணுதல் முறையாதலின் அவற்றுட் பிறகூறிய தூங்கலும் துள்ளலும் நீங்க ஏனைய செப்பலும் அகவலும் 'ஏனைஇருசார்' எனப்பட்டன. எனவே 'செப்பல் முன்னாகவும் அகவல் பின்னாகவும் வருவது மருட்பாவாயிற்று' என்றார் பேராசிரியர்.

ஒழிந்தபாத் தம்முண் மயங்குவனவே மருட்பாவெனவுங் கூறுப.[1] கலிப்பாவும் வஞ்சிப்பாவும் ஆசிரியத்தோடும் வெண்பாவோடும் மயங்கியிறினும் அவை மருட்பாவெனப்படாமையின் அது பிழைக்குமென்பது. (அரு)

**நச்சினார்க்கினியம் :**

இது மருட்பாவிற்கு வேறோசை யின்றென்கின்றது.

(இ-ள்.) மருட்பா எ-து மருட்பாவிற் கோசையாவது. ஏனை ...... யின்றே எ-து ஒழிந்த இருகூறுமல்லது தானாக வேறுபடுத்த இதுவென்று காட்டுந் தனிநிலை யின்று. எ-று.

எனவே செப்பலும் அகவலுங் கூடியது மருட்பாவாயிற்று. அதிகாரப் பட்டுச் செய்யுட்குரியவாய் நின்ற துள்ளலுந் தூங்கலும் ஒழிந்தனவே வரும் என்றற்கு 'ஏனை' யென்றார்.[2] சூத்திரங்களை நிறுத்தமுறையாற் கொள்ளாது எதிர்சென்று கோடலிற் செப்பல் முன்னும் அகவல் பின்னுமாம்.[3]

**ஆய்வுரை :**

இது, மருட்பாவிற்குரிய ஓசை யுணர்த்துகின்றது.

(இ-ள்) மருட்பாவிற்குரிய ஓசையென்பது, (முற்கூறிய தூங்கலுந் துள்ளலும் ஒழிந்த) ஏனைச் செப்பலும் அகவலு-மாகிய இருகூறுமல்லது, தானாக வேறுபடுத்து இதுவெனக் காட்டும் தனிநிலையுடையதன்று எ-று.

---

1. இவ்வாறு கூறுவோர் இன்னாரென்பது தெரியவில்லை. இங்ஙனம் கூறுவார் கூற்றுப் பிழையுடையதாம் என்பார். அது பிழைக்கும் என்பது, என்றார்.

வெள்ளை முதலா வாசிரிய மிறுதி "கொள்ளத்தொடுப்பது மருட்பா-வாகும்" எனவும், இம்மருட்பா புறநிலை வாழ்த்து மருட்பா. வாயுறை வாழ்த்து மருட்பா, செவியறிவுறூஉ மருட்பா, கைக்கிளை மருட்பா என நால்வகைப்படும்" எனவும் விளக்குவர் யாப்பருங்கலவுரையாசிரியர். ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தும் இதுவேயென்பது, "கைக்கிளை தானே வெண்பா வாகி, ஆசிரிய வியலான் முடியவும் பெறுமே" (செய்.ளயகூ) எனப்பின்வரும் சூத்திரத்தால் இனிது புலனாதல் காணலாம்.

2. 'ஏனை' என்றது இதற்கு முன்னுள்ள இரண்டு சூத்திரங்களிலும் கூறப்பட்ட தூங்கலும் துள்ளலும் அல்லாது அவற்றுக்கு முன் கூறப்பட்ட வெண்பாவும் ஆசிரியமும் ஆகிய இரண்டினையும்.

3. வெண்பா முன்னும் அகவல் பின்னுமாக வருவதே மருட்பா என்பதாம்.

அகவல் முதலாகத் தூங்கல் ஈறாக மேற்கூறப்பட்ட நால்வகை யோசைகளையும் இடமுறைப்படி எதிர்சென்று எண்ணுங்கால் தூங்கல் துள்ளல் செப்பல் அகவல் என எண்ணுதல் முறையாதலின், அந்நான்கனுள் பிற்கூறிய தூங்கலும் துள்ளலும் நீங்கலாக 'ஏனையிருசார்' எனக் குறிக்கப்பட்டவை முறையே செப்பலும் அகவலும் ஆதலால், 'செப்பல் முன்னாகவும் அகவல் பின்னாகவும் வருவது மருட்பாவாயிற்று' என மருட்பாவின் அமைப்பினை விளக்குவர் பேராசிரியர்.

**அ௨ அவ்வியல் பல்லது பாட்டாங்குக் கிளவார்.**[1]

## இளம்பூரணம் :

என் - எனின் பாக்கள் எல்லாவற்றிற்கும் உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேற் சொல்லப்பட்ட ஓசை வகையா னல்லது பாட்டாங்குக் கூறார் என்றவாறு.

பாட்டாங்குக் கூறுதலாவது ஓசை ஒழித்துச் சீருந்தளையும் அடியும் படக் கூறுதல்.[2] அவ்வாறு படக் கூறுதலால் பாட்டாங்கு ஆகாதென்ப தூஉம் அடியுந்தொடையும் பெறவந்ததாயினும் நூலின்பாற்படுதல் உரையின்பாற்படுதல் என்பதூஉம் கூறியவாறாம்.[3] அது வருமாறு:

"ஐவகை அடியும் விரிக்குங் காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்தும்
எழுபது வகையின் வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே" (செய்யுளியல் ௬அ)

---

1. 'அவ்வியலல்லது' என்பது பேராசிரியருரையிற்கண்ட பாடம், அவ்வியல்பு மேற்குறித்த அவ்வோசைவகை. 'பட்டாங்கு' என்பதும் உரையிற்கண்ட பாடம்.

2. இவ்வுரைத்தொடர்ப்பொருளைக் கூர்ந்துநோக்குங்கால் 'அவ்வியல் பல்லது பட்டாங்குக் கிளவார்' என்பதே இளம்பூரணர் கொண்ட பாடம் எனத் தெரிகிறது. பட்டாங்கு - உள்ளவாறு, பட்டாங்குக் கூறுதலாவது ஓசையின்றிச் சீருந்தளையும் அடியும் உள்ளவாறு புலப்படக் கூறுதல்.

3. "அவ்வாறு சொல்லுதலால் பாட்டு ஆகாதென்பதூஉம் அடியுந்தொடையும் பெற்று வந்ததாயினும் நூலின்பாற்படுதல் உரையின்பாற்படுதல் (வேண்டும்) என்பதூஉம் கூறியவாறாம்" என இவ்வுரைப்பகுதியமைந்திருத்தல் பொருட் பொருத்த முடையதாகும்.

என்பது ஆசிரியப்பாவிற்குரிய இலக்கண முடைத்தாயினும் ஓசையின்மையான் ஆசிரியம் எனப்படாது நூலெனப்படும் என்று கொள்க.[1]

**பேராசிரியம் :**

இது, மேலவற்றிற்கு ஒரு வரையறை கூறுகின்றது.

(இ-ள்.) மேற்கூறிய நான்கு பாவிலக்கணத்தா னல்லது பாட்டின்கண் வேறுபாக் கூறப்படாது (எ - று).

இது கூறிப் பயந்த தென்னையெனின், மேற்கூறிய பாக்களாற் பெயர்கூறாத செய்யுட்களும் அவை பாவாக வரினல்லது வேறு தமக்குப் பாவிலவென்பதூஉம்[2]

"மருட்பா ஏனை இருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்று" (85)

எனவே அவ்விரண்டன் கூட்டத்தின்கண்ணும் வேறொரு பாப் பிறக்குமென்று கொள்ளினுங் கொள்ளற்கவெனவும்[3] பிற்காலத்து நூல்செய்யும் ஆசிரியர் பிறவகையாற் பாவுறுப்பினை மயக்கம்படவேண்டுவாருளராயின் அவரை விலக்கியுங் கூறிய வாறு. அல்லதூஉம் மாணாக்கன் இதன் முதனூல்செய்த ஆசிரியன் பண்ணுந்திறனும் பகுத்தானைக் கண்டு இவற்றையும் பாவும் இனமுமெனப் பகுத்தான் கொலென்று ஐயுறாமை விலக்கி இயனூலுள் அவ்வாறு கூறிற்றிலனெனச் சொல்லினா னென்பது[4].

---

1. இங்கு எடுத்துக்காட்டிய செய்யுளியற்சூத்திரம் ஆசிரியப்பாவுக்குரிய சீரும் தளையும் அடியும் பெற்றுவந்ததாயினும் அப்பாவுக்குரிய அகவலோசையின்மையின் நூற்பா (சூத்திரம்) எனப்படும் என்பதாம்.

2. இயற்றமிழ்ச்செய்யுட்கள் யாவும் மேற்கூறிய நால்வகைப்பாவின்கண் அடங்கி வரினல்லது தமக்கென வேறு ஓசையில என்பதாம்.

3. செப்பலும் அகவலும் உறுப்பாகக் கொண்டது மருட்பா என்பதல்லது அதனை அவ்விரண்டன் கூட்டத்தின் கண்ணும் பிறந்த மற்றொருபா எனக்கொள்ளற்க.

4. இதன் முதனூல் செய்த அகத்தியனார், தாம் இயற்றிய முத்தமிழிலக்கணமாகிய அகத்தியத்துள் இசைத்தமிழிற் பண்ணும் திறமும் பகுத்துரைத்தாற்போன்று, இயற்றமிழிற் பாவும் இனமுமெனச் செய்யுட்களைப் பகுத்து இலக்கணங் கூறினாரோ என மாணாக்கர் ஐயுறாமைப்பொருட்டு இயல்நூலுள் பாக்களை வகுத்துரைத்ததன்றி முதனூலாசிரியர் இனம் வகுத்திலர் என்பார், 'அவ்வியல்பல்லது பாட்டு ஆங்குக் கிளவார்' என்றார்.

நான்கு பாவினையும் நோக்கி ஆங்கென்றான்:[1] ஐந்து செய்யுளை நோக்கி அவ்வியலென்றானென்பது [2] (அகூ)

**நச்சினார்க்கினியம் :**

இது மேலனவற்றிற்கோர் வரையறை கூறுகின்றது.

(இ-ள்.) மேற்கூறிய நான்கோசையானல்லது செய்யுளை முதனூற்கண் ஆசிரியர் கிளவார். எ-று.

எனவே, யானும் அதுவே கருதினேன் என்றார். ஆங்கு என்றது அகத்தியத்தினை. இதன் பயன் முற்கூறிய பாக்களாற் பெயர் பெறாத பரிபாடல் முதலிய செய்யுள்கட்கு மோசை இவையொழிய வேறின்றென்பதூஉம், மருட்பாப்போல வஞ்சி-யுங் கலியுந் தம்மிற்கலவா வென்பதூஉம், பிற்காலத்து நூல் செய்த ஆசிரியர் பாவுறுப்பினை மயக்கம்பட வேண்டுவாருள-ராயின் அவரை விலக்குவதூஉம், முதனூலாசிரியர் இசைக்குப் பண்ணுந்திறமும் பகுத்தாற்போல, இயற்குப் பாவும்இனமும் பகுத்தார்கொல் என்னும் ஐயம் நீக்குவதூஉம் ஆம். இவர் கருத்தாற்[3] சான்றோரும் இனங்கொள்ளாராயினார்.

**ஆய்வுரை :**

இது, மேற்கூறியவற்றுக்கு ஓர் வரையறை கூறுகின்றது.

(இ-ள்) மேற்கூறப்பட்ட நால்வகை ஓசையாலல்லது அவ்-வோசையொழித்துச் சீரும் தளையும் அடியும் பெறப் பாடல் செய்யார் ஆசிரியர் எ-று.

எனவே பாவிற்குரிய சீர் தளை அடி முதலிய இலக்கண-முடையவாயினும், பாட்டிற்கு இன்றியமையாதனவாக மேற்-கூறப்பட்ட ஓசையமையாதன நூல் (சூத்திரம்) எனவும் உரை எனவும் கூறப்படுதலன்றிப் பாட்டு என்ற பெயராற் சிறப்பித்து உரைக்கப்படா என்பது தொல்காப்பியனார் கருத்தாதல் பெறப்படும்.

---

1. 'ஆங்கு' என்றது, எல்லாச் செய்யுட்கும் இடனாகிய நான்குபாவினை.

2. 'அவ்வியல்' என்றது அப்பாக்களிடமாகப் பிறந்த ஐவகைச் செய்யுளை.

3. 'இவர்' என்றது, முதனூலாசிரியராகிய அகத்தியனார்செய்த முதனூலை-யொட்டிநூல்செய்த தொல்காப்பியனாரை. 'சான்றோர்' என்றது சங்கப் புல-வர்களை.

அங     தூக்கியல் வகையே ஆங்கென மொழிப.

## இளம்பூரணம் :

என்—எனின். ஐயமறுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). மேல் அதிகாரப்பட்ட தூக் கியலும்வகை சொல்லப்பட்ட நாலுமே என்றவாறு.

எனவே, இன்னும் உளவோ எனக்கருதற்க வென ஐயந்தீர்த்தவாறு.[1] ஈங்கு ஓதப்பட்ட தூக்குச் செவிப்புலனாதலின் அதனானே ஓர்ந்துணர்ந்து பாகுபாடறிக.

## பேராசிரியம் :

இது, தூக்காமா றுணர்த்துகின்றது.

(இ - ள்) தூக்கெனப்பட்ட உறுப்பு நடக்கும் இடவகை அச்சொல்லப்பட்ட நான்கிடமுமாம் (எ - று).

ஆங்கென்றது, அப்பெற்றித்து என்றவாறாகக் கொள்ளற்க. அவ்விடந் தூக்கு இயலும் இடப்பகுதியென்றவாறு: என்றார்க்குத் தூக்கினது இலக்கணம் ஈண்டுக் கூறியதிலனாலெனின், தூக்கென்பது சொல்லின் முடியு மிலக்கணத்திற்றது. தூக்கென்பது நிறுத்தலும் அறுத்தலும் பாடலுமென்று இன்னோரன்னவற்றுமேல் நிற்கும்; ஈண்டும் அவ்வாறே பாவினை இத்துணையடியென நிறுத்துக் கூறுபாடறிதலும், அவ்வத் தூக்குள்வழிச் சொல்லுவாரது உறுப்பு விகாரப்பட்டு ஒடுவது போன்று அசையுமாறுங் கண்டுகொள்க.[2] இனி, அதுதான் இன்ன பொருளை அறுத்து நிற்குமென்பான் பாக்கூறி, அப்பாவின்கண்ணது இவ்வறுதியென்றான்; எனவே இனிக் கூறாது நின்றதில்லை தூக்கிற்கு வேண்டும் இலக்கணமென்பது.[3] இக்கருத்தினானே தூக்கினைப் பாவெனினும் அமையும்.

---

1. பாக்களுக்குரிய ஓசைவகை இன்னுமுளவோ என்று ஐயுற்றார்க்கு, துள்ளல், அகவல், செப்பல் தூங்கல் எனமேற்கூறப்பட்ட நான்குமே என ஐயந்தீர்க்கும் முறையில்அமைந்தது இச்சூத்திரம் என்பதாம்.

2. தூக்கு என்னுஞ் சொல், நிறுத்தல், அறுத்தல், பாடல் என்ற பொருளில் வழங்குவது, பாவினை இத்துணையடியென அறுத்து நிறுத்துக் கூறுபாடறிதற்குக் கருவியாகிய செய்யுளுறுப்பு தூக்கு ஆதலின், அது சொல்லின் முடியும் இலக்கணத்தது என்றார்.

3. ''அதுதான் இன்னபொருளை அறுத்துநிற்கு மென்பான் பாக்கூறி, அப்பாவின்கண்ணது இவ்வறுதியென்றான், எனவே தூக்கிற்கு வேண்டும் இலக்கணம் இனிக்கூறாது நின்றதில்லையென்பது'' என இயையும்.

"பாவென மொழியினுந் தூக்கினது பெயரே"

எனப் பிறருஞ் சொல்லுப.

அகவலோசைக்கண் தூக்கு வருங்கால் இருசீர்முதலா எண்சீர்காறும் பரந்துபட்ட அகவலோசையை நாற்சீர்க்கண்ணே துணித்துக்கொள்ள, அஃது ஆசிரியத்தூக்காமென்றவாறு. இருசீரால் துணிப்ப ஆசிரியவோசையாகாது; முச்சீரால் துணிப்பினும் ஆசிரியவோசையாம்; என்னை ? ஈற்றயலடி முச்சீர்த்தாமெனவும்; இடையும் வரையாரெனவுங் கூறினமையின். அஃதேல் அடிவகையானே அறுதியுணர்த்துமாகலின் தூக்கு எவன் செய்யும் எனின், அவ்வடியினையுந் தூக்கானன்றி உணர்த்தலாகாது; என்னை? இருசீர் முதலாப் பலசீர் தொடர்ந்தவழித் தூக்கு அறுப்புக்கொண்டன்றி இத்துணைச் சீர்கொண்ட அடி இஃதென்பது அறியலாகாமையின்[1] அல்லதூஉம் ஆசிரியத்துள் எண்சீர் தொடர்ந்து பாச்சென்றவழி அதற்கு வருமெனப்பட்ட முச்சீரடியும் ஐஞ்சீரடியுமாகாது நாற்சீரடி இரண்டென்று அறிதற்குக் கருவி தூக்கென்பது கொள்க; அல்லாக்கால்,

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்"

(ஐங்குறுநூறு)

என்றவழி,'உள்ளார்' 'முள்ளுடை' என்பன அடியெதுகையாக முச்சீரடியும் ஐஞ்சீரடியுமெனக் கொண்டு மயக்கமாமென்பது.

"நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே"

(புறம்.235)

என்றவழி எண்சீரான் இரண்டு நாற்சீரடி வந்தனவென்று கோடு மன்றே தூக்கின்றாயினென்பது.

தூங்கலோசை அவைபோல நாற்சீரடிக்கணன்றி இருசீர்க்கண்ணுஞ் சிறுபான்மை முச்சீர்க்கண்ணுந் தூக்குக் கொள்ளப்

1. ஓரடியுள் இருசீர் முதலிய பல சீர்கள் தொடர்ந்த நிலையில் அடிகளைத் துணித்து நிறுத்தலாகிய தூக்கு என்னும் உறுப்புக் கொண்டன்றி இத்துணைச் சீர் கொண்டது இவ்வடியென்பது அறியலாகாமையின் இங்ஙனம் அறுதிப்படநிற்கும் அடியினைத் 'தூக்கு' என்னும் இவ்வுறுப்பினாலன்றி உணர்த்தல் இயலாது என்பதாம்.

படும். அங்ஙனங் கொள்ளாக்கால் இருசீரடியெனவும் முச்சீரெடி-யெனவுந் தூக்கின்றி இடை தெரியப்படாவென்பது.[1] (அஎ)

**நச்சினார்க்கினியம்:**

இது தூக்கிற்கு இலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்.) தூக்கென்று சொல்லப்பட்ட உறுப்பு நடக்கும் இட வகை சொல்லப்பட்ட நான்கிடமும். எ-று.

தூக்கென்பது சொல்லின் முடியும் இலக்கணமாம். அது நிறுத்தலும் அறுத்தலும் பாடலும் என்றின்னோரன்னவற்றுமே னிற்கும். ஈண்டும் அவ்வாறே பாவென்னும் பொருளை இத்துணையடியென நிறுத்துக் கூறுபாடறிதலும் அவ்வத்தூக்குள் வழிச் சொல்லுவார். அஃது உறுப்பு விகாரப்பட்டு ஓடுவது போன்று அசையுமாறு காண்க.

"பாவென மொழியினுந் தூக்கினது பெயரே"

என்றார் பிறராதலிற் றூக்கினைப் பா என்றலுமாம். இருசீர் முதல் ஐஞ்சீர்காறும் பரந்துபட்ட அகவலோசையைப் 'பெரியகட் பெறினே' எனச் சொற்சீரடியாகவும் 'யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே' என அளவடியாகவும் 'நரந்த நாறுந் தன்கையால்' எனச் சிந்தடியாகவும் 'சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே' என நெடிலடியாகவும் தூக்குத்துணித்தவாறு காண்க. இங்ஙனம் தூக்கின்றெனெ[2]

'நரந்த நாறுந் தன்கையாற் புலவு
நாறு மென்றலை தைவரு மன்னே'

என்றதனை இரண்டு நாற்சீரடியாக அலகிட அகவலோசை பிற-வாமையுணர்க.

'உள்ளார் கொல்லோ தோழி'

என்பதற்கு 'முள்ளுடை' என்பது அடியெதுகையாய்ச் சிந்தடியும் நெடிலடியுமாகக் கொள்ள நின்றதனையுந் தூக்குத்துணிந் திரண்டனையும்[3] அளவடியாக்கியவாறுங்காண்க. தூக்கின்றென மயக்கடிவஞ்சி யிடைதெரியாமையு[4] முணர்க.

1. இடைதெரியப்படா - வேறுபாடு அறியப்படா, இடை - வேறுபாடு,
2. 'தூக்கின்றேல். என்றிருத்தல் வேண்டும்,
3. 'தூக்குத் துணித்திரண்டனையும் என்றிருத்தல் வேண்டும்,
4. இடைதெரியாமை ... வேறுபாடுதெரியாமை.

**ஆய்வுரை :**

இது, 'பா' என்னும் செய்யுளுறுப்பின்மேல் வைத்துத் தூக்கின் இலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) தூக்கு எனப்பட்ட உறுப்பு நடக்குமிடம் மேற் சொல்லப்பட்ட (அகவல், செப்பல், துள்ளல், தூங்கல் என்னும் நான்கிடமுமாம் என்பர் ஆசிரியர் எ-று.

எனவே இந்நான்கினுள் அடங்காத ஓசை எதுவும் இல்லை யென்பது தொல்காப்பியனார் கருத்தாதல் நன்கு புலனாம் ஆங்கு—அவ்விடம்; என்றது, நால்வகைப்பாவின் ஓசைகளை

**அஈ மோனை எதுகை முரணே இயைபென**
**நானெறி மரபின தொடைவகை என்ப.[1]**

**இளம்பூரணம் :**

என்—எனின். தொடைப் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மோனை எனவும் எதுகை யெனவும் முரணெனவும் இயைபெனவும் நான்குநெறிப்பட்ட மரபினையுடைய தொடையினது பாகுபாடு என்றவாறு.

உதாரணந் தத்தஞ் சிறப்புச் சூத்திரங்களுட் காட்டுதும். (அஈ)

**பேராசிரியம் :**

இது,

"மரபே தூக்கே தொடைவகை யெனாஅ" (தொல் செய் 1)

என நிறுத்தமுறையானே, தூக்குணர்த்தித் தொடைவகை உணர்த்துவானெழுந்தான், அவைதாம் இவையெனப் பெயரும் முறையுந் தொகையுமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மோனைத்தொடையும் எதுகைத்தொடையும் முரண் டொடையும் இயைபுத்தொடையுமென நான்கு வகைப்படுந் தொடை (எ - று).

1. தொடைவகை மோனை எதுகை முரண் இயைபு என நானெறிமரபின என்ப என இயையும்.

நானெறி மரபு ஆவது, அடிதொறும் முதலெழுத்து ஒத்தலும், முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டாமெழுத்து ஒன்றிவருதலும், சொல்லும் பொருளும் முரண் பட்டு வருதலும், அடிதொறும் ஈற்றெழுத்து ஒன்றிவருதலும், என நான்கு நெறிப்பட்ட தொடையாமாகும்.

'நெறிமரபு' என்பது நெறிப்பட்ட தொடையிலக்கணம் இதுவென்றவாறு; எனவே,

"அளபெடை தலைப்பெய வைந்து மாகும்"
(தொல். செய். 89)

என்றவழி, இதுபோலச் சிறந்ததன்று அளபெடைத்தொடையென்பதாம்; என்னை? அதுவும் வழுவமைத்துக்கொண்ட எழுத்தாகலானென்பது. 'தொடைவகை' யென்பது தொடைப் பகுதி பலவுமென்றவாறு. அவை மேற்கூறுமாற்றான் மோனை நான்கும்,[1] எதுகை பதினைந்தும்,[2] முரண் ஐந்தும்,[3] இயைபு இரண்டுமென்று,[4] இவ்வகைப்படுதலும், இனி ஈண்டு எண்ணப் பட்ட தொடைப் பகுதிகளும் அறுநூற் றிருபத்தைந்தடியினையும் ஓரோவொன்றாகத் தம்மொடு தம்மைத் தொடுப்பனவும்[5] அவை தம்மொடு பிறவந்தது தொடுப்பனவும்[6], ஓரடிக்கண்ணே தொடுப்பனவும்[7], அவற்றைக் கட்டளையடியல்லனவற்றும் ஈறாய் விராய்த் தொடுப்பனவும்,[8] கட்டளையடியல்லனவற்றைத் தம்மொடு தம்மைத் தொடுப்பனவும்,[9] தம்மொடு பிறவந்தது தொடுப்பன

1. மோனை நான்காவன; அடிமோனை, வருக்கமோனை, நெடில் மோனை, அனுமோனை.

2. எதுகை பதினைந்தாவன: தலையாகெதுகை, அடியெதுகை, மூன்றாமெழுத்தொன்றெதுகை, ஆசிடையெதுகை, வருக்கவெதுகை, நெடிலெதுகை, வல்லினவெதுகை, மெல்லினவெதுகை, இடையினயெதுகை, உயிரெதுகை, பொழிப்பெதுகை, ஒரூஉவெதுகை, முற்றெதுகை, இரண்டடியெதுகை, இடையிட்டெதுகை என்பன.

3. முரண் ஐந்தாவன: சொல்லுஞ் சொல்லும்முரணுதல், பொருளும் பொருளும் முரணுதல், சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணுதல், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதல். சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணுதல்.

4. இயைபு இரண்டாவன: எழுத்தடியியைபு, சொல்லடியியைபு.

5. எடுத்த அடியுடன் அவ்வியல்பினதாகிய அடியைத் தொடுப்பன.

6. எடுத்த அடியுடன் பிற அடியைத் தொடுப்பன.

7. ஓரடிக்குள்ளேயே மோனைமுதலாயின தொடைவரத் தொடுப்பன.

8. எழுத்தெண்ணிக்கொள்ளப்பெற்ற கட்டளையடிகளை அங்ஙனம் எழுத்தெண்ணப் பெறாத சீர்வகையடிகளோடும் கலந்து தொடுப்பன,

9. கட்டளையடியல்லாத சீர்வகையடிகளுள் எடுத்துக்கொண்ட அடியோடு அவ்வியல்புடைய அடியைத் தொடுப்பன.

வுமென[1] இன்னோரன்ன பலவுமுள. அப்பகுதியெல்லாம் அறிவித்தற்குத் 'தொடைவகை' யென்றானென்பது. (அஅ)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்தமுறையானே தொடை கூறுகின்றார்; அவற்றது பெயரும் முறையுமுணர்த்திற்று.

இ-ள். தொடை, மோனையுங் எதுகையும் முரணும் இயைபும் என நான்கு வழியாகிய முறைமையினையுடைய. எ-று.

நெறிமரபின எனவே அளபெடை, வழுவமைத்துக்கொண்ட எழுத்தாகலின் அவ்வாறு சிறந்ததன்றாம்.[2] தொடைவகை யென்றதனான் அசையந்தாதியுஞ் சீரந்தாதியுங் கொள்க. இவைதாம் அறுநூற்றிருபத்தைந்தடிக்கண்ணும் வந்தவடியேவரவும் பிறவடி-வரவும் தொடுப்பனவும், ஓரடிக்கண்ணே தொடுப்பனவும், கட்டளையடியொடு தொடுப்பனவும், சீர்வகையடி தம்மொடு-தாமுந் தம்மொடு பிறவும் வந்து தொடுப்பனவும் எனப் பலவா-றாயிற்று.

**ஆய்வுரை :**

இது, தொடைவகை உணர்த்துகின்றது.

(இ-ள்) மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என நான்கு நெறிப்பட்ட மரபினையுடையன தொடைவகை என்பர் ஆசிரியர் எ-று.

தொடைவகை என்பது எழுத்தும் சொல்லும் பொருளும் ஆகியவற்றை எதிரெதிர் நிறுத்தித் தொடுக்கப்படுவனவாகிய தொடை விகற்பமாகும். இவை மலரால் தொடுக்கப்பட்ட பூத்தொடையாகிய மாலை போன்று செய்யுட்குப் பொலிவு செய்வனவாதலின் தொடை எனப்பட்டன.

---

1. 'தம்மொடு பிறவந்து தொடுப்பனவும்' என்றிருத்தல் வேண்டும். எடுத்துக்கொண்ட அடியோடு பிற அடி வந்து தொடுப்பன.

2. பேராசிரியர் தரும் விளக்கத்தை அடியொற்றியது இவ்வுரைத் தொடராகும்.

அரு. அளபெடை தலைப்பெய ஐந்தும்[1] ஆகும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவுமது.

(இ - ள்.) அளபெடைத் தொடையோடே கூட ஐந்தென்று சொல்லவும்பெறும் என்றவாறு. (அரு)

**பேராசிரியம் :**

இஃது, எய்தியதன்மேற் சிறப்பு விதி.

(இ-ள்) அந்நான்கேயன்றித் தொடைவகை ஐந்தெனவும் படும் அளபெடைத் தொடையோடு தலைப்பெய்ய (எ - று).

அளபெடை, எழுத்தோத்தினுள் வேறு எழுத்தெனப்படா மைச் சிறப்பின்மைநோக்கி, ஈண்டுமதனை வேறு போதந்து கூறினானென்பது[2] என்றார்க்கு மேலைச் சூத்திரத்து நானெறி மரபின வெனத் தொகை கூறினமையின் ஈண்டு அளபெடையுந் தொடையாமென அமையும். நான்கின்மேல் ஒன்றேறியக்கால் ஐந்தாமென்பது ஈண்டுச் சொல்ல வேண்டுவதன்று பிறவெனின், அற்றன்று; நான்கினொடு ஒன்றினையே சொல்லுகின்றானாயின் அது கடாவாவது? ஐந்தெனவும் ஆறெனவும் படுமென்றற்கு இது கூறினான்; எனவே, உயிரளபெடையும் ஒற்றளபெடையு மென அளபெடை இரண்டாதலினென்பது, அஃதே கருத்தாயின், ஆறுமாகுமென்னு மெனின், அங்ஙனங் கூறின் உயிரளபெடை-யோடு ஒத்த சிறப்பிற்றாவான் செல்லும் ஒற்றளபெடையென மறுக்க. உயிரின்பின்னது ஒற்றாகலான் எடுத்தோத்துப் பெறுவது உயிரளபெடை யெனவும், உம்மையாற் பெறுவது ஒற்றளபெடை யெனவுங் கொள்க.[3] உம்மை எச்சவும்மை.

---

1. தலைப்பெய்தல் - கூட்டியெண்ணுதல்.

மோனை, எதுகை, இயைபு, முரண், அளபெடை இவ்வைந்து தொடைகளும் அடிதோறும் வருந்தொடைகள்.

2. 'எழுத்தெனப்படுப' எனச் சிறப்பித்துரைக்கப்பட்ட முதலெழுத்து முப்பதினும் அடங்குவதாய அளபெடை அவற்றின் வேறெனப் படா-மையின் அச்சிறப்பின்மை கருதி அளபெடைத் தொடையினைப் பிற்-கூறினார்.

3. 'ஐந்துமாகும்' என எடுத்தோதப்பெறும் சிறப்புவிதி உயிரளபெடைக்கே யெனவும், 'ஐந்தும்' என்னும் எச்சவும்மையால் 'ஆறுமாகும்' எனத்-தழுவிக்கொள்ளப்பெறுவது ஒற்றளபெடையெனவும் கொள்க.

ஒற்றளபெடை மூன்றுபாவினுஞ் செல்லாது, கலிப்பாவினுள் துள்ளலோசையான் நில்லாமையினென்பது. (அக)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

(இ-ள்) அந்நான்குடனே உயிரளபெடையைக் கூட்டத் தொடையைந்துமாம். எ-று.

உம்மை எச்சவும்மையாகலின் ஒற்றளபெடை கூட்ட ஆறு-மாம் எ-று. உயிரின்பின்னது ஒற்றாகலின் உயிரளபெடையை யெடுத்தோதி ஒற்றளபெடையை உம்மையாற் கொண்டார்.[1] கலிக்கு ஒற்றளபெடை துள்ளலோசையை நிகழ்த்தாதவாறு மேற்காண்க.

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) அளபெடைத் தொடையொடு கூட்ட (த்தொடை) ஐந்தெனவும் கூறப்படும். எ-று.

இங்கு அளபெடையென்றது உயிரளபெடையினை. ஐந்தும் என்ற உம்மை எச்சவும்மை; ஒற்றளபெடையைக் கூட்டி எண்ண ஆறுமாகும் என்பது இவ்வும்மையாற் கொள்ளப்படும். தலைப்-பெய்தல் - கூட்டியெண்ணுதல்.

**இளம்பூரணம் :**

அசா பொழிப்பும் ஒரூஉஞ் செந்தொடை மரபும்
அமைந்தவை தெரியின்[2] அவையுமா ருளவே.

என் - எனின். இதுவுமது.

(இ - ள்) பொழிப்பெனவும் ஒரூஉ வெனவும் செந்தொடையாம் எனவும் அமைந்தவை ஆராயின் அவையுந் தொடைப் பாகுபாடாம் என்றவாறு[3]. (அசா)

---

1. இச்சூத்திரத்தில் 'அளபெடை' என்றது உயிரளபெடையை. 'ஐந்தும்' என்ற உம்மையால் ஒற்றளபெடை தழுவிக்கொள்ளப் பெற்றது.

2. 'அமைத்தனர்தெரியின்' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

3. பொழிப்பு, ஒரூஉ, செந்தொடைமரபு என அமைந்தனவற்றை ஆராயின் அவையும் தொடைவகையாகக் கொள்ளப்படும் என்பதாம்.

அவையுமாருள - அவையும் உள, ஆர், அசை.

**பேராசிரியம் :**

இதுவும் அது.

(இ - ள்) மேற்கூறிய ஐந்துமேயன்றிப் பொழிப்புத் தொடையும், ஒரூஉத்தொடையும், செந்தொடையுமென இவையுமுள (எ - று).

செந்தொடை மரபென்பது செந்தொடையிலக்கண மென்றவாறு.

'அமைத்தனர் தெரியின்' என்றதனான் அமையுமாற்றான் அமைத்துக்கொள்ளப்படும். யாங்ஙனம்? பொழிப்பும் ஒரூஉவும் ஓரடியுள்ளே வருமெனவும், செந்தொடை ஓரடியுள் வரினும் இரண்டடியானன்றி அறியவாராதெனவுங் கொள்க. இக்கருத்து நோக்கி[1] இவை ஈண்டுப் போதந்து கூறினானென்பது.

'அவையுமா ருளவே' யென்ற உம்மையான் இவைபோல ஓரடிக்கண்ணே வரும் முற்றெதுகையும்,[2] கிளைமுற்றெதுகையும்[3] இரண்டந்தாதியும்[4] இருவகை விட்டிசைத்தொடையுங்[5] கொள் ளப்படும். (௯0)

**நச்சினார்க்கினியம் :**

இதுவுமது.

(இ-ள்)[6] பொழிப்.............தனர் எ-து பொழிப்புத்தொடை யும் ஒரூஉத்தொடையுஞ் செந்தொடையிலக்கணமும் ஓரடிக் கண்ணே வருமென்றமைத்தனர் ஆசிரியர். தெரியி.........ளவே எ-து ஆராயின் அவையுந் தொடையாதற்குள. எ-று.

---

1. முற்கூறிய மோனை முதலியன அடிதோறும் வருவன. இங்குக் கூறப் பட்ட பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை என்பன ஓரடிக் கண்ணேவருவன. செந் தொடை ஓரடிக்குள் வருவதாயினும் இரண்டடியுள் வைத்து ஒத்துநோக்கினா- லன்றி அஃது இன்னதொடையெனவைத்து அறியவாராது.

2. முற்றெதுகையாவது, ஓரடியிற் சீர்தோறும் (முதலெழுத்து அளவொத்து நிற்க) இரண்டாமெழுத்து ஒன்றிவருவது.

3. கிளைமுற்றெதுகையாவது, ஓரடியிற் சீர்தோறும் முதலெழுத்து அள வொத்து நிற்ப இரண்டாமெழுத்து கிளையெழுத்துக்களாய் ஒன்றிவருவது.

4. 1. அசையந்தாதி. 2. சீரந்தாதி

5. இருவகை விட்டிசைத்தொடை. விட்டிசைமோனை, விட்டிசையெதுகை என்பன.

6. இவ்வுரைப்பகுதி பேராசிரியர் உரையைத் தழுவியமைந்தது.

தெரியின் என்றதனாற் செந்தொடை ஓரடிக்கண் வரினும் ஈரடியானன்றி வாரா எனக்கொள்க. இக்கருத்தான் ஈண்டும் போதந்து வைத்தார். அவையும் என்ற உம்மையை எச்சப் படுத்திப் பிறவும் ஓரடிக்கண்ணே வருவனவும் உளவெனக் கொள்க. அவை முற்றெதுகையும், கிளைமுற்றெதுகையும், இரண்டந்தாதியும், இருவகை நிரனிறுத்தமைத்தவும் விட்டிசை யுமாம்.

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ ள்) பொழிப்பும் ஒரூஉம் செந்தொடையியல்பும் என அமைந்தவற்றை ஆராயின் அவையும் தொடை வகையாக அமைந்துள்ளன எ-று.

'அமைத்தனர் தெரியின்' எனவும் 'செந்தொடை மரபும்' எனவும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் பாடங்கொண்டனர். 'பொழிப்பும் ஒரூஉம் ஓரடியுள்ளேவரும் எனவும் செந்தொடை ஓரடியுள் அமைந்தாலும் இரண்டடியானன்றி அறிய வாரா தெனவுங் கொள்வர் பேராசிரியர்.

**அஎ. நிரனிறுத் தமைத்தலும் இரட்டை யாப்பும்**
**மொழிந்தவற் றியலான் முற்றும் என்ப.**

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவுமது.

(இ-ள் ) நிரலே நிறுத்தியமைத்துக் கோடலும் இரட்டைத் தொடையும் மேற்சொன்னவற்றான் முடியவும் பெறும் என்ற-வாறு[1]

நிரனிறைத் தொடையாவது பொருளைச் சேரநிறுத்திப் பயனையுஞ் சேரநிறுத்துதல்.

இரட்டைத்தொடையாவது ஓரடி முழுவதும் ஒருசொல்லே வருதல்.

---

1. பொருள்களை வரிசைப்படநிறுத்தி அவற்றிற்கொத்த முடிக்குஞ்சொற்-களையும் வரிசைப்பட நிறுத்துதலாகிய நிரனிறைத்தொடையும், ஒருசொல்லே-ஓரடிமுழுதும் வருதலாகிய இரட்டைத் தொடையும் மேற்சொன்ன வகையால் தொடுக்கப்பெற்று முடிதலும் உண்டு.

இத்துணையுங் கூறப்பட்டது அடிதொறும் வருவன ஐந்து-தொடை எனவும் அடிக்கண் வருவன ஐந்துதொடை எனவும் அவ்வைந்தும் மூன்றாகி அடங்குமெனவும் கூறியவாறாம்.[1]

(அஎ)

**பேராசிரியம்:**

இது, நிரனிறைத் தொடையும் இரட்டைத்தொடையுமென இரண்டு தொடை கூறி அவை முற்கூறிய தொடைப்பாற்படு மென்று அடங்கக் கூறுகின்றது.

(இ - ள்.) நிரனிறைப் பொருள்வகையால் தொடுக்குந் தொடையும், வந்த சீரே நாற்கால் தொடுக்குந் தொடையும் முன்னைத் தொடைப்பாற்பட்டு அடங்கும் (எ - று).

யாத்தலெனினும் தொடுத்தலெனினும் ஒன்று.[2]

"அடல்வே லமர் நோக்கி நின்முகங் கண்டே
யுடலு மிரிந்தோடு மூழ்மலரும் பார்க்குங்
கடலுங் கனையிருளு மாம்பலும் பாம்புந்
தடமதிய மாமென்று தாம்"

என்றவழி உடலுங் கடலுமென நிரனிறைத் தொடை மேற் கூறு மாற்றான் எதுகைத் தொடையாய் அடங்கும்.[3]

"பரவை மாக்கடற் றொகுதிரை வரவும்
பண்டைச் செய்தி யின்றிவள் வரவும்"

(யா. வி. ப 155)

என இவ்வாறு நிரனிறுத்தலும் ஒன்று; அஃது இயைபின் பாற்-படுமென்ப. ஒழிந்தனவும் அன்ன.

இரட்டைத்தொடை யென்பது ஒரு சொல்லே நான்கு சீருமாகி வருமென்பது. அஃது,

---

1. பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை, நிரனிறை, இரட்டை என்னும் இவ்-வைந்தும் ஓரடிக்குள் வரும் தொடைவகைகள் என்பதும், இவற்றுள் பின்னர்க் கூறப்பட்ட நிரனிறைத் தொடை, இரட்டைத் தொடையென்பன முற்குறித்த பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை என்னுந்தொடை விகற்பங்களுள் அடங்குதலின், இவ்வைந்தும் மூன்றாகியடங்கும் என்பதும் இளம்பூரணர் கருத்தாகும்.

2. 'இரட்டையாப்பும்' என்புழி 'யாத்தல்' என்னுஞ்சொல் 'தொடுத்தல்' என்ற பொருளிற் பயின்றது.

3. உடலும், கடலும் என இரண்டாமெழுத்து ஒன்றுதலின் எதுகைத் தொடை யாய் அடங்கிற்று.

"ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்"
(யா. வி. ப. 180)

என வரும். இது குறையீற்றிரட்டை[1]; இயைபுத்தொடையாய் அடங்கும்.

"பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவீற் றிருந்த புலவிர்காள் பாடுகோ"
(யா. வி. ப. 181)

என்பது நிறையீற்றிரட்டை[2]; இதுவும் இயைபாய் அடங்கிற்று.

செந்தொடையாய் அடங்குவன உளவேற் கண்டுகொள்க.

[மற்று இவை] இவ்வாறு அடங்குவனவற்றை விதந்தோதுவது என்னையெனின், இவையுந் தொடைப்பாடு கண்டு ஐயுற்றானை ஐயமறுத்தானென்பது[3] எனவே, ஒழிந்த பொருள்கோள் தாமே நின்று தொடைப்பாடு காட்டி ஐயஞ் செய்யாமையின் அவை கூறானாயினானென்பது[4] நிரனிறையாயின் இனைத்தென்றெண்ணி நிறுத்த பொருட்கேற்ப எதிர்பொருளும் எண்ணி நிறுத்துச் செய்யப்படுதலின் அது வேறு தொடையாங்-கொலென்று ஐயஞ்செல்லுமென்பது.

---

1. 'ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்' என்ற அடியில் ஒக்கும் என்ற ஒரு சொல்லே நான்குமுருமாகிவரினும், முதன்மூன்று சீர்களும், 'ஒக்குமே' யென ஏகாரம் பெற' ஈற்றுச்சீர் ஒன்றும் ஏகாரம் பெறாது 'ஒக்கும்' எனக் குறைந்து வந்தமையின் குறையீற்றிரட்டை யெனப்பட்டது.

2. "பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ" என நான்குசீர்களிலும் இறுதி ஓகாரம் நிறைந்து நின்றமையின் இது நிறையீற்றிரட்டை யெனப்பட்டது.

மேற்குறித்த இரட்டைத் தொடையிரண்டும் சீர்தொறும் இறுவாயொன்றினமையின் இயைபுத்தொடையின் பாற்பட்டு அடங்கின.

3. நிரனிறை, இரட்டை என்பன செய்யுளுக்குரியனவாக முற்கூறிய தொடை வகைபோன்று தொடுக்கப்படுதலால் இவையும் செய்யுளுறுப்பாகிய தொடைவகை யாகுமோ என ஐயுற்ற மாணவனை நோக்கி, இவை முற்கூறிய மோனை முதலியன போல வேறுதொடையெனப் பகுத்துரைக்கப்பெறா; முற்கூறிய தொடைவகையுள் அடங்குவனவே என இச்சூத்திரத்தால் ஐயமகற்றினார் ஆசிரியர்.

4. நிரனிறைப்பொருள்கோளல்லாத சுண்ணம் முதலிய ஏனைய பொருள்கோள்வகை செய்யுளில் தாமே தொடையமைப்புக் காட்டி நில்லாமையால் அவை தொடையாகுமோவென ஐயந்தோன்றற்கு இடமின்மையின் ஆசிரியர் அவற்றை இங்குக் கூறாது விட்டார்.

'மொழிந்தவற் றியலான்' எனவே, தனக்கு வேறியல்பில்லாத செந்தொடை நீக்கப்பட்டது.[1] பொழிப்பும் ஒரூஉவும் போல ஓரடியுள் நின்றுந் தொடைமை செய்யினும் அவை முற்றாய் அடங்கும் ஈரடிக் கூட்டத்துத் தத்தம் வகையால் தொடைமை செய்யாவென்பது.[2]　　　　(௯௧)

**நச்சினார்க்கினியம் :**

1. இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியருரை ஏடுகளிற் காணப்படவில்லை.

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) நிரல்நிறைப் பொருள்கோள் வகையால் அமைக்குந் தொடையும் வந்த சீரே அடி முழுவதும் அடுக்கிவரத் தொடுக்கும் இரட்டைத் தொடையும் முன்னர்க் கூறப்பட்ட தொடைகளின் இயல்பின்பாற்பட்டு முடியும் என்பர் ஆசிரியர் எ-று.

நிரல் நிறைத் தொடையாவது, கூற எடுத்துக்கொண்ட பொருள்களை வரிசைப்பட நிறுத்தி அவை கொண்டுமுடியும் பயனிலைகளையும் வரிசைப்பட நிறுத்துதல்.

இரட்டை யாப்பாவது, ஒரு சொல்லே ஓரடி முழுவதும் வரத் தொடுத்தல். முற்றுதல் - முடிதல்; அடங்குதல்.

அஅ. அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை.

**இளம்பூரணம் :**

என்—எனின். மோனை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அடிதோறும் தலையெழுத்து ஒப்பது மோனைத் தொடையாம் என்றவாறு.[3]

---

1. 'மொழிந்தவற்றியலான்முற்றும்' எனவே தமக்கென இலக்கணங்கூறப் பட்ட மோனையெதுகை முதலிய தொடைகளே ஈண்டுக்கொள்ளப்பெற்றன. தனக்கென்று வேறிலக்கணம் பெறாத செந்தொடை இங்கு விலக்கப்பட்டது.

2. நிரனிறை, இரட்டை என்பன, ஓரடிக்குள் வரும் பொழிப்பு, ஒரூஉ முதலிய விகற்பத் தொடைகள் போன்று ஓரடியுள் நின்றே தொடைத்தன்மை செய்யினும், அவை முற்றாய் அடங்குமென்பதும், ஈரடிகள் தம்மிற் கூடிய கூட்டத்து அவை தத்தம் திறத்தால் தொடைத்தன்மை செய்வன அல்ல என்பதும் கருத்து.

3. தலையெழுத்து-முதலெழுத்து. 'எழுவாயெழுத்தொன்றின் 'மோனை' எனவரும் யாப்பருங்கலக்காரிகைத்தொடர் இத்தொல்காப்பிய நூற்பாவையடியொற்றியதாகும்.

அஃதேல் 'அடியுள்ளனவே தளையொடு தொடையே'' (செய்யுளியல். ௯௨) எனவோதி ஈண்டும் அவற்றை யடியினும் வருமென்றல் பொருந்தா தெனின் ஆண்டு மற்றையடியில் வாராதென்றாரல்லர்; அடியல்லாத உரை முதலாயினவற்றில் தளையொடு தொடையில்லை என்பார் 'அடியுள் ளனவே தளையொடு தொடையே' என்றார்[1]

''மாவும் புள்ளும் பதிவயின் படர
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப
மாலை தொடுத்த கோதையுங் கமழ
மாலை வந்த வாடையும்
மாயோய் நின்வயின் புறத்திறுத் தற்றே''
(யாப். வி. ப. ௧௯0)

என வரும். (அஅ)

**பேராசிரியம் :**

இது, நிறுத்த முறையானே மோனைத்தொடையாமா-றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அடிதொறும் முதற்கண் ஓரெழுத்தே வரத்தொடுப்பது மோனைத்தொடையாம் (எ-று)

''கண்டற் கானற் குருகின மொலிப்பக்
கரையா டலவ னளைவயிற் செறிய'' (அகம் 260)

என்பது அடிதொறும் முதலெழுத்தொன்றி மோனைத்தொடை வந்தவாறு.[2]

---

1. 'அடியுள் ளனவே தளையொடு தொடையே' (செய்யுளியல்-௯௨) என ஓரடிக்குள்ளேயே தளையும் தொடையும் வரும் எனக்கூறிய ஆசிரியர், இச்சூத்திரத்தில் 'அடிதொறுத் தலையெழுத்து ஒப்பது மோனை' என மோனை முதலிய தொடைகள் மற்றையடியினும் வரும் என்றல் பொருந்தாது என்பார் கூற்றை-முன்மொழிந்துகொண்டு, 'அடியுள் ளனவே தளையொடு தொடையே' என்ற நூற்பாவுக்கு ஓரடிக்குள்ளேயே தளையும் தொடையும் வரும்; மற்றையடிக்கண் வருதல் இல்லை' என்பது பொருளன்று எனவும், 'அடிவரையறை யில்லாத உரை முதலிய யாப்புவகைகளுள் தளையும் தொடையும் கோடல் இல்லை' என்பதே அச்சூத்திரத்தின் பொருளெனவும் விளக்கும்முறையில் அமைந்தது இவ்வுரைப்-பகுதியாகும்.

2. தலையெழுத்து - சீரின் முதலெழுத்து.

"கோதை மார்பிற் கோதை யானுங்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்"
(புறம். 48)

என்பதும் அது

இனிவருந் தொடையும் இதுவுமெல்லாம் அறுநூற்றிருபத்தைந்தடிக்கு உரியவாகியும், பிறவடிக்கு உரியவாகியும், வஞ்சியடிக் குரியவாகியும், குறளடி சிந்தடி நெடிலடி கழிநெடிலடியெனும் நால்வகையடிக்கு உரியவாகியும் வருமெனக்கொள்க.[1] அற்றன்று, அறுநூற்றிருபத்தைந்தடிக்கும் மோனைத் தொடை ஒன்றொன்றாகச் சென்று பெருகி அறுநூற்றிருபத்தைந்து தொடையாமென்பது.[2] மற்று அடியிரண் டியைந்தவழி யன்றே தொடையாவது? இவை அறுநூற்றிருபத்தைந்து தொடையாங்கால் இஃது ஓரடிக்கண்ணே வரல்வேண்டும்; வேண்டவே, அடிதொறுந் தலையெழுத்தொப்பது மோனையென்றதனோடு மாறு கொள்ளும் பிறவெனின், இது நோக்கியன்றே.

'அடியுள் ளனவே தளையொடு தொடையே' (தொல்-செய். 33)

எனக் கூறி,

'அடியிறந்து வருதலில்' (தொல்-செய். 34)

என்பானாயிற்று. எனவே, அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஒன்றனையே இரட்டித்துத் தொடை கொள்க வென்பது பெற்றாமன்றே, ஈண்டு அடிதொறுமெனப் பன்மை கூறவே அவற்றையே இரட்டித்தலும் பிற அடிவந்து தொடுத்தலும் எல்லாம் அடங்கக் கூறினான் ஈண்டென்பது.

"மெய்பெறு மரபிற் றொடைவகை" (தொல்-செய் ௭௧) என மேல் வரையறுக்கப்படுந் தொகை பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டனுள்ளும், மோனைத்தொடை வருங்கால் மூன்று

1. அறுநூற்றிருபத்தைந்தடிகள் என்பன நாற்சீரடிதன்னையே பதினேழ் நிலத்து ஐவகையடிகளாக முன்னர் எழுத்தெண்ணி வகுக்கப்பெற்ற கட்டளையடிகள், பிறவடியாவன அவ்வாறு எழுத்தெண்ணி வகுக்கப்பெறாத சீர்வகை அளவடிகள். வஞ்சியடிக்குரியவாகி வருவனஎன்றது, எழுத்தெண்ணி வகுக்கப்பெற்ற நேர்நிலை வஞ்சியடிகளை. நால்வகை யடிகள் என்றது நாற்சீரடியாகிய அளவடி நீங்கலாகவுள்ள குறள், சிந்து, நெடில், கழிநெடிலடி என்னும் சீர்வகை யடிகளை.

2. அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஒவ்வோரடியினையும் இரட்டித்துத் தொடை கொள்ள மோனைத்தொடை அறுநூற்றிருபத்தைந்தாகும்.

பாவிற்கும் ஓதிய எழுபத்தெட்டுச் சீரினும்[1] வரப்பெறும்; அவ்வாறு வருங்கால்,

"அடியுள் ளனவே தளையொடு தொடையே"

என்ற தளையிலக்கணமும்,

"அடியிறந்து வருதலில்"

எனப்படுமாகலான், அவ்வடி இரண்டன் கூட்டத்துத் தளைவழுக் களையல் வேண்டும். களையுங்கால் ஆசிரியத்து நாற்பத்தொன்றும் வெள்ளையடியுட் பதினெட்டும் ஆக ஐம்பத்தொன்பது நிலங் களையப்படும். கலிப்பாவிற்கு அவ்வாறு களையவேண்டுவதில்லை யென்பது.

ஆசிரியத்து நாற்பத்தொரு நிலமாவன : தனக்கு ஓதிய இருபத்தேழு சீரும் பதினான்கு நேராதியும் பதின்மூன்று நிரையாதியுமாதலான். அவற்றுள் நேராதி பதினான்கும் ஓரோவொன்று பன்னிரண்டடி உறழுங்காற் பெருகிய நிலத்தின்[2] இவ்விரண்டடியாக இருபத்தெட்டடியும், இனி நிரையாதி பதின்மூன்றற்குஞ் சுருங்கிய நிலத்தின் ஓரோவொன்றாகப் பதின்மூன்றடியுமென நாற்பத்தோரடியுந் தம்மொடு தாம்வந் திரட்டிக்குங்கால் தளை வழுப்படுதலின், அவை தொடுக்கப்படாவென்பது.[3]

இனி, வெண்பாவடி உறழுஞ்சீர் இருபத்தேழினுள்ளும் நேராதிச்சீர் பதினான்குஞ் சுருங்கிய நிலத்துள் ஒரொன்றாகப் பதினான்கடியும், நிரையாதிச்சீர் பதின் மூன்றனுள் ஒன்பதொழித்து ஒழிந்த நான்கு சீரும் நின்றுறழ்ந்த அடியுட்

1. ஆசிரியத்துள் இயற்சீர் பத்தொன்பதும், ஆசிரியவுரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் என 27. வெண்பாவினுள் ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒழித்து ஒழிந்த சீர் இருபத்து மூன்றும், வெண்பாவுரிச்சீர் நான்கும் ஆக 27.

கலிப்பாவிற்கு நேரீற்றியற்சீர் மூன்றொழித்து ஒழிந்த இயற்சீர் பதினாறும் ஆசிரியவுரிச்சீர் நான்கும் வெண்சீர் நான்கும் என 24. ஆக மூன்று பாவிற்கும் ஓதிய சீர்கள் எழுபத்தெட்டு.

2. பெருகிய நிலமாவது, எழுத்துக்கள் எண்ணில் மிகுந்தநிலம். நேர்முதற் சீர் பதினான்கில் பெருகிய நிலத்தில் இவ்விரண்டாக இருபத்தெட்டடியும், நிரை முதற் சீர் பதின்மூன்றனுள் சுருங்கிய நிலத்தில் ஒவ்வொன்றாகப் பதின்மூன்றடியும் ஆக நாற்பத்தொருநிலம் வழுவென்று களையப்படும்.

3. இவை நாற்பத்தோரடியும் தம்மொடு தாம் வந்து தொடைப்படுங்கால் எழுத்துக்களின் மிகுதிகுறைவுபற்றித் தளைவழுவுமாதலின் அவை 41 நிலமும் ஆசிரியத்துள் மோனைத் தொடைப்படத் தொடுக்கப்பெறா என்பதாம்.

பதினான்கெழுத்தடி பெருகியநிலத்துள் நான்குமாகப் பதினெட்டடியுந் தம்மொடு தம்மை இரட்டித்துத் தொடுப்பத் தனை வழுவு மாகலிற் களையப்படுமென்பது.[1]

நிரையாதிச்சீர் நான்குமாவன:

1வரகு, 2வலியது, 3கடியாறு, 4விறகுதீ என்பன.

ஒழிந்த நிரையாதி ஒன்பது சீரும் நின்று உறழ்ந்த அடி எஞ்ஞான்றுங் களையப்படாது தொடைப்படுமென்பது. அவை ஒன்பதுமாவன:

1அரவு, 2புளிமா, 3கணவிரி, 4பெருநாணு, 5உருமுத்தீ 6மழகளிறு, 7நரையுருமு, 8புலிசெல்வாய்,[2] 9குளிறுபுலி என விவை.

1வரகு, 2நரையுருமு, 3காருருமு, 4பாதிரி எனவும்,
1வலியது, 2கடியாறு, 3காருருமு, 4பாதிரி எனவும்,
1கடியாறு, 2தேமா, 3நரையுருமு, 4காருருமு எனவும்,
1விறகுதீ, 2தேமா, 3புலிவருவாய், 4காருருமு எனவும்,

இப்பதினான்கெழுத்தடி நான்குந் தொடுக்குமாறில்லை.[3] ஒழிந்த நேராதியும் இவ்வாறே சுருங்கினநிலத்து உறழ்ந்தவடி தொடுக்கு மாறில்லை யென்பதூஉங் கண்டுகொள்க.

இனிக், களையப்படாத நிரைமுதற்சீர் ஒன்பானுள்ளுஞ் சுருங்கிய எழுத்துச்சீர் ஒன்பது. பெருகிய எழுத்துச்சீர்,

1. வெண்பாவடி உறழுஞ்சீர் இருபத்தேழினுள் நேர்முதற்சீர் பதினான்கும் எழுத்துச்சுருங்கிய நிலத்துள் ஒரொன்றாகப் பதினான்-கடியும், நிரைமுதற்சீர் பதின்மூன்றனுள் வரகு, வலியது, கடியாறு, விறகுதீ என்பன நான்கும் நின்றுறழ்ந்து, பதினான்கெழுத்தடியாய்ப் பெருகிய நிலத்துள் வரும் நான்கடியும் ஆகப் பதினெட்டடிகளும் தம்மொடு தம்மை இரட்டித்துத் தொடுப்பத் தளை வழுப்படுவன,

2. ஆசிரியப்பாவில் நாற்பத்தொன்றும் வெண்பாவில் பதினெட்டும் ஆக ஐம்பத்தொன்பது நிலம் வழுவெனக் களையப்படும்.

புலிசெல்வாய் என்பது 'புலிவருவாய்' என்றிருத்தல் வேண்டும் எனத் திருத்தப்பெற்றது.

3. இங்கெடுத்துக்காட்டிய பதினான்கெழுத்தடிகள் நான்கும் இரண்டடி-யாய்த் தம்முள் தொடைப்படுங்கால் விளமுன்நிரையும் காய்முன்நிரையும் ஆகி வெண்டளை வழுவுதலால் தொடுக்கு மாறில்லை என்றார்.

1நரையுருமு, 2புலிவருவாயென்பன.

1அரவு, 2வரகு, 3வரகு, 4வரகு
எனவும்,

1அரவு, 2புலிவருவாய், 3காருருமு, 4தேமா

எனவும் இவை முதலும் முடிவுங்காட்டிய அடிக்கண் அவை தம்மொடு தம்மைத் தொடுக்கப்படுதலிற் களையுநிலம் இலவாயின.

1நரையுருமு, 2வண்டு, 3வரகு, 4வரகு
எனவும்

1நரையுருமு, 2காருருமு, 3பாதிரி, 4தேமா

எனவும் ஐயெழுத்துச்சீர் முதலும் முடிவுங் காட்டிய அடிகளையப்படாது தொடைப்படுமென்பது. புலிவருவாய்க்கும் இஃதொக்கும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

இவ்வாற்றான் அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஐம்பத்தொன்பது நிலங்களைந்து ஒழிந்த அடி ஐஞ்ஞூற்றறுபத்தாறானும் பெற்ற மோனைத்தொடை ஐஞ்ஞூற்றறுபத்தாறெனப்படும்.

இவ்வாறே தலையாகெதுகை, அடியெதுகை, எழுத்தடியியைபு சொல்லடியியைபு என்னும் நான்கு தொடைக்குங் களைவன களைந்து தொகை கூட்டிக்கொள்க.

இவற்றுள், ஆசிரியப்பாவினுள் வரும் அடிமோனைத்தொடை இருநூற்றெண்பத்துமூன்றும், வெண்டொடை நூற்றறுபத்துமூன்றும், கலிப்பாவிற்குரிய தொடை நூற்றிருபதுமாகி மூன்றுபாவிற்குந் தொகுப்பத் தொடை ஐஞ்ஞூற்றறுபத்தாறாம் ஒழிந்த நான்கற்கும் இவ்வாறே கொள்க. கொள்ளவே இத்தொடை ஐந்தனானும் பெற்ற தொடை இரண்டாயிரத்தெண்ணூற்று முப்பதாம் (2830)[1] இவற்றுள் அகவற்றொடை ஆயிரத்து

---

1. 625 அடியுள், தளைவழுவும்நிலம் 59-களைந்து ஒழிந்த 566 அடிகளாலும் பெற்ற மோனைத் தொடை 566

| | |
|---|---|
| தலையாகெதுகை | 566 |
| அடியெதுகை | 566 |
| எழுத்தடியியைபு | 566 |
| சொல்லடியியைபு | 566 |
| இவ்வைந்து தொடைகளாலும் பெற்ற தொடைகள் | 2830 |

நானூற்றொருபத்தைந்து; வெண்டொடை எண்ணூற்றொருபத்தைந்து; கலித்தொடை அறுநூற்றெனக் கொள்க.

"அடியெதுகை மோனை தலையா கெதுகை
[1]யடியியைபு தாமிரண்டென் றைந்துங்-கடியப்
படுநில மைம்பது மொன்பது மென்ப
வெழுபத்தெண் சீரடிக்கு மேற்று"

எனவும்,

"ஒழிந்த நிலத்து[2] நிரைபதின்மூன் றொல்லா
தொழிந்த வுயர்ந்துழி யொன்றாக் — கழிந்த
நிரையொன்றாய் நேரிரண்டாய் நாற்பத்தொன் றாகு
மவையகவற் காகா தன"

எனவும்,

"வரகு வலியது வான்கடி யாறு
விறகுதீ வெள்ளைக்கு மேனிலத்து ளொன்றா
வழிவழி[3] நேர்முதற்சீ ரேழிரண்டு மாக
வவையைம்பத் தொன்பா னகற்று"

எனவும்,

"ஐம்பத்தொன் பானன்றி யைஞ்ஞூற் றறுபத்தா
றொன்றற் குரியவா றொட்டு"

எனவும்,

"ஐந்து தொடையா னகவற் றொடையிருநூற்
றெண்பத்து மூன்றா மெனமொழிப வொன்-
றொன்றா-
வெள்ளைத் தொடைநூற் றறுபத்து மூன்றாகுந்
துள்ளற்கு நூற்றிருப தாம்"

எனவுஞ்,

"சொல்லி னவைதன் றொடையிரண் டாயிரத்
தெண்ணூற்று முப்பஃ தெனல்"

எனவும், இவ்வாறே விரித்துரைத்துக்கொள்க. (கூஉ.)

---

1. எழுத்தடியியைபு, சொல்லடியியைபு என அடியியைபுத் தொடை இரண்டாகும்.

2. ஒழிந்த நிலம்-எழுத்துச் சுருங்கியநிலம். 'இழிந்த நிலம் என்றிருத்தல் வேண்டும்' என்பர் சி. கணேசையர்.

3. 'வழிவழி' என்புழி முதல் நின்ற வகரத்தை உடம்படு மெய்யாகக் கொண்டு 'அழிவழி-சுருங்கிய நிலத்து' எனப்பொருளுரைத்தல் பொருந்தும்.

**நச்சினார்க்கினியம் :**

இது மோனையிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) அடிதோறும் முதற்கண் ஒரெழுத்துவரத் தொடுப்பது மோனைத்தொடையாம். எ-று.

முன்னர்

“அடியுள் ளனவே தளையொடு தொடையே” (செய் ௩௩)

என்பதனான் ஓரடிக்கண்ணே தளையுந்தொடையும் வருமென்பது பெறுதலானும், ஈண்டு அடிதொறும் எனப் பன்மை கூறுதலானும், ஈரடிக்கூட்டத்துந் தளையுந் தொடையும் வருமென்பது பெறுதலானும் ஓரடிக்கண்ணும் ஈரடிக்கண்ணும் தளையுந் தொடையுங் கோடல் வேண்டுமென்றுணர்க. ‘தலையெழுத்தொப்பது’ என்றற்கு, அடிகளின் முதலெழுத்தும் சீர்களின் முதலெழுத்தும் என்பது பொருளாம். அடிதொறுமென்பது ஈரடியையும் ஓரடியையும் உணர்த்தலின், அடிமோனையும் இணைமோனையும் பொழிப்புமோனையும் ஒரூஉமோனையும் கூழைமோனையும் மேற்கதுவாய்மோனையும் கீழ்க்கதுவாய்மோனையும் முற்றுமோனையுமென மோனை எண்வகைப்படுமாயிற்று.

‘பொழிப்பு மொரூஉவும்’ (செய் ௬௦)

என்னுஞ் சூத்திரத்தான், இவ்வாசிரியர் கொண்ட பொழிப்பும் ஒரூஉவுங் கோடற்கு அஃது இணைகொள்ளுமாறென்னையெனின்:— அச்சூத்திரத்து ‘அவையுமாருளவே’ எனச் சூத்திரஞ் செய்தமையான் அவையும் முன்பிறவும் ஓரடித்தொடையுமுள என்று பொருடருதலிற் றொடைக்குச் சிறந்துதோன்றும் வினை முதலியனவுங் கோடும். உ—ம்.

‘கான மஞ்ஞை யீன்ற முட்டை
காத லின்றி வீசு மந்தி’

இஃது ஈரடியும் எழுத்தொத்தலிற் றன்னொடுதான்வந்து தொடுத்த கட்டளை அடிமோனை.

“கோதை மார்பிற் கோதை யானுங்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்”

இஃது எழுத்தொவ்வாமையிற் பிறவடி தொடுத்த கட்டளை யடிமோனை.

'யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமோ ராடுகள மகளே' (குறுந்தொகை ௩௧)

இஃது இருவகையுந் தொடுத்தது.

'கண்டற் கானற் குருகின மொலிப்பக்
கரையா டலவன் வளைவயிற் செறிய'

இது சீர்வகையடிதொடுத்தது.

'உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை'
(புறம் ௩)

ஒடுங்கா வொலிகடற் சேர்ப்ப னெடுந்தேர்'

இவை கட்டளையிணைமோனை.

'உலக முவப்ப வலனேர்பு திரிதரு'
(திருமுருகாற்றுப்படை)

இது சீர்வகையிணைமோனை.

'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை'
(திருமுருகாற்றுப்படை)

'கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு'
(திருக்குறள் ௩௯௩)

இவை கட்டளைப் பொழிப்புமோனை.

'வெயிலுறுப் புற்ற வெம்பரல் கிழிப்ப'

இது சீர்வகைப் பொழிப்பு மோனை.

'வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்' (புறம் ௬)

'வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்'
(நாலடி, கடவுள்வாழ்த்து)

இவை கட்டளை யொரூஉமோனை.

'கல்லாதவரு நனிநல்லர் கற்றார்முன்'
(திருக்குறள்-௪0௩)

இது சீர்வகை யொரூஉமோனை.

'வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்'

'அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறு'
(நாலடி, பிறனில்விழையாமை)

இவை கட்டளைக் கூழைமோனை.

'மடக்கண் மயிலின மறலி யாங்கு'
இது சீர்வகைக்கூழைமோனை.

'கந்திற் பிணிப்பர் களிற்றைக் கதந்தவிர'
(நான்மணி-கஉ)

'பயவார்கட் செல்வம் பரம்பப் பயின்கொல்'
(நாலடி, நன்றியில்செல்வம்)

இவை மேற்கதுவாய் மோனை.

'எல்லை யெம்மொடு கழிப்பி யெல்லுற'
'நல்லா ரிருவ ருவப்ப நயமிலார்' (நாலடி)

இவை கீழ்க்கதுவாய்மோனை.

'ஒல்லா தொல்வ தென்றலு மொல்லுவது'
(புறம்-கசுசு

இது சீர்வகைக் கீழ்க்கதுவாய்மோனை.

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்'
(திருக்குறள்-௩௯௧)

இது முற்றுமோனை. இது சீர்வகை முற்றுமோனை.

இனிக் கலிக்கு

'இணையிரண் டியைந்தொத்த முகைநாப்பட் பிறிதியாதும்
(கலி-மருதம்-கஉ)

இஃது இணைமோனை.

'அரிமதர் மழைக்கண்ணீ ரலர்முலைமேற் றெறிப்பபோல்'
இது பொழிப்புமோனை.

'பெண்டெனப் பிறர்கூறும் பழிமாறப் பெறுகற்பின்'
(கலி-மருதம்-கஉ)

இஃது ஒரூஉமோனை.

'கழிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேல்'
இது கூழைமோனை.

'அளியென வுடையேன்யா னவலங்கொண் டழிவலோ'
(கலி, பாலை, கக)

இது மேற்கதுவாய்மோனை.

'முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழல்'
(கலி, பாலை, உசு)

இது சீர்வகை மேற்கதுவாய்மோனை.

'மணிநிற மலர்ப்பொய்கை வளர்ந்தருளு மயிலோனை'
இது கீழ்க்கதுவாய்மோனை.

'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்'
(கலி, பாலை-கO)

இது முற்றுமோனை. இவற்றுக்குச் சீர்வகைபலவும் வருமாறுணர்க. இச்சூத்திர முதலாகக் கூறுங் கட்டளையடிக்குத் தொடைகொள்ளுங்காற் றளைவழுக் கழித்துத் தொடைகொள்ளுமாறு 'மெய்பெறு மரபின்' (செய்-கOக) என்பதனுட் காட்டுதும்.

**ஆய்வுரை :**

இது, மோனைத் தொடையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) செய்யுளின் அடிதொறும் முதலெழுத்து ஒத்து அமைவது மோனைத் தொடையாம் எ-று.

தலையெழுத்து - சீரின் முதலெழுத்து.

அக. அஃதொழித் தொன்றின் எதுகை ஆகும்.

**இளம்பூரணம் :**

என் — எனின். எதுகை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அடிதொறும் முதலெழுத்தொன்றாமல் இரண்டாமெழுத்து ஒன்றின் எதுகை யாகும் என்றவாறு.

அஃதேல் முதலெழுத்தும் ஒன்றி இரண்டாமெழுத்தும் ஒன்றில் யாதாகு மெனின், முந்துற்ற மோனையாற் பெயரிட்டு வழங்கப்படும் என்க[1].

உதாரணம்

"அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே"
(கலித். கக)

என வரும். (அக)

1. முதலெழுத்து அளவொத்துநிற்க இரண்டாமெழுத்து ஒன்றுதலே எதுகைத் தொடையாம் எனவும், முதலெழுத்தும் ஒன்றி இரண்டாமெழுத்தும் ஒன்றி வருமாயின் அது மோனைத் தொடையெனவே வழங்கப்படும் எனவும் கொள்க.

பேராசிரியம் :

இஃது, இரண்டாமெண்ணு முறைமைக்கணின்ற எதுகைத் தொடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டடியினும் முதனின்ற சீர் முதலெழுத்திரண்டும் ஒழிய அல்லனவெல்லாம் ஒன்றிவருதலும் ஒரோவெழுத்தே ஒன்றிவருதலுமென இங்ஙனங் கூறியவற்றுள் அஃதொழித்து அச்சீர் முழுதொன்றில் தலையாகெதுகையென்றும், இரண்டாமெழுத்தொன்றில் அடியாகெதுகை யென்றும் வழங்கப்படும். அயலெழுத்தொன்றினென்னாது முதலெழுத்தினைச் சுட்டிக் கூறுதலென்னையெனின், இவ்வாறு எதுகையாங்கால் முதலெழுத்துக்களின் மாத்திரை தம்மின் ஒத்துவரல் வேண்டுமென்றற்குக் கூறினானென்பது.[1]

உதாரணம்

"மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்"
(தொல் அகத்-5)

என்பது தலையாகெதுகை.

அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி"
(பத்துப் - பெரும்பாண்-1-2)

என்பது அடியெதுகை. இதனை இடையாகெதுகை யெனவும் அமையும். ஒழிந்தன கடையாகெதுகை யெனப்படும் பிறவும் அன்ன.

அஃதேல், தலையாகெதுகை யென்றதுபோலத் தலையாகு மோனையுங் கொள்ளாமோவெனின், அற்றன்று; ஆசிரியன்,

"அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை"
(தொல் செய் 92).

---

1. 'அயலெழுத்தொன்றன் எதுகை' என்னாது 'அஃதொழித்தொன்றின் எதுகையாகும்' என முதலெழுத்தினைச் சுட்டிக்கூறியது முதலெழுத்து மாத்திரையளவு ஒத்துநிற்க இரண்டாமெழுத்து ஒன்றிவருதலே எதுகைத் தொடையாம் என அறிவித்திற்பொருட்டு என்பதாம். சீர்முழுதும் ஒன்றிவருவது தலையாகெதுகை. இரண்டாமெழுத்து ஒன்றி வருவது அடியெதுகை. இஃது இடையாகெதுகையெனவும் வழங்கப்பெறும். ஒழிந்தன கடையாகெதுகை யெனப்படும்.

என்றானாகலின், அடிமோனையே கொண்டாமென்பது.[1] என்றார்க்கு,

"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்" (நாலடி 39)

என்றவழி. அடிதோறும் ஒருசொல்லே வந்து தொடையாயிற் றன்றோவெனின், அஃது இரண்டடிக்கண்ணே வந்ததன்று, செய் யுண்முழுவதும் பயின்றுவந்து சுவைமைப்படாதாகலின் வழி மோனைப்பாற் பட்டடங்கும் என்க.[2] இச்சூத்திரத்துக் காட்டப் பட்ட தொடை இரண்டும் மூன்று பாவிற்கும் ஓதிய அறுநூற் றிருபத்தைந்து அடியோடுங்கூட்டித் தொகைசொல்லுமாறு மேலைச்சூத்திரத் துரைக்கப்பட்டது.[3] (கூஉ)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எதுகை கூறுகின்றது.

(இ—ள்.) முற்கூறிய முதலெழுத்தினையொழித்து இரண்டடி-யினும், சீர் முழுதும் ஒன்றினும், இரண்டாமெழுத்தே ஒன்றினும், ஓரடிக்கண் முதலிருசீர்க்கண் இரண்டாமெழுத்து ஒன்றினும், முதற்சீரினும் மூன்றாஞ்சீரினும் இரண்டாமெழுத்து ஒன்றினும், முதற்சீரினும் நான்காஞ்சீரினும் இரண்டாமெழுத்து ஒன்றினும், முதற்சீரொழித்து ஏனைய ஒன்றினும் முதலயற் சீரொழித்து

1. 'அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை' என ஆசிரியர் அடி-மோனையே கொண்டமையால் அடியெதுகையின் வேறாகத் தலையாகெதுகை கொண்டாற்போன்று அடிமோனையின் வேறாகத் தலையாகுமோனையென்ற-தொருவகையினை யாம் ஏற்றுக் கொள்ளவில்லை; அடிமோனை யொன்றே கொண்டாம் என்றார் பேராசிரியர்.

2. 'வைகலும் வைகல்' என்ற பாடலில் 'வைகல்' என்ற ஒருசொல்லே செய்யுள் முழுதும் பயின்று வருதல் பொருளுணர்ச்சிக்குச் சுவைதராதாகலின் அப் பாடலிற் பயிலும் மோனை வழிமோனையின்பாற்படும். இரண்டடிக்கண் அமைவதே அடிமோனையெனப்படும்.

3. தலையாகெதுகை, அடியெதுகை யெனப்பட்ட எதுகைத் தொடை-யிரண்டும் மூன்று பாவிற்கும் ஓதிய 625 அடியோடுங் கூட்டித் தொகைகொள்ளும் முறை முன்னைச் சூத்திரவுரையில் (செய்யுளியல் - கூஉ) வகுத்துரைக்கப்-பட்டது.

ஏனைய ஒன்றினும், ஈற்றயற் சீரொழித்து ஏனைய ஒன்றினும், நாற்சீரும் ஒன்றினும் தலையாகெதுகை, அடியெதுகை, இணையெதுகை, பொழிப்பெதுகை, ஒரூஉவெதுகை, கூழையெதுகை, மேற்கதுவாயெதுகை, கீழ்க்கதுவா யெதுகை, முற்றெதுகை எனக்கூறப்படும். எ-று.

அயலெழுத் தொன்றின் என்னாது முதலெழுத்தைச் சுட்டியவதனான், முதலெழுத்தின் மாத்திரை தம்முள் ஒத்தல்வேண்டு-மென்றுகொள்க.

உதாரணம்:

'மாயோன் மார்பி னாரம் போலுஞ்
சேயோன் சேர்ந்த வெற்பிற் றீநீர்'

இது தம்மொடு தாம்வந்த கட்டளைத் தலையாகெதுகை.

''வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை
யாநிலம்'' (நாலடி, கடவுள்வாழ்த்து)

இது தம்மொடு தாம்வந்த கட்டளை அடியெதுகை.

'சிலைவிலங்கு நீள்புருவஞ் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்''

இது சீர்வகையடிக் கட்டளையொடு தொடுத்த தலையா-கெதுகை.

'அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பரிதி'
(பெரும்பாணாற்றுப்படை)

இது கட்டளையடிச் சீர்வகையடியோடு தொடுத்த அடியெதுகை.

'தலையெழுத் தொப்பது மோனை' (செய் கூஉ)

என்றலிற் றலையாகுமோனை இவ்வாசிரியர் கொள்ளார்.

'வைகலும் வைகல்' (நாலடி-அறன்வலியுறுத்தல்)

என்னும் வெண்பாவிற் சீர்முழுதும் வருதலின் வழிமோனைப்-பாற்படும்.

'புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ'
(பதிற்றுப்பத்து எக)

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்' (திருக்குறள்-உ0ச)

இவை இணையெதுகை.

'பொன்னேர் மேனி நன்னிறஞ் சிதைத்தோர்'
'உருவக் கடுந்தேர் முருக்கிமற் றத்தேர்'

இவை பொழிப்பெதுகை.

'உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை'
'பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசை'
(சிறுபாணாற்றுப்படை)

'வாண்மாய் குருதி களிறுழக்கத் தாண்மாய்ந்து'
(களவழி - க)

இவை ஒரூஉவெதுகை.

'இன்ன ரென்னா தின்பம் வெஃகி'
'குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து'
(திருமுருகாற்றுப்படை)

இவை கூழையெதுகை.

'பொன்னேர் மேனி துன்னினர்'
'கொண்டுபா ராட்டுவார் கண்டிலர்கொல் மண்டி'
(நாலடி, தூஉய்தன்மை)

இவை மேற்கதுவாயெதுகை.

'உள்ளி னுள்ளம் வேமே யுள்ளாது'
(குறுந்தொகை-க0௨)

''படியை மடியகத் திட்டா னடியினான்'
(நான்மணி, கடவுள்வாழ்த்து)

இவை கீழ்க்கதுவாயெதுகை.

'கன்னிப் புன்னை யன்னந் துன்னும்'

'இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது'
(நாலடி, அறன்வலியுறுத்தல்)

இவை முற்றெதுகை.

இனிக்கலிக்கு -

'அடங்காதார் மிடல்சாய யமரர்வந் திரத்தலின்'
'எறிதிரை செறிகையான் மிகவாங்கி மீதோங்கி'

இவை இணையெதுகை.

'பெருவரை யுறழ்மார்பிற் றிருவோங்கு கரியோனை'

இது பொழிப்பெதுகை.

'அணிவேங்கை செறிநீழற் கிளியோப்பு மணிநிறத்தாள்

இஃது ஒரூஉவெதுகை.

'மணிவரை யணிமார்பிற் பணிமேவும் பெரியோனை'

இது கூழையெதுகை.

'அலைகடற் றுயிலுணரா மலையெடுத்த நிலையோனை

இது மேற்கதுவாயெதுகை.

'கதிபல விதியாற்சென் றழுந்தாமற் றுதித்தேத்தி

இது கீழ்க்கதுவாயெதுகை.

'திரிபுர மெரிசூழ வரிவாங்கும் பெரியோனை'

இது முற்றெதுகை [1]

**ஆய்வுரை :**

இஃது எதுகைத் தொடையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) முதலெழுத்து அளவொத்து நிற்க அதனை-யொழித்து இரண்டாமெழுத்து முதலியன ஒன்றி வரின் எதுகை-யாகும் எ-று.

**கூ௰ ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய.[2]**

**இளம்பூரணம்:**

என்—எனின். எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மோனைத் தொடைக்கும் எதுகைத் தொடைக்கும் எடுத்த வெழுத்தே வருதலன்றி வருக்க வெழுத்தும் உரிய என்றவாறு.

"பகலே, பல்பூங் கானற் கிள்ளை ஓப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇய
பின்னுப்பிணி அவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படக் கருதி" (யாப். வி. ப. கநரு)

என்பது வருக்க மோனை.

---

1. பேராசிரியர் உரையைத் தழுவியது.

2. அ+இருதொடை=ஆயிருதொடை எனச் சுட்டு நீண்டது. அவ்விரு தொடையாவன: முற்கூறிய மோனையும் எதுகையும். கிளையெழுத்து-வருக்க-வெழுத்து. கிளையெழுத்து ஒன்றிவருவன வருக்கமோனை யெனவும் வருக்க வெதுகையெனவும் வழங்கப்படும் என்பதாம்.

"ஆறறி அந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரம் தீமடுத்துக்
கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய் கேள்இனி"
(கலித். கடவுள் வாழ்த்து)
(கூ0)

என்பது வருக்கவெதுகை. பிறவுமன்ன.

**பேராசிரியம்:**

இது, மேற்கூறிய தொடைப்பாற்பட்டு வருவன வேறுபல தொடைகண்டு அவை கூறுகின்றது.

(இ-ள்.) ஆயிரு தொடையென்பன மோனையும் எதுகையும்; இவை இரண்டற்கும் கிளையெழுத்துக்களும் ஒன்றிவரப் பெறும் (எ - று).

இதன்கருத்து: அங்ஙனங் கிளையாகிவந்த வேறுபாட்டான் எல்லாத்தொடையும் வேறு பலவாமென்றவாறு.[1] கிளையெழுத்தென்பன வருக்கமும் நெடிலும் அனுவும் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் உயிருமெனவிவை. இவையெல்லாம் ஒரோகிளைமை யுடைமையிற் கிளையெனப்பட்டன.[2]

இனி, ஆசெதுகையும் மூன்றாமெழுத்தொன்றெதுகையும் அடியெதுகைக் குரித்தாகிய இரண்டாமெழுத்தின் முன்னும் பின்னுந் தொடர்ந்துநிற்றலின் அவையுங் கிளையெனினும் அமையும்; அற்றன்று; அடிமோனையுந் தலையாகெதுகையும் அடியெதுகையும் 'வந்து நுந்தை' யென்னுஞ் சீர்க்கண் மூன்றாமெழுத்தொன்றி வருதல்,

"மெய்பெறு மரபிற் றொடை" (தொல்-செய்-101)

1. 'மோனை' எதுகை என்னும் இருதொடைகட்கும் கூறப்பட்ட எழுத்துக் களேயன்றி அவற்றுக்கு உறவாகியோத்த கிளையெழுத்துக்களும் ஒன்றிவரப் பெறும்' என இச்சூத்திரத்திற் கூறவே, அவ்விரு தொடைகளின் எண்ணிக்கையும் முற்கூறியவற்றின் அடங்காது வேறுபலவாய் விரியும் என்பது புலனாம்.

2. வருக்கம் என்றது, மெய்யும் உயிரும் கூடியநிலையில், ககர வருக்கம் சகர வருக்கம் என்றாற்போன்று மெய்யின் பெயரால் வழங்கப்பெறும் தொகுப்பாகிய உறவுநிலையினை. வருக்கம், நெடில், அனு, வலி, மெலி, இடையினம், உயிரிர் என இவ்வாறு எழுத்துக்களைப் பகுத்துக்கூறும் பகுப்பனைத்தும் ஒரு வகையால் எழுத்திற்கமைந்த கிளைமை (உறவு) பற்றியன வாதலால் கிளை யெனப்பட்டன.

எனப்பட்டமையின், ஆண்டு அது கிளையாகாது; [1]'மெய்த்தல் ஒத்த'லென்ற வழியன்றி 'ஈதல் காய்த'லென்றவழி நெடின் மோனையாய்த் திரிபுபடுதலின் ஆசிடையெதுகையுங் கிளையாகாது.[2] 'உரிய' வென்றதனானே இவை அத்துணையுரியவன்றாமெனக்கொள்க.[3] மற்று 'நுந்தை தந்தை' யென்றவழி, [4]ஆண்டு. முதனின்ற வழிமோனை சிறந்ததென்னாமோவெனின் என்னாமன்றே, இரண்டாயவழி ஈரெழுத்துத் தேமாவாகலே பெரும் பான்மையாகலின். இதனானே, இது தலையாகுமோனையெனத் தலைமைகூறப் படாததூஉமாயிற்று;[5] என்னை? தொடையென்பன 'பூத்தொடை' போலச் செய்யுட்குப் பொலிவுசெய்ய வேண்டுமாகலின். இக்கருத்தினானன்றே சொல்லடியியைபினைத் தலையாகியைபெனத் தலைமை கூறாராயிற்றென்பது. அடியெதுகையாயின் தலையாகெதுகைபோலச் சிறந்து காட்டுமென்பது. செந்தொடையுஞ் செய்யுட்பொலிவு செய்யுங்காற் கொன்றையுங் கடம்பும்போல நின்றவாறே நின்று தொடைப்

1. 'நுந்தை' என அடிமுதற்கண் நின்றசீர் அடுத்த அடியிலும் முதற்சீராய் வந்து தொடைப்பட்ட வழிச் சீர்முழுதும் ஒன்றித் தலையாகெதுகையும் அடியெதுகையுமாய் வந்தமையால், அடியெதுகைக் குரித்தாகிய இரண்டாமெழுத்தின்பின்வரும் மூன்றாமெழுத்து ஒன்றுதலை மெய்பெறுமரபிற்றொடை வகையாகக் கொள்வதன்றிக் கிளை யென்றல் பொருந்தாது.

2. மெய்த்தல், ஒத்தல் எனவரும் இரண்டும் எதுகைத் தொடைப்படவருமிடத்து 'யகரம்' ஆசிடையெதுகையாகக் கொள்ளப்படுதுபோன்று, 'ஈதல், காய்தல்' என்பன ஆசிடையெதுகையெனப்படாது நெடின் மோனையாய்த் திரிவு படுதலின் ஆசிடை யெதுகையைக் கிளையென்றலும் பொருந்தாது.

3. 'கிளையெழுத்து உரிய' எனக் கிளையெழுத்தினையும் தழுவிக்கொண்டமையின், கிளையெழுத்துக்கள் மோனையெதுகைத்தொடைகட்கு அத்துணை உரியவல்ல என்பதே ஆசிரியர் கருத்தாமெனக்கொள்க.

4. 'நுந்தை நுந்தை' யென்றவழி என இவ்வுரைத்தொடர் அமைந்திருத்தல் வேண்டும்,

5. 'நுந்தை' என்பது அடியிரண்டிலும் முதற்கண் நின்றவழி 'நு' என்பது மொழிமுதற்குற்றுகரமாய் எண்ணப்படாதொழிதலின் அதனை முதற்கண் உள்ள தனியெழுத்தாகப் பிரித்து மோனையாக்குமிடத்து ஓரெழுத்துத் தேமாவாகிய அதனை ஈரெழுத்துத் தேமாப்போலக் கொண்டு தொடைகொள்ளவேண்டியிருத்தலால் ''இது 'தலையாகுமோனை' எனத் தலைமைகூறப்படாததூஉமாயிற்று'' என்றார்.

பொலிவு செய்யுமென்பதாம்.[1] அனுவுங் கிளையெனப்படுமோ-வெனின், அதுவுங் கிளைமைபற்றியல்லது அனுவாகாதென்றற்கு இவற்றோடுங் கூறினானென்பது.

ஈண்டு ஓதிய கிளை உயிரும் ஒற்றுமென இரண்டாகலின் அவ்விருவாற்றானுங் கிளைமைபற்றி அநுக்கொள்ளப்படும். என்னை?

"அஆ வாயிரண் டங்காந் தியலும் (தொல்-எழுத்-பிறப்-3)

என அகர ஆகாரங் கிளையாயின. ஐகார ஔகாரம் போலி வகையான் அவையெனப்படும். இ ஈ எ ஏ என்பனவும் உ ஊ ஒ ஓ என்பனவும் உடன்பிறப்பினவாகலான் அவையுங் கிளையெனப்படும். ஒற்றுக் கிளையென்பன தம்முன்னர்த் தாம் வரு-தலும் பிற வருதலுமென இரண்டு. அவற்றுள் தம்முன்னர்த் தாம்வருங்கால் வந்த உயிரே வாரா. அவ் அனுவிற்கு ஓதிய உயிரே வேறுபட வருமென்பது. இனி, ஓரடிக்கண்ணாயின் ஐஞ்-சீரானும் அறுசீரானும் வந்த வழியினும் அனுவெனப்படு-மென்பது இனித் தம் முன்னாகப் பிறவருங்கால் வந்த உயிரே வரவும்பெறுமெனக்கொள்க. பிற வருங்கால் ஞகரநகரங்களும் மகரவகரங்களுஞ் சகரதகரங்களும் இனம்பற்றிக் கிளையா-மென்பது அவற்றுள் மகரவகரங்களும் இதழ்பற்றிப் பிறத்தலிற் கிளையாயின. இவ்வாறே இ ஈ எ ஏ என்பனவும் யகரமும் மிடற்றுவளியாற் பிறத்தலானும் இயல்பு கொளப்புமையானுங் கிளையா மென்பது [2]

---

1. செயற்கைவகையாலன்றி இயற்கையிலேயே பூந்துணராற் பொலிந்து தோன்றும் கொன்றைப் பூங்கொத்தும் கடப்பம் பூங்கொத்தும்போல நின்றவாறே நின்று இயற்கைவகையாற் செய்யுட்குத் தொடைப்பொலிவு செய்தல்பற்றி மோனை முதலிய தொடைப்பகுப் பில்லாத இயற்கைத் தொடையும் செந்-தொடையென ஒரு தொடையாகக் கொள்ளப்படுவதாயிற்று என்பதாம்.

2. 'அநு' என்னும் வடசொல் தமிழில் 'அனு' எனவும் வழங்கப்படும். அனு...ஒத்தது என்ற பொருளது. அஃது, அ, ஆ,ஐ,ஔ, எனவும் இ,ஈ,எ,ஏ, எனவும், உ,ஊ ஒ,ஓ எனவும் உயிர்கள் தம்முள் ஒத்து நிற்றலையும் ஞ,ந எனவும் ம,வ எனவும், த,ச எனவும் மெய்கள் ஒத்து நிற்றலையும் குறித்து வழங்குதல் மரபு. உயிரிலும் மெய்யிலும் அனுவெழுத்துக்களாவன இன்ன இன்ன என்பதனை,

"அகரமோ டாகாரம் ஐகாரம் ஔகான்
இகரமோ டீகாரம் எஏ - உகரமோ
டூகாரம் ஒஓ ஞந மவ தச்சகரம்
ஆகாத வல்ல அனு" (யா. வி. உரைமேற்கோள்)

எனவரும் வெண்பா விரித்துரைத்தல் காணலாம். இதன் ஈற்றடியினை 'அனு ஆகாத அல்ல' என இயைத்து இவை அனுவாம் எனப்பொருள் கொள்க.

ஒற்றும், உயிரும், உயிர்மெய்யும் என மூன்றுவகையாற் கிளைமை கூறி மெய்ம்மோனை உயிர்மோனை உயிர்மெய் மோனை யெனவுங் கொள்ளாமோவெனின், — அவை,

"மெய்பெறு மரபிற் றொடைவகை" (தொல்·செய்-101)

அன்மையிற் கொள்ளாமென்பது அல்லதூஉம் அவையெல்லாங் கொள்ளிற் செந்தொடை இழவுபடுமென மறுக்க [1] எதுகைக்கும் இஃதொக்குமாறு கண்டுகொள்க [2]

இங்ஙனம் ஈண்டுக் கிளையெனக் கூறியவற்றுள், 'ஏற்புழிக் கோடல்' (665) என்பதனால் வருக்கமென்பது மோனைக்கும் எதுகைக்கும் உரிமையான், வருக்கமோனை வருக்கவெதுகை யென்று இருவகைப்படும். நெடிலும் அனுவும் மோனைக்குரிய; உயிரும் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் ஆசிடையிடுதலும் மூன்றாமெழுத் தொன்றுதலுமென்ற ஆறும் எதுகைக்கே உரியவாம். இவை பத்துத்தொடையுள்ளும்[3] மோனைமூன்றும் வருமாறு :

"வயங்குகதிர் கரரத வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி"

(அகம் 24)

என்பது வகரவருக்கம் முதற்கண் வந்தமையின் வருக்கமோனை யாயிற்று.

---

1. எழுத்துக்களை, ஒற்று, உயிர், உயிர்மெய் என மூவகையாற் கிளைமைப்படுத்தி (உறவுசெய்து), மெய்ம்மோனை, உயிர்மோனை, உயிர்மெய் மோனை எனத் தொடைகொள்ளின் அவை மெய்பெறுமரபின் (வடிவுபெறும் முறைமையினையுடைய) தொடையாகாமையின் அவை அங்ஙனம் மோனைத் தொடையாகக் கொள்ளப்படா. அன்றியும் இவ்வாறு எழுத்துவகை பற்றிய சிறப்புத் தொடர்பு பற்றாது தொடைகொண்டால், மோனை முதலியன கருதாது தன்னியல்பின் அமைந்த செந்தொடை யென்னுந்தொடைகொள்ளுதற்கு இடமில்லாது போய்விடும். எனவே மெய், உயிர், உயிர்மெய் என எழுத்துப்பொதுமைபற்றித் தொடை கொள்ளுதல் இங்கு ஆசிரியர் கூறுந் தொடையிலக்கண அமைப்பினைச் சிதைப்பதாகும் என்க.

2. இவ்விளக்கம் எதுகை, இயைபு முதலிய ஏனைத்தொடைகளுக்கும் ஏற்குமாறு அறிந்துகொள்க.

3. பத்துத்தொடையாவன: வருக்கமோனை, வருக்கவெதுகை, நெடில் மோனை, அனுமோனை, உயிரெதுகை, வல்லினவெதுகை, மெல்லினவெதுகை, இடையினவெதுகை, ஆசிடையெதுகை, மூன்றாமெழுத்தொன்றெதுகை என்பன.

"கலக்கொண்டன கள்ளென்கோ
காழ்கோத்தன சூட்டென்கோ"

(யா. வி. ப. 349)

என்பதும் அது. இவை ஒரு மெய்யின் வருக்கமாகலான் வருக்க மெனப்பட்டன.

அஃதேல், உயிர்வருக்கமும் வருக்கமெனப் படாதோ வெனின், அங்ஙனங் கொள்ளின் நெடிலும் அனுவும் விரவும் வருக்கமும் வருக்கமெனப்படுமென மறுக்க;[1] அல்லதூஉம் நெடிலும் குறிலும் ஊர்ந்த மெய்யிரண்டு இயைந்தவழித் தொடையாகல் வேண்டுமன்றோ வென்பது; என்றார்க்கு, முதற்கண் உயிர்வந்ததனையே இன்ன தொடை என்றுமோ-வெனின், அவை அனுவாகி வருவன வழிமோனை யெனவும் அல்லாக்காற் செந்தொடை யெனவுங் கூறுபவென்பது.[2] இஃது, ஓர் அடிக்கண் வரினும் ஒக்குமென்ப துய்த்துணர்க.

"மடவரன் மகளிர் பிடகைப் பெய்த
செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்து"

(பத்துப்-நெடுநல்-39, 40)

என்றவழிச் செந்தொடையாவதன்றி மோனைத்தொடைப்பா டின்றென்பது. இவ்வாறே குறிலும் நெடிலும் எதுகையாகாமை யின் அவையும் வேண்டியதிலரென்பது.

"வெள்ளி வள்ளி விளங்கிறைப் பணைத்தோண்
மெத்தென் சாயன் முத்துறழ் முறுவல்"

(பத்துப்-நெடுநல்-36-37)

என்பது வழிமோனை.

"ஓங்குதிரை வியன்பரப்பி
னொலிமுந்நீர் வரம்பாக"

(பத்துப்-மதுரை-1-2)

1. உயிரை வருக்கமெனக் கொண்டால், நெடில் மோனை, அனுமோனை என்ற தொடைப் பாகுபாட்டிற்கு இடமேயில்லை. அன்றியும் நெடிலும் குறிலும் ஊர்ந்த மெய் இரண்டும் உயிர்வருக்கம் என்பதே பற்றித் தொடையாகாது. ஆகவே உயிரை வருக்கமெனக் கொண்டு தொடைவகுத்தல் பொருந்தாது.

2. முதற்கண் உயிர் வந்த சீர்பற்றி இன்ன தொடையெனக் கூறல் வேண்டின் முற்குறித்தவாறு அனுவாகி வருவதனை வழிமோனையெனவும் அனு-வாகாக்கால் செந்தொடையெனவுங் கூறுதல் மரபு.

என்பதும் அது. இவற்றை அனுமோனையெனினும் அமையும்,[1] அவை விகற்பங் கொள்ளாம்.

"முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப்பேர
அன்னைக் குரைப்ப னறிவாய் கடலேயென் றலறிப் பேரும்"

என்னும் அறுசீரடியினும் எழுசீரடியினும் எண்சீரடியினும் [நாற்சீரடியினும்] ஒப்பவருதலானும், எண்சீரடியுள் ஒருநான்கு சீர் அற்றவழி ஒழிந்த நான்கனுண் முதற்கண்ணும் இடைக்கண்ணும் இனம் வந்தால் அவை வந்தவழியெல்லாந் தொடையாகாமையானுமென்பது. பிறவும் அன்ன. எதுகைக்குப்போல இனமோனைகொள்ளா; தனிமெய், மொழிக்கு முதலாகாமையினென்பது.[2]

"கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே (குறுந்-216)

என்பது, வருக்கவெதுகை.

"அத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப்
பிற்படு பூசலின் வழிவழி யோடி" (அகம்-7)

என்பது, வல்லினவெதுகை.

"நும்மில் புலம்பினு முள்ளுதொறு நலியுந்
தண்வர லசைஇய பண்பில் வாடை" (அகம் 58)

என்பது, மெல்லினவெதுகை.

"மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந" (பெரும்பாண்·455·6)

என்பது, இடையினவெதுகை.

"புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியுஞ்
சொல்லிய வல்ல வேனைய வெல்லாம்" (தொல்·எழுத்-உருபியல்-30)

என்பதும், அது.

---

1. வெள்ளி, மெத்தென் என வகரமும், மகரமும், ஓங்குதிரை, ஒலி முந்நீர் என ஓகாரமும் அடி முதற்கண் ஒத்துத் தொடைப்பட்டு வருவனவற்றை வழிமோனையெனினும் அனுமோனையெனினும் பொருந்தும் என்பது கருத்து.

2. வலி, மெலி, இடை என மூவினம்பற்றி எதுகைத்தொடை கொள்ளுமாறுபோல இனம்பற்றி மோனைத்தொடை கொள்ளுதல் இல்லை; அவ்வாறு கொள்ளாமைக்குக் காரணம் மெய் தனியே மொழிக்கு முதலாகாமையேயாகும்.

 

"இமிழ்கண் முழவி னின்சீ ரவர்மனைப்
பயிர்வன போலவந் திசைப்பவுந் தவிரான்" (அகம்.)

என்பது உயிரெதுகை; இஃது ஒற்றூர்ந்த உயிர் ஒன்றின்மை யின் உயிரெதுகையாயிற்று.

"நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு
மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்" (அகம்.9)

என்பது யகரவொற்றிடையிட்டு வந்த ஆசிடை யெதுகை. பிற ஒற்றிடையிடினும்,

"மெய்பெறு மரபிற் றொடை" (தொல். செய். 101)

யாவன கொள்க.

'உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற"
(புறம்.3)

என்பது மூன்றாமெழுத்தொன்றெதுகை.

இவையும் மேற்கூறப்பட்டனவும், இனிக் கூறுவனவு மெல் லாம் நான்குபாவினும் வருமாறு கண்டு கொள்க.[1]

இனி, மூன்று பாவினும்[2] அறுநூற்றிருபத்தைந்தடியோடும் இவற்றைப் பெருக்கி உணருங்கால் இவை பத்துத்தொடை யானும் பெற்ற தொடை மூவாயிரத்தெண்ணூற்றறுபத்தேழு. இவற்றுள், வருக்க மோனையும். வழி மோனையும், உயிரெதுகையு மென இவை மூன்றும் நுந்தை யென்னுஞ் சீர்க்கு ஏலாமையின்[3] அச்சீர் முதற்பா இரண்டினும் உறழ்ந்த அடி இருபதும் ஒழித்து, ஒழிந்த சீர் எல்லாவற்றானு முறழ்ந்த அடி அறுநூற் றைந்தனுள் ஐம்பத்தாறு நிலங்களைய ஒரோவொன்றற்குப் பெற்ற தொடை ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதாம்.

இவ்விலக்கணமெல்லாம் இனிக் கூறும் முரணைந்தற்கும் ஒக்கும்.

---

1. நான்குபா: ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சி என்பன.

2. மூன்றுபா: ஆசிரியம், வெண்பா, கலி என்பன.

3. நுந்தையென்பதன்கண் 'நு' மொழிமுதற்குற்றியலுகரமாதலின் அதற்கு வருக்கம், கிளை, உயிர் என்னும் வகைமையில்லாமையால், "வருக்க மோனையும் வழிமோனையும் உயிரெதுகையும் நுந்தையென்னுஞ்சீர்க்கு ஏலா-மையின்" என்றார்.

அவற்றை அகவற்றொடை இருநூற்றெழுபத்து மூன்றென வும், வெண்டொடை நூற்றைம்பத்தாறெனவும், கலியிற் களை வன இன்மையின் அவை நூற்றிருபஃதெனவும் பகுத்துக் காணப் படும். இம்மூன்று தொடையும், முரண் ஐந்துந் தொகுப்பப் பெற்ற தொடைநாலாயிரத்து முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டு (4392). இவை பிற அடிக்கண் வருங்கால்[1] அவ்வரையறையாற் பயிலாவென உணர்க. பிறவும் அன்ன.

"வழிவருக்க மோனை யுயிர்முரணைந் தெட்டு
மொழிகின்ற நுந்தை யொழிய—வழுநில
மைம்பதின்மே லாறகற்ற வைஞ்ஞூற்று நாற்பதின்மே
லொன்பதென் றோதப் படும்"

எனவும்

"இருநூற்றெழுபத்து மூன்றகவல் வெள்ளைக்
கொருநூற்றைம் பத்தா றுரிய—வொருநூற்
றிருபதாந் துள்ளற் கெனல்"

எனவும்,

"நாலா யிரத்துமுந் நூற்றுத்தொண் ணூற்றிரண்டி
னாலீ ரிடத்து நவிற்று"

எனவும்,

"பதின்மூன்று பாற்றொடை யேழா யிரத்தோ
டிருநூற் றிருபத் திரண்டு"

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி, மூன்றாமெழுத்தொன்றெதுகைக்கு,

[1]வண்டு, [2]மின்னு [3]நுந்தை, [4]சேற்றுக்கால், [5]நீடுகொடி என்னும் ஐந்துசீரானும் உறழ்ந்த அடி அறுபஃதொழித்து, ஒழிந்தசீர் இருபத்திரண்டானும் பெற்ற அடி இருநூற்றறுபத்து நான்கனுள்ளும், ஒன்பது நேர்முதற்சீராற் பதினெட்டும், பதின்மூன்று நிரை முதற்சீராற் பதின்மூன்றுமாக முப்பத்தொரு நிலங்களைந்து கொள்ளப்பெற்ற ஆசிரியத்தொடை இருநூற்று முப்பத்துமூன்று.

இனி, வெண்பாவினுள் நீடுகொடி வாராமையின்,

---

1. பிறவடியாவன: அளவடியல்லாத குறள், சிந்து, நெடில், கழிநெடிலடி என்பன.

[1]வண்டு, [2]மின்னு, [3]நுந்தை, [4]சேற்றுக்கால் என்னும் நான்கு சீரும் உறழ்ந்த அடி முப்பத்தொன்றொழித்து, ஒழிந்த சீர் இருபத்து மூன்றானும் பெற்ற அடி நூற்றைம்பதாகலின், அவற்றுள்ளும் நேர்முதற்சீர்பத்தும், வரகு, வலியது, கடியாறு, விறகுதீ என்னும் நான்கும் ஆகப் பதினான்கு சீரானும், பதினாலு நிலங் களைந்து பெற்ற வெண்டொடை நூற்று முப்பத்தாறாம். இவ்வாற்றான் இரண்டு பாவிற்குங் களையுநிலம் நாற்பத்தைந்து.

கலிப்பாவினுள்ளுஞ் சேற்றுக்கால் நீடுகொடி என்னும் இரண்டும், மூன்றாமெழுத்தெதுகைக்கு ஏலாமையின், ஒழிந்த சீர் இருபத்திரண்டனானும் பெற்ற தொடை நூற்றொருபதாம்.

இவ்வாற்றான் இவை மூன்றுபாவின் தொடையுந் தொகுப்ப நானூற்றெழுபத்தொன்பதாம் (479). இம் மூன்றாமெழுத்து ஒன்றுங்கால் இரண்டாமெழுத்து ஒன்றாது வரல்வேண்டும் அல்லாக்கால் தலையாகெதுகையா மாகலினென்பது.[1]

> "வண்டுமின்னி ரண்டுநுந்தை சேற்றுக்கா னீடுகொடி
> யென்றிரண்டு மூன்றா மெழுத்தியையா — நின்ற
> வறுபத்தேழ் சீரா னடித்தொடை நானூற்
> றெழுபத்தொன் பானு மியற்று"

எனவும்,

> "வந்த பதினான்கு மேழா யிரத்தெழுநூற்
> றொன்றென் றுரைக்கப் படும்"

எனவும்,

> "நேர்முத லொன்பா னிரட்டி நிரைபதின்மூன்
> றாசிரியப் பாமுப்பத் தொன்றசுற்றி நேர்முதற்சீர்
> பத்தொடு நான்குவெண் பாவகற்ற வாங்கதற்
> கற்றன நாற்பத்தைந் தாம்"

எனவும்,

> "இருநூற்று முப்பத்து மூன்றகவல் வெள்ளைக்
> கொருநூற்று முப்பத்தா றாகு — மொருநூற்

1. முதலெழுத்து அளவொத்து நிற்க, இரண்டாமெழுத்து ஒன்றாதநிலையில் மூன்றாமெழுத்தாற் கொள்ளப்பெறுவதே மூன்றாமெழுத்தொன்றெதுகை யெனப்படும். இரண்டாமெழுத்துடன் மூன்றாமெழுத்தும் ஒன்றிவரின் அது தலையாகெதுகையெனப்படும்.

றொருபதாந் துள்ள லொருங்கிவை மூன்றா
மெதுகையாற் பெற்றனவா மீண்டு''

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி, வருக்கவெதுகை ஆசிரியத்துள் எழுசீர்க்கும், வெண்பா-வினுள் ஐந்து சீர்க்கும் கலிப்பாவினுள் நான்குசீர்க்கும் ஏலாது. அவை,

1வண்டு, 2மின்னு, 3போதுபூ, 4மேவுசீர், 5நீடுகொடி, 6நாணுத்-தளை, 7நுந்தை என இவை யேழும் ஆசிரியத்துள் ஆகாதன. இவற்றுள் நீடுகொடி நாணுத்தளை இரண்டும் ஒழித்து ஒழிந்த-சீர் ஐந்தும் வெண்பாவிற்கேலா அவ்வேழனுள்ளும், வண்டு, மின்னு, நுந்தை ஒழித்து ஒழிந்த நான்குங் கலிப்பாவிற்காகா வெனவுணர்க. இனி ஆசிரியத்துள் நேர்முதற்சீர் ஏழும், பதின் மூன்று நிரைமுதற்சீரும் உறழ்ந்த அடி இருநூற்று நாற்பதாம். இவற்றுட் களையும் நிலம் இருபத்தேழாம். ஆகவே, அகவற் றொடை இருநூற்றொருபத்து மூன்றாயின. வெண்பாவின், ஐந்துசீரானும் முப்பத்தெட்டடியொழித்து, ஒழிந்த அடிநூற்று நாற்பத்து மூன்றானும் நேர்முதற்சீரொன்பதும், நிரைமுதற்சீர் நான்குமெனப் பதின்மூன்றானுங் களையும் நிலம் பதின்மூன்றகற் றிப்பெற்ற வெண்டொடை நூற்றுமுப்பதாம். கலிப்பாவிற் களைந்தசீர் நான்கொழித்து ஒழிந்த சீரான் அடி நூறெனப்படும். அம்மூன்றுந் தொகுப்ப வருக்க வெதுகை (443) நானூற்று நாற்பத்து மூன்றாயின.

''நேர்பிரண்டு நேர்பு முதனான்கு நுந்தையுமென்
றாகாச்சீ ரேழைந்து நான்காக வாகாத
நாற்பதும்போய் நானூற்று நாற்பத்து மூன்றாகித்
தோற்றும் வருக்கத் தொடை''

எனவும்,

''முறையா னிருநூற் றொருபத்து மூன்றோ
டொருநூற்று முப்பதுநூ றொட்டு''

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி, நெடின்மோனையும், மெல்லின வெதுகையும், இடையின-வெதுகையும், ஆசிடை யெதுகையுமென நான்கற்கும் நிரை முதற்-சீரும் நுந்தையுமெனப் பதினாற்சீர் ஏலாமையின், ஒழிந்த

நேராதிச்சீர் பதின்மூன்றான் ஆசிரியத்து ஒரோசீர்க்கு இரண்டு நிலங் களைந்து பெற்றதொடை நூற்றுமுப்பதாம்.

வெண்பாவினுள் நேர்முதற்சீர் பதின்மூன்றும் உறழ்ந்த அடி தொண்ணூற்று மூன்றனுள் ஒருசீர்க்கு ஒருநிலமாகப் பதின்மூன்று நிலங்களைந்து பெற்ற வெண்டொடை எண்பஃதாம்.

கலிப்பாவிற்கு நேர்முதற்சீர் பன்னிரண்டனாற் பெற்ற தொடை அறுபஃதாம். ஆக மூன்றுபாவிற்குந் தொடை ஒரோ வொன்றற்கு இருநூற்றெழுபதாக நான்கனானும் பெற்றதொடை (1080) ஆயிரத்தெண்பதாம்.

> ''இடையின மெல்லின மாசெதுகை யேனை
> நெடின்மோனை நான்காகி நின்ற — தொடைதா
> மிருநூற் றெழுபஃ தொரொரொவொன் றற் கெய்து
> நிரைமுதலு நுந்தையு நீத்து''

எனவும்,

> ''பதின்மூன் றிரட்டித் தகவலினே ராதி
> பதின்மூன்றே வெண்பாவிற் பாற்றி யவைதொகுப்ப
> மூவகை மூன்று தலையிட்ட முப்பஃது
> நால்வகையா னிற்க நவிற்று''

எனவும்,

> ''மூவகைப் பாவின் மொழிந்த தொடைத்தொகை
> யாயிரத்து மேலெண்ப தாகுமாம் பாவின
> முந்நூற்று முப்பதா மெண்பதாம் வெண்பாக்
> கடைய கலிக்கறுபஃ தாம்''

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி, வல்லின வெதுகைக்கு நிரைமுதற்சீர் பதின்மூன்றும்,

1மின்னு, 2நுந்தை, 3மேவுசீர், 4நாணுத்தளை

யென நான்குமாகப் பதினேழுசீர் தொடைகொள்ளாமையின், ஒழிந்த நேராதிச்சீர் பத்தனானுங் களைவன களைந்து பெற்ற அகவற்றொடை நூறாகவும்; வெண்பாவிற்கு நாணுத்தளை வாராமையின் அஃதொழிக்கல் வேண்டுவதன்றாயிற்றாகவே,

1மின்னு, 2நுந்தை, 3மேவுசீர்

என்னும் மூன்றொழித்து, ஒழிந்த நேராதிச்சீர் பதின்மூன்ற னானுங் களைவன களைந்துகொண்ட வெண்டொடை அறுபத்

தெட்டாகவும், கலிப்பாவின் நேர்முதற்சீர் பன்னிரண்டனுள் மேவுசீர் நாணுத்தனை ஒழித்து ஒழிந்த பத்தனானும் கலித் தொடையைம்பதாகவும் மூன்றுபாவினானும் வல்லினவெதுகை (218) இருநூற்றொருபத்தெட்டாயின வென்பது.

> "முற்றுகர நேர்புநேர் முன்னாகுஞ் சீரிரண்டுங்
> குற்றுகரத் தேமாவுங் கொள்ளாது மற்றை
> நிரைமுதலுங் கூட்டாது நேர்முதலான் வல்லொற்
> றெதுகையிரு நூற்றொருபத் தெட்டு"

எனவும்,

> "இருப தகவல்பதி னொன்றுவெள்ளைக் காகா
> நிலமுப்பத் தொன்றாக நீக்கி - வலியெதுகைக்
> கீரைம்ப தாமகவல் வெள்ளைக் கறுபத்தெட்
> டோரைம் பதுதுள்ளற் கொட்டு"

எனவும் இவற்றை விரித்துரைக்க.

இவையெல்லாங் கிழமைபற்றி[1] வந்தமையின் 'ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய' என்றானென்பது. இப்பத் துத் தொடையானும் முரணைந்தானும் பெற்றதொடை (6612) ஆறாயிரத் தறுநூற் றொருபத்திரண்டெனப்படும். ஆறாயிரத்தறு நூற்றொருபத்திரண்டும் பெறும், கிளை முரண் ஐந்தும்[2] மேற் கூறிய மோனை எதுகையிரண்டனோடும் இனிக்கூறும் முரணைந் தும் இயைபு இரண்டும் உடன்கூட்டித் தொடை கூறினாம், இவற்றோடு இயைந்தமையினென்பது. இத்தொடை யெல்லாந் தொகுப்ப (9442) ஒன்பதினாயிரத்து நானூற்று நாற்பத்திரண் டாயினவாறு கண்டு கொள்க.[3]

---

1. 'கிளைமைபற்றி' எனக்காணப்பெறும் பாடமே ஏற்புடையதாகும்.

2. 'ஆறாயிரத்தறுநூற்றொருபத்திரண்டுபெறும். கிளையும் முரண் ஐந்தும்' எனவரும் இத்தொடர் ஏடெழுதுவோரால் மீண்டும் எழுதப்பெற்றி-ருத்தல் வேண்டும் எனத்தெரிதலால் இவற்றை நீக்கிப் படிக்க.

3. செய்யுளியல் ௯௨-ஆம் சூத்திரவுரையில் ஐந்து தொடைகட்கும் உரியவாகச் சொல்லப்பட்ட இரண்டாயிரத்து எண்ணூற்று முப்பதுடன் கிளைமைபற்றி இங்குச் சொல்லப்பட்ட பத்துத் தொடையாலும் முரண் ஐந்தாலுஞ் சொல்லப்-பட்ட ஆறாயிரத்தறுநூற்றுப்பன்னிரண்டனையுங் கூட்ட ஒன்பதினாயிரத்து நானூற்று நாற்பத்திரண்டாயின.

''மோனை யெதுகை முரணியையு நான்கற்கு
மானவை யொன்பதி னாயிரத்து நானூற்று
நாற்பத் திரண்டாகு மோரடியே யாயினுங்
கூட்டத்துக் கொண்ட குழாம்'' (௯௪)

**நச்சினார்க்கினியம் :**

இது முற்கூறியவற்றோ டொப்பனசில தொடைகூறுகின்றது.

இ-ள். முற்கூறிய மோனைக்கும், எதுகைக்கும் கிளை-யெழுத்துக்களும் ஒன்றிவரப்பெறும். எ-று.

கிளையெழுத்தாவன :- வருக்க மோனையும், வருக்க-வெதுகையும், வல்லினவெதுகையும், மெல்லினவெதுகையும், இடையினவெதுகையும் என ஐந்தாம்[1] உ-ம்.

'வயங்குகதிர் காய்ந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி'

இது கட்டளையடிச் சீர்வகையடியொடு தொடுத்த வருக்க-மோனை.

'கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்' (திருக்குறள்-௪0௪)

இது கட்டளை வருக்கமோனை.

'கேளிர் போலக் கேளல வேண்டி
வேளாண் வாயில் வேட்பக் கூறிய'

இது கட்டளை வருக்கவெதுகை.

'வாரியும் வடித்து முந்திய முறழ்ந்துஞ்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி'

இஃது இரண்டுந் தொடுத்தது.

''வானுயர் வெற்ப விரவின் வரல்வேண்டா
யானை யுடைய சுரம்'

இது கட்டளை வருக்கவெதுகை.

'தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்' (திருக்குறள்-௱௧௪)

இது கட்டளை வல்லினவெதுகை.

---

1. கிளை-உறவு; மெய்யும் உயிரும் கூடிய நிலையிற் கொள்ளப் பெறும் ககர வருக்கம், சகர வருக்கம் முதலாக வரும் உடலுயிர்பற்றிய உறவு.

'அத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப்
பிற்படு பூசலின் வழிவழி யோடி'

இஃதிரண்டுந்தொடுத்தது.

'அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்'

இது கட்டளை மெல்லின வெதுகை.

'நும்மில் புலம்பினு முள்ளுதொறு நலியுந்
தண்வர லசைஇய பண்பில் வாடை'

இது சீர்வகை மெல்லினவெதுகை.

'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு' (திருக்குறள்-உ௯௯)

இஃதிடையினவெதுகை.

'மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந'
(பெரும்பாணாற்றுப்படை)

இது சீர்வகை இடையினவெதுகை.

**ஆய்வுரை :**

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்) மோனை, எதுகை என்னும் அவ்விருவகைத் தொடைக்கும் எடுத்த எழுத்தே வருதலன்றி வருக்க எழுத்தும் உரியனவாகும் எ-று.

கிளையெழுத்து - வருக்க எழுத்து.

௯௧ மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே.

**இளம்பூரணம் :**

என்—எனின். முரணாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அடிதொறும் வந்த சொல்லினா னாதல் பொருளினா னாதல் மாறுபடத்தொடுப்பது அடிமுரண்தொடையாம் என்றவாறு.[1]

சொல்முரணாவது சொல்லானன்றிப் பொருளான் மாறுபடாமை. பொருள் முரணாவது மாறுபாடுடைய பொருளைச் சொல்வது.

---

1. சொல்லினாலாவது பொருளினாலாவது மாறுபடும் அமைப்பு அடிதொறும் பெற்றது அடிமுரண்தொடையெனப்படும்.

"இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னின் அன்ன நுண்தா துறைக்கும்"
(யா. வி. ப. க௪௫)

என்பது இரும்பும் பொன்னும் மாறுபாடுடைத்தாதலிற் பொருள் முரண் ஆயிற்று.

"சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணும் உடையவால் அணங்கே"
(யாப். வி. ப. க௪௫)

என்றவழிக் குடியுங் கண்ணுமாகாது சிறுமைபெருமை என்னும் சொல்லே மாறு கோடலிற் சொன்முரணாயிற்று. (ககூ)

**பேராசிரியம்:**

இது, முறையானே முரண்,தொடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) சொல்லும் பொருளும் பகைத்தல் காரணமாக முரண்டொடை வரும் (எ - று)

அவை ஐவகைப்படும்;

1சொல்லுஞ் சொல்லும் முரணுதலும்,
2பொருளும் பொருளும் முரணுதலும்,
3சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணுதலும்,
4சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும்,
5சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணுதலும் என.

1"செவ்வி வாய்த்த செம்பாட் டீரத்து
வெள்ளை வெண்மறி மேய்புலத் தொழிய"

என்புழி, செவ்வி வெள்ளையென்பன பொருளின்றிச் சொல்லுஞ் சொல்லும் முரணியன. வெள்ளையென்பது சாதிப்பெயர்.[1]

"செந்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து
கருங்கைக் கானவன் களிற்றுநிறத் தழுத்தலின்"
(யா. வி. ப. 145)

என்பதும் அது.

1. செவ்வி, வெள்ளையென்பன நிறங்குறியாது முறையே பருவமும் சாதியுங் குறித்துச் சொல்லளவில் முரண்தோன்ற வந்தமையின் சொல்லுஞ்சொல்லும் முரணியன என்றார். வெள்ளை - ஆட்டின் சாதிப்பெயர்.

[1]"நீரேர ரன்ன சாயற்
றீயோ ரன்னவென் னுரனவித் தேன்ற" (குறுந்.95)

என்பது பொருளும் பொருளும் முரணியது.[1]

[2]"தண்ணிய லற்ற தயங்கறற் கானத்து
வெந்நீர்ப் பொருணசைஇ முன்னிச் சென்றோர்"

என்பது சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியது.[2]

[3]"தீநீர் நஞ்சந் திருமிடற் றொடுக்கிய
வுவரி யன்ன வுடைப்பெருஞ் செல்வர்"

என்பது சொல்லும் பொருளும் பொருளொடு முரணியது.[3]

இதனைச் சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியது போலப் பொய்ப் பொருளொடு முரணுதல் வேண்டுமென்று கொள்ளற்க.[4]

"[5]செவ்வேற் சேஎய் திருமண மறுத்த
கருவிற் கானவன் வரிலவ ரிலரே, (யதுபோல)"

என்புழி, சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணியது[5] பிறவும் அன்ன.

இவை ஐந்துதொடையுந் தளைவகை யடிக்கண் வருங்கால் இன்னவாறு வருமென்பது மேற்கூறியவாற்றானே கொள்ளப் படும். இவை விரித்துநோக்கப் பலவாமாறும் விரித்துறழ்ந்து கண்டுகொள்க. (கூரு)

---

1. நீர், தீ, எனப்பொருளொடு பொருள் முரணியது.

2. 'தண்ணியல்' எனக்குளிர்ந்த தன்மையைச் சுட்டிய சொல்லும்பொருளும் அடுத்த அடியில் வெந்நீர் என்ற சொல்லொடுமுரணியது. ஈண்டு 'வெந்நீர்' வெம்மையைக் குறியாது விரும்புந்தன்மையினைக் குறித்தலின் சொல்லளவில் முரணாயிற்று.

3. 'இனியநீர்' என்னும் பொருளுடையதாய் அடிமுதற்கண்ணுள்ள 'தீநீர்' என்னுஞ்சொல்லும் பொருளும் அடுத்த அடியின் முதற்கணுள்ள 'உவரி' யென்னும் பொருளொடு முரணியன.

4. 'தண்ணியல்' என்னுஞ்சொல்லும் பொருளும் வெந்நீர் என்னுஞ் சொல்லொடு முரணியது போலத் தீநீர், உவரி எனவரும் இதனைச் சொல்லும் பொருளும் பொய்ச்சொல்லொடும் பொருளொடும் முரணியதாகக்கொள்ளற்க; உவரி என்பதுபொருளெனவே கொள்க என்பதாம்.

5. செவ்வேல், கருவில் என்புழிச் செவ், கரு என்னும் அடைமொழியும் வேல் வில் என்னும் படைக்கலமும் சொல்லும் பொருளுமாய் நின்று முரணினமை-யின் சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணியதாயிற்று.

**நச்சினார்க்கினியம் :**

இது முறையானே முரண் கூறுகின்றது.

(இ-ள்.), சொல்லானும் பொருளானும் பகைத்தல் முரண்டொடை. எ-று.

அவை ஐவகைய ; சொல்லும் சொல்லும் முரணுதலும், பொருளும் பொருளும் முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதலும், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணுதலும் என. உதாரணம் :-

'செவ்வரை நிவந்த சேணிடை யருவி
வெண்மறி கறித்த முல்லை'

இது கட்டளை ஈரடியும் சொல்லும் சொல்லும் முரணிற்று.

'செந்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து
கருங்கைக் கானவன் களிற்றுநிறத் தழுத்தலின்'

அஃதிருவகை யடியும்[1] அங்ஙனம் முரணிற்று.

'நெருப்பி னன்ன சூட்டுச் சேவ
னீர்சேர் கானத்து நெடுமணற் கிளைப்ப'

இது கட்டளையீரடியும் பொருளும் பொருளும் முரணிற்று.

'நீரோ ரன்ன சாயற்
றீயோ ரன்னவென் னுரனவித் தன்றே'

இஃதிருவகை யடியும் அங்ஙனம் முரணிற்று.

'தண்சே றாடிய தயங்கிணர்க் கடத்து
வெம்பொருட் பிரிவை வேண்டிச் சென்றார்'

இது கட்டளையீரடியுஞ் சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணிற்று.

'சிறுநல் கூர்ந்த செல்சுடர் மாலை
நெடுநீர்ப் பொய்கைக் குறுநர் தந்த'

இஃதிருவகை யடியும் அங்ஙனம் முரணிற்று: சிறுநல் கூர்ந்ததுக்குச் சிறிய பொருளின்று.

செந்தீக் கானஞ் சென்ற மாதர்
நீரின் மையி னெஞ்சழிந்து வருந்த'

1. இருவகையடி யென்பனகட்டளையடியும் சீர்வகையடியும்.

இது கட்டளையீரடியுஞ் சொல்லும் பொருளும் பொருளொடு முரணிற்று. செந்திக்கு நிறமும் சொல்லுமுண்டு, நீர்க்குச் சொல்லின்று.

'செந்தீ யன்ன சினத்த யானை
நீர்நசை பெறாஅக் கற்பிற் றேர்நசைஇ'

இஃதிருவகை யடியும் அங்ஙனம் முரணிற்று.

'செங்குரற் பைந்தினை விளைபுன மேவிப்
பைங்கிளி கடியும் பான்மொழி மகளிர்'

இது கட்டளையீரடியும் சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணிற்று.

'செவ்வேற் சேஎய் திருமண மறுத்த
கருவிற் கானவன் வரில்'

இது சீர்வகையடி அங்ஙனம் முரணிற்று

'பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன' (தொல் - வேற்றுமை கஎ)

இது கட்டளை இணைமுரன்.

'நிலவு மிருளும் போல்வ நீர்வரை'

இது சீர்வகை.

'கார்பெயல் பெய்தபிற் செங்குளக் கோட்டுக்கீழ்'

'எழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்'
(நாலடி-கயமை)

இவை கட்டளைப் பொழிப்புமுரண்.

'வருது மெனமொழிந்தார்' வாரார்கொல் வானங்
கருவிருந்தா லிக்கும் பொழுது' (கார்நாற்பது, க)

இது சீர்வகை.

'பின்னாவ தென்று பிடித்திரா முன்னே'
(நாலடி-செல்வநிலையாமை)

'இன்சொற் குழியு ளினிதெழூஉம் வன்சொல்'
(நான்மணி, கக)

இவை கட்டளை ஒரூஉமுரண்.

'வரினு நோய் மருந்தல்லர் வாராது'

இது சீர்வகை,

'நிறுத்தலி னளவி னெண்ணி னென்றா'
(தொல்-வேற்றுமை கக.)

'தேரும் யானையுங் குதிரையும் பிறவும்'
(தொல்-வேற்றுமை)

இவை கட்டளைக் கூழைமுரண்.

'கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பும்'
(நற்றிணை-அ௪)

இது கட்டளைக் கீழ்க்கதுவாய் முரண்.

'அறுத்தலிற் குறைத்தலின் றொகுத்தலிற் பிரித்தலின்'
(தொல், சொல், வேற்றுமையியல், ௰.க.)

'நிற்ற லிருத்தல் கிடத்த லியங்குதல்'

இவை கட்டளை முற்றுமுரண்.

'நீரு நிலனுந் தீயும் வளியு
மாக விசும்போ டைந்து மாகும்'

என்பது சீர்வகை. இவற்றை ஐவகையாக முற்கூறியாங்கு விரிப்பிற் பெருகுமாகலின் அவற்றுளேற்றன கொள்க.

**ஆய்வுரை :**

இது, முரண்டொடை யாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) சொல்லினாலாவது பொருளினாலாவது மாறுபடத் தொடுப்பது முரண்டொடை யெனப்படும் எ-று.

சொல்லுஞ் சொல்லும் முரணுதல், பொருளும் பொருளும் முரணுதல், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதல், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதல், சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணுதல் என முரண் ஐவகைப்படும் என்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். இவற்றுக்கு உதாரணம் அவ்விருவருரையிற் காண்க.

கூஉ இறுவாய் ஒப்பினஃ தியைபென மொழிப.[1]

**இளம்பூரணம் :**

என் — எனின். இயைபுத்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. 'இறுவாயொன்றலியைபின் யாப்பே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

ழுத்து ஒன்றிவரின் அஃது
என்றவாறு.

பியும் அணங்கே
அணங்கே
ணங்கே
கே
அணங்கே"
(யாப். வி. ப. கருங)

வரையாது கூறினமையான் ஓரெழுத்து
ம் இயைபாம் என்று கொள்க.[1] (கூஉ)

ரனே இயைபிரண்டும் உணர்த்துகின்றது.

(இ-ள்.) இரண்டடியும் ஈறொத்தல் இயைபுத்தொடைக் கிலக்கணம் (எ - று).

வாளாதே 'இறுவாயொன்றல்' என்றானாயினும் ஆண்டு ஒன்றுவது பொருளியைபின்றி எழுத்துஞ்சொல்லும் ஒன்றி-யடையின் இயைபாமென்பது.[2] எனவே, எழுத்தடியியைபும் சொல்லடியியைபும் என இத்தொடை இரண்டாயின.[3]

"அவரோ வாரார் கார்வந் தன்றே
கொடிதரு முல்லையுங் கடிதரும் பின்றே"

என்பது எழுத்தடியியைபு.

"பரவை மாக்கடற் றொகுதிரை வரவும்
பண்டைச் செய்தி யின்றிவள் வரவும்"
(யா. வி. ப. 155)

என்பது சொல்லடியியைபு.

---

1. இறுவாய்-இறுதி; என்றது, ஈற்றில்நின்ற சீரினையும் அசையினையும் எழுத்தினையும்.

2. இறுவாய் ... இறுதி; என்றது, இறுதிக்கண் அமைந்த பொருளையுணர்த் தாது எழுத்தையும் சொல்லையும் உணர்த்திற்று. ஒன்றல் - இயைதல்.

3. எழுத்தால் இயைந்தது, எழுத்தடியியைபு. சொல்லால் இயைந்தது சொல்லடி யியைபு.

இவையும் அடிமோனைபோல எல்லா அடியொடுந் தொடுக்கப்படுமென்பதூஉம் அவற்றதுவிரியும் எல்லாம்,

"அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை"
(தொல்-செய்-92)

என்புழிச் சொல்லியவாற்றானே கொள்ளப்படும். (௯௧)

**நச்சினார்க்கினியம்:**

இது முறையே இயைபு கூறுகின்றது.

(இ-ள்) இரண்டடியினும் பொருளியைபின்றி எழுத்தாதல் சொல்லாதல் ஈற்றிலே பொருந்தத் தொடுப்பது இயைபுத் தொடைக்கிலக்கணம் எ-று.

'அவரோ வாரார் கார்வந் தன்றே
கொடிதரு முல்லையுங் கடிதரும் பின்றே'

இது கட்டளை எழுத்தடியியைபு.

'பரவை மாக்கடற் றொகுதிரை வரவும்
பண்டைச் செய்தி யின்றிவன் வரவும்'

இது கட்டளைச் சொல்லடியியைபு; சீர்வகையடிக்கு வந்துழிக் காண்க.

'ஓங்கிய சுரத்தை நீங்கி யேகி'

இஃதிணையியைபு.

'விரிந்தானா மலராயின் விளித்தாலுங் குயிலாயின்'

இது பொழிப்பியைபு.

'கரவெழூஉங் கண்ணில் குழியு ளிரவெழூஉம்'
(நான்மணி ௧௬)

இஃது ஒரூஉவியைபு.

'பொருசமத் தெழுவனர் பொருவினர் விரைவனர்'

இது கூழையியைபு.

'நீருந் தீயு மாகிய விறைவனும்'

இது மேற்கதுவாயியைபு.

'பொருவனர் விடுகணை தகைவன ரெதிர்வனர்'

இது கீழ்க்கதுவாயியைபு.

'இயற்கையி னுடைமையின் முறைமையிற் கிழமையின்'
(தொல், சொல், வேற்றுமையியல், (௧௯)

இது முற்றியைபு.

'காம்பிவர் தோளுங் கருமதர் மழைக்கணும்'

இது சீர்வகைப் பொழிப்பு,

'பகலுங் கங்குலு மகலா தொழுகும்'

இது சீர்வகை மேற்கதுவாய். ஏனையவற்றிற்குச் சீர்வகை வந்துழிக்காண்க. இவற்றிற்கு எழுத்தியையபினும் சொல்லியையபினும் ஏற்றன கொள்க.[1] வெவ்வேறாகக் கோடல் அரிதென்றுணர்க.

**ஆய்வுரை :**

இஃது இயைபுத் தொடையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) ஈறு ஒன்றிவரின் இயைபுத் தொடையாம் எ-று.

இங்கு 'ஒன்றுதல்' என்றது அடிதோறும் எழுத்தும் சொல்லும் ஒன்றிவருதலை. எனவே எழுத்தடியியைபு, சொல்லடியியைபு என இயைபுத்தொடை இருவகைப்படும் என்பர் பேராசிரியர். இயைபின் யாப்பு - இயைபுத் தொடை. 'இறுவா யொப்பினஃ தியைபென மொழிப' என்பது இளம்பூரணர் கொண்ட பாடம்.

**கசு. அளபெழின் அவையே அளபெடைத் தொடையே.**

**இளம்பூரணம் :**

என் — எனின். அளபெடைத்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) அடிதொறும் அளபெழத் தொடுப்பின் அஃது அளபெடைத் தொடையாம் என்றவாறு.[2]

'ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட்டது' (குறள் ககஎசு)

என வரும். (கசு)

**பேராசிரியம் :**

இது முறையே அளபெடைத்தொடை உணர்த்துதல் நுதலிற்று.

---

1. பேராசிரியர் அடியியைபிற்கு மட்டுமே உதாரணங் காட்டினார். அடிதொறும் வரும் விகற்பத் தொடைக்கும் நச்சினார்க்கினியர் உதாரணங் காட்டியுள்ளமை காண்க.

2. அளபு எழுதல் - எழுத்தின் மாத்திரை மிகநீண்டொலித்தல். அடிதொறும் அளபெடைவரத் தொடுப்பது அடியளபெடைத்தொடையாகும்.

(இ-ள்) அடிமுதற்கண் எழுத்துக்கள் அளபெழுந்தனவாயின் அவை அளபெடைத்தொடை எனப்படும். (எ-று).

'அவை' யென்றது, உயிரளபெடையும் ஒற்றளபெடையு மென்றிரண்டென்பது கோடற்கு.[1]

"பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கி" (கலி 5)

என்பது உயிரளபெடை.

"கஃஃ றென்னுங் கல்லதர்க் கானிடைச்
சுஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை"

என்பது ஒற்றளபெடை.

இவை கட்டளையடியொடு தொடுக்குங்கால் உயிரளபெடை முந்நூற்று முப்பத்துமூன்றாம். அவை மூன்று பாவினும் வருங் கால் உரியசைச்சீர் நான்கும், உரிமுதற்சீர் எட்டும்[2], நேரசையு[3] மெனப் பதின்மூன்றும் ஒழித்து, ஒழிந்தவற்றுள் வரும்.

அவை ஆசிரியத்துள் நேர்முதற்சீரேழும், நிரைமுதற்சீரேழும்; வெண்பாவினுள் நேர்முதற்சீரொன்பதும் நிரைமுதற்சீரொன்பதும்;[4] கலிப்பாவினுள்ளும் உரிமுதற்சீரெட்டொழித்து நேர்முதற்சீரெட்டும், நிரைமுதற்சீரெட்டும் எனப் பதினாறுமாக, நாற்பத்தெட்டுச் சீர்க்கண்ணும் வருமென்பது. அங்ஙனம் வருங்கால் ஆசிரியத்து நூற்று நாற்பத்தேழும், வெண்பாவினுள் நூற்றாறும், கலிப்பாவினுள் எண்பதுமாகி முந்நூற்றுமுப்பத்து மூன்றாம்.

---

1. உயிரளபெடை, ஒற்றளபெடை இரண்டினையுந் தழுவிக்கோடற்பொருட்டு 'அவை' எனப்பன்மையாற் சுட்டினார்.

2. உயிரளபெடைக்கு வாராத சீர்கள் 13. உரியசைச்சீர் நான்கு:- வண்டு, மின்னு, வரகு, அரவு. உரிமுதற்சீர் எட்டு:- போதுபூ, மேவுசீர், விறகுதீ, உருமுத்தீ, நீடுகொடி, நாணுத்தளை, குளிறுபுலி, விரவுகொடி.

3. நேரசையும் என்ற பாடமே பொருத்தமாகும். நிரையசையும், நிரைநுந்தையும் என்ற பாடங்கள் பொருத்தமற்றன. ஈண்டு 'நேரசை' என்றது ஒரெழுத்துத் தேமாவாகிய 'நுந்தை' என்னும் சீரினை.

4. வெண்பாவினுள் வரும் நேர்முதற்சீர் 9

1. ஞாயிறு 2. போரேறு. 3. தேமா. 4. பாதிரி. 5. நன்னாணு 6. பூமருது 7. மாசெல்வாய் 8. மாவருவாய். 9. காருருமு.

நிரை முதற்சீர் 9.

1, வலியது 2. கடியாறு. 3, புளிமா. 4, மழகளிறு 5. கணவிரி. 6. மாசெல்வாய். 7. புலிசெல்வாய். 8. புலிவருவாய். 9. நனிமுழவு

அவை, ஆசிரியத்துள் இருபத்தொன்றும், வெண்பாவினுட் பதினொன்றுமாக முப்பத்திரண்டு நிலங் களைந்துபெறப்பட்டன.

> "உரியசைச்சீர் நான்கு முரிமுதற்சீ ரெட்டும்
> அளபெடைக்கு நுந்தையேயோ டாக—வொருநாற்பத்
> தெண்சீரான் முந்நூற்று முப்பத்து மூன்றென்ப
> ரொண்சீர் பெருமுறையா னுய்த்து"

எனவும்,

> "நேரேழ் நிரையேழ் முதற்சீர் முதற்பாவிற்
> கோரேழான் மூவேழ் நிலமிலவா—னேராதி
> யொன்ப திரண்டு நிரையாதி வெண்பாவிற்
> கென்றிவை முப்பத் திரண்டு"

எனவும்,

> "நூறொடு நாற்பத்தே ழாமகவ லூற்றின்மே
> லாறு தொடைவெள்ளைக் காகுமா — லேறுதுள்ளற்
> கெண்பதா மீரேழ்சீ ரொன்பஃ தெண்ணிரண்
> டென்றுமாம் பாமூன் றிடத்து"

எனவும் இவற்றை விரித்துக்கொள்க[1]

ஈரொற்றளபெடை கலிப்பாவினுள் வராது; என்னை? அது துள்ளலோசை தள்ளிநிற்றலின். அங்ஙனமாதல்,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (தொல். செய். 11) அறிக.[2]

---

1. ஆசிரியத்திற்கு நேர்முதற்சீர் ஏழும் நிரைமுதற்சீர் ஏழும் எனப்பதினான்கும், வெண்பாவிற்கு நேர்முதற்சீர் ஒன்பதும் நிரைமுதற்சீர் ஒன்பதும் எனப் பதினெட்டும், கலிக்கு நேர்முதற்சீர் எட்டும் நிரைமுதற்சீர் எட்டும் எனப் பதினாறும் எனநாற்பத்தெட்டுச் சீர்களாலும் மூன்றுபாவிற்கும் வரும் உயிரளபெடை முந்நூற்று முப்பத்துமூன்றாகும்.

ஆசிரியத்தில் நேர்முதற்சீர் ஏழற்கும் எழுத்துப் பெருகியநிலத்தில் பதினான்கும் நிரைமுதற்சீர் ஏழற்கும் எழுத்துச் சுருங்கியநிலத்தில் ஏழும் ஆக 21 நிலம் களையப்படும். வெண்பாவில் நேர்முதற்சீர் ஒன்பதற்கும் ஒன்பதும், நிரைமுதற்சீர் இரண்டற்கு இரண்டும் ஆக 11 நிலம் களையப்படும். ஆக இரண்டுபாவிற்கும் களையப்படும் நிலம் 32. கலிப்பாவிற் களையப்படும் நிலம் இல்லை.

ஆசிரியத்துக்கு 147. வெண்பாவுக்கு 106, கலிப்பாவுக்கு 80 ஆக மூன்றுபாவிற்கும் உயிரளபெடை 333.

2. ஒற்றளபெடை என்பது, ஒற்று இரண்டாய் இரட்டித்து நின்று அளபெடுத்த தாதலின் அதனை 'ஈரொற்றளபெடை' என்ற பெயராற் குறித்தார் பேராசிரியர். ஒற்று இரண்டாய் அளபெடுத்து வரும் ஒற்றளபெடை துள்ளலோசைக்கு ஒவ்வாததாய் விலகி நிற்றலின் அது கலிப்பாவினுள் வாராது என்றார்.

இனி, ஆசிரியத்துள் தேமா புளிமா வென்னும் இரண்டும், வெண்பாவினுள் தேமா, புளிமா, மாசெல்வாய் புலிசெல்வா யென்னும் நான்குமாகச் சீராறன்கண்ணும் பெற்றதொடை நாற்பத்தைந்து. இவை, ஆசிரியத் திருபத்தொன்றும், வெண் பாவினு ளிருபத்துநான்கு மெனப்படும். இவை ஆசிரியத்துண் மூன்றும் வெண்பாவினுள் இரண்டுமாக ஐந்துநிலங் களைந்து பெறப்பட்டன. களையுநிலம் அதனிற் சுருங்குவதில்லை.

"தேமா புளிமா மாபுலிசெல் வாயென்றா
நானாற்பத் தைந்தொற் றளபாகும் — வேறு
தனித்தொலி யொன்றா களையுநில மூன்றா
முதற்பாவின் வெள்ளைக் கிரண்டு"

"எழுமூன்றா மாசிரியத் தெண்மூன்றாம் வெள்ளைக்
கழியாத வீரொற் றளபு"

என இவற்றை விரித்துரைத்துக்கொள்க. ஆக அளபெடைத் தொடை இரண்டுங் கூட்டிப் பெற்றதொடை (378) முந்நூற் றெழுபத்தெட்டு [1] ஆக முதற்றொடை இருபத்திரண்டனானும்[2] பெற்றதொடை (9820) ஒன்பதினாயிரத்தெண்ணூற்றிருபஃது.

"ஒன்பதி னாயிரத் தெண்ணூற் றிருபஃதா
மந்தமில் காட்சி யளபெடைத்தே
வந்த விருபத்தி ரண்டு" (கூ௭)

**நச்சினார்க்கினியம் :-**

இது முறையே அளபெடைத் தொடை கூறுகின்றது.

(இ-ள்.) அடி முதற்கண்ணே எழுத்துக்கள் அளபெழுந்தன வாயின் அவை அளபெடைத்தொடை எனப்படும். (எ-று.)

---

1. உயிரளபெடை 333, ஒற்றளபெடை 45 ஆக இரண்டுங்கூட்டப்பெற்ற தொடை 378.

2. முதற்றொடை இருபத்திரண்டாவன:

அடிமோனை, தலையாயெதுகை, அடியெதுகை, எழுத்தடியியைபு, சொல்லடி-யியைபு, வழிமோனை, வருக்கமோனை, உயிரெதுகை, சொல்முரண், பொருள்-முரண், சொல்லும்பொருளுஞ்சொல்லொடுமுரணுதல், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதல், சொல்லும்பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணுதல், மூன்றாமெழுத்தொன்றதுகை, வருக்கவெதுகை, நெடில்மோனை, வல்லினவெதுகை, மெல்லினஎதுகை, ஆசிடையெதுகை, உயிரளபெடை, ஒற்றளபெடை.

அவையென்றார், உயிரளபெடையும் ஒற்றளபெடையுங் கோடற்கு. உ-ம்.

'உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழியென் னெஞ்சு'
(திருக்குறள், கஉ00)

இது கட்டளை உயிரளபெடை.

'பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்க'

இதுவும் இருவகையடியும் வந்த உயிரளபெடை

'எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு'

இது கட்டளை யொற்றளபெடை.

'கஃஃ றென்னுங் கல்லதர்க் கானிடைச்
சுஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை'

இது சீர்வகை யொற்றளபெடை. இவ்வொற்றளபெடை கட்டளைக்குக் கொள்ளாம்;[1] ஒழிந்தனவற்றிற்கும் வந்துழிக் காண்க. இவற்றிற்கு இணை முதலியன கொள்ளாம், சிறப்பின்மையின்.

**ஆய்வுரை :**

இஃது அளபெடைத் தொடையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) அளபெடைவரத் தொடுப்பது அளபெடைத் தொடையாகும். எ-று.

மேற்குறித்த மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்னும் ஐந்து தொடைகளும் பாட்டின் அடிதோறுந் தொடர்ந்து வருவதற்குரிய தொடைகளாகும்.

கசு. ஒருசீ ரிடையிட் டெதுகை யாயின்
பொழிப்பென மொழிதல்[2] புலவர் ஆறே.

**இளம்பூரணம் :**

என்—எனின், பொழிப்புத்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

1. 'இவ்வொற்றளபெடை கட்டளைக்குக் கொள்ளாம்' என்றது, சீர்வகையொற்றள பெடையினை.

2. 'மொழிப' எனப்பாடங் கொண்டார் பேராசிரியர்.

(இ - ள்.) ஒருசீ ரிடையிட்டு எதுகையாயிற் பொழிப்புத் தொடையாம் என்றவாறு.[1]

எதுகையென ஓதினார் ஆயினும், 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்'[2] என்பதனான் மோனை இயைபு முரண் அளபெடை என்பனவும் பொழிப்புத் தொடையாம் என்று கொள்ளப்படும்.

உதாரணம்

'அரிக்குரற் கிண்கிணி யரற்றுஞ் சீரடி'
(யாப் வி. ப. க௩0)

இது பொழிப்பு மோனை.

'பன்னருங் கோங்கின் நன்னலங் கவற்றி'
என்பது பொழிப்பெதுகை. (யாப். வி. ப. க௩ச)

'சுருங்கிய நுசுப்பிற் பெருகுவடந் தாங்கி'
என்பது பொழிப்பு முரண். (யாப் வி. ப.கசஎ)

'கடலே, கானலங் கழியே கைதையந் துறையே'
என்பது பொழிப்பியைபு

'பூஉங் குவளைப் போஒ தருந்தி' (யாப். வி. ப. கருஅ)
என்பது பொழிப்பளபெடை. (கூச)

**பேராசிரியம்:**

இது, பொழிப்பெதுகையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒரு சீரிடையிட்டு எதுகையாயிற் பொழிப்பாம் (எ - று).

இடையிடினெனவே முதற்சீர் நிற்பதாயிற்று. 'எதுகை யாயின் எனவே மூன்றாஞ்சீரோடு தொடுப்பதாயிற்று.[3] இவற்றுள்

---

1. ஒருசீர் இடையிட்டுவருதலாவது அடியின் முதற்சீரினும் மூன்றாஞ்சீரினும் மோனை முதலாயினவரத்தொடுத்தல்.

2. வந்ததுகொண்டு வாராதது முடித்தலாவது, ஒருங்கு எண்ணப்படுவன-வற்றுள் ஒன்றனைப்பகுத்து இலக்கணங்கூறியவழி, வந்த அவ்விலக்கணத்தினை இங்கு விதந்து கூறப் படாதனவாய் அவற்றொடுதொடர்புடைய ஏனையவற்றின் கண்ணும் கூட்டி முடித்தலாகும்.

'ஒருசீர்இடையிட்டு எதுகையாயின் பொழிப்பு' என எதுகைத்தொடையைக் குறித்து ஆசிரியர் ஓதினாராயினும், பொழிப்பு எனப்படும் இவ்வமைப்பு, மோனை இயைபு முரண் அளபெடை எனவரும் ஏனைத்தொடைகட்கும் ஒக்கும் என்பதாம்.

3. இங்குப் பொழிப்புத்தொடையின் கணக்குப்பற்றிய உரைத்தொடர்கள் ஏடெழுதுவோரால் விடுபட்டிருத்தல்கூடும் எனக் கருதவேண்டியுளது.

ஆசிரியம் களைவன களையப்பெற்ற தொடை நூற்றுநாற்பதென வும், வெண்பா களைவன களையப்பெற்ற தொடை நூற்றுமூன் றெனவுங் கொள்க.

"நிரைமுதற்சீர் பன்னிரண்டுங் கீழ்நிலத்துள் ஒன்ற
வருகலி மூந்நூற்றெட் டாம்"[1]

எனவும்

'மேவுசீர் வெள்ளைக்கொன் றேற்கிளை முற்றே
லோரிரு நூற்றுமுப்பத் தெட்டாகு மாக
விருநூறு நானூறொ டேழ்பத்தைந் தாக
வருமுற்று மொன்றாம் வகை"[2]

எனவும் இவை முற்றெதுகைக்கு உரைச்சூத்திரம்.

இன்னும் 'புலவராறே' என்று மிகுத்துச் சொல்லியதனானே அமைவன வேறுளவெனத் தழீஇப் புகுந்தவற்றுள் ஈண்டுக் கூறாத அந்தாதித்தொடையும் ஆமாறு சொல்லிக் கொள்க. அவற்றை விகற்பத்தொடையாகிய ஒரூஉத் தொடையுங்[3] கூறுவது. (௯அ)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்த முறையானே பொழிப்பிற்கெல்லாம் இலக்கணங்கூறுகின்றது.

(இ-ள்.) ஒரு சீர் ......... மொழிதல் பொழிப்பு எ-து ஒரு சீரை நடுவே யிட்டுவைத்து எதுகையாயிற், பொழிப்பெதுகை யென்று பெயர் கூறுக; அன்றிப் பொழிப்பு ஒருசீர் இடையிட்டு மோனை முரணியைபாய் வந்தனவாயிற் பொழிப்பு மோனை, பொழிப்பு

1. இவ்வெண்பாவின் முன்னிரண்டுவரிகளும் இதற்குமுன் ஆசிரியம் வெண்பாக்களின் தொடைக்கணக்குப்பற்றிய பாக்களும் எடுகளில் விடுபட்டிருத்தல் வேண்டும்.

2. 'ஒருசீரிடையிட்டு எதுகையாயின்' எனவே இடையிடாது நாற்சீர்க்கண்ணும் வரும் முற்றுவிகற்பமும் இச்சூத்திரத்தால் தழுவிக்கொள்ளப்பெற்றது. முற்றெதுகைபற்றிய இவ்வுரைச்சூத்திரத்திற் கூறப்பட்ட தொடக்கணக்குப்பகுப்பு விளங்கவில்லை.

3. ஒரூஉத்தொடை வருஞ்சூத்திரத்தில் தொல்காப்பியனாரால் எடுத்துரைக்கப்படுதலானும் அந்நூற்பாவின் உரையில் இங்குக்குறித்த அந்தத் தொடையொடு விட்டிசைத்தொடை இடம்பெற்றிருத்தலானும் இங்குள்ள 'ஒரூஉத் தொடை' என்பது 'விட்டிசைத்தொடை' என்றிருத்தல் வேண்டும் என்பர் சி. கணேசையர்.

முரண், பொழிப்பியைபு எனப் பெயர் கூறுக; புலவராறே எ-து இங்ஙனம் பெயர் கூறுதல் ஆசிரியர் கொண்டநெறி. எ-று.

இங்ஙனம் எதுகையைப் புலப்பட வைத்து ஏனைய அருத்தாபத்தியாற் கூறியது, எல்லாவற்றினும் எதுகை சிறந்து தோன்றுதல் கருதி.[1] இவற்றிற்கு உதாரணம் முன்னர்க் காட்டினாம்

**ஆய்வுரை :**

இஃது, ஓரடிக்குள் வருதற்குரிய விகற்பத் தொடைகளுள் பொழிப்புத் தொடையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) ஒருசீர் இடையிட்டு (முதற்சீரும் மூன்றாஞ்சீரும்) எதுகையாய்வரின் அதனைப் பொழிப்பு என வழங்குதல் புலவர் மரபாகும். எ-று.

"எதுகையென ஓதினாராயினும் 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதனால் மோனை, இயைபு, முரண், அளபெடை என்பனவும் பொழிப்புத் தொடையாமென்று கொள்க" என இளம்பூரணரும், "இங்ஙனம் எதுகையைப் புலப்பட வைத்து, ஏனைய அருத்தாபத்தியாற் கூறியது, எல்லாவற்றினும் எதுகை சிறந்து தோன்றுதல் கருதி" என நச்சினார்க்கினியரும் கூறும் விளக்கம் இங்கு நோக்கத்தக்கனவாகும்.

கூரு இருசீர் இடையிடின் ஒரூஉவென மொழிப.

**இளம்பூரணம் :**

என் - எனின், ஒரூஉத்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இரண்டு சீர் இடையிட்டு மோனை முதலாயின வரத்தொடுப்பது ஒரூஉத் தொடையாம் என்றவாறு.[2]

---

1. மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்னும் ஐவகைத் தொடைகளுள் எதுகையை மட்டும் இச்சூத்திரத்தில் வெளிப்பட வைத்து ஏனைய நான்கினையும் அருத்தாபத்தியால் உணர வைத்தது எல்லாத் தொடைகளினும் எதுகைத் தொடை சிறந்து விளங்குதல் பற்றி என்பதாம்.

2. நாற்சீரடியுள் நடுவிருசீர்க்கண்ணுமின்றி முதற்சீரினும் நான்காஞ்சீரினுமாக மோனைமுதலாயினவரத்தொடுப்பது ஒரூஉவென்னுந் தொடைவிகற்பமாம் என்றவாறு.

'அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி'
(யாப் வி. ப கரு0)

என்பது ஒரூஉ மோனை.

'மின்னிவர் ஒளிவடந் தாங்கி மன்னிய' (யாப் வி. ப கருச)

என்பது ஒரூஉ வெதுகை.

'குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து'
(யாப். வி ப. கசஎ)

என்பது ஒரூஉ முரண்.

'நிழலே இனியதன் அயலது கடலே' (யாப். வி. ப. கருரு)

என்பது ஒரூஉ வியைபு.

'காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்'
(யாப். வி. ப. கருஅ)

என்பது ஒரூஉ அளபெடை. (கூரு)

**பேராசிரியம் :**

இது, நிறுத்தமுறையானே ஒரூஉத்தொடை உணர்த்துகின்றது.

(இ-ள்.) நாற்சீருள்ளும் இடையிருசீரொழித்து, ஒழிந்த முதற்சீரும் நான்காஞ்சீரும் இரண்டாமெழுத் தொன்றிவரத்தொடுப்பின் அதனை ஒரூஉவென்ப (எ-று).

அதிகாரத்தான் ஒரூஉவெதுகை யெனப்பட்டது.[1] அதுவும் பொழிப்புப்போல வந்த எழுத்தே வருதலும், கிளையெழுத்து வந்து கிளையொரூஉ எனப்பட்டு இரண்டாதலுமுடைத்து.

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை" (ஐங்குறு)

என்பது ஒரூஉவெதுகைத்தொடை.[2]

---

1. 'ஒருசீரிடையிட்டெதுகையாயின்' என மேலைச்சூத்திரத்து எதுகை அதிகாரப்பட்டமையின், ஈண்டு 'இருசீரிடையிடின் ஒரூஉ' என்றது, 'ஒரூஉவெதுகையெனப்பட்டது' என்றார் பேராசிரியர். பொழிப்பு, ஒரூஉ என்பன, மோனை, எதுகை, முரண், இயையு, அளபெடை ஆகிய தொடைகளுக்கெல்லாம் பொதுவாய் ஓரடிக்குள் கொள்ளப்படுந் தொடை விகற்பங்களாகவே தொல்காப்பியனாராற் குறிக்கப் பெற்றன வென்பது இளம்பூரணர் கருத்தாகும்.

2. 'உள்ளார்' என முதற்சீரிலும் 'முள்ளுடை' எனநான்காஞ்சீரிலும் எதுகைவந்து இடையிருசீர்களிலும் விடுபட்டமையின் ஒரூஉ வெதுகைத்தொடையாயிற்று.

"சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்று" (அகம்1)
என்பது கிளையொரூஉவெதுகை.[1]

இவை, இரண்டுதொடையுங் கட்டளையடிக்கண் வருங்கால் ஒரூஉவெதுகை ஐஞ்ஞூற்றிருபத்தெட்டாம்.

அவை ஆசிரியத்திற்கு உரியசீர் இருபத்தேழனுள்ளும் நேர் முதற்சீர் பதினான்கும் ஓரோவொன்று உறழ்ந்தஅடி பன்னி-ரண்டனுட், சுருங்கிய நிலந்தொறும் ஒன்பதொன்பதாக நூற்றிருபத்தாறும், நிரைமுதற்சீர் பதின்மூன்றும் பெருகிய நிலத்து ஓரோவொன்று பத்தாக நூற்றுமுப்பஃதுமாக அகவற்றொடை இருநூற்றைம்பத்தாறு ; அவற்றுண் மின்னு, மேவுசீர், நாணுத்தளை என்னும் மூன்று சீரானும் மூன்றுநிலம் முதனிலத்தகற்றிப் பெற்ற தொடை இருநூற்றைம்பத்து மூன்று. வெண்டொடை இருபத்தேழு சீருறழ்ந்த அடி அனைத்தினும் பெற்ற தொடை-நிலை நூற்றெண்பத்தொன்று ; இவற்றுள் மின்னு, மேவுசீர் என்னும் இரண்டனானும் முதனிலத்து இரண்டு நிலங் களைந்து பெற்ற தொடை நூற்றெழுபத்தொன்பதாம்.

இனி, கலிப்பாவினுள் நேர்சீர்முதற் பன்னிரண்டாகப் பெரு-கியநிலத்து ஓரோவொன்று களையப்பெற்ற தொடை நாற்பத்-தெட்டும், நிரைமுதற்சீர் பன்னிரண்டும், சுருங்கிய நிலத்து ஓரோவொன்று களையப்பெற்ற தொடை நாற்பத்தெட்டுமாகக் கலிப்பாவிற்குரிய தொடை தொண்ணூற்றாறும் ஆக மூன்று பாவினும் பெற்ற ஒரூஉத்தொடை ஐஞ்ஞூற்றிருபத்தெட்டாம்.

கிளையொரூஉவும் இவ்வாறே ஐஞ்ஞூற்றிருபத்தெட்டா கவும், அவற்றுமேல் மின்னு, மேவுசீரென்னும் இரண்டும் வெண் பாவினுள் உறழ்ந்த முதனிலையிரண்டுங் களையாது கொள்ளக் கிளையொரூஉத்தொடை ஐஞ்ஞூற்றுமுப்பதாம். ஆகவொரூஉத் தொடை இரண்டனானும்[2] பெற்ற தொடை ஆயிரத்தைம்பத் தெட்டாம் (1058)

"நேராதி யாதி நிலத்தொன்ப தொன்பதாம்
ஈரைந்தா மாசிரியத் தீற்று—நிரையாதி

1. 'சூரலங்' எனமுத஌சீரிலும் 'வாருற்று' எனநான்காஞ்சீரிலும் ர, ரு என்னுங்கிளையெழுத்துக்கள் இரண்டாமெழுத்தாய் ஒன்றிவந்தமையின் கிளை யொரூஉ வெதுகையாயிற்று.

2. ஒரூஉத்தொடை இரண்டாவன ஒரூஉ, கிளையொரூஉ என்பன.

யாக விருநூற் றைம்பத்து மூன்றாதி
நேர்புகா மூன்றனையு நீத்து''

எனவும்,

''மேவுசீர் மின்னுக்குண் முன்னைநிலத் தோரோவொன்
றாகா வொரூஉவெள்ளைக் காதலா னாவன
நூற்றெழுபத் தொன்பதா நோக்கு''

எனவும்,

''முன்பினே ராதி நிரையாதி துள்ளற்கோ
ரொன்றொழியத் தொண்ணூற்றா றாகுங்
கிளைவெள்ளைக்
கொன்றா யிரண்டா னொருவிரண்டு மாயிரத்
தைம்பான்மே லெட்டா மவை''

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

மேலைப்பொழிப்பிரண்டும் முற்றிரண்டும் இவையிரண்டுமென விகற்பத்தொடை ஆறனாலும்[1] பெற்ற தொடை இரண்டாயிரத்தைஞ்ஞூற்றிருபத்தொன்று. (2521) இவை ஆறு தொடையும் ஓரடிக்கண்ணே வருதலின் தளை வழுவப்பட்டனவென்று களையும் நிலமிலவென்பது.

இன்னும் புலவராறென்றதனால், தொடையந்தாதியும் விட்டிசையும் ஒரொவொன்று இரண்டாகி **அசையந்தாதியும் சீரந்தாதியும்** விட்டிசைத்தொடையுங் குறிப்புவிட்டிசையுமென நான்காம்.

ஓரடியுள் இறுதிச்சீருள் ஈற்றசையும் மற்றையடியின்முதற் சீரின் முதலசையும் ஒன்றத் தொடுப்பது **அசையந்தாதி**. அவை தொடுக்குங்காற் கட்டளையடிக்கண் உரியசைச்சீரினை அசையெனக் கொள்ளற்க; இவை பிறசீர்ப்பாற்படுத்துத் தளைகோடலின் அடியிறுதிக்கட் கடியாறு மழகளிறென வந்தவழி, யாறு களிறு என்னும் இரண்டு உரியசையும் நிரையசையாக இயற்றப்பட்டன. ஆயினும், இயற்கை நிரையசையோடு தொடுக்கப்படா;

1. பொழிப்பிரண்டாவன பொழிப்பு, கிளைப்பொழிப்பு என்பன. முற்றிரண்டாவன முற்று, கிளைமுற்று என்பன. 'இவையிரண்டும்' எனச் சுட்டப்பட்டவை முற்கூறிய எழுத்தடியியையு சொல்லடியியையு ஆகிய இரண்டும். ஆக ஓரடிக்குள் வரும் விகற்பத் தொடை ஆறாதல் காண்க.

இரண்டசையும் ஒருசொல்லாயினன்றி அந்தாதியாகாமையி னென்பது[1].

இனி, இறுதிச்சீர் முதற்சீரொடு சேரிற் சீரந்தாதியாம்.

(உ - ம்.) "குன்றகச் சாரற் குதித்தன கோண்மா
மாவென மதர்த்தன கொடிச்சி வான்கண்"

என்பது அசையந்தாதி.

"தழைபூஞ் சாரற் பூத்த முல்லை
முல்லை சான்ற கற்பி னல்லோள்"

என்பது சீரந்தாதி,

இது கட்டளையடிக்கண் வருங்கால் அசையந்தாதி முந் நூற்றிருபத்தைந்தாம். (325)

அவை ஆசிரியத்துள் இரண்டு நேர்பசைச்சீர்க்கும்[2] ஓரெ-ழுத்துத் தேமாவிற்கும்[3] ஏலாமையின் ஒழிந்த நேர்முதற்சீர் பதினொன்றும் உறழ்ந்த அடி நூற்றுமுப்பத்திரண்டனுள் ஒரு சீர்க்கு முதனிலத்தொன்றும் இறுதிநிலத்தொன்றுமென இவ்-விரண்டானும், முதனிலமிரண்டும் இறுதிநிலமொன்றுமென மும்மூன்றாக முப்பத்து மூன்றகற்றி ஒரோ சீர்க்கு ஒன்பதொன்-பதாகப் பெற்ற தொடை தொண்ணூற்றொன்பது. இனி நிரை-முதற்சீருள் நிரைபசைச்சீரிரண்டும் ஒழித்து[4] ஒழிந்த பதினொன்-

1. கட்டளையடிக்கண் உரியசைச்சீர்கள் பிறசீர்ப்படுத்துத் தளைகொள்ளப் படுதலின் அவற்றை அசையெனக் கொள்ளலாகாது. ஓரடியின் இறுதியில் கடியாறு மழகளிறு என உரியசைகள் வருமிடத்து யாறு, களிறு என்னும் இரண்டு உரியசையும் நிரையசையாக இயற்றப்பட்டன. ஆயினும் இவை அந்தாதித் தொடையாய் வருமிடத்துப் பிற இயற்கைநிரையசையொடு தொடுக்கப்படாமல் தம்மொடு தாமே தொடுக்கப்படினே அந்தாதித்தொடையாகும்.

2. நேர்பசைச்சீர் இரண்டாவன-: வண்டு, மின்னு என்பன.

3. ஓரெழுத்துத்தேமா என்றது, 'நுந்தை' என்னுஞ்சீரினை. வண்டு, மின்னு, நுந்தை இம்மூன்றும் ஆசிரியத்துள் அசையந்தாதியாய் வருதற்கு ஏலா தனவாதலின் இவை விலக்கப்பட்டன.

4. நிரைமுதற்சீருள் கடியாறு, மழகளிறு என்பனவற்றுள் உரியசை யிரண்டும் நிரையசை போன்று இயற்றிக்கொள்ளப்படுதலின் அவைதொடை எண்ணிக்கையில் விலக்கப்பட்டனவெனக்கொள்ளவேண்டியுளது. எனவே "நிரைமுதற்சீருள் நிரை பசைச் சீர் இரண்டு மொழித்து" எனவரும் இவ்வுரைத்தொடர் "நிரைமுதற் சீருள் உரியசை யீற்றுச்சீர் இரண்டு மொழித்து" என்று இருத்தல் கூடுமோ என எண்ண வேண்டியுளது.

றும் உறழ்ந்த அடி நூற்றுமுப்பத்திரண்டனுள் முதனிலத் தொன்றுவன இவ்விரண்டாக இருபத்திரண்டு நிலங்களைய ஒவ்வொன்று பத்தாகப் பெற்ற தொடை நூற்றொருபதாக ஆசிரியத்துள் அசையந்தாதி இருநூற்றொன்பதாயின.

வெண்பாவினுள் அசையந்தாதி வருங்கால் நேர்பசைச் சீரிரண்டும், ஓரெழுத்துத் தேமாவும், நிரைமுதற்சீர் பதின்மூன்று மெனப் பதினாறொழித்து ஒழிந்த நேர்முதற்சீர் பதினொன்றும் உறழ்ந்த அடி எழுபத்தெட்டனுள் ஓரோவொரு சீர்க்கு இரண்டாக முதனிலந்தோறுங் களைந்தவழி இருபத்திரண்டொழித்துப் பெற்ற வெண்டொடை ஐம்பத்தாறாம்.

கலிப்பாவினுள் நிரைமுதற்சீர் ஒழித்து ஒழிந்த நேர்முதற்சீர் பன்னிரண்டனானுந் தொடை அறுபதாம். ஆக மூன்றுபாவிற்கும் அசையந்தாதி முந்நூற்றிருபத் தைந்தாயினவாறு கண்டுகொள்க.

'நேர்பசைச்சீர் நுந்தையொழித் தேனைப் பதினொரு
நேராதி முன்பினிரண் டொன்றகற்றிச் — சீராக
நீங்கிய வாறாக நிரைமுதல் பத்தாக
ஈங்கிரு நூற்றொன்ப தென்''

எனவும்,

''நேர்முத லொன்ப தியற்சீ ருரிவெண்சீ
ராகியினி யிவ்விரண் டாங்கொழிப்ப — நேர்பொடு
வெண்பாநீ நுந்தை நிரைமுதல் வீழ்த்தசை
யந்தாதி யைம்பத்தா றாம்''

எனவும்,

''நேரசை யந்தாதி யன்றிக் கலிக்கியையா
வாகலி னாங்கறுப தாம்''

எனவும்;

''அவ்வகை யந்தாதி முந்நூற் றிருபத்தைந்
திவ்வகை முப்பாக் கியற்று'

எனவும் இவ்வுரைச்சூத்திரங்களான் அசையந்தாதி முந்நூற் றிருபத்தைந்தும் ஆயினவாறு அறிந்துகொள்க.

இனிச் சீரந்தாதி நூற்றறுபத்துநான்கு. (164)

அவை, ஆசிரியத்து வருங்கால் நேர்பசைச்சீரிரண்டுந் தேமா விரண்டுமென நான்கனானுந் தத்தம் முதனிலந்தொடங்கி ஓரோ

வொன்று அவ்வாறாக நாலா றிருபத்துநான்காம். இனி, நிரை முதற் சீருள் நிரைபசைச் சீரிரண்டும் புளிமாவு மென மூன் றொழித்து ஒழிந்த பத்துச்சீரானும் வருங்கால் அவை உறழ்ந்த அடி பன்னிரண்டனுண் முதனிலம் மூன்றும் பெருகிய நிலத் திரண்டுமாக வைந்து ஒழித்து ஒரோவொன்று எவ்வேழாக எழுபதாம். ஆக, அகவற்றொடை தொண்ணூற்று நான்காம்.

இனி, வெண்பாவினுள் வருங்கால் நேர்பசைச் சீரிரண்டுந் தேமா விரண்டும் நிரைமுதல் வெண்சீரிரண்டும் நிரைமுதல் நிரையீறாகலிற் கணவிரி எட்டுமாகச் சீர் பதினான்கும் ஒழித்து ஒழிந்த சீர் பதின்மூன்றனானும் பெற்ற அடி தொண்ணூறாம். அவற்றுள் வரகும் அரவும் புளிமாவும் என்னும் மூன்றும் பெற்ற அடி பத்தொன்பதாகலின், அவற்றுள் வரகிற்குப் பெருகிய நிலத்து மூன்றும், அரவும் புளிமாவுஞ் சுருங்கிய நிலத்தும் பெருகிய நிலத்தும் ஒரோவொன்றாக நான்குமாக ஏழுமொழித்து ஒரோவொன்று நான்காகப் பெற்ற அடி பன்னிரண்டாம். காருரும. மாவருவாய் என்னும் இரண்டனானும் பெற்ற அடி பன்னிரண்டனுள் முதனிலத்து மும்மூன்றாக ஆறொழித்துப் பெற்ற தொடை இருமூன்றாம். பாதிரியேழும் மாசெல்வாயு மென எட்டனானும் பெற்ற அடி ஐம்பத்தொன்பதாகலின் அவற்றுள் ஈரெழுத்துப் பாதிரி மூன்றுஞ் சுருங்கிய நிலத்து ஒரோவொன்றும், பெருகியநிலத்து இவ்விரண்டுமாக மும்மூன்-றொன்பதும் ஒழிந்த மூவெழுத்துப் பாதிரி நான்கும். மாசெல்-வாயுமென ஐந்துஞ் சுருங்கிய நிலத்து இவ்விரண்டாகப் பத்துமெனப் பத்தொன்பதுங் களைந்து பெற்றதொடை நாற்-பதாமெனக் கொள்க. ஆகக் களையும் நிலம் முப்பத்திரண்டு ஒழித்து ஒழிந்த தொடை வெண்பாவிற்கு ஐம்பத்தெட்டாயின.

இனிக் கலிப்பாவினுள் வெண்சீர் நான்கனானும் பெற்ற அடி இருபஃதாகலின், அவற்றுண் மாசெல்வாய் உறழ்ந்த அடி ஐந்தினும் ஏறியநிலத்திரண்டும், புலிவருவாய் உறழ்ந்த அடிஐந்தினுஞ் சுருங்கிய நிலத்திரண்டும், ஒழிந்த மாவருவாய் புலிசெல் வாய்கள் இரண்டும் முன்னும் பின்னும் ஒரோவொன்றாக நான் காகும்; ஆக எட்டுங் களைய ஒரோவொன்று மும்மூன்றாகப் பெற்ற தொடை பன்னிரண்டாம். ஆக மூன்று பாவிற்குஞ் சீரந்தாதி நூற்றறுபத்து நான்காம்.

"வண்டொன்று தேமா விரண்டு வலியதுபன்
னொன்றொடச்சீ ரந்தாதிக் கீரேழாம் நேராதி
பத்தும் புளிமா வரகிரண்டும் வெள்ளைக்காம்
ஒத்த கலிக்குறிச்சீர் நான்கு"

எனவும்,

"நிரைநிரைபத் தெவ்வேழா மூன்று மிரண்டு
முதனில னீக்கிமூன் றாக வகவலி+
நேராதி நான்கு மெழுவாய் நிலந்தொடங்கி
யாறாகு மந்தாதிச் சீர்"

எனவும்,

"ஆக வகவற்சீ ரந்தாதி (தொண்ணூற்று)
நால்வகை யாக நவிற்று"

எனவும்,

"வரகு பெருநிலத்து மூன்றகற்றி மற்றை
அரவு புளிமா வருகிரண்டு மாற்றி
முதனிலத்துக் காருருமு மாவருவாய் மும்மூன்
றெனவுரை யந்தாதிக் கீண்டு"

எனவும்,

"ஈரெழுத்துப் பாதிரிமூன் றீரருகு மோரிரண்டாய்
மூவெழுத்துப் பாதிரிக்கு முன்னிரண்டாய் மாசெல்வா
யொன்றற்கு மவ்வா றொழித்துரைப்ப நாற்பஃதாம்
வெண்டொடைச்சீ ரந்தாதி வேறு"

எனவும்,

"விரித்தசீ ரந்தாதி வெண்டொடை யைம்ப
தெனப்படு மெட்டுமே லிட்டு"

எனவும்,

"மாசெல்வா யீற்றும் புலிவருவாய் மற்றிடத்தும்
ஏனை யிரண்டு மிரண்டிடத்து மாக
இரண்டிரண்டு நீக்கிச்சீ ரந்தாதி துள்ளற்
கமைந்த தொடைநான்மூன் றாம்"

எனவும்,

"பாத்தோறும் வந்தசீ ரந்தாதி பாற்படுப்ப
நூற்றோ டறுபத்து நான்கு"

எனவும், இவ்வாற்றானே சீரந்தாதியாமா றுரைத்துக் கொள்க.

"அந்தாதி யோரிரண்டு மாகத் தொடைநானூற்
றெண்பான்மே லொன்பா னெனல்"

இனி, விட்டிசைத் தொடை கூறுங்கால் எழுத்தினானும் எழுத்தல் ஓசையானும் விட்டிசைத்தல் இருவகைப்படும்.

"அ உ வறியா வறிவி லிடைமகனே
நொஅலைய னின்னாட்டை நீ" (இடைக்காடனார்)

என்பதெழுத்தினானாகியது.

விட்டிசையின் இறுதியடி வல்லொற்றடுப்பின் விட்டிசை வல்லொற்றெதுகை யென்பாரும் உளர். ஆண்டு வல்லொற்றெதுகை யா (மாறா) காமையின் அது வேண்டுவதன்று; வேண்டினும் விட்டிசையெனவே அடங்குமென்பது.

"த என்று தாமிசைப்ப தாகியே தண்ணுமைகேட்
டெ என் றெழுந்தார் பலர்"

என்பது குறிப்புவிட்டிசை.

இவை கட்டளையடிக்கண் வருங்கால் ஒரோவொன்று நூற்றறுபத்து நான்காகி முந்நூற்றிருபத் தெட்டாம். (328)

அவை வருங்கால் நேர்பசைச் சீரிரண்டும் ஓரெழுத்துத் தேமாவும் போதுபூவிரண்டும் ஒழித்தொழிந்த தேமாவும் பாதிரியிரண்டும் போரேறு இரண்டும் [ஒன்றிக் கலிப்பாவிற்குத் தொடை நாற்பஃதாகவும், இரண்டு விட்டிசையுந் தொகுப்பப்] பூமரு. திரண்டும் நேர்முதல் வெண்சீரிரண்டுமாக ஒன்பதுசீரும் பற்றி விட்டிசைக்குமெனவுங் கொள்க. அவற்றை அகவற்றொடை ஒரோவொன்றெழுபதாகவும், வெண்டொடை ஒரோவொன்றைம் பத்து நான்காகவும் கலிப்பாவிற்குத் தொடை நாற்பஃதாகவும் இரண்டு விட்டிசையும் தொகுப்பத் தொடை முந்நூற்றிருபத்தெட்டாயினவாறு கண்டுகொள்க.

இவை ஆசிரியத்துப் பதினான்கும் வெண்பாவினு ளொன்பதுமாக இருபத்துமூன்று நிலங் களைந்து பெற்றன.

"நேர்பிரண்டு நேர்பு முதலிய சீர்நான்கு
மோரெழுத்துத் தேமாவும் விட்டிசைக் கொன்றாவா
மேனை நிரைமுதற் சீர்களு மிவ்வாறே
யாகா தனவென் றறி"

எனவும்,

"அகவற்கேழ் நேராதி யொன்பதும்வெண் பாவிற்
குளவென் றுரைக்கப் படும்"

எனவும்,

"வெள்ளையு ளொன்ப தகவலி னீரேழாய்க்
கொள்ள விருபத்து மூன்றாகுந் துள்ளலுட்
போரேறு பாதிரி பூமருது மாசெல்வாய்
மாவருவா யெட்டும் வரும்"

எனவும்,

"அகவற் கெழுபதா மைம்பத்து நான்கா
நிகரற்ற வெள்ளைக்குத் துள்ளல் புகரற்ற
நாற்பதாய் விட்டிசை நூற்றறு பத்துநான்
கேற்பதா மோரொன் றெனல்"

எனவும்,

"இருவிட் டிசைமுந்நூற் றீரொருபத் தெட்டா
வருவித்துக் கோடல் வழக்கு"

எனவும், இவற்றைப் பதநெகிழ்த்துரைக்க.

"விகற்பமா றந்தாதி விட்டிசைநான் கேற்றி
யிசைத்தவீ ரைந்து தொடையாற் றொடைத்தொகை
மூவா யிரத்தொடு முந்நூற்று முப்பத்தா
றாமா றறிந்து கொளல்"

"இருபத் திரண்டு மிவைபத்து மாக
வருவித்த முப்பத் திரண்டா னொருபத்தின்
மூவா யிரத்தொரு நூற்றைம்பத் தாறைந்நூற்
றோடோரைம் பத்திரண் டேற்று"

என விவை உரைச் சூத்திரம். ஆகத் தொடை முப்பத்திரண்டனாற் பெற்றன பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு (13,708) (சுகூ)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்தமுறையானே ஒரூஉவிற்கெல்லாம் இலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்.) இரண்டு சீரை நடுவேயிட்டுவைத்து முதற்சீரும் நாலாஞ்சீரும் ஒன்றிவரின் ஒரூஉமோனை, ஒரூஉவெதுகை, ஒரூஉ முரண், ஒரூஉவியைபு எனப்படும் எ-று.

ஒரூஉவை விதந்தோதினார்,[1] வெண்பாவிற்குச் சிறந்துவருதலானும், ஆசிரியத்திற்கு ஏனையவற்றிற் சிறந்துதோன்றுதலானும். உதாரணம் முன்னர்க் காட்டினாம். (௯௮)

**ஆய்வுரை :**

இஃது, ஒரூஉத் தொடையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) இரண்டு சீர் இடையிட்டு (முதற்சீரிலும் நான்காஞ் சீரிலும் மோனை முதலாயின வரத் தொடுப்பின் அதனை ஒரூஉத் தொடையென்று கூறுவர் ஆசிரியர் எ று.

**௯௬ சொல்லிய தொடையொடு வேறுபட் டியலின்**
**சொல்லியற் புலவர்அது செந்தொடை என்ப.**

**இளம்பூரணம் :**

என் – எனின். செந்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) மேற்சொல்லப்பட்ட தொடையும் தொடை விகற்பமும் போலாது வேறுபடத் தொடுப்பது செந்தொடையாம் என்றவாறு.[2]

''பூத்த வேங்கை வியன்சினை ஏறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே''
(யாப். வி. ப. ௧௭௬)

என வரும்.

இனி நிரனிறுத்தியற்றலும் இரட்டையாப்பும் மொழிந்தவற்றியலான் (செய்யுளியல். ௮௭) வருமாறு

''அடல்வேல் அமர்நோக்கி நின்முகங் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழலரும் பார்க்குங்
கடலுங் கனையிருளும் ஆம்பலும் பாம்புந்
தடமதி யாமென்று தாம்'' (யாப். வி. ப. ௯௮௨)

---

1. ஒரூஉவை விதந்தோதுவதாவது, 'எதுகையாயிற் பொழிப்பு' என்றாற்போன்று எதுகை முதலிய தொடைகளுடன் கூட்டிக் கூறாமல் 'ஒரூஉ' என்னும் தொடை விகற்பத்தை மட்டும் தனித்து எடுத்து இலக்கணங் கூறுதல்.

2, சொல்லிய தொடையொடு வேறுபட்டியலுதலாவது மேற்குறித்தவண்ணம் மோனையெதுகை முதலாகப் புலவன் செயற்கைவகையாற் கருதியமைக்கப்பெறுந்தொடைகள் போலாது சொற்களின் இயல்புவகையான் அமைந்த தொடை செந்தொடையெனப்படும் என்பதாம்.

செந்தொடை - விகாரவகையானன்றி இயல்பாகவே அமைந்ததொடைநலம்.

இது பொருளான் வேறுபட்ட துணையல்லது எழுத்தான் வேறுபடாமையின் எதுகைத் தொடையாயிற்று. இனி, இரட்டைத் தொடை வருமாறு:

"ஒக்குமே ஒக்குமே ஒக்குமே யொக்கும்
விளக்கினிற் சீறெரி ஒக்குமே ஒக்கும்
குளக்கொட்டிப் பூவின் நிறம்." (யாப். வி. ப. கஅ௰)

இதுவுஞ் சொல்லிய தொடைப்பாற் பட்டவாறு காண்க.

இணைமோனை, கூழைமோனை, மேற்கதுவாய்மோனை, கீழ்க்கதுவாய் மோனை, முற்றுமோனை முதலாயினவும் அந்தாதித் தொடையுங் கூறாத தென்னையெனின், 'தெரிந்தனர் விரிப்பில் வரம்பில வாகும்' என வருகின்ற சூத்திரங் கூறுகின்றாராதலின். அச் சூத்திரத்தின்காறும் பாட்டிற் கின்றியமையாத தொடையுணர்த்தினாரென்று கொள்க.[1] (கூசா)

**பேராசிரியம்**:

இது, மேற் செந்தொடையாமெனக் கூறியதுணர்த்துகின்றது. எய்தாத தெய்துவித்ததூஉமாம்.

(இ-ள்) மேற்கூறப்பட்ட தொடை எல்லாவற்றோடும் ஒவ்வாதுவரின் அதனை இயற்கைச் சொல்லாற் செய்யுள் செய்யும் புலவரது செந்தொடை[2] யென்று சொல்லுப ஆசிரியர் (எ-று).

---

1. முதலிரு சீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத்தொடுப்பது இணையெனப்படும். இறுதிச்சீர்க்கண் இன்றி முதல்மூன்றுசீர்க்கண்ணும் தொடுப்பது கூழையெனப்படும், முதலயற்சீர்க்கண் (இரண்டாஞ்சீர்க்கண்) இன்றி முதற்சீர் மூன்றாஞ்சீர் நான்காஞ்சீர்கள் தொடுப்பது மேற்கதுவாய். ஈற்றயற்சீர்க்கண் (மூன்றாஞ்சீர்க்கண்) இன்றி முதற்சீர் இரண்டாஞ்சீர் நான்காஞ்சீர்க்கண் தொடுப்பது கீழ்க்கதுவாய். (இயைபுத்தொடை இறுதிச்சீரினை முதலாகக் கொண்டு தொடங்குதலின் மூன்றாஞ்சீர்க்கண் இன்றிவருவது மேற்கதுவாய் எனவும் இரண்டாஞ்சீர்க்கண் இன்றிவருவது கீழ்க்கதுவாய் எனவும் கொள்ளப்படும்). நான்கு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது முற்று எனப்படும். இவ்வாறெல்லாந் தொடைவிகற்பங்களைப் பகுத்துரைக்கப்புகின் எல்லையின்றிப் பெருகுமாதலின், ஆசிரியர் இவற்றையெல்லாங்கூறாது பாட்டிற்கின்றியமையாத சிறப்பினவாகிய தொடைகளைமட்டுந் தெரிந்தெடுத்துக் கூறினார். இவ்வுண்மை 'தெரிந்தனர் விரிப்பின் வரம்பில வாகும்' (செய்யுள்-கூஅ) எனப் பின்வரும் சூத்திரத்தால் இனிது புலனாம்.

2. 'சொல்லியற்புலவர்' என்பது, 'இயற்சொற்புலவர்' என மொழி மாற்றியுரைக்கப்பட்டது. இயற்சொற்புலவர்-இயற்கைச் சொல்லாற் செய்யுள் செய்யும் புலவர்.

எனவே, விகாரப்படச் செய்யுள் செய்யுஞ் செந்தொடை இன்னாதென்றானாம்; அஃது;

"இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்
தினமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையு
மெல்லம் புலம்ப நெகிழ்ந்தன தோளே" (அகம். 270)

எனவும்,

"சேயிறா முகந்த நுரைபிதிர்ப் படுதிரைப்
பரானரைப் புன்னை வாங்குசினை தோயும்" (அகம். 270)

எனவும் வரும்.

"பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலின மகவு நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே"
(யாப். வி. ப. 179)

என்பதும் அது.

'இயலின்' என்றதனான் இரண்டடியால் தொடை பெற்று நின்று இரண்டடி யெதுகையாகியவை தம்முள் தொடுக்குங் காற் செவ்வன் தொடுப்பினும் அதனைச் செந்தொடை யென்னாது இரண்டடி யெதுகை யென்றும், இனி ஓரடி இடையிட்டுத் தொடுத்தவழியுந் தொடர்ந்த அடி இரண்டுஞ் செந்தொடையாமாயினும் மூன்றாமடி எதுகைபடத் தொடுத்-தன் மாத்திரையானே அதனை இடையிட்டெதுகையென்றுங் கொள்ளப்படும் என்னை? அவ்வெதுகை ஆண்டுச் சிறந்தமை-யினென்பது. அவை முன்னர்க் காட்டுதும்.

"முன்பொழுது முன்செல்லுந் தூரியமா மந்நிலையே
பின்பொழுது பின்செல்லு நெய்தலா—னன்பிலவே
கொல்யானை வேகப்போர்க் கோக்கோதை மாறேற்ற
பல்யானை மன்னர் பறை"

என வரும். இஃது இவ்விரண்டடிகளது கூட்டத்துக்கண்ணன்றி வாராவாயினுங் கட்டளையடிக்கு அகப்பட்ட தொடையொடுங் கூறினார். கட்டளையடிக்கண் வருந் தொடையே சிறந்தன-வென்று கொள்ளினுங் கொள்ளற்கவென்பான், ஒழிந்த தொடையுள்ளுமென்று கூட்டித் தொடை கூறினானென்பது.[1]

1. இங்குச் சொல்லப்பட்ட தொடைகள் கட்டளையடிக்கேயன்றிச் சீர்வகை யடிக்கும் சிறந்தன என்பதே தொல்காப்பியனார் கருத்தென்பது இருவகையடி-கட்கும் பொதுவகையாற் றொடை கூறியதனாற் புலனாம்.

இனி, செந்தொடை கட்டளையடிக்கண் தொடையாங்கால் ஓரெழுத்துத் தேமா ஒழித்து ஒழிந்த சீரெல்லாவற்றினும் வரு மென்பது இம்மூவகை அடியினானும் பெற்ற தொடையெல்லாந் தொகுப்பத் தொடை ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதாம் அவற் றோடும் இரண்டடி யெதுகை இரண்டும் இடையீடுங் கூட்டத் தொடை ஐஞ்ஞூற்றைம்பத்திரண்டாம். நுந்தை என்பது கேட்டார்க்குத் தொடைப்பாடு வெளிப்படுமிலக்கணத்த வாகிய தொடைக் கூறுபாடெனப் பிரித்துக் கூறியவாறு.

"நுந்தையில் செந்தொடை யைஞ்ஞூற்று நாற்பான்மே
லொன்பானை யோரிடையிட் டோரிரட்டி
வந்த வெதுகை யிரண்டென வைத்தைஞ்ஞூற்
றைம்பத் திரண்டென் றறி"

என்பது உரைச் சூத்திரம். ஆக முப்பத்து மூன்று தொடையும்[1] அறுநூற்றிருபத்தைந்து அடியுட் களைவன களைந்து பெற்ற தொடைவிரியெல்லாந் தொகுப்பப் பெற்ற தொடை பதின்மூவா யிரத் தெழுநூற்றைந்துடன் இரண்டடி யெதுகை யிரண்டும் இடையீடொன்றுங் கூட்டத் தொடை பதின்மூவாயிரத்தெழுநூற் றெட்டாயினவாறு கண்டுகொள்க

'தொடையின் பகுதி முழுவதூஉஞ் சொன்மற்
றடியி னறுநூற் றிருபத்தைந் தாயி
னடிய திலக்கண மாமதுவென் றஞ்சிப்
பிறதொடைமூன் றேற்றினார் பின்"

இவ்வாறு தொடை கூறப்பட்ட தொடைப்பகுதியெல்லாம், அவ்வச்சூத்திரங்கடோறும் எடுத்தோதாது கட்டளையடிக்கும் அல்லாவடிக்கும் பொதுவகையாற் கூறி வந்தானாசிரியனாயினும்

"மெய்பெறு மரபிற் றொடைவகை" (தொல்-செய்-101)

என்னுந் தொடைச் சூத்திரத்திற் கேற்பதாம் அவற்றை அவ்-வச் சூத்திரங்களுட்போலக் கூறி வந்ததாமென்பது.[2] முற்கூறிய

1. முப்பத்துமூன்று தொடையாவன மோனை 4, எதுகை 15, முரண் 5, அளபெடை 2, அந்தாதி 2, இயைபு விட்டிசை 2, 2, செந்தொடை 1, என்பன,

2. இவ்வாறு கூறப்பட்ட தொடைப்பகுதியெல்லாம் அவ்வச்சூத்திரங்கள் தோறும் எடுத்தோதாது கட்டளையடிக்கும் அல்லாவடிக்கும் பொதுவகையாற் கூறிவந்தானாசிரியனாயினும் 'மெய்பெறு மரபிற்றொடைவகை' (தொல். செய்-101) என்னுந்தொகைச்சூத்திரத்திற்கேற்ப நாம் அவற்றை அவ்வச் சூத்திரங்களுட்போலக் கூறி வந்தாமென்பது' என இவ்வுரைப்பகுதியமைதல் பொருத்தமுடையதாகும்.

முப்பத்துமூன்று தொடையினையும் அறுநூற்றிருபத்தைந்தடி-யோடு மாறியக்கால் இருபதினாயிரத் தறுநூற்றிருபத்தைந்து தொடையாகற்பாலனவாம்: அன்னவை தொடைக்குந் தளைக்கு மாகாதன களைந்துகொள்ளப் பதின்மூவாயிரத் தெழுநூற்றைந் தாயினவென்பது. ஆயிரத்துத் தொள்ளாயிரத் திருபது நிலங்-களையப்பட்டன. இங்ஙனம் இவை களைந்து பெற்ற தொடை யோடும் இரண்டடி யெதுகை இரண்டும் இடையிடொன்றுங் கூட்டத் தொடை பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டாயின. (கOO)

**நச்சினார்க்கினியம் :**

இது செந்தொடை கூறுகின்றது.

(இ - ள்) சொல்லிய ... ... டியலின் எ - து முற்கூறிய தொடைகளெல்லாவற்றோடும் ஒவ்வாதுவரின் அதனை. சொல்லியற் ...... யென்ப எ - து இயற்சொல்லாற் செய்யுள் செய்யும் புலவர் செந்தொடை யென்று கூறுவராசிரியர். எ–று.

எனவே விகாரப்படச் செய்யுஞ் செய்யுட்குச் செந்தொடை யின்னாதாயிற்று. உ - ம்[1]

> "நெடுவேண் மார்பி னாரம் போலச்
> செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்து" (அகம் கஉ0)

> "விருந்தினர் மூத்தார் பசுசிறை பிள்ளை"

இவை கட்டளைச் செந்தொடை.

> "பூத்த வேங்கை வியன்சினை யேறி
> மயிலின மகவு நாட
> னன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே"

இது சீர்வகைச் செந்தொடை.

**ஆய்வுரை :**

இது, செந்தொடையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட தொடையும் தொடை விகற்பமும் போலன்றி வேறுபட்டு இயல்பாகத் தொடுக்கப்பட்டியலு-மாயின், சொல்லின் இயல்பறிந்த புலவர் இயல்பாக அமைந்த அத்தொடையினைச் செந்தொடை என வழங்குவர் ஆசிரியர் எ–று.

---

1. இயற்சொல்லாற் செய்யுள் செய்யும் புலவர் செந்தொடையென்று கூறுவர் எனவே விகாரப்படச் செய்யும் செய்யுட்குச் செந்தொடை தோன்றா-தென்றாராயிற்று.

செயற்கை வகையானன்றி இயற்கையிலே பூந்துணர்களாற்-பொலிந்து தோன்றும் கொன்றையும் கடம்பும் போல நின்ற-வாறே நின்று இயற்கை வகையால் தொடைப்பொலிவு செய்தல்-பற்றிச் செந்தொடையென்னும் பெயர்த்தாயிற்று என்பது பேராசிரியர் உரையால் நன்கு புலனாகும்.

௯௭ மெய்பெறு மரபின் தொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே.[1]

## இளம்பூரணம் :

என் — எனின். மேற்சொல்லப்பட்ட தொடை யெல்லாம் விரி வகையான் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வடிவுபெற்ற மரபினையுடைய தொடையினது பாகு-பாடு பதின்மூவாயிரத் தறு நூற்றுத் தொண்ணூற்றொன்பது என்றவாறு.

அவையாமாறு ; மொழிமுதலாகிய எழுத்து உயிர் பன்னி-ரண்டு. இதன் கிளையெழுத்து[2] ஒரோவொன்றிற்குப் பதினொன்-றுளவாகலின் அவற்றை உறழ நூற்று முப்பத்திரண்டாம். 'கதநபம' என்பவற்றை உயிர் பன்னிரண்டோ டுறழ அறுபதாம். அவ்வறுபதையும் முதற் றொடையாக்கிக் கிளையெழுத்தோ

1. 'வடிவுபெற்ற மரபினையுடைய தொடையினது பாகுபாடு பதின்மூவா-யிரத்தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது' என இளம்பூரனர் இச்சூத்திரத்திற்-குப் பொருள் கொண்டிருத்தலால்,

'மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
யையீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூ
றொன்று மென்ப வுணர்ந்திசி னோரே'

என்பதே இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் கொண்டபாடம் என்பதும், 'தொண்டு தலையிட்ட பத்துக்குறையெழுநூற் றொன்பஃதென்ப' என்பது பேராசிரியர் கொண்ட பாடம் என்பதும், அஃது ஏடெழுதுவோரால் இளம்பூரணருரையில் தவறாகச் சேர்க்கப்பட்டதென்பதும் இவ்விருவர் உரையினையும் ஒப்புநோக்கி ஆராய்வார்க்கு இனிது விளங்கும். செய்யுளடிகளின் அமைந்த எழுத்தமைப்பினால் இங்குப்பகுத்துரைக்கப்படுந் தொடைவகைகள் வடிவுபெற்றுத் தோன்றும் என்பார், 'மெய்பெறுமரபிற் றொடைவகை' என்றார். மெய்-வடிவு.

2. கிளையெழுத்து-வருக்க எழுத்து. ஆய்தந்தையும் கூட்டி ஒற்றுப்பத்-தொன்பது என்றார்.

டுறழ அறுநூற்றறுபதாம். சகரத்தின் முதலாகெழுத்து ஒன்பது; அவற்றைக் கிளையெழுத்தோ டுறழ எழுபத்திரண்டாம். வகரத்தின் முதலாகெழுத்து எட்டு; அவற்றைக் கிளையெழுத்தோ டுறழ ஐம்பத்தாறாம். யகரத்தின் முதலாகெழுத்து ஒன்று; கிளையெழுத்தில்லை. ஞகரத்தின் முதலாகெழுத்து மூன்று; அவற்றைக் கிளையெழுத்தோ டுறழ ஆறாம். இவ்வகையினான் முதலெழுத்துத் தொண்ணூற்றுமூன்றுங் கிளையெழுத்துத் தொளாயிரத்திருபத்தாறும் ஆக மோனைத்தொடை ஆயிரத்தொருபத்தொன்பதாம்.

எதுகையாமாறு: உயிரெழுத்து மொழியிடையில் வாராது. உயிர்மெய்யெழுத்து இருநூற்றொருபத்தாறில் ஙவ்வருக்கம் ஒழிந்த எழுத்து இருநூற்று நாலினையுங் கிளை யெழுத்தினோடு உறழ இரண்டாயிரத்து நானூற்றுநாற்பத்தெட்டாம். இதனொடு ஒற்றுப் பத்தொன்பதுங்[1] குற்றுகரம் ஆறுங்கூட்ட எதுகைத்தொடை இரண்டாயிரத்து நானூற்று எழுபத்துமூன்று பாகுபாடாம்.

முரண்தொடை சொன்முரண் பொருண்முரண் என இரண்டாம்.

இயைபுத்தொடையாமாறு: உயிரெழுத்து மொழியீற்றின்கண் உயிர்மெய்யாகி வருதலின் அவையாகா. உயிர்மெய் இருநூற்றொருபத்தாறில் இறுதிக்கண் வாராத ஙகரவுயிர்மெய் பன்னிரண்டும் அகரம் பதினேழும் இகரம் பதினாலும் உகரம் இரண்டும் எகரம் ஒன்றும் ஒகரம் ஒன்றும் இவை ஒழிந்து நின்ற எழுத்து நூற்றறுபத்தைந்தும் ஞணநமன யரலவழள என்னும் புள்ளியிறுதி பதினொன்றும் குற்றுகரவீறு ஆறும் ஆக இயைபுத்தொடை நூற்றெண்பத்திரண்டு பாகுபாடாம்.

அளபெடைத்தொடையாமாறு: மொழிமுதலாகு முயிரளபெடை ஏழு, கதநபம என்னும் உயிர்மெய்யளபெடை முப்பத்தைந்து, சகர அளபெடை ஐந்து, வகரஅளபெடை ஐந்து, யகரஅளபெடை இரண்டு, இவை ஐம்பத்துநான்கில் உயிரளபெடை தனிநிலையாம்: ஏனையவற்றை முதனிலை இடைநிலை இறுதிநிலை எனவுறழ நூற்றுநாற்பத்தொன்றாம்; ஒற்றுக்களுள்

1. புள்ளிபெறுதலும் அரைமாத்திரைத்தாதலும் பற்றி ஆய்தம் ஒற்றெனப் பட்டது.

வல்லெழுத்தாறும் ரகரமும் ழகரமும் ஒழித்து[1] ஏனைய பதினொன்றும் அளபெடுக்க ஒற்றளபெடை பதினொன்றாம். இவ்வகையினான் அளபெடைத்தொடை நூற்றைம்பத்தொன்பது வகையாம்.

இவ்வகையினோடு இத்தொடை[2] மூவாயிரத்தெண்ணூற்று முப்பத்தைந்து வகையாம்.

பொழிப்புத் தொடையிற் கிளையெழுத்து வாராது.

மோனைப்பொழிப்புத் தொண்ணூற்றுமூன்று, எதுகைப் பொழிப்பு இருநூற்றிருபத்தொன்பது, முரண்பொழிப்பு இரண்டு, இயைபுப் பொழிப்பு நூற்றெண்பத்திரண்டு; அளபெடையுள் ஒற்றளபெடை பொழிப்பாகி வாராமையின் உயிரளபெடைப் பொழிப்பு நூற்றுநாற்பத்தெட்டு. இவையெல்லாங் கூட்டப் பொழிப்புத்தொடை அறுநூற்றைம்பத்து நாலுவகையாம்.

ஒரூஉத்தொடையும் இவ்வகையினால் அறுநூற்றைம்பத்து நாலாம்.

இனிச் செந்தொடையாமாறு மொழிமுதலாகும் எழுத்துத் தொண்ணூற்று மூன்று மற்றையடியினு மொத்து வருங்கால் அவை மோனையுள் அடங்குதலின் அவற்றை ஒழித்து ஏனையெழுத்துத் தொண்ணூற்றிரண்டோடும் உறழ எண்ணாயிரத் தைந்நூற் றைம்பத்தாறு வகையாம்.

இவ்வகையினால் தொடைவிகற்பம் பதின்மூவாயிரத்தறு நூற்றுத்தொண்ணூற்றொன்பதாம். (கூஎ)

**பேராசிரியம் :**

இது, மேற்கூறிய தொடையுள் ஒருசீரான் வரையறையுடைமையின் அவற்றை அடிக்கட்போலத் தொகுத்தோதுகின்றது; விரித்ததூஉந் தொகுத்ததூஉமாம்; என்னை? கட்டளையடியொடு பட்ட தொடை விகற்பம் முற்கூறிய சூத்திரங்களுட்

1. 'மகரமும் ழகரமுமொழித்து' என முன்னைப்பதிப்புகளில் உள்ள பாடம் பிழை.

2. 'இவ்வகையினோடித்தொடை' என்பது 'இவ்வகையினோரடித்தொடை' என்றிருத்தல் வேண்டும் எனக் கருத வேண்டியுள்ளது.

பெற்றமையானும் அவற்றையும் ஈண்டுத் தொகுத்துக் கூறின மையானுமென்பது.[1]

(இ-ள்) மெய்பெறு மரபில் தொடைவகை கேட்டார்க்குத் தொடைப்பாடு வெளிப்படும் இலக்கணத்தவாகிய தொடைக் கூறுபாடு,[2] 'தாமே' என்பது பிரித்துக் கூறியவாறு; ஐயீராயிரத் தாறைஞ்ஞூற்றொடு பதின்மூவாயிரத்தோடு; தொண்டு தலை யிட்ட பத்துக்குறை எழுநூற்றொன்பஃது - எழுநூற்றெட்டு (எ-று).

தொடைப்பகுதி பதின் மூவாயிரத் தெழுநூற்றெட்டென்று சொல்லுப ஆசிரியரென்பது இதன் பொழிப்பு.

'மெய்பெறு மரபின்'; இவை யெனவே, விளங்கத் தோன்றா தனவுந் தொடையுளவென்பதாம் அவை,

1இணை 2கூழை 3மேற்கதுவாய் 4கீழ்க்கதுவாய் 5கடையிணை 6கடைக்கூழை 7இடைப்புணர் 8பின்

எனச் சொல்லுப. பிறவும் வேறுபடுத்துக் கூறுவார் கூறுவன வெல்லாம் இதனானே தழீஇக் கொள்ளப்படுமென்பது.

'தொடைவகை' யென்பது கட்டளையடியொடு வருமெனப் பட்ட முப்பத்துமூன்று தொடையும் பிறவாற்றால் வருமெனப் பட்ட இடையிட்டெதுகை இரண்டடி எதுகையென இருகூற்றனவு மென்றவாறு.

'ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு' என்பது உம்மைத் தொகை.[3] 'தொண்டு தலையிட்ட' என்பது ஒன்பானையகப்படும். மொழியாகவுடைய வென்றவாறு.[4] அது செய்தவென்னும் பெய-ரெச்சமாகலின் எழுநூற்றொன்பதென்னும் பெயர்கொண்டு

---

1. மேற்கூறிய கட்டளையடியொடு பொருந்திய தொடைவகைகள் முற்கூறிய சூத்திரங்களாற் பெறப்பட்டன. முற்கூறிய அடிகளைத் தொகுத்தோ-தினாற்போன்று சீரான்வரையறையப்பட்ட தொடைகளையெல்லாந்தொகுத்துக் கூறுவது இச்சூத்திரமாதலின் இது விரித்தது தொகுத்ததாம்.

2. செய்யுளைக்கூறக்கேட்டார்க்கு இதன்கண் அமைந்தது இன்னதொடை-யெனத் தமது வடிவுபுலப்படுத்துத் தோன்றும் இலக்கணத்தனமேற்கூறிய தொடை வகைகள் என்பார் 'மெய்பெறுமரபின் தொடைவகை' என்றார். மெய்-வடிவு,

3. ஐயீராயிரமும் ஆறைஞ்ஞூறும் என விரிதலின் உம்மைத்தொகையாயிற்று. ஐயீராயிரம்-பத்தாயிரம். ஆறுஐஞ்ஞூறு-மூவாயிரம்.

4. தொண்டு-ஒன்பது. தலையிட்ட-தன்னுள் அகப்படுத்திக்கொண்ட.

முடியும். எனவே, எழுநூற்றொருபத்தெட்டாமென்றஞ்சிப்பத்துக்குறை எழுநூற்றொன்பது என்றானென்பது. எனவே ஆண்டு நின்ற ஒன்பானொடுந் தொண்டுதலையிட்ட ஒன்பானையுங் கூட்ட எழுநூற்றெட்டாயின வென்றவாறு;[1]

அஃதே கருத்தெனின்,

"பதின்மூ வாயிரத் தெழுநூற் றெட்டென
மொழியப் பட்டன தொடைதெரி வகையே"

என அமையும்; இவ்வாறு அரிதும் பெரிதுமாகச் சூத்திரஞ்செய்த தென்னையெனின், அங்ஙனமே அதனை ஞாபகப்படச் செய்தான் ஆசிரியன் ஒரு காரணம் நோக்கி. என்னை? இத்தொடைகளை அடியொடு மாறுங்காற் குறைக்கப்படுவன உளவென்பதூஉம், அவை தொண்டு தலையிட்ட ஐந்துபத்தளவும் ஆறுமுதலாகக் களையப்படுமென்பதூஉங் கோடற்கென்பது. 'ஒன்பது' என்று இருகாற் சொல்லிய வதனான் அங்ஙனங் குறைக்கப்படு நிலங்கள் ஒன்பது பகுதியவாமெனக் கொள்க. அவையாவன :

[1]ஐம்பத்தொன்பது [2]ஐம்பத்தாறு [3]நாற்பத்தைந்து
[4]நாற்பது [5]முப்பத்தொன்பது [6]முப்பத்திரண்டு
[7]முப்பத்தொன்று [8]இருபத்துமூன்று [9]ஆறு

என ஒன்பது பகுதியாற் குறைவனவாயின. இங்ஙனம் ஐம்பத்தொன்பது நிலத்தின வாகலால் 'தொண்டு தலையிட்ட பத்து' என்றானெனவும், ஒன்பதுந் தொண்டுமென இருகாற் கூறியவதனான் அங்ஙனங் களையுநிலம் ஒன்பஃதெனவுங் கொள்ளப்பட்டது.

"பாய பதினா யிரமென் றிலனையீ
ராயிர மென்றா னதனானுந் - தூயதன்றிப்
பத்துங் குறைத்த பயத்தானும் ஒன்பதென்
றுய்த்துக் கொளற்பாற் றொருங்கு"

எனவும்,

"ஒரோன்ப தேற்றியு மோரொன்ப திட்டுரைத்து
மீரொன் பதுமிகுத்தா னீங்கிவற்று - ளோரொன்ப

---

1. பத்துக்குறைஎழுநூற்றொன்பது - அறுநூற்றுத்தொண்ணூற்றொன்பது. ஒன்பதினைக்கூட்டிய அறுநூற்றுத்தொண்ணூற்றொன்பது எனவே எழுநூற்றெட்டாயின. ஆகவே தொடைப்பகுதி பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு என்றாராயிற்று.

தைம்பான்மே லேறவு மைந்தந்த மாய்க்குறைத
லொன்பான் வகைத்தென்று மோர்ந்து''

எனவும்,

''ஆறென்றான் மூவா யிரமென்னா தாங்கதனா
லாறந்த மாங்குறையு மாறு''

எனவும்,

''ஐம்பத்தொன் பானேழெட் டையொன் பதுநாற்பஃ
தொன்பா னுடைமுப்பத் தெண்ணான்கு முப்பத்தொன்
றென்பா விருபத்து மூன்றா றெனக்குறைப்ப
வொன்பான் பகுதி யுள''

எனவும், இவ்வுரைச் சூத்திரங்களான் அவை குறைக்கப்படுமா றறிந்து குறைக்க.[1] இவற்றுள் ஒன்பது நிலங் களையப்படும் மோனை முதலாயின தொடை ஐந்தற்கும் ஓரெழுத்துத் தேமா உரித்தென்றிராயின், அதனை நுந்தை நுந்தையென்று இருகால் தொடுக்கவேண்டும்; தொடுத்தவழி அடிமோனையுந் தலையாகெது கையும் அடியெதுகையும் மூன்றாமெழுத்தொன்றெதுகையுமென நான்குதொடை பெறப்படுமாகலின், அவற்றுள் அதனை என்ன தொடையென்றுமோவெனின், செய்யுள் செய்த ஆசிரியன் பல தொடைப்படச் செய்து வைத்தவழி, அவற்றுட் சில களைந்து ஒன்று கோடற்குக் காரணமின்மையினான் அவையனைத்துங்

1. 'பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு' என எல்லார்க்கும் விளங்கச் சொல்ல வேண்டிய தொகையினைத் 'தொன்டுதலையிட்ட பத்துக்குறையெழுநூற்றொன்பது' என இவ்வாறு அரிதும் பெரிதுமாகச் சூத்திரஞ்செய்ய வேண்டியது என்னை? என்றதொரு வினாவை எழுப்பிக்கொண்டு, இத்தொடைகளை அடிகளோடு கூட்டிப் பெருக்குங்கால் 59, 56, 45, 40, 39, 32, 31, 23, 6 என ஒன்பது நிலங்கள் களையப்படும் என்பதனைப் புலப்படுத்தவே இவ்வாறு கூறப்பட்டது எனப் பேராசிரியர் தரும் விளக்கம், 'பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு' என அவர்கொண்ட தொகைக்கு அமைதி காண்பதாக அமைந்துள்ளது. பேராசிரியர் காட்டும் உரைச்சூத்திரங்களைக் கூர்ந்து நோக்குங்கால் இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் முதலியோர் கொண்ட பாடம் போன்று பேராசிரியர் கொண்ட பாடமும் அவர்க்குமுன் நெடுங்காலமாக வழங்கி வரும் பழையபாடமே என்பதும், அப்பாடத்தை அடிப்படையாகக் கொண்டே பேராசிரியர் இங்கு வகுத்துக்காட்டிய தொடைவகைபற்றிய விளக்கமும் பழமையுடையதேயென்பதும் நன்கு புலனாகும்.

கோடுமென்பது; அல்லாதார் முதனின்ற தொடையே கொண் டொழிகவென்ப[1] அது குற்றம்; என்னை?

"செங்காற் பைந்தினை யிதண மேறிப்
பைங்காற் சிறுகிளி கடிவோ டந்தை"

என்றவழி எதுகையும் முரணும் வந்தவழி இவற்றுண் முதற்கண் இன்ன தொடையென்று துணியலாகாமையின் அது நிரம்பா தாகலான் அது வந்த தொடை யெல்லாவற்றானும் விரித்துத் தொடை கூறுதல் அமையுமென்பது; என்போலவோவெனின், எழுத்தும் அசையுஞ் சீரும் அடியும் அங்ஙனம் முதல் வந்த தனான் எண்ணுந் தொகையும் பெயருங் கொடுத்து வழங்காத வாறு போலவென்பது; அல்லதூஉந், தொடைகளெல்லாந் தம்மையுணரும் மாத்திரையானே தனித்தனி வருதல் இலக்கண மென்பதூஉம் இல்லையென உணர்க. என்னை? பல உறுப்புக் கொண்டது ஓர் செய்யுளென்றமையின்.[2]

இனி, ஓரெழுத்துத் தேமா முதற்கணிற்ப அடியிறுதிக் கண்ணும் இயைபு வருதலின் அச்சீர் நின்றுறழ்ந்த அடிக்கண் இயைபு வருதற்கு ஆராய்ச்சியின்றென்பது. ஒழிந்த தொடைக் குரியவல்லவெனப்பட்ட சீருள் அவை வாராமையும் உரிய வெனப்பட்ட அவற்றுள் அவை வருமாறும் முறையிற்கொண்டு உதாரணங் கண்டுகொள்க.

இனி, இக்காலத்துள்ள ஆசிரியருள் ஒருசாரார்,

---

1. ஒருசெய்யுளகத்தே தொடைகளும் தளைகளும் பலவாக விரவிவந்தால் அவற்றுள் முதல்வந்த தொடையாலும் தளையாலும் பெயர்கொடுத்து வழங்கப் படும் என்பது தொல்காப்பியனார்க்கு நெடுங்காலம் பிற்பட்டுத்தோன்றிய யாப்பிலக்கணவாசிரியர்கள் கருத்தாகும்.

"தொடைபல தொடுப்பினுந் தளைபல விரவினும்
முதல்வந் ததனால் மொழிந்திசிற் பெயரே" (யாப்பருங்கலம்-53)

எனவரும் சூத்திரம் இக்கருத்தினைப்புலப்படுத்தல் காணலாம்.

2. பலவுறுப்புக்களால் இயன்றது செய்யுளாதலின் அதன்உறுப்பாகிய தொடைகளெல்லாம் தம்மையுணருமளவில் தனித்தனியே வருதல் வேண்டும் என்னும் இலக்கணத்தன அல்ல. எனவே செய்யுளின் முதல்வந்த தொடை இன்னது எனத் துணிதல் இயலாது. எனவே முதற்றொடைகொண்டு பெயர் வழங்குதல் நிரம்பிய இலக்கணமாகாது. ஆகவே வந்ததொடையெல்லாவற்றானும் விரித்துத் தொடைகூறுதலே அமைவுடையதாகும்.

'தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூ றொன்றும்'
எனப்பாடந் திரிப்பாரும்.[1]

[இன்னொருசாரார்] ''எழுநூறொன்றும்''
எனப் பாடந் திரிப்பாரும் என இருபகுதியர்;

[ஒரு பகுதியார்] ஒன்றுமென்பது முற்றுவினை யென்ப.

''மெய்பெறு மரபிற் றொடைவகை
பத்துக்குறை யெழுநூறு''

என்னும் எண்ணினோடு ஒன்றுமெனக் கூட்டுப[2] பதின்மூவாயி
தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது என்பது அவர் கருத்
ஒன்றுமென்பதனை எண்ணுப்பெயர் முற்றும்மையடுத்தத
பாரும் அதுவே கூறுப;[3] அவரறியார். அவ்வாறு சூத்திர
செய்வது ஆசிரியர் கருத்தன்று அல்லதூஉம்,

''ஒன்பஃ தென்ப வுணர்ந்திசி னோரே''

என்பது பழம்பாடமாகலானும் அஃதமையாதென்பது.[4] அவ்வாறு

1. 'பத்துக்குறை யெழுநூற் றொன்பஃ தென்ப'' எனத் தாம் கொள்
பாடமே பழைய பாடம் எனவும், 'பத்துக்குறையெழுநூ றொன்றும்' என
'பத்துக்குறையெழு நூற்றொன்றும்' எனவும் தம் காலத்தில் வழங்கிய பாடவே
பாடுகள் தம் காலத்தவரால் திரித்துக்கொள்ளப்பட்ட புதிய பாடங்கள் எனவு
கொள்வர் பேராசிரியர். 'பத்துக்குறை எழுநூறொன்றும்' என்ற பாடத்திற்குரிய
பொருளே பேராசிரியர்க்கு முற்பட்ட இளம்பூரணருரையிலும் யாப்பருங்கல
விருத்தியிலும் இடம் பெற்றிருத்தலால் இப்பாடங்கள் தம் காலத்தாரா
திரித்து வழங்கப் பெற்றவையே எனப் பேராசிரியர் துணிந்து கூறுதல் அத்துணை
பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

2. ஒன்றும் - பொருந்தும்.

3. ஒன்றும் என்பதனை ஒன்று என்னும் எண்ணுப்பெயர் முற்றும்மை
பெற்றுவந்த தென்போர், ''மெய்பெறுமரபின்தொடை வகை விரிப்பின் பதின்-
மூவாயிரத்தறுநூற்றுத்தொண்ணூற்றொன்பது ஒன்றுமே'' எனப்பொருள் விரித்-
துரைப்பர்.

4. பேராசிரியர் கருதுமாறு தொடைவகை பதின்மூவாயிரத்தெழுநூற்
றெட்டு என்பதே ஆசிரியர் கருத்தாயின், 'தொண்டு தலையிட்ட பத்துக்குறை
யெழுநூற்றொன்பது' என இவ்வாறு அரிதும் பெரிதுமாகச் சூத்திரஞ் செய்ய
வேண்டிய இன்றியமையாமை யில்லை. ஆசிரியர் தொல்காப்பியனார், எழுத்து
முப்பத்து மூன்று என்ற பொருள்பட 'மூன்றுதலையிட்ட முப்பதிற்றெழுத்தின்'
எனவும், மொழிமுதலாம் எழுத்துக்கள் இருபத்திரண்டு என்பதுபட 'இரண்டு-
தலையிட்ட முதலாகிருபஃது' எனவும் தாம் சொல்லக்கருதிய தொகையின்

கொள்வார்க்குத் தொடை பதின்மூவாயிரத் தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதாகலும் பிழைக்குமென்று மறுக்க; என்னை? அறுநூற்றிருபத்தைந்தடியினையுந் தமக்குப் பொருந்து மாற்றான் இருபத்திரண்டு தொடையோடும் பெருக்குங்கால் அவர்க்கும் ஓரடிக்கண்ணே தொடை கோடல் வேண்டுமாகலானும், அங்ஙனங் கொள்ள இரட்டைத்தொடை முதலாயின அறுநூற்றிருபத்தைந் தாகாமையானு மென்பது. (கOக)

---

மூன்பக்கத் தொடர்ச்சி

முடிந்த எண்ணினை முன்வைத்துக்கூறும் முறையினைக் கூர்ந்து நோக்குங்கால், 'தொண்டு தலையிட்ட' எனவரும் இத்தொடரும் 'ஒன்ப தென்னும் எண்ணினை முடிந்த எண்ணாகவுடைய' என்ற பொருளிலேயே இச்சூத்திரத்தில் ஆளப்பெற்றிருத்தல் வேண்டுமென்பதும், பேராசிரியர் கருதுமாறு 'ஒன்பதுடன் கூட்டிய' என்ற பொருளிலோ, நச்சினார்க்கினியர் கருதுமாறு 'ஒன்பதாலே பெருக்கின' என்ற பொருளிலோ இங்கு ஆளப்பெறவில்லையென்பதும் நன்கு புலனாம்.

"'அவைதாம் பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது'" என்பாரும் வரம்பில என்பாரும் என இரு திறத்தார் ஆசிரியர். என்னை?

'முந்திய மோனை எதுகை அளபெடை
அந்தமில் முரணே செந்தொடை இயைபே
பொழிப்பே ஒரூஉவே இரட்டை என்னும்
இயற்படு தொடைகள் இவைமுத லாகப்
பதின்மூ வாயிரத் தறுநூ றன்றியும்
தொண்ணூற் றொன்பதென் றெண்ணினர் புலவர்'

'வல்லொற்றுத் தொடர்ச்சியும், மெல்லொற்றுத் தொடர்ச்சியும்
இடையொற்றுத் தொடர்ச்சியும் முறைபிறழ்ந் தியலும்'

என்றார் சங்கயாப்பு உடையார்.

'மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைந் நூற்றொடு
தொண்டுதலை இட்ட பத்துக்குறை எழுநூற்
றொன்றும் என்ப உணர்ந்திசி னோரே'.

என்றார் தொல்காப்பியனார்.

'மோனை எதுகை முரணே அளபெடை
எனைச் செந்தொடை இயைபே பொழிப்பே
ஒரூஉவே இரட்டை ஒன்பதும் பிறவும்
வருவன விரிப்பின் வரம்பில என்ப'

என்றார் பல்காயனார்.

பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்று ஒன்பது தொடை ஆமாறும், அவற்றுள் மிக்கு வருமாறும் உபதேச முறையான் உறழ்ந்து கொள்க.

முன் பக்கத் தொடர்ச்சி

உபதேச முறைமையால் உறழுமாறு: நான்கு பாவும் பெற்ற ஐம்பத்தொரு நிலத்தவாகி விரிந்த அறுநூற்று இருபத்தைந்தடியும், அவற்று ஒரோ அடி இருபத்திரண்டு தொடையும் பெறப் பதின்மூவாயிரத்து எழுநூற்றைம்பதாய் வரும். அவற்றுள் ஐம்பத்தொரு நிலமும் களையப் பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது தொடையாம். அடியிரண்டு இயைந்த வழித் தொடை-யாம் என்ப வாகலின் ஐம்பத்தொரு நிலமும் களையப்பட்டன. என்னை?

(நேரிசை வெண்பா)

'ஆறிரண்டோ டைந்தடியை ஐந்நான் கிருதொடையான்
மாறி நிலமைம்பத் தொன்றகற்றத்-தேறும்
ஒருபதின்மூ வாயிரத்தோ டொன்றூன மாகி
வருமெழுநூ றென்னும் வகை.

அறுநூற்று இருபத்தைந்து அடியாவன: ஆசிரிய அடி இருநூற்று அறுபத்தொன்றும், வெண்பா அடி இருநூற்று முப்பத்திரண்டும், கலியடி நூற்று முப்பத்திரண்டும் என இவை. என்னை?

'இருநூற் றிருமுப்பத் தொன்றகவற் கேனை
இருநூற்றோ டெண்ணான்கு வெள்ளைக் - கொருநூற்று
முப்பத் திரண்டாம் முரற்கைக் கிவையறுநூற்
றற்றமில் ஐயைந் தடி.

இருபத்திரண்டு தொடையவான ;

'மோனை இரண்டாம்; எதுகையோர் எட்டாகும்;
ஏனை முரணைந் தியைபொன்றாம்; - ஏனைப்
பொழிப்பாதி ஐந்தும் குறிப்புத் தொடையோ
டிழுக்கா இருபத் திரண்டு.'

இவை.

மோனை இரண்டாவன ; அடிமோனையும், கிளைமோனையும் என இவை.

எதுகை எட்டாவன : இரண்டாம் எழுத்து ஒன்றியதூஉம், மூன்றாம் எழுத்து ஒன்றியதூஉம், சீர்முழுதுஒன்றியதூஉம், கிளைஎதுகையும், வன்பால் எதுகையும், மென்பால் எதுகையும், இடைப்பால்எதுகையும், உயிர்ப்பால் எதுகையும் என இவை.

முரண் ஐந்தாவன ; சொல்லும் சொல்லும் முரணுதலும், பொருளும் பொருளும் முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதலும், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும், சொல்லும்பொருளும் சொல்லினொடும் பொருளினொடும் முரணுதலும் என இவை.

இயைபுத் தொடை, கிளை இன்மையின் ஒன்றே.

பொழிப்பாதி ஐந்தாவன : பொழிப்பும், ஒரூஉம், செந்தொடையும், இரட்டைத்தொடையும், நிரனிறையும் என இவை.

முன் பக்கத் தொடர்ச்சி

குறிப்புத் தொடையாவது, எழுத்து அல்லாத மொழிக்குறிப்பு ஓசை. அது மாத்திரை குறித்து அலகுபெற வைக்கப்படும் என்று வேண்டினமையான் அதனா-லும் தொடை கொள்ளப்படும்.

இருபத்திரண்டு தொடையாவன :

'அடிமோனை ஏனைக் கிளைமோனை என்று
முடியுமாம் மோனைப் பெயர்'. (மோனை 2)

'இரண்டாம் எழுத்தொன்றல் மூன்றாவ தொன்றல்
திரண்டமைந்த சீர்முழுதும் ஒன்றல் - முரண்டீர்
கிளைவன்பால் மென்பால் இடைப்பால் உயிர்ப்பால்
விளையும் எதுகையோர் எட்டு.' (எதுகை .8)

'மொழியும் மொழியும் பொருளும் பொருளும்
மொழியும் பொருளும் மொழியோ - டழியாத
சொல்லும் பொருளும் பொருளொடு சொற்பொருளும்
சொல்லும் பொருளுமோர் ஐந்து.' (முரண். 5.)

'பொழிப்பொரூஉச் செந்தொடை பொய்தீர் இரட்டை
அழிப்பில் நிரனிறையோ டைந்தும்-எழுத்தல்
குறிப்புத் தொடையியைபும் கொண்டுரைப்பார்க் கல்லால்
நெறிப்படுமோ நூலின் நிலை?'. (பிறதொடை. 7)

ஐம்பத்தொரு நிலமாவன:

'வெள்ளை நிலம்பத் தகவல் பதினேழு
துள்ளல் இருநான்கு தூங்கல்பத்-தெள்ளா
இருசீர் அடிமுச்சீர் ஐந்தாறே ழெண்சீர்
ஒருவா நிலமைம்பத் தொன்று'. (நிலம். 51)

இவற்றால் அடியும், தொடையும் நிலமும் ஆமாறு உரைத்துக்கொள்க.

'வரம்பில' என்பார் கருத்து, ஈண்டு உரைத்த பாவும்தொடையும் பிறவற்றாற் பெருகி வரும் என்பதும், இவ்வாற்றானும் பிறவற்றானும் உறழப் பெருகும் என்பதும் அவை போக்கி,

'நிரனிறை முதலிய பொருள்கோட் பகுதியும்'

என்னும் சூத்திரத்துட் கூறுப.

(நேரிசை வெண்பா)

'இணைகூழை முற்றோ டிருகதுவா யுள்ளிட்
டணையும் தொடையனைத்தும் கூட்டிக்-கணிதநூல்
வல்லார் தொடைப்பெருமை நோக்கி வரம்பின்மை
சொல்லார்மற் றஃதன்றோ தோம்?'' (யாப்பருங்கலம், உறுப்பியல், தொடையோத்து-கஅ)

எனவரும் யாப்பருங்கல விருத்தி, இங்கு இத்தொல்காப்பிய நூற்பாவுக்கு அமைந்த விளக்கமாதல் அறியத்தகுவதாகும்.

**நச்சினார்க்கினியம்:**

இது வரையறைப்படுங் கட்டளையடிக்குத் தொடைத்தொகை கூறுகின்றது; எனவே சீர்வகைக்குத்[1] தொடை வரையறையின்று. எ-று.

(இ-ள்.) மெய் ... ... தாமே எ-து கேட்டார்க்குத் தொடைப்பாடு வெளிப்படுக்கும் இலக்கணத்தவாகிய தொடைக்கூறுபாடுதாம்; ஐயீரா ... ... ஞ்ஞாற்றொடு எ-து பதின்மூவாயிரத்தோடே; தொண்டு ... ... தென்ப எ-து ஒன்பது தலையிலே வைத்த பத்துக்குறைந்த எழுநூற்றொன்பது என்று கூறுவர்; என்பது ஆறாயிரத்திருநூற்றுத்தொண்ணூற்றொன்று என்று கூறுவர்; உணர்ந்திசினோரே எ-து கட்டளையின் றொடைப் பகுதி யறிந்தோர் எ-று.

பதின்மூவாயிரத்தோடே ஆறாயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றொன்றெனவே, தொகை பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்றாயிற்று. ஆக கூகூஉகூக. ... பத்துக்குறை யெழுநூற்றொன்பதாவது, அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது. இதனை ஒன்பதனோடு பெருக்க ஆறாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்றாயிற்று. இதனை ஆறாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்று என்று விளங்கக் கூறாது ஒருகாற்குறைத்து அதன்மே லொருகாலேற்றி ஞாபகப்படச் சூத்திரஞ்செய்தது ஒரு பயனோக்கி; அது கட்டளையடி அறுநூற்றிருபத்தைந்துந் தொடைகொள்ளுங்கால் ஐம்பத்தொன்பது வழுவுள; அவை களையப்படுமென்றற்கு. அவற்றுள் அடிமோனைத் தொடை மூன்று பாவினும் எழுபத்தெட்டுச் சீரானும் வருங்கால் ஈரடிக் கூட்டத்துத் தளைவழுக் களையவேண்டும்; அவ்வழி அகவற்கு நாற்பத்தொன்றும் வெள்ளைக்குப் பதினெட்டுமாக ஐம்பத்தொன்பது களையப்படும் அவைகளையுமாறு ;- நுந்தை, வண்டு, தேமா, மின்னு, ஞாயிறு, போதுபூ, போரேறு, பாதிரி, மேவுசீர், நன்னாணு, பூமருது, நீடுகொடி, காருருமு, நாணுத்தளை யென இந்நேராதி பதினான்கும் அகவற்குப் பெருகிய நிலத்து இவ் விரண்டடி தளை வழுப்படும். வரகு, புளிமா, அரவு, வலியது, கடியாறு, விறகுதீ, கணவிரி, உரறுபுலி, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, விரவு கொடி, நரையுருமு என இந் நிரையாதி பதின்மூன்றுஞ் சுருங்கிய நிலத்து ஒரோவோரடி தளைவழுப்படும். ஆக அகவற்கு

நாற்பத்தொருதளை வழுவாயின. இனி வெள்ளைக்கு முற்கூறிய சீர்களுள் ஆசிரியவுரிச்சீர் நான்கு நீக்கி வெண்சீர் நான்குங்கூட்ட இருபத்தேழாம். இதில் நேராதி பதினான்குஞ் சுருங்கிய நிலத்து ஓரோவொன்று தளைவழுப்படும். நிரையாதியில் வரகு, கடியாறு, விறகுதீ, வலியது என்னுநான்கும் பெருகிய நிலத்து ஓரோ-வொன்று தளைவழுப்படும். ஆக வெள்ளைக்குப் பதினெட்டு வழு வாயிற்று. ஆகத் தளைவழு ஐம்பத்தொன்பதாயிற்று. அவை வரு மாறு:- வண்டு காருருமு நளிமுழவு நளிமுழவு என நிற்பக் 'கண்டு' எனத் தொடைவருங்கால் வெண்டளையாய் வழுவாம். பதினான்-கெழுத்திற்கும் இவ்வாறே கூறிக்கொள்க. வரகு நாகு காம்பு வண்டு என நிற்பக்'குரவு'எனத் தொடைவருங்கால் வெண்டளை யாய் வழுவாம். இனி வண்டு வரகு வரகுவரகு என நிற்பக்'கண்டு' எனத் தொடை வருங்கால் ஆசிரியத்தளையாய் வழுவாம் வரகு நளிமுழவு காருருமு பாதிரி என நிற்பக் 'குரவு' எனத் தொடை வருங்கால் ஆசிரியத் தளையாய் வழுவாம். இவ்வாறே எல்லா-வற்றோடும் ஒட்டி வழுக்காண்க. கலிக்குத் தளைவழுவின்று. நுந்தை மொழிமுதற்குற்றுகரமாதலின் இதற்கொத்த மொழி-முதற் குற்றுகர மின்மையிற் கட்டளைக்குத் தொடை கோடல் சிறப்பின்று இச்சிறப்பின்மை கருதாது தொடைகோடலும்ஒன்று. நுந்தைக்கு இருபதடி கழித்து அறுநூற்றைந்தடியுள் ஐம்பத்-தாறு தளைவழுக்களைந்து ஒழிந்தவடி ஐந்நூற்று நாற்பத்தொன் பதனாற் பெற்ற அடிமோனைத்தொடை ஐந்நூற்று நாற்பத்-தொன்பது ருச௬. நுந்தை யொழிந்த நேர்பதின்மூன்றுங் குற்றெழுத்து ஒற்றடுத்த நேரசையும் நெட்டெழுத்துத் தனியே வந்த நேரசையுமாக உதாரணங் காட்டிற்றேனும் அவற்றிற்குரிய மூவகையசையானும் வரும் உதாரணங்களையும் கூறிக்கொண்டு தொடைகொள்க. ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறே வேறுபடு-மாறு அறிந்து சொற்களை வருவித்துத் தொடைகொள்க.

"ஒன்று தலையிட்ட வையைந்து சீரும்
வழுவா யகவல் தொடைகொளல் கூறி
னேரா திச்சீர் பதின்மூன் றற்குத்
தத்தமக் குரிய பன்னீ ரடிக்குண்
முடிவில் வருமீ ரடிக ளெல்லாம்
பின்வரு மடியின் முதற்சீ ரோடு
வெண்டளை யாகித் தளைவழூஉப் படுதலு

நிரையா திச்சீர் பதின் மூன்றற்குந்
தத்தமக் குரிய பன்னீ ரடிகளுண்
முதல்வரு மொரோவோ ரடிக ளெல்லாம்
பின்வரு மடியின் முதற்சீ ரோடு
வெண்டளை யாகி முற்கூறி யாங்குத்
தளை வழூஉப் படுதலு
முடையவிவ் வடித்தொகை முப்பத் தொன்பதுந்
தொடைகோ ளின்றெனத் துணிந்தனர் புலவர்''

''ஒன்று தலையிட்ட வையைந்து சீரும்
வழுவா வெள்ளைத் தொடைகொளல் கூறி
னேரா திச்சீர் பதின்மூன் றானு
முறமு நிலங்களுட் பெற்ற வடிகளுண்
முதல்வரு மொரோவோ ரடிக ளெல்லாம்
பின்வரு மடியின் முதற்சீர் தம்மோ
டாசிரி யத்தளை தட்டுவழுப் படுதலும்
வரகு கடியாறு விறகுதீ வலியதெனு
நிரையாதி யாகிய சீர்க ணான்கா
னுறமு மடிகளு ளிறுதி யடிகளு
மங்ஙனந் தளைவழுப் படுதலு முடைமையி
னிவற்றான் வந்த வடிபதி னேழுந்
தொடைக்கியை பின்றெனத் துணிந்தனர் புலவர்''

''வழூஉக் களைந்த முதற்பா விரண்டிற்குங்
கலிக்கும் வரூஉ மடிமோ னைத்தொடை
யைஞ்ஞாற்று நாற்பத் தொன்ப தாகும்''

''அவை பகுக்குங்கால்
அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும்
வெள்ளைக் கொருநூற் றைம்பத் தாறுங்
கலிக்கு நூற்றிரு பஃது மாகும்''

''வண்டு தேமா மின்னு ஞாயிறு
போதுபூ போரேறு பாதிரி மேவுசீர்
நன்னாணு பூமருது நீடுகொடி காருருமு
நாணுத்தளை யிவை யொரோவொன்று பத்தாக
வகவல் பெற்ற வினைமோ னைத்தொடை
யீரைம் பஃதொடு முப்ப தாகும்''

நேராதி பதின்மூன்றுக்குத் தொடை எ௱௨௰.

"வரகு புளிமா வரவு வலியது
கடியாறு விறகுதீக் கணவிரி யுரறுபுலி
பெருவேணு உருமுத்தீ மழகளிறு விரவுகொடி
நரையுருமு ஒரோவொன்று பதினொன் றாக
வகவல் பெற்ற விணைமோ னைத்தொடை
நூற்று நாற்பத்து மூன்றென நுவல்வர்"

நிரையாதி பதின்மூன்றற்குத் தொடை ளசஙு. ஆக அகவற்கு இணை மோனைத்தொடை உளங.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றென்றிவை யொரோவொன் றெவ்வே றாகத்
தேமா மின்னுப் பாதிரி மேவுசீர்
நன்னாணுப் பூமருது மாசெல்வா யிவை
யொரோவொன் றாகக் காருருமு மாவருவா
யொரோவொன் றைந்தாக வெள்ளைக் கிணைமோனை
யெண்ப தாக வியலு மென்ப";

நேராதி பதின்மூன்றுக்குத் தொடை அO.

"வரகு வலியது கடியாறு விறகுதீக்
கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு
உருமுத்தீப் புளிமா விவையவ் வாறு
நரையுருமுப் புலிவருவா
யொரோவொன் றைந்தாக வெள்ளை பெற்ற
விணைமோ னைத்தொடை யெழுபத் தாறாம்"

நிரை யாதிச்சீர் பதின்மூன்றற்குத்தொடை எகூ. ஆக வெள்ளைக்கு இணை மோனைத்தொடை ளருகூ.

"நேராதிச் சீரானு நிரையாதிச் சீரானு
மொரோவொன் றைந்தாகக் கலிக்குவரு மிணை-மோனை
நூற்றிரு பஃதா நுவன்றனர் புலவர்"

ஆகக்கலிக்கு இணைமோனைத் தொடை ளஉ௰.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த விணைமோனை
ஐஞ்ஞாற்று நாற்பத் தொன்ப தாகும்"

ஆகத்தொடை ருசகூ.

"நேராதி யாகிய சீர்பதின் மூன்றா
னொரோவொன்று பத்தாக வகவல் பெற்ற
பொழிப்புமோ னைத்தொடை நூற்றுமுப் பஃதே"

நேராதி பதின்மூன்றுக்குத் தொடை ௧௩௰.

"நிரையாதி யாகிய சீர்பதின் மூன்றா
னொரோவொன்று பத்து மொன்று மாக
வகவல் பெற்ற பொழிப்புமோ னைத்தொடை
நூற்று நாற்பத்து மூன்றென நுவல்ப"

நிரையாதி பதின்மூன்றுக்குத் தொடை ௧௪௩. ஆக அகவற்குப் பொழிப்பு மோனைத் தொடை ௨௭௩.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றென்றிவை யொரோவொன் றெவ்வே ழாகத்
தேமா மின்னுப் பாதிரி மேவுசீர்
நன்னாணுப் பூமருது மாசெல்வா யிவை
யொரோவொன் றிருமூன் றாகக் காருருமு
மாவருவா யிவை யொரோவொன் றைந்தாக
வெள்ளை பெற்ற பொழிப்புமோ னைத்தொடை
யெண்ப தாக வியம்பினர் புலவர்"

நேராதி பதின் மூன்றற்குத் தொடை ௮௰.

"வரகு வலியது கடியாறு விறகுதீக்
கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு
உருமுத்தீப் புளிமா விவை யொரோவொன்
றிருமூன் றாக வியைந்த பின்னர்
நரையுருமுப் புலிவருவா யொரோவொன் றைந்தாக
வெள்ளை பெற்ற பொழிப்பு மோனைத்தொடை
யெழுபத் தாறென வியம்பினர் புலவர்"

நிரையாதி பதின்மூன்றற்குத் தொடை ௭௬. ஆக வெள்ளைக்குப் பொழிப்புமோனை ௧௫௬.

"நேரு நிரையு மாகிய சீர்க
ளிருபத்து நான்கா னொரோவொன் றைந்தாகத்
துள்ளல் பெற்ற பொழிப்புமோ னைத்தொடை
யீரைம் பஃது மிருபது மாகும்"

ஆகக்கலிக்குப் பொழிப்புமோனை ௧௨௰

''மூவகைப் பாவின் பொழிப்புமோ னைத்தொடை
ஐந்நூற்று நாற்பத் தொன் பதாகும்''

ஆகத்தொடை ௫௪௯

'நேராதி யாகிய சீர்பதின் மூன்றா
னொரோஒ வொன்றுபத் தாக வகவல்
பெற்ற வொரூஉமோனைத் தொடைநூற்று முப்
பஃதே''

நேராதிபதின்மூன்றுக்குத் தொடை ௱௩௰.

'நிரையாதியாகிய சீர்பதின் மூன்றா
னொரோவொன்று பத்து மொன்று மாக
வகவல் பெற்ற வொரூஉமோ னைத்தொடை
நூற்று நாற்பத்து மூன்றென நுவல்வர்''

நிரையாதி பதின்மூன்றுக்குத் தொடை ௱௪௩. ஆக அகவற்கு ஒரூஉமோனைத்தொடை ௨௭௩.

''வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றென்றிவை யொவ்வொன் றெவ்வே ழாகத்
தேமா மின்னுப் பாதிரி மேவுசீர்
நன்னாணுப் பூமருது மாசெல்வா யிவை
யொரோவொன் றிருமூன் றாகக் காருருமு
மாவருவா யிவை யொரோவொன் றைந்தாக
வெள்ளை பெற்ற வொரூஉமோ னைத்தொடை
யெண்ணொரு பஃது மெய்து மென்ப''

நேராதி பதின்மூன்றுக்குத் தொடை ௮௰

''வரகு வலியது கடியாறு விறகுதீக்
கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு
உருமுத்தீப் புளிமா யிவை யொரோவொன்
றிருமூன் றாக வியன்ற பின்னர்
நரையுருமுப் புலிவருவா யிவையொரோவொன்
றைந்தாக
வெள்ளை பெற்ற வொரூஉமோ னைத்தொடை
யேழொரு பஃது மாறு மாகும்''

நிரையாதி பதின்மூன்றுக்குத் தொடை ௭௬. ஆக வெள்ளை ஒரூஉ மோனைத்தொடை ௱௫௬.

"கலிக்கு வருஞ்சீர் பத்து நான்கு
மொரோவொன் றைந்தாகப் பெற்ற வொரூஉமோனை
யீரைம் பஃது மிருபது மாகும்"

ஆகக்கலிக்கு எஉO.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த வொரூஉமோனை
ஐந்நூற்று நாற்பத் தொன்ப தாகும்"

ஆகத்தொடை ருசகூ.

"நேர்பதின் மூன்றா னொரோவொன்று பத்தாக
வகவல் பெற்றகூழைமோ னைத்தொடை
நூற்றுமுப் பஃதென நுவன்றனர் புலவர்"
எநடு.

"நிரையாதி யாகிய சீர்பதின் மூன்றா
னொரோவொன்று பத்து மொன்று மாக
வகவல் பெற்ற கூழைமோ னைத்தொடை
நூற்று நாற்பத்து மூன்றென நுவல்வர்"
எசந.

ஆக அகவற்குக் கூழைமோனைத்தொடை உஎந.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரேறு
எனவிவை ஒரோவொன் றெவ்வே ழாகத்
தேமா மின்னுப் பாதிரி மேவுசீர்
நன்னாணுப் பூமருது மாசெல்வா யிவை
யொரோவொன் றாகக் காருருமு மாவருவா
யொரோவொன் றைந்தாக வெள்ளை பெற்ற
கூழைமோனைத்தொடை யெண்பஃ தாகும்" அO.

"வரகு வலியது கடியாறு விறகுதீக்
கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு
உருமுத்தீப் புளிமா விவையொ ரோவொன்
றீரா றாக வியன்ற பின்னர்
நரையுருமுப் புலிவருவா யொரோவொன் றைந்தாக
வெள்ளை பெற்ற கூழைமோ னைத்தொடை"
யெழுபத் தாறா வியலு மென்ப" எசா.

ஆக வெள்ளைக்குக் கூழைமோனை கருசா.

"நேரு நிரையு மாகிய சீர்க
ளிருபத்து நான்கா னொரோவொன் றைந்தாகத்
துள்ளல் பெற்ற கூழைமோ னைத்தொடை
யீரைம் பஃது மிருபது மாகும்" கஉ0.

"மூவகைப் பாவிற்குங் கூழைமோ னைத்தொடை
ஐஞ்ஞாற்று நாற்பத் தொன்ப தாகும்" ருசகூ.

"நேர்பதின் மூன்றா னொரோவொன்று பத்தாக
வகவற் குவரு மேற்கதுவாய் மோனை
நூற்று முப்பஃ தெனநுவன் றனரே" கங0

"நிரையாதியாகியசீர் பதின் மூன்றா
னொரோவொன்று பத்து மொன்று மாக
வகவல் பெற்ற மேற்கதுவாய் மோனை
நூற்று நாற்பத்து மூன்றென நுவல்வர்" கசங.

ஆக அகவற்கு மேற்கதுவாய்மோனை உஎங.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரேறு
என்றிவை யொரோவொன் றெவ்வே ழாகத்
தேமா மின்னுப் பாதிரி மேவுசேர்
நன்னாணுப் பூமருது மாசெல்வா யிவை
யொரோவொன் றாறாகக் காருருமு மாவருவா
யொரோவொன் றைந்தாக வெள்ளைக்கு மேற்கதுவாய்
மோனை யெண்பஃ தாகு மென்ப" அ0.

"வரகு வலியது கடியாறு விறகுதீக்
கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு
உருமுத்தீப் புளிமா விவையொ ரோவொன்
றீரா றாக வியன்ற பின்னர்
நரையுருமுப் புலிவருவா யொரோவொன் றைந்தாக
வெள்ளை பெற்ற மேற்கதுவாய் மோனை
யேழொரு பஃது மாறு மாகும்" எகூ

ஆக வெள்ளைக்கு மேற்கதுவாய்மோனை கருகூ.

"நேரு நிரையு மாகிய சீர்க
ளிருபத்து நான்கா னொரோவொன் றைந்தாகத்
துள்ளல் பெற்ற மேற்கதுவாய் மோனை
யீரைம் பஃது மிருபது மாகும்" கஉ0.

"மூவகைப் பாவிற்கு முற்றுமோ னைத்தொடை
ஐஞ்ஞாற்று நாற்பத் தொன்ப தாகும்"; ௫௪௯.

"எண்வகை மோனைக்கு மியன்ற பெருந்தொகை
மூந்நூற்றுத் தொண்ணூற் றிரண்டு தலையிட்ட
நாலா யிரமா நவின்றனர் புலவர்"

ஆக மோனைத்தொடை ௪௯௯௨.

இனி எதுகை வருமாறு

"அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும்
வெள்ளைக் கொருநூற் றைம்பத் தாறுங்
கலிக்கு நூற்றிரு பஃது மாக
மூவகைப் பாவிற்குந் தலையா கெதுகை
ஐஞ்ஞாற்று நாற்பத் தொன்ப தாகும்" ௫௪௯.

"அடியெது கைத்தொடை கொள்ளுங் காலு
மிம்மூ வகையா னதுபெ றுந்தொகை
யைஞ்ஞாற்று நாற்பத் தொன்ப தாகும்" ௫௬

"வண்டு தேமா மின்னுவிவை யொரோவொன்
றீரைந் தெய்திய விணையெது கைதா
மூப்ப தாக மொழிந்தன ரகவற்கு" ௯0.

"வலியது கடியாறு விறகுதீக் கணவிரி
யுராறுபுலி பெருநாணு வுருமுத்தீ மழகளிறு
விரவுகொடி நரையுருமு விவையொரோ வொன்றற்
கொன்றுட னீரைந்தா வியன்ற விணையெதுகை
நூற்றொரு பஃதாக நுவன்றன ரகவற்கு" ௧௧0.

ஆக அகவற்கு இணையெதுகை ௧௪0.

"ஞாயிறு போதுபூ வெட்டுமுத லேழும்
போரேறு நன்னாணுப் பாதிரி பூமருது
மாசெல்வா யொன்பான் முதலா மாறு
மேவுசீர் காருருமு மாவருவா யிவை
யீரைந்து தொட்டே யீரே ழெய்த
வெள்ளை பெற்ற விணையெது கைத்தொகை
யைம்பத் தொன்ப தாகு மென்ப" ௫௯.

"வரகிரு நான்கு புளிமா வொன்பான்
முதலா வொரோவொன் றிருமூன் றாக
வெள்ளைக் கிணையெதுகை மூவா றாகும்" கஅ.

ஆக வெள்ளைக்கு இணையெதுகை எஎ.

"நேர்நிரை யீற்றாற் கலிக்கிணை யெதுகை
யிருமூப் பஃதாக வியலு மென்ப" சாO.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த விணையெதுகை
யிருநூற் றெழுபத் தேழா கும்மே"

ஆக உஎஎ.

"வண்டு நான்கு மின்னுத் தேமா
வைந்து ஞாயிறு போதுபூப் போரே
றாறு பாதிரி மேவுசீர் நன்னாணுப்
பூமருது நீடுகொடி யேழு காருருமு
நாணுத்தளை யெட்டு முதலா வந்தவவை
யொரோவொன் றெவ்வேழ் நிலம்பெற வகவற்குத்
தொக்க பொழிப்பெதுகை தொண்ணூற் றொன்றே"
கூக

"வரகிரு நான்கு புளிமா அரவொன்பான்
வலியது விறகுதீக் கடியாறு பத்துக்
கணவிரி யுருமுத்தீப் பெருநாணு வுரறுபுலி
மழகளிறு பதினொன்று நரையுருமு விரவுகொடி
யீராறு முதலா வந்தவை யொரோவொன்
றொன்பது நிலம்பெற வகவற்குப் பொழிப்பெதுகை
நூற்றோ டொருபத் தேழென நுவல்ப" ககஎ

ஆக அகவற்குப் பொழிப்பெதுகை உOஅ.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றெட்டு முதலா வேழுந் தேமா
மின்னுப் பாதிரி மேவுசீர் நன்னாணுப்
பூமருது மாசெல்வா யொன்பான் முதலாறுங்
காருருமு மாவருவாய் பத்துமுத லைந்து
மாக வெள்ளைக்கு வந்த பொழிப்பெதுகை
யெண்ணொரு பஃதே யெய்து மென்ப" அO

"வரகு வலியது கடியாறு விறகுதீ
யெட்டுக் கணவிரி பெருநாணுப் புலிசெல்வாய்
மழகளி றுருமுத்தீப் புளிமா விவையொன்பது
நரையுருமுப் புலிவருவாய் பத்து முதல
வந்த வவையொரோ வொன்றைந் தாக
வெள்ளை பெற்ற பொழிப்பெது கைத்தொடை
யாறொரு பஃது மைந்து மாகும்"

வெள்ளைப் பொழிப்பெதுகை கூரு.

"வலியது விறகுதீக் கடியா றெனுமிவை
யீரேழ் தொட்டுப் பதினெட் டளவுங்
கணவிரி பெருநாணு வுருமுத்தீ மழகளிறு
புலிசெல்வா யுரறுபுலிப் பதினைந்து முதலாப்
பத்தொன் பாளை வுயரவு நரையுருமு
விரவுகொடிப் புலிவருவாய் பதினாறு முதலா
விருபதின் காறு முயரவும் வருதலிற்
றுள்ளல் பெற்ற பொழிப்பெ துகைதா
மறுபஃ தாக வறைந்தனர் புலவர்" கூ0.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த பொழிப்பெதுகை
நானூற் றொருபத்து மூன்றென நவில்ப" சகூ.

"நேர்பதின் மூன்றா வகவற் கொரூஉவெதுகை
வண்டு நான்கு மின்னுத் தேமா
வைந்து ஞாயிறு போதுபூப் போரே
றாறு பாதிரி மேவுசீர் நன்னாணுப்
பூமருது நீடுகொடி யேழு காருருமு
நாணுத் தலையெட்டு முதலா வொரோவொன்
றெவ்வேழாக வியன்ற தொகைதா
மேழொரு பஃதோ டிருபத் தொன்றே" கூக.

"நிரைபதின் மூன்றா னகவற் கொரூஉவெதுகை
வரகிரு நான்கு புளிமா அரவொன்பான்
வலியது கடியாறு விறகுதீப் பத்துக்
கணவிரி யுரறுபுலி பெருநாணு வுருமுத்தீ
மழகளிறு பதினொன்று விரவுகொடி நரையுருமு

வீராறு முதலா வொரோவொன் றொன்பா
னாகத் தொகைநூற் றொருபத் தேழே'' கூகஎ.

ஆக அகவற்கொரூஉவெதுகை உ0அ

''நேர்பதின் மூன்றான் வெள்ளைக் கொரூஉவெதுகை
வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றெட்டு முதலா வேழுந் தேமா
மின்னுப் பாதிரி மேவுசீர் நன்னாணுப்
பூமருது மாசெல் வாயிலை யொன்பான்
முதலா வொரோவொன் றாறுங் காருருமு
மாவருவாய் பத்து முதலாக வொரோவொன்
றைந்து மாக வறைந்த தொகைதா
மெண்ணொரு பஃதே யெய்து மென்ப'' அ0.

''நிரைபதின் மூன்றான் வெள்ளைக் கொரூஉவெதுகை
வரகு வலியது கடியாறு விறகுதீ
யெட்டுக் கணவிரி பெருநாணு வுருமுத்தீப்
புலிசெல்வாய் மழகளிறு புளிமாவிலை யொன்பது
நரையுருமுப் புலிவருவாய் பத்துமுத லாக
வொரோவொன் றைந்து நிலம்பெற்
றாறொரு பஃது மைந்து மாகும்'' கூரு;

ஆக வெள்ளைக்கு ஒரூஉவெதுகை கசரு.

''நேரீ ராறாற் கலிக்கொரூஉ வெதுகை
பெருகிய நிலத்தி லொரோவொன்று களையப்
பெறுந்தொகை நாற்பத்தெட்டுப் பின்னர்
நிரையீ ராறாற் சுருங்கிய நிலத்திற்
கொரோவொன்று களையப் பெறுந்தொகை யஃதா
மிருவகைத் தொகையுந் தொண்ணூற் றாறே'' கூகூ.

''மூவகைப் பாவிற்கு மொழிந்த வொரூஉவெதுகை
நானூற்று நாற்பத் தொன்ப தாகும்'' சசகூ.

''வண்டு தேமா மின்னுவிலை மூன்று
மொரோவொன்று சுருங்கிய நிலத்த தந்நான்
ககவல் பெற்ற கூழை யெதுகை
யீரா றாக வியலு மென்ப'' கஉ.

"வலியது கடியாறு விறகுதீப் பத்துக்
கணவிரி யுரறுபுலி பெருநாணு வுருமுத்தீ
மழகளிறு பதினொன்று விரவுகொடி நரையுருமு
வீராறு முதலாக வொரோவொன் றொன்பா
னாக வகவற்குக் கூழை யெதுகை
தொண்ணூ றாகத் தொகுத்தனர் புலவர்" சுo.

ஆக அகவற்குக் கூழையெதுகை கoஉ

"ஞாயிறு போதுபூப் போரே றேழாப்
பாதிரி மேவுசீர் நன்னாணுப் பூமருது
மாசெல்வா யிவை யொரோவொன் றாகக்
காருருமு மாவருவா யொரோவொன் றைந்தாக
வெள்ளை பெற்ற கூழை யெதுகை
யாறொரு பஃது மொன்று மாகும்" சுக

"வரகிரு நான்கு புளிமா அரவொன்பான்
முதலா வொரோவொன்று நந்நான் காக
வெள்ளை பெற்ற கூழை யெதுகை
யீராறாக வியலு மென்ப" கஉ.

ஆக வெள்ளைக்குக் கூழையெதுகை எங.

"நிரையீ ராறாற் கூழை யெதுகை
யிருமுப் பஃதா வியலுங் கலிக்கே" சுo.

"மூவகைப் பாவிற்குக் கூழை யெதுகை
யிருநூற்றுமுப்பத் தைந்தாகும்மே" உஙரு

"நேராதி யாகிய சீர்பதின் மூன்றாற்
சுருங்கிய நிலத்தி லொரோவொன்று நான்காக
வகவல் பெற்ற மேற்கதுவா யெதுகை
யையொரு பஃது மிரண்டு மாகும்" ருஉ.

"வரகீ ரைந்து புளிமா அரவு
பதினொன்று வலியது கடியாறு விறகுதீ
யீராறு கணவிரி யுரறுபுலி பெருநாணு
வுருமுத்தீ மழகளி றிவைபதின் மூன்று
விரவுகொடி நரையுருமு வீரேழ் முதலா

வொரோவொன் றேழாக வகவல் பெற்ற
மேற்கதுவா யெதுகை தொண்ணூற் றொன்றே'' கூக.

ஆக அகவற்கு மேற்கதுவா யெதுகை கசரு.

''வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றெட்டு முதலா வொரோவொன் றேழுந்
தேமா மின்னுப் பாதிரி மேவுசீர்
நன்னாணுப் பூமருது மாசெல் வாயிலை
யொன்பான் முதலா வொரோவொன் றாறுங்
காருருமு மாவருவா யீரைந்து முதலா
வொரோவொன் றைந்து மாக வெள்ளைக்கு
மேற்கதுவா யெதுகை யெண்பஃ தாகும்'' அ0.

''வரகு வலியது கடியாறு விறகுதீ
யெட்டு முதலா வொரோவொன்று நான்குங்
கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளி
றுருமுத் தீப்புளி மாவிலை யொன்பா
னரையுருமுப் புலிவருவா யீரைந்து முதலா
வொரோவொன் றொருநான் காக வெள்ளைக்கு
மேற்கதுவா யெதுகை யைம்பத் திரண்டே'' ருஉ.

ஆக வெள்ளைக்கு மேற்கதுவாயெதுகை கருஉ.

''நிரையீ ராறாற் கலிக்கு மேற்கதுவா
யெதுகை நாற்பத் தெட்டா வெய்தும்'' சஅ.

''மூவகைப் பாவிற்கு மொழிந்த மேற்கதுவா
யெதுகை முந்நூற் றிருபத்து மூன்றே'' ருஉரு.

''வண்டு நான்கு தேமா மின்னுவிலை
யைந்து முதலா வொரோவொன் றேழாக
வகவல் பெற்ற கீழ்க்கதுவா யெதுகை
யொன்று தலையிட்ட நாலைந் தாகும்'' உக.

''வலியது கடியாறு விறகுதீப் பத்துக்
கணவிரி யுராறுபுலி பெருநாணு வுருமுத்தீ
மழகளிறு பதினொன்று விரவுகொடி நரையுருமு
வீராறு முதலா வொரோவொன் றொன்பா
னாக வகவற்குக் கீழ்க்கது வாயெதுகை
தொண்ணூ றாகத் தொகுத்தனர் புலவர்'' கூ0.

ஆக அகவற்குக் கீழ்க்கதுவாயெதுகை ககக.

''ஞாயிறு போதுபூப் போரே றென்றிவை
யெட்டு முதலா வொரோவொன் றேழும்
பாதிரி மேவுசீர் நன்னாணுப் பூமருது
மாசெல்வா யொன்பான் முதலா வாறுங்
காருருமு மாவருவா யீரைந்து முதலா
வொரோவொன் றைந்து மாகக் கீழ்க்கதுவா
யெதுகை வெள்ளைக் கறுபத் தொன்றே'' கூக.

''வரகிரு நான்கு புளிமா வொன்பான்
முதலா வொரோவொன் றொருநான் காக
வெள்ளை பெற்ற கீழ்க்கதுவா யெதுகை
யீரா றாக வியலு மென்ப'' கஉ.

ஆக வெள்ளைக்குக் கீழ்க்கதுவாயெதுகை எங.

''நிரையீரா றாற் கலிக்குக் கீழ்க்கதுவா
யெதுகை நாற்பத் தெட்டே யாகும்''

''மூவகைப் பாவிற்கு மொழிந்த கீழ்க்கதுவா
யெதுகை யிருநூற்று முப்பத் திரண்டே'' உஙஉ.

''வண்டு தேமா மின்னிவை மூன்றுஞ்
சுருங்கிய நிலத்தி லொரோ வொன்று நந்நான்
காக வகவல் பெற்றமுற் றெதுகை
யீரா றாக வியலு மென்ப'' கஉ.

''வலியது கடியாறு விறகுதீ யீராறு
கணவிரி யுரறுபுலி பெருநாணு வுருமுத்தீ
மழகளிறு பதின்மூன்று விரவுகொடி நரையுருமு
வீரேழ் முதலா வொரோவொன் றேழாக
வகவல் பெற்ற முற்றெது கைதா
மேழொரு பஃதா வியலு மென்ப'' எO.

ஆக அகவற்கு முற்றெதுகை அஉ.

''ஞாயிறு போதுபூப் போரே றென்றிவை
யெட்டு முதலா வொரோவொன் றேழும்
பாதிரி மேவுசீர் நன்னாணுப் பூமருது
மாசெல்வா யொன்பான் முதலாக வாறு

காருருமு மாவருவா யீரைந்து முதலா
வொரோவொன் றைந்தா முற்றெதுகை வெள்ளைக்
காறொரு பஃது மொன்று மாகும்'' சுக.

''வரகிரு நான்கும் புளிமா வொன்பான்
முதலா வொரோவொன் றொருநான் காக
வெள்ளை பெற்ற முற்றெது கைதா
மீரா றாக வியலு மென்ப'' எங.

ஆக வெள்ளைக்கு முற்றெதுகை எங.

''நிரையீ ராறாற் கலிக்குமுற் றெதுகை
நாலொரு பஃது மெட்டு மாகும்'' சஅ.

''மூவகைப் பாவிற்கு மொழிந்தமுற் றெதுகை
மூன்றுதலை யிட்ட விருநூ றாகும்'' உ0ங.

"எதுகையென் பதனா னியன்ற பெருந்தொகை
மூவா யிரத்தோ டிருநூற்று முப்பது''

ஆகவே யெதுகைத்தொடை ஙஉங0.

''மோனைக்கு மெதுகைக்கு மொழிந்த தொடைத்-
யிருபத் திரண்டு முடியி னிட்ட தொகை
வறுநூற் றுடனே ழாயிர மாகும்''

ஆக மோனைக்கு மெதுகைக்கும் எசுஉஉ

இனி முரண் வருமாறு

''அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும்
வெள்ளைக் கொருநூற் றைம்பத் தாறுங்
கலிக்கு நூற்றிரு பஃது மாகும்''

''மூவகைப் பாவிற்கு மொழிந்த வடிமுரண்
ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்'' ருசகூ

''நேரா திச்சீர் பதின்மூன் றானு
மொரோவொன்று பத்தாக வகவற் கிணைமுர
ணீரைம் பஃது முப்பது மாகும்'' கங0.

''நிரையா திச்சீர் பதின்மூன் றானு
மொரோவொன்று பத்து மொன்று மாக

வகவல் பெற்ற விணைமுரண் டொடைதா
மீரைம் பஃதொடு நாற்பத்து மூன்றே" கசரு.

ஆக வகவற்கு உஎரு.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றெட்டுமுதலா வொரோவொன் றேழுந்
தேமா மின்னுப் பாதிரி மேவுசீர்
நன்னாணுப் பூமருது மாசெல் வாயிவை
யொன்பான் முதலா வொரோவொன் றானுங்
காருருமு மாவருவா யீரைந்து முதலா
வொரோவொன் றைந்து மாக வெள்ளைக்
கிணைமுர ணெண்பஃ தாகுமென்ப" அ0.

"வரகு வலியது கடியாறு விறகுதீ
யெட்டுக் கணவிரி பெருநாணுப் புலிசெல்வாய்
மழகளி றுருமுத்தீப் புளிமா வரவொன்பான்
முதலா வொரோவொன் றிருமூன் றாக
நரையுருமுப் புலிவருவா யீரைந்து முதலா
வொரோவொன் றைந்தாக வெள்ளைக் கிணைமுர
ணேழொரு பஃது மாறு மாகும்" எகூ

ஆக வெள்ளைக்கு கருகூ.

"நேரு நிரையு மாகிய சீர்க
ளிருபத்து நான்காற் கலிக்கிணை முரண்டொடை
யீரைம் பஃது மிருபது மாகும்" கஉ0.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த விணைமுர
ணைஞ்ஞூற்று நாற்பத் தொன்பது மாகும்" ருசகூ.

"ஈண்டிணை முரணிற்குக் கூறிய சூத்திரங்களைப் பொழிப்பு முரணுக்கு மொரூஉ முரணுக்குங் கூழைமுரணுக்கும் மேற்கதுவாய் முரணுக்குங் கீழ்க்கதுவாய் முரணுக்கும் முற்றுமுரணுக்குங் கூறி இணைமுரணுக்குத் தொடை கொண்டிவ்வாறே கொள்ள ஒரோவொன்று ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதாம். ருசகூ

"இணைமுரண் டொடையோ டேனைய கொள்ள
வொரோவொன் றைஞ்ஞூற்று நாற்பத் தொன்பதே"

எண்வகை முரணா னியன்ற தொடைத்தொகை
முந்நூற்றுத் தொண்ணூற் றிரண்டு முடிவிட்ட
நாலா யிரமா நவின்றனர் புலவர்''

ந, ௪௩௯௨

இனி இயைபு வருமாறு

''அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும்
வெள்ளைக் கிருநூற் றைம்பத் தாறுங்
கலிக்கு நூற்றிரு பஃது மாக
மூவகைப் பாவிற்கு மெழுத் தடியியைபே
யைஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்'' ருசகூ.

''சொல்லடி யியைபு கொள்ளுங் காலு
மூவகை யானும் வந்த பெருந்தொகை
யைஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்'' ருசகூ.

''நேரா திச்சீர் பதின்மூன் றானு
மொரோரொன்று பத்தாக வகவற் கிணையியை
பீரைம் பஃது முப்பஃது மாகும்'' கஙO.

இவ்வைந்திணைய மூன்றுபாவிற்கும் பகுக்குமாறு :-

''ஐந்து தொடையா னகவற்கு வருந்தொகை
யொரோவொன் றிருநூற் றெண்பத்து மூன்றா
வாயிரத்து நானூற் றொருபத் தைந்தே'' கசகரு.

''ஐந்து தொடையான் வெள்ளைக்கு வந்ததொகை
யொரோவொன் றொருநூற்றுப் பத்து மூன்றா
வெண்ணூற் றொருபத் தைந்தென மொழிப'' அகரு

''ஐந்து தொடையாற் கலிக்கு வருந்தொகை
யொரோவொன் றொருநூற் றிருபஃ தாக
நூறு தலையிட்ட ஐஞ்ஞூ றாகும்'' சூOO.

''கூறிய மூன்றின் றொடைத்தொகை கூறின்
நாலைஞ்ஞூற் றுடனெண்ணூற்று முப்பது''உஅஙO.

ஆகவைந்து தொடையானும் பெற்றதொகை உஅஙO.

இனி

''ஐவகை முரணும் வருக்க மோனையும்
வருக்க வெதுகையும் வழிமோ னையும்

உயிரெது கையு முரைத்தசெந் தொடையும்
அறுநூற் றிருபத் தைந்தடி யோடுந்
தொடைகொளும் வகையைத் தோன்றக் கூறின்
நுந்தை யெனுஞ்சீர் முதற்பா விரண்டிற்கு
முறழ்ந்த வடிக ளிருபது நீக்கி
யேனைச் சீரா லுறழ்ந்த வடித்தொகை
யறுநூற் றைந்தே யாகு மவற்றுள்
வழுநில மைம்பத் தாறுங் களைய
வொரோவொன் றெய்திய தொடைத்தொகை கூறி
னைஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகப்
பத்துத் தொடையும் பெற்ற தொகைதா
மையா யிரத்தொடு நானூற்றுத் தொண்ணூறு''

ஆகப் பத்துத் தொடைக்கு மொரோவொன் றைஞ்ஞூற்று. நாற்பத்தொன்பஃதாகப் பெற்ற தொகை ருசகூO. நுந்தைக்கிரண்டு மரபிற்குமூன்றும் வழுப்போய் ஐம்பத்தாறு வழுவாயிற்று. இனி இத்தொகையை மூன்று பாவிற்கும் பகுக்குமாறு:—

''ஒரோவொன் றிருநூற் றெழுபத்து மூன்றாப்
பத்தி னானு மகவல் பெறுந்தொகை
யீரா யிரத்தோ டெழுநூற்று முப்பது'' உஎ௩O

''ஒரோவொன் றொருநூற் றைம்பத் தாறாப்
பத்தினானும் வெள்ளை பெறுந்தொகை
யாயிரத் தைஞ்ஞூற் றறுபஃ தாகும்'' கருசுO.

''ஒரோவொன் றொருநூற் றிருபஃ தாகப்
பத்தி னானுந் துள்ளல் பெறுந்தொகை
யாயிரத் திருநூ றாகு மென்ப'' கஉOO.

''தொடைமூ வைந்தா னியன்ற தொகைதா
மெண்ணா யிரத்தொடு முந்நூற் றிருபது''

முற்கூறியவைந்து மிதனாற்கூறிய பத்துமாகப் பதினைந்தானும் பெற்றதொகை அ௩உO.

இனி மூன்றாமெழுத்தொன்றெதுகை

எழுத்தெண்ணப்படு மெழுத்துக்களிலும் எழுத்தாக வெண்ணாத வொற்றுக் குற்றுகரங்களிலுந் தொடை கொள்ளுமாறு:-

''வண்டு மின்னு நுந்தைசேற் றுக்கா
வீடுகொடி யிவ்வாற்றா னறுபது நீக்கி
யேனைச் சீரா னுறழ்ந்த வடிக
விருநூற் றறுபத்து நான்கா மவற்றுண்
முப்பத் தொருவழுக் களைந்து கொள்ளப்
பெற்ற வகவற் றொடைத்தொகை கூறின்
இருநூற்று முப்பத்து மூன்றா கும்மே'' ௨௩௩.

இதனுட் களைந்த சீரைந்துநீக்கி யேனை நேராதி யொன்பதிற்குப் பதினெட்டும் நிரையாதி பதின்மூன்றற்குப் பதின்மூன்றுமாக வழு முப்பத்தொன்றாயிற்று.

''வண்டு மின்னு நுந்தைசேற் றுக்கா
விவற்றான் முப்பத் தொன்று நீக்கி
யேனைச் சீரா னுறழ்ந்த வடிக
ளூற்றோ டைம்ப தாகு மவற்றுள்
வழுப்பதி னான்குங் களைய வெள்ளை
பெறுந்தொடை நூற்று முப்பத் தாறே'' ௧௩௬.

இதனுட் களைந்த சீர் நான்குநீக்கி யேனைநேராதி பத்திற்குப் பத்தும் நிரையாதியுள் வரகு வலியது கடியாறு விறகுதீயென்னும் நான்கற்கு நான்குமாக வழுப்பதினான்காயிற்று. ஆக விரண்டற்கும் வழு நாற்பத்தைந்து.

''சேற்றுக்கா வீடுகொடிச் சீரைந்து நீக்கி
யேனைச் சீராற் றுள்ளல் பெறுந்தொடை
யொருநூற் றொருபஃ தாகு மென்ப'' ௧௧0.

''மூவகைப் பாவின் மூன்றா மெழுத்தொன்
[illegible] றெழுபத் தொன்பது'' ௪௭௧.

[illegible] ந்தும் வெள்ளைக்கு நான்குங் கலிக்கிரண்டுமாக [illegible] று களைந்தசீர்க ளைந்து மிரண்டா மெழுத்தும் மூன்றாமெழுத்துஞ் சேரவொன்றிற் றலையாகெதுகைப்பாற்படுதலானும் பிறசீர் குறைந்து வேறுபடுத்திற் பிறதொடை சிறந்து இத்தொடை சிறந்து காட்டாமையானும் அங்ஙனங் களையவேண்டிற்றென வுணர்க.

மெல்லினவெதுகை முதலியன

இனி,

''மெல்லின வெதுகையு மிடையின வெதுகையு
மாசிடை யெதுகையு நெடின்மோ னையு
நிரைமுதற் சீரு நுந்தையு நீக்கி
நேர்முதற் சீர்கள் பதின்மூன் றானு
வொரோவொன் றுறழு மடித்தொகை கூறி
னூற்றோ டைம்பத் தாறா மவற்றுள்
வழுநில மிருபத் தாறுங் களைய
வொரோவொன் றெய்துந் தொடைநூற்று முப்பஃது'' கூ௩௦.

''அந்நாற் றொடையா னகவல் பெறுந்தொகை
யைஞ்ஞூற் றிருபஃ தாகு மென்ப'' ரு௨௦.

''நேர்பதின் மூன்றான் முன்னர்க் கூறிய
நால்வகைத் தொடைக்கு மொரோவொன் றுறழ்ந்த
வடித்தொகை தொண்ணூற்று மூன்ற னுள்ளும்
வழுப்பதின் மூன்று களைய வொரோவொன்
றெய்திய தொடைதா மெண்ப தென்ப
தாகநாற் றொடை பெற்றவெண் டொடைதா
னெழுநூற் றிருபஃ தெனமொழிந் தனரே'' எ௨௦.

அவற்றுள்,

''நுந்தை வந்த மெல்லின வெதுகை
முதற்பா விரண்டற்குந் தளைவழுக் களைந்து
கொள்ளப் பெறுந்தொடை பதினே ழாகும்'' கஎ.

''நுந்தை தேமாக் களைந்துநேர் முதற்சீர்
பன்னிரண் டானு முன்னர்க் கூறிய
நாற்றொடை யொரோவொன் றெய்துந் தொடைதா
மறுபஃ தாகக் கலிக்கு வருந்தொடை
யிருநூற்று நாற்பஃ தென்றனர் புலவர்'' ௨௪௦.

''நாற்றொடை யானும் பெற்ற தொடைதா
மாயிரத் தோடு தொண்ணூற் றேழே''

ஆகவிந்நான்கு தொடைக்கும் பெற்ற தொகை க௦கஎ.

இனி வல்லினவெதுகை வருமாறு

“வல்லின வெதுகை வகுக்குங் காலை
நிரைபதின் மூன்று மின்னு நுந்தையு
மேவு சீரு நாணுத் தளையுங்
களைய நேராதி பத்தா மவற்றிற்
கிருபது வழுவுங் களைந்த பின்னர்
அகவல் பெற்ற தொடைநூ றாகும்” க00.

“நிரைபதின் மூன்று மேவு சீரு
மின்னு நுந்தையுங் களைந்து நேராதி
பதினொன் றற்கும் பதினொரு வழுவுங்
களைந்தபின் வெள்ளைக் கறுபத் தெட்டே
நிரையீ ராறு நாணுத்தளையு
மேவு சீருங் களையநே ராதி
பத்தாற் கலித்தொடை யைம்பஃ தாகும் ருO

“மூவகைப் பாவிற்கும் வல்லின வெதுகை
யிருநூற் றொருபத் தெட்டென மொழிப” உகஅ.

இனிஉயிரளபெடை வருமாறு

“அசைச்சீர் நான்குரி முதற்சீ ரெட்டு
நுந்தை யெனப்பதின் மூன்று மொழிந்தது
நேரேழ் நிரையே ழாகிய சீராற்
பெற்ற வடிநூற் றறுபத் தெட்டனுள்
மூவேழ் வழுவு நீக்கிய பின்ன
ரகவல் பெற்ற வளபெடைத் தொடைதா
நூற்றொடு நாற்பத் தேழென நுவல்ப” கசஎ.

“கூறிய பதின்மூன் றொழித்த பின்னர்
நேரொன் பானு நிரையொன் பானு
மாகிய சீராற் பெற்ற வடிதா
நூற்றொ டொருபத் தேழா மவற்றுள்
வழுப்பதி னொன்று நீக்கி வெள்ளைக்
களபெடை நூற்றா றாகு மென்ப” க0சா.

“உரிமுதற் சீரெட் டொழிந்த பின்னர்
நேர்நிரை யீரெண் சீராற் றுள்ளாற்
களபெடை யெண்பஃ தாகு மென்ப” அ0.

"மூவகை யாற்பெறு முயிரள பெடைதா
முந்நூற்று முப்பத்து மூன்றென மொழிப" ௩.௩.௩.

இனி ஒற்றளபெடை வருமாறு

"தேமாப் புளிமா வெனுமிரண் டற்கும்
வழுநில மூன்று களைய வகவற்
கொற்றள பெடைதா மிருபத் தொன்றே" உக.

"மாசெல்வாய் தேமா வழுவிரண்டு களைந்து
புளிமாப் புலிசெல்வாய் கூட்டநான் கானும்
வெள்ளைக் கொற்றள பிருபத்து நான்கே" உ௪.

"முதற்பா விரண்டிற் கொற்றள பெடைதா
மைந்துதலை யிட்ட நாலொரு பஃதாம்"

ஆகவிரண்டு அளபெடையுங் கூட்ட ௩எஅ. இனி, யொற்றள-பெடை துள்ளலோசையைத் தள்ளி நிற்றலாற் கலிக்கு வாரா-தென்றுணர்க.

"எட்டுத் தொடையா வியன்ற தொகைதா
மொருநூற் றெழுபத் திரண்டுதலை யிட்ட
வீரா யிரமே யாகு மென்ப" உகஎஉ.

இனி அசையந்தாதி வருமாறு

தேமா முதனின்றுறழ்ந்த வடிக்கு, நான்காஞ் சீருந் தேமா-வெனநின்று மேல்வருமடியோ டந்தாதிக்க வேண்டுமென்றுணர்க. அது, "தேமா வண்டு வண்டு காமர்' எனநின்று மாவென மதித்-தென வருமென்று கொள்க. இஃது ஒழிந்தவடிகட்கும் மேல்வருஞ் சீரந்தாதிக்குமென்றுகொள்க. இது, முதற்பா விரண்டற்குமே கொள்க. அங்ஙனம் கொள்ளுங்காற் போதுபூவுக்குப் போதுகளெ-னவும் விறகுதீக்கு விரிகாரெனவுங்கொள்க. ஒழிந்தனவற்றிற்கு மிவ்வாறே கூறவேண்டுவன கூறிக்கொள்க.

"தேமா வாறு ஞாயிறு புளிமாப்
போதுபூ வேழு பாதிரி பூமருது
நீடு கொடியெட் டுக்கா ருருமு
நாணுத்தளை யொன்பது முதலா வந்த
வசையந் தாதி யொரோவொன் றொன்ப
தொன்ப தாக வகவல் பெறுந்தொகை
நாலொரு பஃது மெட்டு மாகும்" ௪அ.

இதற்குமேல் வருவனவற்றிற்கு "முதலா" வென்பதனை யெண்களோடு கூட்டிப் பொருளுரைக்க.

"புளிமா வொன்பான் வலியது விறகுதீப்
பத்துக் கணவிரி யுரறுபுலி மழகளி
றீரா றுநரை யுருமு விரவுகொடி
யீரேழ் முதலா வந்தா தியொரோ
வொன்றே றாக வகவல் பெறுந்தொகை
யையொரு பஃது மாறு மாகும்" ௫௬.

ஆக, க0௪.

'போதுபூப் போரே றிருநான்கு மேவுசீர்
நன்னாணு மாசெல்வா யீரைந்து முதலா
வொரோவொன் றைந்து மாவரு வாய்பன்
னிரண்டு முதலாக மூன்று நிலமாக
வெள்ளை பெற்ற வசையந் தாதி
நாலைந் ததனோ டெட்டு மாகும்" உஅ.

"விறகுதீக் கடியா றொன்பான் பெருநா
ணுருமுத்தீப் புலிசெல்வாய் பதினொன்று முதலா
வொரோவொன்று நான்காக வெள்ளை பெற்ற
வசையந் தாதி நாலைந் தாகும்" உ0.

ஆக, ௪அ.

இனிக், கலிக்கசையந்தாதி வருங்காற் றனக்குரிய இருபத்து நான்குசீரு முறழ்ந்தவடிகளுக்கு வெண்சீர் நான்கு மீற்றின்கண்-வருவதல்ல தொழிந்த வியற்சீர் பதினாறு முரிச்சீர் நான்கு மீற்றின்கண் வந்த அந்தாதித்தொடை கொள்ளாவென்றுணர்க.

"நேரீ ராறு நிரையீ ராறு
மாகிய சீர்கட் கொரோவொன் றைந்தாத்
துள்ளல் பெற்ற வசையந் தாதி
நூற்றோ டிருபஃ தாகு மென்ப" கஉ0.

"மூவகைப் பாவிற்கு மசையந் தாதி
யிருநூற் றெழுபத் திரண்டா கும்மே" உளஉ.

இனிச் சீரந்தாதி வருமாறு

"வண்டு நுந்தை நான்கு தேமா
மின்னிரு மூன்றாறு முதலா வொரோவொன்
றவ்வா றாக வகவல் பெற்ற
சீரந் தாதி யிருபத்து நான்கே" உ௪.

"வலியது விறகுதீக் கடியா றீரைந்து
கணவிரி யுராறுபுலி பெருநாணு வுருமுத்தீ
மழகளி றீராறும் விரவுகொடி நரையுருமு
வீரேழ் முதலா வொரோவொன் றேழாக
வகவல் பெற்ற சீரந் தாதி
யேழொரு பஃதே யாகு மென்ப" எ௦.

ஆக கூ௪.

"ஞாயிறு போதுபூப் போரே றெட்டுப்
பாதிரி மேவுசீர் நன்னாணுப் பூமருது
பத்து முதலாக வொரோவொன் றையைந்
தாகியுங் காருருமு வீராறு முதலா
மூன்று மரவு புளிமாப் பத்து
முதனான்கும் வரகெட்டு முதலா நான்கு
மாகியும் வெள்ளை பெற்றசீ ரந்தாதி
யையொரு பஃது மெட்டு மாகும்" ரு௮.

"மாசெல் வாயீ ரேழ்புலி செவ்வாய்
மாவரு வாயீ ரெட்டுப் புலிவரு
வாயீ ரொன்பது முதல வந்து
மும்மூன் றாகுஞ் சீரந் தாதி
துள்ளற் சீரீரா றாகு மென்ப" கஉ.

இதற்கு வந்த சீர் வருதல் கொள்க.

"மூவகைப் பாவிற்குஞ் சீரந் தாதி
நூற்றோ டறுபத்து நான்கென நுவல்ப
நானூற்று முப்பத் தாறீ ரந்தாதி"

ஆக விரண்டந்தாதியும் ௪ ௫௬.

இனி எழுத்துவிட்டிசையும் குறிப்புவிட்டிசையும் வருமாறு

"தேமா வைந்து ஞாயிறு போரேறு
நன்னாணுப் பாதிரி பூமரு தேழுகா

ருருமெட்டு முதலா வந்தவை யொரோவொன்
றைந்தா வகவல் பெற்ற விட்டிசைதா
மேழொரு பஃதே யாகு மென்ப'' ௭0.

''ஞாயிறு போரே றிருநான்கு முதலேழ்
பாதிரி தேமா நன்னாணுப் பூமருது
மாசெல்வா யொன்பான் முதலா வாறு
காருருமு மாவருவாய் பத்துமுத லைந்தா
வெள்ளைக்கு வந்த விட்டிசை தாமே
யையொரு பஃது நான்கு மாகும்'' ருசு.

''ஞாயிறு போரேறு பதின்மூன்று நன்னாணுப்
பாதிரி பூமருது மாசெல்வா யீரேழ்
காருருமு மாவருவாய் மூவைந்து முதலா
வந்தவை யொரோவொன் றையைந் தாகத்
துள்ளல் பெற்ற விட்டிசை தாமே
நாலொரு பஃதே யாகு மென்ப'' சு0.

''மூவகைப் பாவிற்கு மெழுத்து விட்டிசை
நூற்றோ டறுபத்து நான்கேபின்னர்க்
குறிப்பு விட்டிசையு மவ்வா றாகு
மிருதொகை முந்நூற் றிருபத் தெட்டே''

ஆகவிருவகை விட்டிசையும் ௩உ௮.

''மோனை முதலா விட்டிசை யீறா
வீரடித் தொடைகொளு மிருபத் தைந்தின்
றொகைநிலை பதினோ ராயிரத் திருநூற்
றைம்பத் தாறென வறைந்தனர் புலவர்''

ஆகவீரடித்தொகை யிருபத்தைந்தனாலும் பெற்றதொகை
கக௨ருசா.

இனி, யோரடித்தொடை கொள்ளுங்கால் அவையும் பின்வருமடியொடு தளைவழுப்படாமற் கோடும்.

அவற்றுட் பொழிப் பெதுகை வருமாறு

''வண்டு நான்கு மின்னுத் தேமா
வைந்து ஞாயிறு போதுபூப் போரே
றாறு பாதிரி மேவுசீர் நன்னாணுப்

பூமருது நீடுகொடி யேழுகா ருருமு
நாணுத்தளை யெட்டு முதலா வந்தவை
யொரோவொன் றெவ்வேழ் நிலம்பெற வகவற்குத்
தொக்க பொழிப்பெதுகை தொண்ணூற் றொன்றே
வரகிரு நான்கரவு புளிமா வொன்பான்
வலியது விறகுதீக் கடியாறு பத்துக்
கணவிரி யுருமுத்தீப் பெருநாணு வுராறுபுலி
மழகளிறு பதினொன்று நரையுருமு விரவுகொடி
யீராறு முதலா வந்தவை யொரேவொன்
றொன்பது நிலம்பெற வகவற் பொழிப்பெதுகை
நூற்றோ டொருபத் தேழென நுவல்ப'' ௬௬எ.

இனி வருக்கப் பொழிப்பெதுகை வருமாறு :-

''வண்டைந்து மின்னுத் தேமா வாறு
ஞாயிறு போதுபூப் போரே றேழு
பாதிரி நன்னாணுப் பூமருது நீடுகொடி
மேவுசீ ரெட்டுக் காருருமு நாணுத்
தளையொன்பான் முதலா வொரோவொன் றாறா
வகவல் பெற்ற பொழிப்பெது கைத்தொகை
யெழுபத் தெட்டே யாகு மென்ப'' எஅ.

இனி நிரையாதி வருக்கப் பொழிப்பெதுகைக்கு முன்னர் நிரையாதிப் பொழிப்பெதுகைக்குக் கூறின வுரைச் சூத்திரத்தைக் கூறிக்கொண்டு அதன்றொகையே இதற்குங்கொள்க.

நேராதி வல்லினப் பொழிப்பெதுகை வருமாறு :-

''வண்டு நான்கு தேமா வைந்து
ஞாயிறு போதுபூப் போரே றாறு
நன்னாணுப் பாதிரி பூமருது நீடுகொடி
யேழு காருருமு வெட்டு முதலா
வந்தவை யொரோவொன் றெவ்வேழ் நிலம்பெற
வகவல் பெறும்வல் லினப்பொழிப் பெதுகை
யேழொரு பஃதே யெய்து மென்ப'' எ0.

இனி நேராதி மெல்லினப் பொழிப்பெதுகைக்கு முன்னர் நேராதிப் பொழிப்பெதுகைக்குக் கூறிய உரைச்சூத்திரத்தைக் கூறிக்கொண்டு அதன்றொகையே யிதற்குங்கொள்க.

"நால்வகை யகவற் பொழிப்புத் தொகைதா
மைந்நூற் றெழுபத் தெட்டா கும்மே" ருளஅ.

ஆக ருளஅ.

இனி வெள்ளைக்குப் பொழிப்பெதுகை வருமாறு :-

"வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றெட்டு முதலா வேழுந் தேமா
மின்னுப் பாதிரி மேவுசீர் நன்னாணுப்
பூமருது மாசெல்வா யொன்பான் முதலாறுங்
காருருமு மாவருவாய் பத்துமுத லைந்து
மாக வெள்ளைக்கு வந்தபொழிப் பெதுகை
யெண்ணொரு பஃதே யெய்து மென்ப" அ0.

"வரகு வலியது கடியாறு விறகுதீ
யெட்டுக் கணவிரி பெருநாணுப் புலிசெல்வாய்
மழகளி றுருமுத்தீ புளிமாவிலை யொன்பது
நரையுருமுப் புலிவருவாய் பத்து
முதலா வந்தவை யொரோவொன் றைந்தா
வெள்ளை பெற்ற பொழிப்பெது கைத்தொடை
யாறொரு பஃது மைந்து மாகும்"

இனி வருக்கப் பொழிப்பு வருமாறு :-

"வண்டு ஞாயிறு போதுபூப் போரேறு
பாதிரி மாசெல்வா யொன்பான் முதலாறு
மின்னு நன்னாணுத் தேமா மேவுசீர்
பூமருது பத்து முதலா வைந்து
மாவருவாய் காருருமுப் பதினொன்று முதலா
நான்கு மாக வந்த வாற்றான்
வெள்ளை பெற்ற வருக்கப் பொழிப்பெதுகை
யாறொரு பஃது மொன்பது மாகும்" சக.

இனி நிரையாதி வருக்கப் பொழிப்பிற்கு முன்னர் நிரை-யாதிப் பொழிப்பெதுகைக்குக் கூறிய வுரைச் சூத்திரத்தைக்கூறி யதன்றொகையே இதற்குங்கொள்க.

இனி வல்லினப் பொழிப்பெதுகை வருமாறு :-

"வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றெட்டு முதலா வொரோவொன் றேழு

மாசெல் வாய்பூ மருது தேமாப்
பாதிரி நன்னாணு வொன்பான் முதலாறுங்
காருருமு மாவருவாய் பத்துமுத லைந்து
மாக வந்த வாற்றான் வெள்ளை
பெற்ற வல்லினப் பொழிப்பெது கைதா
மாறொரு பஃதோ டெட்டு மாகும்'' கூஅ.

இனி மெல்லினப் பொழிப்பெதுகைக்கு முன்னர் நேராதிப் பொழிப் பெதுகைக்குக் கூறிய வுரைச்சூத்திரத்தையே கூறி அதன்றொகையே இதற்குங் கொள்க.

''நால்வகை வெள்ளைப் பொழிப்பெது கைதா
நானூற்று நாற்பத் தொன்றென மொழிப''
ஆக ௪௪க

இனிக் கலிக்குப் பொழிப்பெதுகையும் வருக்கப் பொழிப்பெதுகையும் வருமாறு

''வலியது விறகுதீ கடியா றெனுமிவை
யீரேழ் தொட்டுப் பதினெட் டளவுங்
கணவிரி பெருநாணு வுருமுத்தீ மழகளிறு
புலிசெல்வா யுரறுபுலி பதினைந்து முதலாப்
பத்தொன் பானள வுயரவு நரையுருமு
விரவுகொடி புலிவருவாய் பதினாறு முதலா
விருபதின் காறு முயரவும் வருதலிற்
றுள்ள லோசை பெற்றபொழிப் பெதுகை
யறுபஃ தாக வறைந்தனர் புலவர்'' கூ0.

''மூவகைப் பாவிற்கு மொழிந்த பொழிப்பெதுகை
நானூற் றொருபத்து மூன்றென நவில்ப'' ௪கங.

முற்றெதுகையும் வருக்கமுற்றெதுகையும் வருமாறு

''நுந்தை வண்டு நான்கு தேமா
வைந்து முதலா வொரோவொன்று நான்கு
மின்னிரு நான்கா வொருநிலத்து வருதலு
மாக வகவல் பெற்ற முற்றெதுகை
யீராறு மொன்று மாகு மென்ப'' கங.

இவற்றை யொரோவொன்றாகக் கொள்ளின் மற்றை யடியொடு தளைவழுப்படும்; அது ''மந்தி தந்த பைந்தாட்

செந்தினை'' எனநிற்ப மெல்லடி வந்தெனத் தொடை வந்தாற் றளைவழுவாமாறு காண்க.

''வலியது விறகுதீக் கடியாறீ ராறுங்
கணவிரி பெருநாணு மழகளி றுருமுத்தீ
யுரறு புலிபதின் மூன்று நரையுருமு
விரவு கொடிபதி னான்கு முதலா
வொரோவொன் றேழாய் முற்றெது கைபெறும்''

''வருக்கமுற் றெதுகையு மவ்வா றேபெற்
றொருநாற் பஃது மகவற் கெய்தும்''

ஆக இருவகை முற்றும் ௧௫௩.

''ஞாயிறு போதுபூப் போரே றென்றிவை
யெட்டு முதலா வொரோவொன் றேழும்
பாதிரி நன்னாணுப் பூமருது மாசெல்வாய்
மேவுசீ ரொன்பது முதலா வாறுங்
காருருமு மாவருவாய் பத்து முதலைந்
துயரவும் புளிமா வொன்பது முதனான்கும்
வரகெட்டு முதலா நான்கு மாகி
வந்த விவற்றான் வெள்ளை பெறுமுற்
றெழுபத்து மூன்றே யாகு மிங்ஙனம்
வருக்க முற்றும் வந்தவெண் ணாக
விரண்டன் றொகைநூற்று நாற்பத் தாறே
நிரையீ ராறுறழ்ந்த வடியறு பஃதிற்
சுருங்கிய நிலத்தி லொரோவொன்று களையத்
துள்ள லோசை பெற்றமுற்றுத் தொடைதா
நாற்பத் தெட்டே யாகும் வருக்க
முற்றுத் தொடையு மவ்வா றாக
விரண்டன் றொகையுந் தொண்ணூற் றாறே''

''மூவகைப் பாவிற்கு மிருவகை முற்று
முந்நூற்றுத் தொண்ணூற் றைந்தென மொழிப''

௩௯௫.

ஆக ௧௫௩௪.

இனி ஒரூஉவெதுகை வருமாறு

"நேர்பதின் மூன்றா னகவற் கொரூஉவெதுகை
வண்டு நான்கு மின்னுத் தேமா
வைந்து ஞாயிறு போதுபூப் போரே
றாறு பாதிரி மேவுசீர் நன்னாணுப்
பூமருது நீடுகொடி யேழு காருருமு
நாணுத்தளை யெட்டு முதலா வொரோவொன்
றெவ்வே மாக வியன்ற தொகைதா
மேழொரு பஃதோ டிருபத் தொன்றே" கசு.

"நிரைபதின் மூன்றா னகவற் கொரூஉவெதுகை
வரகிரு நான்கு புளிமா வொன்பான்
வலியது கடியாறு விறகுதீப் பத்துக்
கணவிரி யுராறுபுலி பெருநாணு வுருமுத்தீ
மழகளிறு பதினொன்று விரவுகொடி நரையுருமு
வீராறு முதலா வொரோவொன் றொன்பா
னாகத் தொகைநூற் றொருபத் தேழே" ககஎ.

ஆக உ0அ.

"நேர்பதின் மூன்றான் வெள்ளைக் கொரூஉவெதுகை
வண்டு ஞாயிறு போதுபூப் போரே
றெட்டு முதலா வேழுந் தேமா
மின்னுப் பாதிரி மேவுசீர் நன்னாணுப்
பூமருது மாசெல் வாயிவை யொன்பான்
முதலா வொரோவொன் றானுங் காருருமு
மாவருவாய் பத்து முதலா வொரோவொன்
றைந்து மாக வறைந்த தொகைதா
மொண்ணொரு பஃதே யெய்து மென்ப" அ0.

"நிரைபதின் மூன்றான் வெள்ளைக் கொரூஉவெதுகை
வரகு வலியது கடியாறு விறகுதீ
யெட்டுக் கணவிரி பெருநாணு வுருமுத்தீப்
புலிசெல்வாய் மழகளிறு புளிமா வரவிவை
யொன்பது நரையுருமுப் புலிவருவாய் பத்து
முதலா வொரோவொன் றைந்து நிலம்பெற்
றாறொரு பஃது மைந்து மாகும்" கூரு.

"நேரீ றானாற் கலிக்கொரூஉ வெதுகை
பெருகிய நிலத்தி லொரோரோ வொன்று களையப்
பெறுந்தொடை நாற்பத் தெட்டுப் பின்னர்
நிரையீ ராறிற் சுருங்கிய நிலத்தி
லொரோரோவொன்று களையப் பெறுந்தொடை யஃதா
மிருவகைத் தொடையுந் தொண்ணூற் றாறே" கூசா.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த வொரூஉ வெதுகை
நானூற்று நாற்பத் தொன்ப தாகும்" ளளகூ.

இனிவருக்க வொரூஉ வருமாறு

"வண்டைந்து மின்னுத் தேமா வாறு
ஞாயிறு போதுபூப் போரே றேழு
மேவுசீர் பூமருது நன்னாணு நீடுகொடி
யெட்டுக் காருருமு நாணுத்தளை யொன்பான்
முதலா வந்தவை யொரோரோவொன் றானும்
பாதிரி யேழு முதலா வேழு
மாக வகவற்கு வருக்க வொரூஉத்தொகை
யேழொரு பஃது மொன்பது மாகும்" எகூ.

இனி நிரையாதி வருக்கவொரூஉவிற்கு முன்னர் நிரையாதி யொரூஉவிற்குக் கூறிய உரைச் சூத்திரத்தையேயிதற்குங் கொள்க.

ஆக ககூசா.

இனி வெள்ளைக்கு நேராதி வருக்கவொரூஉ நுந்தை யொழியமுன்னர் நேராதியொரூஉவிற்குக்கூறிய உரைச்சூத்திரத்தைக் கூறி யதன்றொகையி லிதற்கேழுகுறைத்துக் கொள்க. அ0. இனி வெள்ளைக்கு நிரையாதி வருக்க வொரூஉவிற்கு முன்னர் நிரையாதி யொரூஉவிற்குக் கூறிய வுரைச் சூத்திரத்தைக்கூறி யதன்றொகையே யிதற்குங் கொள்க. சாரு ஆக கசாரு இனிக் கலிக்கு வருக்கவொரூஉவிற்கு முன்னரொரூஉவிற்குக் கூறிய வுரைச் சூத்திரத்தையேகூறி யதன்றொகையே யிதற்குங் கொள்க.
கூசா.

ஆக சாகூ௲எ.

"மூவகைப் பாவிற்கு மிருவகை யொரூஉத்தொகை
தொள்ளா யிரமே யாகு மென்ப"

ஆக ௯00.

"அளவடிக் களவரும் விகற்பத் தொடைதாம்
நானூற்று முப்பத்து நான்கு தலையிட்ட
ஈரா யிரமே யாகு மென்ப"

ஆக ஓரடித்தொடை உ௪௩௪.

"இருவகைத் தொடையா னியன்ற தொகைதாம்
பதின் மூவாயிரத் தறுநூற்றுத் தொண்ணூ
றீரடித் தொடையு மோரடித் தொடையும்"

௧௩.௬௯0.

இனி, இச்சூத்திரத்திற்குத் 'தொண்டுதலையிட்ட பத்துக்குறை யெழு நூறொன்றுமென்ப' வென்று பாடமோதிப் பதின்மூவாயிரத்தறுநூற்றுத் தொண்ணூறென்பாரும் இனி "பத்துக்குறை யெழுநூற்றொன்றுமென்ப" வென்று பாடமோதித் தொண்டுதலையிட்ட பத்தென்பாரும் மினித் தொண்டு" தலையிட்ட பத்துக்குறை யெழுநூற்றொன்று மென்ப வென்று" பாடமோதிப் பதின்மூவாயிரத்தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதென்பாரும், இனிப் "பத்துக் குறைய யெழுநூற்றொன்பஃதென்ப" வென்று பாடமோதி யிதனைமிகவுநலிந்து பொருள்கொண்டு பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டென்பாருமெனப் பல பகுதியராசிரியர், இவற்றுள் நல்ல துய்த்துணர்ந்துகொள்க. இனி மெய்பெறு மரபிற்றொடையெனவே விளங்கத் தோன்றாதனவுஞ் சிலதொடையுளவாயிற்று. அவை ஆசிடை யதுகை வேறுபாடும் இரண்டடி யெதுகையுஞ் செந்தொடை வேறுபாடும் இரட்டையும் அந்தாதி வேறுபாடும் இணை கூழை மேற்கதுவாய் கீழ்க்கதுவாய் முற்றுக் கடையிணை கடைக்கூழை இடைப்புணர் பின் என்பனவும் பிறவும் வேறுபாடாகக் கூறுவார் கூறுந்தொடைகளுமெல்லாம் இதனானேதழீஇக் கொள்க. அவை மேற்கூறுதும். இனி,

"அடிதொடை மிசைபல விரவின வரினு
முதல்வரு மதனது பெயர்கொளன் முறையே"

எனச்சூத்திரஞ்செய்து பலரும் முதல் வந்த தொடையே தளையே முதலியனவே கொள்வர் பின்னுள்ளோர், அவரறியார்; என்னை?

"செங்காற் பைந்தினை யிதண மேறிப்
பைங்காற் சிறுகிளி கடிவோ டதந்தை"

யென்புழி எதுகையு முரணும் வந்துழி முதற்கண்ணதின்ன திறுதிக்கண்ணதின்னதென்று துணியலாகாமை கொள்க. இன்னுஞ் செய்யுட்செய்த சான்றோர் பலதொடையும் பலவிதகணமும் படவேண்டுமெனக் கருதிச் செய்தவற்றுட் சிலகளைந்-தொன்று கோடற்குக் காரணமின்மையுமுணர்க.

**ஆய்வுரை :**

இது, மேற்கூறப்பட்ட தொடையெல்லாம் வகைப்படுதது விரிக்கப் புகின் இத்துணையவாம் என்கின்றது.

(இ-ள்) வெளிப்பட வடிவுபெற்றுத் தோன்றும் மரபினை-யுடைய தொடையினது பாகுபாடு பதின்மூவாயிரத்து அறு-நூற்றுத் தொண்ணூற்று ஒன்பது எனப்பொருந்தும் எ-று.

இச்சூத்திரத்தில் வரும் 'ஐயீராயிரத்து ஆறைஞ்ஞூறு' என்னுந்தொடர், 'பதின்மூவாயிரம்' எனப் பொருள்படும். 'தொண்டுதலையிட்ட' என்பது [1]ஒன்பதினை முடியும் எண்ணாக-வுடைய' என்ற பொருளையுடையது. 'பத்துக் குறை எழுநூறு' என்பது, 'அறுநூற்றுத் தொண்ணூறு' எனப் பொருள்படும். 'ஒன்றும்' என்பது, பொருந்தும் என்னும் பொருள்பட வந்த முற்றுவினை. ஐயீராயிரத்து ஆறு ஐஞ்ஞூற்றொடு (பதின்-மூவாயிரத்துடன்) தொண்டு தலையிட்ட பத்துக்குறை எழுநூறு (அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது) ஒன்றும் (பொருந்தும்) என இயைத்துப் பொருளுரைக்குமிடத்துத் தொடைவகை பதின்-மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதாதல் காண்க.

---

1. 'சீர்வகையடிக்கு' என்றிருத்தல் வேண்டும்'

2. ஐயீராயிரம் - 10000
   ஆறைஞ்ஞூறு - 3000
   ஆக - 13000

பத்துக்குறை எழுநூறு 690, அதனுடன் ஒன்பது 699. தொண்டு-ஒன்பது. தொண்டு தலையிடுதல் ஆவது ஒன்பதினாற் பெருக்குதல். 699 என்னுந்தொகையினை ஒன்பதினாற் பெருக்கிப் பெற்ற பேறு ($699 \times 9 = 6291$) ஆறாயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றொன்றாகும், இதனை முற்கூறிய பதின்மூவாயிரத்தொடு கூட்ட (19291) பத்தொன்-பதினாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றொன்று எனக் கொண்டார் நச்சினார்க்கினியர்.

மோனை

| | |
|---|---|
| மொழிமுதல் உயிர் | 12 |
| இவை ஒவ்வொன்றிற்கும் கிளையெழுத்துப் பதினொன்றுள. பதினொன்றையும் பன்னீருயிருடன் உறழ (பெருக்க) | 132 |
| க, த, ந, ப, ம ஐந்தையும் பன்னீருயிருடன் உறழ | 60 |
| மேற்கூறிய அறுபதினையும் கிளையெழுத்துப் பதினொன்றுடன் உறழ | 660 |
| சகரத்தின் முதலாகெழுத்து | 9 |
| அவ்வொன்பதைக் கிளையெழுத்து எட்டுடன் உறழ | 72 |
| வகரத்தின் முதலாகெழுத்து | 8 |
| அவற்றை அவைதமக்குக் கிளையாகிய ஏழெழுத்துடன் உறழ | 56 |
| யகரத்தின் முதலாகெழுத்துகிளையெழுத்தில்லை | 1 |
| ஞகரத்தின் முதலாகெழுத்து | 3 |
| ஒவ்வொன்றிற்கும் கிளையெழுத்து இரண்டாக வைத்துறழ | 6 |
| இவ்வகையால் முதலாகெழுத்து 93 கிளையெழுத்து 926 ஆக மோனைத்தொடை | 1019. |

எதுகை

| | |
|---|---|
| உயிரெழுத்து மொழியிடையில் வாராது. | |
| உயிர்மெய்யெழுத்து இருநூற்றுப் பதினாறில் ஙவ்வருக்கம் பன்னிரண்டும் நீங்க எதுகையாதற்குரியவை | 204 |
| இருநூற்று நாலினையும் கிளையெழுத்துப் பதினொன்றோடு உறழ | 2244 |
| ஆய்தம் உள்பட ஒற்று | 19 |
| குற்றுகரம் | 6 |
| ஆக எதுகைத்தொடை | 2473 |

மோனை

| | |
|---|---|
| மொழிமுதல் உயிர் | 12 |
| இவை ஒவ்வொன்றிற்கும் கிளையெழுத்துப் பதினொன்றுள. பதினொன்றையும் பன்னீருயிருடன் உறழ (பெருக்க) | 132 |
| க, த, ந, ப, ம ஐந்தையும் பன்னீருயிருடன் உறழ | 60 |
| மேற்கூறிய அறுபதினையும் கிளையெழுத்துப் பதினொன்றுடன் உறழ | 660 |
| சகரத்தின் முதலாகெழுத்து | 9 |
| அவ்வொன்பதைக் கிளையெழுத்து எட்டுடன் உறழ | 72 |
| வகரத்தின் முதலாகெழுத்து | 8 |
| அவற்றை அவைதமக்குக் கிளையாகிய ஏழெழுத்துடன் உறழ | 56 |
| யகரத்தின் முதலாகெழுத்துகிளையெழுத்தில்லை | 1 |
| ஞகரத்தின் முதலாகெழுத்து | 3 |
| ஒவ்வொன்றிற்கும் கிளையெழுத்து இரண்டாக வைத்துறழ | 6 |
| இவ்வகையால் முதலாகெழுத்து 93 கிளையெழுத்து 926 ஆக மோனைத்தொடை | 1019. |

எதுகை

| | |
|---|---|
| உயிரெழுத்து மொழியிடையில் வாராது | |
| உயிர்மெய்யெழுத்து இருநூற்றுப் பதினாறில் ஙவ்வருக்கம் பன்னிரண்டும் நீங்க எதுகையாதற்குரியவை | 204 |
| இருநூற்று நாலினையும் கிளையெழுத்துப் பதினொன்றோடு உறழ | 2244 |
| ஆய்தம் உள்பட ஒற்று | 19 |
| குற்றுகரம் | 6 |
| ஆக எதுகைத்தொடை | 2473 |

முரண்

சொல் முரண், பொருள் முரண் என இரண்டு.

இயைபு

உயிரெழுத்துக்கள் மெய்யீற்றில் உயிர்மெய்யாகியே வருதலின் அவை இயைபுத் தொடைக்கு உரியவாகா. உயிர்மெய் இருநூற்றுப் பதினாறில் இறுதிக்கண் வாராத ஙகரவுயிர்மெய்12 அகரம் 17, இகரம் 14, உகரம் 2, எகரம் 1, ஒகரம் 1 ஆகிய

| | |
|---|---|
| இவையொழிந்து நின்ற எழுத்து | 165 |
| ஞணநமன யரலவழள என மெய்யீறு | 11 |
| குற்றுகரவீறு | 6 |
| ஆக இயைபுத் தொடை | 182 |

அளபெடை

| | |
|---|---|
| மொழி முதலாகும் உயிரளபெடை | 7 |
| கதநபம என்னும் உயிர்மெய்யளபெடை | 35 |
| சகரவுயிர்மெய்யளபெடை | 5 |
| வகரவுயிர்மெய்யளபெடை | 5 |
| யகரவுயிர்மெய்யளபெடை | 2 |
| ஆக இவை நாற்பத்தேழையும் முதனிலை, இடைநிலை, இறுதிநிலை என மூன்றாக வைத்துறழ உயிர்மெய்யளபெடை | 141 |
| ஒற்றுக்களுள் வல்லெழுத்தாறும் ரகரழகரமும் ஒழிந்த பத்தொற்றும் ஆய்தமும் அளபெடுக்க ஒற்றளபெடை | 11 |
| ஆக அளபெடைத்தொடை | 159 |

பொழிப்புத் தொடையில் கிளையெழுத்து வாராது.

| | |
|---|---|
| மோனைப் பொழிப்பு | 93 |
| எதுகைப் பொழிப்பு | 229 |
| முரண் பொழிப்பு | 2 |

உயிரளபெடைப் பொழிப்பு அளபெடையுள்
ஒற்றளபெடைப் பொழிப்பாக வாராமையின்
அவை நீங்க உயிரளபெடைப் பொழிப்பு 148

ஆகப் பொழிப்புத் தொடை 654

ஒரூஉ

மேல் பொழிப்புத் தொடைக்குக் காட்டியவகைப்படியே ஒரூஉத்தொடையும் அறுநூற்றைம்பத்து நான்காம். 654

செந்தொடை

மொழி முதலாம் எழுத்துத் தொண்ணூற்று மூன்றும் மற்றையடியினும் ஒத்து வருங்கால், அவை மோனையுள் அடங்குதலின் ஒத்தனவாகிய அவை நீங்க, ஒவ்வாதனவாகிய ஏனைய தொண்ணூற்றிரண்டெழுத்தொடும் உறழச் செந்தொடை எண்ணாயிரத்தைந்நூற்றைம்பத்தாறு வகையாம் 8556

"இவ்வகையினால் தொடை விகற்பம் பதின்மூவா-
யிரத்து
அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதாம் என அறிக"

என்பது இளம்பூரணர் தரும் தொடை பற்றிய விளக்கமாகும்.

இனி, இச்சூத்திரத்திற் குறிக்கப்பட்ட 13699 என்ற தொகைக்கு வேறொரு வகையில் விளக்கங் கூறுவதும் உண்டு.

"நான்கு பாவும் பெற்ற ஐம்பத்தொரு நிலத்தவாகி விரிந்த அறுநூற்றிருபத்தைந்தடியும் அவற்று ஒரோவடி இருபத்திரண்டு தொடையும் பெறப் பதின்மூவாயிரத்து எழுநூற்றைம்பதாய் வரும். அவற்றுள் ஐம்பத்தொரு நிலமும் களையப் பதின்மூவாயிரத்தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது தொடையாம்"

என்பது யாப்பருங்கல விருத்தியாசிரியர் தரும் விளக்கமாகும்.

யாப்பருங்கல விருத்தியாசிரியர் கூறும் ஐம்பத்தொரு நிலமாவன :

நாற்சீரடியுள் ஏழெழுத்து முதல் பதினாறெழுத்து
முடியவுள்ள வெள்ளை நிலம் 10

| | |
|---|---|
| நாலெழுத்து முதல் இருபதெழுத்து முடியவுள்ள ஆசிரிய நிலம் | 17 |
| பதின்மூன்றெழுத்து முதல் இருபதெழுத்து முடியவுள்ள கலிநிலம் | 8 |
| நாலெழுத்து முதல் பதினேழெழுத்து முடிய வஞ்சி நிலம் | 10 |
| அளவடியல்லாதனவாகிய இருசீரடி, முச்சீரடி, ஐஞ்சீரடி, அறுசீரடி, எழுசீரடி, எண்சீரடி ஆகிய சீர்வகையடி நிலங்கள் | 6 |
| (யா. வி. ப. 177). ஆக | 51 |

ஆசிரிய அடி 261, வெண்பாவடி 234, கலியடி 131, ஆக 625 அடியாகும் (யா. வி. ப. 176).

"அடியிரண்டு இயைந்தவழித் தொடையாம்" என்பவாகலின் (அவ்வாறு இரண்டாகத் தொடுக்கப்பெறாது ஓரடியாகவுள்ள) ஐம்பத்தொரு நிலம் களையப்பட்டன (யா. வி. ப. 175).

இனி, இச்சூத்திரத்திற்குத் 'தொண்டு தலையிட்ட பத்துக்குறை யெழுநூற்றொன்பஃது' எனப் பாடங்கொண்டு பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் வேறு வேறு பொருளுரைத்தனர். தொண்டு தலையிட்ட - ஒன்பதுடன் கூடிய பத்துக்குறை எழுநூற்றொன்பது - அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது. ஒன்பதுடன் கூடிய அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது எனவே எழுநூற்றெட்டு என்பது பொருள் இத்தொகையினை ஐயீராயிரத்து ஆறைஞ்ஞூறாகிய பதின்மூவாயிரத்துடன் கூட்டிப் பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு எனக் கொண்டார் பேராசிரியர்.

இனி, 'தொண்டு தலையிட்ட' என்ற தொடர் 'ஒன்பதாலே பெருக்கின' எனப் பொருள்படும் எனவும், 'பத்துக்குறை யெழுநூற்றொன்பது (அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது) என்ற தொகையை ஒன்பதாலே பெருக்கினால் ஆறாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றொன்றாம் எனவும், அத்தொகையை முற்கூறிய பதின்மூவாயிரத்துடன் கூட்டத் தொடைவகை பத்தொன்பதினாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றொன்றாம் எனவும் கொண்டார் நச்சினார்க்கினியர்.

இங்ஙனம் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் இச்சூத்திரத்திற்கு வெவ்வேறு பொருள் கொண்டு கூறிய விளக்கங்கள் அவரவர் உரைகளிற்கண்டு சிந்தித்துத் தெளியத்தக்கனவாகும்.

கூஅ. தெரிந்தனர் விரிப்பின் வரம்பில ஆகும்[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்சொல்லப்பட்ட தொடையினை ஆராய்ந்து விரிப்பின் வரம்பிலவாகி விரியும் என்றவாறு.

அவையாவன மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்பனவற்றின்கண் இணை, கூழை, முற்று, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், கடை, கடையிணை, கடைக்கூழை, இடைப்புணரென வேறுபடுத்துறழ்ந்தும், எழுத்தந்தாதி அசையந்தாதி சீரந்தாதி அடியந்தாதி எனவும், உயிர் மோனை உயிரெதுகை நெடில்மோனை நெடிலெதுகை வருக்கமோனை வருக்கஎதுகை இனமோனை இனவெதுகை ஆசெதுகை எனவும் மூன்றாமெழுத்தொன்றெதுகை இடையிட்டெதுகை எனவும், இவ்வாறு வருவனவற்றை மேற்கூறிய வகையினான் எழுத்து வேறுபாட்டினா னுறழவும், நிரனிறையாகிய பொருள்கோள் வகையானும் ஏகபாதம் எழுகூற்றிருக்கை முதலாகிய சித்திரப்பாக்களானும் உறழவும், வரம்பிலவாகி விரியும்.

அவற்றுட் சில வருமாறு: இணையாவது முதலிருசீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது. கூழையாவது முந்துற்ற மூன்று சீரினும் வந்து இறுதிச்சீரின் வாராதது.

"அணிமலர் அசோகின் தளிர்நலங் கவற்றி"
(யாப். வி. ப. கஙஓ)

இஃது இணைமோனை.

"பொன்னின் அன்ன பொறிசுணங் கேந்தி"
(யாப் வி. ப. கஙச)

இஃது இணையெதுகை.

"சீறடிப் பேரகல் அல்குல் ஒல்குப" (யாப். வி. ப கசஎ)

இஃது இணைமுரண்.

1. 'பல்கும்' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்டபாடம்.

"மொய்த்துடன் தவழு முகிலே பொழிலே"
(யாப். வி. ப கருங)

இஃது இணையியைபு.

"தாஅட் டாஅ மரைமல ருழக்கி" (யாப்.வி.ப கருஅ)

இஃது இணையளபெடை; எனவரும்.

இனிக் கூழை வருமாறு :

"அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல்" (யாப்.வி.ப கஙO)

இது கூழை மோனை.

"நன்னிற மென்முலை மின்னிடை வருந்த".

இது கூழை யெதுகை. (யாப்.வி ப கஙச)

"சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன்".

இது கூழைமுரண் (யாப் விப கசஎ)

"மாதர் நகிலே வல்லே இயலே". (யாப். வி. ப. கருங)

இது கூழை யியைபு.

"மாஅத் தாஅண் மோஒட் டெருமை". (யாப்.வி.ப கருஅ)

இது கூழையளபெடை: என வரும்.

முற்றாவது நான்கு சீரும் ஒத்துவருவது.

"அயில்வேல் அனுக்கி அம்பலைத் தமர்த்த".

இது முற்றுமோனை. பிறவுமன்ன. (யாப் வி.ப கஙO)

இனி மேற்கதுவா யாவது நான்கு சீரினும் இரண்டாம் சீரொழிய ஏனைய வருவது.

"அரும்பிய கொங்கை அவ்வளை அமைத்தோள்".
(யாப்.வி.ப. கஙக)

பிறவுமன்ன.

கீழ்க்கதுவா யாவது மூன்றாஞ் சீரொழிய ஏனைய. வருவது.

"அவிர்மதி அனைய திருநுதல் அரிவை"

பிறவுமன்ன. (யாப். வி. ப. கஙக)

அந்தாதித் தொடைக்குதாரணம் :

'உலகுடன் விளங்கும் ஒளிதிகழ் அவிர்மதி
மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழல் பொற்புடை ஆசனம்

ஆசனத் திருந்த திருந்தொளி அறிவன்
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவனை
அறிவுசேர் உள்ளமொ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தரஃ தென்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை உலகே''

எனவரும். (யாப் வி.ப கருஅ)

இவ்வகையினான் ஒருபாட்டிறுதி மற்றைப்பாட்டி னாதிச்சீராகி வருதல் கொள்க.[1]

இத்துணையுங் கூறப்பட்டன சிறப்புடையவென ஒரு நிகராகக் கூறுப.

இனி ''மீன்தேர்ந் தருந்திய கருங்கால் வெண்குருகு''
இது கடையிணைமுரண்.[2] (யாப். வி. ப. கசஅ)

பின்முரணாவது நாலாஞ்சீரும் இரண்டாஞ்சீரு மொன்றத் தொடுப்பது; அது,

'கொய்ம்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து'

என வரும் (யாப். வி. ப. கசஅ)

கடைக்கூழை முரணாவது முதற்சீரொழித்து மூன்றுசீரும் ஒத்து வருவது.

உதாரணம் வந்தவழிக் காண்க.

இடைப்புணர் முரணாவது இடையிருசீரும் ஒன்றத் தொடுப்பது; அது,

''போதுவிடு குறிஞ்சி நெடுந்தண் மால்வரைக்
கோதையில் தாழ்ந்த ஓங்குவெள் அருவிக்
காந்தளஞ் செங்குலைப் பசுங்கூ தாளி
வேரல் விரிமலர் முகையொடு விரைஇப்
பெருமலைச் சீறூர் இழிதரு நலங்கவர்ந்
தின்னா வாயின இனியோர் மாட்டே''

என வரும். (யாப். வி. ப. கசகூ)

1. இவ்வாறு ஒரு செய்யுளுள்ளே வரும் அடிகள் அந்தாதித்தொடையமைய வருதல் கொண்டு ஒருசெய்யுளின் இறுதி அடுத்த செய்யுளின் முதலாய் வரும் பனுவலாகிய அந்தாதியமைப்பும் கொள்க என்பதாம்.

2. கடையிணை முரணாவது அடியின்கடையிலுள்ள நான்காஞ்சீரும் மூன்றாஞ்சீரும் இணைந்து ஒன்றத்தொடுப்பது.

மோனை எதுகை இயைபு அளபெடையினும் இவ்வாற்றான் வருவன வந்தவழிக் காண்க.

இனி, உயிர்மோனை யாவது முதலெழுத்தாகிவந்த உயி-ரெழுத்து மற்றை யடியினும் வருவது ; அது,

"கயலேர் உண்கண் கலுழ நாளுஞ்
சுடர்புரை திருநுதல் பசலை பாய (யாப். வி. ப. கரு௬)

என வரும்.

எதுகைக்கும் இதுதானேயாம்.

நெடின்மோனையாவது நெட்டெழுத் தொத்துவருவது :

"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்" (குறள். ௩௯௬)

என வரும்.

நெடிலெதுகையாவது :

"ஆவா என்றே அஞ்சினர் ஆழ்ந்தார் ஒருசாரார்
கூகூ என்றே கூவிளி கொண்டார் ஒருசாரார்"
(யாப். வி. ப. க௩௬)

என வரும்.

இனவெதுகை மூன்றுவகை.

"தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும். (குறள். ௬௧௪)

இது வல்லின வெதுகை.

"அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு." (குறள். எ௪)

இது மெல்லின வெதுகை.

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு." (குறள். உ௯௯)

இஃது இடையின வெதுகை.

மோனையும் இவ்வாறு வருவன பாகுபடுத்துக் கொள்க.

ஆசெதுகையாவது இடையினவொற்று இடைவரத் தொடுப்பது.

"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து

தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையால்திசை போய துண்டே.''
(சீவகசிந்.௩.க)

என வரும். இதன்கண் யகரம் ஆசாகி வந்தது. பிறவுமன்ன.

இனி இரண்டடியெதுகையாவது முதலிரண்டடியு மோரெதுகையாய்ப் பின்னிரண்டும் ஓரெதுகையாகி வருவது.

''உலக மூன்றும் ஒருங்குட னேத்துமாண்
திலக மாய திறலறி வன்னடி
வழுவில் நெஞ்சொடு வாலிதின் ஆற்றவுந்
தொழுவல் தொல்வினை நீங்குக என்றியான்''

என வரும். (யாப். வி ப.க௩கூ.)

இடையிட் டெதுகையாவது ஓரடி யிடையிட்டுத் தொடுப்பது.

''தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் உழப்ப
வாடா வவ்வரி புதைஇப் பசலையும்
வைகல் தோறும் பைபயப் பெருகின
நீடார் அவரென நீமனங் கொண்டாற்
கேளார் கொல்லோ காதலர் தோழீஇ
வாடாப் பவ்வ மறமுகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே''

எனவரும். (யாப். வி ப.கச௩.)

இவ்வகையினான் மோனை வருவனவுங் கொள்க. பிற-தொடையும் இவ்வகையினான் வருவனவும் கொள்க.

மூன்றா மெழுத்தொன் றெதுகையாவது இரண்டா மெழுத்து ஒன்றாது மூன்றாம் எழுத்து ஒன்றுவது. இதுவும் அவ்வாறே உதாரணம் வந்தவழிக் காண்க.

இவையெல்லாம் மேலெடுத்தோதப்பட்ட தொடைக்கட்-படும்.[1] நாற் சீரடியொழிந்த அடிக்கண்ணும் இப்பாகுபாடெல்லாம் விரிப்பின் வரம்பிலவாகும்.

---

1. நாற்சீரடிக்குக் கூறிய இத்தொடைப்பாகுபாடு நாற்சீரடியல்லாத ஏனையடிகளிலும் கொள்ளப்படும் என்பதாம்.

**பேராசிரியம்:**

இது, மேற்கூறிய தொடைக்காவதொரு புறனடை.

(இ - ள்) அறுநூற்றிருபத்தைந்து அடியோடு மாறிப் பெற்ற தொடை பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டெனப்பட்டன மேல்; இனி அவ்வடி ஒன்றன்கண்ணேயன்றி ஒன்றுநிற்ப நின்றவடி அறுநூற்றிருபத்து நான்கனையுந் தந்து தந்து தடுமாற வந்து தோன்றுந் தொடை விகற்பமும் இருசீரடி முதலாக எண் சீரடியீறாகக் கிடத்த அடி வேறுபாட்டின்கணெல்லாம் இத் தொடைகளைக் கூட்டவும் பிற விகற்பத் தொடைகளைக் கூட்டவும் வருந் தொடைப்பகுதி வரையறையின்றிப் பலவாம் (எ - று).[1]

வரையறை உடையனவற்றுக் கன்றி வரையறை கூறுதல் பயமின்றாகலின் ஒழிந்த விகற்பமெல்லாங் கூறிய நிலங் கூறிற்றில னென்பதூஉம்,

"மெய்பெறு மரபிற் றொடைவகை" (தொல். செய். 101)

எனப்பட்டன வரையறையுடைமையின் அது கூறினானென் பதூஉஞ் சொல்லினான் இச்சூத்திரத்தானென்பது.[2]

---

1. அறுநூற்றிருபத்தைந்து அடியோடு அந்த அந்த அடிகளை இரண்டாமடி யாகவைத்துப் பெருக்கிப்பெற்ற தொடை 13708 என மேல் வரையறுரைக்கப் பட்டன. இனி அவ்வவ்வடிகட்கு முன்னே அவையல்லாத ஏனைய 624 நான்கடி களையுந் தனித்தனியே தந்து பெருக்கத்தோன்றும் தொடை விகற்பமும், இங்கு எழுத்தெண்ணி எடுத்துக்கொள்ளப்பட்ட நாற்சீரடியல்லாத ஏனைய இருசீரடி முதலாக எண்சீரடியீறாகக்கிடந்த அடிவேறுபாட்டின்கணெல்லாம் மோனை-யெதுகை முரண் இயைபு அளபெடை யென்னுந் தொடைகளைக் கூட்டவும் பொழிப்பு ஒரூஉ முதலிய பிற விகற்பத் தொடைகளைக் கூட்டவும் வரும் தொடைப்பகுதியெல்லாம் எல்லையின்றிப் பலவாய் விரியும் என்பதாம்.

2. வரையறையுள்ளனவற்றுக்கன்றி வரையறையில்லாதவற்றுக்கு வரையறை கூறுதல் பயனில்லாத முயற்சியாதலின் வரையறையுடையனவாக இங்கு எடுத்துக் கொள்ளப்பட்ட தொடைப்பகுதிக்குரிய நிலமன்றி வரையறையில்லாத ஏனைய தொடைவகைகளுக்குரிய நிலம் இங்குக் கூறினேன் அல்லேன் எனவும், 'மெய் பெறு மரபின் தொடைவகை' எனப்பட்ட தொடைகள் வரையறையுடைமையின் அவற்றுக்குரிய வரையறையினையே இங்குக்கூறினேன் எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் இச்சூத்திரத்தால் புலப்படுத்தினார் எனக் கருத்துரைப்பர் பேராசிரியர்.

இனி ஐந்துதொடை, விகற்பத்தொடை பலவற்றோடுங் கூட்டவும் பிறவாற்றான் விரிப்பவும் வரம்பிலவா மென்றாரு-முளர்.[1] அவை எவ்வாறு விரிப்பினும் வரம்பிலவல்லனவென மறுக்க.[2] வரம்பிலவென்பதற்கு வரையறை கூறப்படாவென மேலுரைத்ததே உரை.

**நச்சினார்க்கினியம் :**

இது கட்டளையடிக்கோர் புறனடை.

(இ-ள்.)அறுநூற்றிருபத்தைந்துள் ஒன்றைநிறுத்தி யதனோடு-அறுநூற்று நான்கனையுங்[3] கூட்டியு மதனோடு சீர்வகையடி-களையும் விகற்பத்தொடைகளையுங் கூட்டியுந் தொடுக்குந் தொடைப்பகுதிகளை விரிப்பின் எண்ணிறந்து பலவாம்.[4]

எனவே, இங்ஙனங் கூறாமல் வரையறைப்படுத்தி யிலக்-கணங்கூறினார் என்றார். எ-று.

**ஆய்வுரை :**

இது, மேற்கூறிய தொடைக்கு ஆவதோர் புறனடை.

(இ-ள்) முற்கூறப்பட்ட தொடை வகையினை ஆராய்ந்து மேலும் விரித்துரைப்பின் வரம்பில்லாதனவாம் எ-று.

தெரிதல் - ஆராய்தல்.

---

1. மோனை முதலாக அளபெடையீறாக இங்குச்சொல்லப்பட்ட தொடைகளை இணை, கூழை, முற்று, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், கடை, கடையிணை கடைக்கூழை, பின், இடைப்புணர் முதலாகவுள்ள ஏனைய விகற்பத் தொடை-களொடு கூட்டிப்பெருக்க வரம்பிலவாகி விரியும் என்போர் இளம்பூரணர் யாப்பருங்கல வுரையாசிரியர் முதலியோர்.

2. இங்குச் சொல்லப்பட்ட தொடைகளை மோனை முதலிய தொடைகளோடு உறழ்ந்து பெருக்குமிடத்தும் அவை ஒரு தொகையுட்பட்டு அடங்குவனவேயாதலின் அவை வரம்பில்லாதன அல்ல, வரம்புடையனவேயாம், என்பது பேராசிரியர் கருத்தாகும். எனவே இச்சூத்திரத்தில் 'வரம்பில' என்றது, வரையறையுட்படும் நாற்சீரடியல்லாத இருசீரடிமுதல் எண்சீரடி வரையுள்ள அடிகளோடு இத்தொடைகளைக் கூட்டியுறழ்ந்து வரையறை கூறப்படா என்பதே கருத்து.

3. 'அறுநூற்றிருபத்துநான்கனையும்' என்றிருத்தல்வேண்டும்.

4. பல்குதல் - பலவாக எண்ணிறந்து விரிதல்.

கூகூ. தொடைநிலை வகையே[1] யாங்கென மொழிப.

## இளம்பூரணம் :

என்—எனின். இதுவுந் தொடைக் குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தொடைநிலைவகை மேற்சொல்லப்பட்ட பாகுபாட்டின[2] என்றவாறு.

எனவே வகுத்துணர்த்துவார்க் கெல்லாம் இடனுடைத்து என்றவாறாம்[3]

அஃதாவது எழுத்தான் வேறுபடுதலும் சொல்லான் வேறுபடுதலும் பொருளான் வேறுபடுதலுமாம்.

இத்துணையுந் தொடை கூறப்பட்டது.[4]

## பேராசிரியம் :

இதுவுமது. மேல் ஒருசாரன வரையறையுடைமையிற் கூறப்பட்டனவென்புழி, ஒழிந்தன வரையறையின்மையிற் கூறப்படாவெனவுங் கூறினானைக் கண்ட மாணாக்கன், வரம்பில்லன தொடுக்கப்படாகொல்லென ஐயுற்றானை அவையுந் தொடுக்கப்படுங் கண்டாயெனக் கூறினமையின் ஐயம் அறுத்ததெனவும் அமையும்.[5]

---

1. 'தொடைவகைநிலையே' என்றபாடம் பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைகளிற் காணப்படுகிறது.

2. ஆங்கு என மொழிப-(மேற்சொல்லப்பட்ட) அவ்வகையின என்று கூறுவர்.

3. 'தொடைநிலைவகை மேற்சொல்லப்பட்டபாகுபாட்டினையுடையன' எனவே, இப்பாகுபாடுகள் மேலும் இத்தொடைகளை வகுத்துணர்த்துவார்க்கெல்லாம் இடந்தரும் என்பதாம்.

4. இவ்வியல் அக-ஆம் சூத்திரம்முதலாக கூகூ-ஆம் சூத்திரமுடியத் தொடைவகை பற்றிய இலக்கணம் கூறப்பட்டது என்பதாம்.

5. 'பதின்மூவாயிரத்து எழுநூற்றெட்டு' என்ற வரையறை கூறிய தொடைப் பகுதிகளே செய்யுளில் தொடுக்கப்படுவன. வரையறையில்லாதனவாய தொடைகள் செய்யுளில் தொடுக்கப்படாவோ எனவினவிய மாணவனை நோக்கி வரையறை யுடையனவும் வரையறையில்லாதனவும் ஆகிய இருவகைத் தொடைகளும் செய்யுளில் தொடுக்கப்படுவனவே. ஆயினும் இருவகைத் தொடைப்பகுதியுள் வரையறையுடைய தொடைப்பகுதியினைமட்டும் தெரியவிரித்துரைத்தோம். அப்பகுதியுளொன்றாகிய வரையறையில்லாத தொடைப்பகுதியினை இங்குத் தெரிய விரித்துரைத்திலம் என ஆசிரியர் இச்சூத்திரத்தினால் ஐயம் அகற்றினார் என்பது இதற்குப் பேராசிரியர் தரும் விளக்கமாகும்.

(இ - ள்.) தொடையது பகுதி வழக்கே அவ்விரண்டு மென்ப [1] (எ - று).

எனவே, அப்பகுதியுளொன்று தெரித்திலமென்பது இதன் கருத்து. ஆங்கென்றதனான் மேற்பகுத்த இரண்டிடமுங் கொள்க.[2]

**நச்சினார்க்கினியம் :**

இது ஐயமறுக்கின்றது.[3]

(இ-ள்). சீர்வகையடியின் றொடைப்பகுதி வரையறைப்படா-வேனும் அவை செய்யுட்க ணிற்கும் நிலைமை[4] முற்கூறிய கட்டளைபோனின்று தொடை கொள்ளப் பெறுமென்று கூறுவர் புலவர் ; எ-று.

என்றது, வரையறை யின்றேனுந் தொடைச்சுவடுபடு மென்றவாறு.[5]

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) தொடை நிலைவகை மேற்கூறப்பட்ட பாகுபாட்டின்-கண் அடங்குவன என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

---

1. அவ்விரண்டும் என்றது, வரையறையுடையனவும் வரையறையில்லனவும் ஆகிய இருவகைத் தொடைப்பகுதிகளையும் சுட்டியது.

2. வரையறையுடையன, வரையறையில்லன எனப்பகுத்த இரண்டிடம்.

3. கட்டளையடிகளை நிலைக்களமாகக் கொண்டு தொடைப் பகுதிகளை வரையறுத்தல் போன்று சீர்வகையடிகளை நிலைக்களமாகக் கொண்டு தொடைப் பகுதிகளை வரையறுத்தல் கூடாதோ என ஐயுறுவார்க்கு, சீர்வகையடிகளும் முற்கூறிய கட்டளையடிகள் போன்று தொடை கொள்ளப்படும் என இச்சூத்திரத்தால் ஐயமகற்றுதலின் 'இஃது ஐயம் அறுக்கின்றது' எனக் கருத்துரை வரையப்பட்டது.

4. ''தொடைவகைநிலை'' என்றது, சீர்வகையின் தொடைப் பகுதியினை. 'ஆங்கு' என்றது முற்கூறிய கட்டளையடியினை. ஆங்கெனவே அக்-கட்டளையடிபோல் (நின்று தொடை கொள்ளப் பெறும்) என்பதாம்.

5. தொடைச்சுவடுபடுதலாவது, செய்யுளிடத்தே இஃது இன்ன தொடை என்பது புலப்படப் பதிந்து தோன்றுதல். சீர்வகையடியின் தொடைப் பகுதி இத்துணைய என வரையறைப்படுத்தற்கு அடங்காவாயினும் கட்டளையடியிற் கொள்ளப்படும் தொடையமைப்பினையே அவை அடியொற்றியமைவன என்பதாம்.

மேல் அடியெனச் சிறப்பித்துரைக்கப்பட்ட நாற்சீரடிக்கண் பெருக்கிப் பெற்ற தொடை பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது எனப்பட்டன. இவ்வாறே நாற்சீரடி-யொழிந்த இருசீரடி முதலாக எண்சீரடி யீறாகக் கிடந்த ஏனை அடி வேறுபாட்டின்கணெல்லாம் இத்தொடைகளைக் கூட்ட வரும் தொடைப்பகுதி வரையறையின்றி வரம்பிலவாய்ப் பலவாகும் என்பதும், இங்ஙனம் எழுத்தாலும் சொல்லாலும் பொருளாலும் பலவேறு வகைப்பட விரித்துணர்த்தப்படும் தொடைவிகற்பங்கள் யாவும் மேற்சொல்லப்பட்ட பாகுபாட்டின் கண் அடங்குவன என்பதும் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தாகும்.

இனி, ''மோனை எதுகை முரண் இயைபு அளபெடை என்பனவற்றின்கண், இணை, கூழை, முற்று, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், கடை, கடையிணை, பின், கடைக்கூழை, இடைப் புணர்என வேறுபடுத்து உறழ்ந்து, எழுத்தந்தாதி அசையந்தாதி, சீரந்தாதி எனவும், உயிர்மோனை, உயிர் எதுகை, நெடில் மோனை, நெடிலெதுகை, வருக்கமோனை, வருக்க வெதுகை, இனமோனை, இனவெதுகை எனவும், மூன்றாமெழுத்தொன் றெதுகை, இடையிட்டெதுகை, ஆசெதுகை எனவும் இவ்வாறு-வருவனவற்றை மேற்கூறிய வகையினான் எழுத்து வேறுபாட்டி-னான் உறழவும், நிரல்நிறையாகிய பொருள் கோள் வகையானும் ஏகபாதம் எழுகூற்றிருக்கை முதலிய சித்திரப் பாக்களானும் உறழவும் வரம்பிலவாய் விரியும்'' என்றார் இளம்பூரணர்.

**ள மாத்திரை முதலா அடிநிலை காறும்[1]**
**நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே.**

## இளம்பூரணம் :

என்—எனின். இது நோக்கென்னும் உறுப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ.ள்) மாத்திரை முதலாக அடிநிலையளவும் நோக்குத லாகிய கருவி நோக்கென்று சொல்லப்படும் என்றவாறு.

1. 'அடிநிறைகாறும்' என்பது பேராசியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

காரணமெனினுங் கருவியெனினும் ஒக்கும். நோக்குதற் காரணமென்பதனை உண்டற்றொழில் என்றாற்போலக் கொள்க.[1]

அஃதாவது யாதானும் ஒன்றைத் தொடுக்குங் காலத்துக் கருதிய பொருளை முடிக்குங்காறும் பிறிது நோக்காது அது தன்னையே நோக்கி நிற்கு நிலை [2] அடிநிலை காறும் என்றதனால் ஓரடிக்கண்ணும் பலவடிக்கண்ணும் நோக்குதல் கொள்க. அஃது ஒரு நோக்காக ஓடுதலும் பல நோக்காக ஓடுதலும் இடையிட்டு நோக்குதலும் என மூன்றுவகைப்படும்.[3]

"அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று" (நாலடி க.)

இஃது ஒரு நோக்காக ஓடிற்று.

"அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மைஎஞ் ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்." (நாலடிகஎஉ.)

இது பல நோக்காகி வந்தது.

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாட்

---

1. உண்டற்றொழில் என்பதனை உண்ணுதலாகிய தொழில் என விரித்தாற் போன்று நோக்குதற்காரணம் என்பதனை நோக்குதலாகிய காரணம எனவிரிக்க என்பதாம். காரணம்-கருவி.

2. அது தன்னையே நோக்கி நிற்கும் நிலை-அத்தொடரையேமீண்டும் மறித்து நோக்கி நிற்கும் நிலை.

3. ஒருநோக்காக ஓடுதலாவது முதலிலிருந்து முடியும் வரை தொடர்ப்பொருளை இடையறவின்றி நோக்கியுணரும்படி ஒரே தொடராகச் செல்லுதல்.

பலநோக்காக ஓடுதலாவது, கருதிய பலபொருள்களையும் நோக்கி யுணரும் படி ஒருசெய்யுள் தனித்தனியே பலதொடர்களையுடையதாய் அமைதல்.

இடையிட்டு நோக்குதலாவது, ஒருதொடர், அதன் அயலிற்கிடந்ததனை நோக்காது அடுத்துப் பின்வருந் தொடரை நோக்கிநிற்றல்.

செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்" (முருகாற் சு.)

என்றவழி 'ஒளி' என்பது அதனயற் கிடந்த தாளை நோக்காது கணவனை நோக்குதலின் இடையிட்டு நோக்கிற்று. பிறவுமன்ன.

**பேராசிரியம் :**

இது, நிறுத்த முறையானே நோக்குணர்த்துகின்றது. நாற் சொல்வழக்கினையும் பாவிற்படுப்பது மரபென்றான். எனவே, ஆண்டு நோக்கி யுணரப்படுவதொன்றின்றிச் செய்யுளுள்ளும் வழக்கியல்பினவாகி வெள்ளைமையுமாய்க் காட்டுவனவாயின; அவ்வாறன்றி நோக்கென்பதோர் உறுப்புப்பெற்ற வழியே அது செய்யுளாவதாகலான் அது கூறுகின்றானென்பது.[1]

(இ-ள்.) மாத்திரையும் எழுத்தும் அசைநிலையுஞ் சீரும் முதலாக அடி நிரம்புந்துணையும் நோக்குடையவாகச் செய்தல் வன்மையாற் பெறப்படுவது நோக்கென்னும் உறுப்பாவது (எ-று).

கேட்டார் மறித்துநோக்கிப் பயன்கொள்ளுங் கருவியை நோக்குதற் காரணமைன்றாமென்பது. அடிநிலைகாறுமென்பது ஓரடிக்கண்ணேயன்றியுஞ் செய்யுள் வந்த அடி எத்துணையாயினும் அவை முடிகாறு மென்றவாறு.[2] வரலாறு:

"முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி அவிழ
இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
பரலவல் அடைய இரலை தெறிப்ப

---

1. 'அடிநிறைகாறும்' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம். 'அடிநிலைகாறும்' எனப்பாடங்கொண்டார் இளம்பூரணர் என்பது முன்னர் அடிக் குறிப்பிற் குறிக்கப்பட்டது.

நாற்சொல்லாலாய உலகியல் வழக்கினைப் பாவின்கண் அமைப்பது மரபு என மேற்கூறிய ஆசிரியர், அங்ஙனம் அமைக்குங்கால் வழக்கியல்போன்று வெள்ளைமைகலவாது, அரும்பொருள்களைத் தன்னகத்தேகொண்டு, அப்பொருளை உய்த்துணர்தற்குக் கருவியாகிய 'நோக்கு' என்னும் உறுப்புடையதாய் வருவதே செய்யுளாதலின் நோக்கு என்னும் உறுப்பினை இங்குக் கூறுகின்றார்.

2. காரணம் -கருவி. 'அவைமுடிகாறும்' எனவரும் இவ்வுரைத்தொடரால், 'அடிநிறைகாறும்' என்பதே பேராசிரியர் கொண்ட பாடம் என்பது நன்கு புலனாம்,

மலர்ந்த ஞாலம் புலம்புபுறங் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானம்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண் தோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவிழ் அலரின் நாறும்
ஆய்தொடி அரிவைநின் மாணலம் படர்ந்தே"

(அகம் 4)

என வரும். இப்பாட்டின் ஓசை முதலியனவெல்லாங் கேட்டோரை மீட்டுந் தன்னை நோக்கி நோக்கப் பயன்கொள நிற்கும் நிலைமை தெரிந்துகொள்க.

இனி, 'அடி நிறைகாறும்' என்றதனாற் செய்யுண் முழுவதும் எவ்வகையுறுப்புங் கூட்டிநோக்கி யுணருமாறுங் கூறுதும்:- முல்லை யென்பது முதலாகக் கானம் என்பதீறாக நாற்சொல்லி யலான் யாப்பு வழிப்பட்டதாயினும் பருவங்காட்டி வற்புறுக்குந் தோழி பருவந் தொடங்கிய துணையேகாணென்று வற்புறுத்தினாளென்பது நோக்கி யுணரவைத்தானென்பது. 'உவக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்' என்னுந்துணையும் தலைமகனது காதன் மிகுதி கூறி வற்புறுத்தினாளென்பது நோக்கி யுணரவைத்தான். ஒழிந்த அடிநிறைகாறும் பிரிந்த காலம்-அணித்தெனக் கூறி வற்புறுத்தினாளென்பது நோக்கி யுணர-வைத்தானெனப்படும்; என்னை? முல்லையென்னாது வைந்-நுனை யென்றதனான் அவை அரும்பியது அணித்தென்பது பெறப்பட்டது; சின்னாள் கழியின் வைந்நுனையாகாது மெல்-லெனுமாகலின். இல்லமுங்கொன்றையும் மெல்லென்ற பிணிய-விழ்ந்தன வென்றாள். கரிந்த துணை அவை முதல் கெடாது முல்லையரும்பிய காலத்து மலர்ந்தமையின். இரலை மருப்பினை இரும்பு திரித்தன்ன மருப்பு, என்றதூஉம் 'நீர்தோய்ந்தும் வெயி-லுழந்த வெப்பந் தணிந்தில' இரும்பு முறுக்கிவிட்டவழியும்

வெப்பம் மாறாதுவிட்டவாறு போல வெம்பா நின்றன வின்னு-மென்றவாறு. 'பரலவலடைய விரலை தெறிப்ப' எனவே பரல்படு குழிதோறும் தெளிந்து நின்ற நீர்க்கு விருந்தினவாகலாற் பல காலும் நீர் பருகியும் அப்பரல் அவலினது அடைகரை விடாது துள்ளுகின்றனவென அதுவும் பருவந் தொடங்கினமை கூறிய வாறாயிற்று. 'கருவி வானங் கதழுறை சிதறி' என்பதூஉம் பல வுறுப்புங் குறைபடாது தொக்குநின்ற மேகந் தனது வீக்கத் திடைக் காற்றெறியப்படுதலின் விரைந்து துளி சிதறினவென்று அவற்றையும் புதுமை கூறினாள். எனவே, இவையெல்லாம் பருவந் தொடங்கி யணித்தென்றமையின் வற்புறுத்துதற்கு இலேசாயிற்று. 'குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி'- என்பது கொய்யாத உளை பல்கியும் கொய்த உளை பலகாலுங் கொய்யவேண்டுதலுமுடைய குதிரை யென்றவாறு; எனவே தனது மனப்புகழ்ச்சி கூறியவாறு. அத்துணை மிகுதியுடைய குதிரை பூட்டின வாரொலி விலக்காது மணியொலி விலக்கி வாராநின்றான் அங்ஙனம் மாட்சிமைப்பட்ட மான்றேரனா தலானென்றவாறு. அதற்கென்னை காரணமெனின், 'துணை-யொடு வதியுந் தாதுண் பறவை' எனவே பிரிதலஞ்சி யென்ற-வாறு. மணிநாவொலி கேட்பின் வண்டு வெருவு மாகலின் அது கேளாமை மணிநாவினை இயங்காமை யாப்பித்த மாண்-வினைத் தேரனாகி வாராநின்றானென இவையெல்லாந் தலைமகள் வன்புறைக்கேதுவாயின. 'கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தள்' தெய்வ மலை ஆகலான் அதனு ளமன்ற காந்தளைத் தெய்வப்பூவெனக் கூறி அவை போதவிழ்ந்தாற்போல அவர் புணர்ந்த காலத்துப். புதுமணங் கமழ்ந்த நின் கைத்தொடிகள் அவை அரியவாகிப் பிரிந்த காலத்துப் போன்று வடிவொத்து மணங்குறைபட்ட துணையேயால் அவர் பிரிந்துசெய்த தன்மையினென[1] இதுவும் வன்புறைக்கே உறுப்பாயிற்று.

---

1. இத்தொடரை 'அவர் பிரிந்து சேய்த்தன்மையினென' எனத் திருத்துக. அவர்பிரிந்து காலம் நீட்டிக்காது விரைந்துவந்தனர் என்பதனை வற்புறுத்தும் நிலையில் அமைந்தன, 'நெடும்பெருங்குன்றத் தமன்ற காந்தட் போதவிழலரி நாறு மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே' எனவரும் இவ்வடிகளாகும், 'தெய்வமலையாகலான் அதனுள் அமன்ற காந்தளைத் தெய்வப்பூ எனக்கூறி. அவை போதவிழ்ந்தாற்போல, அவர் புணர்ந்தகாலத்துப் புதுமணம் கமழ்ந்த நின்கைத்தொடிகள் அவை அரியவாகிப்பிரிந்த காலத்துப்போன்று மணம் குறை-

இவ்வாறே பலவும் நோக்கி யுணர்தற்குக் கருவியாகிய சொல்லும் பொருளும் எல்லாம் மாத்திரை முதலா அடிநிறை காறுமென அடங்கக்கூறி நோக்குதற்காரணம் நோக்கென்றா னென்பது. மாத்திரை முதலாயினவுந் தத்தம் இலக்கணத்தில் திரியாது வந்தமையின் அவையும் அவ்விலக்கணம் அறிவார்க்கு நோக்கிப் பயன் கொள்ளுதற்கு உரியவாயினவாறு கண்டு கொள்க. 'எனப்படு' மென்றதனான் இவ்வாறு முழுவதும் வந்தன நோக்குதற்குச் சிறப்புடையவெனவும் இவை யிடையிட்டு வந்தன சிறப்பிலவெனவுங் கொள்ளப்படும். பிறவும் அன்ன. (கOச)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்தமுறையானே நோக்குணர்த்துகின்றது. இது மேல் நாற்சொல்லாற் செய்யுஞ் செய்யுள் வழக்கியல்பினவாய் வெள்ளைமை கலந்து நிற்றலாகா தென்பதோரிலக்கணம்.

(இ-ள்.) மாத்திரை ............ காறும். எ—து மாத்திரை முதலிய வுறுப்புக் கொண்ட வடிநிரம்புற்துணையும். நோக்கு ...... ... காரணம்[1] எ - து கேட்டோர் மீண்டுநோக்கிப் பயன்-கோடலையுடையவாகச் செய்யுங் கருவியை. நோக்கு ............ படுமே. எ - து நோக்கென்று பெயர் கூறப்படுமென்றவாறு

அடி நிறைகாறுமென்றது,[2] ஓரடிக்கணன்றிச் செய்யுள் வந்தவடி யெத்துணை யானும் நின்று முடிகாறும். எ - று.

உ - ம். "முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணிய விழ
விரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்

---

முன் பக்கத் தொடர்ச்சி

பட்ட அளவேயன்றி மணம் முற்றிலும் நீங்காவாயுள்ளன, அவர்பிரிந்து நெடுங் காலம் அன்மையின், எனத்தோழி வற்புறுத்தியதிறம் இவ்வடிகளை மறித்து நோக்குவார்க்கு இனிது புலனாதல் காண்க.

1. காரணம் - கருவி
2. நிறைகாறும் - நின்று முடியுமளவும்.

குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேர
னுவக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி னாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே"
(அகம் - ௪)

வைந்நுனை யென்றதனா லலருந்துணையு மெல்லென்னாது வன்மையவாய்க் கூரிதாய் நிற்றலி னரும்பி யணித்தென்பது கூறிற்று இல்லமுங் கொன்றையும் பிணி யவிழ்ந்தனவென்றது, அவையு மரமாதலிற் கடிதிற்கரியாவாகலிற் கடிதிற்கரிந்த முல்லைக்கு முன்னே மெல்லிய பிணியவிழ்ந்தமை கூறிற்று. காய்ந்த விரும்பு முறுக்கிவிட்டவழியும் வெப்பமாறாதவாறு போல நீர் தோய்ந்தும் வெயிலுழந்த வெப்ப மின்னுந்தணிந்தில வென்பதுதோன்ற இரும்புதிரித்தன்ன மருப்பென்றார். இரலை குழிதோறுந் தெளிந்து நின்ற நீர்க்கு விருந்தினவாதலிற் பல-கால் நீர்பருகுதற்குப் பரலையுடைய பள்ளத்தைச்சேர நின்றது என்றதாம். இத்துணையும் பருவந் தொடங்கியதுணையே வற்புறுத்திக் கூறிற்று. புலம்பு முழுவது நீங்கிற்றென்னாது ஒருபுடை தோன்றப் புறக்கொடுத்ததென்றமையின் அதுவும் பருவந் தொடங்கிய துணையே கூறிற்று. தொகுதியையுடைய மேகங் காற்றின் விசையான் விரைந்த கொடுந்துளியைச் சிதறிற்றெனவே புதுமை கூறிற்று. இத்துணையும் பருவந்-தொடங்கி யணித்தென்றலின் வற்புறுத்தற்கு இலேசானமை நோக்கிற்று. கொய்யாத வுளை பெருகுதலுங் கொய்த வுளை பல்காற் கொய்யப் பெருக வேண்டுதலுங் கூறவே குதிரை மனச்செருக்குக் கூறிற்றாம். அதன் கழுத்து வளையும்படி விசித்தவாரொலி நரம்பிற்கு ஓதிய நால்வகைக் குற்றத்தினும் ஆர்ப்பென்னுங் குற்றமெய்திய நரம்போசைபோல விசைப்ப-வென்க. பூத்தபொங்கரென்பதனாற் பசிப்பிணிதீர நுகரும் பொருளை யதுகுறைவறக் கொடுப்ப வுண்டு மகிழ்ந்து பின்பு-

தாம் நுகராநின்று வதியுமெனவே, யாமும் இல்லற நிகழ்த்து தற்கு நுகர்தற்குமேற்ற பொருள்களைக் குறைவறப் பெற்றுப் பின் னின்பநுகர்தல்வேண்டுமென்பது கூறினாளாம். பொங்கரிற் பசி தீர்ந்து துணையொடு வதியும் பறவையுந் தாதையுண்கிற-பறவையுங் கலக்கமுறுதற்கஞ்சி மணியொலியை வீக்கிய தேர னென்றதனாற் காதலும் அருளுமுடைமையின் அவற்றின் பிரிவிற்கும் பசிக்கும் இரங்கினானெனக் கூறவே[1] அவை அவற்கு நின்கண்ணும் பெருகுமென்றாளாம். வதியும் பறவை வண்டுந் தேனு மென்பதுந் தாதுண்பறவை சுரும்பென்பதும்,

> "எங்குமோடி யிடறுஞ் சுரும்புகாள்
> வண்டுகாள் மகிழ் தேனினங்காள்" (சிந். குண. ௬௨)

எனப் பின்னுள்ளோர் கூறியவாற்றானுமுணர்க இதனாற் சேணிடை வரவை யுணர்த்தும் மணியொலியை வாரொலி-கேட்கும் அணிமைக்கண்ணுங் கேளாயாயினையெனவும் அவ்வா-ரொலி தாதுண்பறவை யொலிக்கணடங்குதலின் கேட்கின்றிலை யெனவுங் கூறினாளாயிற்று. வாரொலி நரம்போசை போறலின் பெருவரவாயிற்று. மாண்வினைத்தேரனென்றாள், அவன்றன் கருத்திற்கேற்ப வினை முடித்தமை தோன்ற; எனவே வன்-புறைக்கேதுவாயின. தெய்வந்தங்கு மலையாதலிற் றெய்வமண-நாறுங் காந்தளினுடைய போதவிழாநின்ற மலர் போல அவர் புணர்ந்தகாலத்துப் புதுமணநாறும் அரிவையெனவே யவர்-பிரிந்து சேய்த்தன்றென வன்புறைக்கேதுவாயிற்று. ஆய்தொடி யென்றது. தோண் மெலிந்துழி அயலார்க்குப்புறமறைத்தல் வேண்டிச் செருகுந்தன்மையன்றி யணிந்த நிலையே கிடக்குந் தொடியென்றவாறாம். இதுவும் பிரிந்து சேய்த்தன்றென்ற வாறதாம். ஈண்டுமாணலமென்றது அவன் பிரிவுணர்த்திய

---

1. 'முல்லைவைந்நுனை, என்ற பாடலில் நோக்கு என்னும் உறுப்பு அமைந்-திருத்தலைப் பேராசிரியருரை கொண்டு விளக்கும் நச்சினார்க்கினியர் 'பூத்த பொங்கர்த் துணையொடு வதியும் தாதுண் பறவை பேதுறல் அஞ்சி' என்ற தொடரில் பொங்கர்த் துணையொடு வதியும் பறவை, தாதுண்பறவை- என இயைத்து, ''பொங்கரிற் பசிதீர்ந்து துணையொடு வதியும் பறவையும் தாதையுண்கின்ற பறவையும் கலக்கமுறுதற்கு அஞ்சி மணியை விலக்கிய தேரன் என்றதனால் காதலும் அருளும் உடைமையின் அவற்றின் பிரிவிற்கும் பசிக்கும் இரங்கினான்'' என நோக்கின் நுட்பத்தை மேலும் விளக்கியதிறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

காலத்துப் பிரிவிற்குடம்பட்டாள்போன் றுடம்படாது நின்ற நலத்தை: அது மெய்ப்பாடாம். இங்ஙனம் கோடல் நோக்கென்றுணர்க.

**ஆய்வுரை :**

இது, செய்யுளுக்கு இன்றியமையாத நோக்கு என்னும் உறுப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) மாத்திரையும் எழுத்தும் அசை நிலையும் சீரும் முதலாக அடி நிரம்பும் அளவும் நோக்குடையவாகச் செய்தல் வன்மையாற் பெறப்படும் கருவி நோக்கென்னும் உறுப்பாகும் எ-று.

ஒரு செய்யுளைக் கேட்டோர் அதன்கண் மாத்திரை முதலாக அடி நிரம்புந்துணையும் பாடற்பகுதியினை மீண்டும் மீண்டும் கூர்ந்து நோக்கி அப்பாடலின்கண் அமைந்த பொருள் நலங்களை உய்த்துணர்தற்குக் கருவியாயதோர் உறுப்பு 'நோக்கு' எனப்படும் என்பதாம். "நோக்காவது யாதானும் ஒன்றைத் தொடுக்குங்காலத்துக் கருதிய பொருளை முடிக்குங்காறும் பிறிது நோக்காது அதுதன்னையே நோக்கி நிற்கும் நிலை" எனவும் 'அடிநிலை காறும்' என்றதனால் ஓரடிக்கண்ணும் பலவடிக்கண்ணும் நோக்குதல் கொள்க' எனவும், 'அஃது ஒரு நோக்காக ஓடுதலும் பலநோக்காக ஓடுதலும் இடையிட்டு நோக்குதலும் எனப் பலவகைப்படும்' எனவும் கூறுவர் இளம்பூரணர். "அடிநிலைகாறும்" என்பது இளம்பூரணர் பாடம். "அடிநிறை காறும்" எனப் பாடங்கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

நாற்சொல்லால் ஆய உலகியல் வழக்கினைப் பாவின்கண் அமைப்பது மரபு என மேற்கூறிய ஆசிரியர், அங்ஙனம் அமைக்குங்கால் வழக்கியல் போன்று வெள்ளைமை கலவாது, அரும் பொருள்களைத் தன்னகத்தே கொண்டு, அப்பொருளை உய்த்துணர்தற்குக் கருவியாகிய நோக்கென்னும் உறுப்புடையதாய் வருவதே செய்யுள் என்பது விளங்க 'நோக்கு' என்னும் உறுப்பினை ஈண்டுக் கூறினார் என்பர் பேராசிரியர். இங்ஙனம் நோக்கி உணர்தற்குக் கருவியாகிய சொல்லும் பொருளும் மெல்லாம் அமையவந்த நோக்கென்னும் உறுப்பினை, "முல்லை வைந்நுனை தோன்ற" (அகம்-4) எனவரும் அகநானூற்றுப்

பாடலிற் பேராசிரியர் விளக்கிக் காட்டிய திறம், சங்கச் செய்யுட்களில் அமைந்த 'நோக்கு' என்னும் உறுப்பினையுணர்ந்து அதனைக் கருவியாகக் கொண்டு செய்யுளின் நயங்களைத் தேர்ந்துணர்வார்க்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளமை உணர்ந்து போற்றத்தகுவதாகும்

ளக    ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
      நாலியற் றென்ப பாவகை விரியே.

**இளம்பூரணம் :**

என்—எனின். நிறுத்தமுறையானே பாவாமாறு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அவை யினைத்தென வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) ஆசிரியமெனவும் வஞ்சியெனவும் வெண்பாவெனவும் கலியெனவும் நான்கியல்பினையுடைத்து என்று சொல்வர் பாவினது வகையை விரிக்குங் காலத்து என்றவாறு.

அஃதேல் ஒருசாராசிரியர் வெண்பா ஆசிரியங் கலி வஞ்சி என ஓதினார்; யாதெனின், அவரும் ஒரு பயனோக்கி யோதினார்; இவரும் ஒருபயன் நோக்கி ஓதினார் என்க.

என்னை? வெண்பாவாவது பிறதளையோடு மயங்காமையானும் மிக்குங் குறைந்தும் வாராத அடியான் வருதலானும் அந்தணர் நீர்மைத்தென முற்கூறினார். அதன்பின் அந்நிகர்த்தாகிப் பிறதளையும் வந்து இனிய ஓசையையுடைத்தாய்ப் பரந்து வருதலின் அரசத்தன்மையது என்பதனான் ஆசிரியப்பாக் கூறினார். அதன்பின் அந்நிகர்த்தாகிச் சிறுபான்மை வேற்றுத்தளை விரவலின் வணிகர் நீர்மைத்தெனக் கலிப்பாக் கூறினார். அதன்பின் வஞ்சிப்பா அளவடியான் வருதலின்றிக் குறளடியுஞ் சிந்தடியுமாய் வந்து பல தளையும் விரவுதலின் வேளாண்மாந்தரியல்பிற்றென வஞ்சிப்பாக் கூறினார். இவ்வாசிரியரும் பதினேழ் நிலத்தினும் வருதலானும் இனிய ஓசைத்தாகலானும் அடிப்பரப்பினானும் ஆசிரியப்பா முற்கூறினார். அதன்பின் ஆசிரிய நடைத்தாகி இறுதி யாசிரியத்தான் இறுதலின் வஞ்சிப்பாக் கூறினார்; இந்நிகர்த்தன்றி வேறுபட்ட ஓசைத்தாகலான் வெண்பா அதன்பின் கூறினார்; அதன்பின் வெண்சீர் பயின்று

வருதலானும் வெண்பாவுறுப்பாகி வருதலானும் கலிப்பாக் கூறினா ரெனவறிக.[1] (கoக)

**பேராசிரியம்:**

'நோக்கே பாவே' (102) யென நிறுத்தமுறையானே நோக் குணர்த்திப் பாவுணர்த்தியவெழுந்தான்[2] அதனை இத்துணைப்-பெயர் வேறுபாட்டதெனவும், பொருட்குரிமையவும் அடிக்-குரிமையவுமாமாறுஞ் செய்யுட்கு வரையறைவகையான் உரிய-வாறும் ஒரோசெய்யுட்கண் ஒரோவுறுப்புப்பற்றி வருங்கால் அவ்வுறுப்புக்கள் இத்துணையடியவாகுமெனவும் எல்லாங் கூறுவான் தொடங்கினமையின். அவற்றுள் இது, பெயர்வேறு பாடும் அஃது இனைத்தென விரியும் உணர்த்துகின்றது [3] இவ் வுறுப்பு வேறுபாட்டானே, உறுப்பியலாகிய செய்யுளும்[4] இவ் வாறு பெயர்கொள்ள வைத்தானென்பது.

(இ - ள்) ஆசிரியப்பாவும் வஞ்சிப்பாவும் வெண்பாவுங் கலிப்பாவுமென நாற்கூற்றது பாக்களவற்று[5] விரி, (எ - று)

'வகை' யென்றதனான் உறுப்பாகிய[6] செய்யுளின் வேறுபட நோக்கி உணரப்படும் இவ்வுறுப்பெனவும், இவற்றுள் வழக்கிற் குரியன செய்யுட்கு வந்தனவும் வழக்கிற்கேயுரியவாகிக் கூறு

---

1. ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி என்னும் இம்முறைவைப்பு, ஆசிரிய நடைத்து வஞ்சி, வெண்பாநடைத்து கலிஎன்னும் பாவின்தொகைவரை-யறையைக் கருதியமைந்ததாகும், (செய்யுளியல் எச - ஆம் சூத்திரம் நோக்குக)

வெண்பா ஆசிரியம் கலி வஞ்சி என்னும் முறைவைப்பு வெண்பாமுன்வந்து அகவல் பின்னாகவரும் மருட்பா என்னும் பாவிரிவரையறையினையும் கலியும் வஞ்சியும் வெள்ளைச் சுரிதகமும் ஆசிரியச் சுரிதகமும் பெற்றுவரும் தொடர்பி-னையும் கருதியமைந்ததாகும்.

இவ்வாறன்றி நால்வகைப் பாக்களை நால்வகை வருணவேறுபாட்டுடன் பிற்காலவுரையாசிரியர்கள் ஒப்பிட்டுரைக்கும் விளக்கம் தொல்காப்பியனார் முதலிய முன்னைத்தமிழ்ச்சான்றோர் கருத்துக்கு ஏற்புடையதன்றென்க.

2. பாவுணர்த்திய எழுந்தான் - பா என்னும் உறுப்புணர்த்தத் தொடங்-கினான்.

3. இச்சூத்திரம் பாவினது பெயர் வேறுபாடும் அது நால்வகைத்து என்பதும் உணர்த்துகின்றது.

4. 'உறுப்பியாகிய செய்யுளும்' என்றிருத்தல் பொருத்தமாகும். உறுப்பி-உறுப்பினையுடையது.

5. 'பாக்களவற்றுவிரி' என்னும் உரைத்தொடர் 'பாக்கூற்றுவிரி' என்றிருத்தல் வேண்டும்.

6. 'உறுப்பியாகிய' என்றிருத்தல் வேண்டும்.

படுவனவும், ஒன்றொன்றனோடு விராய்ப் பிறக்கும் பகுதியு-மெல்லாங் கொள்ளப்படும். பாக்கூற்றுவிரி நான்கெனவே, பாவினை உறுப்பாகவுடைய செய்யுட்கு வரையறை கூறிற்றில-னென்பது பெற்றாம்; என்னை? அவற்றுப் போதுங்கால்[1] அவற்றது பெயர் வேறுபாடும் அச்சூத்திரங்களான் அறிது-மென்பது; என்றார்க்கு இவை நான்கேயன்றிப் பாவாமாறு, கூறானோவெனின், இவையின்றித் தூக்குப் பிறவாமையின், இப்பாவிலக்கணமும் நோக்கோத்தினுட் கூறினானாகலான்[2] ஆண்டோதியவாறே அமையுமென்பது. இக்கருத்தே பற்றிப்,

"பாவென மொழியினுந் தூக்கினது பெயரே" (யா. வி 241)

என்றார் இந்நூலின் வழிநூல் செய்த ஆசிரியருமென்பது.[3]

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குதலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவள மேய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே" (ஐங்குறு)

என்பது, ஆசிரியப்பா உறுப்பாகி வந்த செய்யுள்.

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்" (பத்து-பட்டின1-2)

என்பது, வஞ்சிப்பா உறுப்பாகி வந்த செய்யுள்.

"வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோ
லேரிய வாயினு மென்செய்வ — கூரிய
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை"
(முத்தொள்ளாயிரம்-71)

என்பது, வெண்பாவுறுப்பு வந்த செய்யுள்.

"அரிதாய வறனெய்தி" (கலி-11)

என்பது, கலிப்பாவுறுப்பு வந்தது. பிறவும் அன்ன.

---

1. 'அவற்றுறுப்போதுங்கால்' எனத்திருத்திப் பொருள்கொள்க.

2. தூக்கோத்தினுட் கூறினானாகலான்' எனத்திருத்திப் பொருளுணர்க.

3. இந்நூலின் வழிநூல்செய்த ஆசிரியர் என்றது, இத்தொல்காப்பியத்தின் வழி யாப்பிலக்கண நூல் செய்த நத்தத்தனார் என்னும் ஆசிரியரை. நத்தத்தனார் இயற்றிய யாப்பிலக்கணநூற் சூத்திரங்கள் பல யாப்பருங்கலவிருத்தியுள் மேற்-கோளாக எடுத்தாளப் பெற்றுள்ளமை காணலாம்.

இவை இன்ன அடியான் வந்தன வென்பது என்னையறியு மாறெனின், அதுவன்றே தூக்குப் பயம்படுகின்ற இடமென்பது[1]. மூன்றுபாவினை நாற்சீரானும், வஞ்சிப்பாவினை இருசீரானும் முச்சீரானுந் தூக்குக்கொண்டு இத்தூக்காமாறு உணர்ந்து கொள்க;[2]

ஆசிரியம் வெண்பாக் கலி வஞ்சியெனச் சிறப்புமுறையாற் கூறாத தென்னையெனின், அது,

"முந்து மொழிந்ததன் றலைதடு மாற்றே"
(தொல்-மரபியல்-110)

என்பாருமுளர். வஞ்சிப்பா முதற்கூறாமையின்[3] அற்றன்றென் பது. மற்றென்னை கருதியதெனின், ஆசிரியம் வெண்பாவென்று ஓதினவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் உரிமையின் அவையே போலுஞ் சிறப்புடையவென்று கொள்வானாயினும், அற்றன்று; இவை செய்யுளிலக்கணமாகலான் அவை நான்கும் ஒத்த இலக் கணத்த செய்யுளென்றற்கு இம்முறையான் ஓதினானென்பது[4] இனி ஒருசாரார் இந்நான்கனையும் ஒன்று மூன்றாக விகற்-பித்துக் கூறுப; என்னை? ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை என்றாற்போல; அற்றன்று! ஒரெழுத்துமுதல் ஐயெழுத்துச் சீரளவும் உயர்ந்த சீரான்வரும் செய்யுட்கு ஒன்று ஒன்றனின் வேறுபட்டொலிக்கும்; அவ்வேறுபாடுதோறும் பாவேறுபடா; என்னை?

---

1. தூக்கு என்னும் உறுப்பினைக்கொண்டே அடிகளைத் துணித்து நிறுத்தி இன்னஅடியான் வந்தன இன்னபா என அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

2. ஆசிரியம், வெண்பா, கலி என்னும் மூன்று பாவினையும் நாற்சீரானும் வஞ்சிப்பாவினை இருசீரானும் முச்சீரானும் அடிகளைத் துணித்து நிறுத்துதல் கொண்டு 'தூக்கு' என்னும் உறுப்பாமாறு இதுவென உணர்ந்து கொள்க என்பதாம்.

3. ஆசிரியர் இங்கு எண்ணிய முறையில் வஞ்சிப்பாவிற்கு இலக்கணம் முதற்கண் கூறாமையின் இது முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றம் எனக்-கொள்ளுதற்கில்லை,

4. ஆசிரியம் வெண்பா என்று ஓதின் அவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் உரிமையின் அவையேபோலுஞ் சிறப்புடையவென்று கொள்ளநேரும், இவை செய்யுளிலக்கணமாதலான் 'அவை நான்கும் ஒத்த இலக்கணத்தன செய்யுள்' என்றற்கு இம்முறையான் ஒதினான்.

"எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப" (தொல்-செய்-43)

என்றமையினென மறுக்க; அல்லதூஉம் அங்ஙனம் வேறுபாடு கொள்ளின் ஒரோவொன்று ஐந்தாகலுந் தூங்கலோசை ஆறும் ஏழுமாகலுமுடையவென்பது.[1] (கα௫)

**நச்சினார்க்கினியம்:**

இது நிறுத்த முறையானே பாவென்னு முறுப்புணர்த்து-கின்றது.

(இ - ள்.) ஆசிரியப்பாவும், வஞ்சிப்பாவும், வெண்பாவும், கலிப்பாவுமென நான்கு கூற்றது பாக்கூற்று விரி எ—று.

வகை யென்றதனாற் றூக்கின் றொடர்ச்சியாகிய இப்பா-வென்னும் உறுப்பு நிகழுமோசையையும் அது நிகழுஞ்செய்யுளின் வேறுபடநோக்கிச் செய்யுட்கோ ருறுப்பென்றுணர்க வென்பதூஉம், வழக்கிற்குரியன செய்யுட்கு முரியவாமென்பதூஉம் ஒரோர் செய்யுட்கண் ஓரோவுறுப்பு வருமாறும் ஒன்றொன்றனோடு விராஅய்ப் பிறக்கும் பகுதியும், பொருள் வரையறையும், அடிவரையறையும் எல்லாங்கொள்க. பா நான்கெனவே, பாவினை யுறுப்பாகவுடைய செய்யுளும் நான்கென்னும் வரை யறையும் அவற்றாற் பெயர் கோடலும் அச்சூத்திரங்களாற் பெறுதும். "தூக்கே பாவே" யென்பதற்குப் "பாவென மொழியினுந் தூக்கினது பெயரே" யென்றார் இதன்வழி-நூலோரும்.

உ -ம். "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்

1. பாக்களிற் பயிலுஞ் சீர்கள் ஓரெழுத்து முதல் ஐந்தெழுத்தளவும் எழுத்துக்களால் வேறுபடினும், அச்சீர்களின் ஓசை குறைதலும் மிகுதலும் இல்லையென்பது தொல்காப்பியனார் கருத்தாதலின், பிற்காலத்தார் ஒவ்வொரு பாவின் ஓசையினையும் ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை என்றாற்போன்று மூவகை யாகப் பகுத்துரைக்கும் ஓசைப்பாகுபாடு தொல்காப்பியனார்க்கு உடன்பாடன்-றென்பது புலனாம். அன்றியும் இங்ஙனம் எழுத்தமைப்புப்பற்றிப் பாவினைப் பகுத்துரைக்கப்புகின் ஆசிரியம் வெண்பா கலி என்னும் மூவகைப்பாவோசைகளும் ஒவ்வொன்றும் ஐவகைப்படுதலும், வஞ்சிப் பாவின் தூங்கலோசை ஆறும் ஏழும் ஆதலும் உடையன. சீர்களின் எழுத்தளவு வேறுபடினும் பாவேறுபடுதல் இல்லையென்பதே தொல்காப்பியனார் துணிபாகும்.

துகில்பொதி பவள மேய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே'

இஃது ஆசிரியப்பாவுறுப்பாகிய செய்யுள்.

'வசையில்புகழ் வயங்குவெண்மீன்'

இது வஞ்சியுறுப்பாகிய செய்யுள்.

"வாரிய பெண்ணை வளர்குரும்பை வாய்த்தனபோல்
ஏரிய வாயினு மென்செய்வ - கூரிய
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை"

இது வெண்பாவுறுப்பாக வந்த செய்யுள்.

'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்'

இது கலியுறுப்பாக வந்த செய்யுள். இவற்றின் பாவைத் தூக்கி யடி வரையறுத்தவாறு காண்க. ஆசிரியப்பா வெண்பாவென மூன்றாக்கிற் கூறியவாறன்றி ஆசிரியம் வஞ்சி யென்று கூறினார், வழக்கிற்குஞ் செய்யுட்குமுரிய வாசிரியமும் வெண்பாவும் போலச் செய்யுட்குரிய கலியும் வஞ்சியுஞ் சிறப்பிலவோ வென்று ஐயுறாமைக்கும் அவற்றிற் கவ்வையுறவுடைய[1] வென்றற்கு மென்க.

## ஆய்வுரை :

இது, நிறுத்த முறையானே 'பா' என்னும் உறுப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) பாவினது வகையை விரிக்குங்காலத்து ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என நான்கியல்பினையுடையது என்பர் ஆசிரியர் எ-று.

'பா' என்பது, "சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லும் தெரியாமற் பாடம் ஓதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இஃது இன்ன செய்யுள் என்று உணர்தற்கு ஏதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை" யென்பர் பேராசிரியர்.

---

1. 'அவற்றிற்கு அவையுற வுடைய' என்றிருத்தல் பொருத்தம்.

எஉ அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய வென்ப.

**இளம்பூரணம் :**

என்—எனின். மேற்கூறப்பட்ட பாக்கள் பொருட்குரியவா-மாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அப் பாக்கள் நான்கும் பொதுப்பட நின்றவழி அறம்பொருளின்ப மென்னும் மூன்று முதற் பொருட்கும் உரிய என்றவாறு.

முதற்பொருள் என்றது பாகுபாடல்லாத பொதுமைகுறித்த, பொருள்.[1] சில பொருள்களை எடுத்து விலக்குகின்றாராதலின், இவ்வாறு கூறப்பட்டது [2] அப்பொருட்கண்[3] உரியவாகியவாறு சான்றோர் செய்யுளகத்துக் கண்டுகொள்க. (கூ0உ)

**பேராசிரியம்:**

இது, பாவினைப் பொருட்குரியவாற்றான் வரையறை கூறு வான் தொடங்கிப் பொருட்குரிமை பொதுவகையான் உணர்த்துகின்றது; இது பொருளதிகாரமாகலின் இங்ஙனங் கூறுகின்றான்.

(இ-ள்) அந்நிலை மருங்கின்-அம் மேலைச்சூத்திரத்துத் தோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளிடத்து;[4] அறமுதலாகிய

1. அறம், பொருள், இன்பம் எனத் தனித்தனியே பகுத்துரைக்கப்படு-தலின்றி அம் மூன்றினையும் ஒன்றாக அடக்கிய பொதுமையுடையபொருள் என நால்வகைப் பாக்களுக்கும் ஒப்ப உரிய பொருளின் முழுமை நிலைமையினைப் புலப்படுத்துவார், அறமுதலாகிய முப்பொருள் என்னாது அறமுதலாகிய மும்-முதற்பொருள் என்றார் என்பது இத்தொடர்க்கு இளம்பூரணர் தரும் விளக்க-மாகும்.

2. அறம் பொருள் இன்பம் என்னும் பகுப்பிற் சிலபொருள்களைக் குறிப்பிட்டு இவை இன்னபாவிற்கு வாரா என ஆசிரியர் விலக்குதலால், இங்கு மும்முதற்-பொருள் என்றது அங்ஙனம் விலக்கப்படும் மூவகைப் பகுப்பினைச் சுட்டாது அம்மூன்றற்கும் பொதுவாகிய பொருட்பொதுமையினையே சுட்டி நின்றது எனக் காரணங்காட்டுவார், ''சிலபொருள்களை எடுத்துவிலக்குகின்றாராதலின் இவ்வாறு கூறப்பட்டது'' என்றார்.

3. அப்பொருட்கண்-அறம் பொருள் இன்பம் எனப் பிரிக்கப்படாது முழுமையாய் அறம்பொருள் இன்பம் என்னும் மூன்றனையும் உள்ளடக்கிய பொதுமைப்பொருளின் கண்ணே.

4. 'அந்நிலை' என்றது, மேலைச்சூத்திரத்தில் தோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளை. மருங்கு - இடம்.

மும்முதல் - அறம்பொருளின்பமென்பன; அறமுதற் பொரு ளெனவே அவையும் அவற்றது நிலையின்மையும் அடங்கும்,[1] பொருட்கும் உரிய வென்ப - அப் பொருட்கெல்லாம் உரிய நான்கு பாவும் (எ-று).

'அந்நிலைமருங்கின்' எனவே அவை மும்முதற்பொருட்கு உரியவாங்காற் செய்யுளிடத்தன்றித் தாமாக உரிமை பூணா வென்பது. வீடென்பது செய்யுளுள் வாராதோவெனின், அற முதலென்பது புறப்பாட்டெல்லையாகக் கூறினா னென்பார் நான்குபொருளுந் தழீஇயுரைப்ப[2]. இனியொருசாரார் மும் முதற்பொருட்கும் உரியவென்பதனை எச்சப்படுத்திக்கொள்ப. அற்றன்று, உலகிற் பொருண்மூன்றனையுங் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான், அவையின்றி வீடுபெறுமாறு வேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினானென்பது. அல்லா[3] தார் வீடென்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அது கூறானென்ப. அங்ஙனங் கருதின் அறமுதற்பொருளுஞ் செய்யுட்கண் வாராவென மறுக்க.[4] (கOகூ)

---

1. 'பொருளாவன; அறம் பொருளின்பமும் அவற்றது நிலையின்மையும், (தொல். அகத். 1) எனவரும் நச்சினார்க்கினியர் உரைத்தொடர் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

2. 'அறமுதலாகிய மும்முதற்பொருட்கும்' எனவரும் இத்தொடர்க்கு 'அறத்தை முதன்மையாகக் கொண்டுள்ள பொருள், இன்பம், வீடு என்னும் மூன்று பொருட்கும்' என உரைகூறியிடத்து முதல்நின்ற அறம் என்பது மும்- அடங்காது. புறத்தே நிற்றலின் புறப்- மூன்றொடுஞ்சேர்க்க நாற்பொருளாதல்

...ன மதிக்கத்தக்க எல்லாப்பொருள்களையும் மும் ...அடங்கக்கூறினார் தொல்காப்பியனார். அம்மும்முதற் ...றாக வீடுபெறுதற்குரிய ஆறு (வழி) வேறு இல்லாமை- ...பொருள்களின் வாயிலாகவே வீடுபேறாகிய நாலாவது அடங்கக்கூறினார், என விளக்குவர் பேராசிரியர்.

...லின் நாற்பால் மொழிந்தவர்' (திருவள்ளுவமாலை 19) ...தையார் வாய்மொழியினை நினைவுபடுத்துவதாகும்.

... என்னும் பொருண்மை அதன் உண்மை இயல்பு புலனாகச் செய்யுட்கண் வாராதென்பாருளராயின் அறம் பொருள் இன்பம் என்னும் ஏனைப்பொருண்மையும் அவற்றின் சிறப்பியல்பு விளங்கவாரா எனக்கூறி மறுக்க என்னும் இப்பேராசிரியர் கூற்று, அறம்பொருளின்பம் என்னும்

**நச்சினார்க்கினியம்:**

இது பாப்பொருட்குரிமை கூறுகின்றது.

(இ-ள்) மேலைச்சூத்திரத்திற் றோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளிடத்து வரும் அறம் பொருளின்பமென்னும் மூன்று முதற்பொருட்கும் அந்நான்கு பாவு முரியன. எ - று.

மும்முதற் பொருளெனவே, அவற்றது துணைப்பொருளாகிய[1] அறநிலையின்மையும் பொருணிலையின்மையும் இன்பநிலையின்மையும் அடங்குமென்ப. உலகியற் பொருண் மூன்றனையு மிவையெனக்கூறி அவற்றை விடுமாறுங் கூறவே வீடுங் கூறிற்றாம். அது கூறுதற்குரிய செய்யுளும் மேற்கொச்சகமென்று கூறுமாறுணர்க.

**ஆய்வுரை:**

இது, முற்கூறிய பாக்கள் பொருட்கு உரியவாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்குறித்த பாக்கள் நான்கும் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று முதற்பொருட்கும் உரியன என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

௭௩ **பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்**
**ஆசிரி யப்பா வெண்பா என்றாங்**
**காயிரு பாவினுள் அடங்கும் என்ப.**

**இளம்பூரணம்:**

என்—எனின். மேற்சொல்லப்பட்ட பாக்களைத் தொகைவகையான் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட நான்கு பாவும் ஆசிரியப்பா வெண்பா என இரண்டாய் அடங்கும் என்றவாறு.[2]

---

முன் பக்கத் தொடர்ச்சி

முப்பொருளுடன் வீடுபேறாகிய நாற்பொருட்கும் நிலைக்களமாவது செய்யுளே என அதன் சிறப்புணர்த்தும் நிலையில் அமைந்துள்ளமை உணர்ந்து போற்றத்தகுவதாகும்.

1. அறமுதலாகிய மும்முதற்பொருளது வகையாகிய.

2. பாவிரிமருங்கு - பாவாகிய ஓசை பலபகுதிப்படவிரியும் பக்கம். பலவாகிவிரியும் செய்யுளின் ஓசைப்பகுதியாவும் அகவல், செப்பல் என்னும் இரண்டாயடங்கும் என்பதாம்.

அவையடங்குமாறு மேலே வருகின்ற சூத்திரத்தான் உரைப்ப. (கoரு)

**இளம்பூரணம்:**

௭௪. ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப.

என்-எனின். மேல் அடங்குமெனக் கூறப்பட்ட பாக்கள் அடங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று,

(இ-ள்.) ஆசிரியம் போன்ற நடையை உடைத்து வஞ்சி; வெண்பாப் போன்ற நடையை உடைத்து கலி என்றுரைப்ப என்றவாறு.

நடையென்றது அப்பாக்கள் இயலுந் திறம்.[1] (கoச)

**பேராசிரியம்:**

இவை இரண்டு சூத்திரமும் உரையியைபுநோக்கி உடனெழு தப்பட்டன. மேற் பாவினது விரி நான்கென்றமையின் தொகையுமுண்டென்பது பெற்றாம். அவை தொகுக்குங்கால் இரண்டாகித் தொகுமென்பதூஉம், அங்ஙனம் இரண்டாமிடத் தும், யாதானும் ஒன்றடக்கி இரண்டாகா; முதற்பாவென நாட் டப்படுவன இவை யெனவும், அவை முதலாகத் தோன்றி ஆண்டடங்குவன இவை யெனவும் உணர்த்துகின்றது.[2]

(இ - ள்) மேற் பாக்கண் விரிந்த பகுதியை உண்மைத் தன்மை நோக்கித் தொகுப்பின் ஆசிரியமும் வெண்பாவுமேயாம். அவற்றுள் ஆசிரியத்து விகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும். வெண்பாவின் விகற்பமாகிக் கலிப்பா விரிந்தடங்கும்: அங்ஙனம் அடங்கி இரண்டாகும் பாவின்றொகை (எ-று).

---

1. நடையென்பது, பாக்கள் இயலும் ஓசைத்திறம். ஆசிரியப்பாவின் ஓசையினை அடியொற்றி இயல்வது வஞ்சிப்பா, வெண்பாவின் ஓசையினை அடியொற்றி இயல்வது கலிப்பா என்பதாம்.

2. மேல் 'பாவகை விரியே நாலியற்று' என ஆசிரியர் கூறினமையின் அவற்றுக்குத் தொகையும் உண்டென்பது பெறப்படுதலால் அவை ஆசிரியம் வெண்பா என்னும் இரண்டாகித் தொகும் எனவும், அவையிரண்டுமே முதற்பா எனவும் ஏனைய வஞ்சிப்பா ஆசிரியத்துள்ளும் கலிப்பா வெண்பாவினுள்ளும் அடங்கும் எனவும் கூறுவன இச்சூத்திரங்கள்.

"வீடுபேறு மிகவிழைந்து, நீடுநினைந்து நெடிதிருந்து"
என அகவற்சீரான் வஞ்சித்தூக்குப் பிறந்தது.[1]

1 மாசேர்வாய் 2 மாசேர்வாய் 3 மாசேர்வாய் 4 மாசேர்வாய்[2]
என வெண்பாவினுட் கலிப்பா பிறந்தது, பிறவும் அன்ன.

இனி, ஒரு சாரார் வஞ்சிப்பாவினுங் கலிப்பா பிறக்குமாதலின் அது கூறி நிரம்பாதென்ப (யா. வி. பா. 209) என்னை?

விளங்குமணிப் பசும்பொன்னின்
"விசித்தமைத்துக் கதிர்கான்று" (யா. வி. ப. 298)

என்னும் இரண்டு வஞ்சியடியும் ஒரு கலியடியாகச் சொல்லப் படுமென்பது அவர் கருத்து; அற்றன்று அவையிரண்டு மாதற்கொரோர் கட்டளையிலவாம்; அன்னது [3]கட்டளையழிந்த கலியடியெனினும், வஞ்சியடியாதற்கு ஒரு காரணம் இல்லை; தலைகுலுக்கி வலியச் சொல்லினுந் தன் சீரின்மையினென மறுக்க[4] அல்லதூஉம் ஒன்று ஒன்றனோடு ஒக்குங்காற் பிறப்பித்ததனோடு பிறந்ததொப்ப வேண்டுமென மறுக்க.

"வயலாமைப் புழுக்குண்டும்
வறளடம்பின் மலர்மலைந்தும்" (பத்துப்-பட்டின-64-65)

என்றக்காற் கலிப்பாவாகச் சொல்லியவழியும் அத் தூங்கலோசையோடு ஒத்தல்வேண்டும், அதனின் அது பிறந்ததாயினென

1. 'வீடுபேறு மிகநினைந்து நீடுநினைந்து நெடிதிருந்து' எனவரும் அகவற் சீர்களால்

'வீடுபேறு மிகநினைந்து
நீடுநினைந்து நெடிதிருந்து'

என வஞ்சித்தூக்குப் பிறந்தது.

2. 'வாமான்றேர் மீதேறி வானோர்கள் வந்தேத்த' என வெண்பாவினுட் கலிப்பா பிறந்தது.

3. மேற்குறித்த வண்ணம் இரண்டடிகளும் வஞ்சிப்பாவின் கட்டளையடிகளல்ல.

4. இது, கட்டளையழிந்த கலிப்பாவேயாயினும் இதனை 'விளங்குமணிப் பசும்பொன்னின் விசித்தமைத்துக் கதிர்கான்று' எனப் பிரித்துரைத்தவழியும் இவை வஞ்சியடியாதற்கு ஒருகாரணமும் இல்லை; வஞ்சித்தூக்குண்டாகுமாறு தலையையசைத்து வலிந்து கூறினாலும் இதன்கண் வஞ்சியுரிச்சீரின்மையின் இவை வஞ்சியடியாதல் இல்லை.

மறுக்க.[1] அல்லதூஉம் அவ்விரண்டடியுங் கூட்டிச்சொல்லியவழி அகவலோசையாதலே வலிது ; என்னை ? தன்றளை விராய் வந்தமையின்.[2] பண்புறவென்றதனான் ஆசிரியப்பாவும் வெண்பாவும் இயல்பெனவும், ஒழிந்தன விகாரமெனவுங் கொள்க.[3] என்னை ? வெண்பாவென்றதனான் மூன்றுபாவினுந் துள்ளிய கலியோசையும் ஒருவகையான் வெண்பாநெறித்தேயாம், இலக்கணக்கலியோசையன்றாயினு மென்பது கொள்க.[4]

(கOள, கOஅ)

**நச்சினார்க்கினியம் :**

இவை யிரண்டும் உரையியைபு நோக்கி உடன் கூறினார். இவை விரிந்தது தொகுத்தல்.

(இ—ள்) பாவிரி ... ... தொகுப்பின் எ—து, பாக்கள் விரிந்த பகுதியை உண்மைத் தன்மை நோக்கித் தொகுப்பின்; ஆசிரியப்பா ... . மென்ப. எ—து, ஆசிரியப்பாவும் வெண்பாவுமென் றவ்விரண்டுபாவினு ளடங்குமென்று கூறுவர். அதற்குக்காரண மென்னையெனின், ஆசிரிய ... ... வஞ்சி. எ—து. ஆசிரிய விகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும். ஏனை - மொழிப. எ—து, ஒழிந்த வெண்பாவின் விகற்பமாகித் துள்ளலோசை விரிந்தடங்குமென்று முதனூலாசிரியர் கூறுதலின். எ—று.

உ—ம். ''வீடுபேறு மிகவிழைந்து நீடுநினைந்து நெடிதிருந்து''

என அகவற்சீரான் வஞ்சித்தூக்குப் பிறந்தது. மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என வெண்பாவினுட்

---

1. 'வயலாமைப் புழுக்குண்டும் வறளடம்பின் மலர்மிலைந்தும்' எனக் குறளடி யிரண்டினையும் கலிப்பாவாகக் கூட்டிச் சொல்லியவழி அவ்வடி வஞ்சியடியிற் பிறந்ததாயின் அது தூங்கலோசையோடு ஒத்தல் வேண்டும்.

2. 'வயலாமைப் புழுக்குண்டும் வறளடம்பின் மலர்மிலைந்தும்' எனஅவ்விரண்டடியும் கூட்டிச் சொல்லியவழி அகவலோசையோடு கலித்தளை விரவிவந்தமையின் அவ்வடியினை அகவலோசையினதாகிய அடியெனக்கொள்ளுதலே பொருத்தமுடையதாகும் என்பது பேராசிரியர் கருத்தாகும்.

3. 'பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்' என ஆசிரியர் பாவின் ...னை நிலைக்களமாகக் கொண்டு அவற்றை விரித்தலும் தொகுத்தலும் ...யால், ஆசிரியம் வெண்பா என்னும் இரண்டும் இயற்கை எனவும், கலியும் முறையே அவ்விரண்டின் திரிபெனவுங் கொள்க.

ஆசிரியப்பாவல்லாதவெல்லாம் வெண்பா வென்றமையால், ஏனைமூன்று ...லுந் துள்ளிய ஓசை இலக்கணக் கலியோசையன்றாயினும் ஒருவகையான் ...ா நெறித்தேயாகக் கொள்ளப்படும் என்பதாம்.

கலிப்பாப் பிறந்தது. பண்புற வென்றதனான் ஆசிரியமும் வெண்பாவு மியல்பெனவும் ஒழிந்தன[1] விகார மெனவுங்கொள்க. ஏனையென்றதனான் மூன்றுபாவினுந் துள்ளிய கலியோசையும் ஒருவகையான் வெண்பா நடைத்தேயாம், இலக்கணக்கலி யோசையன்றாயினுமென்பது.[2]

**ஆய்வுரை : 103**

இது மேற்கூறிய பாக்களைத்தொகைவகையால் உணர்த்து-கின்றது.

(இ-ள்) மேல் நால்வகையாக விரிந்த பாவினது பகுதியை உண்மைத் தன்மை நோக்கித் தொகுத்துரைப்பின் (அவை நான்கும்) ஆசிரியப்பா வெண்பா என இரண்டாயடங்கும் என்பர் ஆசிரியர் எ-று.

'பண்புற' என்றதனால், 'ஆசிரியப்பாவும் வெண்பாவும் இயல்பெனவும், ஒழிந்தன விகாரமெனவுங் கொள்க' என்பர் பேராசிரியர்.

**ஆய்வுரை : 104**

இது, நால்வகைப் பாக்களும் இரண்டாயடங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஆசிரியத்தின் நடையினையுடையதாய் அதன்கண் அடங்குவது வஞ்சிப்பா; வெண்பாவின் நடையினையுடையதாய் அதன்கண் அடங்குவது கலிப்பா என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

௧௫ வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே.

**இளம்பூரணம் :**

என்—எனின். வாழ்த்தியற் குரிய பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. 'ஒழிந்தன' என்றது, வஞ்சி, கலி என்னும் இரண்டு பாக்களையும்.
2. 'மூன்றுபாவினுந் துள்ளிய கலியோசையும் இலக்கணக் கலியோசை யன்றாயினும் ஒருவகையான் வெண்பா நடைத்தேயாம் என்பது' என இயைத்துப் பொருள் கொள்க.

(இ - ள்.) வாழ்த்தியலின்வகை நான்கு பாவிற்குமுரித்து என்றவாறு.[1]

வகையென்றது தேவரை வாழ்த்தலும் முனிவரை வாழ்த்தலும் ஏனையோரை வாழ்த்தலும்.[2] செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க. (கO௫)

**பேராசிரியம் :**

இது, மேற்கூறிய 'மும்முதற் பொருட்கண்' (தொல்-செய்-106) ஒரு சாரானவற்றை வாழ்த்துதல் என்பதோராறும் உண்மையின் அப்பகுதி நான்கு பாவிற்கும் உரித்தென்கின்றது.[3]

நால்வகைப்பட்டது பாவாகலின் அப்பாவினை நான்கென்றான்; வாழ்த்தியலென்னாது 'வகை' யென்றதனான் மேற்கூறிய மும்முதற்பொருளின் அறுவகையும் பெரும்பான்மை யெனப்படுமென்பதூஉம், அங்ஙனம் வாழ்த்துங்கால் தனக்குப் பயன்படுதலும் படர்க்கைப்பொருட்குப் பயன்படுதலுமென இருவகையான் வாழ்த்துமென்பதூஉம், இனி முன்னிலையாக வாழ்த்துதலும் படர்க்கையாக வாழ்த்துதலும் என இருவகைப் படுமென்பதூஉம் எல்லாங் கொள்க.[4] அங்ஙனம் வாழ்த்தப்படும்

---

1. நாற்பாக்கும் வாழ்த்தியல்வகை உரித்து என இயையும்-நாற்பா என்னும் பெயருடன் குவ்வுருபு புணர்வழி 'நாற்பாக்கு' எனச் சாரியையின்றிப் புணர்ந்தது. 'நாற்பாக்கும்' என்புழி உம்மை முற்றும்மை. நான்கு பாவினுக்கும் என்பது பொருள். நான்குபா வாவன ஆசிரியம் வஞ்சி வெண்பா கலியெனமுற்கூறப்பட்டன.

2. வாழ்த்தியல் என்ற அளவிலமையாது வாழ்த்தியல் வகை யென்றதனால் தேவரை வாழ்த்துதல், முனிவரை வாழ்த்துதல் ஏனையோராகிய மக்களை வாழ்த்துதல் என வாழ்த்தியலை மூவகையாகப் பகுத்துரைத்தார் இளம்பூரணர்.

3. அறம் பொருள் இன்பம் எனப்படும் மும்முதற்கண், ஒருசார்ப்பொருள்களை வாழ்த்துதல் என்ற நெறியும் அடங்கும். அங்ஙனம் வரும் வாழ்த்தியற் பொருள் நால்வகைப்பாவிற்கும் ஒப்பவுரியதாகும் என இச்சூத்திரம் கூறுகின்றது.

4. "வாழ்த்தியலென்னாது வகையென்றதனான், அங்ஙனம் வாழ்த்துங்கால் தனக்குப் பயன்படுதலும் படர்க்கைப் பொருட்கு (உலகிற்குப்) பயன்படுதலுமென இருவகையான் வாழ்த்துமென்பதூஉம், இனி முன்னிலையாக வாழ்த்துதலும் படர்க்கையாக வாழ்த்துதலும் என இருவகைப்படுமென்பதூஉம் எல்லாங்கொள்க" என இயைத்துப் பொருள் கொள்க. இவ்வுரைப்பகுதியினிடையே புள்ளியிட்ட இடத்தில் "மேற்கூறிய மும்முதற்பொருளின் அறுவகையும் பெரும்பான்மையெனப்படுமென்பதூஉம்" என்ற உரைப்பகுதி காணப்படுகின்றது. இங்கு 'மும்முதற்பொருளின் அறுவகையும் பெரும்பான்மை'

பொருளாவன: கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மழையும் நாடுமென்பன. அவற்றுட் கடவுளை வாழ்த்துஞ் செய்யுள் கடவுள்வாழ்த்தெனப்படும். ஒழிந்த பொருள்களை வாழ்த்திய செய்யுள் அறுவகைவாழ்த்தெனப்படுமென்பது.

"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைஞரல் பௌவ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே"

(நற்றிணை-கடவுள் வாழ்த்து)

என்பது தெய்வவாழ்த்து.

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பி னஃதே மையில் நுண்ஞாண்
நுதல திமையா நாட்டம் இகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலும் உண்டத் தோலா தோற்கே
ஊர்ந்தது ஏறே சேர்ந்தோள் உமையே
செவ்வான் அன்ன மேனி அவ்வான்
இலங்குபிறை அன்ன விலங்குவால் வைஎயிற்று
எரியகைந் தன்ன அவிர்ந்துவிளங்கு புரிசடை

---

முன் பக்கத் தொடர்ச்சி

என்றது அறமுதலாகிய மூன்று பொருள்களின் நிலையும் நிலையின்மையுமாகிய அறுவகைப் பொருளாகக்கொண்டு பாடப்பெறுதலே பெரும்பான்மையென்பதும், வாழ்த்தியல்வகை சிறுபான்மையென்பதூஉம்' இத்தொடரின் பொருளாகக் கொள்ளவேண்டியுளது. இனி, 'மும்முதற்பொருளின் அறுவகை, என்றது, அறம்பொருள் இன்பம் என்ற பொருளின்கண்வரும் அறுமுறைவாழ்த்தினை யெனக் கொள்வர் சி. கணேசஐயர் அது வாழ்த்தியற்பகுதிபற்றிய பின்வரும் உரைத்தொடர்களால் விரித்துரைக்கப்படுதலானும் செய்யுட்குரிய பொருள் வகைகளுள் பெரும்பான்மையும் இடம் பெறுவன மும்முதற்பொருளின் நிலையும் நிலையின்மையுமாகிய அறுவகைப்பொருட்பகுதிகளேயென்பது பேராசிரியர் கருத்தாதலானும் கடவுள் வாழ்த்து அறுவகை வாழ்த்தினுள் அடங்காமையின் அதனை அறுவகைவாழ்த்தின் வேறாகப் பேராசிரியர் பிரித்துரைத்தலானும் மும்முதற்பொருளின் அறுவகையென்றது அறுவகைவாழ்த்து ஆகாமையறிக.

முதிராத் திங்களொடு சுடரும் சென்னி
மூவா அமரரும் முனிவரும் பிறரும்
யாவரும் அறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமான் உரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே''
(அகம், கடவுள் வாழ்த்து)

என்பதும் அது. முன்னையது தனக்குப் பயன்பட வாழ்த்தியது; பின்னையது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது. பிற பாவினும் மருட்பாவினும் பிற பொருட்கண் வந்த வாழ்த்து வந்துழிக் கண்டுகொள்க.

வாழ்த்தென்பது அறமாகலின் அறமுதலாகிய மும்முதற் பொருள்கள் (தொல்-செய்-106) என்புழி அடங்கும்பிற, இச் சூத்திரம் மிகையாலெனின், அற்றன்று; புறநிலைவாழ்த்து முதலியன உள; அவை நீக்குதற்கு இது விதந்தோதினானென்பது. 'வாழ்த்தியல்' என்றதனான், இயற்கை வாழ்த்தெனப்படுவன இவையெனவும், இனிவரும் புறநிலைவாழ்த்து முதலியன இயற்கைவாழ்த்தெனப்படா; ஒருவகையான் வாழ்த்தின்பாற் சார்த்தி யுணரப்படுவதல்லதெனவுங் கொள்க.[1] (கOகூ)

**நச்சினார்க்கினியம் :**

இது முற்கூறிய மும்முதற்பொருட்கண் அறமானது வாழ்த்துதற் பொருட்டுமாய் நாற்பாவிற்கு முரித்தாமென்கின்றது.

(இ-ள்.) வாழ்த்தியலின் கூறுபாடு நான்குபாவிற்கு முரித்து. எ-று.

---

1. ஒருவரைவாழ்த்துதல் என்பது, அறத்தின் பாற்பட்டசெயலாதலின் அஃது அறமெனவேயடங்கும். வாழ்த்தியல் என வேறாகப்பிரித்துரைத்தல் மிகையென்னும் குற்றத்தின்படுமன்றோ என்பது இங்கு எழும் தடையாகும். இங்கு 'வாழ்த்தியல் வகை' என்றது, அறமுதலிய மும்முதற்பொருளின் வேறென்ற கருத்திற் கூறப்பட்டதன்று. இயல்பாக வாழ்த்தும் இவ்வாழ்த்தின் வேறாகச் செயற்கைப்படுத்தி வாழ்த்தும் புறநிலைவாழ்த்து முதலியன உள. அவை ஒருவகையான் வாழ்த்தின்பாற் சார்த்தி யுரைக்கப்படுவதல்லது இயற்கைவாழ்த்தெனப்படா; இயற்கை வாழ்த்தாவன இவையே என்பது அறிவுறுத்துவார் 'வாழ்த்தியல்' என இங்கு வேறுபிரித்து எடுத்துக் கூறினார் என்பது மேற்குறித்த தடையினையகற்றிப் பேராசிரியர் தரும் விடையாகும்.

வகை யென்றதனாற் கடவுளரும், முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும், மழையும், நாடுமென்னும் அறுமுறை வாழ்த்து வருதலே பெரும் பான்மைய என்பதூஉம், அங்ஙனம் வாழ்த்துங்காற் றனக்குப் பயன்படுதலும் படர்க்கைப் பொருட்குப் பயன்படுதலுமென இருவகையான்வரும் வாழ்த்து மென்பதூஉம், முன்னிலையாகவும் படர்க்கையாகவும் வரும் வாழ்த்து மென்பதூஉங் கொள்க.

உ-ம் "மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே"

(நற்றிணைவாழ்த்து)

இது தனக்குப் பயன்பட வாழ்த்தியது.

'நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகமு முகிழ்த்தன முறையே'

(ஐங்குறுநூற்று வாழ்த்து)

இஃது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது.

"முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா
பொற்பனை வெள்ளையை யுள்ளா ரெழிலின்னா
சக்கரத் தானை மறப்பின்னா வாங்கின்னா
சத்தியான் றாடொழா தார்க்கு" (இன்னா நாற்பது வாழ்த்து)

"வானிடு வில்லின் ... ... முடிகவென்று" (நாலடி வாழ்த்து)

"ஆறறியந் தணர்க்கு" (கலித்தொகை வாழ்த்து)

இவற்றின் வேறுபாடுமுணர்க. இவற்றைக் கடவுள் வாழ்த்தென்று பெயர் கூறப்படும்.

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து (திருக்குறள்-உச)

இது முனிவரை வாழ்த்தியது.

"ஆயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே"

இஃது அரசரை வாழ்த்தியது.

"விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது" (திருக்குறள் - கசா)

இது மழையை வாழ்த்தியது. ஒழிந்தன வந்துழிக்காண்க. இவை அறுமுறை வாழ்த்தெனப் பெயர் கூறப்படும். இயலென்றதனான் இயற்கையாய வாழ்த்திவையெனவும், மேல்வரும் புறநிலை-வாழ்த்து முதலியன இயற்கையன்றி வாழ்த்தின்பாற் சார்த்தப்-படுவன எனவுங்கொள்க. வஞ்சிக்குதாரணம் வந்துழிக்காண்க.[1] 'அங்கண்வானத் தமரரரசர்' என்பது பின்னுள்ளோர் கூறிய வாழ்த்தியல்.

**ஆய்வுரை :**

இது, வாழ்த்துதற் பொருண்மைக்குரிய பாவாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) வாழ்த்தியல் வகை மேற்கூறிய நான்கு பாவிற்கும் உரியதாகும் எ—று.

'வாழ்த்தியல் வகை' என்றது, தேவரை வாழ்த்துதலும் முனிவரை வாழ்த்துதலும் ஏனையோரை வாழ்த்துதலும் ஆகிய பாகுபாட்டினைக் குறிக்கும் என்றார் இளம்பூரணர். "வாழ்த்துங்கால் தனக்குப் பயன்படுதலும் படர்க்கைப் பொருட்குப் பயன்படுதலும் என இருவகையான் வாழ்த்தும் என்பதூஉம், இனி முன்னிலையாக வாழ்த்துதலும் படர்க்கையாக வாழ்த்து-தலும் என இருவகைப்படூஉ மென்பதூஉம் எல்லாங்கொள்க. அங்ஙனம் வாழ்த்தப்படும் பொருளாவன: கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் நாடும் மழையும் என்பன. அவற்றுள் கடவுளை வாழ்த்துஞ் செய்யுள் கடவுள் வாழ்த்தெனப்படும். ஒழிந்த பொருள்களை வாழ்த்திய செய்யுள் அறுவகை வாழ்த்தெனப்படும் என்பது. வாழ்த்தியல் என்றத-னான், இயற்கை வாழ்த்து எனப்படுவன (மேற்கூறப்பட்ட) இவையெனவும், இனிவரும் புறநிலை வாழ்த்து முதலிய ஒரு

1. வாழ்த்தியற் பொருளில் வஞ்சிப்பா வந்தமைக்குப் பண்டை இலக்கியங்-களில் உதாரணம் கிடைக்காமையால், வஞ்சிக்கு உதாரணம் வந்துழிக் காண்க என்றார். 'அங்கண் வானத்' என்பது பிற்காலத்தவர் பாடிய வஞ்சிப்பா.

வகையான் வாழ்த்தின்பாற் சார்த்தியுணரப்படுவதல்லது இயற்கை வாழ்த்தெனப்படா' எனவும் கூறுவர் பேராசிரியர்.

எகூ வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.

**இளம்பூரணம் :**

என்—எனின். இது புறநிலை வாழ்த்திற்குரிய பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வழிபடு தெய்வம் நின்னைப் புறங்காப்பக் குற்றந் தீர்ந்த செல்வத்தொடு வழிவழியாகச் சிறந்து பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்துக் கலிப்பாவகையினும் வஞ்சிப்பா வகையினும் வரப்பெறாது என்றவாறு[1]

எனவே வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவையிரண்டும் புணர்ந்த மருட்பாவினும் வரப்பெறும் என்றவாறாம்.[2] (கOகூ)

**பேராசிரியம் :**

இது, நாற்பாக்கும் உரித்தன்றி வரையறைப்படும் வாழ்த்து வேறுபாடு உணர்த்துகின்றது.

(இ-ள்.) நினக்குத் தொழுகுலமாகிய தெய்வம் நின்னைப் புறம் காப்ப, இல்லறம் முதலிய செல்வத்தாற் பழியின்றிப் பூத்த செல்வமொடு புதல்வர்ப்பயந்து, புதல்வரும் இப்பெற்றிய ராகி எல்லீரும் நீடுவாழ்வீராமினென்று தெய்வத்தைப் புற நிறுத்தி வாழ்த்துவது புறநிலைவாழ்த்து. (அங்ஙனம் வாழ்த்திய அச்-செய்யுள் கலிப்பா உறுப்பாகவும் வஞ்சிப்பாவினும் வருதலில்லை) (எ-று).*

---

1. தெய்வம் நின்னைப் புறங்காப்ப நீவிர் குற்றந்தீர்ந்த எல்லாச் செல்வங்களும் பெற்றுச் சுற்றத்துடன் வழிவழி சிறந்து நெடுங்காலம் வாழ்மின் எனத் தெய்வத்தைப் பாதுகாவலாகப் புறத்தே நிறுத்தி வாழ்த்துதலின் இது புறநிலைவாழ்த்து என்னும் பெயர்த்தாயிற்று.

2. நால்வகைப்பாக்களுள் கலிநிலைவகையும் வஞ்சியும் ஆகியவிரண்டும் புறநிலை வாழ்த்துக்கு வரப் பெறா எனவே இவையொழிந்த வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவையிரண்டாலும் இயன்ற மருட்பாவினும் புறநிலை வாழ்த்து வரப்பெறும் என்றாராயிற்று.

*. இவ்வுரைத்தொடர் உரை முற்றுப்பெறுதல்வேண்டிப் பின்னுள்ள உரைப்பகுதியினின்றும் சேர்க்கப்பெற்றது.

தெய்வத்தைப் புறநிறுத்தி வாழ்த்துதலிற் புறநிலைவாழ்த்தாயிற்று.

"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப"

என்றோதினமையின் வழிபடுதெய்வம் உள்வழியே புறநிலை வாழ்த்தெனப்படுவதென்பது. எடுத்துக்கொண்ட காரியத்துக்கு ஏதுவாகிய கடவுள் நிற்ப, அக்கடவுளாற் பயன்பெற நின்றானொரு சாத்தனை முன்னிலையாக்கி அவற்குக் காரியங் கூறுதலின் இது புறநிலையாயிற்று: அங்ஙனம் வாழ்த்திய செய்யுள் கலிப்பாவுறுப் பாகியும் வஞ்சிப்பாவினும் வரப்பெறாதென்றான் என்பது; 'கலிநிலை வகை' யென்றதனாற் கலிவகைத்தாகிய பரிபாடற்கும் இஃதொக்கும்.[1] இனிக் கடவுளாற் காக்கப்பட்ட சாத்தனை வாழ்த்தப்படானெனவுஞ் சொல்லுப; அற்றன்று, கடவுள் வாழ்த்தென்றால் அவ்வாறு பொருள் படாமையி னென்பது.[2] இவற்றுக்குச் செய்யுள்.

"இமையா முக்க ணிலங்குசுடர் பயந்த
வுமையொரு பாகத் தொருவன் காப்பநின்
பல்கிளைச் சுற்றமொடு நல்லிதி னந்தி
நீபல வாழிய வாய்வாட் சென்னிநின்
னொருகுடை வரைப்பி னீழல் பெற்றுக்
கிடந்த வெழுகட னாப்ப
ணகலிரு விசும்பின் மீனினும் பலவே"

எனவும்,

"திங்க ளிளங்கதிர்போற் றென்திங்க ளூர்த்தேவன்
மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து — திங்கட்

1. புறநிலைவாழ்த்து கலிநிலைவகையினும் வஞ்சிப்பாவினும் வாராது ...வே கலிவகைத்தாகிய பரிபாடற்கும் வாராதென்பது தானே பெறப்படும்.

... 'நின்னால் வழிபடப்பெறுந் தெய்வம் நின்னைப் புறங்காப்ப நீ சுற்றத் ...ன் பொலிவு பெற்றுவாழ்வீராக' என வாழ்த்தும் புறநிலைவாழ்த்துப் ...ற்குரியோன், கடவுளாற் பயன்பெறநின்ற சாத்தனே. முன்னமே கடவுளாற் ...பட்ட சாத்தன் புறநிலை வாழ்த்தால் வாழ்த்தப்படான் என்பார் சிலர். ...ரார் 'கடவுள் வாழ்த்து' என்பதற்குக் 'கடவுளால் வாழ்த்தப்பெறுதல்' ...பொருள் கொண்டனர்போலும். தன்னால் வாழ்த்துப்பெறுவோனைக் ...ர்காக்க எனக்கடவுளை முன்னிறுத்தி வாழ்த்தும் வாழ்த்தே புறநிலை ...தாதலின் கடவுளாற்காக்கப்பட்டோனையும் வழிபடு கடவுள் நிற்புறங்... வழிவழிவாழ்க என வாழ்த்துதல் தவறாகாது என்பதாம்.

கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப
நிலைபெற்று வாழியரோ நீ''

எனவும் வரும். இனி,

கலிப்பாவினுள் வருங்காற் கடவுண்முன்னிலையாக வரும்; என்னை?

'தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே'
(தொல்-செய். 138)

என்றமையின்.[1] அது 'வாழ்த்தியல் வகை' யென மேலே யடங்கிற்று. வஞ்சிப்பாவிற்கும் அவ்வாறு கொள்ளப்படும்.

இச் சூத்திரம் பாவென்னும் உறுப்பிற்குப் பொருள்வரை யறுத்தது. மற்று 'நிற்புறங் காப்ப' வென ஒருமைகூறிப் 'பொலிமின்' எனப் பன்மைகூறிய தென்னையெனின்,

''வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப'' (ப்பொலிமின்)

என்றமையிற் புதல்வரோடுங் கூட்டிப் பாட அமையுமென்றற்கு அவ்வாறு கூறினானென்பது.[2] (௧௧௦)

**நச்சினார்க்கினியம் :-**

இது, நான்கு பாவிற்கு முரித்தேயன்றி வரையறைப்படும் வாழ்த்து வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்.) வழி ... ... ... காப்ப எ-து, நீ வழிபடும் நின்குல-தெய்வம் நின்னைப் புறத்தேநின்று காப்ப. பழி ... ... சிறந்து. எ-து, இல்லறத்தாற் பொலிந்த செல்வத்தோடே நீ பெறும் புதல்வரும் அவர் பெறும் புதல்வருஞ் சிறப்பெய்தி. பொலி ......... வாழ்த்தே. எ-து, எல்லீரும் நீடு வாழ்வீராமினென்று தெய்வத்-தைப் புறத்தே நிறுத்தி வாழ்த்தும் வாழ்த்து, கலி ...... பெறாஅ. எ-து, கலிப்பாவுறுப்பாகவும் வஞ்சிப்பா வுறுப்பாகவும் பாடப் பெறா. எ-று.

---

1. கலிப்பாவினுள் புறநிலை வாழ்த்து வாராது எனவே கடவுள் முன்னிலையாக வாழ்த்தியற்பகுதி வரும் என்பதாம். அங்ஙனம் வருதல் 'வாழ்த்தியல்வகை' என மேலே கூறியதனுள் அடங்கும்.

2. 'நிற்புறங்காப்ப' என வாழ்த்துப்பெறுவோனை ஒருமையிற்கூறிப் 'பொலிமின்' எனப் பன்மை கூறியது, அவனைப் புதல்வர் முதலிய சுற்றத்தா-ரோடுங் கூட்டி வாழ்த்துதலிற் பொருந்தும் என அறிவுறுத்தற் பொருட்டாம்.

எடுத்துக்கொண்ட காரியத்துக்கு ஏதுவாகிய தெய்வத்தினைப் படர்க்கையாக்கி அத்தெய்வத்தாற் பயன்பெறாநின்றா னொருவனை முன்னிலையாக்கிக் கூறலிற் புறநிலையாயிற்று.[1] வகையென்றதனாற் கலியின் கூறாகிய பரிபாடற்கும் ஒக்கும்.

உ-ம். 'அறிதுயி லரவணை யமர்ந்தோன் காப்ப
வருட்கடம் பூண்ட வகலாச் செல்வமொடு
நீயுநின் புதல்வருஞ் சிறந்து
வாழிய பெரும பூழியர் கோவே'

"திங்க ளிளங்கதிர்போற் றேந்திங்க ளூர்த்தேவன்
மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து - திங்கட்
கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப
நிலைபெற்று வாழியரோ நீ"

எனவரும் இது பாவென்னுமுறுப்பிற்குப் பொருள் வரையறுத்தது. நின்னென ஒருமைகூறிப் பொலிமினெனப் பன்மை கூறியது, புதல்வரோடு கூடப் பாடுதற்கமையு மென்றற்கு.

**ஆய்வுரை :**

இது, புறநிலை வாழ்த்துக்குரிய பாவாமாறு கூறுகின்றது

(இ-ள்) 'நின்னால் வழிபடப்பெறுந் தெய்வம் நின்னைப் புறங்காப்பக் குற்றந் தீர்ந்த செல்வத்தோடு வழிவழியாகச் சிறந்து பொலிமின்' என வாழ்த்தும் புறநிலை வாழ்த்து, கலிப்பா வகையினும் வஞ்சிப்பாவினும் வருதல் இல்லை எ-று.

தெய்வத்தைப் புறம் நிறுத்தி வாழ்த்துதலின் புறநிலை வாழ்த்து என்னும் பெயர்த்தாயிற்று தன்னால் வாழ்த்தப்பெறும் தலைவனைப் புதல்வரொடும் சுற்றத்தார் நண்பர் முதலியவர்களோடுங் கூட்டி வாழ்த்துதல் வாழ்த்தியல் மரபு என்றற்கு, 'நின்புறங்காப்ப' என ஒருமை கூறிப் 'பொலிமின்' எனப் பன்மை கூறினார். கலியும் வஞ்சியும் பெறா எனவே வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவ்விரண்டும் விரவிய மருட்பாவினும் இவ் வாழ்த்து வரும் என்பதாம்.

---

1. புறநிலைவாழ்த்து என்பதற்கு நச்சினார்க்கினியர் தந்த விளக்கம். இது பேராசிரியரது உரையைத் தழுவியெழுதப்பெற்றதாகும்.

ளஎ வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
செவியறி வுறூஉ என அவையும் அன்ன.[1]

**இளம்பூரணம்:**

என் எனின். ஒருசார் பொருட்குரிய மரபுணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்.) வாயுறைவாழ்த்தும் அவையடக்கியலும் செவியறிவுறுத்தற்பொருளுங் கலியினும் வஞ்சியினும் வரப்பெறா என்றவாறு.

எனவே, முன்னையவொப்ப ஏனையிரண்டினும் வரப்பெறும் என்றவாறாம். (கூOஎ)

**பேராசிரியம்:**

இதுவும் பாக்களை (மூன்றாக) வரையறுக்கின்றது.[2]

(இ-ள்) வாயுறை வாழ்த்தும், அவையடக்கியலும், செவியறிவுறூஉவும் என மூன்றும் மேலைப் புறநிலைவாழ்த்துப்போல் வாழ்த்துப்பகுதியவாகலுங் கலிநிலைவகையும் வஞ்சியும் பெறாமையு முடையவென மாட்டெறிந்தவாறு. அவையாமாறு முன்னர்ச் சொல்லுதும்.

வாய்-வாய்மொழி; உறை-மருந்து; வாயுறை யென்பது, சொன்மருந்தெனப் பண்புத்தொகையாம்: இனி வாய்க்கட்டோன்றிய மருந்தென வேற்றுமைத் தொகையுமாம்; மருந்துபோறலின் மருந்தாயிற்று அவன் சிறப்புக்கூறி வழுத்தி ஒரு சாத்தற்குப் பயன்படச் சொல்லினமையின் வாயுறைவாழ்த்தென்றானென்பது. மற்று, 'நிற்புறங் காப்ப' வெனப் புறநிலை வாழ்த்திற்கு

---

1. 'செவியறிவு றூஉ வென்றவைய்யும் அன்ன' என்பது பேராசிரியருரையிலும் நச்சினார்க்கினியருரையிலும் கண்ட பாடம்.

அன்ன-அத்தன்மைய; என்றது, முற்குறித்த புறநிலைவாழ்த்துப்போல வாயுறை வாழ்த்து அவையடக்கியல் செவியறிவுறூஉ என்னும் இவையும் கலிப்பாவினும் வஞ்சிப்பாவினும் வரப்பெறா; வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் வரப்பெறும் என்றவாறு.

2. 'அவையடக்கியல்' என்றதொடர், 'அவையையடைக்குதல்' என விரிதலின் இரண்டாம் வேற்றுமைத் தொகையாயிற்று. அடக்கியல் என்றது அடக்கு இயல் என நின்று, அடக்கிய இயல், அடக்குகின்ற இயல், அடக்கும் இயல் என முக்காலத்திற்கும் ஒப்ப விரிதலின் வினைத்தொகையாயிற்று என்பர் பேராசிரியர்.

இடம் நியமித்தாங்கு இதற்கும் இடநியமங் கூறாரோவெனின், அது, மாட்டேற்றானே அடங்குமென்பது.

அவையடக்கியல்—அவையை வாழ்த்துதல், அவையடக்குத லென்பது இரண்டாம் வேற்றுமைத்தொகை; அடக்கியலென்பது, வினைத்தொகை; தானடங்குதலாயின் அடங்கியலெனல் வேண்டும். அஃதாவது, அவையத்தாரடங்குமாற்றால் இ (னிய) (ளிவர) ச்சொல்லி அவரைப் புகழ்தல்.

செவியறிவுறூஉ - ஒரு சாத்தற்குச்[1] செவியறிவுபடுத்து அவனை வாழ்த்துதல்; என அவையும் அன்ன - என்ற இம்மூன் றும் அத்தன்மையவேயாம் என்றவாறு.

தெய்வத்தொடுபட்டமையிற் புறநிலை வாழ்த்து முற்கூறி இவை பிற்கூறினான். இவற்றுள் வாயுறை வாழ்த்து முன்னிலைக் குரிமையின் அதன்பின் வைத்தான்; முன்னிலைக்கே உரித்தாயினுஞ் செவியறிவுறூஉவினை ஈற்றுக்கண் வைத்தான், பயம்பெறுவானையே நீ இன்ன குணத்தையாவாயென்று புகழ்பட வாழ்த்திச் சொல்லப்படுதல் வேறுபாடுடைமையி-னென்பது.[2] இங்ஙனம் வரையறுக்கின்றது நால்வகைப்பாவாகிய உறுப்பினை நோக்கியாகலின், அவற்றுள் இவ்வுறுப்புடைய[3] நால்வகைச் செய்யுட்கும்[4] இவ்வுறுப்பினதிலக்கணம் எய்து-வித்துக் கொள்ளப்படும்; கொள்ளவே ஆசிரியப்பாட்டும் வெண்-பாட்டும் மருட்பாவும் எல்லா வாழ்த்திற்கும் உரியவென்பதூஉம் கலிப்பாட்டும் வஞ்சிப்பாட்டும் புறநிலை முதலிய நால்வகைப் பொருட்கும் உரிய வல்லவென்பதூஉம் பெற்றாம்; என்னை?

---

1. 'ஒருசாத்தற்கு' என்பது, எவனாயினும் ஒருவனுக்கு, என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றது.

2. பயம் பெறுவானையே நீ இன்ன குணத்தையாவாயென்று புகழ்பட வாழ்த்திச் சொல்லப்படுதல் வேறுபாடுடைமையின் முன்னிலைக்கேயுரித்தாயினும் செவியறிவுறூஉவினை ஈற்றுக்கண் வைத்தானென்பது.

3. இவ்வுறுப்புடைய - ஆசிரியப்பா, வெண்பா என்னும் பாவுறுப்புடைய.

4. நால்வகைச்செய்யுள் என்றது, புறநிலை, வாயுறை, அவையடக்கியல், செவியறிவுறூஉ என்னும் வாழ்த்தியல்வகை நான்கும் பற்றியமைந்த செய்யுட்களை.

"மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்றே"
(தொல்-செய் 85)

என்றமையின்.[1] (கககக)

**நச்சினார்க்கினியம் :**

இதுவும் பாக்களைப் பொருண்மேல் வரையறுக்கின்றது.

(இ-ள்) வாயுறைவாழ்த்தும் அவையடக்கியலுஞ் செவியறிவுறூஉவு மென்னும் மூன்றும் மேலைப் புறநிலைவாழ்த்துப்போல வாழ்த்துப்பகுதியவாகலுங் கலிநிலைவகையும் வஞ்சியும் பெறாமையுமுடைய. எ-று.

அவையாமாறு மேற்கூறுதும். வாயுறையென்றது வாய்மை மொழியாகிய மருந்தெனப் பண்புத்தொகை. மருந்துபோறலின் மருந்தென்றார் ஒருவன் சிறப்புக்கூறி வழுத்தி அவற்குப் பயன்படக்கூறலின் வாயுறை வாழ்த்தென்றார். மாட்டேற்றானே நிற்புறங்காப்ப என இடநியமித்தாற்போல இடநியமமுங் கொள்க.

அவையடக்கியலென்பது அவையடக்கியவியலென விரியும்; அஃது அவரடங்கு மாற்றாற் றன்னையிழித்துக்கூறி அவரைப் புகழ்தல். அவைக்கண் தானடங்குதலாயின், அவையடங்கிய லென்பது பாடமாதல் வேண்டும்.

செவியறிவுறூஉவாவது ஒருவர்க்குக் கேள்வியறிவு படுத்து அவரை வாழ்த்துதல்; (என்று அவையும் அன்ன) என்று கூறப்பட்டவையும் ஆசிரியத்தானும் வெண்பாவானுங் கூறப்பெறும். எ-று.

எனவே, இந்நான்கு பொருண்மேலும் ஆசிரியமும் வெண்பாவும் வருமென்பதூஉம் ஒழிந்தன வாரா வென்பதூஉம் மருட்பா அவ்விரண்டினாலும் வருதலின் இப்பொருண்மேல் வருமென்பதூஉம் பெற்றாம். தெய்வத்தோடு பட்டமையிற் புறநிலைமுற்கூறி, முன்னிலைக்குரிமையின் வாயுறை அதன்பின் கூறி, வரையறையின்மையின் அதன்பின் அவையடக்கியல்கூறி,

---

1. ஆசிரியப்பாவும், வெண்பாவும், இவ்விருதன்மையுடைய மருட்பாவும் எல்லாவாழ்த்திற்கும் உரியன என்பதும், கலிப்பாவும் வஞ்சிப்பாவும் நால்வகை வாழ்த்திற்கும் உரியவல்ல என்பதும் இவ்விருசூத்திரத்தாலும் பெறப்படும்.

முன்னிலைக்கண் வருமேனும் இன்னகுணத்தையாவாயெனப் புகழ்பட வாழ்த்திப் பிற்கூறுதல் வேறுபாடுடைமையின் அதன் பின் செவியறிவுறூஉக்கூறி இம்முறையே வைத்தார். இங்ஙனங்கூறிய பாவுறுப்பினை யுடைய நால்வகைச் செய்யுட்கும் இவ்வுறுப்பினதிலக்கண மெய்துவிக்க.[1]

**ஆய்வுரை :**

இஃது ஒருசார் பொருட் குரியதோர் மரபு கூறுகின்றது.

(இ-ள்) வாயுறை வாழ்த்தும் அவையடக்கியலும் செவியறிவுறுத்தற் பொருளும் கலிப்பாவிலும் வஞ்சிப்பாவிலும் வரப்பெறா எ-று.

ளஅ வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே.

**இளம்பூரணம் :**

என் — எனின். வாயுறைவாழ்த்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வாயுறை வாழ்த்தை விளங்க ஆராயின் வேம்பினையுங் கடுவினையும் போல வெஞ்சொ லடக்காது பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாவற் கிளவியானே மெய்யறிவித்தல் என்றவாறு.[2]

---

1. இவ்வுறுப்பினது இலக்கணமாவது, பாவாகிய இவ்வுறுப்பிற்குக் கூறப்பட்ட இலக்கணம். என்றது, ஆசிரியப்பாவும் வெண்பாவும் மருட்பாவும் எல்லா வாழ்த்திற்கும் உரியவாதலும் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் புறநிலை முதலிய நால்வகைப் பொருட்கும் உரியவாதலும் ஆகும்.

2. வேம்புங்கடுவும்போல வெஞ்சொல் என்றது, வேம்பினையுங் கடுக். காயினையும் போன்று கேட்குங்கால் இன்னாததாய்க், கேட்டொழுகியபின் நலம்விளைக்கும்படி இடித்துரைத்தற்குரிய கடுஞ்சொல்லினை. வேம்பு கசப்புச் சுவையுடையது. கடு-கடுக்காய்; துவர்ப்புச் சுவையுடையது. தாங்குதல்-தடுத்தல்; என்றது, வெளிப்படக்கூறாது அடக்குதலை. தாங்குதலின்றி எனவே அடக்காது வெளிப்படக்கூறி என்பதாம். வேம்புங் கடுக்காயும் உண்ணுங்கால் வெறுப்பினைவிளைப்பனவாயினும் உண்டபின் உடம்புக்கு நன்மைதருதல் போன்று, தீமையினைக் கடிந்துரைக்கும் வெஞ்சொல்லாகிய இடித்துரையும் குற்றங்களின் நீக்கிப் பிற்காலத்து நன்மையே பயக்குமாதலின் 'வேம்புங்கடுவும் போல வெஞ்சொல்' என அடைபுணர்த்தோதினார். இங்ஙனம் வெஞ்சொல் பிற்பயப்-

உதாரணம்

"இருங்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்[1]
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்க லுண்மை மாயமோ அன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே"

(புறம். ௩௬௩)

என்னும் பாட்டு. (௧0அ)

**பேராசிரியம் :**

இது, முறையானே வாயுறைவாழ்த்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்பருவத்துக் கைத்துப் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்புங் கடுவும்போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்குங்

---

முன் பக்கத் தொடர்ச்சி

பனவாயினும் கேட்போர்க்கு இன்னாததாய் வெறுப்பினை விளைக்குமாதலின் அவ்வெறுப்புத்தோன்றாதவாறு அவர்கட்கு இனிமை பயக்கும் பாதுகாவற் சொல்லையும் உடன்கூட்டி மெய்யறிவித்து வாழ்த்துதலே வாயுறைவாழ்த்தாம் என்பார் 'ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்று' என்றார் தொல்காப்பியனார். வாயுறை என்பது வாய்மொழியாகிய மருந்து என விரியும். உறை-மருந்து.

1. 'இருங்கடற் றானையொடு பெருநிலங் கவைஇ' என்பது இளம்பூரணருரைப் பதிப்பிற் கண்ட பாடம்.

கிளப்பினான் மெய்யாக அறிவுறுத்துவது வாயுறை வாழ்த்தெனப் படும் (எ - று) [1]

'வாயுறை' யென்பது மருந்தாகலான் 'வேம்புங் கடுவும் போல' என்றானென்பது;[2] அதற்குச் செய்யுள் :

"இருங்கட லுடுத்த விப்பெருங்கண் மாநிலம்
... ... ... ... ... ... ... .. ... ... ... ...
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே"[3] (புறம்.363)

பிறவும் அன்ன. (கக உ)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையானே வாயுறை கூறுகின்றது.

(இ-ள்.) வேம்புங் ...சொல். எ—து, முற்பருவத்துக் கைத்துங் கடுத்தும் பிற்பருவத்துறுதிபயக்கும் வேம்புங் கடுவும்போல வெய்யசொல்லினை. 'தாங்குதல் இன்றி ... பயக்குமென்று' எ-து ஒருதடையின்றிப் பிற்பயக்குமெனக்கருதி. ஓம்படை ... தற்றே. எ—து, பாதுகாத்த சொல்லினானே மெய்யாக உறுத்துவது. வாயுறை வாழ்த்தே எ—து, வாயுறை வாழ்த்தாம். எ—று.[4]

உ-ம். "இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம்
... ... .. ... ... ... ... ... ...
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே"[5]
(புறம்-ஙசுங)

எனவரும்.

**ஆய்வுரை :**

இது, வாயுறை வாழ்த்து ஆமாறு கூறுகின்றது.

---

1. வேம்புங் கடுவும்போல வெஞ்சொல் முற்பருவத்திற் கசந்து பிற்பருவத்து உறுதிபயக்கும் என்றுகருதி அவற்றைத் தடுத்து அடக்காமல் பாதுகாக்குஞ்சொற்களால் மெய்ம்மையாக அறிவுறுத்துவது வாயுறை வாழ்த்தாகும்.

2. வாயுறை என்பது வாய்மொழியாகிய மருந்தாகலின் அதற்கு ஆசிரியர் 'வேம்புங்கடுவும் போல' என எடுத்துக்காட்டுத்தந்தார் என்பதாம்.

3. இப்பாடல் முழுவதும் இளம்பூரணர் உரையில் உள்ளது.

4. பேராசிரியர் உரையைத் தழுவியமைந்தது.

5. இப்பாடலை இளம்பூரணருரையிற்காண்க.

(இ ள்) உண்ணுங்கால் முன்னே கசப்புடையதாகியும் துவர்ப்புடையதாகியும் உண்டபின் உடலுக்கு உறுதி பயக்கும் இயல்பினவாகிய வேம்பினையும் கடுக்காயினையும் போல வெம்மையுடைய சொல்லினைத் தடை செய்தலின்றிக் கேட்டோர்க்குப் பிற்காலத்து நற்பயன் விளைக்குமெனக் கருதிப் பாதுகாத்துக் கூறுஞ் சொற்களால் உண்மைப் பொருளை அறிவுறுத்துவது வாயுறை வாழ்த்து எனப்படும் எ-று.

வேம்பு - வேப்பிலை. கடு - கடுக்காய். கூறக்கேட்குங் காலத்துக் கைப்புடையதாய்த் தோன்றிக் கேட்டு அதன்வழி ஒழுகுவார்க்கு உறுதிபயக்குஞ் சொல் 'வெஞ்சொல்' எனப்பட்டது. தாங்குதல் இன்றி - நாம் கூறுவானேன் என எண்ணிச் சொல்ல வேண்டிய அறிவுரையை அடக்கிக் கொள்ளுதல் இன்றி. வழி - பிற்காலத்தில். நனி பயக்கும் என்று - மிகவும் பயன்தரும் என்று கருதி. வாய் - வாய்மொழி. உறை - மருந்து. வாயுறை என்பது, சொல் மருந்து (சொல்லாகிய மருந்து) எனப் பண்புத் தொகை- யாகும். இனி, வாய்க்கண் தோன்றிய மருந்து என வேற்றுமைத் தொகையும் ஆகும். மருந்து போறலின் மருந்தாயிற்று.

௫௧ அவையடக் கியலே அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.

## இளம்பூரணம் :

என் – எனின். அவையடக்கியல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) அவையடக்கியலைக் குற்றமற ஆராயின் அறியாதன சொல்லினும் பாகுபடுத்துக் கோடல்வேண்டும் என எல்லா மாந்தர்க்குந் தாழ்ந்துகூறல் என்றவாறு[1].

உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க. (௧௦௧)

---

1. அரில் தபத் தெரிதல்-குற்றம் அற ஆராய்தல். வல்லா-(எடுத்துக்கொண்ட பொருளை உள்ளவாறு) உணர்த்தவல்ல ஆற்றல் இல்லாத சொற்கள். வகுத்தனர் கொள்ளுதலாவது, சொற்றொடர்களின் மாற்றம் நோக்காது சொல்வாரதுகருத்து நோக்கிப் பொருளை உள்ளவாறு பகுத்துணர்தல். அவையின்கண் உள்ளாரில் உயர்ந்தோர் ஒத்தோர் தாழ்ந்தோர் என்னும் வேறுபாடின்றி அவையிலுள்ளார் அனைவர்க்கும் தன் பணிவினைப் புலப்படுத்தலே அவையடக்கியலாம் என்பார், 'எல்லா' மாந்தர்க்கும் வழி மொழிந்தன்று' என்றார். வழிமொழிந்தன்று-வழி-

**பேராசிரியம்** :

இது, முறையானே அவையடக்கியலுணர்த்துகின்றது.

(இ - ள்) வல்லாதன சொல்லினும் அவற்றை ஆராய்ந்து கொண்மினென அவையகத்தாரெல்லார்க்கும் வழிபடு கிளவி சொல்லுதல் அவையடக்கு (எ - று).

'வல்லுத'லென்பது ஒன்று வல்லனாதல்; ஒருவன் வல்லன வற்றை 'வல்ல'வென்பவாகலான் வல்லாதனவற்றை 'வல்லா' வென்றானென்பது[1] அதற்குச் செய்யுள்;

"திரைத்த விரிக்கிற் றிரைப்பினா வாய்போ
லுரைத்த வுரைபோகக் கேட்டு - முரைத்த
பயன்றவா செய்வார் சிலரேதந் நெஞ்சத்
தியன்றவா செய்வார் பலர்"

இது, பூதத்தார் அவையடக்கு[2] 'அரில்தபத் தெரியின்' என்றதனானே யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடைய கொச்சகவொருபோகினும் அவையடக்கியல் சிறுபான்மை தொடர்நிலைக்கண் வருமெனக் கொள்க.[3] (௬௬௩)

---

முன் பக்கத் தொடர்ச்சி

மொழிந்தது. வழிமொழிதல்-பணிவினைப்புலப்படுத்தும் மொழியால் தாழ்ந்து கூறுதல். உயர்ந்தோர் ஒத்தோர், தாழ்ந்தோர் ஆகிய எத்திறத்தாரையும் தன்பணிமொழியாற் பிணித்துத் தான் கூறுவதனை விரும்பிக்கேட்கும்முறையில் அவையிலுள்ளார் அனைவரையும் தன்சொல்வழி அடக்கிக்கொள்ளும் முறையிற் கூறப்பெறுவதே அவையடக்கமெனப்படும் செய்யுள் வகை என்பது தெரித்து மொழிவார் அவை யடங்கியல் என்னாது 'அவையடக்கியல்' என்றார் தொல்காப்பியனார்.

1. வல்லுதல் என்பது ஒன்றிற்கற்றுவல்லமையுடையராதல். கற்றுவல்லன வற்றை 'வல்ல' என வழங்குவர். அங்ஙனம் வல்லன அல்லாதனவற்றை 'வல்லா' என எதிர்மறுத்துரைத்தார்.

2. பூதத்தார் என்றது, பூதத்தாழ்வாரைக்குறித்தது எனக்கொள்ளுதற்கும் இடமுண்டு.

3. அரில் தபத் தெரிதல்-பிணக்கற ஆராய்தல். அரில்தபத்தெரியின் என்றமையால் அவையடக்கியல் ஆசிரியத்தாலும் வெண்பாவாலும் வருதலேயன்றி சிறுபான்மை தொடர்நிலைச் செய்யுளாகிய காப்பியங்களில் கொச்சகவொருபோகாலும் வரும் எனக் கொண்டார் பேராசிரியர். சீவகசிந்தாமணிமுதலிய தொடர்நிலைச் செய்யுட்களில் அவையடக்கம் கொச்சகவொருபோகிற் பயின்றுள்ளமை காண்க.

**நச்சினார்க்கினியம்:**

இது முறையே அவையடக்கியல் கூறுகின்றது,

(இ-ள்.) அவை ... ... யின் எ-து, அவையடக்கியவியலைக் குற்றமற ஆராயின். வல்லா ... .. னென்று எ-து, வல்லாதவற்றைக் கூறினும் அவற்றை ஆராய்ந்து கொள்க என்று. எல்லாதன்று எ-து, எல்லார்க்கும் வழிபடு கிளவி கூறியதாம் எ-று.

வல்லுதல் என்பது ஒன்றுவல்லனாதல் ; அஃது ஒருவன் வல்லனவற்றை வல்ல என்பவாகலின், அதனெதிர்மறை 'வல்லா' என்றாயிற்று [1]

'திரைத்த விரிக்கிற் ... .. ... ... பலர்'

இது பூதத்தாரவையடக்கு.[2] அரிறப என்றதனாற் சிறுபான்மை யாப்பினும் பொருளினும் வேறுபட்ட கொச்சகத்தாற் கூறுந் தொடர்நிலைச் செய்யுட்கும், அவையடக்கியல் கொள்க அது

"கற்பா லுமிழ்ந்த மணியுங்கழு வாது விட்டா
னற்பா லழியு நகைவெண்மதி போனி றைந்த
சொற்பா லுமிழ்ந்த மறுவு மதியாற் கழூஉவிப்
பொற்பா விழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்"
(சீவக சிந்தாமணி-பாயிரம்)

எனவரும்.

**ஆய்வுரை :**

இஃது, அவையடக்கியல் ஆமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) அவையடக்கியல் என்பதனைக் குற்றமற ஆராயின் (யான்) கூறக்கருதியபொருளை விளங்க அறிவிக்குந் திறமில்லாத சொற்களைக் கூறினாலும் அவற்றை வகைப்படுத்து ஏற்றுக் கொள்வீராக' என இவ்வாறு அவையில் உள்ள எல்லா மாந்தர்க்கும் பணிவுதோன்றத் தாழ்ந்து கூறுதல் எ-று.

அவையடக்கியல் அவையினரை வாழ்த்துதல். அவையை அடக்குதல் என இரண்டாம் வேற்றுமை விரிக்க. 'அவையத்தார் அடங்குமாற்றால் அவரைப் புகழ்தல்' என்பர் பேராசிரியர். தான்

---

1. 'வல்லா' என்றது, தாம் எண்ணியவற்றைப் புலப்படுத்தும் ஆற்றல் வன்மையில்லாத சொற்களை.

2. இதனைப் பேராசிரியர் உரையிற்காண்க.

அடங்குதலாயின் அவையடங்கியல் எனல் வேண்டும் என்பர் நச்சினார்க்கினியர்.

ளம செவியுறை தானே,
பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே.

**இளம்பூரணம் :**

என்—எனின், செவியறிவுறூஉ வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) செவியுறையாவது பெரியோர் நடுவு வெகுடலின்றித் தாழ்ந்தொழுகுதல் கடன் எனச் செவியறிவுறுத்துதல் என்றவாறு.[1]

"அறிமின் அறநெறி, அஞ்சுமின் கூற்றம்,
பொறுமின் பிறர்கடுஞ்சொல், போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை, எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்"

(நாலடி. கள உ)

எனவரும்.

இத்துணையும் பாக்கட்குரிய பொருளுணர்த்தியது[2] (கக0)

**பேராசிரியம் :**

இஃது, இறுதி நின்ற செவியுறை யுணர்த்துகின்றது.

(இ-ள்.) செவியுறை-செவிமருந்து, அதுவும் ஒப்பினாகிய பெயர்; தானேயென நின்ற ஏகாரம் பிரிநிலை. பொங்குதலின்றி பெருக்கமின்றி;[3] (புரையோர் நாப்பண் அவிதல் கடன் எனச் செவியுறுத்தன்றே)- பெரியோர் நடுவண் அடங்கி வாழ்தல்

---

1. செவியுறை - செவிவாயிலாகத் தரப்படும் மருந்து. பொங்குதல் - வெகுளுதல். புரையோர் - உயர்ந்தோர். நாப்பண் - நடு. அவிதல் - அடங்கி-யொழுகுதல். செவியுறுத்தன்று - செவியறிவுறுத்தியது.

2. ளரு - ஆம் சூத்திரம் முதல் ளய - ஆம் சூத்திரம் முடிய இவ்வளவும் பாக்களில் இடம்பெறுதற்குரிய பொருள்களின் வகை உணர்த்தப்பெற்றது என்பதாம்.

3. பொங்குதல்-பெருக்கம்; என்றது, தான்பணியவேண்டுமிடத்துப் பணியாது தன்னுயர்வுபுலப்படத் தருக்கிநிற்றல்.

கடப்பாடெனச் சொல்லிச் செவிக்கணறிவுறுத்துவது செவியறிவுறூஉ (எ-று) [1]

அஃது அடங்கி வாழ்வார்க்குப் புகழாதலான் வாழ்த்தின் பாற்பட்டது[2] அதற்குச் செய்யுள் :

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்" (புறம் 6)

என்பதனுள்,

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
யிறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முதல்வ ரேந்துகை யெதிரே" (புறம் 6)

எனவும்,

"என்றும்,
இன்சொல் லெண்பதத்தை யாகுமதி பெரும"

எனவும், (புறம்.40)

"பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற" (குறள் 10: 5)

எனவும் வரும்.

இத்துணையும் பாவினது பெயரும் முறையும் எண்ணும் பொருட்குஉரியவற்றுக்கண் வரையறையுங் கூறியவாறு[3]. (௧௧௪)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையே செவியுறை கூறுகின்றது.

(இ-ள்.) செவிமருந்து போறலிற் செவியுறை யென்றார்.[4] பெருக்க மின்றிப் பெரியோர் நடுவண் அடங்கி வாழ்தல் கடப்-

---

1. புரையோர். உயர்ந்தோர். நாப்பண்-நடு. செவியுறுத்தன்று- செவியறிவுறுத்தியது.

2. செவியறிவுறுத்தவண்ணம் அடங்கியொழுகுவார் புகழுடன் வாழ்வராதலால் செவியறிவுறூஉ வாழ்த்தின்பாற்பட்டது.

3. இவ்வியல் 105 ஆம் சூத்திரத்திரம் முதலாக 114ஆம் சூத்திரம் இறுதியாக இதுவரையும் பாவென்னும் உறுப்புப்பற்றி அவற்றது பெயர், அவை நின்றமுறை, பாவின்தொகை, அவை பொருட்கு உரியவாம் நிலைக்கண் அமைந்தவரையறை ஆகியன கூறப்பட்டன என்பதாம்.

4. உறை-மருந்து. செவி வாயாக நுகருமருந்தாகலின் செவியுறையென்னும் பெயர்த்தாயிற்று.

பாடு எனக்கூறிச் செவிக்கு அறிவுறுத்துவது செவியறிவுறூஉ. எ-று.

தானே என்னும் ஏகாரம் பிரிநிலை ; அஃது அடங்கி வாழ்வார்க்குப் புகழாதலின் வாழ்த்தின்பாற் பட்டது. அது-

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்குந்
தெனாஅ துருகெழு ... ... ... ... ... ...
மன்னுக பெரும நீ நிலமிசை யானே"

(புறம்-௬)

"என்று-மின்சொ லெண்பதத்தை யாகுமதி பெரும"

(புறம்-௪0)

எனவரும் (செவியுறை) தானே என்றதனான் இன்னகுணத்தை யாவாயென்று வாழ்த்திப் பின் செவியறிவுறுத்தல் கொள்க. இத்துணையும் பாவின்பெயரும், எண்ணுமுறையும், வரையறையும், அவைபொருட்குரிமையுங் கூறிற்று.

**ஆய்வுரை :**

இது, செவியுறையாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) செவியுறையாவது, பெரியோர் நடுவண் தன்பெருமை தோன்ற நடவாது தாழ்ந்தொழுகுதல் கடன் எனச் செவியறிவுறுத்தலாகும் எ-து.

பொங்குதல் - தன் பெருமை தோன்ற ஒழுகுதல். புரையோர்- உயர்ந்தோர். நாப்பண் - நடு. அவிதல் - அடங்கி யொழுகுதல். செவியறிவுறூஉ - அறிவுரைகேட்டற்கு உரியாரைத் தனியே அழைத்துச் செவிக்கண் அறிவுறுத்துதல். இது செவியுறை. யெனவும் கூறப்படும். செவியுறை-செவி மருந்து; ஓப்பினாலாகிய பெயர். செவியறிவுறுத்தவண்ணம் பெரியோர் நடுவிற் பெருக்கமின்றி அடங்கியொழுகுவோர் புகழொடும் நெடுங்காலம் நிலைபெற்று வாழ்வராதலால் இது வாழ்த்தியல் வகையின்பாற் படுவதாயிற்று.

**ளயக ஒத்தா ழிசையும் மண்டில யாப்புங்**
**குட்டமும் நேரடிக் கொட்டின வென்ப.**

**இளம்பூரணம் :**

என்—எனின். சில செய்யுட்களில் அடி வரையறுத்தலை நுதலிற்று.

(இ ள்.) ஒத்தாழிசைக் கலிக்கு உறுப்பாகிய ஒத்தாழிசையும்,[1] ஆசிரியப்பாவின்கண் நிலைமண்டிலம் அடிமறிமண்டிலம் என்பனவும், ஒத்தாழிசைக்கும் கொச்சகத்திற்கும் பொதுவாகிய குட்டமும் நாற்சீரடிக்குப் பொருந்தின என்றவாறு.[2]

மேல் ஆசிரியப்பாவின் ஈற்றயலினும், இடையினும், முச்சீரும் இருசீரும் ஐஞ்சீரும் அறுசீரும் வரும் என்றதனானே, எல்லாவடியும் ஒத்து வருவனவு முளவென மண்டிலம் கூறவேண்டிற்று.[3]

கலிப்பாவிற்குச் சுரிதகம் ஈற்றடி முச்சீரானும் ஈற்றயலடி முச்சீரானும் வரும் என்றமையால், தாழிசையுந் தரவும் நாற்சீரானல்லது பிறவாற்றான் வாராவெனக் கூறல் வேண்டிற்று[4] குட்டமெனினும் தரவெனினும் ஒக்கும்.

இனிக் கலிக்குறுப்பாகிய சின்னங்கள் இருசீரானும் முச்சீரானும் வருதலானும் தனிச்சொல் ஒருசீரானும் வருதலானும் வேறு ஓதவேண்டிற்று.[5]

உதாரணம் முன்னர்க் காட்டுதும். (௧௧௧)

1. இங்கு 'ஒத்தாழிசை' என்றது, ஒத்தாழிசைக்கலிப்பாவாகிய பாவினை யுணர்த்தாது அப்பாவுக்கு உறுப்பாகிய ஒத்தாழிசையினை யுணர்த்தியது.

2. 'மண்டிலயாப்பு' என்றது, நாற்சீரடியினால்வரும் நிலைமண்டில ஆசிரியம், அடிமறிமண்டில ஆசிரியம் ஆகியஆசிரியப்பாவின் வகையினை. குட்டம் என்றது, ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும் கொச்சகக் கலிப்பாவிற்கும் பொதுவாக முதற்கண் வருதற்குரிய 'தரவு' என்னும் உறுப்பினையென்பது இளம்பூரணர் கருத்தாகும். இங்குக் கூறப்பட்ட நான்கும் நாற்சீரடியால் வருவன என்பார் 'நேரடிக்கு ஒட்டின' என்றார். நேரடி-நாற்சீரடி. ஒட்டுதல்-பொருந்துதல்.

3. நாற்சீரடியால் இயல்வது ஆசிரியப்பா என்பது புலனாமாயினும் அதன் ஈற்றயலினும் இடையினும் முச்சீரும் இருசீரும் ஐஞ்சீரும் அறுசீரும் வரும் என ஆசிரியர் பின்னர்க் கூறுதலால் எல்லாவடிகளும் நாற்சீரான் இயன்றுவரும் ஆசிரியப்பாவும் உள என்பது அறிவித்தற்கு 'மண்டில யாப்பும் நேரடிக்கு ஒட்டின, என்றார்.

4. கலிப்பாவின் உறுப்பாகிய சுரிதகம் ஈற்றடி முச்சீராலும் ஈற்றயலடி முச்சீராலும் வரும் என்றமையால் கலிப்பாவின் ஏனையுறுப்புக்களாகிய தரவும் தாழிசையும் முச்சீரடியாலும் வருமோ என்று ஐயுற்றார்க்கு அவை நாற்சீரடியாலல்லது பிறவாற்றால் வருதலில்லை என ஐயமகற்றுதல் வேண்டி 'ஒத்தாழிசையும் ........... குட்டமும் நேரடிக்கு ஒட்டின' என்றார் ஆசிரியர். குட்டம் என்றது ஈண்டுத் தரவினை என்பார் 'குட்டம் எனினும் தரவெனினும் ஒக்கும், என்றார் இளம்பூரணர்.

5. கலிக்குறுப்பாகிய சின்னங்களாவன இருசீராலும் முச்சீராலும் வரும் எண் (அம்போதரங்க) உறுப்புக்கள். கலியுறுப்புகளுள் சின்னமும் தனிச்

**பேராசிரியம் :**

இதுவும், மேனின்ற அதிகாரத்தாற் பாவிலக்கணமே கூறுகின்றது.

(இ - ள்.) ஒத்தாழிசைக்கலியின் கண்ணும் மண்டிலயாப்பின் கண்ணுங் குட்டம்[1] வருங்கால் அளவடிக்குப் பொருந்தி வருந் தத்தம் பாக்கள் (எ - று)

பாவென்பது அதிகாரத்தாற் கொள்ளப்படும். ஒத்தாழிசைக்கலி அளவடியுஞ் சிந்தடியும் குறளடியும் விராய்நிற்கு-மாயினும் அளவல்லாவடியேனும் அளவடிக்குப் பொருந்து மாற்றாற் பாக் கொளுத்தப்படுமென்பது.[2]

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" (கலி. 11) என அளவடிக்கண் துள்ளலோசை வந்தது.

' போரவுணர்க் கடந்தோய்நீ
புணர்மருதம் பிளந்தோய்நீ" (விளக்கத்தனார் பாடல்.)

எனக் குறளடிக்கண்ணும் அவ்வாறே துள்ளலோசை வந்தவாறு கண்டுகொள்க.

"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே"

என இஃது இடையடி குறைந்தமையிற் குட்டமெனப்பட்டது. நாற்சீரடி யாத்து வருவன மண்டிலயாப்பெனப்படும். அவை போலக் குட்டமும் நேரடிக்குப் பாப்பொருந்தின, (எ - று).

---

முன் பக்கத் தொடர்ச்சி

சொல்லும் நாற்சீரடியிற் குறைந்து வருவனவாதலின் இவற்றைநீக்கி நாற்சீரடியால் வருவன ஒத்தாழிசையும் குட்டமும் என வேறுபிரித்தோதவேண்டியதாயிற்று என்பது கருத்து.

1. குட்டம் என்பது, நாற்சீரடியிற்குறைந்து முச்சீரானும் இருசீரானும் வருவது.

2. ஒத்தாழிசைக்கலி அளவடி சிந்தடி குறளடி என்பன கலந்து நிற்பினும் அளவடியல்லாதவடிகட்கு அளவடிக்கு ஏற்பப் பா என்னும் உறுப்பு பொருத்தப் பெறும் என்பதாம்.

ஈற்றின் மண்டிலமோதிய தென்னையெனின், அது சொல் லாக்காற் குட்டமே நேரடிக்கு ஒட்டுவதாவான் செல்லுமாகலி னென்பது.[1] மண்டிலமென்பன,

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே" (யா. வி. ப. 369)

என்றற் றொடக்கத்தன.

ஒத்தாழிசையை முன்வைத்ததென்னை யெனின், மண்டிலம் போல்வனவுங் குட்டம்போல்வனவுங் கலிப்பாவினுட் சிறு பான்மைய என்றற்கென்பது. அவை அளவடிக்குரிமை யாண்டுப் பெறுதுமெனின், அவை தம்மை உறழுங்கால் ஓதிய நில வகையானும்,

"இன்சீர் வகையி னைந்தடிக்கு முரிய" (தொல்-செய்-54)

என்னுஞ் சீர்வகையானும் பெறுது மென்பது. இதனது பயம் குறளடி வஞ்சிப்பாப்போலப் பா வேறுபடாவென்பது.[2] ஒட்டின வென்றதனான் இத்துணை போகாது சிறுவரவிற்றாய் வரும் வெண்பாக்கண்ணுமென்பது கொள்க. (கககூ)

**நச்சினார்க்கினியம் :**

இதுவும் பாவிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்). ஒத்தாழிசையும் -ஒத்தாழ்ந்த வோசையும். மண்டில யாப்பும் - மண்டலித்துவரும் யாப்பும் குட்டமும் - இருசீரும் முச்சீருமாகிக் குறைந்துவருவனவும். நேரடி ......... என்ப- நாற்சீரடிக்குப் பொருந்தின என்று கூறுவராசிரியர். எ—று.

என்றதனால், நாற்சீரடி முரற்கைபடத் துள்ளிவருதலே- யன்றித் தாழம் பட வோசைபெற்றும் வருமென்றார். அதுவே ஒத்தாழிசையை ஒத்து மூன்றாய்வருமென்று "ஒத்துமூன் றாகு

---

1. நாற்சீரடியாகிய மண்டிலயாப்புக் கூறாக்கால் இருசீர் முச்சீரடிகளே நேரடிக்குப் பொருந்துவதாவான் செல்லும். அங்ஙனம் செல்லாமைப்பொருட்டு அளவடிக்குரிய பாக்களாகிய ஒத்தாழிசையும் மண்டிலயாப்பும் உடன் கூறினார்.

2. ஒத்தாழிசைக்கலியினும் மண்டிலயாப்பின்கண்ணும் இருசீரடியும் முச்- சீரடியும் வருங்கால் அவை நாற்சீரடிக்குப்போலப் பாவென்னும் உறுப்புக் கொளுத்தப் பெறும் எனக்கூறிய இதனது பயன், குறளடி வஞ்சிப்பாப்போன்று இங்குப்பாவென்னும் உறுப்பு வேறுபடாது என்பது அறிவித்தல்,

மொத்தா ழிசையோ"(கஅக) என்புழிக் கூறுமாற்றானுணர்க. இனி. நாற்சீரடியாய் வரும்ஆசிரியமும் வெண்பாவும் ஈற்றயலடியும் ஈற்றடியும் முச்சீராய்வருமென முன்விதித்தவை ஒருகால் நாற்சீராயும் வருமென்றற்கு மண்டிலயாப்பென்றார்; அது மண்டிலவாசிரியப்பாவும் மண்டிலவெண்பாவுமாம்.[1]

உ—ம். வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார லாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே? (குறுந் - கஅ)

எனவும்

"அறையருவி யாடா டினைப்புனமுங் காவாள்....... குன்று"[2] எனவும் மண்டலித்து வந்தன. இனி நாற்சீரடியாய் வரும் ஆசிரியப்பாவும் குட்டம்பட்டு வருமென்றார். ஆசிரியப்பாவிற்குக் குட்டமாவது குறளடி வஞ்சியும் சிந்தடிவஞ்சியும் பொருந்திவருதல். வெண்பாவிற்குக் குட்டமாவது ஈற்றயலடியேயன்றி ஏனையடியுங் குறைதல்.

உ—ம். "வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென் றாஅங்கு" (புறம்-உ)

என நாற்சீரடிக்கு இருசீரும் முச்சீரும் பொருந்தி ஆசிரியம் வந்தது. "அட்டாலும்பால்" "வஞ்சிவெளிய" "நகாஅ" "நாளும்" "கறைப்பற்பெரு" இவையே எழுதுக. இவை வெண்பாக் குட்டம்பட்டு வந்தன.

## ஆய்வுரை :

இது, மேனின்ற அதிகாரத்தாற் பாவிலக்கணமே கூறுகின்றது எனப் பேராசிரியரும், இது சில செய்யுட்களின் அடிவரையறுத்தலை நுதலிற்று என இளம்பூரணரும் கருத்துரை வரைந்தனர்.

---

1. மண்டில ஆசிரியப்பா என்பது, எல்லாவடிகளும் நாற்சீரடிகளானியன்றது. எல்லாவடிகளும் நாற்சீரடிகளால் இயன்ற வெண்பா மண்டில வெண்பா எனப்படும்.

2. இது மண்டில வெண்பாவுக்கு உதாரணம். இது நாற்சீரடிகளால் இயன்று 'மறையறநீர் வாழிய மையிருங் குன்று' என ஈற்றடியும் நாற்சீராய் வந்தமையால் மண்டில வெண்பா என்னும் பெயர்த்தாயிற்று.

(இ - ள்) ஒத்தாழ்ந்த ஓசையும், மண்டலித்து வரும் யாப்பும், (இரு சீரடியும் முச்சீரடியுமாகிக் குறைந்து வரும்) குட்டமும் நாற்சீரடிக்குப் பொருந்தின என்பர் ஆசிரியர் எ-று.

குட்டம் என்பதற்குத் தரவு எனப் பொருள் கொண்டார் இளம்பூரணர். இரு சீரடியும் முச்சீரடியும் ஆகிக் குறைந்து வருவனவற்றையே குட்டம் என்ற பெயரால் வழங்குதல் தொல் காப்பியனார் கருத்தாமென்பது பின்வரும் சூத்திரங்களால் இனிது விளங்கும்-

**௪௰௨ குட்டம் எருத்தடி உடைத்துமாகும்.**

என்—எனின். மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தாவு ஈற்றயலடி முச்சீரான் வரவும்பெறும் என்றவாறு.

எருத்தடியுடைத் தென்றதனானே ஈற்றயலடி முச்சீர் எனப் பொருள்படுமோ எனின், ஆசிரியப்பாவின் ஈற்றயலடி முச்சீரான் வருதல் பெருவழக்காதலானும் இனிவருகின்ற சூத்திரம் தூக்கியலென ஓதுகையானும் இவ்வாறு பொருள்படுமென்று கொள்க.[1] உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

இன்னும் குட்டம் என்பதனைத் தரவு கொச்சகமாகிய கொச்சக வொருபோகிற்குப் பெயராக வழங்கினும் அமையும். அவ்வழி ஒத்தாழிசை என்பதனை ஒத்தாழிசையெனத் தரவெனத் தரவையுங் கூட்டிப் பொருளுரைக்கப்படும்.[2] (௪௰௩)

---

1. தரவு என்னும் உறுப்பின் ஈற்றயலடி முச்சீராய் வருதலும் உண்டு என்பார், குட்டம் எருத்தடியுடைத்துமாகும்' என்றார். குட்டம்-தரவு. இங்கு 'எருத்தடி' என்பதற்கு 'முச்சீர்த்தாய்வரும் ஈற்றயலடி' எனப்பொருள்கொண்டமைக்குரிய காரணத்தைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது இவ்வுரைத்தொடராகும். ஆசிரியப்பாவின் ஈற்றயலடி முச்சீரான் வருதல் பெருவழக்காதலானும் இனி வருகின்ற சூத்திரம் செந்தூக்கியல என ஓதுகையானும் ஈண்டு எருத்தடியென்றது, முச்சீர்த்தாய் வரும் ஈற்றயலடியினை எனக்கொண்டார் இளம்பூரணர்.

2. இனி, மேற்சூத்திரத்திற் குறிக்கப்பட்ட குட்டம் என்பதனைத் தரவு கொச்சகமாகிய கொச்சகவொருபோகின் பெயராகக்கொண்டு, அவ்வழி ஒத்தாழிசையும் தரவும் எனத் தரவையும் உடன்கூட்டி, ''ஒத்தாழிசையும் தரவும் மண்டிலயாப்பும் குட்டமெனப்படும் கொச்சகவொருபோகும் நாற்சீரடிக்குப் பொருந்தின'' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும் என்பது இவ்வுரைப்பகுதியின் கருத்தாகும்.

**பேராசிரியம் :**

இது, குட்டத்திற்கொரு சிறப்புவிதி.

(இ-ள்.) குட்டம் எருத்தடியின்கண்ணும் வரும் (எ-று).

மேல் ஆராய்ச்சிப்பட்ட குட்டம் இடைவருதலன்றி ஒரு பாட்டின் ஈற்றயலடிக்கண்ணே வந்தொழிதலும் உண்டன்றே? அதுவும் பாவிற்கேற்பக் குறைக்கப்படு மென்பான்,

"குட்டம் எருத்தடி யுடைத்து மாகும்"

என்றான்; குறைத்தற்குக் கூறினானல்ல னென்பது[1] இதனை இவ்வாறு கூறவே மேற்கூறிய குட்டம் ஒத்தாழிசைக்கட்போல இடையிடை வருமென்பது பெற்றாம்[2].

"உடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போற் றோன்றல காடிறந் தோரே" (அகம்-2)

என, ஈற்றயலடி முச்சீரான் வந்தது. பிறவும் அன்ன. (எருரு)

**நச்சினார்க்கினியம் :**

இது முற்கூறிய குட்டம் தரவுக்கும் உரித்தென்கின்றது.

(இ-ள்.) தரவினது ஈற்றடி குறைந்துவருதலை யுடைத்தாம்.[3] எ-று. எருத்து என்றது தரவை; அஃது "எருத்தே கொச்சகம்" (கசூகூ) என்பதனானுணர்க.

"மெல்லிணர்க் கொன்றையும்" (முல்லைக்கலி - ரு)

"மலிதிரையூர்ந்துதன்" (முல்லைக்கலி - சு)

எனவும் வரும்.

**ஆய்வுரை :**

இது, குட்டத்திற்கு ஓர் சிறப்புவிதி கூறுகின்றது.

---

1. எருத்தடி-ஈற்றயலடி

2. குட்டம் ஈற்றயலடிக்கண்வருதலுமுடைத்து என ஈண்டுக்கூறவே முற்-சூத்திரத்திற் கூறியது ஒத்தாழிசைக் கலிக்கட்போல இடையிடை வருதல் என்பது பெறப்படும்.

3. எருத்து அடி குட்டம் உடைத்துமாகும் - என இயைத்துப் பொருள் கொள்ளப்பட்டது. 'எருத்து' என்பது தரவினைக் குறித்த பெயரெனவும் 'அடி' என்றது இங்குத் தரவின் இறுதியடியைக் குறித்ததெனவும் 'குட்டம்' என்பது குறைதல் எனவும் பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர்.

(இ ள்) மேற்கூறப்பட்ட (முச்சீரடியாகிய) குட்டம் ஒரு பாட்டின் இடையே வருதலன்றி ஈற்றயலடிக்கண்ணே வருதலும் உண்டு எ-று

ஈண்டு 'எருத்து' என்றது தரவை; அஃது 'எருத்தே கொச்சகம்' (செய்-146) என்பதனான் உணர்க' என்பர் நச்சினார்க்கினியர். இங்கு 'எருத்து' என்னாது 'எருத்தடி' என ஆசிரியர் கூறுதலால் 'ஈற்றயலடி' எனப்பொருள் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

**௪௰௩ மண்டிலங் குட்டம் என்றிவை இரண்டும்**
**செந்தூக் கியல என்மனார் புலவர்.**

**இளம்பூரணம் :**

என்—எனின். மேற் சொல்லப்பட்டவற்றுள் மண்டிலம் குட்டம் என்பவற்றிற்குரியதோர் ஓசை வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மண்டிலமாகக் கூறப்படும் பாவும் குட்டமெனக் கூறப்படும் பாவும் அகவலோசை இயல என்றவாறு.

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

இனி நான்குபாவினும் வெண்பாவுங் கலிப்பாவும் முன்னெடுத் தோதுகின்றாராதலானும்[1], ஆசிரியப்பாவும் வஞ்சிப்பாவும் இத்துணையும் ஓதிய இலக்கணத்தான் முடித்தலானும்[2] அவையிற்றிற்கு உதாரணம் ஈண்டே காட்டுதும். ஆசிரியப் பாவாவது பெரும்பான்மை இயற்சீரானும் ஆசிரிய வுரிச்சீரானும் ஆசிரியத்தளையானும் அகவலோசையானும் நாற்சீரடியானும் சிறுபான்மை ஒழிந்த சீரானும் தளையானும் அடியானும் வருவது[3] அவ்வாறாதல் மேற்கூறப்பட்ட சூத்திரங்களான் உணர்க.

இப்பாவிற்கு ஈற்றெழுத்து வரையறுத்துணர்த் தாமையின் எல்லா வீறுமாம். எற்றுக்கு?

1. முன்னெடுத்தோதுகின்றார்-பின்னர் எடுத்துக்கூறுகின்றார்.

2. இதுவரை கூறிய இலக்கணத்தால் ஆசிரியப்பாவின் இயல்பும் வஞ்சிப்பாவின் இயல்பும் கூறிமுடித்தார் ஆசிரியர் என்பதாம்.

3. ஆசிரியப்பா என்பது பெரும்பான்மை இயற்சீராலும் ஆசிரியவுரிச்சீராலும் ஆசிரியத்தளையாலும் அகவலோசையாலும் நாற்சீரடியாலும் சிறுபான்மை ஒழிந்த சீராலும் தளையாலும் அடியாலும் வரும். தொல்காப்பியனார் பிற்காலத்தார் போன்று இப்பாவிற்கு ஈற்றெழுத்து வரையறுத் துணர்த்தாமையின் எல்லா வீறும் ஆகும்.

"அகவல் இசையன அகவல் மற்றவை
ஏஓ ஈஆ, என் ஐ என் றிறுமே"

(யாப். வி. ப. கூகூ)

என்று வரைந்தோதினார் உளரால் எனின்,

"கோள்மா கொட்குமென் றஞ்சுவல் ஒன்னார்க்
கிருவிசும்பு கொடுக்கும் நெடுவேல் வழுதி
கூடல் அன்ன குறுந்தொடி அரிவை
ஆடமை மென்றோள் நசைஇ நாடொறும்
வடியமை எஃகம் வலவயின் ஏந்திக்
கைபோற் காந்தட் கடிமலர் கமழும்
மைதோய் வெற்பன் வைகிருள் வருமிடம்"

(யாப். வி. ப. உகூஉ)

எனப் பிறவாற்றானும் வருதலின் ஈறு வரையறுக்கப்படா தென்று கொள்க.

இனி இவ்வாசிரியப் பாவினை அடிநிலையாற் பெயரிட்டு வழங்கப்படும்.[1] அஃதாமாறு:

ஈற்றயலடி முச்சீரான் வருவதனை நேரிசையாசிரியம் என்ப.

உதாரணம்

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே"

(யாப். வி. ப. கஉஉ)

எனவரும்.

இடையிடை முச்சீர் வரின் இணைக்குறளாசிரியம் என்ப.

1. ஈற்றயலடி முச்சீரான் வருவது நேரிசையாசிரியம், இடையிடை முச்சீர் வருவது இணைக்குறளாசிரியம். எல்லாவடியும் ஒத்து வருவது நிலைமண்டிலவாசிரியம். தனித் தனியே பொருள்முடிபு உடையனவாய் எல்லாவடியும் ஒத்துவருவது அடிமறி மண்டில ஆசிரியம். இதனுள் ஏதேனும் ஓரடியினை முதலும் முடிவுமாக மறித்து அமைத்தாலும் ஓசையும் பொருளும் வழுவாது வருதலின் அடிமறிமண்டிலம் என்னும் பெயர்த்தாயிற்று. இதற்கு இலக்கணம் சொல்லதிகாரத்துள் எச்சவியலில்

'அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே'

என்னுஞ்சூத்திரத்துட் கூறப்பட்டது. 'அடிமறிச் செய்யுளாவது, அடிகளிற்சீர்நின்ற படியே நிற்க, அடிகள் தத்தம் நிலையிற்றிரிந்து ஒன்றன்நிலைக்களத்து

உதாரணம்

"நீரின் தண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீரும்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாவே" (யாப். வி. ப. உருஎ)

எனவரும்.

எல்லா அடியும் ஒத்துவருவதனை நிலைமண்டில ஆசிரியம் என்ப. இதற்கு இலக்கணம் முன்னர்க் காட்டுதும்.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந். ௰அ)

எனவரும்.

இனி எல்லா அடியும் ஒத்துவரும் பாட்டினையே அடிமறி-மண்டில ஆசிரியம் என்று வழங்குப. இதற்கிலக்கணஞ் சொல்லதிகாரத்துள் 'நிரனிறைசுண்ணம்' (எச்சவியல். அ) என்னும் சூத்திரத்தாற் கொள்க.

"சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரல் எனினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே" (யாப் வி. ப. உருக)

எனவரும்

இதனுள் யாதானும் ஓரடியை முதலுமுடிவுமாக உச்சரித்-தாலும் ஓசையும் பொருளும் வழுவாது வருதலின் அடிமறியா-யிற்று.

இனி முச்சீரடி முதலாக அறுசீரடி யீறாக மயங்கிய ஆசிரியத்தினை அடிமயங்காசிரிய மெனவும், வெண்பாவடி

---

முன் பக்கத் தொடர்ச்சி

ஒன்று சென்று நிற்குமியல்பினதாகும்' என்பது இதன்பொருள். சீர்கள் கிடந்து-ழியே கிடப்பச் செய்யுளின் அடிகள் முதலும் இடையும் கடையும் மறிந்து கொள்ளப்படுதலின் இஃது அடிமறியென்னும் பெயர்த்தாயிற்று.

மயங்கிய ஆசிரியத்தினை வெள்ளடிமயங்காசிரிய மெனவும், வஞ்சியடி மயங்கிய ஆசிரியத்தினை வஞ்சி மயங்காசிரிய மெனவும் வழங்கப்படும். இதற்கு இலக்கணம்;

"வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீ ரடியும் உளவென மொழிப
(தொல் செய். சாO)

"அறுசீ ரடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வருஉ நேரடி முன்னே"
(தொல் செய். சாக)

"இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே"
எனவும், (தொல். செய். கூரு)

"ஆசிரிய நடைத்தே வஞ்சி" (தொல். செய். எச)

எனவும் ஒற்றுமைப் படுத்துதலானுங் கொள்க.[1]

உதாரணம்

"சிறியகட் பெறினே யெமக் ... தவப் பலவே".
(புறம். உருச)

இப் பதினேழடி யாசிரியத்துள் ஏழாமடியும் பன்னிரண்டா-மடியும் முச்சீரான் வந்தன. மூன்றாமடி முதலாக ஆறாமடி யீறாக நான்கடியும் பதினாலாமடியும் ஐஞ்சீரான் வந்தன. இரண்டாமடியும் பதினொன்றாமடியும் அறுசீரான் வந்தன. ஏனைய நாற்சீரான் வந்தன. இவ்வாறு வருதலின் அடிமயங்-காசிரியம் ஆயிற்று.[2]

---

1. 'வெண்டளைவிரவியும் ஆசிரியம் விரவியும் ஐஞ்சீரடியும் உளவென மொழிப' எனவும், 'அறுசீரடியே ஆசிரியத்தளையொடு நெறிபெற்றியலும் நேரடி முன்னே' எனவும்வரும் சூத்திரங்களால் வெண்பாவடிமயங்கியும் முச்சீரடி முதலாக அறுசீரடியீறாக ஆசிரியவடிமயங்கியும் ஆசிரியப்பா வரும் என்பது உணர்த்தப்பெற்றது. 'ஆசிரிய நடைத்தே வஞ்சி' என ஆசிரியப்பாவொடு வஞ்சிப் பாவை ஒற்றுமைப்படுத்துரைத்தலால், ஆசிரியப்பாவின்கண் வஞ்சியடிமயங்கி வரும் என்பதும் புலப்படுத்தப்பெற்றது. வெண்பாவடிமயங்கிய ஆசிரியத்தினை வெள்ளடி மயங்காசிரியம் எனவும் முச்சீரடி முதலாக அறுசீரடியீறாக அடிமயங் காசிரியத்தினை அடிமயங்காசிரியம் எனவும் வஞ்சியடிமயங்கிய ஆசிரியத்தினை வஞ்சி மயங்காசிரியம் எனவும் பெயரிட்டு வழங்குவர் பிற்காலத்தார்.

2. இளம்பூரணர் கூறுமாறு இப்புறநானூற்றுப்பாடலைப், பதினேழடி-யாசிரியமாகக் கொள்ளுமிடத்து

“எறும்பி அளையிற் குறும்பல் சுனைய
உலைக்கல் லன்ன பாறை யேறிக்
கொடுவில் லெயினர் பகழி மாய்க்குங்
கவலைத் தென்பஅவர் தேர்சென்ற வாறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமலர்க் கலிழுமிவ் அழுங்க லூரே”

(குறுந் ௰௨)

இதனுள், முதலடி இயற்சீர் வெள்ளடியாதலின் வெள்ளடி விரவிய ஆசிரிய மெனப்படும்.

“இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட ஏமங் காவலர்

---

முன் பக்கத் தொடர்ச்சி

1. சிறியகட் பெறினேயெமக்கியுமன்னே
2. பெரியகட்பெறினே யாம் பாடத்தான் மகிழ்ந்துண்ணுமன்னே
3. சிறுசோற்றானும் நனிபலகலத்தன் மன்னே
4. பெருஞ்சோற்றானும் நனிபலகலத்தன் மன்னே
5. என்பொடுதடிபடு வழியெலாம் எமக்கீயுமன்னே
6. அம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்குமன்னே
7. நரந்தநாறுந் தன்கையாற்,
8. புலவுநாறு மென்றலை தைவருமன்னே
9. அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
10. இரப்போர் கையுளும் போகிப்புரப்போர் புன்கண் பாவைசோர
11. அஞ்சொனுண்டேர்ச்சிப் புலவர்நாவிற் சென்றுவீழ்ந்தன்றவன்
12. அருநிறத்தியங்கியவேலே
13 ஆசாகெந்தையாண்டுளன்கொல்லோ
14. இனிப்பாடுநருமில்லைப் பாடுநர்க்கொன்றீகுநருமில்லைப்
15. பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
16. சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்
17. றீயாது வீயு முயிர்தவப்பலவே.

என அடிகளைப்பகுத்துரைக்கலாம். இங்ஙனம் பகுக்குமிடத்துப் பத்தாமடியின் முன்னும் பின்னுமுள்ள அடிகள்யாவும் இளம்பூரணர்குறித்த வண்ணமே சீர் பெற்று அமைகின்றன. பத்தாமடி மட்டும் ‘இரப்போர்கையுளும் போகிப் புரப் போர் புன்கண் பாவை சோர’ என நாற்சீரின் மிக்குவந்துள்ளது. எனவே இப்-பாடலில் இவ்விடத்து இளம்பூரணர் கொண்டபாடம் வேறாக இருத்தல் வேண்டுமெனக் கருத வேண்டியுளது. ‘பதினேழடியாசிரியம்’ என இளம்பூரணர் குறித்த இப்புறப்பாடல் புறநானூற்றுப் பதிப்பில் இருபதடியாசிரியமாக அச்சிடப்பெற்றுள்ளது.

இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்க லுண்மை மாயமோ அன்றே
கள்ளி ஏய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கலனாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே'' (புறம். ந௬ந)

இதனுள்,

''உப்பிலாஅ அவிப்புழுக்கல்''

என்பது முதலாக மூன்றடியும் வஞ்சியடி.

இனி வஞ்சிப்பா ஆவது வஞ்சியுரிச்சீரானும் ஏனைச்சீரானும் இருசீரடியானும் முச்சீரடியானுந் தூங்கலோசையானும் வந்து தனிச்சொற் பெற்று ஆசிரியச் சுரிதகத்தான் இறுவது. இதற்கு இலக்கணம்:

''வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீ ரல்லா மூவகை யென்ப'' (தொல். செய். ௧௯)
''தன்பா வல்வழித் தானடை வின்றே''
(தொல். செய் ௨0)
''வஞ்சி மருங்கின் எஞ்சிய வுரிய'' (தொல். செய். ௨௧)
''வஞ்சி யடியே இருசீர்த் தாகும்'' (தொல். செய் ௪ந)
''முச்சீ ரானும் வருமிடன் உடைத்தே'' (தொல். செய். ௪ரு)
''வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே''
(தொல். செய். அ௬)

ன்பனவற்றாற் கொள்க. இப்பா இருசீரடி வஞ்சிப்பா, முச்சீரடி வஞ்சிப்பா என இருவகைப்படும்.

"பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்திரிதரும்
வளவயலிடைக் களவயின் மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசமும்
வயற்கம்பலைக் கயலார்ப்பவும், நாளும்
மகிழின் மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனாப் பெருவண் மையனே."

(யாப். வி. ப. ௩௩௬)

இது குறளடியான் வந்து தனிச்சொற்பெற்று ஈற்றயலடி முச்சீரான் வந்தது. ஆசிரியச் சுரிதகத்தாலிற்ற இருசீரடி வஞ்சிப்பா தனிச்சொற்பெறுதல் எடுத்தோதிற்றிலராயினும் 'உரையிற்.கோடல்' என்பதனாற் கொள்க.[1]

"கொடிவாலன கருநிறத்தன குறுந்தாளன
வடிவாளெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தின் இணையரிமான் அணையேறித்
துணையில்லாத் துறவுநெறிக் கிறைவனாகி
எயில்நடுவ ணினிதிருந் தெல்லோர்க்கும்
பயில்படுவினை பத்தியலாற் செப்பியோன்,
-புணையெனத்
திருவுறு திருந்தடி திசைதொழ
வெருவுறு நாற்கதி வீடுநனி எளிதே."

(யாப். வி. பக் ௩௩௭)

இது முச்சீரடி வஞ்சிப்பா.

இனி,

"வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய" (தொல்.செய்.௨௧)

---

1. தொல்காப்பியம் செய்யுளியல் ௰௬, ௨௰, ௨௧, ௪௩, ௪௫, ௪௮ ஆம் சூத்திரங்களில் வஞ்சிப்பாவின் இலக்கணம் உணர்த்தப்பெற்றது. வஞ்சியுரிச்சீரானும் ஏனைச்சீரானும் இருசீரடியானும் முச்சீரடியானுந் தூங்கலோசை-யானும் வந்து தனிச் சொற்பெற்று ஆசிரியச் சுரிதகத்தான் முடிவது வஞ்சிப்பாவாகும். இப்பா இருசீரடிவஞ்சிப்பா, முச்சீரடிவஞ்சிப்பா என இருவகைப்படும். ஆசிரியச் சுரிதகத்தால் முடியும் குறளடிவஞ்சிப்பா தனிச்சொற்பெறுதல் தொல்காப்பியராற் கூறப்படாது போயினும் உரையிற்கோடலாற் கொள்ளப்படும் என்பர் இளம்பூரணர்.

என்றோதியவதனால் ஆசிரியவடியோடும் வெண்பாவடியோடுங் கலியடியோடும் மயங்கி வருவன கொள்க [1]

பட்டினப் பாலையுள்,

"நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்" (உஉ)

என்பது ஆசிரியவடி.

"கோழி எறிந்த கொடுங்காற் கணங்குழை" (உரு)

என்பது வெண்பாவடி.

"வயலாமைப் புழுக்குண்டு வறளடும்பின்
மலர்மலைந்து" (கூச - ரு)

என்பது கலியடி.

இனி வெண்பா வாமாறும் கலிப்பா வாமாறும் முன்னர்க் காட்டுதும். (கககூ)

**பேராசிரியம் :**

இது, மண்டிலமுங் குட்டமும் வருமிட னுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) மேற்கூறிய மூன்றனையும் இன்ன பாவென்பது உணர்த்தினான்; அவற்றுள், இறுதிநின்ற மண்டிலமுங் குட்டமும் ஆசிரியப்பாவினை உறுப்பாகவுடைய (எ - று).

எனவே ஒத்தாழிசையாகிற் கலிப்பாவினை உறுப்பாக வுடைத்தென்பது பெறுதும்; என்னை?

"ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சக முறழொடு கலிநால் வகைத்தே"
(தொல்-செய்-130)

என்பவாதலான்.[2]

மேற்கூறிய **மண்டிலவாசிரியத்தினை, நிலைமண்டிலமெனவும் அடிமறிமண்டிலமெனவும்** பெயரிட்டு வழங்குவாரும் உளர்

---

1. 'வஞ்சி மருங்கின் எஞ்சிய வுரிய' (தொல். செய், உக) எனத் தொல் காப்பியர் கூறுதலால் வஞ்சிப்பா ஆசிரிய வடியோடும் வெண்பாவடியோடும் கலியடியோடும் மயங்கிவரப்பெறும் என்பது புலனாம். பட்டினப் பாலையென்னும் வஞ்சிநெடும் பாட்டினுள் இவ்வடிகள் மயங்கி வருதல் காணலாகும்.

2. மண்டிலமும் குட்டமும் ஆசிரியப்பாவினையுறுப்பாகவுடையவெனவே ஒத்தாழிசைக்கலியாயின் கலிப்பாவினையுறுப்பாகவுடையதென்பது பெறப்படும்.

(யா. வி. சூ. 73.4). நின்றவாறு நிற்றலும் அடிமறித்துக் கொள்ளினும் பொருள் திரியாது நிற்றலுமுடைய வென்பது போலும் அவர் கருத்து. அடிமறித்தல் பொருள்கோட்பகுதியாகலான் அஃதன்மையும்; அங்ஙனங் கொள்ளின் நிரனிறை முதலிய பொருள் கோட்பகுதியானுஞ் செய்யுள் வேறுபடுமென மறுக்க. இனிக் **குட்டமும் இருவகைத்தென்ப, இணைக்குறளாசிரியப்பா, நேரிசை யாசிரியப்பாவென;** அவை அவ்வாறு கொள்ளின் (யா வி. சூ. 71-2) இழுக்கென்னை?

"குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்" (தொல்-செய்-116)

என்று இருவகையாற் கூறினமையி னென்றலுமொன்று; இனி ஒன்றாக வழங்குதலே வலியுடைத்து [1]

'குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்"

என ஒருமை கூறியவதனான் ஒழிந்தவழி இரட்டித்துக் குறைய வேண்டுமென்பது கொள்க. மற்று,

"ஒத்தா ழிசையும் மண்டில யாப்பும்" (தொல் செய்-115)

என்றவழிக் கலிப்பா, முற்கூறியதென்னையெனின், குட்டம் ஆண்டுப் பயின்று வருதலின் ஆசிரியத்திற்கும் அதனை முற் கூறினான்; இனி, முறையானே வெண்பாக் கூறுமென்பது

குட்டமென்பது வழக்குச்சொல்லாற் செய்த **செய்யுளென் பாருமுளர்** நாற்சொல்லானுமன்றிச் செய்யுள் செய்யப்படாமை யின் அது குட்டமென்றல் நிரம்பாது.[2] ஒத்தாழிசையென்பது எல்லாச் செய்யுண் மேலுஞ் செல்லுமெனவும் உரைப்ப; பாவும் இனமுமெனப் பகுத்துரைப்பார்க்காம் அது பொருளாவதென மறுக்க: அல்லதூஉம் ஒரோவொன்றே வருவது ஒத்தாழிசை யெனப்படாவென்பது [3] **செந்தூக்கென்பது** ஆசிரிப்பாவென்ற

---

1. இணைக்குறளாசிரியப்பா, நேரிசையாசிரியப்பா என்னும் இரண்டினையும் 'குட்டச்செந்தூக்கு' என ஒன்றாக வழங்குதலே வலியுடையதாகும்.

2. இனிக் குட்டம் என்பது வழக்குச் சொல்லாற் செய்யப்பட்ட செய்யுள் என்பாருமுளர். செய்யுளீட்டச்சொல் எனப்படும் நாற்சொல்லாலுமன்றி வழக்குச் சொல் ஒன்றே பற்றிச் செய்யுள் செய்யப்படாமையின் வழக்குச்சொல்லால் இயன்ற அதனைக் குட்டம் என்றல் நிறைவுடைய இலக்கணமாகாது.

3. ஒத்தாழிசை என்பது நால்வகைச்செய்யுள்மேலும் செல்லும் என்பாருமுளர். அக்கூற்றும் பாவும் இனமும் பகுத்துரைப்பார்க்கேபொருந்தும். பாவினப் பகுப்பில்லாத இயற்றமிழ்ச்செய்யுட்கு அது பொருந்தாதென மறுக்க. அன்றியும்

வாறு; பாவினைத் தூக்கெனவுஞ் சொல்லுப (அஎ). 'இயல' வென்பது அப்பாவானே நடக்குமென்றவாறு. இதுவும் இன்ன செய்யுட்கு உரித்தெனப் பாவினை வரையறுத்ததாம். (ககஎ)

**நச்சினார்க்கினியம்:**

இது முற்கூறிய மண்டிலமுங் குட்டமும் ஆசிரியத்துக்குப் பெரும்பான்மை வருமென்கின்றது.

(இ-ள்) மண்டிலங்...யிரண்டும். எ-து, மண்டிலங் குட்டமென்று முற்கூறியவையிரண்டும். செந்தூக்...புலவர். எ-து, ஆசிரியப் பாவின் கண்ணே பயில நடக்குந்[1] தன்மையையுடைய என்று கூறுவர் புலவர். எ-று.

எனவே, வெண்பாவின்கண் சிறுபான்மை வருமென்றவாறா யிற்று[2]. இரண்டுமங்ஙனம் வருதல் சான்றோர் செய்யுளுட் காண்க.

**ஆய்வுரை :**

இது, மண்டிலமும் குட்டமும் பயிலுமிடம் உணர்த்து கின்றது

(இ-ள்) மண்டிலம் குட்டம் என மேற்கூறியவை இரண்டும் ஆசிரியப்பாவின்கண்ணே பயில நடக்குந் தன்மையன என்பர் ஆசிரியர் எ-று.

**ருகச.** நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ
டொத்தவை எல்லாம் வெண்பா யாப்பின.

**இளம்பூரணம் :**

என்—எனின். வெண்பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

முன் பக்கத் தொடர்ச்சி

ஒவ்வொன்றாய் வருவன ஒத்தாழிசையெனப்படா. ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வரும் கலிப்பாவின் உறுப்பே ஒத்தாழிசையெனப்படும் என்பது 'ஒத்துமூன் றாகும் முத்தா ழிசையே' (செய். 142) எனவரும் சூத்திரத்தால் இனிது விளங்கும்.

1. பயில நடத்தலாவது, பெரும்பான்மையாய் நடத்தல்.

2. ஆசிரியத்திற் பெரும்பான்மையாய் நடக்கும் எனவே வெண்பாவின்கண் சிறுபான்மை வருமென்றவாறாயிற்று.

(இ-ள்.) நெடுவெண்பாட்டு முதலாக அங்கதச்செய்யுள் ஈறாகச் சொல்லப்பட்டவையும் அளவொத்தவையும்[1] எல்லாம் வெண்பா யாப்பினை யுடைய என்றவாறு.

வெண்பா யாப்பாவது, வெண்சீரானும் இயற்சீரானும் வெண்டளையானும் செப்பலோசையானும் அளவடியானும் முச்சீ-ரீற்றடியானும் வருவது.

இவற்றிற்கு இலக்கணம் மேலோதப்பட்டது. ஈண்டு ஓதப் பட்டன வெல்லாம் இவ்வாறு வரும் என்றவாறு.

இவையெல்லாம் ஓசையான் ஒக்குமாயினும் அளவானுந் தொடையானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுத்திக் குறியிடுகின்றார் என்றுகொள்க.

நெடுவெண் பாட்டாவது அளவடியி னெடிய பாட்டு.

குறுவெண்பாட்டாவது அளவடியிற் குறிய பாட்டு.[2]

கைக்கிளையென்பதூஉம் அங்கதமென்பதூஉம் பொருளா-னாகிய பெயர்.

பரிபாட்டாவது பரிந்த பாட்டாம். அஃதாவது ஒரு வெண்பாவாக வருதலின்றிப் பலவுறுப்புக்களோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப் பெறுவது.[3] 'ஒத்தவை' என்பது அளவா-னும் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத சமநிலை வெண்பாக்களாம். அவையாவன நான்கடியான் வருவன. இவ் வாசிரியர் நான்கினை அளவென்றும் ஏறினவற்றை நெடிலென் றும் குறைந்தவற்றைக் குறள் சிந்து என்றும் வழங்குவராகலின். இவற்றுள் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் சமநிலை வெண்-பாட்டும் என மூவகையானும் வரும்.

---

1. இங்கு, அளவு என்றது, நான்கு அடியினை; நாற்சீரான் இயன்றது அளவடியென்றாற்போன்று நாலடியான் இயன்றபாட்டும் அளவெனப்பட்டது.

2. உரையில் 'அளவடியினெடியபாட்டு' 'அளவடியிற்குறியபாட்டு' என்பன முறையே 'அளவினெடியபாட்டு' அளவிற்குறியபாட்டு' என்றிருத்தல் பொருத்த-மாகும்.

3. பரிந்தபாட்டு பரிபாட்டு எனப்பட்டது. பரிதல்-சுமத்தல்: வெண்பா-வாகிப் பலவுறுப்புக்களையும் தாங்கிவருதலின் பரிபாட்டென்னும் பெயர்த் தாயிற்று.

குறுவெண்பாட்டாவது இரண்டடியானும் மூன்றடியானும் வரும்.

உதாரணம் :-

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானொ டூர்ந்தான் இடை." (குறள். ௩௭)

இஃது இரண்டடியும் ஒருதொடையான் வருதலின் குறள் வெண்பா என்ப.

"உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்
கச்சாணி அன்னார் உடைத்து." (குறள். ௬௬௭)

இது விகற்பத்தொடையான் வருதலின் விகற்பக்குறள் வெண்பா என்ப.

மூன்றடியான் வருவதனைச் சிந்தியல் வெண்பா எனவழங்கப் படும்.

"நறுநீல நெய்தலும் கொட்டியுந் தீண்டிப்
பிறர்நாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
பறநாட்டுப் பெண்டிர் அடி." (யாப். வி. பக். ௨௨௬)

இஃது ஒத்து ஒருதொடையான் வருதலின், இன்னிசைச் சிந்தியல் வெண்பாவாம்.

"நற்கொற்ற வாயில் நறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே—பொற்றேரான்
பாலைநல் வாயில் மகள்" (யாப் வி. பக். ௨௨௬)

எனவும்,

"சுழையார அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை" (யாப். வி. பக். ௨௨௬)

எனவும் இவை வேறுபட்ட தொடையான் வருதலின் நேரிசைச் சிந்தியல் வெண்பாவாம்.

இனி நான்கடியான் வருவன சமநிலை வெண்பா வெனப்படும். அவற்றுள் இரண்டாமடியின் இறுதிக்கண் ஒரூஉத்தொடை பெற்று வருவனவற்றை நேரிசை வெண்பா எனவும், ஒரூஉத்தொடை பெறாது வருவன வற்றை இன்னிசை வெண்பா எனவும் வழங்கப்படும். ஒரூஉத்தொடை வருக்கவெதுகையாகியும் வரும். இவையெல்லாம் 'உரையிற் கோடல்' என்பதனாற் கொள்க.

"அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும் - வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று" (நாலடி. கூ)

இது நேரிசை வெண்பா.

"கல்வரை ஏறிக் கடுவன் கனிவாழை
எல்லுறு போழ்தின் இனிய பழங்கைக்கொண்
டொல்லொலை யோடு மலைநாடன் தன்கேண்மை
சொல்லச் சொரியும் வளை" (கைந்நிலை. எ)

இஃது இன்னிசை வெண்பா.

வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை
அளந்தன போகம் அவரவர் ஆற்றான்
விளங்காய் திரட்டினார் இல்லைக் களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்." (நாலடி. கூ0ரு)

நான்கடியாயும் மூன்றாமடிக்கண் தனிச்சொற் பெற்று வருதலின் நேரிசைப்பாற்படும். பிறவுமன்ன

ஐந்தடி முதற் பன்னிரண்டடிகாறும் வருவன பஃறொடை வெண்பா எனப்படும். இதனுள்ளும் ஒரூஉத்தொடை பெற்று வருவனவற்றை நேரிசைப் பஃறொடை எனவும், ஒரூஉத்தொடையின்றி வருவனவற்றை இன்னிசைப் பஃறொடை எனவும் வழங்கப்படும்.

"சேற்றுக்கால் நீலம் செருவென்ற வேந்தன்வேற்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகயல்
தோற்றந் தொழில்வடிவு தம்முள் தடுமாற்றம்
வேற்றுமை இன்றியே யொத்தன மாவேடர்
ஆற்றுக்கா லாட்டியர் கண்." (யா.வி.பக்.உருசு)

இஃது இன்னிசைப் பஃறொடை

"பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்
என்னோடு நின்றார் இருவர் அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே பொன்-
னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை
யெருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்."

(யாப் வி பக்.உருஎ)

இஃது ஆறடியான் வந்து ஒரூஉத்தொடை பெறுதலின் நேரிசைப் பஃறொடை வெண்பா.

> ''சிற்றாறு பாய்ந்துகளுஞ் சேயரிக் கண்ணினாய்
> வற்றா வளவயலும் வாய்மாண்ட ஏரியும்
> பற்றார்ப் பிணிக்கு மதிலும் படுகிடங்கும்
> ஒப்ப வுடைத்தா ஒலியோவா நீர்ப்புட்கள்
> தத்தி இரைதேருந் தையலாய் நின்னூர்ப்பேர்
> ஒத்துணரும் வண்ண முரைத்தி யெனக்கூறக்
> கட்டலர் தாமரையுள் ஏழுங் கலிமான்றேர்க்
> கத்திருவர் ஐவருங் காயா மரமொன்றும்
> பெற்றவழி தேர்ந்துண்ணும் பேயின் இருந்தலையும்
> வித்தாகா நெல்லின் இறுதியும் பெற்றக்கால்
> ஒத்தியைந்த தெம்மூர்ப்பேர் போலென்றாள்
> வானவன்கை
> விற்பொலிந்த வெம்புருவத் தாள்''
> (யாப் வி.பக்.உகூஎ)

இது பன்னிரண்டடியான் (பெருவல்லத்தைக் கூற) வந்த இன்னிசைப் பஃறொடை வெண்பா.[1] ஏனையவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இவற்றுள்,

> ''ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்
> திரிபின்றி முடிவது கலிவெண்பாட்டே''
> (தொல்.செய்.௲சஎ)

---

1. இரண்டடியாய் ஒரெதுகைத்தொடையால் வருவது குறள்வெண்பா எனவும், எதுகையின்றி விகற்பத்தொடையால் வருவது விகற்பக்குறள்எனவும் வழங்கப்படும். மூன்றடியாய் வருவது சிந்தியல் வெண்பா. அவற்றுள் ஒத்து ஒருதொடையால் வருவது இன்னிசைச் சிந்தியல்வெண்பா எனவும், வேறுபட்ட தொடையால் வருவது நேரிசைச் சிந்தியல் வெண்பா எனவும் வழங்கப்படும். நான்கடியாய் வருவது சமனிலை வெண்பா. அவற்றுள் இரண்டாமடியின் இறுதியில் ஒரூஉத்தொடை (தனிச்சொல்) பெற்றுவருவது நேரிசைவெண்பா எனவும், ஒரூஉத் தொடை (தனிச்சொல்) பெறாது வருவது இன்னிசை வெண்பா எனவும் வழங்கப்படும். ஐந்தடி முதல் பன்னிரண்டடி வரை வருவன பஃறொடை வெண்பா. இவற்றுள் ஒரூஉத்தொடை (தனிச்சொல்) பெற்றுவருவன நேரிசைப்-பஃறொடை எனவும் ஒரூஉத்தொடை (தனிச்சொல்) இன்றிவருவன இன்னிசைப் பஃறொடை எனவும் வழங்கப்படும்.

என ஓதினமையாற் புணர்தல் முதலாகிய பொருள்களுள் யாதானும் ஒருபொருளைக் குறித்துத் திரிபின்றி முடியும் பஃறொடை வெண்பாவினைக் கலிவெண்பா எனவும், குறள்வெண்பா முதலாகிய எல்லா வெண்பாக்களுங் கொச்சகக்கலிக்கு உறுப்பாய் வரிற் கொச்சகம் எனவும், பரிபாடற்கு உறுப்பாய் வரிற் பரிபாடலெனவுங் கொள்ளப்படும்.[1]

கைக்கிளை என்பது கைக்கிளைப் பொருண்மை. மேற்சொல்லப்பட்ட வெண்பாக்கள் இப்பொருள்மேல் வரிற் கைக்கிளை வெண்பா எனப்படும்.

> "பொன்னார மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபேர்
> உன்னேனென் றூழுலக்கை பற்றினேற்—கன்னோ
> மனனோடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்
> புனல்நாடன் பேரே வரும்." (யாப். வி. பக். சுஉ)

கைக்கிளை வெண்பா யாப்பினால் வரும் எனவே, ஆசிரியப் பாவினால் வரப்பெறாதென்பதும், வந்ததேயாயினும் பாடாண் பாட்டுக் கைக்கிளை யாகுமெனவும் கொள்ளப்படும்.

பரிபாட்டும் அங்கதமும் தத்தஞ் சிறப்புச் சூத்திரத்துட் சொல்லுதும்.[2] (ஙமிசு)

---

1. யாதானும் ஒருபொருளைக்குறித்துத் திரிபின்றி முடியும் பஃறொடை வெண்பா கலிவெண்பா எனக் கலிப்பாவகையுள் வைத்து எண்ணப்பெறும் என்பது!

'ஒருபொருள் நுதலிய வெள்ளடி யியலாற்
றிரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே' (செய்-஌சஎ)

என இவ்வியலிற் பின்வரும் சூத்திரத்தால் விரித்துரைக்கப்பெற்றது.

இங்குக் கூறப்பட்ட குறள்வெண்பா முதலிய எல்லா வெண்பாக்களும் கொச்சகக் கலிக்கு உறுப்பாய் வரிற் கொச்சகம் எனவும், பரிபாடற்கு உறுப்பாய் வரிற் பரிபாடல் எனவும் கொள்ளப்படும் என்பர் இளம்பூரணர்.

2. கைக்கிளை என்பது ஒருதலைக் காமமாகிய ஒழுகலாறு. இப்பொருள்பற்றி மேற்சொல்லப்பட்ட வெண்பாக்கள் வரின் அவை கைக்கிளை வெண்பா என வழங்கப்படும். கைக்கிளைப் பொருண்மை வெண்பா யாப்பினால் வரும் என எடுத்தோதவே அப்பொருண்மை ஆசிரியப்பாவினால் வரப்பெறாதென்பதும், ஒருகால்வரின் அது பாடாண்பாட்டுக்கைக்கிளை யெனப்படும் எனவும் விளக்கந்தருவர் இளம்பூரணர்.

**பேராசிரியம் :**

இது, வெண்பாவென்னும் உறுப்பினை இன்னுழிப் பாவாமெனப் பொருளுஞ் செய்யுளும் பற்றி வரையறுக்கின்றது.

(இ - ள்.) நெடுவெண்பாட்டுங் குறுவெண்பாட்டுங் கைக்கிளையும் பரிபாடலும் அங்கதச் செய்யுளுமென ஐந்துந் தம்மின் ஒத்து வெண்பாவென்னும் உறுப்பினானே வகுக்கப்படும் (எ-று)

**நெடுவெண்பாட்டென்பன:** தாமுடைய பன்னீரடி உயர்பு, இழிபு ஏழடியாக வருவனவென்பது; எனவே, நாற்சீர், அளவடி. யாயினாற்போல நாலடியான் வருதலே அளவிற்பட்டதாகலான் ஐந்தடி முதலாக வருவனவெல்லாம் நெடுவெண்பாட்டென்றலே வலியுடைத்து. **குறுவெண்பாட்டென்பன:** இரண்டடியான் மூன்றடியான் வருவன: **குறள் வெண்பா சிந்தியல் வெண்பா** வெனப்படலும் ஒன்று;[1] எனவே நான்கடியான் வருவன **அளவியல் வெண்பா** வெனப்படும். கைக்கிளைப் பொருண்மைத்-தாகலின் மருட்பாவினையுங் 'கைக்கிளை' யென்றான் [2] பரிபாட லென்பது பரிந்துவருவது: அஃதாவது கலியுறுப்புப்போலாது பலவடியும் ஏற்று வருவது.[3] அங்கதமென்பது, முகவிலக்கு முதலாகிய விலக்குறுப்பாகியும் பிறவாற்றானும் அவை பொருளாக வருவன [4] 'ஒத்து' என்பது இலக்கணத்தில் திரியா-தென்றவாறு.[5] இதனது பயம்: கைக்கிளை வெண்பாவினான்

---

1. நாற்சீர் அளவடியானாற்போல நாலடியான் வருவதே அளவிற்பட்ட செய்யுளாதலின் வெண்பா என்னும் உறுப்பமைந்த செய்யுட்களுள் நாலடியால் வருவன அளவியல் வெண்பாவாகும். நாலடியின் மேல் ஐந்தடிமுதலாக வருவன வெல்லாம் நெடுவெண்பாட்டெனப்படும். நாலடியிற்குறைந்து மூன்றடியாலும் இரண்டடியாலும் வருவன குறுவெண்பாட்டெனப்படும். மூன்றடியால் வரும் குறுவெண்பாட்டினைச் சிந்தியல் வெண்பா எனவும், இரண்டடியால் வரும் குறுவெண்பாட்டினைக் குறள்வெண்பா எனவும் வழங்குவர்.

2. கைக்கிளைப் பொருண்மைத்தாகிய மருட்பாவினைக் 'கைக்கிளை' யெனப் பொருள்வகையாற் பெயர் கொடுத்தார்.

3. பரிபாடல் என்பது கலியுறுப்புப்போலன்றிப் பலவடிகளையும் ஏற்று வரும் பாடலாகும்.

4. ''அங்கதம் என்பது முகவிலக்கு முதலிய விலக்குறுப்பாகியும் பிறவாற்-றானும் வசைபொருளாகி வருவன'' எனத் திருத்துக

5. 'ஒத்தவையெல்லாம்' என்புழி ஒத்தல் என்றது, வெண்பா என்னும் பாவுறுப்பிற் றிரியாமை இலக்கணத்தால் ஒத்தமைதலை.

வரினுங் கலிப்பாவின்பாற் படுமென்பது பரிபாடலுஞ் சிற்றுறுப்பு வகையான் ஒப்புமையுடையவென்பது கொள்க. அல்லதூஉங் குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டும் பலவாகியும் ஒன்றாய் அடங்குமென்பதூஉமாம்.[1]

இனி, அல்லாதார் வெண்பாவினை ஐந்தெனவுஞ் சொல்லுப.[2] அவை தனிச்சொற் பெற்றும் பெறாதும் வரு-மெனவும் அவ்வாறு வருங்கால் ஈற்றடி ஒழித்து எல்லாந் தனிச்-சொற்பெறுதலும் அவற்றை ஒன்றொன்றனோடு பரிமாற்றித் தனிச்சொற் கொடுத்து உறழ்வனவுமாகிப் பலவாமென்பது.

அங்கதச்செய்யுளென்பது பண்புத்தொகை.[3] உம்மைத் தொகையென்பார், செய்யுளென்பதும் வேறென்ப[4] அதற்கு விடை முன்னர்ச் சொல்லுதும்; "எல்லாம் வெண்பா யாப்பின" என்பதனை, செயற்படுத்தவற்றுள் அங்கதமுங் கைக்கிளையும் மற்றைப் பாக்களும் உறுப்பாக வருமென்பதுபடும். (௧௧அ)

---

1. கைக்கிளைச் செய்யுள் வெண்பாவுறுப்பினால் வரினும் பொருள் வகையாற் கலிப்பாவின் பாற்படும் என்பதும், பரிபாடலுஞ் சிற்றுறுப்பு வகையால் வெண்பாவுறுப்பினோடு ஒப்புமையுடைய வென்பதும், குறுவெண்பாட்டும் நெடு வெண்பாட்டும் பலவாகி வந்து ஒருபாட்டாய் அடங்கும் என்பதும் இச்சூத்திரத் தின் பயன் என்பர் பேராசிரியர்.

2. அல்லாதார் என்றது, தொல்காப்பியனார்க்குக் காலத்தாற்பிற்பட்ட யாப்பிலக்கண நூலாசிரியரை. குறள்வெண்பா, சிந்தியல் வெண்பா, இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா, பஃறொடைவெண்பா என வெண்பா ஐந்து வகைப்படும் என்பர் பிற்கால யாப்பிலக்கண நூலாசிரியர்கள்.

'குறள்சிந் தின்னிசை நேரிசை பஃறொடை
எனவைந் தாகும் வெண்பாத் தானே' (58)

என்பது யாப்பருங்கலம்,

குறள் வெண்பாவினை ஒரடிமுக்கால் என்றும், சிந்தியல் வெண்பாவினை ஈரடி முக்கால் என்றும், நேரிசை வெண்பாவினை நேரிசை மூவடி முக்கால் என்றும், இன்னிசை வெண்பாவினை இன்னிசை மூவடி முக்கால் என்றும், பஃறொடைவெண்பாவினைப் பலவடி முக்கால் என்றும் வழங்குவர் ஒருசாராசிரி-யர். செப்பலோசையிற் சிதைந்த பஃறொடை வெண்பாவினைக் கலிவெண்பா வெனவும் அல்லாத வெண்பாக்களது சிதைவினை ஒருபுடையொப்புமை நோக்கித் தத்தம் இனமாகவும் வழங்கப்படும் எனவும் கூறுவர் யாப்பருங்கலவுரையாசிரியர்.

3. அங்கதமாகிய செய்யுள் என விரியும். அங்கதம் - வசை.

4. உம்மைத்தொகையாகக்கொண்டு அங்கதமும் செய்யுளும் என உம்மை விரித்துரைப்போர் 'செய்யுள்' என்பதனை ஒருவகைச் செய்யுள் வகையினைக் குறித்த பெயராகக் கொள்வர்.

**நச்சினார்க்கினியம் :**

இது வெண்பாவென்னு முறுப்பினை இன்னுழியாமெனப் பொருளுஞ் செய்யுளும்பற்றி வரையறுக்கின்றது.

(இ-ள்.) முற்கூறிய நெடுவெண்பாட்டுங் குறுவெண்பாட்டுங் கைக்கிளைப் பொருண்மேல் வருஞ் செய்யுளும் பரிபாடற் செய்யுளும் வசை யாகிய பொருண் மேல்வருஞ் செய்யுளுமென்ற ஐந்துந் தம்மினொத்த செய்யுளெல்லாம் வெண்பாவென்னு முறுப்பினான் யாக்கப்படுந் தன்மையையுடைய. எ-று

எனவே. பெரும்பான்மை குறித்த பொருளை மறையாமற் செப்பிக் கூறலே அதற்கிலக்கணமாயிற்று.[1]

"முன்னைய நான்கும்" (தொல். பொ. அகத். ருஉ)

என்ற அகத்திணையியற் கைக்கிளையும்,

"கடவுளும் வரையார்" (தொல். பொ. புறத்-உஅ)

என்ற உம்மையாற்கொண்ட புறத்திணையியற்கைக்கிளையும்; அன்றிக்

"காமஞ் சாலா விளமை யோள்" (தொல். பொ. அகத்-ரு0)

என்ற கைக்கிளையும்,

"கைக்கிளை வகையோடு" (தொல். பொ. புறத்- ரு)

என்ற கைக்கிளையுட் கடவுட்கைக்கிளை யல்லாக் கைக்கிளையும் ஆகாவென்று கொள்க[2]

---

1. அதற்கு - வெண்பா என்னும் பாவுறுப்பிற்கு.

2. வெண்பா யாப்பிற்குரியனவாகச் சொல்லப்படும் கைக்கிளைப் பொருளாவன 'முன்னைய நான்கும்' (ருஉ) என அகத்திணையியலிற் கூறப்படும் அகப்புறக் கைக்கிளைப் பொருண்மையும், புறத்திணையியலிற் 'காமப்பகுதி கடவுளும் வரையார்' என்றவும்மையாற் கொள்ளப்படும் புறப்புறக் கைக்கிளைப் பொருண்மையும், கடவுள்மாட்டுக் கொண்ட கைக்கிளைப் பொருண்மையுமாகும். இவையன்றி அகத்திணையியலிற் 'காமஞ் சாலா விளமை யோள்'வழி' (அகத் - ரு0) கொள்ளப்படும் கைக்கிளையும், புறத்திணையியலிற் 'கைக்கிளைவகை' எனக் குறிக்கப்பட்டவற்றுட் கடவுண்மாட்டுக் கொள்ளப்படும் கைக்கிளையல்லாத கைக்கிளைப் பொருண்மையும் வெண்பா யாப்பிற்கு உரியவாகா எனக்கொள்க என்பதாம்.

உ-ம். "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கணங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு"
(திருக்குறள்-௲௦அக)

இஃது அகப்புறக்கைக்கிளை.

"களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை
யளியா னளிப்பானே போன்றான் - றெளியாது
செங்காந்தண் மெல்விரலாற் சேக்கை தடவந்தே
னென்காண்பே னென்னலால் யான்"
(முத்தொள்ளாயிரம்)

"மங்குன் மனங்கடைஇ மான்மாலை நின்றேற்குப்
பொங்கு மருவிப் புனனாடன் - கங்குல்
வருவான்கொல் வந்தென் வனமுலைமேல் வைகித்
தருவான்கொன் மார்பணிந்த தார்"
(முத்தொள்ளாயிரம்)

இவை சுட்டி ஒருவர்ப் பெயர்கோடலிற் புறப்புறக்கைக்கிளை.

குடுமிப் பருவத்தே கோதை புனைந்த
நெடுமுத்தம் பூத னிருப்பப் படுமுத்தம்
புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையாய்க்
கென்னை முறைய ளிவள்"

இது கடவுட்கைக்கிளை.

இனி
"முன்னைய மூன்றும்" (தொ. பொ. களஅ-௬சு)
எனக் களவியலுட் கூறிய கைக்கிளையிலும் வருமேனும் உணர்க.

இனி ஒருபொருணுதலாது திரிந்துவருங் கலிவெண்பாட்டும் ஈண்டுக் கூறிய நெடுவெண்பாட்டோடு ஒருபுடை யொப்புமை-யுடைமையின் அக் கலிவெண்பாட்டாக இக்காலத்தோர் கூறுகின்ற உலாச்செய்யுளும் புறப்புறக் கைக்கிளைப் பொருட்டா தல் ஒன்றெனமுடித்தல் என்னும் உத்தியாற் கொள்க. அவ்-வுலாச்செய்யுள் இரண்டுறுப்பாயும் வெண்பாவிற் கெட்டும் வருதலிற் கலிவெண்பாவின் கூறாமாறு ஆண்டுக் கூறுதும். இக்-காலத்து அதனை ஒருறுப்பாகச் செய்து செப்பலோசையாகவுங் கூறுவர்; அது துள்ளலோசைக்கே யேற்குமாறுணர்க.

பரிபாடலென்பது பரிந்து வருவது; அது கலியுறுப்புப்போலாது நான்கு பாவானும் வந்து பலவடியும் வருமாறு நிற்குமென்றுணர்க. அது மேற்காண்க. அங்கதச்செய்யுள் பண்புத்தொகை; அஃதிருவகையாதல் மேற்கூறுதும்.

**ஆய்வுரை :**

இது, வெண்பாவாமாறு உணர்த்துகின்றது என இளம்பூரணரும், இது வெண்பாவுக்குரிய 'பா' என்னும் உறுப்பினைப் பொருளும் செய்யுளும் பற்றி வரையறுக்கின்றது எனப் பேராசிரியரும் கருத்துரைப்பர்.

(இ-ள்) நெடுவெண்பாட்டு, குறுவெண்பாட்டு, கைக்கிளை, பரிபாட்டு, அங்கதச்செய்யுள் எனச் சொல்லப்பட்டனவும் அளவு ஒத்தனவும் எல்லாம் வெண்பா யாப்பின எ-று.

வெண்பா யாப்பாவது, வெண்சீரானும் இயற்சீரானும் வெண்டளையானும் செப்பலோசையானும் அளவடியானும் முச்சீரற்றடியானும் வருவது இவையெல்லாம் ஓசையால் ஒக்குமாயினும் அளவாலுந் தொடையாலும் பொருளாலும் இனத்தாலும் வேறுபடுத்திக் குறியிடுகின்றார். நான்கினை அளவென்றும் நான்கின் மிக்கவற்றை நெடிலென்றும் குறைந்தவற்றைக் குறள், சிந்து என்றும் தொல்காப்பியர் வழங்குவர். ஆதலின், இவற்றுள் பொருளாலும் இனத்தாலும் வேறுபடுக்கப்படாத வெண்பாக்கள் நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் ஒத்தவையும் (சமனிலை வெண்பாட்டும்) எனமூவகையாம்.

நெடுவெண்பாட்டு என்பது, நான்கின் மிக்க அடிகளையுடையதாய் வரும் வெண்பாவாகிய பாட்டாகும். ஐந்தடி முதல் பன்னிரண்டடியளவும் வரும் நெடுவெண்பாட்டைப் பிற்காலத்தார் பஃறொடை வெண்பா என வழங்குவர். ஒரூஉத் தொடை பெற்று வரும் பஃறொடை வெண்பாவினை நேரிசைப் பஃறொடை எனவும், ஒரூஉத்தொடையின்றி வரும் பஃறொடை வெண்பாவினை இன்னிசைப் பஃறொடையென்றும் வழங்குதலுண்டு.

குறுவெண்பாட்டாவது, அளவிற் குறுகிய வெண்பாட்டு. இஃது இரண்டடியானும் மூன்றடியானும் வரும். இரண்டடியும் ஒரு தொடையான் வருவன குறள் வெண்பா எனவும், விகற்பத் தொடையான் வருவன விகற்பக் குறள் வெண்பா என்வும் கூறுவர்.

மூன்றடியும் ஒரு தொடையான் ஒத்து வருவது இன்னிசைச் சிந்தியல் வெண்பா. வேறுபட்ட தொடையான் வருவது நேரிசைச் சிந்தியல் வெண்பா

கைக்கிளைத் திணை பொருளாக வரும் வெண்பா கைக்கிளை வெண்பா எனவும், அங்கதப்பொருள் பற்றி வரும் வெண்பா அங்கத வெண்பா எனவும் வழங்கப்படும்.

பரிபாட்டாவது பரிந்து (பலவடிகளையும் சுமந்து) வரும் பாட்டாகும். அஃதாவது ஒரு வெண்பாவாக வருதலின்றிப் பலவுறுப்புக்களோடு தொடர்ந்து முற்றுப்பெறுவது.

அங்கதம் என்பது வசை. அங்கதச் செய்யுள் அங்கதமாகிய செய்யுள் எனப் பண்புத்தொகையாகும்.

ஒத்தவை என்பன, அளவாலும் பொருளாலும் இனத்தாலும் வேறுபடுக்கப்படாத சமனிலை வெண்பாக்களாம். அவையாவன நான்கடியால் வருவன. இவை 'அளவியல் வெண்பா' எனவும் வழங்கப்படுவன.

"ஒருபொருள் நுதலிய வெள்ளடி யியலாற்
றிரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே" (செய் - 147)

என ஆசிரியர் ஓதினமையாற் புணர்தல் முதலாகிய (உரிப்) பொருள்களுள் யாதானும் ஒரு பொருளைக் குறித்துத் திரிபின்றி முடியும் பஃறொடை வெண்பாவினைக் கலிவெண்பா எனவும், குறள் வெண்பா முதலிய எல்லா வெண்பாக்களும் கொச்சகக் கலிக்கு உறுப்பாய்வரின் கொச்சகம் எனவும், பரிபாடற்கு உறுப்பாய் வரின் பரிபாடல் எனவும் கொள்ளப்படும் என்பர் இளம்பூரணர்.

"இனி ஒரு பொருள் நுதலாது திரிந்துவரும் கலிவெண்பாட்டும் ஈண்டுக் கூறிய நெடுவெண்பாட்டோடு ஒருபுடையொப்புமை யுடைமையின், அக்கலிவெண் பாட்டாக இக்காலத்தார் கூறுகின்ற உலாச்செய்யுளும் புறப்புறக் கைக்கிளைப் பொருட்டாதல் ஒன்றென முடித்தல் என்னும் உத்தியாற் கொள்க. அவ்வுலாச் செய்யுள் இரண்டுறுப்பாயும் வெண்பாவிற் கெட்டும் வருதலிற் கலிவெண்பாவின் கூறாமாறு ஆண்டுக் கூறுதும். இக்காலத்து அதனை ஒருறுப்பாகச் செய்து செப்பலோசையாகவுங் கூறுவர். அது துள்ளலோசைக்கே ஏற்குமாறுணர்க" எனவரும் நச்சினார்க்கினியர் உரைப்பகுதி இங்கு நோக்கற்பாலதாகும்.

ளயிரு கைக்கிளை தானே வெண்பா வாகி
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே.

**இளம்பூரணம் :**

என்—எனின். எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) கைக்கிளைப் பொருண்மை வெண்பாவினால் வருத-லின்றி முதலிரண்டடியும் வெண்பாவாகிக் கடையிரண்டடியும் ஆசிரியமாகி இருபாவினாலும் வரும் என்றவாறு.

இவ்வாறு வருவதனை மருட்பா என்ப. இக்கருத்தினானே மேல்,

"மருட்பா ஏனை இருசார் அல்லது
தானிது என்னுந் தன்மை இன்றே"
(தொல். செய். அக)

என ஓதினார் என்று கொள்க.[1] அது,

"உரவொலி முந்நீர் உலாய்நிமிர்ந் தன்ன
கரவரு காமங் கனல—இரவெதிர
முள்ளெயி றிலங்கு முகிழ்நகை
வெள்வளை நல்காள் வீடுமென் உயிரே"
(பு. வெ. கைக்கிளை — ரு)

என வரும். (ககரு)

**பேராசிரியம் :**

இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வெண்பா உறுப்பாகி வருமென்றான், அற்றன்றி வெண்பாவினோடு ஆசிரியப்பாவும் உறுப்பாகக் கைக்கிளை வரும் (எ - று).

அங்ஙனம் வருவது மருட்பா வாகலாற் கைக்கிளைப் பொருளே மருட்பாவிற் குரித்தென்பது பெற்றாம்:[2] பெறவே

---

1. வெண்பா முன்வந்து ஆசிரியம் பின்னாகி முடிவது மருட்பா என்பதனை
'மருட்பா ஏனை இருசா ரல்லது
தானிது வென்னுந் தன்மை யின்றே' (செய். அக)
என்ற சூத்திரத்தால் ஆசிரியர் முன்னர் விளக்கியுள்ளார் என்பதாம்.

2. வெண்பா வுறுப்பாகிக் கைக்கிளைப்பொருள் வருமென மேலைச்சூத்திரத்-திற்கூறிய ஆசிரியர், வெண்பாவினோடு ஆசிரியப்பாவும் உறுப்பாகக் கைக்கிளை வரும் என ஈண்டுக்கூறியதனால் அங்ஙனம் வெண்பா முன்வந்து அகவல் பின்னாகி முடிவது மருட்பாவாதலின் மருட்பா கைக்கிளைப் பொருள்பற்றிவரும் என்பது பெறப்படும்.

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறா"
(தொல் - செய் - 110)

என்புழி, விலக்கப்படாத ஆசிரியப்பாவும், வெண்பாவும் உறுப்பாக வருதலின் வாழ்த்தியல் வகையும் புறநிலைவாழ்த்து முதலாயினவும் கைக்கிளை(யும்) பொருளாக வரும் மருட்பா வென்பது பெற்றாம்.[1] கைக்கிளை யதிகாரப் பட்டது கண்டு அதனை ஈண்டுக் கூறினான். ஒழிந்த புறநிலை வாயுறை செவியறிவுறூஉக்களும் பொருளாக மருட்பா வருமென்பது முன்னர் அளவியலுள் (செய் 160) சொல்லுதும். இவற்றுக்-கெல்லாஞ் செய்யுள் ஆண்டுக் காட்டுதும். (கககூ)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

(இ-ள்) கைக்கிளைதான் முன்பு வெண்பாவுறுப்பாகிப் பின்பு ஆசிரியப்பா உறுப்பாக வரவும்பெறும். எ-று.

இங்ஙனம் வருவது மருட்பா ஆவதூஉம், அதுதான் அகப் புறக்கைக்கிளை[2] யென்பதூஉம் உணர்க.

உதாரணம். '.திருநுதல் வேரரும்புந் ... ... தணங்கே"
(புறப்பொருள் வெண்பாமாலை-கைக்கிளை)

எனவரும்.

**ஆய்வுரை :**

இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்) கைக்கிளைப் பொருண்மைதான் வெண்பாவாக வருதலேயன்றி, முதலிரண்டடியும் வெண்பாவாகிக் கடை-யிரண்டடியும் ஆசிரியமாகி இருபாவினாலும் வரவும் பெறும் எ-று.

இவ்வாறு வருவதனை மருட்பா என்பர் ஆசிரியர். இக் கருத்தினானே "மருட்பா ஏனை இருசா ரல்லது, தானிது வென்னுந் தன்மை யின்றே" (செய்-81) என ஓதினார் என்று கொள்க.

---

1. புறநிலை முதலிய வாழ்த்துதற் பொருண்மை கலிப்பா வஞ்சிப்பா இரண்டிற்கு மட்டுமே விலக்கப்பட்டமையின் அங்ஙனம் விலக்கப்படாத ஆசிரியப்-பாவும் வெண்பாவும் உறுப்பாகவரும் மருட்பா, புறநிலைவாழ்த்து வாயுறை-வாழ்த்து, செவியறிவுறூஉ, கைக்கிளை என்பன பொருளாகவரும் என்பது பெறப்படும்.

2. அகப்புறக் கைக்கிளை என்றது, அகனைந்திணையின் முன்னர் நிகழ்-தற்பாலதாகிய ஒருதலைக்காமமாகிய கைக்கிளைப் பொருண்மையினை.

ளயிகூ பரிபா டல்லே தொகைநிலை வகையின்[1]
இதுபா என்னும் இயனெறி இன்றிப்
பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப.

**இளம்பூரணம் :**

என்—எனின். பரிபாடலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்). பரிபாடலாவது தொகைநிலை வகையாற் பா இது என்று சொல்லப்படும் இலக்கணம் இன்றி எல்லாப் பாவிற்கும் பொதுவாய் நிற்றற்கு முரித்தென்று சொல்லுவர் என்றவாறு.

உம்மை எச்சவும்மை யாகலான் இலக்கணங் கூறவும்படும்[2]. அது வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

பொதுவாய் நிற்றலாவது,

''ஆசிரியம் வஞ்சி வெண்பா கலிமருட்பா
(செய்யுளியல். கக)

என்றோதப்பட்ட எல்லாப்பாவின் உறுப்பும் உடைத்தாதல்.
(கககூ)

**பேராசிரியம் :**

இது. பரிபாடற் காவதோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பரிபாடல் வெண்பாவுறுப்பாக வரினும் இன்ன பா வென்ப துணராமைப் பொதுப்பட நிற்றற்கும் உரித்து (எ-று).

''மண்ணார்ந் திசைத்த முழவொடு கொண்டதோள்
கண்ணோ டெனவிழூஉங் காரிகை கண்டார்க்குத்
தம்மோடு நிற்குமோ நெஞ்சு'' (கடவுள் வாழ்த்து)

எனப் பரிபாடல் வெண்பா உறுப்பாக வந்தது.

---

1. 'தொகை நிலைவிரியின்' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

2. தனக்கெனவரைந்து கூறப்படும் பாவுறுப்பின்றி ஆசிரியம், வஞ்சி வெண்பா, கலி என்னும் நால்வகைப்பாவினது ஓசையும் பெற்று வருவது பரிபாடல் என்பார், 'தொகை நிலைவகையின் இது பா என்னும் இயல்நெறியின்றி' என்றார். 'பொதுவாய் நிற்றற்கும்' என்புழிஉம்மை, எதிரது தழீஇய எச்சவும்மையாதலால், அடுத்துவரும் சூத்திரத்தில் உள்ளவாறு சிறப்புமுறையில் இலக்கணங்கூறவும் பெறும் என்பதாம்.

"ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலைத்
தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர" (பரி. 1)

என்பது வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராய் வந்து துள்ளலோசைபடச் சொல்லவும்படுதலின்,

"இதுபா வென்னும் இயனெறி யின்றிப்
பொதுவாய் நின்றது"

எனப்படும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று. மற்று இது கலிப்பாட்டிற்கும் ஒக்கும் பிறவெனின், ஒவ்வாததாகாதே[1] ஆசிரியன் இவ்வாறு கூறினமையினென்பது.[2] அல்லதூஉங் கலிக்கு ஓதிய இலக்கண மின்மையானும் பரிபாடலெனவே படும் பெரும்பான்மையு மென்பது. தொகுத்து விரித்த பா நான்கனுள்ளும் அடங்காது வேறாங்கால் அது வெண்பாவினான் யாக்கப்படாது பொது-வகையான் யாக்கப்படுமென்றவாறு.[3] (கூஉ0)

**நச்சினார்க்கினியம் :**

இது பரிபாடற்காவதோர் புறநடை கூறுகின்றது.

(இ-ள்.) பரி ... லே. எ-து, பரிபாடல் முற்கூறியவாறே வெண்பாவுறுப்பான் வருதலேயன்றி. தொகை ... ... யின். எ-து, தொகை நிலையும் விரியுமாகக் கூறிய பா நான்கனுள்.[4] இது ...... றி. எ-து, இது பாவென்றறியப்படும் இயல்வழியின்றி. பொது... .. ப. எ-து, பொதுப்பட யாக்கப்பட்டு நிற்றற்கும் உரித்தென்று கூறுப. எ-று.

---

1. ஒவ்வாததாகாதே - ஒக்குமல்லவா? இரண்டெதிர் மறை ஒருடன் பாட்டினையுணர்த்தியது.

2. பொதுவாய் நிற்றற்கும் உரித்து என்று கூறினமையின்

3. முற்கூறியவாறு பரிபாடல் வெண்பாவுறுப்பாக வரினும் அஃது ஆசிரியம் வெண்பா என இரண்டாகத் தொகுத்தும் ஆசிரிய நடைத்து வஞ்சி, வெண்பா-நடையது கலி என விரித்தும் கூறிய பா நான்கனுள்ளும் அடங்காது வேறாய் எண்ணப்படுமிடத்து வெண்பாவொன்றினால் மட்டுமே யாக்கப்படாது வெண்பா ஆசிரியம் இரண்டற்கும் பொதுவகையால் யாக்கப்படும் என்பதாம்.

4. ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா என்னும் நால்வகைப் பாக்களையும் ஆசிரியம் வஞ்சி என இரண்டாகத் தொகுத்தும் ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா, மருட்பா, பரிபாடல் என ஆறாக விரித்தும் கூறுவராதலின் "தொகைநிலையும் விரியுமாகக் கூறிய பாநான்கனுள்" என்றார்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.[1]

உ-ம். 'மண்ணார்ந் திசைக்கு முழவொடு கொண்டதோள்
கண்ணா துடன்வீழுங் காரிகை கண்டோர்க்குத்
தம்மோடு நிற்குமோ நெஞ்சு''

எனப் பரிபாடல் வெண்பாவுறுப்பான் வந்தது

''ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை
தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர''

எ-து, வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராஅய்த் துள்ள-லோசைபடவுங்கூறப்படுதலின் இது பாவென்னு மியனெறியின்றிப் பொதுவாய்நின்றது கலிக்கும் இதற்கும் வேறுபாடுள என்பது கலிக்கோதிய இலக்கணங்கள் இதற் கின்மையானும் ஆசிரியர் இவ்வாறு வேறுகூறலானும் பெறுதும்.[2]

**ஆய்வுரை :**

இது, பரிபாடற்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ-ள்) பரிபாடல், முற்கூறிய வெண்பா வுறுப்பான் வருதலே யன்றித் தொகை நிலையும் விரியுமாகக் கூறிய பா நான்கனுள் இன்ன பா என்றறியப்படும் இயல்வழியின்றிப் பொதுப்பட யாக்கப்பட்டு நிற்றற்கும் உரியதாகும் என்பர் ஆசிரியர் எ - று.

பொதுப்பட யாக்கப்பட்டு நிற்றலாவது. ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி, மருட்பா என்றோதப்பட்ட எல்லாப் பாவின் உறுப்பும் உடையதாதல்.

**ளயஎ. கொச்சகம் அராகஞ் சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்.**

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவுமது.

---

1. பரிபாடல் முற்கூறியபடி வெண்பா யாப்பிற்குச் சிறப்புரிமை யுடையதாக நிற்றலேயன்றி மேற்கூறிய நால்வகைப் பாவிற்கும் பொதுவாய் நிற்றற்-கும் உரித்து என்றாராதலின் 'பொதுவாய் நிற்றற்கும்' என்ற உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மையாயிற்று.

2. கலிப்பாவிற்கு ஓதிய இலக்கணங்கள் பரிபாடற்கு இல்லாமையாலும் தொல்காப்பியனார் பரிபாடலைக் கலிப்பாவின் வேறு பிரித்துக் கூறு-தலாலும் கலிப்பாவிற்கும் பரிபாடற்கும் வேறுபாடு உள்ளன என்பது பெறப்படும்.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட பரிபாடற் பாட்டுப் பொது வாய்நிற்றலேயன்றிக் கொச்சகமும் அராகமும் சுரிதகமும் எருத்தும் என்று சொல்லப்பட்ட நான்குந் தனக்குறுப்பாகக் காமங் கண்ணிய நிலைமையை உடைத்து என்றவாறு.[1]

எனவே, அறத்தினும் பொருளினும் வாராதாம்.

"வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே"
(தொல். செய். கOரு)

எனச் சிறப்புவிதி யோதினமையால் நான்கு பாவினும் பரிபாடல் வெண்பா யாப்பிற்றாதலிற் கடவுள் வாழ்த்தாகியும் வரப்பெறும்.[2] கொச்சகமென்பது ஐஞ்சீரடுக்கி வருவனவும் ஆசிரியவடி, வெண்பாவடி, வஞ்சியடி, கலியடி, சொற்சீரடி, முடுகியலடி என்று சொல்லப்பட்ட அறுவகையடியானும் அமைந்த பாக்களை உறுப்பாக வுடைத்தாகி வெண்பா வியலாற் புலப்படத் தோன்றுவது. இதனுட்,

"சொற்சீ ரடியும் முடுகியல் அடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும்"
(செய்யுளியல். கூகஅ)

1. கொச்சகம், அராகம். சுரிதகம், எருத்து என்பனவற்றைத் தனக்குரிய உறுப்புக்களாகப் பெற்றுக் காமப்பொருண்மை குறித்து வருதல் பரிபாடற்குரிய சிறப்பியல்பாகும் என்றவாறு.

2. அறமுதலாகிய மும்முதற்பொருள்களுள் காமங்கண்ணிய நிலைமைத்தாய் வருவது பரிபாடல் எனவே, ஏனைய அறம் பற்றியும் பொருள்பற்றியும் வாராதென்பதாயிற்று. எனினும், 'வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே' என ஆசிரியர் சிறப்பு விதி கூறினமையாலும் நான்கு பாவினும் பரிபாடல் வெண்பாயாப்பிற்றாதலானும் பரிபாடல் கடவுள்வாழ்த்தாகியும் வரப்பெறும் என விளக்கந் தந்தார் இளம்பூரணர். இவ்விளக்கம் சங்கச்செய்யுட்களாகிய எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரிபாடலை யுளங்கொண்டு எழுதப்பெற்றதெனத் தெரிகிறது. 'காமங் கண்ணிய நிலைமைத் தாகும்' என்றதொடர் உலகியலில் அகத்திணையொழுகலாறாகிய காமப்பொருண்மையுடன்,

'காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினுமென்மனார் புலவர்' (தொல். புறத். உரு)

எனப் பாடாண்பகுதி பற்றிய காமப்பொருண்மையினையும் ஒருங்குசுட்டி நிற்றலால், எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரிபாடலும் கடவுள்வாழ்த்தாகவும் காமங்கண்ணிய நிலைமைத்தாகவும் தொல்காப்பியனார் கூறிய பரிபாடல் இலக்கணத்திற்கு ஒத்த இலக்கியமாக அமைந்துள்ளமை கூர்ந்துணரத்தகுவதாகும்.

என வேறு ஓதுதலின், ஏனை நான்குங் கொச்சகப் பொருளாகக் கொள்ளப்படும்.[1]

"தரவும் போக்கும் இயிடைடை மிடைந்தும்
ஐஞ்சீ ரடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே"
(செய்யுளியல் கரூஅ)

என்றாராகலின், இவ்விலக்கணத்தானே பரிபாடலுட் கொச்சகம் வரும் வழித் தரவுஞ் சுரிதகமும் இடையிடை வருதலுங் கொள்க.[2] 'வெண்பா வியலான்' என்றதனால் தன்தளையானும் பிறதளையானும் வந்து ஈற்றடி முச்சீரான் வருவனவெல்லாங் கொள்க.[3]

அராகமென்பது ஈரடியானும் பலவடியானுங் குற்றெழுத்து நெருங்கி வரத் தொடுப்பது. பெருமைக்கெல்லை ஆறடி. என்னை?

"அராகந் தாமே நான்காய் ஒரோவொன்று
வீதலும் உடைய மூவிரண் டடியே",

"ஈரடி யாகு மிழிபிற் கெல்லை"

என அகத்தியனார் ஓதுதலின்.[4]

---

1. ஏனை நான்காவன: ஆசிரியவடி, வெண்பாவடி, வஞ்சியடி, கலியடி என்பன. இந்நால்வகையடிகளே கொச்சகப்பாவின் அமைப்புக்குச் சிறப்புமுறையில் உரியவாகக் கொள்ளப்படும் என்பதாம்.

5. 'தரவும் போக்கும் இடையிடை மிடைந்தும்(செய்யுளியல்-ளசஅ) எனக் கொச்சகக் கலிக்குக்கூறிய இவ்விலக்கணத்தினால், பரிபாடலுள் கொச்சகம் வருமிடத்துத் தரவும் கொச்சகமும் இடையிடையே வருதலுங் கொள்ளப்படும் என்பதாம்.

3. 'வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும் பாநிலைவகையே கொச்சகக்கலி' என ஆசிரியர் கூறுதலால், வெண்டளையானும் பிறதளை யானும் வந்து ஈற்றடி முச்சீரால் முடியும் கொச்சகம் எல்லாம் பரிபாடற்கு உறுப்பாகக் கொள்ளப்படும் என்பதாம்.

4. இரண்டடியாலும் பலவடியாலும் குற்றெழுத்து நெருங்கிவரத் தொடுப்பது அராகம் என்னும் உறுப்பாகும். அதன் அடிவரையறை இரண்டடி இற்றெல்லையாகவும் ஆறடி பேரெல்லையாகவும் அமையும் என்பதற்கு அகத்தியனார் கூறிய இலக்கணச் சூத்திரங்களை இளம்பூரணர் தம்முரையில்

சுரிதகம் என்பது ஆசிரிய இயலானாதல் வெண்பா இயலானாதல் பாட்டிற் கருதிய பொருளை முடித்து நிற்பது.[1]

எருத்தென்பது இரண்டடி யிழிபாகப் பத்தடிப் பெருமையாக வருவதோ ருறுப்பு. பாட்டிற்கு முகம் தரவாதலானுங் கால் சுரிதக மாதலானும் இடைநிலைப் பாட்டாகிய தாழிசையுங் கொச்சகமு மராகமுங் கொள்ளக் கிடத்தலின் எருத்தென்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராக வேண்டுமாதலான் அவ்வுறுப்புத் தரவைச் சார்ந்து கிடத்தல் வேண்டுமென்று கொள்க.[2]

"தரவே எருத்த மராகங் கொச்சகம்
அடக்கியல் வகையோ டைந்துறுப் புடைத்தே''

என்பது அகத்தியமாதலின், தரவென்பதோருறுப்புங் கோடல் வேண்டு மெனின், இவ்வாசிரியர் 'கொச்சகம்' என ஓதியவதனானே தரவும் அவ் விலக்கணத்திற் படுமென்பது ஒன்று.[3] எருத்து என்பது இவ்வாசிரியர் கருத்தினால் தரவென்பது போலும்.[4]

---

முன்பக்கதொடர்ச்சி

இடையிடையே எடுத்துக் காட்டுதலால் அவர் காலத்தில் முந்துநூலாகிய அகத்தியம் முற்றிலும் இறந்தொழியாது சில சூத்திரங்களிலேனும் வழங்கி வந்ததென்பது நன்கு புலனாகும்.

1. ஆசிரியப்பாவின் இயல்பினாலாவது வெண்பாவின் இயல்பினாலாவது பாட்டிற் கூறிய பொருளை முடித்துக்கூறுவது சுரிதகம் என்னும் உறுப்பாகும்.

2. எருத்து என்னும் உறுப்பு இரண்டடி சிற்றெல்லையாகப் பத்தடி, பேரெல்லையாக வரும். தரவு என்னும் உறுப்பு பாட்டிற்கு முகமாகவும் சுரிதகம் அதன் காலாகவும் இடைநிலைப்பாட்டாகிய தாழிசை கொச்சகம் அராகம் என்பன இடையிலுள்ள ஏனையுறுப்புக்களாகவும் அமைந்து கிடத்தலானும் எருத்து என்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராதலானும் இங்குக் கூறப்படும் 'எருத்து' என்னும் உறுப்பு முகமாகிய தரவினைச்சார்ந்து அதன்பின் அமைதல் வேண்டும் எனக்கொண்டார் இளம்பூரணர்.

3. இங்கு எடுத்துக்காட்டப்பெற்ற அகத்தியச்சூத்திரத்தில் கொச்சகத்தின் வேறாகத் தரவு' என்பதோ ருறுப்புக் கூறப்பட்டதாயினும் ஆசிரியர் தொல்காப்பியனார் முதலுறுப்பாகக் கொச்சகத்தினைக் கூறியவதனால் முதலுறுப்பாகிய-தரவும் கொச்சகத்துள் அடங்கும் என அமைதி கூறலும் ஒன்று என்பதாம்.

4. ''எருத்து என்பது இவ்வாசிரியர் கருத்தினால் தரவென்பதுபோலும் என இளம்பூரணருரையிற் காணப்படும். இத்தொடர், 'எருத்து என்பது இது' என அவர் முன்னர் விளக்கிக் கூறிய விளக்கத்திற்கு முரணாய் ஐயம் விளைவித்தலின், இத்தொடர் பின்னர் ஏடெழுதுவோராற் சேர்த்தெழுதப்பெற்றதோ எனக் கருதவேண்டியுளது.

பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்படும்.

"அதுதான் மலையே யாறே யூரென் றிவற்றின்
நிலைபெறு மரபி னீங்கா தாகும்"

என்றாராகலின். இனிச் சுரிதகமின்றியும் பரிபாடல் முற்றுப்பெறும்

"கொச்சக வகையின் எண்ணொடு விராஅய்
அடக்கிய லின்றி அடங்கவும் பெறுமே"

என அகத்தியனார் ஓதுதலின். (ககஎ)

**பேராசிரியம்** :

இது, மேற்கூறிய வகையாற் பரிபாடற்கேற்ற பாவுறுப்பினையெடுத்து விரிகூறி[1] இத்துணை உள்ளுறுப்புடைத்தென்கின்றது[2] உள்ளுறுப்பெனக் கூறவேண்டுவதென்னை, பண்புபற்றி முப்பத்து நான்குறுப்பான் எண்ணப்படாவோவெனின், அவை எல்லாச் செய்யுட்கும் பொதுவாகலான் அவற்றோடெண்ணாது இவற்றை இப்பாவிற்குறுப்பாகக் கூறினானென்பது.[3] மேல்வருகின்ற கலியுறுப்பிற்கும் இஃதொக்கும்.

(இ - ள்) செப்பிய நான்குறுப்புங் கலிக்குறுப்பாகச் சொல்லப்பட்ட வகையானே வரும் அவை ஈண்டும் (எ - று)

'தனக்' கென்றதனான் அவையல்லா உறுப்புமுள வென்பது முன்னர்ச் சொல்லுதும்; "சொற்சீரடியும்" (தொல் செய் - 122) என்புழிக் காண்க.

கொச்சக மென்பது ஓப்பினாகிய பெயர். ஓராடையுள் ஒருவழியடுக்கியது கொச்சகமெனப்படும். அதுபோல ஒரு செய்யுளுட் பலகுறள் அடுக்கப்படுவது கொச்சகமெனப்பட்டது.[4] குறிலிணை

1. பரிபாடற்கேற்ற பாவுறுப்பாவன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என்னும் நான்குமாகும்.

2. உள்ளுறுப்பென்பன கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்து என இச்சூத்திரத்தில் எடுத்துரைக்கப்பட்டவை.

3. 'பொதுவாய் நிற்றற்கும் உரித்து' என மேற்குறித்த பாவுறுப்பு எல்லாச் செய்யுட்கும் பொதுவாகலான் அவற்றோடெண்ணாது கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்து என்னும் உள்ளுறுப்பாகிய இவற்றைப் பரிபாடற்குரிய சிறப்புறுப்பாக ஆசிரியர் எண்ணினார்.

4. ஓராடையுள் ஓரிடத்து மடித்து அடுக்கியல் அடுக்கு சொய்சகம் என வழங்கப்படும். அதுபோல ஒருசெய்யுளுட்பலகுறள் அடுக்கி வருவது கொச்சகம் என்னும் உறுப்பாகும். எனவே இது ஒப்பினாகிய பெயர் என்றார்.

பயின்ற அடி அராகமெனப்படும் சுரிதகமென்பது அடக்கிய-லெனப்படும். எருத்தென்பது தரவு. இவை நான்குறுப்பாக வருவது பரிபாடலென்றவாறு. பெரும்பான்மையும கொச்சக வுறுப்புப் பயின்றுவருதலின் அதனை முன்வைத்தான். அராகம் எழுவாயாகாமையின் அதனை இடை வைத்தான். சுரிதக மென்பது எஞ்ஞான்றும் ஈற்றதாகலான் அதனை அதன்பின் வைத்தான். எருத்தினை ஈற்றுக்கண் வைத்தான், அதனை யின்றியும் வரும் பரிபாடலென்றற்கும் இஃது இடைவருமென்-றற்கு மென்பது[1] உதாரணம் ;

> "வானா ரெழிலி மழைவள நந்தத்
> தேனார் சிமய மலையி னிழிதந்து
> நான்மாடக் கூட லெதிர்கொள்ள வானா
> மருந்தாகுந் தீநீர் மலிதுறை மேய
> இருந்தையூ ரமர்ந்த செல்வநின்
> றிருந்தடி தலையுறப் பரவுதுந் தொழுதே"
>
> (இது தரவு)
>
> "ஒருசார், அணிமலர்வேங்கை மராஅ மகிழம்
> பிணிநெகிழ் பிண்டி நிவந்துசேர் போங்கி
> மணிநிறங் கொண்ட மலை ;
>
> ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை
> வண்ண மரையிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
> விண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்
> கண்வீற் றிருக்குங் கயம்.
>
> ஒருசார், சாறுகொ ளோதத் திசையொடு மாறுற்
> றுழவி னோதை பயின்றறி விழந்து
> திரிநரு மார்த்து நடுநரு மீண்டித்
> திருநயத் தக்க வயல்.

1. பரிபாடலிற் பெரும்பான்மையும் பயின்று வருவது கொச்சகவுறுப்பா-தலின் அது முன்னர் வைக்கப்பெற்றது. அராகம் என்னும் உறுப்பு தொடக்கத்தின் கண் வாராது இடையே வருவதாதலின் இடையே வைக்கப்பெற்றது. பாடற்-பொருளை முடித்துக்கூறும் நிலையில் இறுதிக்கண் வருவது சுரிதகமாதலின் அராகத்தினை அடுத்துக் கூறப்பட்டது. 'எருத்து' என்னும் உறுப்பில்லாமலும் பரிபாடல் அமைதல் பற்றியும் இடையில் வருவது அவ்வுறுப்பென்பது பற்றியும் அஃது இறுதியிற் கூறப்பட்டது.

ஒருசார், அறத்தொடு வேதம் புணர் தவ முற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்திற் றிரிவில்லா வந்தண ரீண்டி
யறத்திற் றிரியா பதி'' (இவை நான்குஞ் சொச்சகம்)

''ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப வுடுப்பவை
மண்ணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்
விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்
களம ருழவர் கடிமறுகு பிறசார்;

ஆங்க, அனையவை நல்ல நனி கூடு மின்ப
மியல்கொள நண்ணி யவை'' (இது கொண்டுநிலை)

வண்டு பொரேரென வெழ
வண்டு பொரெரென வெழும்
கடிப்புகு வேரிக் கதவமிற் றோட்டிக்
கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர
மிளிர்மின் வாய்ந்த விளங்கொளி நுதலார்
ஊர்களிற் றன்ன செம்ம லோரும்
வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்
தொளியிழை யோங்கிய வொண்ணுத லோரும்
புலத்தோடளவிய புகழணிந்தோரும்
நலத்தோடளவிய நாணணிந்தோரும்
விடையோடிகலிய விறனடையோரும்
நடைமட மேவிய நாணணிந் தோரும்
கடனிரை திரையிற் கருநரை யோரும்
சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரும்
மடையர் குடையர் புகையர்பூ வேந்தி
இடையொழி வின்றி யடியுறையா ரீண்டி
விளைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்கும்
துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையும்
இருகேழுத்தி யணிந்தவெருத்தின்
வரைகெழு செல்வனகர்.

"வண்டொடு தும்பியும் வண்டொடை யாழார்ப்ப
விண்ட கடகரி மேகமொ டதிரத்
தண்டா வருவியோ டிருமுழ வார்ப்ப
அரியுண்ட கண்ணாரோ டாடவர் கூடிப்
புரிவுண்ட பாடலோ டாடலுந் தோன்றக்
கூடு நறவொடு காம முகிழ் விரியக்
கூடா நறவொடு காமம் விரும்ப
வினைய பிறவு மிவைபொல் வனவும்
அனையவை யெல்லா மியையும் புனையிழைப்
பூமுடி நாகர் நகர்." (இவையும் கொச்சகம்)

"மணிமரு டகைவகை நெறிசெறி யொலிபொலி
யவிர்நிமிர் புகழ்கூந்தற்
பிணிநெகிழ் துளையினை தெளியொளி திகழ்ஞெகிழ்
தெரியரிமதுமகிழ் பரிமலர் மகிழுண்கண் வாணுதலோர்
மணிமயிற் றொழிலெழி லிகன்மலி திகழ்பிறி
திகழ்கடுங் கடாக்களிற் றண்ண லவரோ
டணிமிக வந்திறைஞ்ச வல்லிகப்பப் பிணிநீங்க
நல்லவை யெல்லா மியைதருந் தொல்சீர்
வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
குளவா யமர்ந்தா னகர்." (இது முடுகியல்)

"திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
திகழ்பெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரத் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கும்
அமிழ்து கடைய விருவயி னாணாகி
மிகாஅ விருவட மாழியான் வாங்க
வுகாஅ வலியி னொருதோழங் கால
மறாஅ தணிந்தாருந் தாம்.
மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாஅவெதிர் பூண்டாருந் தாம்
மணிபுரை மாமலை ஞாறிய ஞால
மணிபோற் பொறுத்தாருந் தாஅம் பணிவில்சீர்ச்
செல்விடைப்பாகன் திரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி யிமயவி னாணாகித்
தொல்புகழ் தந்தாருந் தாம்" (இவையும் கொச்சகம்)

"அணங்குடை யருந்தலை யாயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத் தண்ணலை வணங்கி
நல்லடி யேத்திநிற் பரவுதும்
எல்லேம் பிரியற்கெஞ் சுற்றமொ டொருங்கே"
(என்பது ஆசிரியச் சுரிதகம்)

"அறவோ ருள்ளா ரருமறை காப்ப" என்னும் பரிபாடலுள்

"செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை
மறுமுறை யானு மியைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு"

இது, வெள்ளைச்சுரிதகத்தான் இற்றது

"காமங் கண்ணிய நிலைமைத் தாகும்"

என்பது, காமப்பொருள் குறித்து வருமென்றவாறு. கண்ணிய வென்றதனானே முப்பொருளுமன்றிக் கடவுள் வாழ்த்தினும் மலைவிளையாட்டினும் புனல் விளையாட்டினும் பிறவுமெல்லாங் காமங் கண்ணியே வருமென்பது. என்னை? "எல்லேம் பிரியற்க வெஞ்சுற்றமோ டொருங்கே" எனத் துணைபிரியாமை காரணமாகத் தொழுதேமென்றலின்.

"காமரு சுற்றமோ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழி முதல்வநின் றாணிழ றொழுதே"
(பரி.க;62·5)

என்பதும் அது.

இனிச் 'செப்பிய நான்கு என்றது, எண்ணப்பட்ட நான்கனையுமன்று; அன்னவற்றோடு மேற்கூறிய நான்கு பாவும் இடைவந்து விரவுமென்பது. அதுவும் நோக்கிப்போலும் பரிபாடல் என்றது.[1]

1. 'கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்தொடு செப்பிய நான்கு' என்றதனால், இச்சூத்திரத்தில் வந்த 'நான்கு' என்னுந்தொகை இங்கு எண்ணப்பட்ட கொச்சகமுதலிய நான்கினைக்குறியாது முன்னர்க் கூறப்பட்ட ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா, என்னும் பாவுறுப்பு நான்கினையுங்குறிப்பதாம் எனக் கொண்டார் பேராசிரியர். எனவே இங்குக் கொச்சகம் முதலாகச் சொல்லப்பட்ட உள்ளுறுப்பு நான்கினோடு முற்கூறப்பட்ட பாவுறுப்பு நான்கும் பரிபாடலில் விரவிவரும் என்பதும் இவ்வாறு பலபாக்களின் அடிகளையும் தன்னகத்தே ஏற்றுச் சுமந்து வருதலால் இப்பா பரிபாடல் என்னும் பெயர்த்தாயிற்று என்பதும் இங்குப் பேராசிரியர் தரும் விளக்கமாகும்.

"எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமிர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றெரிமணி விளங்கும் பூணினை மால்வரை
யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை
... ... ... ... ... ... ... ... ... ...
நாவ லந்தண ரருமறைப் பொருளே" (பரி.1:6-13)

என ஆசிரியம் வந்தது.

"நின்னொக்கும் புகழ்நிழலவை" (பரி. 4-55)

என்பது வஞ்சித்தூக்கு; பிறவும் அன்ன காட்டுப; அது பொது வாய் நிற்றலும் உரித்தென்றதனான் அடங்கும்.

இனிச், செப்பிய நான்கென்றதனான் அராகமின்றி வருதலும், கொச்சகம் ஈற்றடி குறைந்து வருதலும், அவ்வழி அசைச் சீராகி இறுதலும் மேற் கலிப்பாவிற்குச் செப்பிய சுரிதகமாதலுங் கொள்க. (கஉக)

**நச்சினார்க்கினியம்:**

இது பரிபாடற்கேற்ற உள்ளுறுப்புக் கூறுகின்றது. இவை சிறப்புறுப்பாகிய[1] முப்பத்துநான்குமன்றி இதற்கும் கலிக்கும் உறுப்பாய் வருமென்று கொள்க.

(இ-ள்.) கொச்சகம் என்றது "எருத்தே கொச்சகம்" (தொல்) செய் கருகக) என்புழிக் கூறுகின்றாம். சிறப்பில்லதனைக் கொச்சை யென்று கூறும் வழக்கு நோக்கி இதனையுஞ் சிறப்-பின்மையாற் கொச்சகம் என்றா ரென்பாருமுளர். குறிலிணை பயின்ற அடி அராகம். சுரிதகம் - அடக்கியல் - எருத்து தரவு என்ற இவற்றோடே முற்கூறிய நான்கு பாவையுந்[2] தனக்குறுப் பாகக்கொண்டு காமப்பொருளைக் கருதிய நிலைமைத் தாய்-வரும். எ-று.

தனக்கென்றதனான் அவையல்லனபிறவுறுப்புங் கொள்வது மேற்கூறுதும் கண்ணிய என்றதனாற் கடவுள்வாழ்த்தும், மலை விளையாட்டும், புனல்விளையாட்டும், பிறவு மெல்லாம் காமங்-

1. 'சிறப்புறுப்பாகிய' என்பது 'சிறப்புறுப்பாகி' என்றிருத்தல் பொருத்தம். 'முப்பத்து நான்குமன்றி' என்ற தொடரில் 'முப்பத்துநான்கு' எனச் சுட்டப்பட்டவை எல்லாச் செய்யுளுக்கும் உரியனவாக மாத்திரை முதலாகச் சொல்லப் பட்ட பொதுவுறுப்புக்களை.

2. ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி எனமுற்கூறிய நான்கு பாக்களையும்.

கண்ணியே வருமென்று கொள்க. கொச்சகவுறுப்புப்ப யிலவருத-லின் முன்வைத்தார். அராகம் இடையினல்லது வாரா. எருத்-தினை ஈற்றில்வைத்தது தானன்றியும் அது (பரிபாடல்) வருதலின்.

"வானா ரெழிலி ...... பரவுதுந் தொழுதே"

இது தரவு.

"ஒரு சாரர் ...... இயல் கொளநண்ணியவை"

இது கொண்டு நிலை [1]

"வண்டு பொரேரெனவெழ ...... பூமுடி நாகர்நகர்"

இவை கொச்சகம்.

"மணி மருடைகைவகை ......... குளவாயமர்ந்தானகர்"

இது முடுகியல்.

"திகழொளி ...... தொல்புகழ் தந்தாருந்தாம்"

இவையுங் கொச்சகம்.

அன்ன அணங்குடை யருந்தலையாயிரம் விரித்தமை காரண-மாகக் கூறலிற் காமங் கூறிற்று.

அராகம் வந்தன வந்த வழிக் காண்க.

கொச்சகங்களும் வெள்ளையாதல் பெரும்பான்மை மேல்' இதற்குக் கூறுகின்ற வுறுப்புக்கள் வந்துழியும் ஒக்கும், முடுகியலும் சொற்சீரடியும் வெள்ளடியொடு தொடர்ந்து வருதலின்.

"காமரு சுற்றமொடு ...... தொழுதே"

இதுவுஞ் சுற்றத்தொடு பிரியாமை கூறலிற் காமங் கண்ணிற்று.

"எரிமலர் சினைஇய ...... அருமறைப் பொருளே"

என ஆசிரியம் வந்தது.

"நின்னொக்கும் புகழ்நிழலவை"

இது வஞ்சித் தூக்கு. பிறவுமன்ன.

செப்பிய என்றதனான் அராகமின்றி வருதலும், கொச்சகம் ஈற்றடி குறையாது வருதலும், அவ்வழி யசைச்சீராகி யிறுதலும் வெள்ளைச் சுரிதகத்தா னிறுதலும் கொள்க.

---

1. கொண்டுநிலை...ஒருவர்கூற்றினை ஒருவர் கொண்டு கூறும் நிலையிற் பாடப்பெறுஞ் செய்யுள்.

"அறவோ ருள்ளா ரருமறை காப்ப"
வென்னும் பரிபாடலுள்,

"செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை
மறு முறையானு மியைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு"

என வெள்ளைச் சுரிதகத்தா னிற்றது. (உகக)

**ஆய்வுரை :**

இது பரிபாடலின் உள்ளுறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட பரிபாடற் பாட்டானது, பொதுவாய் நிற்றலேயன்றிக் கொச்சகமும் அராகமும் சுரிதகமும் எருத்தும் என்று சொல்லப்பட்ட நான்கும் தனக்கு உறுப்பாகக் காமப்பொருள் குறித்து வரும் நிலையினதாகும் எ-று.

காமப்பொருள் குறித்து வருவது பரிபாடல் எனவே, அறத்தினும் பொருளினும் அத்துணைப் பயின்று வாராது என்பது கருத்தாயிற்று.' வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே' எனச் சிறப்புவிதி யோதினமையால் நான்கு பாவினும் பரிபாடல் வெண்பா யாப்பிற்றாதலின் கடவுள் வாழ்த்தாகியும் வரப்பெறும் என்பர் இளம்பூரணர்.

"கொச்சகம் என்பது ஐஞ்சீரடுக்கி வருவனவும், ஆசிரியவடி, வெண்பாவடி, வஞ்சியடி, கலியடி, சொற்சீரடி, முடுகியலடி என்று சொல்லப்பட்ட அறுவகையடியினும் அமைந்த பாக்களை உறுப்பாக வுடைத்தாகி வெண்பா வியலாற் புலப்படத் தோன்றுவது" எனவும், இதனுட் "சொற் சீரடியும் முடுகியலடியும், அப்பா நிலைமைக் குரிய வாகும்" என வேறு ஓதுதலின் ஏனை நான்கும் கொச்சகப் பொருளாகக் கொள்ளப்படும்" எனவும் கூறுவர் இளம்பூரணர்.

"கொச்சகம் என்பது, ஒப்பினாகிய பெயர்; ஓர் ஆடையுள் ஒருவழியடுக்கியது கொச்சகம் எனப்படும்; அதுபோல ஒரு செய்யுளுட் பலகுறள் அடுக்கப்படுவது கொச்சகம் எனப்பட்டது" என்பர் பேராசிரியர்.

"பலகோடுபட அடுக்கியுடுக்கும் உடையினைக் கொச்சகம் என்ப வாகலின் அதுபோலச் சிறியவும் பெரியவும் விராஅய் அடுக்கியும் தம்முள் ஒப்ப அடுக்கியும் வருஞ்செய்யுளைக் கொச்சகம் என்றார்" என்பர் நச்சினார்க்கினியர்.

"அராகம் என்பது, ஈரடியானும் பலவடியானும் குற்றெழுத்து நெருங்கிவரத் தொடுப்பது" என்பர் இளம்பூரணர். "குறிலிணை பயின்ற அடி அராகமெனப்படும்" என்பர் பேராசிரியர்.

சுரிதகம் என்பது, ஆசிரிய வியலினாலாவது வெண்பா வியலினாலாவது பாட்டிற் கருதிய பொருளை முடித்து நிற்பது, இதனை அடக்கியல் எனவும் வழங்குவர்.

"எருத்தென்பது இரண்டடி இழிபாகப் பத்தடிப் பெருமையாக வருவதோர் உறுப்பு. பாட்டிற்கு முகம் தரவாதலானும், கால் சுரிதகமாதலானும், இடைநிலைப் பட்டாகிய தாழிசையும் கொச்சமும் அராகமும் கொள்ளக் கிடத்தலின், எருத்து என்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராக வேண்டுமாதலான் இவ்வுறுப்புத் தரவைச் சார்ந்து கிடத்தல் வேண்டுமென்று கொள்க" என்பர் இளம்பூரணர். 'எருத்து என்பது தரவு' என்பர் பேராசிரியர்.

௱௰அ சொற்சீ ரடியும் முடுகிய லடியும்
 அப்பா நிலைமைக் குரிய வாகும்.

## இளம்பூரணம் :

என்—எனின். இதுவுமது.

(இ - ள்.) சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்கு உரியவாகும் என்றவாறு.[1]

சொற்சீரடியாவது வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

முடுகியலாவது ஐந்தடியானும் ஆறடியானும் ஏழடியானுங் குற்றெழுத்துப் பயிலத் தொடுப்பது (௧௧அ)

## பேராசிரியம் :

இதுவும் பரிபாடலுறுப்பு உணர்த்துகின்றது.

(இ - ள்) எண்ணப்பட்ட இரண்டும் பரிபாடற்குள்ள உறுப்பாய் வரும் (எ - று).

---

1. 'அப்பா' என்புழி "அ" என்னுஞ்சுட்டு, மேற் குறித்த பரிபாடலைச் சுட்டி நின்றது.

சொற்சீரும் முடுகியலுமென்னாது அடியென்றதனான் மேற் கூறிய அடியொடு தொடர்ந்தல்லது வாராவென்பதாம்.[1] சொற் சீரடியாமாறு முன்னர்ச் சொல்லுதும். **முடுகியலடி**யென்பது முடுகியலோடு விராய்த் தொடர்ந்தொன்றாகிய வெண்பாவடி[2] அராகமென்பது தாமே வேறு சில அடியாகி வருவன.[3] இவை யன்றிக் குறிலிணை பயில்வன முடுகியலென்வுங் குறிலிணை விரவிவருவன அராகமெனவுஞ் சொல்லுவாரும் உளர்.[4]

"முடுகு வண்ண —மடியிறந் தோடி யதனோ ரற்றே"
(தொல்-செய். 233)

என்பவாகலின் மேலதே யுரை.

'உரிய' வென்றதனான் இத்துணை பயின்றுவாரா இவ் விரண்டுங் கலிப்பாவினுளென்பது கொள்க. எனவே, அராக வுறுப்புத் தேவபாணிக்கல்லது அக்கலிக்கண் யாண்டும் வாரா தாயிற்று.[5] (௧௨௨)

---

1. சொற்சீர், முடுகியல் என்ற அளவிற் கூறாது சொற்சீரடியும் முடுகிய-லடியும் என அடியொடு சார்த்திக் கூறினமையால், சொற்சீராதலும் முடுகியலா-தலும் ஆகிய இவை மேற்குறித்த அடியொடு கூடியல்லது தனித்துவாரா என்பதாம்.

2. சொற்சீரடி யென்பது வருகின்ற சூத்திரத்துட் கூறப்படும். முடு-கியற்றன்மையொடு கலந்து ஒன்றாகிய வெண்பாவடி இங்கு முடுகியலடி எனப்-பட்டது.

3. முடுகுவண்ணம் என்பது நாற்சீரடியின் மிக்கு ஓடி அராகந்தொடுத்து வருவது.

4. நாற்சீரடியுட் குற்றெழுத்துப் பயின்று வருவது அராகம் எனவும், நாற்சீரடியின்மிக்குக் குற்றெழுத்துப்பயின்று வருவது முடுகியல் எனவும் எனவும் கொள்ளப்படும். இவ்வுறுப்புக்கள் வண்ணவகையால் முறையே உருட்டுவண்ணம் முடுகுவண்ணம் எனவும் வழங்கப்படுமென்பது,

'உருட்டு வண்ணம் அராகந் தொடுக்கும்' (செய். ௨௩௧)

எனவும்,

'முடுகுவண்ணம் அடியிறந் தோடி யதனோரற்றே' (செய். ௨௩௨)

எனவும் வரும் இவ்வியற் சூத்திரங்களாள்அறியப்படும் எனவே 'குறிலிணை பயில் வன முடுகியலெனவும் குறிலிணை விரவி வருவன அராகமெனவும்' கூறுவார். கூற்று ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துக்கு முரணானதாதல் புலனாம்.

5. சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்கு உரிமையுடையன எனவே கலிப்பாவில் அத்துணை பயின்றுவாரா எனவும் அராகவுறுப்பு கலிப்பாவின்கண் தேவபாணிக்கல்லது அக்கலிக்கண்யாண்டும் வாராவெனவும் கூறுவர் பேராசிரியர்.

**நச்சினார்க்கினியம் :**

இதுவு மதற் குள்ளுறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்.) சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்கு உள்ளுறுப்பாய் நிற்றற்குரியவாம். எ-று.

அடியென்றதனான் முற்கூறியவடியோடு தொடர்ந்தல்லது தாமாக வாராவென்றுணர்த்துக. சொற்சீரடி மேற்கூறுப. முடுகியலடியாவது, வெண்பாவோடு விராய்த்தொடர்ந் தொன்றாக நிற்கும். அராகமாவது, தாமே வேறு சிலவடியாய்வரும். உரிய வெனவே கலிக்கு இத்துணை யுரிய வல்லவென்றுணர்க. எனவே அராகவுறுப்புத் தேவபாணிக்கல்லது வாரா வென்றுணர்க.[1]

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) சொற்சீரடியும் முடுகியலடியும் மேற்குறித்த பரிபாடலுக்கு உரியவாகும் எ-று.

சொற்சீரடியின் இலக்கணம் அடுத்த சூத்திரத்திற் கூறப்படும். 'முடுகியலாவது ஐந்தடியானும் ஏழடியானும் ஆறடியானும் குற்றெழுத்துப் பயிலத் தொடுப்பது' என்பர் இளம்பூரணர். 'முடுகியலென்பது முடுகியலோடு விராஅய்த் தொடர்ந் தொன்றாகிய வெண்பாவடி' என்பர் பேராசிரியர்.

௪௰௯ கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து
முற்றடி[2] யின்றிக் குறைவுசீர்த் தாகியும்
ஒழியசை யாகியும் வழியசை புணர்த்துஞ்[3]
சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே

**இளம்பூரணம் :**

என்—எனின். சொற்சீராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) கட்டுரையாவது பாட்டின்றித் தொடுக்கப்பட்டு வருவது.

1. பேராசிரியர் உரையை அடியொற்றியது.

2. 'முட்டடி' என்பது பேராசிரியருரையிற் கண்டபாடம்.

3. 'புனர்ந்தும்' எனப் பாடங் கொள்வர் பேராசிரியர்.

எண்ணென்பது ஈரடியாற் பலவாகியும் ஓரடியாற் பலவாகியும் வருதல். பலவருதலின் எண்ணென்றார்.[1]

**முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்** என்பது நாற்சீரடியின்றி முச்சீரடியானும் இருசீரடியானும் வருதல்.[2]

**ஒழியசையாகியும்** என்றது ஒழிந்த அசையினை யுடைத்தாகியும் என்றவாறு.[3]

எனவே, இறுதிச்சீர் ஒன்றும் இரண்டும் அசை குறையப் பெறும் என்றவாறாம்.

**வழியசை புணர்த்தலாவது** ஒரு சீரின்கண்ணே பிறிதொருசீர் வரத் தொடாது ஓரசைவரத் தொடுப்பது.[4]

**சொற்சீர்த்திறுதல்** என்பது சொற்றானே சீராந் தன்மையைப் பெற்று நிற்றல்.[5]

**சொற்சீர்க் கியல்பே** என்றது இப்பெற்றியை யுடைத்துச்சொற்சீரினதியல்பு என்றவாறு.

இவ்விலக்கணம் பரிபாடற் செய்யுட்கண் வருமாறு:

> ''ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலைத்
> தீயுமிழ் திறலொடு முடிமிசை அணவர
> மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்
> சேயுயர் பனைமிசை எழில்மேழி ஏந்திய
> வாய்வாங்கும் வளைநாஞ்சில் ஒருகுழை ஒருவனை;

இது தரவு.

---

1. எண் என்னும் இவ்வுறுப்பு அம்போதரங்கம் எனவும் வழங்கப்பெறும். ஈரடியால் இரண்டும், ஓரடியால் நான்கும், முச்சீரால் எட்டும், இருசீராற் பதினாறும் என இவ்வாறு எண்ணப்பெற்று அமைதலின் எண் என்னும் பெயர்த்தாயிற்று.

2. 'முற்றடி' என்றது நாற்சீரடியினை. குறைவுசீர்த்தாகி வருதலாவது நாற்சீரிற்குறைந்து முச்சீரடியாகவும் இருசீரடியாகவும் வருதல்.

3. 'ஒழியசையாகியும்' என்றது, இறுதிச்சீர் ஓரசையோ ஈரசையோ குறைந்து வருதல்.

4. வழியசைபுணர்த்தலாவது ஒருசீர்வருமிடத்தே பிறிதொருசீர்வரத் தொடுக்காது ஒத்தசீராய் ஓரசையொத்து வரத் தொடுத்தல்.

5. சொற்சீர்த்து இறுதல்-சொல்தானே சீராந்தன்மையைப் பெற்று முடிதல்.

எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பில்
தெரிமணி விளங்கும் பூணினை மால்வரை
எரிதிரிந் தன்ன பொன்புனை உடுக்கையை
சேவலங் கொடியோய்நின் வலவயி னிறுத்து
மேவ லுட்பணிந்தமை கூறு
நாவ லந்தணர் அருமறைப் பொருளே;

இஃது எருத்து.

இணைபிரி யணிதுணி பணியெரி புரைய
விடரிடு சுடர்படர் பொலம்புனை வினைமலர்
நெரிகிட ரெரிபுரை தனமிகுதன முரண்மிகு
கடறரு மணியொடு முததியா கத்தொன்றி
நெறிசெறி வெறியுறு முரல்விறல் வணங்கணங்குவிற்
றாரணி துணிமணிவிய லெறுமெழில் புகழலர்மார்பி
னெரிவயிர் நுதியெறி படையெருத்து மலையிவர் நவையிற்
றுணிபட லிலமணி வெயிலுற ழெழினக்
கிமையிருள கலமுறு கிறுபுரி யொருபுரி நாண்மலர்
மலரிலகினவளர் பருதியி னொளிமணி மார்பணி
மிகநாறுரு வினவிரை வளிமிகு கடுவிசை
உடுவுறு தலைநிரை யிதழணி வயிறிரிய அமரரைப்
போரெ முந்துடன் றிரைத்துரைஇய தானவர்
சீரழிப் புனல்மொழி பிழந்தூர
முதிர்பதி ரப்பல புலவந்தொடவமர் வென்றகணை;

இவை நான்கும் அராகம்.

பொருவே மென்றவர் மறந்தபக் கடந்து
செருமேம்பட்ட செயிர்தீர் அண்ணல்
இருவர் தாதை யிலங்குமுன் மாஅன்
றெருள நின்வர வறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கும் அரிதே;

இஃது ஆசிரியம்.

அன்ன மரபி னனையோய் நின்னை
யின்னனென் றுரைத்த லெமக்கெவன் எளிது;

இது பேரெண்.

அருமைநற் கறியினும் ஆர்வ நின்வயிற்
பெருமையின் வல்லா யாம்இவண் மொழிபவை
மெல்லிய எனாஅது வெறாஅ
தல்லியந் திருமார்ப நீயருளல் வேண்டும்;

இதுவும் ஆசிரியம்.

விறல்மிகு விழுச்சீ ரந்தணர் காக்கும்
அறனு மார்வலர்க் கருளுநீ;
திறனிலோர்த் திருத்திய தீதுதீர் கொள்கை
மறனு மாற்றலர்க் கணங்கு நீ;
அங்கண் வானத் தணிநிலாத் திகழ்தருந்
திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ;
ஐந்தலை யுயரிய அணங்குடை யருந்திறல்
மைந்துடை யொருவனு மடங்கலும் நீ;
நலமுழு தளைஇய புகரறு காட்சிப்
புலமும் பூவனு நாற்றமு நீ;
வலனுயர் எழிலியும் மாக விசும்பும்
நிலனு நீடிய இமயமும் நீ;

இவை யாறும் பேரெண்.

அதனால்;

தனிச்சொல்.

இன்னோர் அனையை இனையை யாலென
அன்னோர் யாமிவட் காணா மையிற்
பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய
மன்னிய முதல்வனை யாகலின்
நின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே:

இது சுரிதகம்.

அன்றெனின்.

நின்னொக் கும்புகழ் நிழலவை
பொன்னொக்கு முடையவை
புள்ளின் கொடியவை புரிவளை யினவை
எள்ளுநர்க் கடந்திட்ட இகனேமியவை
மண்ணுற்ற மணிபா யுருவினவை
எண்ணிறந்த புகழவை எழின்மார் பினவை;

இவை சிற்றெண்ணும், இடையெண்ணும், அளவெண்ணும்.

ஆங்கு;

தனிச்சொல்.

காமரு சுற்றமொ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழி முதல்வநின் தாள்நிழற் றொழுதே".

இது சுரிதகம்.

இது கடவுள்வாழ்த்து. ஈண்டோதப்பட்ட உறுப்புக்கள் மிக்குங் குறைந்தும் வருதல் இப்பாவிற் கியல்பென்று கொள்க. பிறவும் பரிபாடலகத்துக் கண்டுகொள்க.

"மாநிலந் தோன்றாமை மலிபெய லிலைஇ
ஏமநீ ரெழில்வான மிகுத்தரும் பொழுதினான்
நாகநீள் மணிவரை நறுமலர் பலவிரைஇக்
காமரு வையை கடுகின்றே கூடல்;

நீரணி கொண்டன்று வையை யெனவிரும்பித்
தாரணி கொண்ட உவகை தலைக்கூடி
ஊரணி கோலம் ஒருவர் ஒருவரிற்
சேரணி கொண்டு நிறமொன்று வெவ்வேறு
நீரணி கொண்ட நிறையணி அங்காடி
ஏரணி கொண்டார் இகல் ;

கைபுனை தாரினர் கண்ணியர்
ஐயெனு மாவியர் ஆடையர்
நெய்யணி கூந்தலர் பித்தையர்
மெய்யணி யானை மிசைக் கொண் டொய்யெனத்
தங்காச் சிறப்பில் தளிரியலார் செல்லப்
பொங்கு புரவிப்புடைப் போவோரும் பொங்குசீர்
வையமுந் தேரும் அமைவோரும் எவ்வாயும்
பொய்யாம்போ யென்னாப் புடைபடைகூட்
டிப்போவார்
மெய்யாப்பு மெய்யார மூடுவார் வையத்துக்
கூடுவார் ஊட லொழிப்பார் உணர்குவார்
ஆடுவார் பாடுவார் ஆர்ப்பார் நகுவார்நக்

கோடுவார் ஓடித் தளர்வார்போ யுற்றவரைத்
தேடுவார் ஊர்க்குத் திரிவார் இலராகிக்
கற்றாருங் கல்லா தவருங் கயவரும்
பெற்றாரும் பெற்றாற் பிழையாத பெண்டிரும்
பொற்றேரான் தானும் பொலம்புரிசைக் கூடலும்
முற்றின்று வையைத் துறை;

துறையாடுங் காதலர் தோள்புணை யாக
மறையாடு வாரை அறியார் மயங்கிப்
பிறையேர் நுதலியர் எல்லாருந் தம்முன்
நிகழு நிகழ்ச்சி யெம்பாலென் றாங்கே
இகல்பல செல்வம் விளைத்தவட் கண்டிப்பால்
அகலல்கும் வையைத் துறை;

காதலான் மார்பிற் கமழ்தார் புனல்வாங்கி
ஏதிலாள் கூந்தல் இடக்கண்டு மற்றது
தாதாவென் றாட்குத் தானே புனல்தந்து
வேய்தந்த தென்னை விளைந்தமை மற்றது
நோதலே செய்யேன் நுணங்கிழையா யச்செல்வி
போதலுண் டாங்கொல் அறிந்து புனல்புணர்த்த
தோஓ பெரிதும் வியப்பு;

கயத்தகப் பூப்பெய்த காமக் கிழமை
நயத்தகு நல்லாளைக் கூடுமா கூடு
முயக்குக்குச் செல்வல் முலையும் முயக்கத்து
நீரு மவட்குத் துணைக்கண்ணி னீர்விட்டோய்
நீயு மவட்குத் துணை;

பணிவில் உயர்சிறப்பிற் பஞ்சவன் கூடல்
மணியெழில் மாமேனி முத்த முறுவல்
அணிபவளச் செவ்வாய் அறங்காவற் பெண்டிர்
மணியணி தம்முரிமை மைந்தரோ டாடத்
தணிவின்று வையைப் புனல்;

புனலூடு போவதோர் பூமாலை கொண்டை
எனலூழ் வகையெய்திற் றென்றேற்றுக் கொண்டை
புனலூடு நாடறியப் பூமாலை அப்பி
நினைவாரை நெஞ்சிடுக்கண் செய்யுங் கனல்புடன்

கூடாரமுன் ஊடல் கொடியதிறங் கூடினால்
ஆடாளோ வூர்க்கலர் வந்து;

எனவாங்கு,

ஈப்பா யடுநறாக் கொண்டதிவ் வியாறெனப்
பார்ப்பார் ஒழிந்தார் படிவு;

மைந்தர் மகளிர் மணவிரை பூசிற்றென்
றந்தணர் தோயலர் ஆறு;

வையைத் தேமொழி வழுவழுப் புற்றன
ஐயர்வாய் பூசுறார் ஆறு;

விரியுரி விரைதுறை கரையழி பிழியூர ஊர்தரும் புனல்
கரையொடு கடலிடை வரையொடு கடலிடை நிரைநிரை
நீர்தருநுரை

நுரையுடன் மதகுதொ றிழிதரு புனல்கரை புரளியசெலுமறிகடல்
புகுமள வளவிய லிச்சிறை தணிவின்று வெள்ளமிகை;

வரைபல புரையுயர் கயிறணி பயிறொழில்
மணியணி யானைமிசை மைந்தரும் மடவாரும்
நிரைநிரை குழீஇயினர் உடன்சென்று
குருமணி யானை இயறேர்ப் பொருநன்
திருமருத முன்றுறை முற்றங் குறுகித்
தெரிமருதம் பாடும் பிணிதோள்யாழ்ப் பாணர்
பாடிப் பாடிப் பாய் புனல்

ஆடி யாடி யருளியவர்
ஊடி யூடி யுணர்த்தப் புகன்று
கூடிக் கூடி மகிழ்பு மகிழ்பு
தேடித் தேடிச் சிதைபுசிதைபூச்
சூடிச் சூடிக்கை தொழுது தொழுதும்
இழுதொடு நின்ற புனல்வையை
விழுதொகை நல்லாரு மைந்தரும் ஆடி
இமிழ்வது போன்றதிந் நீர்குணக்குச் சான்றீர்
முழுவது மிச்சிலா உண்டு;

சாந்தும் கமழ்தாருங் கோதையுஞ் சுண்ணமுங்
கூந்தலும் பித்தையுஞ் சோர்ந்தன
பூவினு மல்லாற் சிறிதானு நீர்நிறந்
தோன்றா திவ்வையை யாறு;

மழைநீர்க் குளத்து வாய்பூசி யாடுங்
கழுநீர மஞ்சனக் குங்குமக் கலக்கல்
வழிநீர வீழுநீரன்று வையை
வெருவரு கொல்லியானை வீங்குதோள் மாறன்
உருகெழு கூட லவரொடும் வையை
வருபுன லாடிய தன்மை பொருவுங்கால்
இருமுந்நீர் வையம் பிடித்தென்னை யானூர்க்
கொருநிலையு மாற்ற இயையா வருமாவில்
அந்தர வான்யாற் றாயிரங் 'கண்ணினான்
இந்திரன் ஆடுந் தகைத்து."

இது காமப் பொருளாகி வரும் வெண்பா மிக்குவந்த பாட்டு. (௯௯௯)

**பேராசிரியம் :**

மேலெண்ணப்பட்ட சொற்சீரடியாமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொற்சீரடி இக்கூறிய நான்கு வகையாலும் வந்து பயிலும் (எ - று)

கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்தது:

"வடவேங்கடந் தென்குமரி, யாயிடை" (தொல் பாயிரம்)

எனவும்,

"அஇஉ, எஒ என்னு மப்பா லைந்தும்" (தொல்-எழுத்-நூன், 3)

எனவும், இவை கட்டுரைக்கட் சொல்லுமாறுபோல எண்ணினமையிற் கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்தன.[1] இனி, 'முற்றடியின்றிக் குறைவுசீர்த்தாகும் இயல்பாய்' வருமாறு:

"நின்னொக்கும் புகழ்நிழலவை" (பரி. 1-55)

எனவும்,

"கறையணி மிடற்றினவை
கண்ணணி நுதலினவை
பிறையணி சடையினவை"

எனவும் வரும்.

1. 'வடவேங்கடந், தென்குமரி ஆயிடை' என்றாற்போன்று கட்டுரைக்கட் சொல்லப்பட்டுவருவது 'கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்த சொற்சீரடி யாகும்.

'முற்றடியின்றி' என்ற இவை தூக்குப்பட்டு முடியுமடியல்ல (எ - று).[1]

மேற்காட்டிய பரிபாடற் செய்யுளுள், 'ஒருசார்' என்பது ஒழியசை; என்னை? அது சீராகலின் அதனோடு சில அசை கூடியன்றி அசையெனப்படாமையின்.[2] 'ஆங்கு' எனவருந் தனிச்சொல் வழியசை யெனப்பட்டது; என்னை? அஃது, அசையாய் நின்று சொற்சீரடியாகலின்.[3] மற்றுச் சொற்சீரடியினை அசை யென்றதென்னையெனின், இயலசை தானேயும் ஒழியசையாய் நிற்குமென்றற்கென்பது.

"ஒரூஉக், கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்றா தவர்" (கலி. 88)

என்புழி 'ஒரூஉ' வெனநின்ற இயலசைதானே ஒழியசையாய் நின்றது.[4]

"உகுவது போலுமென் னெஞ்சு; எள்ளித்
தொகுபுட னாடுவ போலு மயில்" (கலி. 33)

என்பது வழியசைபுணர்ந்த சொற்சீரடி; என்னை? 'எள்ளி' என நின்ற சீரின்வழித் 'தொகுபு' என வந்தவசை உகுவதுபோலு மென்னுந் தொடையொடு பொருந்தி,

"உகுவது போலுமென் னெஞ்செள்ளித், தொகுபுடன்" எனப் புணர்ந்து நின்றாற் போல்வதொரு சுவைமைசெய்து

---

1. முட்டடி-முற்றடி 'முற்றடி' யெனவே பாடங்கொண்டார் இளம்பூரணர். முற்றடியின்றிக்குறைவுசீர்த்தாகி என்றது, தூக்கு என்னும் உறுப்பினால் தனியடியாகத் துணிக்கப்பெற்று முடிதலின்றி;

'நின்னொக்கும் புகழ்நிழலவை'
'கறையணி மிடற்றினவை'

என்றாங்குக் குறைந்த சீருடையதாய அடியினை.

2. 'ஒருசார்' என்றாற்போன்று தான்சீராய் நின்றும் தன்னோடு சில அசை கூடியன்றி அடியெனப்படாதது 'ஒழியசை' எனப்படும் சொற்சீரடியாகும்.

3. 'அசையெனப்படாமையின்' என்பதனை 'அடியெனப்படாமையின்' எனத் திருத்திக்கொள்க. 'ஆங்கு' என்றாற்போன்று வரும் தனிச்சொல் அசையாய் நின்று சொற்சீரடியாமாதலின் வழியசை யெனப்பட்டது.

4. 'ஒருஉ' என்றாங்கு இயலசைதானேயாயும் ஒழியசையாய் நிற்கும் என்றற்குச் சொற்சீரடியினை அசையென்றார்.

அளவியல் வெண்பாட்டும் உளவென்பதூஉம், அதுவே சிறப்புடையதென்றற்கும் அங்ஙனங் கூறினானென்பது [1]

இனி, அவற்றைத் தத்தம் வகையாற் சுருக்கப் பெருக்கம் உணருங்கால் 'உய்த்துக்கொண்டுணர்தல்' என்பதனான் உணரப் படும்; என்னை ? நெடுவெண்பாட்டிற்கு உயர்ந்த அளவை பன்னிரண்டடியெனவே, அதன் பாகமாய ஆறு அளவியல் வெண்பாவிற்கு உயர்ந்த எல்லையெனவும், நெடுவெண்பாட்டிற்கு இழிந்த வெல்லை ஏழடியெனவும், அளவியல் வெண்பாவிற்கு இழிந்த வெல்லை நான்கடியெனவும் கொள்ள வைத்தமையி னென்பது.[2] இங்ஙனம் அளவியல் வெண்பாச் சிறப்புடைத்தா தனோக்கிப் பதினெண்கீழ்க் கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியி னேறாமற் செய்யுள் செய்தார் பிற சான்றோருமெனக் கொள்க ; இக்கருத்தினானே,

"அம்மை தானே யடிநிமிர் பின்று" (தொல்-செய்-335)

எனக்கூறிய நெடுவெண்பாட்டு நேர்ந்திலன் ஆசிரியன் அதற்கென்பது; [3] அஃதேல், அவ்வளவியல் வெண்பாவுள்ளும் ஆறடியானும் ஐந்தடியானும் வருதல் சிறுவரவினவாலெனின், — அங்ஙனமே செப்பிக்கூறிய மரபிற்றாகிய வெண்பாவினைப் பரந்து படக்கூறல் இயல்பன்றாகலின் அவற்றுள்ளுஞ் சுருங்கிய நான்கடியே சிறந்ததென்று அதனையேபற்றிப் பெரும்பான்மையுஞ் செய்யுள் செய்தாராவரென்பது அஃதேல், குறளடி வெண்பா அதனினுஞ் சிறந்ததாம் பிறவெனின்,- அற்றன்று: செப்பிக்கூறுங்கால் தெரியக் கூறல்வேண்டுமாகலின் அளவியல் வெண்பாவே பயின்றவென்பது. நெடுவெண்பாட்டுப்போலச் சிறப்பின்றாங் குறுவெண்பாட்டுமெனின் :—

1. குறுவெண்பாட்டு நெடுவெண்பாட்டு எனக்குறுமையும் நெடுமையும் அளவியலுடன் வைத்துப் பெயர் கூறியதனால் அவற்றுக்கு நடுவெல்லையாகிய அளவியல் வெண்பாட்டும் உண்டென்பதும் அதுவே சிறப்புடையதென்பதும் உய்த்துணர வைத்தார் ஆசிரியர்.

2. நெடுவெண்பாட்டு - பஃறொடைவெண்பா. அதன் உயர்ந்த அளவு பன்னிரண்டடி யெனவே அதன் சரிபாதியாகிய ஆறடி அளவில் வெண்பாவுக்கு உயர்ந்த எல்லையெனவும், நெடுவெண்பாட்டிற்கு இழிந்த எல்லை ஏழடியெனவும் அளவியல் வெண்பாவுக்கு இழிந்த எல்லை நான்கடியெனவும் கொள்ளவைத்தமையின் இஃது உய்த்துக்கொண்டுணர்தல் என்னும் உத்தியாகும்.

3. ''இக்கருத்தினானே 'அம்மைதானே யடிநிமிர்பின்று' எனக்கூறிய ஆசிரியன் அதற்கு நெடுவெண்பாட்டு நேர்ந்திலன் என்பது'' என இயைத்துரைக்க.

"சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்"

என்பதனான், அவ்விரண்டினுள்ளும் அதனைப் பிற்கூறியது அச் சிறப்பு நோக்கியன்றோவென்பது :[1]

உ-ம்: "அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று" (குறள்-259)

எனவும்,

"அறிந்தானை யேத்தி யறிவாங் கறிந்து
செறிந்தார்க்குச் செவ்வ னுரைப்பச் சிறந்தார்
செறிந்தமை யாராய்ந்து கொண்டு" (யா. வி. ப. 226)

எனவும், இவை குறுவெண்பாட்டு.

"துகடீர் பெருஞ் செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்" (நாலடி-1-2)

எனவும்,

"நாண்ஞாயி லுற்ற செருவிற்கு வீழ்ந்தவர்
வாண்மாய் குருதி களிறுழக்கத்-தாண்மாய்ந்து
முன்பக லெல்லாங் குழம்பாகிப்-பின்பகற்
றுப்புத் துகளிற் கெழூஉம் புனனாடன்
றப்பியா ரட்ட களத்து" (களவழி 1)

எனவும்,

"நானாற் றிசையும் பிணம்பிறங்க யானை
யடுக்குபு வேற்றிக் கிடந்த விடித்துரறி
யங்கண் விசும்பி னுருமெறிந் தெங்கும்
பெருமலைந் தூறெறிந் தற்றே யெரிமணிப்பூ
ணேந்தெழின் மார்பத் தியறிண்டேர்ச் செம்பியன்றெவ்
வேந்தரை யட்ட களத்து" (களவழி-6)

எனவும், இவை அளவியல் வெண்பாட்டு.

---

1. செப்பிக் கூறிய மரபினவாகிய வெண்பாவினைப் பரந்து படக்கூறல் இயல்பன்றாகலின் அளவியல் வெண்பாவிற் சுருங்கிய நான்கடியே சிறந்ததென்று கொண்டு பெரும்பாலும் செய்யுள் செய்தனர். அங்ஙனம் செப்பிக் கூறும்பொழுதும் கேட்போர்க்குப் பொருள் தெரியக்கூறல் வேண்டுமாதலின் அளவியல் வெண்பாவே பயின்றன. நெடுவெண்பாட்டு குறுவெண்பாட்டு என்னும் இரண்டினுள்ளும் சிறப்புடையது குறுவெண்பாட்டேயாதலின் சிறப்புடைமை தோன்றப் பிற்கூறப்பட்டது.

"பன்மாடக் கூடன் மதுரை நெடுந்தெருவின்"

என்பதும் அது. நெடுவெண்பாட்டு வந்தவழிக் கண்டுகொள்க. (௧௫௮)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையே வெண்பாவின் அடியளவைக் கூறுகின்றது.

(இ-ள்). நெடுவெண்பாப் பேரெல்லை பன்னீரடியையுடைத்து. குறுவெண்பாச் சிற்றெல்லை யீரடியையுடைத்து. எ-று.

இதனை வெண்பாட்டளவிற் கெல்லையென்னாது குறு வெண்பாட்டு நெடுவெண்பாட்டெனப் பெயர் கொடுத்துக் குறுமையும் நெடுமையும் அளவியலோடு படுத்துக் கொள்ளப்-படுதலின் அளவியல் வெண்பாட்டு முளவென்பதூஉம், அது சிறப்புடைத்தென்பதூஉம் பெறுதும். எனவே, நெடுவெண்பாவின் பன்னீரடியிற் பாகமாகிய ஆறடியே யளவியல் வெண்பாவுக்குப் பேரெல்லையாகவும், அதன்பாகமாகிய மூன்றடி யே குறுவெண்-பாவிற்குப் பேரெல்லையாகவுங் கோடும். அங்ஙனங் கொள்ளவே நெடுவெண்பாவிற் கிழிந்த வெல்லை யேழடியாகவும் அளவியல் வெண்பாவுக்கு இழிந்தவெல்லை நான்கடியாகவுங் கொள்ளப் படும். இங்ஙனம் அளவியல் வெண்பாச் சிறப்புடைமை நோக்கி யாசிரியர் "அம்மை தானே யடிநிமிர் வின்றே" (செய்.௨) என்று நெடுவெண்பா நேர்ந்திலர். அடிநிமிர் வின்றென்றது ஆறடியின் மிகாமையை; உரையிற் கோடலென்பதனாற் செப்பிக் கூறுஞ் செய்யுட்கு நான்கடியே மிக்க சிறப்புடைத்தெனக் கொள்க "சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்" என்பதனாற் குறுவெண்பாவுஞ் சிறப்புடைமை பெறுதும். இக்கருத்தானே **கீழ்க்கணக்கில்** நான்கடியும் ஈரடியுமே மிக வந்தவாறும் முத்தொள்ளாயிரத்து நான்கடியே மிக வந்தவாறுங் காண்க.[1]

உ—ம் "யாதானு நாடாமல்" (திருக் ௩௯௭)

"இருதேவர் பார்ப்பா ரிடை" (ஆசாரக். ௩௧)

"துகடீர் பெருஞ் செல்வம்" (நாலடி. செல்வ)

"இனிதுண்பா னென்பா னுயிர்கொல்லா துண்பான்
முனிதக்கா னென்பான் முகனொழிந்து வாழ்வான்

1. இச்சூத்திரவுரை பேராசிரியருரையின் சுருக்கமாகும்.

றனிய னெனப்படுவான் செய்தநன் றில்லா
னினிய னெனப்படுவான் யார்யார்க்கே யானு
முனியா வொழுக்கத் தவன்'' (நான்மணி. ௯௦)

''ஆரெயின் மூன்று மழித்தா னடியேத்தி
யாரிடத்துத் தானறிந்த மாத்திரையா னாசாரம்
யாரு மறிவ தறனாக மற்றவற்றை
யாசாரக் கோவை யெனத்தொகுத்தான் றீராத்
திருவாயி லாய திறல்வண் கயத்தூர்ப்
பெருவாயின் முள்ளியென் பான்''

(ஆசாரக். காப்பு)

என இவை முறையே வந்தன. ஒழிந்த நெடுவெண்பாட்டு வந்துழிக் காண்க.

**ஆய்வுரை :**

இது வெண்பாவிற்கு அடியளவு கூறுகின்றது.

(இ-ள்) நெடுவெண்பாட்டிற்கு எல்லை பன்னிரண்டடி. குறுவெண்பாட்டிற்கு அளவு, அளவடியும் சிந்தடியும் சேர்ந்தமைந்த எழுசீராம் எ-று.

குறுமை நெடுமை என்ற வேறுபாடு அவ்விரண்டிற்கும் இடைப்பட்ட தொன்றினை அளவாகக் கொண்டே வகுத்துரைக்கப்படுதலின் குறுவெண்பாட்டிற்கும் நெடுவெண்பாட்டிற்கும் இடைப்பட்ட அளவியல் வெண்பாட்டும் உளவென்பதும் அதுவே பெரும்பான்மையும் பலராலும் இயற்றப்படுவதென்பதும் பெறப்படும். நெடுவெண்பாட்டிற்குப் பேரெல்லை பன்னிரண்டடியெனவே அதனிற் பாதியாகிய ஆறடி அளவியல் வெண்பாவின் உயர்த்த எல்லையெனவும். நெடுவெண் பாட்டின் சிற்றெல்லை ஏழடி யெனவும். அளவியல் வெண்பாவின் சிற்றெல்லை நான்கடியெனவும் கொள்ளவைத்தாராயிற்று. அளவியல்வெண்பாச் சிறப்புடைத்தாதல் நோக்கிப் பதினெண் கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியின் மிகாமற் செய்யுள் செய்தனர். அம்மை யென்னும் வனப்புடைய செய்யுட்கு நெடுவெண்பாட்டு ஏற்புடையதன்றென்பது, 'அம்மை தானே அடிநிமிர் பின்றே'(செய்-227) எனவரும் தொல்காப்பிய நூற்பாவால் இனிது புலனாம். செப்பிக் கூறுஞ் செய்யுட்கு நான்கடியே மிக்க சிறப்புடைத்தெனவும், 'சிறப்புடைப் பொருளைப் பிற்படக்

கிளத்தல்' என்பதனால் குறுவெண்பாட்டும் சிறப்புடைமை பெறுதும் எனவும் கூறுவர் நச்சினார்க்கினியர்.

நெடுவெண்பாட்டினைப் பஃறொடை வெண்பா எனவும் இரண்டடியானாகிய குறுவெண்பாட்டினைக் குறள் எனவும் மூன்றடியானாகிய வெண்பாவினைச் சிந்தியல் வெண்பா எனவும் நாலடி முதல் வரும் அளவியல் வெண்பாக்களும் இரண்டாம் அடியில் தனிச்சொற் பெற்று ஓரெதுகையாகவும் ஈரெதுகை-யாகவும் வரும் வெண்பாவினை நேரிசை வெண்பா வெனவும் நேரிசை வெண்பாவிற் சிறிது வேறுபட வரும் வெண்பாவினை இன்னிசை வெண்பா எனவும் பெயரிட்டு வழங்குவர் பிற்கால யாப்பிலக்கண நூலார்.

௪௫௨ அங்கதப் பாட்டள வவற்றோ டொக்கும்.[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். அங்கதப் பாட்டிற்கு அளவுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). அங்கதப் பாட்டாகிய வெண்பாவிற்கு எல்லை சிறுமை இரண்டடி, பெருமை பன்னிரண்டடி என்றவாறு.[2]

உதாரணம் சில காட்டப்பட்டன; ஏனைய வந்தவழிக் கண்டு கொள்க. (௪௫௨)

**பேராசிரியம் :**

அங்கதப் பாட்டிற்கும் வெண்பாவே உறுப்பாகலான் ஈண்டு வைத்தான். இதுவும் மேற்கூறிய இரண்டெல்லையும்[3] பெறுமென்றவாறு.

“இருடீர் விளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்ற-மருடீர்ந்த

1. ‘அங்கதப் பாட்டவற் றளவோ டொக்கும்’ என்பது பேராசிரியர் கொண்ட பாடம்.

2. செம்பொருளாகவும் பழிகரப்பாகவும் அமைந்த அங்கதப்பாட்டாகிய வெண்பா, மேற்குறித்த குறுவெண்பாட்டிற்குரிய இரண்டடிமுதல் நெடுவெண் பாட்டிற்குரிய பேரெல்லையாகிய பன்னிரண்டடியளவும் பெற்றுவரும் என்பதாம்.

3. மேற்கூறிய இரண்டெல்லையாவன : ஆறடியுயர்பும் நான்கடியிழிபும் ஆகிய எல்லை.

பாட்டு முறையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள''

என்பது, நான்கடியான் வந்த அங்கதம்: பிறவும் அன்ன.

இது, மந்திரத்தின் வேறுபட்டு அடிவரைத்தாயினமையின் இதுவும் வெண்பாட்டுப் போன்று அமைந்து வரல்வேண்டு மென்றற்கும், இது வேறு பாட்டெனப்படாமையின் அடிவரை யின்றுகொலென்னும் ஐயந்தீர்த்தற்கும் இதற்கே ஈண்டு அளவை கூறி, அதனோடும்,

'கைக்கிளை பரிபாட்டு அங்கதச் செய்யுள்''
(தொல் - செய்-118)

என்று ஓதப்பட்ட கைக்கிளைச் செய்யுள் முத்தொள்ளாயிரத்துட் போலப் பலவாயினும் அவற்றுக்கு அளவையும் வெண்பாவின் அளவேயென்று அடக்கினானென்பது.[1] நூற்பாவாக அடிவரைப் படுவன உளவாயினவற்றுக்கும் இஃதொக்குமென்பது மேற் கூறுதும். (கருகூ)

**நச்சினார்க்கினியம் :**

இது வசைப்பாட்டெல்லை கூறுகின்றது.

(இ-ள்.) வசைப்பாட்டி னெல்லை[2] முற்கூறியவைபோல ஈரடிச்சிறுமையும் பன்னீரடிப் பெருமையுமாய் வரும். எ-று.

உ-ம். ''இருடீர் மணிவிளக்கத் தேழிலார்''

இது நான்கடியான் வந்தது. பிறவு மன்ன.

**ஆய்வுரை :**

இஃது அங்கதப்பாட்டிற்கு அடியளவு கூறுகின்றது.

---

1. அங்கதப்பாட்டாகிய இது மந்திரத்தின் வேறுபட்டு அடிவரையுடையதாயினமையின் வெண்பாப்போன்று அடிவரையுடையதாய் வரல்வேண்டும் என்றற்கும், மந்திரத்தின் தன்மையுடைய அங்கதத்திற்கு மந்திரத்திற்குப்போன்று அடிவரையறையில்லைகொல் என்னும் ஐயத்தினை நீக்குதற்கும் இச்சூத்திரத்தால் அளவை கூறி, 'கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுள்' என இதனுடன் ஓதப்பட்ட கைக்கிளைச் செய்யுள் முத்தொள்ளாயிரத்துட்போலப் பலவாய் வரினும் அவற்றுக்கு அளவையும் வெண்பாவின் அளவேயென்று அடக்கினார் தொல்காப்பியனார்.

2. 'வசைப்பாட்டு' என்றது, அங்கதப்பாட்டினை.

(இ-ள்) அங்கதப் பாட்டாகிய வெண்பாவிற்கு அடியளவு முற்கூறியவாறு சிறுமை இரண்டடி, பெருமை பன்னிரண்டடி எனக் குறுவெண்பாட்டிற்கும் நெடுவெண்பாட்டிற்கும் கூறிய அளவேயாகும் எ-று.

அங்கதப் பாட்டு வசைப் பொருட்டாகிய மந்திரம் போல்வதாகலின் அடிவரையில்லாத ஆறனுள் ஒன்றாகிய மந்திரம் போன்று அதற்கும் அடிவரையில்லையோ என்று ஐயுற்ற மாணவனை நோக்கிப் பாட்டாய் வருதலின் அதுவும் அடிவரையறையுடையதாயிற்று என ஐயமகற்றியவாறு.

௪௫௩. கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை என்றிவை
தொகைநிலை மரபின் அடியில என்ப.[1]

**இளம்பூரணம் :**

என் எனின். அடியளவு வரையறையில்லாத செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). கலிவெண் பாட்டும், கைக்கிளைப் பொருளைப் பற்றிய பாவும். செவியுறை வாழ்த்து, வாயுறைவாழ்த்து, புறநிலைவாழ்த்து என்ற பொருண்மைக்கண் வரும் வெண்பாக்களும் அளவு வரையறுக்கப்படா; பொருள் முடியுங் காறும் வேண்டிய அடி வரப்பெறும் என்றவாறு. [2] (௧௫௩)

**பேராசிரியம் :**

இஃது, எய்தாததெய்வித்தது: அளவை கூறாதவற்றுக்கு அளவை கூறினமையின். [3]

(இ-ள்.) இவை ஐந்தும் பெருமைக்கெல்லை இத்துணையெனத் தொகுத்துக் கூறுந் தன்மையுடைய அளவால் வரும் அடியையுடைய அல்ல (எ-று).

கலிவெண்பாட்டென்பது ஒருபொருணுதலுதலால் திரிபின்றி நடப்பதன்றிப் பன்னிரண்டடியின் இகந்துவந்து,

---

1. 'தொகுநிலை யளவி னடியில வெண்ப' என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைகளிலுள்ள பாடமாகும்.

2. 'தொகைநிலை மரபின் அடியில' எனவே 'பொருள் முடியுங்காறும் வேண்டிய அடிவரப் பெறும்' என்றார்,

3. அளவை கூறாதவற்றுக்கு அளவை கூறினமையின் இஃது எய்தாதது எய்துவித்தது.

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து" (466)

வாராது ஒன்றேயாகி வருவதெனக் கொள்க.

கைக்கிளைச் செய்யுளென்பது கைக்கிளைப்பொருட்கு உரித்தாய்வரும் மருட்பா வென்றவாறு. அஃதேல், ஈண்டோதிய கலிவெண்பாட்டு மொழிந்த கைக்கிளைப் பொருண்மேல் வாராவோ வெனின்,—வருமென்பது,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்"
(தொல்-அகத்-58)

என்புழிக் கொண்டாமென்பது. எனவே, வெண்பாட்டல்லாதன கலிப்பாட்டுக்கள் கைக்கிளைப்பொருண்மேல் வந்தவழியும் அவற்றுக்கு அளவை மேற்கூறியவாற்றானே அடங்குமென்பதாயிற்று. செவியறி வாயுறை புறநிலையென்பன மேற்,

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ"
(தொல்-செய்-110)

எனவே, ஒழிந்த பாவான் வருமெனப்பட்ட பொருண்மேல் வருஞ் செய்யுள். ஆண்டோதியவற்றிற்கு ஈண்டு அளவை கூறானோ வெனின், – அஃது ஆசிரியமும் வெண்பாவுமாகி வேறு வருதலின் முற்கூறிய வகையானே அடங்குமென்பது. மற்றுக் கொச்சக வொருபோகாகியுந் தொடர்நிலைச்செய்யுட்கண் வருமால் அவையடக்கெனின்,[1] அஃது,

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடைய"
[தொல்-செய்-149]

கொச்சக வொருபோகென் றொழிக.

"தொகுநிலை யளவின் அடியில"

என்பது, விரவுறுப்புடைய வெண்கலியுங் கொச்சகக்கலியும் உறழ்கலியுமென்றிவற்றிற்கு மேல் அம்போதரங்கம் பெற்ற அளவினை முதலாக நாட்டிக்கொண்ட தொகுநிலை யளவெனப்பட்ட அடிமேல் அடியிகந்தோடா வென்றவாறு. 'தொகுநிலையள' வென்பது தலையளவு இடையளவு கடையள வெனப்பட்ட அம்போதரங்கம் மூன்றற்கும் பெருகிய வெல்லையாகி அளவின் விரியாது அவற்றுக்குச் சுருங்கிய வெல்லையாகி அறுபதும்

1. 'மற்று, ''அவையடக்கு கொச்சகவொருபோகாகியும் தொடர்நிலைச் செய்யுட்கண் வருமாலெனின்'' என இயையும்.

முப்பதும் பதினைந்து மெனத் தொக்குநிற்கும் அளவினவாகிய அடி மேலேறா வென்றவாறு. தொகுமளவென்னாது 'தொகுதி-நிலை' யென்றான் மூன்று தொகையினும் முப்பஃதாகிய இடைநிலைத்தொகையே கோடற்கென்பது. இன்னென்னும் ஐந்தா-முருபு நீக்கத்தின்கண் வந்தமையின் முப்பஃதடியின் இகந்துவரும் அடி இல வென்றவாறு. இனி, அம்முப்பஃதாகிய தொகுநிலை இவ்வைந்தற்கும்[1] நீண்ட வடிக் கெல்லை யாதலின் தொகுநிலை யென்னாது 'அளவு' என்றானென்பது, 'நீண்டதனை அளவுடைத்' தென்பவாகலின்.[2] மற்றிங்ஙனம் இவை முப்பஃதடியின்மேல் வாராவென்று பெருக்கத்திற் கெல்லை கூறவே, சுருக்கத்திற் கெல்லை வரையறையிலவென்றானாம்; ஆகவே, இரண்டடி யானும் வருமென்றானாம் பிறவெனின், — அற்றன்று; 'ஒரு பொருணுதலிவருங் கலிவெண்பாட்டாயிற்' பன்னீரடி இகவா-தென்பது,

"திரிபின்றி வருவது கலிவெண் பாட்டு''
(தொல் செய்-153)

என்றவழிப் போதுமாகலின், ஈண்டு ஓதிய கலிவெண் பாட்டுப்[3] பதின்மூன்றடியிற் சுருங்கா தென்பது பெற்றாம். இது கைக்கிளைப் பொருண்மேல் வந்ததாயினும் ஒக்கும்.[4] ஒழிந்த நான்கும் மருட் பாவாதலான்,

"வெண்பா வாகி யாசிரிய வியலான் முடியவும் பெறும்''
(தொல்-செய்-119)

என்றானாகலானும்,

"வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும்''

என வருகின்ற சூத்திரத்தானும், அவ்விரண்டு பாவின் கூட்டம்[5] இரண்டடியால் வாரா வாகலானும் அவையும் நான்கடியிற்

1. கலிவெண்பாட்டு, கைக்கிளைச் செய்யுள், செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து, புறநிலைவாழ்த்து என்னும் இவ்வைந்தற்கும்.

2. 'அளவு' என்னுஞ்சொல் நீட்சி என்னும் பொருளில் ஆளப்பெற்றது.

3. ஈண்டோதிய கலிவெண்பாட்டு என்றது, ஒருபொருள் நுதலாது வரும் கலிவெண்பாட்டினை.

4. பதின்மூன்றடியிற் சுருங்காமையாகிய இவ்வளவு, கைக்கிளைப் பொருள்-பற்றி வரும் கலிவெண்பாவுக்கும்.

5. வெண்பாவும் ஆசிரியமுமாய் வரும் அவ்விரண்டுபாவின் கூட்டமாகிய மருட்பா.

சுருங்காவென்பது உய்த்துக்கொண் டுணர வைத்தாரெனென்பது; என்னை? கைக்கிளைப் படலத்துள்:[1]

"போற்றி வெண்பா வாகி மற்றத
னிறுதி யைஞ்சீ ராசிரி யம்மே"

என்றாராகலின். மற்று மூன்றடியிற் சுருங்காது ஆசிரியமாத லானும் இரண்டடியிற் சுருங்காது வெண்பாவாதலானும் இவ் வைந்தடியிற் சுருங்காவென்று கொள்க. [2] இது,

"பண்புற முடியும் பாவின" (தொல்-செய் 161)

என மேற்சொல்லும்.

அவற்றுக்குச் செய்யுள்;

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுநள் கொல்லோ
விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்று
செய்பொருண் முற்று மளவென்றா ராயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயிற்
றொய்யி றுறந்தா ரவரெனத் தம்வயி
னொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்" (கலி-24)

என்பது, பதினேழடியான் வந்த கலிவெண்பாட்டு.

---

1. கைக்கிளைப்படலம் என்றது, பன்னிரு படலத்தின் பகுதியாகிய கைக்கிளைப் படலத்தினைக் குறித்ததாகும்.

2. வெண்பா இரண்டடியிற் சுருங்காமையும் ஆசிரியம் மூன்றடியிற் சுருங்காமையும் உடையவாதலின் அவ்விரண்டுங்கூடிய கூட்டமாகிய மருட்பா ஐந்தடியிற் சுருங்கி வாராது என்றார்.

"சுடர்த்தொடீ கேளாய்" (கலி-51)

என்பது, ஒரு பொருணுதலிப் பதினாறடியான் வந்தது.

"திருந்திழாய் கேளாய்" (கலி-65)

என்பது, இருபத்தொன்பதடியான் வந்த கலிவெண்பாட்டு. ஒழிந்தனவும் அன்ன; நூற்றைம்பது கலியுள்ளுங் கைக்கிளை பற்றி இவ்வாறு வருங் கலிவெண்பாட்டுக் காணாமாயினமையிற் காட்டாமாயினாம். இலக்கணமுண்மையின் இலக்கியம் பெற்ற வழிக் கண்டுகொள்க. 1

"கனவினிற் காண்கொடா கண்ணுங் கலந்த
நனவினுண் முன்விலக்கு நாணு மினவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று"

(முத்தொள்ளாயிரம்:69)

இது, கைக்கிளைபற்றி வந்த கலிவெண்பாட்டென்னாமோ வெனின், என்னாமன்றே, அது பாடாண்டிணைப் புறப்பொருளாகலானும் ஒருபொருணுதலுதல் ஐந்திணைக்கண்ணதேயாகலானும் பன்னிரண்டடியின் இகந்ததன்றாகலானும் வெண்பாவேயாமென்பது.2 இப் பொருட்பகுதி யுணராதாரும் இது மரபென்ப தறியாதாரும், நூற்றைம்பது கலியுள்ளும் இவை கோப் புண்டன வென்பது நினையாதாரும் இவற்றுள் ஒரு பொருணுதலியன ஒழிந்தன வெல்லாம் வெண்பா வென்று அடிவரை கூறாதொழிப. அங்ஙனம் மரபழியக் கூறின் ஒரு சாத்தனை நாட்டி அவனைக் காமுற்று இவள் இன்னவா றாயினளென ஆசிரியத் தானும் வஞ்சியானும் பொருள் வேற்றுமையுடைய ஒருசார்க் கொச்சகமல்லாத கலிப்பாவினானுஞ் செய்யுள் செய்தலும்,

---

1. கலித்தொகையிலுள்ள நூற்றைம்பது கலிப்பாவுள்ளும் கைக்கிளைப் பொருளிலமைந்த கலிவெண்பா காணப்படாமையின் அதற்கு உதாரணங்-காட்டப்பெறவில்லை; கைக்கிளைப் பொருள்பற்றிக் கலிவெண்பா வருதலுண்டு என்னும் இலக்கணமுண்மையால், அதற்குரிய இலக்கியம் வந்தவழி அதனை உதாரணமாகக்கொள்க என்பதாம்.

2. இங்குக் காட்டப்பெற்ற முத்தொள்ளாயிரப்பாடல் பாடாண்டிணைப்-புறப்பொருளாதலானும். கலிவெண்பா ஒருபொருள் நுதலிவருதல் என்பது அன்பின் ஐந்திணை பற்றியதாதலானும், கைக்கிளைப்பொருள் பற்றிவரும் கலிவெண்பா பன்னிரண்டடியின் மிக்குவருமாதலானும் இது கலிவெண்பா-வாகாது. நான்கடியால் வந்த இது அளவியல் வெண்பாவேயாம்.

இனி அதனிலையாகிய ஆண்பாற் கைக்கிளை ஆசிரியத்தானும் வஞ்சியானும் வருதலும் பிறவும் இன்னோரன்னவெல்லாம் புலனெறி வழக்கினுட் காட்டல் வேண்டுமென மறுக்க[1] என்றார்க்கு வரைவுகடாதற்கண்ணுந் தலைவனை அன்பிலனாகச் சொல்லுவன பாடாண்டிணைக் கைக்கிளை யாகாவோவெனின்,-

"அவை சுட்டி யொருவர் பெயர்"

(தொல்-அகத்-54)

கொள்ளாமையின் ஆகாவென்பது. அஃதேல்,

"விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறை" (கலி 45)

என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள்,

"கால்பொர நுடங்கல கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை"

எனவும்,

"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும்"

(கலி-99)

என்னும் மருதப்பாட்டினுள்,

"அறனிழ லெனக்கொண்டா யாய்க்குடைப் யக்குடைப்
புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை"

எனவும் இவை சுட்டியொருவர் பெயர் கொள்ளாக் கைக்கிளை வந்தனவாலெனின்,-அற்றன்று; தலைமக னன்பின்மையே மெய் யாயினன்றே அன்னதாவது; இவை அன்னவின்றி வரைவு

1. பொருட்பகுதியமைந்த செய்யுட்களின் மரபு பற்றிய இவ்வியல் பறியாதார் ஒருபொருள் நுதலிவரும் கலிவெண்பா வொழிந்தன வெண்பா என்று அடிவரையறை கூறாதொழிவர். இவ்வாறு மரபுகெடக்கூறின் ஒருவனைத் தலைமகனாய்ப் பெயர்கூறி நிறுத்தி அவனைக் காதலித்து இவள் இவ்வாறாயினாள் என ஆசிரியத்தாலும் வஞ்சிப்பாவாலும் பொருள்வேறுபட்ட ஒருசார்க் கொச்சகக்கலிப்பாவாலும் செய்யுள் செய்தலும் இனி, அதனிலையாகிய ஆண்பாற்கைக்கிளை ஆசிரியத்தாலும் வஞ்சியாலும் வருதலும் பிறவும் இத்தகைய மரபு மாற்றங்கள் புலநெறி வழக்கிற் காட்டுதல் வேண்டும். மரபுக்கு மாறுபட்ட இவை சங்கச் செய்யுட்களில் இல்லாமையால் அன்னோர் கூற்றுப் பொருந்தாதென மறுக்க என்றவாறு.

கடாவலும் ஊடலுங் காரணமாக அன்பிலனென்று இல்லது சொல்லினமையின் அவை ஒருதலையன்பாகா வென்பது[1] மற்று.

"என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே
... ... ...
உமணர் வெரூஉந் துறையன் னன்னே" (புறம்-84)

என்னும் புறநானூற்றுப் பாட்டும் பெண்பாற் கைக்கிளையாதலின் அதனை ஆசிரியத்தான் வாராதென்ற தென்னையெனின் -

"ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின"
(தொல்-செய்-118)

என்புழிச், சிறுபான்மை தலைவி கூற்றாகியே வருவன அமையு மென்று போதந்தாமாகலின் அதுவே பெருவிதியாகாதென்பது.[2]

இனிக் கைக்கிளை வருமாறு :

"திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலஞ் சேவடியுந் தோயு - மரிபரந்த
போகித முண்கணு மிமைக்கு
மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே"
(புற வெ மாலை-கை-8)

இது, நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லினது; நற்காம மன்றா மாகலின்.[3] இக்கருத்தினானே; இதனைப் புறத்திணையுட்-கொண்டாருங் கைக்கிளைப் படலத்து,

"நெஞ்சிற் குரைத்தலுங் கேட்போ ரின்றி
யந்தர மருங்கிற் கூறலு மல்லது
சொல்லலுங் கேட்டலு மில்லை யாக
வகத்திணை மருங்கி னைவகை யானு
மிகத்த லென்ப விவ்வயி னான"

என்றாரெனக் கொள்க.

1. ஒருதலையன்பு-ஒருபாற் கேண்மையாகிய கைக்கிளை.

2. 'ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின' என்ற சூத்திரவுரையில் "அங்கதமும் கைக்கிளையும் மற்றைப் பாக்களும் உறுப்பாக வரும் என்பது படும்" எனப் பெண்பாற்கைக்கிளை சிறுபான்மை ஆசிரிய முதலிய மற்றைப் பாக்களால் வருவன அமையும் எனக் கூறிப்போந்தாம், அதுவே பெரும்பான்மை பற்றிய விதியாகாது என்பதாம்.

3. நற்காமம் என்றது, அன்பினைந்திணையொழுகலாற்றை. ஒருபாற் கேண்மை கைக்கிளையாதலின் அதனை 'நற்காமம் அன்று' என்றார்.

பாடாண் கைக்கிளைக்கும் ஈண்டே அளவு கூறுகவெனின் கலிவெண்பாட்டினைக் கைக்கிளை யென்னாமாயினன்றே அது கடாவாவது.[1] மருட்பாவிற்குக் கைக்கிளைப்பகுதி வரைந்தோதல் வேண்டுவதின்மையின் அதற்கும் இதுவே அளவாமென்பது. ஒழிந்த மருட்பா மூன்றற்கும் உதாரணம் மேற்காட்டுதும்.[2] இக்காலத்தார் 'ஏறிய மடற்றிற (51)' மென்னும் பெருந்திணைப் பொருண்மேலுங் 'காமஞ்சாலா விளமையோளை' ஒழிந்த மகளிரொடுங் கூட்டியுரைக்குங் கைக்கிளைப்பொருண்மேலுங் கலி வெண்பாட்டெனப் பெயர் கொடுத்துச் செய்யுள் செய்பவால் அவை அவ்வாறு செய்தற்கும் அவை முப்பதிற்றடியின் இகந்து எத்துணை யடியினும் ஏற்கு மென்றற்கும் என்னை ஓத்தெனின், அவ்வாறு வருமென்பது இந்நூலுட் பெற்றிலமாயினும் இரு பதின்சீர்க் கழிநெடிலடி யானும் இது பொழுது செய்யுள் செய்யுமாறுபோலக் காட்டலான் அமையும். அவை புலனெறி வழக்கிற்குச் சிறந்திலவாகலிற் சிறுவரவினவென் றொழிக.[3] (கசுO)

**நச்சினார்க்கினியம் :**

இது "ஒருபொரு ணுதலிய" (செய். கருஅ) என்னுஞ் சூத்திரத்திற் சீர்வகைக் கலிவெண்பாவிற்கும், நால்வகை மருட்பாவிற்கும் அடிவரையறை யின்மை கூறுகின்றது.

(இ-ள்) கலி...றிவை எ-து கலிவெண்பாட்டு, கைக்கிளைச் செய்யுள், புறநிலைவாழ்த்துப் பொருண்மேல் வருஞ்செய்யுள், வாயுறை வாழ்த்துப் பொருண்மேல் வருஞ்செய்யுள், செவியறிவுறூஉப்பொருண்மேல்வருஞ் செய்யுள் என்றிவ் வைந்தும். தொகு...ப எ-து பெருமைக் கெல்லை யித்துணையெனத் தொகுத்துக்கூறுந் தன்மையையுடைய அளவால்வரும் அடியையுடைய வல்லவென்று கூறுவர் புலவர். எ-று.

---

1. கைக்கிளை கலிவெண்பாட்டாகவும் வருதலின் கலிவெண்பாட்டிற்குரிய அளவே பாடாண் கைக்கிளைக்கும் அளவாகக் கொள்ளப்படும் என்பதாம்.

2. கைக்கிளையொழிந்த புறநிலைவாழ்த்து, வாயுறைவாழ்த்து, செவியறிவுறூஉ என்னும் மருட்பா மூன்றற்கும் அடுத்த சூத்திரத்துள் உதாரணங்காட்டுவோம்.

3. பிற்காலத்தார் செய்த உலாச் செய்யுளாகிய அவை தொல்காப்பியனார் கூறிய அன்பி னைந்திணை யொழுகலாறு பற்றிய புலனெறி வழக்கிற்குச் சிறந்தனவாகாமையின் அவை சிறுபான்மையாய்ச் செய்யுள் வழக்கில் இடம்பெறுவனவாயின வெனக்கொள்க.

உ-ம். "சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடும்"
(கலி. ௫௧)

இது ஒருபொருணுதலிப் பதினா றடியான் வந்தது. "திருந்திழாய் கேளாய்" (கலி. ௬௫) என்பது இருபத்தொன்பதடியான் வந்தது. இதனைக் கைக்கிளையோ டெண்ணுதலிற் கைக்கிளைப் பொருளொடுங் கலிவெண்பாட்டு வருதல் கொள்க. அது கலித்தொகைக்கணின்மையிற் காட்டாமாயினாம். ஒழிந்த வுறுப்போடு கூடிய கலிவெண்பாட்டுக்கள் பெற்ற அடிவரையறையும் அவ்வுதாரணங்களுட் காண்க. இனிக்

"கனவினிற் காண்கொடாக் கண்ணுங் கலந்த
நனவினுண் முன்விலங்கு நாணு-மினவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று"
(முத்தொள்.)

இது புறப்புறக் கைக்கிளை. இதனைக் கைக்கிளைப் பொருண் மேல் வந்த கலிவெண்பாட்டெனின் இது சுட்டி யொருவர்ப் பெயர்க்கொண்ட பாடாண்டிணைப் புறப்பொருளாகலானுங் கலிவெண்பாட்டு அப்பொருண்மேல் வருதல் சிறுபான்மையாதலானும் இது பன்னீரடியி னிகவாது வருதலானும் வெண்பாவேயாம். இவ்வாறு புறப்பொருளான் வந்து இரண்டுறுப்பாயும் ஒருறுப்பாயும் பாவும் பொருளும் வேறுபட்டு வெள்ளடியி னிகந்துவரும் கலிவெண்பாவாகிய உலாச்செய்யுள் அடிவரையன்றி வருமாறும் பெருந்திணைப் பொருண்மேல்வரும் மடற்செய்யுளும் ஒருறுப்பாய் அடியிகந்து வருமாறும் இக்காலத்துக் கூறுகின்றவற்றுட் காண்க. அது திருவுலாப்புறத்துள்ளும் "வாமான வீசன் வரும்" (ஆதியுலா.) எனமுடித்து மேல் வேறோருறுப்பாயவாறும் ஒழிந்த உலாக்களுள் வஞ்சியுரிச்சீர் புகுந்தவாறும் அடிவரையறை யின்மையுமாம். அகப்புறமும் புறப்புறமுமாய மருட்பாவாய்க் கைக்கிளை யடிவரையறையின்றி வந்தன வந்துழிக் காண்க. காமஞ்சாலா இளமையோன்வயின் வந்த கைக்கிளையுங் காட்சி முதலிய கைக்கிளையும் ஆசிரியத்தினும் வஞ்சியினும் வாரா. எனவே யொழிந்தபாவினுள் எல்லாக் கைக்கிளையும் வருமாயிற்று.

"என்னை
புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே
யாமே
புறஞ்சிறை யிருந்தும் பொன்னன் னம்மே
போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே
கல்லென் பேரூர் விழவுடை யாங்க
ணேமுற்றுக் கழிந்த மள்ளர்க்
குமணர் வெரூஉந் துறையன் னன்னே"
(புறம். ௮௪)

இது சுட்டி யொருவர்ப் பெயர் கொள்ளாத பாடாண்டிணைக் கைக்கிளை: "விடியல் வெங்கதிர்" (கலி. ௪௫) என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள்,

"கால்பொர நுடங்கலிற் கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை"

என்பதூஉம் "நறவினை வரைந்தார்க்கும்" (கலி. ௯௩) என்னும் மருதப் பாட்டினுள்

"அறநிழ லெனக்கொண்டாய் நின்குடை யக்குடை
புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை"

என்பதூஉம் சுட்டியொருவர்ப் பெயர் கொள்ளாத கைக்கிளையாமெனின் இவை தலைவ னன்பின்மை மெய்யாயினன்றே கைக்கிளையாவது; அவ்[1]வரைவு கடாவலும் ஊடலுங் காரணமாக அன்பிலனென்றலி னொருதலைக் காமமன்று ஒழிந்த அடிவரையின்றி வருமாறு மேற்கொள்க.

## ஆய்வுரை :

இஃது அளவை கூறாதனவற்றுக்கு அளவை கூறுகின்றது.

(இ-ள்) கலிவெண்பாட்டும் கைக்கிளைப் பொருள் பற்றிய பாவும் செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து, புறநிலை வாழ்த்து என்ற பொருண்மைக்கண் வரும் வெண்பாக்களும் இத்துணை அடியுடையன எனத் தொகுத்து வரையறுத்துக் கூறும் அடி வரையறையில்லாதன எ று.

1. அவை என்று திருத்துக.

எனவே சொல்லக் கருதிய பொருள் முடியுமளவும் வேண்டிய அடிகளைப் பெற்று வருவன என்பதாம். ஈண்டு கைக்கிளைச் செய்யுள் என்றது கைக்கிளைப் பொருட்கு உரித்தாய் வரும் மருட்பாவை.

ஏருசு. புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதில் தெரியின்
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின என்ப.

**இளம்பூரணம் :**

என்—எனின், மேலனவற்றுட் சிலபொருட்குரிய வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) புறநிலை வாழ்த்தும் வாயுறைவாழ்த்துஞ் செவி யறிவுறூஉவும் மருட்பாவினால் வரப்பெறும் என்றவாறு.[1]

எனவே, மருட்பா நான்கு பொருளினல்லது வரப்பெறா-தாயிற்று.[2]

உதாரணம் வந்தவழிக் காண்க. (கருசு)

**பேராசிரியம் :**

இது, கைக்கிளை மருட்பாவல்லாத மருட்பாவும் அதுவே போல வெண்பா முதலாக ஆசிரியம் பின் வந்து முடியுமென்று ஈண்டு அவற்றுக்கு இடம்பட்டது கண்டு கூறியவாறு; என்னை?

"மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்றே"
(தொல்-செய். 85)

என்றவழி, ஆசிரியம் முன்னர் நிறீஇப் பின்னர் வெண்பாவினைக் கூறி,

---

1. 'வெண்பா வியலினும் ஆசிரிய வியலினும், பண்புற முடியும் பா' என்றது மருட்பாவினை. "வெண்பா முதல் வந்து அகவல்பின்னாக விளையுமென்றால், வண்பான் மொழிமடவாய் மருட்பா வென்னும் வையகமே" எனவரும் யாப்பருங்கலக் காரிகை மேற்குறித்த தொல்காப்பியத் தொடரை அடியொற்றி-யமைந்துள்ளமை காணலாம். 'திறநிலைமூன்றும்' என்னும் எழுவாய்'பாவின' என்னும் வினைக் குறிப்பினைப் பயனிலையாகக் கொண்டு முடிந்தது.

2. மருட்பா, புறநிலைவாழ்த்து, வாயுறைவாழ்த்து, செவியுறிவுறூஉ, கைக்கிளையென்னும் இந்நான்குபொருள் பற்றியல்லது வாராது என்பதாம்.

"வெண்பா வியலினும் மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின" (473)

என்றமையின்.[1] இங்ஙனம் எண்ணப்பட்ட மூன்று பொருட்கும் இலக்கணம் முன்னர்ப் பாவிரியோத்தினுட் கூறினவற்றுக்கு இன்னவாறு செய்யுள் செய்க வென்றற்கு இது கூறினா னென்பது:[2]

(இ - ள்) இம்மூன்றும் வெண்பா முன்னும் ஆசிரியம் பின்னுமாய் வரும் (எ - று).

'திறநிலை மூன்று' என்றான், முற்கூறியனவெல்லாம் அகத்திணையாகலின். இவை புறத்திணையுளல்லது வாராவென்றற் கென்பது.[3] 'திண்ணிதிற் றெரியி'னென்பது இவை மூன்றுங் கைக்கிளை மருட்பாப்போல் ஆண்பாற் கைக்கிளையும் பெண் பாற் கைக்கிளையுமாகி அகனும் புறனும் பற்றி வாராது ஒரு தலையாகவே புறத்திணையென்று தெரியப்படுவன வென்ற வாறு. இதன் பயம்: கைக்கிளை மருட்பாப் புறத்திணையானும் வருமென்பது [4] 'இயல்' என இருகாற் சொல்லியவதனான் இயற்சீர் வெள்ளடியான் வெண்பா வருதல் சிறந்ததெனவும் அதற்கேற்ற வகையான் ஆசிரியம், இயற்சீரான் வருதல் சிறந்த தெனவுங் கொள்க.[5] 'பண்புற முடிதல்' என்பது மேற் சிறுமைக்

---

1. செய்யுளியல் 85-ஆம் சூத்திரத்து, ஆசிரியமும் வெண்பாவுமாகிய இருகூறு மல்லது மருட்பாவுக்குத் தனது ஓசையிது வெனக் காட்டுந் தனி நிலையில்லை யென்றவழி ஆசிரியத்தினை முன்னும் வெண்பாவினைப் பின்னுங் கூறினாராயினும் அவ்விருபாவின் கூறுகளும் மருட்பாவின் அமைந்து நிற்கும் நிலை வெண்பா முன்னும் ஆசிரியம் பின்னும் என்பது இங்கு விளங்கக் கூறப்பட்டது.

2. புறநிலை, வாயுறை, செவியறிவுறூஉ என்பன மூன்றும் இவ்வியலிற் பாவுறுப்பினை விரித்துக்கூறும் பகுதியில் விளக்கப்பெற்றன. மேற்குறித்த பொருள்கள் பற்றிய செய்யுள் இன்னவாறு அமையும் என்பது இச்சூத்திரத்தால் விளக்கப்பெற்றது.

3. புறநிலைவாழ்த்து முதலிய இவை மூன்றும் புறத்திணையு ளல்லது வாரா என்பார் 'திறநிலை மூன்றும்' என்றார்.

4. இவைமூன்றும் கைக்கிளை மருட்பாப் போன்று அகமும் புறமும் பற்றி வாராது ஒருதலையாகப் புறத்திணையென்று தெரியப்படுவன என்பார் 'திண்ணிதின்தெரியின்' என்றார். இவ்வாறு கூறியதனாற்பயன் கைக்கிளை மருட்பாப் புறத்திணைக்கண்ணும் வரும் என்பதாம்.

5. வெண்பாவியல், ஆசிரியவியல் என 'இயல்' என்பதனை ஈரிடத்தும் சேர்த்துரைத்தமையால் வெண்பா இயற்சீர் வெள்ளடியாலும் ஆசிரியம் இயற்சீராலும் வருதல் சிறந்தது என்பதாம்.

கெல்லை கூறாமையின் வெண்பாவிற் கிழிபாகிய எழுசீரன்றி எண்சீரான் வரினும் ஆசிரியத்திற் கிழிபாகிய மூன்றடி வரினும் எருத்தடி குட்டமாகி வரினும் அங்ஙனம் மூன்றடி வந்தவழி வெண்பா நான்கு முதல் பன்னிரண்டளவும் உயரினும் அவை யெல்லாம் பண்பெனப்படுவன வெனவும், அல்லன சிறப்பிலவென வுஞ் சொல்லினவாறு. இக்கருத்தினான் வெண்பாவடி வரை யிலவாயினும் ஆசிரியவடி மூன்றிகவாவென்பது கைக்கிளைப் படலத்துள்ளுஞ் சொல்லப்பட்டது; என்னை?

> "முச்சீ ரெருத்திற் றாகிமுட் டின்றி
> யெச்சீ ரானு மேகாரத் திறுமே"
>
> (கடியநன்னியார், யா. வி. ப. 204)

என்றாராகலின். 'பாவின' வென்றதனான் இவ்விரு பகுதியுந் தத்தம் பாக்கள் வேறு வேறு பெற நிகழுமென்பது.[1] எனவே இயற்சீர் வெள்ளடி யாசிரியந் தொடுக்குங்கால்,

> "எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
> வுலைக்கல் லன்ன பாறை யேறி" (குறுந்.-12)

எனப் பாவின்ன ஒன்றாகத் தொடுத்தாற்போலத்[2] தொடுத்தல் ஈண்டு அமையாதென்றானாம். இவை மூன்றற்கும் உதாரணங் காட்டுங்கால் மேற் காட்டாது நின்ற பாடாண்டிணைக் கைக்கிளை மருட்பாவிற்கு உதாரணங் காட்டியே காட்டப் படும். (கஞக)

**நச்சினார்க்கினியம் :**

இது கைக்கிளை மருட்பாவல்லாத மருட்பாவும் அதுவே போல வருமென்றற்கு[3] உடம்பட்டமைகண்டு ஈண்டுக் கூறுகின்றது.

(இ-ள்.) இம் மூன்றும் முன்பு வெண்பாவும் பின்பு ஆசிரியமு-மாய் வரும். எ-று.

---

1. வெண்பாவும் ஆசிரியமும் ஆகிய இவ்விருபகுதியும் தத்தம் பாவென்னும் உறுப்பு வேறுவேறாகப் புலனாகுமாறு அமைவது மருட்பா என்றவாறு.

2. ஒன்றாகத் தொடுத்தலாவது இயற்சீர் வெண்டளையும் ஆசிரியத்-தளையும் ஒருங்கு கலந்து ஒருபாவென்ன வருமாறுபோன்று ஒருபாவாகி விரவச் செய்யுள் செய்தல்.

3. அதுவேபோல வருதலாவது, வெண்பா முதலாக ஆசிரியம் பின்வந்து முடிதல்.

"மருட்பா வேனை யிருசா ரல்லது" (செய். அரு) என்ற வழி இன்னவாறு வரு மென்னாமையின் இது கைக்கிளை மருட்பாப் போல வருமென்றற்கு முன்பு வெண்பா வியலினும் பின்பு ஆசிரிய வியலினும் முடியுமென்று அவை வருமுறை கூறினார். முன்னர் இம்மூன்று பொருட்கும் இலக்கணங் கூறிப் போந்த வற்றிற்கு இன்னவாறுஞ் செய்யுட் செய்த லுரித்தென்று ஈண்டு ஓர் செய்யுள் வேறுபாடு கூறினார். இது புறத்திணை யுளல்லது வாரா வென்றற்குத் திண்ணிதி னென்றார். எனவே இவை கைக்கிளை மருட்பாப்போல் ஆண்பாற் கைக்கிளையும் பெண்பாற் கைக்கிளையுமாய் அகனும் புறனும் பற்றி வாரா-வென்பது பெற்றாம்.[1] இயலென்று இருகாற் கூறியவதனான் இரண்டுபாவும் இயற்சீரான் வருதல் சிறப்புடைத்தென்க. 'பண்புற' என்றதனான் வெண்பாவி னிழிபாகிய எழுசீரா னன்றி யெண்சீரான் வருதலும், ஆசிரியத்தி னிழிபாகிய மூன்றடிவரினும் எருத்தடி குட்டம்பட்டு வருதலும் வெண்பா பலவடி வரினு மாசிரிய மூன்றி னிகவா வென்றுங் கொள்க. பாவின வென்ற-தனான் இவ்விரு பகுதியுந் தத்தம் பாக்கள் வேறுவேறு நிகழுமென்று கொள்க. "எறும்பி யளையிற் குறும்பல் சுனைய" (குறுந். கூஉ) என்னும் பாட்டுப்போல வோசை கலந்து வாரா.

உ—ம். "தென்ற லிடைபோழ்ந்த தேனார் நறுமுல்லை
முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றா னிற்காப்ப வென்றுந்
தீராநண்பிற் றேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே"

இது புறநிலை. இஃது அடியிகந்தது வந்துழிக் காண்க.

"பலமுறையு மோம்பப் படுவன கேண்மின்
சொலன்முறைக்கட் டோன்றிச் சுடர்மணித்தே ரூர்ந்து
நிலமுறையி னாண்ட நிகரில்லார் மாட்டுஞ்
சிலமுறை யல்லது செல்வங்க ணில்லா
விலங்கு மெறிபடையு மாற்றலு மன்புங்
கலந்ததங் கல்வியுந் தோற்றமு மேனைப்
பொலஞ்செய் புனைகலனோ டிவ்வாறி னாலும்
விலங்கிவருங் கூற்ற நீக்கலு மாகா

1. பேராசிரியர் கருத்தைக் கொண்டு கூறியது.

தனைத்தாத னீயிருங் காண்டிர்-நினைத்தக்க
கூறிய வெம்மொழி பிழையாது
தேறிநீ ரொழுகிற் சென்றுபயன் றருமே"

இது வாயுறை.

"பல்யானை மன்னர் முருங்க வமருழந்து
கொல்யானைத் தேரொடுங் கோட்டந்து நல்ல
தலையாலங் கானம் பொலியத் தொலையாப்
படுகளம் பாடுபுக் காற்றிப் பகைஞ
ரடுகளம் வேட்டோன் மருக வடுதிற
லாழி நிமிர்தோட் பெருவழுதி யெஞ்ஞான்று
மீர முடையையா யென்வாய்ச்சொற் கேட்டி
யுடைய வுழவரை நெஞ்சனுங்கக் கொண்டு
வருங்கா லுழவர்க்கு வேளாண்மை செய்யன்
மழவ ரிமைக்கும் வரைகா ணிதியீட்டங்
காட்டு மமைச்சரை யாற்றத் தெளிய
லடைத்த வரும்பொரு ளாறன்றி வெளவலி
னத்தை பெரும்பொரு ளாசையாற் சென்று
பெருங்குழிசி
மன்ற மறுக வகழாதி யென்று
மறப்புற மாகி மதுரையா ரோம்பு
மறப்புற மாசைப் பாடேற்க வறத்தா
லவையார் கொடுநாத் திருத்தி நவையாக
நட்டார் குழிசி சிதையாதி யொட்டார்
செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற் கவிபடைத்தாய்
கற்றார்க் கினனாகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்
செற்றார்ச் செகுத்துநிற் சேர்ந்தாரை யாக்குதி
யற்ற மறிந்த வறிவினாய் மற்று
மிவையிவை நீவா தொழுகி னிலையாப்
பொருகட வாடை நிலமக
ளொருகுடை நீழற் றுஞ்சுவன் மன்னே"

இது செவியுறை.

**ஆய்வுரை :**

இது, மருட்பாவின்கண் இடம்பெறும் பொருள் வகையும் அமைப்பும் உணர்த்துகின்றது.

(இ-ள்) புறநிலை வாழ்த்தும் வாயுறை வாழ்த்தும் செவி-யறிவுறூஉவும் எனப் புறத்திணைக்கண் நிலைபெற்ற திறத்தின வாகிய மூன்று பொருள்களையும் உறுதிப்படத் தெரிந்துரைப்பின் முறையே வெண்பாவின் இயல்பும் ஆசிரியப்பாவின் இயல்பும் ஆக இருதிறப் பண்பும் தம்மிற் பொருந்த முடியும் பாவாகிய மருட்பாவினிடத்தன எ-று.

பண்புற முடிதலாவது வெண்பா, ஆசிரியம் என்னும் இரு வகைப்பாவின் பண்பும் தத்தம் இயல்பு வழாது பொருந்தி முடிதல். பாவின—பாவின் இடத்தன எனக் குறிப்பு முற்றாகக் கொள்க. மருட்பா முதற் சூத்திரத்திற் குறித்த கைக்கிளைப் பொருளுடன் இச்சூத்திரத்திற் குறிக்கப்பட்ட புறநிலை, வாயுறை, செவியறிவுறூஉவும் ஆக நான்கு பொருளினல்லது வாராதென்பதாம்.

௪௫௫. பரிபா டல்லே*
நாலீ ரைம்ப துயர்படி யாக
ஐயைந் தாகும் இழிபடிக் கெல்லை.

**இளம்பூரணம் :**

என்-எனின். பரிபாடற்கு அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பரிபாடற் செய்யுள் நானூறடி யுயர்பாக இருபத்-தைந்தடி இழிபாக வரும் என்றவாறு[1]

எனவே, இடையெல்லா அடியானும் வரப்பெறும் என்றவாறு. கலிப்பாவினுள் ஒத்தாழிசைக்கு அளவு மேற்கூறப்-பட்டது.[2]

கலிவெண்பாட்டுக்கு வரையறை யில்லை யெனப்பட்டது.[3]

---

*பரிபாட்டெல்லை எனப்பாடங்கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

1. பரிபாடல் அடிக்கு எல்லை உயர்பு நாலீரைம்பது அடியாக இழிபு ஐயைந்தாகும் என முடியும். உயர்பு-பேரெல்லை. நாலீரைம்பது, நானூறு. இழிபு-சிற்றெல்லை. ஐயைந்து-இருபத்தைந்து.

2. ஒத்தாழிசைக் கலிப்பாவுக்கு அளவு இவ்வியல் ௪௪௫-ஆம் சூத்திரத்திற் கூறப்பட்டது.

3. கலிவெண்பாட்டுக்கு அடிவரையறை யில்லை யென்பது, ௪௫௪-ஆம் சூத்திரத்திற் கூறப்பட்டது.

கொச்சகக்கலிக்கு வரையறை கூறாமையாற் பொருண் முடியுங் காறும் வரப்பெறும் என்று கொள்க. அவ்வழிப் பல-வுறுப்பாகி வருதலின் அதற்குறுப்பாகிய செய்யுளளவிற்றாதல் வேண்டும்.

உறழ்கலியுங் கொச்சகக் கலிப்பாற்படும்.[1]

**பேராசிரியம் :**

இது, பரிபாட்டின்கண் வரும் வெண்பாவிற்கு அளவு கூறுகின்றது.

(இ - ள்.) பரிபாடற்கு உறுப்பாகிய வெண்பாவுக்கு நானூறடி பெருக்கத்திற் கெல்லை யாகவும் இருபத்தைந்தடி சுருக்கத்திற்-கெல்லை யாகவும் பெறும் (எ- று) [2]

அவை பரிபாடலுட் கண்டுகொள்க. (௧௬௨)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையே பரிபாடற் கெல்லை கூறுகின்றது.

(இ-ள்.) பரிபாடற் குறுப்பாகிய வெண்பாவும், பொதுப்பாவும் நானூறடி பெருக்கத்திற் கெல்லையாகவும் இருபத்தைந்தடி சுருக்கத்திற் கெல்லயையாகவும் பெறும்.[3] எ-று.

அவை தொகையுட் காண்க.

---

1. **௪௬௮**-ஆம் சூத்திரத்திற் கொச்சகக்கலிக்கு ஆசிரியர் அடிவரையறை கூறாமையின் பொருள் முடியுங்காறும் வேண்டும் அடிகளைப் பெற்றுவரும். அங்ஙனம் வருங்கால் பல வுறுப்புக்களைப் பெற்று வருதலின் அதற் குறுப்பாகிய செய்யுள் அளவிற்றாய அடிகளா லியன்று வரும். உறழ்கலியும் கொச்சகக்கலி-போன்று பல வுறுப்பாகி வருதலின் அதற் குறுப்பாகிய செய்யுள ளவிற்றாய் வரும்.

2. பரிபாட்டிற்கு அடி யுயர்பு எல்லை நாலீரைம்பதடியாக அடி இழிபுக்கு எல்லை ஐயைந்து ஆகும் என இயையும். நாலீரைம்பது - இருநூறு - ஐயைந்து-இருபத்தைந்து. இங்குப் 'பரிபாட்டு' என்பதற்குப் 'பரிபாடற்கு உறுப்பாகிய வெண்பா' எனப்பொருள் கொண்டார் பேராசிரியர். இதுமுறையே பரிபாடற்கு எல்லை கூறுகின்றது. எனக் கருத்துரை வரைந்தார் நச்சினார்க்கினியர்.

3. 'பரிபாட்டின்கண் வரும் வெண்பாவிற்கு அளவு கூறுகின்றது' எனக்கருத்-துரைத்தார் பேராசிரியர். பரிபாடற் குறுப்பாகிய வெண்பாவும் பொதுப்பாவும் கலந்து வரும் முழுமை நிலையிற் பரிபாடற்கு எல்லை கூறுகின்றது என நச்சினார்க்கினியர் கருத்துரை வரைந்துள்ளமை இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத் தகுவதாகும்.

**ஆய்வுரை :**

இது, பரிபாடற்கு அடியளவு கூறுகின்றது.

(இ-ள்) பரிபாடல் என்னுஞ் செய்யுள், நானூறடி உயர்ந்த எல்லையாகவும் இருபத்தைந்தடி குறைந்த எல்லையாகவும் வரும் எ-று.

௪௬௬. அளவியல் வகையே அனைவகைப் படுமே.

**இளம்பூரணம் :**

என் — எனின். மேற்சொல்லப்பட்டவை தொகுத் துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இவ்வதிகாரத்துள் ஈண்டு அதிகரிக்கப்பட்ட அளவியல் ஈண்டுச் சொன்ன வகைபெறும் என்றவாறு.[1] (௬௬)

**பேராசிரியம் :**

இது, மேற்கூறிய அளவினை வரையறுக்கின்றது.

(இ-ள்.) இத்துணையும் அளவியலான்[2] ஒரு கூறே சொல்லப்பட்டது (எ - று).

எழுநிலத்தெழுந்த செய்யுள் (476) களுள் அடிவரையறை யுடையனவற்றுக்குக் கூறினான் ஆண்டில்லாதன அடிவரை யின்றி வரும் இலக்கணத்த வென்பதூஉம் இனிக் கூறுது மென்ப தாம் இதனது பயம்.[3] (௬௬௩)

**நச்சினார்க்கினியம் :**

இது பிறன் கோட் கூறல்.[4]

(இ-ள்) யான் கூறிய அளவியலின் கூறுபாடு அத்துணைப் பகுதிப்படும் எ-று.

---

1. இவ்வியல் ௪௬௪-ஆம் சூத்திரமுதல் இதுகாறுஞ்சொல்லப்பட்டவை செய்யுளுக்குரிய அடிவரையறை யாகிய அளவியல் பற்றிய விதியாகும் என்பதாம்.

2. 'அளவியலான' என்றிருத்தல் வேண்டும்.

3. இதுகாறும் அடிவரையறை யுடையவற்றுக்கு அளவு கூறப்பட்டது. கூறப் படாது எஞ்சியன அடிவரையின்றி வரும் இயல்பின. அவை இனிக்கூறப்படும் என்பது இச்சூத்திரத்தின் பயனாகும்.

4. இங்குச் செய்யுட்குக் கூறிய அளவியலின் கூறுபாடு அத்துணைப்படும் என இந்நூலில் வரையறுத்துக் கூறுமாறு போன்று பிறர் வரையறை கூறிற்றிலர் எனப் பிறநூற்பொருளைச் சுட்டியது இச்சூத்திரம் எனக்கொண்டு 'இது பிறன்கோட்-கூறல்' என்றார் நச்சினார்க்கினியர்.

என்றது யான் சிறப்புடைத்தெனக் கூறிய பெருமைக் கெல்லை அத்துணைப் படுமெனவே பிறர் பெருமைக்கெல்லை கொள்ளாதது சிறப்பின் றென்றவா றாயிற்று.

**ஆய்வுரை :**

இது, மேற்குறித்த அளவியலைத் தொகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்) செய்யுட்களின் அளவியல் வகை மேற்குறித்த கூறுபாட்டினை யுடையதாகும். எ-று.

அடிவரை யுடையன வாகிய செய்யுளுக்குரிய அளவியல் என்னும் அவை மேற்குறித்த அவ்வகையினவே என ஈண்டு முடித்துக் கூறியதன் பயன், அடிவரையறை யில்லாதனவற்றுக்கு இனிக்கூறப்படும் எனப் புலப்படச் செய்தல் எனக்கொள்வர் பேராசிரியர்.

௲௬௭. எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை யில்லன ஆறென மொழிப.

**இளம்பூரணம் :**

என்—எனின். அடிவரையறை யில்லாதன வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). எழுநிலமாவன பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. அவற்றுட் பாட்டொழிந்த ஆறும் அடிவரையில வென்றவாறு.[1] (௬௬௭)

**பேராசிரியம் :**

மேலைச் சூத்திரத்தான் அளவியல் வகையை வரையறைப் படுத்தான்; அடிவரையறை யின்மையும் அளவியலென்பதுங் குறிப்புக் கருதா இலக்கணமாகிய செய்யுள் கூறினான் இச்சூத்திரத்தா னென்பது.[2]

(இ - ள்) அகமும் புறமுமாகிய எழுநிலத்துந்[3] தோன்றிய செய்யுளை ஆராயின் அடிவரையின்றி வரும் இலக்கணத்தளவு ஆறாம் (எ - று).

---

1. எழுநிலத்தெழுந்த செய்யுள்வகையானவன, பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. அவற்றுட் பாட்டொழிந்த ஏனைய ஆறும் அடிவரையறை யில்லாதன என்பது இளம்பூரணர் கொண்ட பொருள்.

2. இத்தொடரின் அமைப்பு தெளிவாக வில்லை.

3. எழுநிலம் என்றது அகமும் புறமும் என எழுவகைக்கூறுபட அமைந்த திணைகளை.

இதனானே 'ஆறென்பதூஉம் ஓரளவியலாயிற்று[1]. (கசுசு)

**நச்சினார்க்கினியம்:**

இது நான்கு பாவிற்கு மளவு முற்கூறிய[2] அளவிற் படாதன கூறுகின்றது.

(இ ள்.) அகமும் புறமுமாகிய எழுநிலத்திலுந் தோன்றிய செய்யுளை யாராயின் அடிவரையின்றி வரும் இலக்கணத்தன ஆறென்று கூறுவர் புலவர். எ-று.

எழுநில மென்றதற்குப் பாட்டு உரை நூல் முதலியனவுமாம்.[3]

**ஆய்வுரை :**

இஃது அடிவரையறையில்லாத செய்யுட்கள் இவையென வரையறுத்துணர்த்துகின்றது.

(இ-ள்) எழுவகை நிலத்தும் தோன்றிய செய்யுளை ஆராயின் அடிவரையறையில்லாதன ஆறு என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

இங்குக் குறிக்கப்பட்ட எழுநிலம் என்பன அடுத்து வரும் நூற்பாவில் விரித்துரைக்கப்படும் பாட்டு, உரை, நூல், வாய் மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன என்பர் இளம்பூரணர்; அகமும் புறமுமாகிய எழுவகைத்திணைகள் என்பர் பேராசிரியர்.

ளருஅ. அவைதாம்
நூலி னான உரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான[4]
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான.

**இளம்பூரணம்:**

என் — எனின். மேற்சொல்லப்பட்ட அறுவகையுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

1. 'எழுநிலத்துத்தோன்றிய செய்யுட்களுள் அடிவரையில்லாதன ஆறு' எனக்கூறிய இவ்விதியும் அளவியல் என்னும் செய்யுளுறுப்பின் பாற்படும் என்பதாம்.

2. 'முற்கூறி' என்றிருத்தல் பொருத்தம்.

3. இங்ஙனம் கொள்வோர் இளம்பூரணர்.

4. இத்தொடர்க்கு 'நொடிதல் மாத்திரையாகிய பிசி' எனப்பொருள் கொள்வர் பேராசிரியர். நொடியாவது, புனைந்துரை வகையாற் படைத்துக் கூறப்படுவது. நொடியொடு புணர்ந்தபிசி எனவே பிசிக்கு நிலைக்களம் நொடி-யென்பது பெறப்படும்.

(இ-ள்) வாய்மொழி யெனினும் மந்திர மெனினும் ஒக்கும்.[1] அங்கதமாவது 'செம்பொருள் கரந்ததென விருவகைத்தே' (செய்யுளியல்-௱௨௦) என்றதனாற் கரந்த வங்கதமெனினுஞ் சொற்குறிப்பெனினு மொக்கும். அவையாமாறு வருகின்ற சூத்திரத்தாற் காட்டுதும். (௱௫௮)

**பேராசிரியம்:**

இது மேற்கூறிய (476) நிறுத்த ஆறற்கும் பெயரும் முறையு முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவைதாமென்பது, அடிவரையில்லன ஆறெனப்பட்டவைதாம் [1]நூலின் கண்ணவும் [2]உரையின் கண்ணவும் [3]நொடிதன் மாத்திரையாகிய பிசியின்கண்ணவும் [4]ஒருமொழிக் கேதுவாகி வரும் முதுமொழிக்கண்ணவும் [5]மறைத்துச்சொல்லுஞ் சொல்லாற் கிளந்த மந்திரத்தின் கண்ணவுஞ் [6]சொல்லுகின்ற பொருளை இடைகரந்து சொல்லுங் குறிப்பின்கண்ணவு மென அறுவகைப்படும் (எ-று)

அவற்றுக்கிலக்கணம் போக்கிச் சொல்லுதும்.[2] நூலின் கண்ணவுமென்றது சூத்திரச்செய்யுளை நோக்கிக் கூறியவாறு. அதனுள்ளும் அடிவரையுடைய ஆசிரியம்போல் அளவைபெற்று மேலே அடங்குமென்பது.[3] இனி அச்சூத்திரப் பொருளும் உரையின் கண்ணதாகி வருவதூஉம் ஒரு செய்யுளாம். அதனது விகற்பம் முன்னர்க் கூறுதும்.

[1]நொடியொடு புணர்ந்த பிசியும், [2]ஏது நுதலிய முதுமொழியும், [3]மறைமொழிகிளந்த மந்திரமுங், [4]கூற்றிடை வைத்த குறிப்புமென நான்கும் வழக்குமொழியாகியுஞ் செய்யுளாகியும் வருதலின் அவற்றுட் செய்யுளையே கோடற்கு அவற்றுக்கு 'அளவில' வென்றானென்பது.[4] இவை இத்துணையெனவே

1. அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைத் தருதற்குரிய ஆற்றல் மந்திரத்திற் குண்மையின் அத்தகைய ஆற்றல் வாய்க்கப் பெற்ற மொழி வாய்மொழியெனப் பெற்றது.

2. போக்கிச் சொல்லுதும்-பின்னர்க் கூறுவோம்.

3. நூலினுள்ளும் அடிவரையறையுடையன ஆசிரியப்பாப் போன்று அளவை-பெற்று மேற்குறித்த இலக்கணத்துள் அடங்கும்.

4. பிசி, முதுமொழி, மந்திரம், கூற்றிடைவைத்த குறிப்பு என்பன நான்கும் உலகவழக்கிலும் செய்யுள் வழக்கிலும் ஒப்ப வழங்குவனவாதலின், அவற்றுள் இங்குச் செய்யுள் வழக்கையே கொள்வதற்கு 'அவற்றுக்கு அளவில' என்றார் ஆசிரியர்.

மேலைச்சூத்திரமும் அளவியலே கூறியவாறாயிற்று.[1] இனி அவைபடும் பகுதி யாவையுங் கூறுகின்றான், 'நொடியொடு புணர்ந்த' வென்ற மிகையான் இதுவன்றி இதுபோல்வது பண்ணத்தி யென்பதும் ஒன்று உண்டென்பது கொள்க.[2] அது முன்னர்ச் (492) சொல்லுதும். (ருசுக)

**நச்சினார்க்கினியம் :**

இது முற்கூறிய ஆறற்கும் பெயரும் முறையும் உணர்த்திற்று.

(இ-ள்). முற்கூறிய அடிவரை யில்லாதனதாம் நூலின்கண் ணாவனவும், உரையின்கண் ணாவனவும், நொடியின்மாத்திரையவாகிய பிசியின்கண் ணாவனவும், ஒருமொழிக் கேதுவாகி வரும் முதுமொழிக்கண் ணாவனவும், மறைத்துக்கூறுஞ் சொல்லாற் கூறிய மந்திரத்தின்க ணாவனவும், கூறுகின்ற பொருளை யிடைக் கரந்து கூறுங் குறிப்பின்கண் ணாவனவுமென ஆறுவகைப்படும். எ-று.

'நூலினான' எ-து சூத்திரச் செய்யுட்களுள் ஆசிரியமாய் வந்து அளவை பெறாதனவற்றை நோக்கிற்று.[3] அச்சூத்திரத்தை நோக்கி வருமுரையும் ஒரு செய்யுளாம். ஒழிந்தன வழக்கின் கண்ணுஞ் செய்யுட்கண்ணும் வரினும் ஈண்டுச் செய்யுளை நோக்குதற்கு அவற்றுக்கண்ண வென்றார். இவையும் அளவிகந்து வருவனவே. அளவு முற் கூறிற்றாம்.

**ஆய்வுரை :**

இஃது அடிவரையில்லனவாக மேற்குறித்த அறுவகையினையும் விரித்துரைக்கின்றது.

---

1. அடிவரையில்லாத இவை ஆறு எனவே மேலைச் சூத்திரமும் அளவியலே கூறியதாயிற்று.

2. பிசி, என வாளா கூறாது 'நொடியொடு புணர்ந்த பிசி' என அடைமொழி புணர்த்துக்கூறிய மிகையால் இங்ஙனம் நொடித்தலொடு வரும் பிசியன்று, இதுபோல்வது பண்ணத்தி யென்னும் செய்யுளும் ஒன்றுண்டென்பது கொள்ளப்படும்.

3. 'நூலினான' என்றது, சூத்திரமாய்வரும் செய்யுட்களுள் ஆசிரியமாய் வந்து அடிவரை பெறாதவற்றை நோக்கிற்று. இத்தகைய சூத்திரங்களை நூற்பா என வழங்குதல் மரபு. பிற்கால நூலாசிரியர்கள் நூற்பா நடையிலன்றி வெண்பா கட்டளைக் கலித்துறை முதலான பாக்களால் இலக்கணநூல் இயற்றியுள்ளாராதலின் அடிவரையுடைய செய்யுள் வகையில் இயற்றப்பட்ட அவை அடிவரையில்லனவெனப்படா; ஆசிரியமாய் வந்து அடிவரை பெறாதனவே ஈண்டு 'நூலினாக' எனவரும் நூற்பா என்பது நச்சினார்க்கினியர் தரும் விளக்கமாகும்.

(இ-ள்) அவையாவன நூல், உரை, நொடியொடு புணர்ந்த பிசி, ஏது நுதலிய முதுமொழி, மறைமொழி கிளந்த மந்திரம், கூற்றிடைவைத்த குறிப்பு என்னும் அறுவகையுமாம் எ-று.

'நொடியொடு புணர்ந்த பிசி' என்பதற்கு 'நொடிதல் மாத்-திரையாகிய பிசி, எனப் பொருள் கொள்வர் பேராசிரியர். நொடியாவது, புனைந்துரை வகையாற் படைத்துக் கூறப்படும். நொடியொடு புணர்ந்த பிசி' எனவே பிசிக்கு நிலைக்களம், நொடியென்பது பெறப்படும்.

பிசியும் முதுமொழியும் மந்திரமும் குறிப்பும் ஆகிய நான்கும் வழக்கு மொழியாகியும் செய்யுள் மொழியாகியும் பயின்று வரு-தலால் அவற்றுட் செய்யுளையே கொள்ளுதற்கு அடிவரை-யில்லனவாகிய செய்யுட்களுள் சேர்த்து எண்ணினார்.

**௪௬ரு. அவற்றுள்,**

**நூலெனப் படுவது நுவலுங் காலை**
**முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்**
**தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி**
**உண்ணின் றகன்ற உரையொடு புணர்ந்து***
**நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே.**[1]

## இளம்பூரணம் :

என்—எனின். நூலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நூலென்று சொல்லப்பட்டது எடுத்துக்கொண்ட பொருளொடு முடிக்கும் பொருண்மை மாறுபடாமற் கருதிய பொருளைத் தொகையானும் வகையானுங் காட்டி யதனகத்து நின்றும் விரிந்த வுரையோடு பொருத்த முடைத்தாகி நுண்ணிய தாகி விளக்குவது நூற்கியல்பு என்றவாறு.

அகன்றவுரையோடு பொருந்துத லாவது சொல்லாத பொருண்மை யெல்லாம் விரிக்கவேண்டியவழி அதற்கெல்லாம் இடனுண்டாதல். (கருசா)

---

*'பொருத்தி' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

1. இந்நூற்பா முதற்கண் உள்ள 'அவற்றுள்' என்னுஞ்சொற்சீரடியின்றி ,நுதலிய பொருளை முதலிற்கூறி' என்பதனை இரண்டாமடியாகப் பெற்று இறையனார் கள்விலுரையில் மேற்கோளாகக்க ாட்டப்பெற்றுளது.

**பேராசிரியம் :**

இது, நூலினது பொதுவிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நூலென்று சொல்லப்படுவது முன்னும் பின்னும் மாறுபடாது தொகுத்தும் வகுத்தும் பொருள்காட்டி அடங்கி-நின்ற பொருள் விரித்துச் சொல்லப்பட்டுப் பருப் பொருட்டா-காது நுண்பொருட்டாகப் பொருள்விளக்கல். அதற்கிலக்கணம் அது (எ - று).

இதன் அகலம் உரையிற் கொள்க.[1] (௬௬௬)

**நச்சினார்க்கினியம்**

இஃது அந்நூல்கள திலக்கணங் கூறுகின்றது [2]

(இ-ள்.) நூ.. கு எ-து நூலென்று சிறப்பித்துச் சொல்லப்-படுவது. முத.. ன்றி எ-று முன்னும் பின்னுமாறுபடாது. தொகை-.. காட்டி எ-து தொகுத்தும் வகுத்தும் பொருள்காட்டி.உண் ... ந்தி எ-து தன்னுள்ளேயடங்கிநின்று விரிந்த வுரையோடு பொருந்தப்-பட்டு. நுண் பு எ-து பருப்பொருட்டாகாது நுண்பொருட்டாகப் பொருள் விளக்கலாகிய அவ்விலக்கணம் அதனிலக்கணம். எ-று.

அது எழுத்து முப்பத்து மூன்றெனத் தொகுத்ததனைப் பின்னர்க்குறிலும் நெடிலும் மூவினமுஞ் சார்பிற்றோற்றமுமென வகுத்தாற்போல்வனவும் பிறவுமென்றுணர்க. சாதிபற்றிப் படுதவனெ ஒருமையாற் கூறினார்.

---

1. உரையிற்கோடல் என்னும் உத்தியால் இதன் விரிந்த பொருளை உய்த்துணர்ந்துகொள்க என்பதாம்.

2. ''நூலெனப்படுவது நுவலுங்காலை'' என்பது இளம்பூரனர் கொண்ட-பாடம்.

3. தொகுதிபற்றி 'நூல்' என ஒருமையிற் கூறினாராயினும் எல்லா நூல்-களுக்கும் இதுவே இலக்கணம் என்பார் 'இஃது நூல்களது இலக்கணம் கூறுகின்றது' எனக் கருத்துரை வரைந்தார்.

''நூல்'' என்றது, நூல் போறலின் ஒப்பினாயதோர் ஆகுபெயராம். அவ்-வொப்பாயவாறு என்னையெனின், குற்றங் களைந்து எஃகிய பன்னுனைப் பஞ்சிகளையெல்லாம் கைவன்மகடூஉத் தூய்மையும் நுண்மையும் உடையவாக ஒரிழைப்படுத்தினாற்போல 'வினையினீங்கி விளங்கிய' அறிவனாலே வழுக்-களைந்து எஃகிய இலக்கணங்களையெல்லாம் முதலும் முடிவும் மாறுகோளின்றாகவும், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டியும், உரையுங் காண்டிகையும் உள்நின்று அகலவும், ஈரைங்குற்றமுமின்றி, ஈரைந் தழகுபெற, முப்பதிரண்டு தந்திரவுத்தியொடு புணரவும்'

**ஆய்வுரை :**

இது, நூலின் இயல்புணர்த்துகின்றது.

(இ-ள்) அவற்றுள், நூல் என்பது, சொல்ல எடுத்துக்கொண்ட பொருள் தொடக்கம் முதல் முடிவுவரை மாறுபாடின்றி யமையக் கருதிய பொருளைத் தொகுத்தும் வகுத்துங் காட்டித் தன்கண் அடங்கிய பொருள்களை விரித்துரைத்தற்கு ஏற்ற சொல்லமைப் போடு பொருந்தி நுண்ணுணர்வு பொருந்த விளக்குதலாகிய அது அதற்குரிய இலக்கணமாகும் எ-று.

அதன் பண்பு நுண்ணிதின் விளக்கல் அது என இயையும். இச்சூத்திரம் முதற்கணுள்ள 'அவற்றுள்' என்னும் 'சொற்சீரடி-யின்றி, நுதலிய பொருளை முதலிற்கூறி' என்பதனை இரண்டா மடியாகப் பெற்று இறையனார் களவியலுரையில் மேற்கோளாக எடுத்தாளப்பெற்றுள்ளது.

**௪கூ௰**    அதுவே தானும் ஒருநால் வகைத்தே.[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். நூல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட நூல் நான்கு வகையை யுடைத்து என்றவாறு.

அவையாமாறு முன்னர்க் கூறப்படும்.    (கூ௦)

**பேராசிரியம் :**

அதன் வகை உணர்த்துகின்றது.

(இ-ள்) அந்நூற் பகுதி நான்குவகையாம் (எ-று).

---

முன் பக்கத் தொடர்ச்சி

''ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும்''

ஒருநெறிப்படப் புணர்க்கப்படுந் தன்மையுடையான் என்க, எனத் தொல்காப்பியம் எழுத்ததிகார முதற்சூத்திர வுரையில் நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

1. 'அதுவே தானும் ஈரிரு வகைத்தே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்-கினியரும் கொண்ட பாடம்.

'அது' என்பது மேற்குறித்த நூலைச் சுட்டிநின்றது. நால்வகையாவன சூத்திரம், ஒத்து, படலம், பிண்டம் என்பன.

அவை முன்னர்ச் சொல்லுதும்.[1] இதனது பயம்: மேல் 'தொகையினும் வகையினும்' (478) என்றதனானே தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு (452) என்னும் நால் வகை யாப்பிற்குந், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டுதல் ஒக்குமென அவையிரண்டும் நான்காதலுமுடைய வென்பது.[2] அவை எழுத்து முப்பத்துமூன்றெனத் தொகுத்த வழிக் குறிலும் நெடிலும் மெய்ம் மூவினமுஞ் சார்ந்துவரும் மூன்று மென வகுத்தலும்,

"இரண்டு தலையிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீறு" (தொல்-எழுத்-புணர்:1)

என வகுத்தலுமென்றாற்போல்வன. உயர்திணை அஃறிணை யெனத் தொகுத்து ஐம்பாலென வகுத்தலும் அது. ஒழிந்த மூவகை நூலிற்கும் இவ்வாறே ஒருவழித் தொகுத்தலும் வகுத் தலுங் கொள்க. (௧௬௭)

**நச்சினார்க்கினியம் :**

இஃது அந்நூற்பகுதி நான்காமென்கின்றது.

(இ-ள்). அந்நூற்பகுதி நான்காம்[3] எ-று.

**ஆய்வுரை :**

இது நூலின் பாகுபாடு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்குறித்த நூல்தான் நால்வகைப்படும் எ-று.

௪௬௧ ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும் என்று
ஆங்கனை மரபின் இயலும் என்ப.

**இளம்பூரணம்:**

என்—எனின். மேல் தொகை கொடுக்கப்பட்ட நான்குமா மாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. அவை நான்கினையும் அடுத்த சூத்திரத்துட் கூறுவோம்.

2. மேலே குறிக்கப்பட்ட தொகைவகையிரண்டினும் பொருண்மை காட்டுதல் தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்ப்பு என்னும் நால்வகை-யாப்புக்கும் ஒக்கும் என்பது இதனாற்போந்த பயனாகும்.

3. நான்கும் பின்வரும் நூற்பாவில் விரித்துரைக்கப்படும்.

(இ-ள்.) **ஒருபொருள் நுதலிய சூத்திரத்தானும்** என்பது— ஆசிரியன் யாதானு மொருபொருளைக் குறித்துக் கூறுஞ் சூத்திரத்தானும் என்றவாறு.

**இனமொழி கிளந்த ஓத்தினானும்** என்பது—இனமாகிய பொருள்கள் சொல்லப்படும் ஓத்தினானும் என்றவாறு.

**பொதுமொழி கிளந்த படலத்தானும்** - என்பது — மேற் சொல்லப் பட்ட இனங்கள் பலவற்றையுங் கூறப்படும் படலத்தானும் என்றவாறு.

**மூன்றுறுப் படக்கிய பிண்டத்தானும்** என்பது – இம்மூன்ற னையும் உறுப்பாக அடக்கிய பிண்டத்தானும் என்றவாறு.

**ஆங்கனை மரபின் இயலு மென்ப** என்பது – அம்மரபினான் இயலும் நூலென்ப என்றவாறு.[1]

அவற்றிற்கு இலக்கண முன்னர்க் கூறப்படும். (கசாக)

**பேராசிரியம் :**

இஃது, அந்நான்கினுக்கும் பெயரும் முறையு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) நூலுள் ஒருபொருளையே நுதலிவருவது சூத்திரமெனவும், இனமாகிய பொருளினையே தொகுப்பது ஓத்தெனவும், பலபொருட்கும் பொதுவாகிய இலக்கணங் கூறுவது படலமெனவும், மூன்றுறுப்பினையுமுடையது பிண்டமெனவுங் கூறிய மரபினான் இயலும் நூல் (எ-று.)[2] (கசாஅ)

**நச்சினார்க்கினியம் :**

இது அந்நான்கற்கும் பெயரும் முறையு முணர்த்திற்று.

---

1. சூத்திரம் என்பது ஒருபொருள் நுதலியது.

ஒத்து என்பது, இனமாகிய பலபொருள்கள் சொல்லப்படுதற்கு இடனாய் அமைந்தது.

படலம் என்பது மேற்சொல்லப்பட்ட இனமாகிய பலபொருள்களையும் விளக்கும் இயல்களுக்கு இடனாயமைந்தது.

பிண்டம் என்பது, சூத்திரம், ஒத்து, படலம் என்னும் மூன்றுறுப்புக்களையும் ஒருங்கேயடக்கியது.

அனை மரபின்-அம்மரபினால்,

2. ஒருபொருளையே நுதலிவருவது சூத்திரம். ஓரினப் பொருளையே தொகுத்துரைப்பது ஒத்து. பலபொருட்கும் பொதுவாகிய இலக்கணங்கூறுவது படலம். இம்மூன்றுறுப்பினையும் ஒருங்கேயுடையது பிண்டம்.

(இ-ள்). ஒரு — ...னும் எ-து அந்நூல் ஒருபொருளேகருதிவருஞ் சூத்திரத்தானும், இன — னும் எ-து இனமாய பொருளைக்கூறிய வோத்தினானும், பொது ... ... தானும் எ-து பல பொருட்குப் பொதுவாகிய இலக்கணங்களைக் கூறிய படலத்தானும். மூன்று ... ... னும் எ-து மூன்றுறுப்பை யடக்கிவரும் பிண்டத்தானும். என் ... ... ப எ-து என்று கூறிய அத்தன்மைத் தாகிய மரபினான் நடக்குமென்று கூறுவர் புலவர். எ-று.

ஆங்கென்ற மிகையாற் பிண்டமேயன்றிப் பிண்டியென்பதும் ஒன்றுளதென்று கொள்க.[1]

**ஆய்வுரை :**

இது மேற்குறித்த நால்வகையாமாறு இவையென உணர்த்துகின்றது.

(இ-ள்) ஒரு பொருளையே நுதலிவரும் சூத்திரமும், ஓரினப் பொருள்களையே தொகுத்துரைப்பதாகிய ஓத்தும், பல பொருட்கும் பொதுவாகிய இலக்கணம் கூறும் படலமும், இங்கு எண்ணப்பட்ட இம்மூன்றுறுப்புக்களையும் தன்னகத்தே கொண்ட பிண்டமும் என இந்நான்கு வகையால் நடக்கும் என்பர் ஆசிரியர் எ-று.

சூத்திரம் என்னும் ஒருறுப்பால் இயன்றது இறையனார் களவியல். சூத்திரம், ஓத்து என்னும் இரண்டுறுப்புக்களையுடைய தாய் இயன்றது பன்னிருபடலம். சூத்திரம், ஓத்து, படலம் என்னும் மூன்றுறுப்புக்களையடக்கிய பிண்டமாக அமைந்தது இயற்றமிழ் நூலாகிய தொல்காப்பியம். இவை முறையே சிறுநூல், இடைநூல், பெருநூல் என எண்ணப்படும். இனி, அகத்தியம் என்பது, இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் மூன்றிற்கும் முறையே இலக்கணங்கூறும். மூன்று பகுதி

---

1. பிண்டத்தையடக்கி நிற்பது பிண்டி எனப்படும். இயற்றமிழிலக்கணமாகிய தொல்காப்பியம் சூத்திரம், ஒத்து, படலம் என்னும் மூன்றுறுப்பினையும் அடக்கி நின்றமையின் மூன்றுறுப்படக்கிய பிண்டம் எனப்பட்டது. இங்ஙனம் அமைந்த இயல், இசை, நாடகம் என்னும் மூன்று பிண்டங்களையும் தன்னகத்தே அடக்கி நிற்பது அகத்தியம் என்னும் முத்தமிழிலக்கணம் என்பவாதலின் அந்நூல் பிண்டத்தினை யடக்கிய பிண்டி யெனப்படும். இவ்வியல் ௪௭௨-ஆம் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை இங்கு ஒப்புநோக்கத்தகுவதாகும்.

களையும் உள்ளடக்கிய மிகப்பெரிய நூலாதலின் 'அது பிண்டத் தினை யடக்கிய வேறோர் பிண்டம்' என்பர் நச்சினார்க்கினியர்.

ளசூஉ அவற்றுள்,
சூத்திரம் தானே
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனிவிளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே.

**இளம்பூரணம் :**

என் - எனின். சூத்திரத்திற்கு இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சூத்திரமாவது கண்ணாடியி னிழற்போல விளங்கத் தோன்றி ஆராயாமற் பொருள் நனிவிளங்குமாறு யாப்பின் கண்ணே தோன்ற யாப்ப தென்றவாறு.

ஆடிநிழலி னறியத் தோன்றுவதாவது—சூத்திரம் படித்த வளவிலே அதனாற் சொல்லப்படுகின்ற பொருள் ஒருங்கு தோற்றல்.

நாடுதலின்றிப் பொருணனி விளங்க யாத்தலாவது—அதன் கண்யாக்கப்பட்ட சொற்குப் பொருள் ஆராயாமற் புலப்படத் தோன்றுமாறு யாத்தல்.[1]

உதாரணம்

"வேற்றுமை தாமே ஏழென மொழிப
விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே"
(தொல். வேற்றுமையியல் க)

என்றவழி யாப்பின்கண்ணே பொருடோன்ற யாத்தவாறுங் கண்ணாடி நிழற்போலக் கருதிய பொருளுந் தோற்றியவாறுங் கண்டுகொள்க. (கசூஉ)

**பேராசிரியம் :**

இது, முறையானே சூத்திர இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் ஓதியவற்றுள் ஒருபொருணுதலிய எனப் பட்ட சூத்திரம் பொருள் நுதலுங்கால் ஆடி சிறிதாயினும் அது

1. ஆடி-கண்ணாடி. அறியத்தோன்றுதல்-எல்லோர்க்கும் புலனாக விளங்கத் தோன்றுதல். நாடுதல்-ஆராய்தல்,

அகன்றுபட்ட பொருளையும் அறிவித்தல்போலத் தேர்தல்வேண்டாமை[1] அகன்றபொருள் அடங்குமாற்றான் அச்செய்யுளுள் தோன்றச்செய்து முடிக்கப்படுவது (எ - று). (கூகூகூ)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையே சூத்திரவிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) அவற் ...... ன்றி எ-து அந்நான்கனுள் ஒருபொருணுதலுஞ் சூத்திரமாவது. ஒருபொருணுதலுங்காற் கண்ணாடி சிறிதாயினும் அகன்றுபட்ட பொருளை யறிவித்தாங்கு அறியத் தோன்றி நாடு ...... ங்க எ-து தெரிதல் வேண்டாதபடி[2] அவ்வகன்ற பொருளை மிகவும் விளங்குமாற்றால். யாப் ...... பதுவே எ-து செய்யுளுட் டோன்றச்செய்து முடிக்கப்படுவது. எ-று.

**ஆய்வுரை :**

இது, சூத்திரத்தின் இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ-ள்) மேற்கூறப்பட்ட நூல்வகை நான்கனுட் சூத்திரம் என்பது, கண்ணாடியானது தன்னெதிர்ப்பட்ட பொருள் மலை போன்று பெரிதாயினும் தன்கண் நுண்ணிதாய் அடங்கி வெளிப்பட்டுத் தோன்றப் புலப்படக் காட்டுதல் போன்று ஆசிரியன் சொல்லக் கருதிய பொருள் கற்போர் யாவர்க்கும் தெளிவாகப் புலப்படுத்திக் காட்டும்வண்ணம் குறித்த யாப்பில் அப்பொருள் இனிது விளங்கித் தோன்றுமாறு சொற்சுருக்கமும் பொருள் தெளிவும் உடையதாய் இயற்றப்பெறுவதாகும். எ-று.

ஆடி என்றது, முகம் பார்க்கும் கண்ணாடியினை. ஆடி நிழலின் அறியத் தோன்றுதலாவது, கண்ணாடியில் எதிர்ப்பட்ட பொருளின் நிழலுருவம் தெளிவாகப் புலப்பட்டுத் தோன்றுமாறு போன்று ஆசிரியன் அச்சூத்திரத்தாற் சொல்லக் கருதிய பொருள் முழுவதும் கற்பார்க்கு விளங்கித் தோன்றுதல். நாடுதல்—ஆராய்தல். ஆராய்தல் இன்றிப் பொருள் இனிது விளங்க யாத்தலாவது, சூத்திரத்திலுள்ள இச்சொல்லுக்குப் பொருள் யாதோ எனக் கற்போர் ஆராய வேண்டாது உலக வழக்கில் எளிதிற் பொருளுணர்த்தும் இயற்சொற்களால்

1. தேர்தல் வேண்டாது - இதனுட்குறித்த பொருள் யாது? எனத் தேர்ந்து ஆராய வேண்டாது;

2. நுணுகி ஆராய்தல் வேண்டாது.

இயற்றப்பெறுதல். சூத்திரத்தின் இலக்கணம் உணர்த்தும் இச்சூத்திரமே அதற்குச் சிறந்த இலக்கியமாகவும் அமைந்துள்ளமை உணர்ந்து மகிழத்தகுவதாகும்.

எசுரு நேரின மணியைநிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்தென மொழிப உயர்மொழிப் புலவர்.

**இளம்பூரணம் :**

என்-எனின். ஒத்திற்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஒத்தவினத்ததாகிய மணியை ஒருங்கே கோவைப் பட வைத்தாற்போல ஓரோரினமாக வரும்பொருளை ஓரிடத்தே சேரவைத்தல் ஒத்தென்று பெயராம் என்றவாறு.[1]

எனவே, அவ்வினமாகிச் சேர்ந்தநிலைக்கு ஒத்தென்று பெயராயிற்று. அது, வேற்றுமையோத்து' என்பதனானறிக (கசுரு)

**பேராசிரியம் :**

இஃது ஒத்திலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல், 'இனமொழி கிளந்த ஒத்து' என்றான், அங்ஙனம் இனமொழி கிளக்குங்காற் சிதர்ந்துகிடப்பப் பல ஒத்தாகச் செய்யாது நேரினமணியை நிரலே வைத்தாற்போல ஓரினப்பொருளையெல்லாம் ஒருவழியே தொகுப்பது ஒத்தாவது (எ - று).

'நேரினமணியெனவே, ஒருசாதியாயினுந் தம்மின் ஒத்தனவே கூறல்வேண்டு மென்பதாம். **வேற்றுமையோத்தும் வேற்றுமை மயங்கிலும் விளிமரபும்** என மூன்றன் பொருளும் வேற்றுமையென ஓரினமென்று ஓரோத்தாக வையாது வேறு வேறு வைக்கப்படு மென்பது.[2] உயர்மொழிப் புலவரென்பது, அங்ஙனம் நூல்செய்தல் உயர்ந்தோர் கடனென்றவாறு. (கஎ0)

---

1. நேர் இனமணி-ஒத்த இனத்ததாகிய மணி; ஒத்து-இயல்.

2. நேர் இனமணி என்றது, ஒன்பான்வகை மணிகளுள் ஓரினத்தவாய் நிறத்தால் ஒத்துள்ள மணிகளை. எனவே ஒருசாதிப்பொருளாயினும் தம்மின் ஒத்தனவற்றுக்குரிய இலக்கணங்கூறும் பகுதியே ஒத்து என்னும் உறுப்பாகும் என்பதாம்.

சொல்லதிகாரத்துள் வேற்றுமையிலக்கணம் உணர்த்தப்போந்த தொல்காப்பியனார் அதனை ஓரியலாகக்கூறாது வேற்றுமையியல், வேற்றுமைமயங்கியல்,

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஒத்திலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்.) இனமொழி கிளக்குங்காற் சிதர்ந்துகிடப்பப் பல வோத்தாகச் செய்யாது, மணியை நிரல்படவைத்தாற்போல ஓரினப்பொருளையெல்லாம் ஒருவழியே தொகுப்பது ஓத்தென்று கூறுவர் சிறந்த சொற்புலவர். எ-று.

நேரினமணியெனவே யொருசாதியினுந் தம்மி னொத்தனவே கூறல்வேண்டும் எ-று. 'வேற்றுமையோத்தும்' 'வேற்றுமைமயங் கியலும்' 'விளிமரபும்' என மூன்றன்பொருளையும் ஒன்றாக வேற்றுமையோத்தென்னாது வேறுவேறு வைத்தவாறு காண்க.[1]

**ஆய்வுரை :**

இஃது ஓத்தின் இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ - ள்.) ஒத்த இனத்தவாகிய மணிகளை ஒருவரிசைப்பட வைத்தாற் போன்று ஓரினத்தவாகிய பொருள்களை ஓரிடத்தே சேரத் தொகுத்து உணர்த்துவதனை ஓத்து என்ற பெயராற் கூறுவர் மொழித்திறத்தால் உயர்ந்த ஆசிரியர் எ - று.

நேர்தல் - ஒத்தல். ஓத்து - இயல். நிரல்பட வைத்தல்- வரிசைப்பட அமைத்தல்.

**௪௬௯ ஒருநெறி இன்றி விரவிய பொருளால்**
**பொதுமொழி தொடரின் அதுபடலம் ஆகும்.**

**இளம்பூரணம் :**

என்—எனின். படலத்திற்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஓரினமாகிய நெறியின்றிப் பல நெறியான் வருவன பொருளானே பொதுமொழியாற்[2] றொடர்வுபடின் அது படல மெனப் பெயராம் என்றவாறு.

---

முன் பக்கத் தொடர்ச்சி

விளிமரபு என மூன்றியல்களாக வைத்தது, 'ஓரினப்பொருளை ஒருவழிவைத்தல், என்னும் ஓத்திலக்கணம் பற்றியேயெனப் பேராசிரியர் தரும் விளக்கம் பெரிதும் பொருத்தமுடையதாகும்.

1. பேராசிரியர் உரை நோக்குக.

2. பொதுமொழி என்றது, பல்வேறு நெறிகளாற் கூறப்படும் இலக்கணங்கள் எல்லாவற்றுக்கும் உரிய பொருளைக் குறித்த எழுத்து, சொல் என்றாற் போலும் பொதுச்சொல். படலம்-அதிகாரம்.

அது கிளவியாக்க முதலாக எச்சவியல் ஈறாகக் கிடந்த ஒன்பதோத்தினும் வேறுபாடுடையவாயினும், சொல்லிலக்கணம் உணர்த்தினமையாற் சொல்லதிகாரம் எனப் பெயர் பெறுதல்.

அதிகாரம் எனினும் படலமெனினும் ஒக்கும். (௧௬௬)

**பேராசிரியம் :**

இது, மேல் (௭௯௧) 'பொதுமொழி கிளந்த படல' மெனப் பட்டதற்கு இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஒருநெறியவன்றிப் பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாவற்றிற்கும் வேறு வேறு இலக்கணங்கூற நுதலின் அவற்றுக்குப் பொதுவாகி வருவது படலம் (எ-று)

'பொதுமொழி கிளந்த படலம்' என்றவழி ஒரு நெறிப் பொருட்குப் பொதுவாகப்பட்டதனை விலக்கி ஈண்டு விரவிய பொருட்குப் பொதுவாக மொழிவதே படலமென்றா னென்பது.[1] அவை அதிகாரங்களாமெனக் கொள்க. (௧௭௧)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையே படலங் கூறுகின்றது

(இ-ள்). ஒருபொருள்நெறியன்றிப் பலவேறுவகைப்பட்ட பொருளெல்லாவற்றிற்கும் வேறுவேறிலக்கணங் கூறக்கருதி யவற்றுக்குப் பொதுமொழியாகத் தொடர்ந்துவரின் அது படலமாம். எ-று.

'பொதுமொழி கிளந்த படலம்' எனவே யொருநெறிப்பட்ட பொருட்குப் பொதுவாய் வருதலையும் விலக்கி விரவிய பொருட்குப் பொதுவாக மொழிவது படலமாயிற்று.[2] படலமாவது அதிகாரமாம்.

**ஆய்வுரை :**

இது, பொதுமொழி கிளந்த படலம் என்பதன் இலக்கணம் உணர்த்துகின்றது.

---

1. பொதுமொழிகிளந்தபடலம் என்றவழி ஒரு நெறிப்பட்ட பொருளுக்குப் பொதுவாய் வரும் இலக்கணத்தினை விலக்கிப் பலவாய் விரவிய பொருட்கட்குப் பொதுவாகிய இலக்கணங்களைக் கூறுவதே படலம் என்னும் அதிகாரமாம் எனக்கொள்க.

2. ஒருநெறிப்பட்ட இனப்பொருட்குப் பொதுவாய் அமைவது ஒத்து என மேற்சூத்திரத்திற் கூறிய ஆசிரியர் அங்ஙனம் பலவாகவிரவிய பொருட்குப் பொதுவாக மொழிவதே படலம் என்றார் என்பதாம்.

(இ - ள்.) ஒருநெறிப்பட்ட பொருளையன்றிப் பலவேறு வகைப்பட்ட பொருளெல்லாவற்றுக்கும் வேறுவேறு இலக்கணங் கூற வெண்ணி அவற்றுக்குப் பொதுவாக அமைந்த பொது மொழியாகத் தொடர்ந்து அமைக்கப்பெறின் அது படலம் எனப்படும் எ-று.

பொது மொழியாவது, ஒருநெறிப்பட்ட ஒருவகைப் பொருளை மட்டும் உணர்த்துவதன்றிப் பலவேறுவகைப்பட விரவிய எல்லாப் பொருட்கும் பொதுவாக அமைந்த பொருளைக் குறித்து வழங்கு வதாகிய பொதுச் சொல்லாகும். அவையாவன : எழுத்து, சொல், பொருள் என்றாற் போன்று பலவேறுவகைப்பொருள் களையும் உள்ளடக்கி நிற்கும் பொதுச் சொற்களாகும். படலம் - அதிகாரம்.

௱௬௫ மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவர் அது பிண்டம் என்ப

**இளம்பூரணம் :**

என் — எனின். பிண்டமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). மூன்றுறுப்பினையும்[1] அடக்கின தன்மைத்தாயின் அதனைப் பிண்டமென்று சொல்லுவர் என்றவாறு.

மூன்றுறுப்படக்குதலாவது சூத்திரம் பலவுண்டாகி ஓத்தும் படலமுமின்றாகி வரினும் ஓத்துப் பலவுண்டாகி படலமின்றி வரினும், படலம் பலவாகி வரினும், அதற்குப் பிண்டமென்று பெயராம் என்றவாறு.

அவற்றுட் சூத்திரத்தாற் பிண்டமாயிற்று இறையனார் களவியல். ஓத்தினாற் பிண்டமாயிற்று பன்னிருபடலம். அதிகாரத்தாற் பிண்டமாயிற்று இந்நூலென்று கொள்க. இவற்றைச் சிறுநூல் இடைநூல் பெருநூல் எனப்படும்.(௧௬௫)

**பேராசிரியம் :**

இது பிண்டங் கூறுகின்றது. வாளாதே 'மூன்றுறுப்படக்கிய பிண்ட'மென்றான் மேல்; (தொல்·செய்·168.) ஈண்டுச் சூத்திர மும் ஓத்தும் படலமுங் கூறிய அதிகாரத்தானே அம்மூன்றனை யும் அடக்கிநிற்பது பிண்டமென்கின்றானென்பது.

---

1. மூன்றுறுப்பாவன; சூத்திரம், ஓத்து, படலம் என்பன. பிண்டம் என்பது தொகுதி.

(இ - ள்.) அம்மூன்று உறுப்பினையும் அடக்கி வருவது பிண்டம் (எ - று).

அம்மூன்றனையும் உறுப்பெனவே, பிண்டமென்பனதாம் உறுப்பினவென்பது பெற்றாம். தொல்காப்பியமென்பது, பிண்டம்; அதனுள், எழுத்ததிகாரஞ் சொல்லதிகாரம் பொருளதிகாரமென்பன படலம் எனப்படும்; அவற்றுள் ஒத்துஞ் சூத்திரமும் ஒழிந்த இருகூறுமெனப்படும்.

"தோன்றுமொழிப் புலவர் அது பிண்ட மென்ப"

என்றதனாற் பிண்டத்தினையும் அடக்கி நிற்பது வேறு பிண்டமுளதென்பது. அது முதனூலாகிய அகத்தியமேபோலும்; என்னை? அஃது இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னு மூன்று பிண்டத்தினையும் அடக்கி நிற்றலின்.[1] (கஎஉ)

**நச்சினார்க்கினியம் :**

இது பிண்டங் கூறுகின்றது.

(இ-ள்.) சூத்திரமும் ஒத்தும் படலமுமென்கின்ற மூன்றுறுப்பினையும் உள்ளடக்கிய தன்மைத்தாய்வரின் விளங்கிய மொழியையுடையபுலவ ரதனைப் பிண்டமென்று பெயர் கூறுவர். (எ-று)

அம்மூன்றனையும் உறுப்பெனவே பிண்டமென்பது உறுப்பியென்பதும் பெற்றாம் தொல்காப்பிய மென்பது பிண்ட. அதனுள் எழுத்துச் சொற்பொருளென்பது படலம். ஒத்துஞ் சூத்திரமுமொழிந்த விருகூறுமாம். தோன்றுமொழிப் புலவரென்றதனாற்[2] பிண்டத்தினையுமடக்கிநிற்பது வேறு பிண்டி யெனப்படும். அது

1. சூத்திரம், ஒத்து, படலம் என்னும் மூன்றினையும் உறுப்ப எனக் கூறவே அம்மூன்றினையும் உறுப்பாகக் கொண்டது, பிண்டம் என்னும் நூல் என்பது பெறப்படும். பிண்டமாக அமைந்தது தொல்காப்பியம். இதனுள் எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என்பன படலம் என்னும் உறுப்பாகும். நூன்மரபு முதலியன ஒத்து என்னும் உறுப்பாகும். 'எழுத்தெனப்படுவ அகரமுத னகரவிறுவாய்' என்றாற்போல்வன சூத்திரம் என்னும் உறுப்பாகும். பிண்டமாகிய தொல்காப்பியம் இயற்றமிழ் நூல். இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் என்னும் மூன்று பிண்டத்தினையும் அடக்கிநிற்பது முத்தமிழிலக்கணமாகிய அகத்தியமாதலின் அது பிண்டத்தினையடக்கிய பிண்டம் எனப்பட்டது.

2. தாம்கூறக்கருதிய பொருள் தானே வெளிப்படத் தோன்றும் மொழியினால் நூல் செய்யவல்ல புலவர் என்பார் 'தோன்று மொழிப்புலவர்' என்றார் ஆசிரியர்.

முதனூலாகிய அகத்தியம் என்னை? இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என மூன்று பிண்டத்தினையும் அடக்கி நிற்றலின்.

**ஆய்வுரை :**

இது, பிண்டம் ஆமாறு இதுவெனக் கூறுகின்றது.

(இ-ள்) மேற்குறித்த சூத்திரம், ஓத்து, படலம் என்னும் மூன்று உறுப்புக்களையும் தன்னகத்தே உள்ளடக்கியதாய் வருமாயின் அந்நூலினைப்பிண்டம் எனப் பெயரிட்டு வழங்குவர் புலவர் (எ-று.)

தாம் கூறக்கருதிய பொருள் கேட்பார்க்கு எளிதிற் புலனாகச் சொல்லுதல் வல்ல புலமையுடையார் என்பார் 'தோன்று மொழிப் புலவர்' என்றார். தொல்காப்பியம் என்னும் இயற்றமிழ்நூல் மூன்றுறுப்படக்கிய பிண்டம் எனப்படும். எழுத்து, சொல், பொருள் என்பன படலங்கள். நூல்மரபு முதல் மரபியல் ஈறாகவுள்ள இருபத்தேழும் ஓத்து என்னும் பெயருடைய இயல்களாகும். 'அவற்றுள், எழுத்தெனப்படுப' என்றாற் போல்வன சூத்திரங்களாகும்

௪௭௭ பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருள்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்[1]
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும் என்று
உரைவகை நடையே நான்கென மொழிப.

**இளம்பூரணம் :**

என்-எனின். உரை பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பாட்டிடை வைத்த குறிப்பாவது-பாட்டினிடை வைக்கப்பட்ட பொருட்குறிப்பினானும் உரையாம் என்றவாறு.

பலசொல் தொடர்ந்து பொருள்காட்டுவனவற்றுள் ஓசை-தழீஇயவற்றைப் பாட்டென்றார். ஓசையின்றிச் செய்யுட்டன்மைத்தாய் வருவது நூலெனப்பட்டது.[2]

1. 'பொருளொடு புணராப்பொய்ம்மொழியானும் என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

2. ஓசை தழீஇ வருவன பாட்டென்றும் ஓசையின்றிச் செய்யுளின் தன்மையாய் வருவது நூலென்றும், ஓசையும் செய்யுட்டன்மையுமின்றிவருவது உரை என்றும் இளம்பூரணர் தரும் இவ்விளக்கம் மிகவும் பொருத்தமுடையதாகும்.

அவ்வகையுமன்றிவரும் உரைத்திறன் ஈண்டு உரையெனப்பட்டது.

அவையாமாறு :

"ஊர்க்கால் நிவந்த பொதும்பருள்' என்னுங் குறிஞ்சிக்கலியுள்,
"இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்து"
(கலித். ருக)

என்றது உரைகுறிப்பு.

'ஒருஉ, கொடியியல் நல்லார்' என்னும் மருதக்கலியுள்,
"கடியர் தமக் கியார்சொலத் தக்கார் மற்று" (கலித்அஅ)

என்றதுமது.

சிலப்பதிகாரத்து ஆய்ச்சியர் குரவையுள்,

"கயலெழுதிய இமயநெற்றியின்,
அயலெழுதிய புலியும் வில்லும்
நாவலந்தண் பொழின்மன்னர்
ஏவல் கேட்பப் பார்அர சாண்ட
மாலை வெண்குடைப் பாண்டியன் கோயிலுட்
காலை முரசம் கனைகுரல் இயம்புமாதலின்
நெய்ம்முறை நமக்கின் றாகுமென
ஐயைதன் மகளைக்கூஉய்க்
கடைகயிறு மத்துங்கொண்
டிடைமுதுமகள் வந்துதோன்றுமன்" (சிலப். ஆய்ச்சியர் குரவை)

என்றதுமது.

**பாவின்றெழுந்த கிளவியானும்** என்பது — பாக்களை யொழியத் தோற்றிய சொல்வகையானும் உரையாம் என்றவாறு.

அஃதாவது, வழக்கின்கண் ஒருபொருளைக் குறித்து வினவுவாருஞ் செப்புவாருங் கூறுங் கூற்று.

அதுவும் இலக்கணம் பிழையாமற் கூறவேண்டுதலானும் ஒரு பொருளைக் குறித்துச் செய்யப் படுதலானுஞ் செய்யுளாம். இதனைக் குறித்தன்றே[1] 'செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்' (தொல். கிளவியாக்கம். கந) என்பது முதலாகக் கூறப்பட்ட இலக்கணமெல்லாம் என்று கொள்க.

1. 'இதனை' என்றது, பாவின்றெழுந்த கிளவியாகிய உரைநடையினை.

பொருள்மரபில்லாப் பொய்ம் மொழியானும் என்பது—பொருளியல் பில்லாப் பொய்மொழியானும் உரைவரும் என்றவாறு.

பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் என்பது—பொருளைப் பொருந்திய நகைவழிமொழியாய் வருகின்றது என்றவாறு

நகைமொழியாவது—மேற்சொல்லப்பட்ட உரை பொருந்தாதென இகழ்ந்து கூறுதல். அவ்விகழ்ச்சியின் பின்னர்ப் பொருளுணர்த்தும் உரை பிறக்குமாதலின் பொருளோடு புணர்ந்த நகைமொழியானும் உரை வருமென்றார்.[1]

என்று உரைவகைநடையே நான்கென மொழிப என்பது—இவ்வகையினானவுரை நான்கு வகைப்படும் என்றவாறு. (௧௲௲)

**பேராசிரியம் :**

இஃது, உரையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உரைப்பகுதிவழக்கு இந்நான்காகு மென்று சொல்லுவர் புலவர் (எ-று).

'பாட்டிடைவைத்த குறிப்பினானு' மென்பது, ஒரு பாட்டு இடையிடை கொண்டுநிற்குங் குறிப்பினான் வருவனவெனப் படும்; என்னை? பாட்டுவருவது சிறுபான்மையாகலின்.[2] அவை தகடூர் யாத்திரை போல்வன.

மற்றுப். பிறபாடைவிரவியும் வருவனவோவெனின், அவற்றுள்ளுந் தமிழுரையாயின எல்லாம் 'பாட்டிடைவைத்த குறிப்பு' என ஈண்டடங்கும், பிறபாடைக்காயின் ஈண்டு ஆராய்ச்சியின்றென்பது.

''பாவின் றெழுந்த கிளவி யானும்''

---

1. பொருத்தமில்லாத உரையினை நகைச்சுவைபடமறுத்து உண்மைப் பொருளுணர்த்தும் உரைநடை பொருளொடுபுணர்ந்த நகைமொழியாம் என்பது இளம்பூரணர் கருத்தெனத் தெரிகிறது.

2. பாட்டினை இடையிடையே கொண்டு நிற்கும் குறிப்பினால் வரும் உரை வகை 'பாட்டிடைவைத்தகுறிப்பு' என வழங்கப்படும். இதன்கண் உரைநடைப் பகுதிபெரும்பான்மையாகவும் பாட்டுக்கள் சிறுபான்மையாகவும் வருவன என்பது பேராசிரியர் கருத்தாகும். இவ்வாறன்றிப் பாட்டுக்கள் மிகுதியாகவும் உரைப் பகுதி சிறுபான்மையாகவும் வருவன 'உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுள்' எனப்படும். இவற்றிற்கு முறையே தகடூர் யாத்திரையையும் சிலப்பதிகாரத்தையும் உதாரணமாகக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

என்பது, பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுதுவன போல்வன. சூத்திரம் பாட்டெனப்படாவோவெனின், படா; பாட்டும் உரையும் நூலுமென (391) வேறோதினமையின்.[1] அல்லாத சூத்திரத்தாற் சொல்லாத பொருளினை உரையாற் சொல்லித் தொடர்பு படுப்பது பாட்டிடைவைத்த குறிப்பாவது.[2] இஃது அன்னதன்று, வேறொருவன் சூத்திரத்திற் கூறிய பொருளையே மற்றொருவன் கூறுகின்றானாதலானென்பது. ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே பொருளெழுதின் அஃதொக்கும். அவை பாரதம், பருப்பதம் முதலாயின.

"பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்"

என்பது,

ஒரு பொருளின்றிப் பொய்படத் தொடர்ந்து சொல்வன.[3] அவை ஓர் யானையுங் குரீஇயுந் தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக்கியையாப் பொருள்படத் தொடர்நிலையான் ஒருவனுழை ஒருவன் கற்று வரலாற்று முறையான் வருகின்றன.

பொருளொடு புணர்ந்த நகைமொழியானுமென்பது, பொய் யெனப்படாது மெய்யெனப்பட்டும் நகுதற்கேதுவாகுந் தொடர் நிலை.[4] அதுவும் உரையெனப்படும். அவையாவன. சிறுகுரீஇ யுரையும், தந்திரவாக்கியமும் போல்வனவெனக்கொள்க. இவற்றுட்

---

1. பாட்டின்றிச் சூத்திரத்திற்கு எழுதப்படும் உரைபோல்வன 'பாவின் றெழுந்த கிளவி' எனப்படும். பாட்டு, உரை, நூல் என்பன தம்முள் வேறென ஆசிரியர் பகுத்துரைத்தலின் சூத்திரம் பாட்டெனப்படா.

2. 'சூத்திரமல்லாத பாட்டினால் விளக்கப்படாதபொருளை அவ்வாசிரியனே உரையாற் சொல்லித்தொடர்புபடுப்பது பாட்டிடைவைத்த குறிப்பாகும். பாவின்றெழுந்த கிளவியாகிய இது, நூலாசிரியன் சூத்திரத்துட்கூறிய பொருளை உரையாசிரியன் விரித்துரைப்பதாகும். எனவே இவையிரண்டுந் தம்முள் வேறாகும்.

3. மெய்ம்மையான் நிகழாதனவற்றை நிகழ்ந்தனவாகப்பொய்யே புனைந் துரைக்கும் முறையில் அமைந்த உரைநடை 'பொருளொடு புணராப் பொய்ம் மொழி' எனப்படும்.

4. உலகியல் வாழ்வுக்கு ஒவ்வாத பொய்யென ஒதுக்கப்படுதலின்றி மெய் யெனக் கொள்ளப்படும் பொருண்மையினைத் தன்பா கொண்டு நகைச்சுவையினை விளைக்கும் நிலையில் அமைந்த உரைநடை 'பொருளொடுபுணர்ந்தநகைமொழி' எனப்படும். ஈண்டுப் பொருளொடு புணர்தல் என்றது, உலகியல் வாழ்வுக்கு ஒத்தவுண்மைகளோடு பொருந்தியமைதலை.

சொல்லப்படும் பொருள் பொய்யெனப்படாது. உலகியலாகிய நகை தோன்றுமென்பது. இவ்வகையான் உரை நான்கெனப்படு மென்றவாறு. 'உரைநடை' யென்னாது வகை யென்றதனான் இவ்வுரைப்பகுதி பிறிதும் ஒன்றுண்டு. அது மரபியலுட் பகுத்துச் சொல்லுதும்.[1] (௩௧௭)

**நச்சினார்க்கினியம் :**

இது "நூலினான வுரையினான" (செய் ளகூரு) என நிறுத்த முறையே நூலுணர்த்தி உரைகூறுகின்றது.

(இ-ள்.) பாட்டிடை வைத்த குறிப்பினானும் எ-து ஒரு பாட்டினை யிடையிடை கொண்டுநிற்குங் கருத்தினான் வருவனவும் எ-று. அவை தகடூர் யாத்திரையும், சிலப்பதிகாரமும் போல்வன. ஆண்டுப் பிறபாடை தழுவி வருவன தமிழுரை யாகாமையின் ஈண் டாராய்ச்சி யின்றாம். அதன்கட் டமிழுரை யுள்ளன ஈண் டடங்கும். பாவின் றெழுந்த கிளவி யானும் எ-து பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுதுவனபோல்வன. சூத்திரம் பாட்டெனப்படா; பாட்டும் உரையும் நூலுமென வேறோதலின். அன்றியுஞ் சூத்திரங் கருதிய பொருளையன்றி யுரையான் வேறோர் பொருள்கூறி அதனைத் தொடர்பு படுத்திக் கூறாமையின்: ஆண்டும் ஒருவன் கூறியதற்கு ஒருவன் பொருள் கூறுகின்றானாம். ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே உரை கூறுவனவுமொக்கும். பொருளொடு புணராப் பொய்ம் மொழியானும் எ-து பொருண்முறைமையின்றிப் பொய்யாகத் தொடர்ந்து கூறுவன எ-று. அவை ஓர் யானையுங்குதிரையுந்

---

1. 'ஒத்த சூத்திரமுரைப்பிற்காண்டிகை. மெய்ப்படக்கிளந்த வகையதாகி' எனவரும் மரபியற்சூத்திரத்தில் "உரைப்பின்' என்றதனால், 'உண்ணின்றகன்ற வுரையொடு பொருந்தி (செய். 166) வருதலை நூலிலக்கணமெனச் செய்யுளி யலுட்கூறிப் போந்தாம்; அங்ஙனம் வேறாகிப் பொருந்திவரும் எனப்பட்ட உரை யின்றிச் சூத்திரத்தானே பொருள் நிகழ்ந்த காலமும் உண்டெென்பதாம். இதனது பயம் ; உரையுங்காண்டிகையுமின்றிச் சூத்திரத்தானே உரை நிகழ்ந்தகாலமும் உண்டு, அஃது அவற்றை யொழிய ஆகா இக்காலத்து என்றாயிற்று 'உரைப்பின் என்னும் வினையெச்சம் கிளத்தல்' என்பதனோடு முடியும். "வகை' யென்ற தனான் உரையெனப்பட்டதுதானும் அக்காண்டிகையின் மெய்ப்படக்கிளந்ததே யாகலின் அவ்விரண்டுஞ் செய்யுளியலுட் கூறிப்போந்த உரைவிகற்பமே யென்பது உணர்த்தியவாறு" என இவ்வுரைப் பகுதியினைப்பகுத்துக்கூறியுள்ளமை இங்கு இயைத்துணரத்தகுவதாகும்.

2. இக்குறிப்பு நச்சினார்க்கினியர் மணிப்பிரவாள உரைநடையினை மனங்-கொண்டுவரைந்த தெனத் தோற்றுகின்றது.

தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறுசெய்தன வென்று அவற்றுக்கியையாப் பொருள்பட்டதோர் தொடர்நிலை யாய் ஒருவனுழையொருவன்கற்று வரலாற்று முறைமையான் வருகின்றன. பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் எ-து பொய்யெனப்படாது மெய்யெனப்பட்டு நகுதற்கேதுவாகுந் தொடர்நிலையானும் எ—று. இவை சிறுக்குரீஇயுரையும், தந்திர வாக்கியமும் போல்வன. இவை பொய்யெனப்படாது உலகிய லாகிய நகைதோன்றுதலின்; என் றுரைவகை நடையே நான்கென மொழிப எ-து என்றுரைப்பகுதி வழக்கு இந்நான்கு மென்றுரைப்பர் புலவர் எ-று. வகையென்றதனான் உரைப்பகுதி பிறிது முள. அவை மரபியலுட் கூறுப.[1]

**ஆய்வுரை :**

இது, நிறுத்தமுறையானே உரைவகையாமாறு உணர்த்து கின்றது.

(இ-ள்) பாட்டின் இடையே வைக்கப்பட்ட பொருட்குறிப் பினால் வருவனவும், பாட்டின்றி வழக்கின்கண் உரையளவாய் வருவனவும், பொருள் மரபாகிய உண்மை நிகழ்ச்சியின்றிப் பொய்யே புனைந்துரைக்கும் முறையில் வருவனவும் பொய்-யெனப்படாது மெய்யெனப்பட்டும் நகைப்பொருள் அளவாய் வருவனவும் என உரைவகைநடை நான்காகும் என்பர் ஆசிரியர் எ-று.

உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகிய சிலப்பதி-காரத்தில் இடையிடையே வரும் உரைநடை பாட்டிடை வைத்த குறிப்பு எனப்படும். உலக வழக்கில் பாநடையிலன்றித் தனியே வழங்கும் உரைநடை 'பாவின் றெழுந்த கிளவி' எனப் படும். யானையும் குருவியும் போலும் மொழித்திறம் பெறாத அஃறிணையுயிர்கள் தம்முள் நண்புகொண்டு இன்னவிடத்தில் இன்னவாறு செய்தன என்றாங்கு அவற்றின் இயல்புக்கு ஏலாதவகையிற் புனைந்துரைக்கப் பட்டுக் கதையளவாய் வழங்கும் உரைநடை 'பொருள் மரபில்லாப் பொய்ம் மொழி'

1. 'வகை' யென்றதனான் உரைப்பகுதி பிறிதுமுள. அவை மரபியலுட் கூறுப என நச்சினார்க்கினியர் கூறும் கூற்று, ''உரைநடை' யென்னாது 'வகை' யென்றதனான் இவ்வுரைப்பகுதி பிறிது மொன்றுண்டு, அது மரபியலுட்பகுத்துச் சொல்லுதும்'' எனவரும் பேராசிரியருரையினை உளங்கொண்டு கூறியதாகும்.

எனப்படும். முழுவதும் பொய் என்று ஓதுக்கப்படும். நிலையிலன்றி உலகியலாகிய உண்மை நிலையினை ஒருவாற்றால் அறிவுறுத்து வனவாய்க் கேட்போர்க்கு நகைச்சுவை விளைக்கும் உரைநடை 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' எனப்படும். பஞ்ச தந்திரக் கதைபோல்வன இவ்வகையில் அடங்குவன.

**ளசுஎ. அதுவே தானும் இருவகைத் தாகும்.**[1]

**இளம்பூரணம் :**

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட உரை இரண்டு வகைப்படும் என்றவாறு.

அது மைந்தர்க்கு உரைப்பனவும் மகளிர்க்கு உரைப்பனவு மாம்.[2] (கசுஎ)

**பேராசிரியம் :**

இஃது அவற்றின் தொகை கூறுகின்றது.

(இ-ள்) அந்நான்கனுள் முதலன இரண்டும் ஒன்றாகவும் ஏனைய இரண்டும் ஒன்றாகவுந் தொகுக்கப்படும் அவ்வாற்றாற் பயங்கொள்ளுங்கால் (எ-று).[3]

அவையாவன கூறுகின்றான். (கஎசு)

**நச்சினார்க்கினியம் :-**

இது அந்நான்கனுள் முதலன இரண்டும் ஒன்றாகவும் ஏனைய விரண்டும் ஒன்றாகவும் தொடுக்கப்படும்; அவற்றால் பயன்கொள்ளுங்காலத்து.[4] எ-று.

---

1. 'அதுவேதானும் ஓரிருவகைத்தே' என்பது பேராசிரியர் கொண்டபாடம் 'அதுவேதானும் ஈரிருவகைத்தே' என நச்சினார்க்கினியர் உரையிற் காணும் பாடம். ஏடெழுதினோரால் நிகழ்ந்த மாற்றமாகும்,

'அதுவே' என்றது மேற்கூறப்பட்ட உரைவகையினை. இருவகையென்றது, மைந்தர்க்கு உரைப்பனவும் மகளிர்க்கு உரைப்பனவுமாகிய இருதிறத்தினை,

2. இனி, இச்சூத்திரத்திலுள்ள அதுவே என்னும் சுட்டு மேற்குறித்த நால் வகையுரை நடையுள் பிற்கூறப்பட்ட 'பொருளொடுபுணர்ந்த நகைமொழி' யை, சுட்டியதாகக் கொண்டு, அது மகளிர்க்குரைப்பனவும் மைந்தர்க்குரைப்பனவும் என இருவகைப்படும்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும் என்பது, இதனை அடுத்துவரும் நூற்பாவுக்கமைந்த இளம்பூரணர் உரைவிளக்கத்தால் இனிது புலனாகும்.

3. மேற்குறித்த உரைவகை நான்கனுள், பாட்டிடைவைத்த குறிப்பும் பாவின் றெழுந்த கிளவியும் ஆகியவிரண்டும் ஒருபகுதியாகவும் பொருளொடுபுணராப் பொய்ம் மொழியும் பொருளொடுபுணர்ந்த நகைமொழியும் என்னும் இரண்டும் மற்றொரு பகுதியாகவும் இருவகைபடும் என்பதாம்.

4. இது, பேராசிரியர் உரையைத் தழுவியமைந்தது.

**ஆய்வுரை :**

இது மேற்கூறப்பட்ட உரைநடையினை மேலும் பகுத்துரைக்கின்றது.

(இ-ள்) மேல் நால்வகைப்பட வகுத்த அவ்வுரைவகையும் மற்றொரு திறத்தால் இரண்டாகப் பகுத்துரைக்கப்படும் எ-று.

அவையாவன மைந்தர்க்கு உரைப்பனவும் மகளிர்க்கு உரைப்பனவும் என இருவகையாம் என்பர் இளம்பூரணர். முற்குறித்த உரைவகை நான்கனுள் பாட்டிடை வைத்த குறிப்பு, பாவின்றெழுந்த கிளவி என்னும் முன்னைய விரண்டும் ஒரு கூறாகவும் பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி, பொருளொடு புணர்ந்த நகைமொழி என்னும் பின்னைய விரண்டும் மற்றொரு கூறாகவும் இருவகைப்படும் என்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

**எகூஅ ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே**
**ஒன்றே யார்க்கும் வரைநிலை யின்றே.**

**இளம்பூரணம் :**

என்—எனின். மேல் இருவகைப்படும் என்ற உரையை யுரைத்தற்குரியாரை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மகளிர்க்கு உரைக்குமுறை செவிலிக்குரித்து. மைந்தர்க்கு உரைக்குமுறை யெல்லார்க்கு முரித்தென்றவாறு.

செவிலி இலக்கணத்தின் உரைக்கின்ற வுரையும், பாட்டிலுரைக்கின்ற வுரையும் கூறுவளோவெனின், அவ்விடங்களில் வரும் உரை பொருள்பற்றி வருதலின் அப்பொருள் கூறுவளென்க.[1]

அன்றியும் அதுவே தானும் என்பது பொருளொடு புணர்ந்த நகைமொழியைச் சுட்டிற்றாக்கி அம்மொழியிரண்டு கூறுபடு மெனப் பொருளுரைப்பினும் அமையும்.[2] (கசூஅ)

---

1. மேற்குறித்த உரைவகை நடை நான்கனுள் பாட்டிடை வைத்த குறிப்பும் பாவின் றெழுந்த கிளவியும் என இவ்விலக்கண வமைப்பில் செவிலி உரை நிகழ்த்தாளாயினும் இவ்விடங்களில் வரும்பொருள் பற்றிக் கூற்று நிகழ்த்துவள் என்பது கருத்து.

2. இவ்வுரைவிளக்கம்மேலைச் சூத்திரத்திரத்தினைக் குறித்து எழுதப்பெற்றதாகும்.

'செவிலிக்கேயுரியது' என்றும் அவ்வரையறையின்றி ஆண்பெண் இருபாலார்க்கும் ஒப்பவுரியது என்றும் உரைவகை நடையினை இருதிறமாகப் பகுத்துரைத்தல் மரபு என்பது பட 'ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே, ஒன்றே யார்க்கும் வரை நிலை யின்றே, என்றார் எனினும் பொருந்தும்.

**பேராசிரியம் :**

இஃது அவற்றது இயல்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இதுவும், மேனின்ற அதிகாரத்தான் இறுதி நின்ற இரண்டன் தொகுதியாகிய ஒன்று செவிலிக்கே உரித்து. ஒழிந்த இரண்டானுமாகிய ஒன்று வரைவின்றி எல்லார்க்கும் உரித்து எனவுங் கூறியவாறு.[1]

தலைமகளை வற்புறுத்துஞ் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் பொழுது போக்குதற்குரியரென்பது இதன்கருத்து. இக்கருத்தே பற்றிப் பிற சான்றோருஞ்,

"செம்முது செவிலியர் பொய்ந்தொடி பகர"

என்றாரென்பது; பிறவும் அன்ன.

'மற்றும்' என்றதனான் அவையன்றி வருகின்ற பிசியுஞ் செவிலியர்க்கு உரித்தென்பது கொள்க. இனி,

"பாட்டிடை வைத்த குறிப்பும் பாவின் றெழுந்த கிளவியும்" (485)

யாருக்கும் வரைவின்றி வருமாறு அவ்வச்செய்யுளுட் காணப் படும். (௧௭௫)

**நச்சினார்க்கினியம் :**

இது மேனின்ற அதிகாரத்தான் இறுதிநின்ற இரண்டன்-பகுதியுமாகிய ஒன்று செவிலிக்கே யுரித்து. ஒழிந்த இரண்டனா னாகிய ஒன்றும் வரைவின்றி எல்லார்க்கு முரித்து. எ-று.

தலைவியை வற்புறுக்கும் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் பொழுதுபோக்குதற் குரியர் எ-து. இக்கருத்தானே சான்றோர்,

"செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவு நெடியவு முரைபல பயிற்றி
யின்னே வருகுவ ரின்றுணை யோரென
முகத்தவை மொழியவு மொல்லாள்"

(நெடுநல். ௧௫)

---

1. உரைநடை நான்கனையும் இருபகுதியாகக் கொள்ளுங்கால் இறுதி-யிலுள்ள பொருளொடுபுணராப் பொய்ம்மொழியும் பொருளொடுபுணர்ந்த நகைமொழியுமாகிய ஒருபகுதி செவிலிக்குரியது எனவும், பாட்டிடைவைத்த குறிப்பும் பாவின்றெழுந்த கிளவியுமாகிய ஒரு பகுதி வரைவின்றி எல்லார்க்கும் உரியது எனவும் கொள்க.

என்றார் பாட்டினுள். பிறசான்றோரும் "செம்முகச் செவிலியர் பொய்ந்நொடி பகர" என்றார். மற்றும் என்றதனான் இவையே யன்றி வருகின்ற பிசியுஞ் செவிலிக் குரித்தென்க. இனிப் பாட்டிடை வைத்த குறிப்பும் பாவின் றெழுந்த கிளவியும் வரையறையின்றி வருமாறு பலவற்றுள்ளுங் காண்க.[1]

**ஆய்வுரை :**

இது, மேல் இருவகைப்படும் என்ற உரை நிகழ்த்துதற் குரியார் இவரெனக் கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள் ஒன்று செவிலிக்கு உரியது; மற்றொன்று எல்லார்க்கும் உரியதாகும் எ-று.

அவற்றுள், பொருள் மரபில்லாப் பொய்ம்மொழியும் பொருளொடு புணர்ந்த நகைமொழியும் ஆகிய பிற்கூறு செவிலிக்குரியதெனவும், பாட்டிடை வைத்த குறிப்பும் பாவின் றெழுந்த கிளவியும் ஆகிய முற்கூறு வரையறையின்றி எல்லார்க்கும் உரித்து எனவும் கொள்ளுதல் பொருந்தும். இங்ஙனங் கொள்ளவே, தலைமகளை வளர்க்குஞ் செவிலியர் குடும்பத்திற் பிரிவினாலுளதாகும் வருத்தத்தினைப் போக்கும் நோக்குடன் புனைந்துரைத்து நடுவித்துப் பொழுது போக்குதற் குரியர் என்பது நன்கு புலனாம். இக்கருத்தினால்

"செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி" (நெடுநல்-153-154)

என நக்கீரனாரும்,

"செம்முது செவிலியர்..........
தன்னிணையாம் பன்னொடிபகர" (பெருங்-1-54-25-32)

எனக் கொங்குவேளும் இவ்வுரைவகையினைச் செவிலிக்கு உரியனவாக இயைத்துக் கூறியுள்ளமை காணலாம்.

௪௬௨ ஒப்பொடு புணர்ந்த உவமத் தானுந்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே.[2]

**இளம்பூரணம்:**

என்—எனின். பிசியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. இச்சூத்திரவுரையும் பேராசிரியருரையினை அவ்வாறே அடியொற்றி யமைந்திருத்தல் காண்க.

2. 'பிசிவகைநிலையே' என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைகளிற் காணப்படும் பாடமாகும்.

(இ-ள்) ஒப்போடே புணர்ந்த உவமை நிலையானும் பிசியாம்; தோன்றுவதனைச் சொன்ன துணிவினானும் பிசியாம் என்றவாறு.[1]

'அச்சுப்போலே பூப்பூக்கும். அமலேயென்னக் காய்காய்க்கும்' என்பது பிசி. இது உவமைபற்றி வந்தது.[2]

**பேராசிரியம் :**

இது, முறையானே பிசி இரண்டெனப்படு மென்கின்றது

(இ-ள்). ஒப்பொடு புணர்ந்த வுவமமென்பது தன்கட் கிடந்த ஒப்புமைக் குணத்தோடு பொருந்திவரும் உவமப்பொருளானும்: மற்று இனி ஒன்று சொல்ல ஒன்று தோன்றுந் துணிவிற்றாகச் சொல்லுஞ் சொல்லானுமென்று[3] இவ்விரு கூற்றதாகும் பிசி கூறுபடும் நிலைமை (எ-று).

அவை "பிறைகவ்வி மலைநடக்கும்" என்பது ஒப்பொடு புணர்ந்த உவமம். இஃது யானையென்றாவது,[4]

---

1. சொல்லவேண்டிய பொருளை வெளிப்படக் கூறாது. உவமையொடு புணர்த்துக் கூறி அதுகொண்டு உவமேயப் பொருளை உய்த்துணர வைத்தல்.

2. 'யானைசெல்லும், என வெளிப்படச் சொல்ல வேண்டிய நிலையில் அவ்வாறு கூறாது 'பிறை கவ்வி மலை நடக்கும்' என உவமானத்தாற் குறிப்பிற் புலப்பட வைத்தல் 'ஒப்போடு புணர்ந்த உவமம் என்னும் பிசிவகை யாகும். இவ்வாறு ஒப்போடு புணர்ந்த உவமானத்தாற் கூறாமல் தாம் சொல்லக்கருதியதனைமறைத்துக் கூற்றிடையே இவர் கூறுவது இதுதான் எனக் குறிப்பிற் புலப்பட்டுத் தோன்றுமாறு செய்தல் 'தோன்றுவது கிளந்த துணிவு' என்னும் பிசிவகையாகும், இதற்கு எடுத்துக்காட்டாக 'அச்சுப் போலே பூப்பூக்கும்; அமலேயென்னக் காய்காய்க்கும்' என்பதனைக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். இது உவமைபற்றி வந்தது என்னும் உரைத்தொடர்க்குரிய 'பிறைகவ்வி மலை' நடக்கும், என்னும் எடுத்துக்காட்டு ஏடெழுதுவோரால் விடுபட்டிருத்தல் வேண்டும்.

3. தன்கண் அமைந்த ஒப்புமைக் குணத்தோடு பொருந்திவரும் உவமப்பொருளொடு புணர்த்திச் சொல்ல அதனோடொத்த உவமேயப்பொருள் இதுவெனப் புலப்பட்டுத் தோன்றும் நிலையில் அமைந்தது, ஒப்பொடு புணர்ந்த உவமம் என்னும் பிசிவகையாகும்.

பிறை என்னும் உவமத்தால் யானையின் தந்தமும் மலையென்னும் உவமத்தால் யானையும் புலனாதல் காண்க.

எண்ணார்முத்தமீன்று மரகதம் போறகாய்த்துக்

கண்ணார் கமுகு' பவளம் பழுக்குங்கலிக்காழி, எனவரும் திருஞான சம்பந்தர் தேவாரத்தொடரில் 'கண்ணார் கமுகு, என்னும் எழுவாயைக் கூறாதுமறைந்த நிலையில் அஃது ஒப்பொடுபுணர்ந்த உவமத்தானாகிய பிசியாதல் காணலாம்.

4. ஒன்றுசொல்ல ஒன்று தோன்றுந் துணிவினதாகச் சொல்லும் சொல் என்றது, 'நெருப்பு' எனச்சொல்ல எண்ணி, அதனை வெளிப்படக்கூறாது 'நிறஞ்

"முத்துப்போற் பூத்து முதிரிற் களாவண்ண
நெய்த்தோர் குருதி நிறங்கொண்டு வித்துதிர்த்து"

என்பதுமது; இது, கமுகின் மேற்று.

"நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடி
லூராடு நீரிற்காக் கை"

என்பது, 'தோன்றுவது கிளந்த துணிவினான்' வந்தது. இது நெருப்பென்றாவது. 'வகைநிலை' யென்ற மிகையான் இவையுஞ் செவிலிக் குரித்தென்பது கொள்க. (எசா)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையே பிசி யிரண்டென்கின்றது.

தன்கட் கிடந்த வொப்புமைக் குணத்தொடு பொருந்திவரு மாற்றை யுவமப் பொருளானும், இனி யொன்றுகூற வொன்று தோன்றுந் துணிவிற்றாகக் கூறுங் கூற்றானும் என் றிருகூற்ற தாகும் பிசி கூறுபடு நிலைமை. (எ-று.)

அவை, "பிறை கவ்வி மலை நடக்கும்" இது ஒப்பொடு புணர்ந்தவுவமம். இது யானையென்றாம்.

"முத்துப் போற் பூத்து முகிழிற் கிளிவண்ண
நெய்த் தோர்க் குருதி நிறங்கொண்டு
வித்துதிர்த்து"

என்பது மது. இது கமுகின் மேற்று.

"நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடி
னூராடு நீரிற்காக்கை"

இது தோன்றுவது கிளந்த துணிவு. இது நெருப்பென்றாம். வகையென்றதனால் இது செவிலிக்கே யுரித்தென்க.[1]

**ஆய்வுரை :**

இது, பிசியாமாறு உணர்த்துகின்றது.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)
செய்யானாய பார்ப்பான், எக்காலத்தும் நீராடும் பழக்கமுடையானல்லன். அவன் ஒருகால் நீராடும் நிலையேற்பட்டால் ஊரிலே பறந்து திரியும் நீர்க்காக்கை போற் கரிய நிறத்தின னாவான், தான் நினைத்தபொருள் கேட்பார்க்குந் தெளி வாகத் தோன்றும்படி துணிந்து கூறும் பிசிவகை' தோன்றுவது கிளந்த துணிவு எனப்படும், மேற்குறித்த பிசிவகையாகிய உரையாடலை இக்காலத்தார் புதிர் (பிதிர்) எனவும் விடுகதையெனவும் வழங்குவர்.

1. பேராசிரியர் உரையைத் தழுவியது.

(இ-ள்) ஒப்புமைத் தன்மையொடு பொருந்திய உவமப் பொருளும், ஒன்று சொல்ல மற்றொன்று தோன்றுந் துணிவுபட வரும் சொல்நிலையும் எனப் பிசி என்பது இருவகைப்படும். (எ-று.)

'யானை நடக்கும்' என வெளிப்படக் கூறாது, 'பிறை கவ்வி மலை நடக்கும்' என உவமானத்தாற் கருதிய பொருள் குறிப்பிற் புலப்பட வைத்தல் 'ஒப்பொடு புணர்ந்த உவமம்' என்னும் பிசி வகையாகும்.

> "நீராடான் பார்ப்பான் நிறஞ்செய்யான் நீராடின்
> ஊராடும் நீரிற்காக் கை"

என்பது 'நெருப்பு' என்னும் பொருள் குறிப்பிற் புலப்பட அமைந்த சொற்றொடர் நிலையாகும். இது 'தோன்றுவது கிளந்த துணிவு' என்னும் பிசி வகைக்கு எடுத்துக்காட்டாகும். பிசி வகையாகிய இவற்றை இக்காலத்தார் பிதிர் (புதிர்) எனவும் விடுகதை யெனவும் வழங்குவர்.

**ளஎ௯ நுண்மையுஞ் சுருக்கமும் ஒளியு முடைமையும்[1]**
**மென்மையும்[2] என்றிவை விளங்கத் தோன்றிக்**
**குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்**
**ஏது நுதலிய முதுமொழி[3] யென்ப.**

## இளம்பூரணம் :

என்—எனின். முதுமொழி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) நுண்மை விளங்கவுஞ் சுருக்கம் விளங்கவும் ஒளியுடைமை விளங்கவும் மென்மை விளங்கவுமென்று இன்னோரன்ன விளங்கவும் தோன்றிக் கருதினபொருளை முடித்தற்கு வரும் ஏதுவைக் குறித்தன முதுமொழியென்று சொல்லுவர். என்றவாறு. (கஎ0)

## பேராசிரியம் :

இது, முதுமொழி யுணர்த்துதல் நுதலிற்று.

---

1. ஒளியுடைமையும்,

2. எண்மையும் என்பன பேராசிரியர் கொண்ட பாடங்கள்.

3. தாம் சொல்லக்கருதிய பொருளைக் காரணங்காட்டி உறுதிப்படுத்தும் முறையில் அமைவது இப்பழமொழி என்பார். 'ஏதுநுதலிய முதுமொழி' (செய்-ளருஅ) என அடைபுணர்த்தோதினார். ஏதுநுதலுதல்-காரணமாய் நின்று சொல்லியதனை உறுதிப்படுத்தல். முதுமொழி-பழமொழி.

(இ-ள்.) கூரிதாய்ச் சுருங்கி விழுமிதா யெளிதாகி இயற்றப் பட்டுக் குறித்த பொருளொன்றனை முடித்தற்கு வருமாயின், அங்ஙனம வந்ததனைப் பொருண்முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதுவது முதுமொழியென்ப புலவர் (எ-று)

"உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால்-வழுதியைக்
*கண்டன கண்க ளிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு" (பழமொழி)

என்றவழி, மற்று வழுதியைக் கண்ட கண் இருப்பத் தோள் பசந்தன என்றக்கால் ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்த தென்புழிக் குறித்தபொரு ளியைபின்மை கூறுதலாயிற்று. அதனைச் சொற்றொடர் இனிதுவிளக்கின்றாயினும் முற் கூறிய முதுமொழி முடித்ததென்பது; என்னை? அதன் கண்ணே அது முடித்தற்கேதுவாகிய இயைபின்மை கிடந்தமையினென்பது.[1] இது பருப்பொருட்டன்றி நுண்ணிதாகிச் சொற்சுருக்க முடைத் தாய் விழுமிதாகி எளிதிற் பொருடோன்றியவாறு கண்டுகொள்க எனவே, இதுவும் அந்நாற் பகுதித் தென்றவாறு.[2] (கஎஎ)

**நச்சினார்க்கினியம் :**

இது முதுமொழி கூறுகின்றது.

---

1. முதுமொழி - பழமொழி, பாண்டியனைக் காமுற்றுக் காணுதலாகிய பிழையைச் செய்த கண்கள் வருத்தமின்றி யிருக்க அத்தகைய பிழைசெய்யாத தோள்கள் பசலை பரந்து வருத்தமுற்றன. இந்நிலை, உழுதவயலிலுள்ள உழுந்து பயிரை ஊரிலுள்ள கன்றுக்குட்டி மேய்ந்து அழித்தலைச் செய்ய, அதற்குத் தண்டனையாக ஒரு தீமையும் புரியாத கழுதையின் செவியினை அரிந்தாற் போலுந் தன்மையது; என்பது மேற்காட்டிய பழமொழிப்பாடலின் பொருளாகும் கண்கள் செய்த வினையின் பயனை ஒருகுற்றமுஞ்செய்யாத தோள்கள் நுகர்ந்தன என்புழிக் குறித்த பொருள்; வினைசெய்தார்க்கும் அதன் பயனை நுகர்வார்கரும் இடையேயுள்ள இயைபின்மையினைக் கூறுதலாகும். இக்கருத்தினை 'வழுதியைக் கண்டன கண்கள் இருப்பப் பெரும்பணைத்தோள் கொண்டன மன்னோ பசப்பு' என்னுஞ் சொற்றொடர் தெளிவாக விளக்க வில்லையாயினும் "உழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக் கழுதை செவியரிந்-தற்று" என்னும் பழமொழி தன்கண் கிடந்த இயைபின்மை யேதுவாக அதனை முடித்து வைத்தமை அறியத் தகுவதாகும்.

2. முதுமொழியாகிய இது பருமையாக வெளிப்படத் தோன்றும் பொருட் டன்றிக் கூர்ந்துணரும் நுண்பொருளை யுடையதாதல், சொற்சுருக்க முடைமை, விழுமிய பொருளினதாதல், எளிதிற் பொருள் புலப்படுதல் என்னும் அந்நான்கு' பகுதி யினையுடைய்து என்பதாம்.

(இ-ள்.) நுண்மையுஞ்......தோன்றி எ-து கூர்மையும், சொற் சுருங்கியிருத்தலும், விழுப்பமும், எளிதிற் பொருள்தெரிதலும் என்ற இந் நான்கும் விளங்கத்தோன்றி. குறித்த .... வரூஉம் எ து அறம் பொரு ளின்பமென்னு மூன்றனுள் ஒன்றை முடித்-தற்கு வருமாயின். ஏது.... என்ப எது அங்ஙனம் வந்ததனை அப் பொருள் முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதிவரும் முதுமொழி யென்பர் புலவர். எ-று.

"உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றே—வழுதியைக்
கண்ட கருங்க ணிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு"

இதனுள் ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்ததெனக் குறித்து அப்பொருளியைபின்மை கூறியதனைச் சொற்றொட ரினிதுவிளங்காதேனும்[1] முற்கூறிய முதுமொழிக்கண்ணே யப்பொருளை முடித்தற்கேதுவாகிய இயைபின்மை கிடந்து முடிந்தவாறு காண்க. இதனுள் நுண்மை முதலிய நான்குங் காண்க. பழமொழியிவ்விலக்கணம் பற்றிச் செய்தது.[2]

**ஆய்வுரை :**

இது. முதுமொழியாமாறு இதுவென உணர்த்துகின்றது.

(இ-ள்) அறிவின் கூர்மையும், சொற்சுருக்கமும், விழுமிய பொருளை விளக்கும் ஒளியுடைமையும், எளிதிற் பொருள் விளக்கும் எளிமையும் என்னும் இந்நான்கும் விளங்கத் தோன்றிக் கருதிய பொருளை முடித்தற்கு வேண்டும் காரணத்துடன் பொருந்தி வருவது முதுமொழி என்பர் ஆசிரியர் எ-று.

முதுசொல், முதுமொழி, மூதுரை, பழமொழி என்பன ஒரு-பொருள் குறித்த பல சொற்களாகும் சென்ற காலத்து வாழ்ந்த பெருமக்கள் வாழ்க்கையிற் புலப்பட்டுத் தோன்றிய நுண்ணறிவு, சொல்வன்மை, உயர்ந்த நோக்கம், நல்வாழ்க்கை நிலையில் அன்னோர் பெற்றிருந்த சிறந்த அநுபவவுணர்வு ஆகிய எல்லாவற்றையும் திரட்டித் தருதல் இம்முதுமொழியின் இயல்

1. 'விளக்காதேனும் என்றிருத்தல் பொருத்தம்'

2. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய பழமொழி நானூறு தொல்காப்பியனார் கூறிய ஏதுநுதலிய முதுமொழிக்கு இலக்கியமாக இயற்றப் பெற்றது என்பதாம்.

பென்பது, முதுமொழி யென்னும் செய்யுள்வகை பற்றிய இவ்விலக்கணத்தால் இனிது விளங்கும். பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய பழமொழி நானூறும் திருநாவுக்கரசர் அருளிய பழமொழித் திருப்பதிகமும் 'ஏது நுதலிய முதுமொழி' என்னும் இச்செய்யுள் வகைக்குச் சிறந்த இலக்கியங்களாகும்.

**ளஎக நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்[1]**
**மறைமொழி தானே மந்திரம் என்ப.**

**இளம்பூரணம் :**

என் - எனின். மந்திரம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நிறைந்த மொழியையுடைய மாந்தர் தமதாணை யாற் சொல்லப்பட்ட மறைந்த சொல் மந்திரமாவ தென்றவாறு.

அது வல்லார்வாய்க் கேட்டுணர்க.[2] (கஎக)

**பேராசிரியம் :**

இது, மந்திரச் செய்யுளுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). நிறைமொழி மாந்தரென்பது, சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையராவார். ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப்படும். (எ-று).[3]

அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க. 'தானே'யென்று பிரித்தான் இவை தமிழ்மந்திர மென்றற்கும் பாட்டாகி அங்கதமெனப் படுவனவும் உள, அவை நீக்குதற்குமென உணர்க.[4] அவை,

---

1. 'கிளந்த' என்பது, பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

2. அது வல்லார் என்றது, நிறைமொழிமாந்தர்கூறிய மறைமொழியாகிய மந்திரத்தினைப் பயின்று வல்லவர்களை. இத்தொல்காப்பிய நூற்பாவை அடியொற்றியமைந்தது,

'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்' (28)

எனவரும் திருக்குறளாகும்.

3. நிறைமொழி மாந்தராவார், அருளிக்கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பிறழாது எய்துவிக்கும் மொழியினையுடைய தவவலிமிக்க சான்றோர்.

4. இங்குக் கூறப்படுவன தமிழ்மந்திரம் என்பதனை வற்புறுத்தற்கும், இவை பாட்டுப்பெற்று அங்கதம் என்ற பெயரால் வழங்கப்பெறுதலும் உண்டென்பதற்கும் 'மறைமொழிதானே' என ஏகாரத்தாற் பிரித்துரைத்தார்.

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்-சீரிய
அந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா"

எனவும்,

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—யரணியல்
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோடன்
ஆனந்தஞ் சேர்கசுவா கா"

எனவும், இவை தெற்கண் வாயில்திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரன் ஒருவனைச் சாவவும் வாழவும் பாடிய மந்திரம் அங்கதப்பாட்டாயின. மேற் பாட்டுஉரை நூல் என்புழி அங்கத மென்றோதினான் இன்ன மந்திரத்தை. இஃது ஒருவனை இன்ன வாற்றாற் பெரும்பான்மையுஞ் சபித்தற் பொருட்டா கலின் அப்பெயர்த்தாயிற்று. இக்கருத்தேபற்றிப்[1] பிறரும்[2]

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" (குறள் 28)

என்றாரென்க. அங்கதப்பாட்டாயவழி அவற்றுக்கு அளவை,

"அங்கதப் பாட்டவற் றளவோடு ஒக்கும்"

என மேற்கூறினானென்பது. (௬எஅ)

**நச்சினார்க்கினியம் :**

இது மந்திரச் செய்யுள் கூறுகின்றது.

(இ-ள்.) சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங்

1. இங்கெடுத்துக்காட்டிய இரண்டு வெண்பாக்களும் மதுரையில் தமிழ்ச் சங்கநிகழ்ச்சி என்றும்போல் இயல்பாக நிகழாதவாறு தெற்கண்வாயில் திறவாத பட்டி மண்டபத்தாரைத் திருத்தற்பொருட்டுச் சங்கப்புலவராகிய நக்கீரனார் தமிழை அவமதித்தும் வடமொழியை உயர்த்தியும் பேசிய வேட்கோக் குயக் கோடன் சாவவும் மீண்டும் உயிர்பெற்று வாழவும் பாடிய பாடல்களாகும். இவ்விரு பாடல்களுள் 'முரணில் பொதியின்' என்ற பாடல் தமிழை இகழ்ந்த வேட்கோக் குயக்கோடன் உடனே சாமாறு சபித்துப்பாடிய அங்கதப் பாட்டாகும். 'ஆரிய நன்று' என்ற முதற்குறிப்புடைய பாடல், அறியாமையால் தவறு இழைத்து இறந்த குயக்கோடன் மீண்டும் உயிர்பெற்று வாழுமாறு பாடப்பெற்ற தமிழ் மந்திரபாடலாகும்.

2. 'பாட்டுரைநூலே (செய். எகூ) என்னும் சூத்திரத்து இத் தமிழ் மந்திரத்தை 'அங்கதம்' எனக் குறித்தார் தொல்காப்பியர். இதுபெரும்பான்மை யும் சபித்தற்பொருட்டு வருதலின் அங்கதம் என்னும் பெயர்த்தாயிற்று.

குறைவின்று பயக்கச் சொல்லு மாற்றலுடையார் அவ்வாணை- யாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமை மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப்படும். எ-று.

அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க தானேயென்று பிரித்-தார், இவை தமிழ்மந்திரமென்றற்கும் மந்திரந்தான் பாட்டாகி யங்கத மெனப்படுவன வுள, அவை நீக்குதற்கு மென்றுணர்க. அவை,

"ஆரியநன்று .. ... தீர்க்க சுவா"
"முரணில் பொதியின் ... ... ஆனந்தம் சேர்க்க சுவா"

இவை தெற்கில் வாயில்திறவாத பட்டிமண்டபத்தோர் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவுஞ் சாவவும்பாடி யின்னவாறாக வெனச் சவித்தற் பொருட்டாய்வந்த மந்திரம் பாட்டாய்வந்தலின் அங்கதமாயிற்று இதனான்

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" (திருக். உஅ)

என்றார். [1]

**ஆய்வுரை :**

இது, மந்திரம் ஆமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) நிறைமொழி மாந்தராகிய பெரியோர் 'இவ்வாறு ஆகுக' எனத் தமது ஆணையிற் கூறப்பட்டு அவ்வாற்றலனைத் தும் தன்கண் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய நன்மொழியே மந்திரம் என்று கூறுவர் பெரியோர் எ-று

'நிறைமொழி என்பது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடும் மொழி' என்பர் பரிமேலழகர். நிறைமொழி மாந்தராவார், யான் எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் நீக்கி ஐம்புலன்களையும் அடக்கி எவ்வுயிர்க்கும் அருளுடையோராய் வாழும் செம்புலச் செல்வராவர். ஆணையிற் கிளத்தலாவது 'இஃது இவ்வாறு ஆகுக எனத்தமது ஆற்றல் தோன்றச் சொல்லுதல்'. "மறைமொழி யென்பது புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர்" என்பர் பேராசிரியர். இனி, மறைமொழி யென்பதற்கு, நிறைமொழி மாந்தரது ஆணையின் ஆற்றல் அனைத்தையும் தன்னகத்தே மறைத்துக் கொண்டுள்ள மொழி எனப்பொருள் கொள்ளுதலும்

1. பேராசிரியர் உரை நோக்குக.

பொருந்தும். இங்ஙனம் சான்றோர் எண்ணிய வண்ணம் செயற் படுதற்குரிய ஆற்றல் முழுவதும் தன்கண் வாய்க்கப்பெற்ற மொழியே மந்திரம் எனப்படும் என்பார் இதனை 'வாய்மொழி' (செய் 75) என்ற பெயரால் தொல்காப்பியனார் முன்னர்க் கூறிப்போந்தார்.

இத்தொல்காப்பிய நூற்பாவின் சொல்லையும் பொருளையும் அடியொற்றியமைந்தது,

> நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும்

எனவரும் தெய்வப்புலவர் திருவள்ளுவர் வாய்மொழியாகும்.

இறைவன் திருவருள் பெற்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார், 'எந்தை நனிபள்ளியுள்க வினைகெடுதலாணை நமதே' (2—84—11) எனவும், 'ஆனசொன்மாலை யோதும் அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணைநமதே' (2—85—11) எனவும் தம்மேல் ஆணையிட்டும், 'செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்' (1-16-1)என இறைவனது திருநீல கண்டத்தின் மேல் ஆணையிட்டும் ஓதிய திருப்பதிகங்களும் அப்பூதியடிகளார் மூத்த மைந்தன் அரவுதீண்டி இறந்தானாக அவனை உயிர்ப்பிக்கும் அருட்குறிப்புடன் 'ஒன்றுகொலாம்' (4-18-1-10) எனப் பாடிய திருப்பதிகமும் நிறைமொழி மாந்தர் ஆணையின் ஆற்றலை நன்கு புலப்படுத்துவனவாகும். 'வாய் மொழி' என்பது மந்திரத்திற்கு வழங்கும் மற்றொரு பெயர் திருவாய்மொழி, திருமொழி, திருவாசகம் என்ற பெயர்கள் வாய்மொழி என்ற பெயர் வழக்கத்தை அடியொற்றியமைந் தனவாகும்.

> "ஆரியம் நன்று ... ... செந்தமிழே தீர்க்க சுவா"

எனவும்,

> "முரணில் பொதியின் — ... ஆனந்தஞ் சேர்க சுவா"

எனவும், இவை 'தெற்கண்வாயில் திறவாத பட்டிமண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் சாவவும் பாடிய மந்திரம் அங்கதப்பாட்டாயின' எனப் பேராசிரியர் காட்டிய அங்கதப் பாடல்கள் ஆணையிற்கிளந்த மறைமொழியின் பாற்படுவன.

இவை, தமிழ் மந்திரம் என்றற்கும், மந்திரந்தானே பாட்டாகி அங்கதம் எனப்படுவனவும் உள. அங்கதப்பாட்டு அல்லாத மறை

மொழியே மந்திரம் என ஈண்டுச் சிறப்பித்துரைக்கப்படும் என்றற்கும் 'மறைமொழி தானே' எனப் பிரித்துரைத்தார் ஆசிரியர். எனவே சபித்தற்பொருட்டாகிய மந்திரச் செய்யுளை அங்கதப்பாட்டெனவும் வசைப்பொருட்டாகாது உலகநலங் குறித்து வரும் மறைமொழியினையே மந்திரம் எனவும் வழங்குதல் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தென்பது நன்கு புலனாம். திருமூலநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திர மாலை தொல்காப்பியனார் கூறிய இலக்கணத்தின் படி அமைந்த தமிழ் மந்திரங்களுக்குரிய சிறந்த இலக்கியமாகத் திகழ்தல் உணர்ந்து போற்றத்தகுவதாகும்.

ளஎஉ  எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்பு மொழியே [1]

## இளம்பூரணம் :

என்—எனின். குறிப்புமொழி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிச் சொல்லினா னுணரப்படும் பொருளின் புறத்ததுவே குறிப்பு மொழி என்றவாறு.

மேல் அங்கதமென்று சொல்லி ஈண்டுக் குறிப்புமொழி யென்றதனான் இச்சொல் வசைகுறித்து வருமென்றுகொள்க.

புகழ்குறித்து வந்தாற் குற்றமென்னையெனின், அதனை வெளிப்படக் கூறக் கேட்டார்க்குந் தனக்கும் இன்பம் பயத்தலிற் குறிப்பினாற் கூறல் வேண்டுவது வசையென்று கொள்ளப்படும்.[3]

(கஎஉ)

1. 'குறிப்புமொழியென்ப' என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைகளிற் கண்ட பாடமாகும்.

2. மேல் அடிவறையரை யுள்ள பாட்டில் பழிகரந்து மொழிதலாகிய அங்கதப்பொருள் வரும் எனக்கூறி இங்குக் 'குறிப்புமொழி' எனக் குறித்தமையால் இங்கே 'குறிப்புமொழி, என்பது வசை குறித்து வருவது எனக்கொண்டார் இளம்பூரணர். எனவே பாட்டாய் வரும் வசை அங்கதம் எனவும் உரையாய் வரும் வசை குறிப்பு மொழி எனவும் வழங்கப்படும் என்பதாம்.

3. புகழ் குறித்ததாயின், அதனை வெளிப்படக்கூறின் கேட்டார்க்கும் தனக்கும் இன்பம் பயக்குமாதலின் அதனைக் குறிப்பினாற் கூறுதல் பயனின்றாமாதலின், வசைகுறித்து வருவதனையே குறிப்புமொழி என்றார் ஆசிரியர் என்பதும் இவ்வுரை விளக்கங்களாற் புலனாம்.

**பேராசிரியம் :**

இது, முறையானே 'கூற்றிடைவைத்த குறிப்புணர்த்துதல்' நுதலிற்று.

(இ-ள்) எழுத்து முடிந்தவாற்றானுஞ் சொல் தொடர்ந்த வாற்றானும் சொற்படு பொருளானுஞ் செவ்வன் பொருளறிய லாகாமையின், எழுத்தொடுஞ் சொல்லோடும் புணராது பொருட்குப் புறத்தே பொருளுடைத்தாய் நிற்பது குறிப்பாவது (எ-று).

இதனைப் 'பாட்டுரை நூல்' என்ற வழி 'வாய்மொழி' என் றோதினான், கவியாற் பொருள் தோன்றாது பின்னர் இன்னதிது வெனச் சொல்லி உணர்த்தப்படுதலின்.

இனி. அதனை இதன் தொகைச் சூத்திரத்துக் 'கூற்றிடை வைத்த குறிப்'பென்று (477) ஓதினான் பாட்டிடைப் படுபொருள் பெரிதாகி அதனிடையே குறித்துக்கொண் டுணரினல்லது மெய்ப்படா தென்றற்கென்பது. பிறர் அவற்றைப் பொரு-ளிசையென்று சொல்லுப. [1]

> "குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார் கையி
> னடக்கிய மூக்கின ராம்."

என வரும். இதனுட் குடமே தலையாகப் பிறந்தாரெனவுங் கொம்பெழுந்த வாயின ரெனவுங் கையுட்கொண்ட மூக்கின ரெனவுங் கூறியக்கால் எழுத்துஞ் சொல்லும் பொருளும் இயல்-பிலவாதலுங் குறிப்பினான் அதனைக் குஞ்சரமென்று கொண்ட வாறுங் கண்டுகொள்க. பிறவும் அன்ன.

---

1. எழுத்து முடிந்த முறையாலும் சொல்தொடர்ந்த நெறியாலும்சொல்லின் கண் தோன்றும் பொருளாலும் நேரேபொருளுணர முடியாதவாறு எழுத்தொடுஞ் சொல்லொடும் தொடராது பொருட்குப்புறத்தே தோன்றும் பொருளுடையதாய் நிற்பது குறிப்புமொழியாகும். இது, கவியாற்பொருள் தோன்றாது பின்னர் இன்னபொருளுடையது இத்தொடர் என வாய்மொழியாற் சொல்லியுணர்த்தப் படுதலின்; பாட்டுரைநூல் 'என்னுஞ் சூத்திரத்தில் இதனை 'வாய்மொழி' என்ற பெயராற் குறித்தார் தொல்காப்பியனார். இனி இக்குறிப்பு மொழியினையே அடிவரையில்லன ஆறையுந் தொகுத்துக்கூறும் செய்யுளியல் ளஎஎ ஆம் சூத்திரத்துக் 'கூற்றிடைவைத்த குறிப்பு' எனக் கூறினார். பாட்டின்கண்ணே தோன்றும் பொருள் பிறிதாகி அதனிடையே குறித்துக்கொண்டுணர்ந்தாலல்லது அக்குறிப்பு வெளிப்படா தென்றற்குக் 'கூற்றிடைவைத்தகுறிப்பு என்றார், ஆசிரியர். இக்குறிப்பினைப் பிற நூலாசிரியர் பொருளிசையென்பர்.

மற்றிது பிசியெனப் படாதோ வெனின்-இது பாட்டுவடிவிற் றாகலின் அற்றன்றென்பது, அஃதேற் பாட்டெனப்படாதோ வெனின்,-குறித்த பொருண் முடிய நாட்டாமையின் யாப் பழிந்து, நாற்சொல்லியலான் யாப்புவழிப் படாமையின் மரபும் அழிந்து, பிறவுறுப்புப் பலவுங் கொண்டமையிற் பாட்டெனவும் படாதென்பது. இஃது எழுத்து முதலாக ஈண்டிய அடியெனப் படாமையின் அதனையும் அடிவரையில்லனவற்றோடு ஓதினா னென்பது.[1] அல்லாதார் குறிப்பிசைவந்த செய்யுளெல்லாங்[2] குறிப்பெனப்படுமென்ப. அங்ஙனங் கூறிற் குறிப்பிசையுடைய பாட்டினுள் வாராவாகிய செல்லுமென மறுக்க (கஎ௬)

**நச்சினார்க்கினியம் :**

இது முறையே கூற்றிடைவைத்த குறிப்புணர்த்துகின்றது.

(இ-ள்.) எழுத்து முடிந்தவாற்றானுஞ் சொற் றொடர்ந்த வாற்றானுஞ் சொற்படுபொருளானுஞ் செவ்வன் பொருளறிய வரிதாகிப் பொருட்புறத்தே பொருளுடைத்தாயும் நிற்பது குறிப்பு மொழியாவது. (எ-று)

உ-ம். "குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார் கையி
னடக்கிய மூக்கினர் தாம்"

இது குஞ்சரமென்ப துணர்த்திற்று. இது கூறுகின்ற பொரு ளைக்கரந்து கூறப்பட்டு ஏது முதலியவற்றோடு புணராது நின்றது இது பாட்டு வடிவிற்றாய் வருதலிற் பிசியெனலு- மாகாது குறித்தபொருளை முடிய நாட்டினாற் சொல்லியலான்[3] யாப்புவழிப்படாமையின் மரபழிந்து பிறவுங்குறைதலிற்

---

1. இக்குறிப்புமொழி பாட்டு வடிவினதாதலின் பிசியெனக் கூறப்படாது. குறித்த பொருளை முடிய நாட்டாமையின் யாப்பு என்னும் உறுப்பழிந்தும், நாற் சொல்லியலால் யாப்பு வழிப்படாமையின் மரபு என்னும் உறுப்பழிந்தும் பிறவுறுப் புப்பலவுங் கொண்டமையாற் பாட்டெனவுங் கூறப்படாது. இஃது எழுத்து முதலா ஈண்டிய அடியளவினை யுடையது. அன்மையின் இதனையும் அடிவரையில் லாத செய்யுட்களோடும் சேர்த்துரைத்தார். ஆசிரியர்.

2. குறிப்பிசை வந்த செய்யுளெல்லாம் 'குறிப்பு' என வழங்கப்படும் என்பர் ஒருசாரார். அவ்வாறுகூறின் குறிப்பிசையுடைய பகுதிகள் அடிவரையறையுடைய பாட்டினுள் வருதலில்லை யென்பது ஏற்படுமாதலின் அவர் கூற்றுப்பொருந்தாது என மறுப்பர் பேராசிரியர்.

3. 'நாற்சொல்லியலான், என்றிருத்தல் வேண்டும்.

பாட்டெனவும் படாதாயிற்று. அதனான் இது அடிவரையறை யின்றாயிற்று.[1]

**ஆய்வுரை :**

இது, குறிப்புமொழி ஆமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) எழுத்தின் இயல்பினாலும் சொல்லின் தொடர்ச்சி யாலும் புலப்படாது, சொல்லினால் உணரப்படும் பொருட்குப் புறத்தே பொருளுடையதாய் வருவது குறிப்புமொழி என்பர் (எ-று)

"மேல் அங்கதமென்று சொல்லி ஈண்டுக் குறிப்புமொழி என்றதனான் இச்சொல் வசைகுறித்து வருமென்று கொள்க" என்பர் இளம்பூரணர்.

"கவியாற் பொருள் தோன்றாது, பின்னர் 'இன்னது இது, எனக் குறிப்பினால் உய்த்துணர்ந்து சொல்ல வைத்தலின், இது குறிப்புமொழி' எனப்பட்டது. பாட்டிடைப் பொருள் பிறிதாகி அதனிடையே குறித்துக்கொண்டு உணரினல்லது இக்குறிப்புப் புலனாகாதென்பார், இதனைக் 'கூற்றிடை வைத்த குறிப்பு' (செய்-158) என்றார் தொல்காப்பியனார். இதனைப் 'பொருளிசை' என வழங்குவர் ஒருசாராசிரியர்.

> "குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார், கையின்
> அடக்கிய மூக்கின ராம்"

எனவரும். இதனுள் குடமே தலையாகப் பிறந்தார் எனவும். கொம்பெழுந்த வாயினர் எனவும், கையுட் கொண்ட மூக்கினர் எனவும் கூறியக்கால், எழுத்துஞ் சொல்லும் பொருளும் இயல் பிலவாதலும் குறிப்பினான் அதனைக் குஞ்சரம் எனக் கொண்ட வாறும் கண்டுகொள்க" எனப் பேராசிரியர் காட்டிய உதாரண மும் விளக்கமும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கனவாகும்.

இது பாட்டு வடிவிற்றாய் வருதலிற் பிசியெனலும் ஆகாது; குறித்த பொருளை நாட்டி நாற்சொல்லியலான் யாப்புவழிப் படாமையின் மரபழிந்து பிறவும் குறைதலிற் பாட்டெனவும் படாதாயிற்று அதனால் இது அடிவரையறையின்றாயிற்று" என்பர் நச்சினார்க்கினியர்.

---

1. இவ்வுரை பேராசிரியர் உரையின் சுருக்கமாக அமைந்துள்ளது.

எஎ௩. பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டின் இயல பண்ணத் தியயே [1]

## இளம்பூரணம் :

என்—எனின். பண்ணத்தி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேல் இத்துணையும் பாவும் பாவின்றி வழங்குவனவும் எடுத்தோதினார். இனிப் பிறநூலாசிரியர் விரித்துக் கூறின இசைநூலின் பாவின மாமாறு உணர்த்துதலின்[2] இது···
**பாட்டிடைக் கலந்த பொருளவாகி** என்பது—பாட்டின்கட் கலந்த பொருளையுடைத்தாகி யென்றவாறு.

எனவே, அவ்வடி பாவிற்குரிய பொருள் கொள்ளப்படும்.
**பாட்டினியல பண்ணத்திய்யே** என்பது—பாட்டுக்களின் இயல்பை யுடையவாம் பண்ணைத் தோற்றுவிக்குஞ் செய்யுட்கள் என்றவாறு.

பண்ணைத் தோற்றுவித்தலாற் பண்ணத்தியென்றார்.[3]

அவையாவன சிற்றிசையும் பேரிசையு முதலாக இசைத் தமிழில் ஓதப்படுவன.[4] அவையாமாறு வருகின்ற சூத்திரத்தாற் கூறுப. (கஎ௩)

---

1. 'பண்ணத்தி யியல்பே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்டபாடம்.

2. இங்குப் பிறநூலாசிரியர் என்றது, இயற்றமிழ் நூலாசிரிய ரல்லாத இசைத்தமிழ் நூலாசிரியரை.

இசைத்தமிழ் நூலார் கூறும் பண்ணத்தியென்றும் இசைப்பாடல்களையே பிற்கால யாப்பிலக்கண நூலாசிரியர்கள் நால்வகைப் பாக்களுக்கும் உரியவகையில் தாழிசை துறை விருத்தம் எனப் பாவினமாகப் பகுத்துரைத்தனம் என்பார் 'இனிப்பிறநூலாசிரியர் விரித்துக் கூறின இசைநூலின் பாவினமாமாறு உணர்த்துதலின்' என்றார்.

3. பண் நத்தி-பண்ணத்தியென்றாயிற்று. நத்துதல்-விரும்புதல். பண்ணினை விரும்பிப் பாடப்பெற்ற இசைத்தமிழ்ச் செய்யுட்கள் என்பது பொருள். இயற்றமிழ்ப் பாடல்கள் அறமுதலாகிய மும்முதற்பொருட்கும் உரியவாதல் போலவே பண்ணத்தியும் பாட்டின்கண்கலந்த அம்முப்பொருள்களையே பொருளாகக் கொண்டு அமைவன என்பது புலப்படுத்துவார், 'பாட்டின் இயல' என்றார்.

4. இசைத்தமிழில் ஓதப்படும் சிற்றிசை பேரிசை என்பவற்றின் அமைப்பு இவையெனத் தெளிவாகப் புலனாகவில்லை.

**பேராசிரியம் :**

இது, பண்ணத்தி கூறுகின்றது.

(இ-ள்)- பழம்பாட்டினூடு கலந்த பொருளோ தனக்குப் பொருளாகப் பாட்டும் உரையும்போலச் செய்யப்படுவன பண்ணத்தி (எ-று).

மெய்வழக்கல்லாத புறவழக்கினைப் பண்ணத்தியென்ப. இஃது எழுதும் பயிற்சியில்லாத புறவுறுப்புப் பொருள்களைப் பண்ணத்தி யென்பவென்பது. அவையாவன நாடகச்செய்யுளாகிய பாட்டும் மடையும் வஞ்சிப்பாட்டும் மோதிரப்பாட்டுங் கடகண்டும் முதலாயின. அவற்றை மேலதேபோலப் பாட்டென்னா ராயினார், நோக்கு முதலாயின உறுப்பின்மையினென்பது. அவை (645) வல்லார் வாய்க் கேட்டுணர்க[1] (௧அ௦)

**நச்சினார்க்கினியம் :-**[2]

**ஆய்வுரை :**

இஃது, இசைநூலின் பாவினமாகிய பண்ணத்தி என்பதன் இலக்கணம் உணர்த்துகின்றது.

---

1. நல்லிசைப்புலவர் செய்யுள் வழக்கிற் பயிலுதலின்றி நாட்டுப்புறத்தே பொதுமக்களிடையே எழுத்துருப்பெறாது வழங்கிவரும் பாடல்களைப் பண்ணத்தி யென வழங்குதல் மரபு. எழுதும் பயிற்சி பெறாது நாட்டுப்புறத்தே செவிவழி யாக வழங்கிவரும் பண்ணத்திப் பாவாவன நாடகச்செய்யுளாகிய பாட்டுமடை முதலாயின. செய்யுளுக்கு இன்றியமையாத நோக்கு முதலிய சிறப்புறுப்புக்கள் அமையப்பெறாமையின் இவற்றைப் பாட்டு என்ற பெயரால் ஆசிரியர் குறித்திலர்.

மேற்குறித்த பண்ணத்தியாக நாட்டுப்புறப்பாடல்களில் பாட்டுமடை, வஞ்சிப் பாட்டு, மோதிரப்பாட்டு, கடகண்டு என்பன நாடகத்தில் இடம்பெறும் இசைப் பாடல் வகையெனக் கருதவேண்டியுளது.

பேராசிரியர் தம்காலத்து வழங்கிய பண்ணத்தியின் வகைகளாகத் தாம் குறித்த நாட்டுப்புறப்பாடல்களை ' 'அவைவல்லார் வாய்க்கேட்டுணர்க' ' எனக்கூறுதலின் அவர் காலத்தும் அப்பாடல்கள் எழுத்துருப்பெறாது நாடகத்துறையில் வல்ல ஒருசிலரால் மட்டும் பாடப்பெற்று வந்தன எனத் தெரிகிறது. அவை மக்களால் மறக்கப்பட்டு வழக்கிழந்த இக்காலத்தில் அவற்றின் இயல்புகளை உள்ளவாறு பகுத்துக்காணும் வாய்ப்பு இல்லாது போனது தமிழ் மக்களுக்கு மொழித்திறத்தில் நேர்ந்த ஒரு பெருங்குறையே யென்பதில் சிறிதும் ஐயமில்லை.

2. இச்சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை கிடைக்கவில்லை. இவற்றிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரைப்பகுதிகள் பேராசிரியர் உரையினையே பெரும்பாலும் அடியொற்றி யமைந்திருத்தல் வேண்டும்.

(இ-ள்) பாட்டின்கண் கலந்த பொருளையுடையனவாகிப் பாட்டுக்களின் இயல்பையுடையன பண்ணத்தியெனப்படும் (எ-று)

"பண்ணைத் தோற்றுவித்தலாற் பண்ணத்தி யென்றார்; அவையாவன சிற்றிசையும் பேரிசையு முதலாக இசைத் தமிழில் ஓதப்படுவன" என்பர் இளம்பூரணர். 'பாட்டிடைக் கலந்த பொருளவாகி' என ஆசிரியர் கூறுதலால் இயற்றமிழ்ப் பாடல்களுக்கு உரியனவாகச் சொல்லப்பட்ட அறம் பொருள் இன்பம் என்னும் மும்முதற் பொருள்களே பண்ணைத் தோற்றுவிக்குஞ் செய்யுட்களாகிய இவ்விசைப் பாடல்களுக்கும் உரியன என்பதும், பாட்டு எனக் கூறாது பாட்டின் இயல என்றாமையால் இயற்றமிழ்ப் பாடல்களுக்கு உரியனவாக முற்கூறப்பட்ட நோக்கு முதலிய செய்யுளுறுப்புக்கள் சிலவற்றை இவ்விசைப் பாடல்கள் பெற்றேவருதல் வேண்டும் என்னும் வரையறையில்லை யென்பதும் நன்கு விளங்கும். பண்ணத்தி என்பது, எழுத்து வடிவம் பெறாது நாட்டிற் பொதுமக்களிடையே வழங்கும் நாடகச் செய்யுள் வகையெனப் பேராசிரியர் தரும் விளக்கம் கூர்ந்துணரத்தகுவதாகும்.

ளஎ௪ அதுவே தானும் பிசியொடு மானும்.

## இளம்பூரணம் :

என்—எனின். மேற்சொல்லப்பட்டதனுள் ஓர் உதாரணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட பண்ணத்தி பிசியோடொத்த அளவிற்று என்றவாறு.

பிசியென்பது இரண்டடி அளவின்கண்ணே வருவதாதலின் இதுவும் இரண்டடியான் வருமென்று கொள்ளப்படும்.[1]

உதாரணம்

"கொன்றை வேய்ந்த செல்வன் அடியை
என்றும் ஏத்தித் தொழுவோம் நாமே"

---

1. பிசி என்பது இரண்டடியான்வருவது என்பது தம்காலத்து எல்லார்க்கும் புலனாதலின் பண்ணத்தியும் பிசிபோன்று இரண்டடிச் சிற்றெல்லையதாய் வரும் என்பர்,

'அதுவே தானும் பிசியொடு மானும்' என்றார். அது என்றது மேற் குறித்த பண்ணத்தியை, மானும்-ஒக்கும்.

இது பிசியோடு ஒத்தவளவிற்றாகிப் பாலையாழென்னும் பண்ணிற்கு இலக்கணப் பாட்டாகி வந்தமையிற் பண்ணத்தியாயிற்று.[1] பிறவு மன்ன. (௧௭௪)

**பேராசிரியம் :**

இதுவும் அது.

(இ-ள்.) மேற்கூறப்பட்ட பண்ணத்தி பிசியோடொக்கும் (எ-று).

அதனை ஒத்தலென்பது அதுவுஞ் செவிலிக்குரித்தென்றவாறு, 'பிசியொடும்' என்ற உம்மையால்.

"பொருளொடு புணராப் பொய்ம்மொழி யோடும்
பொருளொடு புணர்ந்த நகையோடும்"
(தொல்-செய்-173)

ஒக்குமென்றுணர்க.[2] 'தானும்' என்ற மிகையாற் பாட்டுமடை வசைக் கூத்திற்கே உரித்தென்பது கொள்க.[3] (௧௮௧)

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட பண்ணத்தி பிசியோடு ஒத்த இயல்பினது எ-று.

பிசியோடு ஒத்த இயல்பாவது, பிசி போன்று இரண்டடிச் சிற்றெல்லையாய் வருதல் என்பர் இளம்பூரணர்; செவிலிக்கு உரித்தாதல் என்பர் பேராசிரியர்.

---

1. ஔவையார் பாடிய 'கொன்றைவேய்ந்த செல்வன்' என்னும் இப்பாடல், அவர் இயற்றும் நீதிநூலுக்குரிய கடவுள்வாழ்த்தாய்ப் பாலையாழ் என்னும் பண்ணின் இசையமைப்பினைப் புலப்படுத்தும் இலக்கண கீதமாகவும் அமைந்தமையின் பண்ணத்திக்குரிய இலக்கிய மாயிற்று.

2. மானும்-ஒக்கும். பிசியோடு ஒத்தலாவது செவிலிக்குரியவாதலும் பொருளொடு புணராப் பொய்ம்மொழி, பொருளொடுபுணர்ந்த நகைமொழி எனச் செவிலிக்குரிய உரைப்பகுதியினை யடியொற்றி வருதலுமாகும்.

2. நாடகச் செய்யுள் வகையுள் ஒன்றாகிய பாட்டுமடையென்பது புகழ்க்கூத்து, வசைக்கூத்து என்னும் கூத்து வகைகளுள் வசைக்கூத்திற்கேயுரியதாகும்.

௭௭௫ அடிநிமிர் கிளவி ஈரா றாகும்
அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே [1]

## இளம்பூரணம் :

என்-எனின். இதுவும் பண்ணத்தி பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

பண்ணத்தி யெனினும் பாவினமெனினு மொக்கும்.

'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே' (செய்யுளில், ௩௩) யென்றமையான் அடியென்பது நாற்சீரான் வருவதென்று கொள்க. [2]

(இ-ள்.) நாற்சீரடியின் மிக்குவரும் பாட்டுப் பன்னிரண்டும் அவ்வழி அவ்வடியின் வேறுபட்டு வருவனவுங் கொள்ளப்படும் என்றவாறு [3]

இதனாற் சொல்லியது இருசீரடி முதலிய எல்லாவடிகளானு மூன்றடிச் சிறுமையாக ஏறிவரும் பாவினம் என்றவாறாம்.

பன்னிரண்டாவன ஆசிரியம் வஞ்சி வெண்பா கலியெனச் சொல்லப்பட்ட நான்கு பாவினோடுந் தாழிசைதுறை விருத்த-மென்னு மூன்றினத்தையும் உறழப் பன்னிரண்டாம். [4]

அவற்றுள் தாழிசையாவது:-ஆசிரியத்தாழிசை, வஞ்சித் தாழிசை, வெண்டாழிசை, கலித்தாழிசை என நான்காம்.

துறையாவது;-ஆசிரியத்துறை. வஞ்சித்துறை, வெண்டுறை, கலித்துறை என நான்காம்.

விருத்தமாவது:- ஆசிரிய விருத்தம், வஞ்சிவிருத்தம், வெளி-விருத்தம், கலிவிருத்தம் என நான்காம்.

அவற்றுள் ஆசிரியத் தாழிசையாவது மூன்றடி யொத்துவருவது.

---

1. இதன் முதலடியினை ஒருசூத்திரமாகவும் இரண்டாமடியினை மற்றொரு சூத்திரமாகவும் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

2. 'அடி' என்றது ஈண்டு நாற்சீரடியை. நிமிர்தலாவது நாற்சீரின் மிக்கு-வருதல்.

3. 'கிளவி' என்னுஞ்சொல் இங்குப் பாட்டு என்னும் பொருள்பட நின்றது. அடி இகந்து வருதலாவது. நாற்சீரடியின் வேறுபட்டு வருதல்.

4. நால்வகைப்பாக்களின் பாவுறுப்புடன் ஒத்த தன்மையவாய்த் தாழிசை துறை விருத்தம் என மூவகைப்படவருதலின் பண்ணத்தியெனப்படும். பாவினங்கள் பன்னிரண்டாயின என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

"நீடற்க வினையென்று நெஞ்சின் உள்ளி
நிறைமலர்சாந் தொடுபுகையும் நீரு மேந்தி
வீடற்குந் தன்மையின் விரைந்து சென்று
விண்ணோடு மண்ணிடை நண்ணும் பெற்றி
பாடற்கும் பணிதற்குந் தக்க தொல்சீர்ப்
பகவன்ற னடியிரண்டும் பணிது நாமே"

என வரும்.[1] (யாப். வி. ப உகூச)

அவ்வழி ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருவன சிறப்புடைத்தென ஒரு சாரார் உதாரணங் காட்டுமாறு:-

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன் வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ;

பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ;

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமேல் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ."

(சிலப். ஆய்ச்சி.)

இவை மூன்றடியான் மூன்றடுக்கிவந்த ஆசிரியத் தாழிசையென்றவாறு.

இவை அளவடியான் வருதலானும் ஒத்து மூன்றாகி-வருதலானும் இவ்வாசிரியர் மதத்தால் தரவின்றாகித் தாழிசை பெற்ற கொச்சக வொருபோ கெனப்படும். மேற்காட்டியதே ஆசிரியத்தாழிசை.[2]

இனி, வஞ்சித்தாழிசையாவது குறளடி நான்கினால் ஒரு-பொருள் மேன் மூன்றடுக்கி வரும்.[3]

1. மூன்றடி ஒத்து வருவது ஆசிரியத் தாழிசையெனப்படும்.

2. இவை மூன்றடியான் மூன்றடுக்கி அளவடியான்ஒத்து மூன்றாகிவரும் நிலையில் தொல்காப்பியனார் கொள்கைப்படித் தரவின்றாகித் தாழிசை பெற்ற கொச்சகவொருபோகெனக்கொள்ளப்படும். 'நீடற்கவினையென்று' என்ற முதற் குறிப்புடைய பாடலே பாவினத்துள் ஒன்றாய ஆசிரியத் தாழிசையாகும், என்பர் இளம்பூரணர்.

3. குறளடி நான்கினால் ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருவன வஞ்சித் தாழிசையாகும்.

"மடப்பிடியை மதவேழந்
தடக்கையால் வெயில் மறைக்கும்
இடைச்சுரம் இறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்;

இரும்பிடியை இகல்வேழம்
பெருங்கையால் வெயில்மறைக்கும்
அருஞ்சுரம் இறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்;

பேடையை இரும்போத்துத்
தோகையால் வெயில்மறைக்கும்
காடகம் இறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்" (யாப் வி. ப. ௩௯௯)

என வரும்.

அஃதேல் இவை மூன்றடுக்கி வருதலிற் கொச்சக வொருபோகாதல் வேண்டுமெனின், அளவடியான் வாராமையான் ஆகாதென்க.[1]

இனி, வெண்டாழிசையாவது மூன்றடியான் வந்து வெண்பாப்போல இறும். அது,

"நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்" (யாப். வி. ப. ௨௯௯)

என வரும்.

சிந்தியல் வெண்பா ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருவதனை வெள்ளொத்தாழிசை யென்ப. அது,

"அன்னாய் அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
ஒன்னார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
துன்னான் துறந்து விடல்;

ஏடி அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
கூடார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
நீடான் துறந்து விடல்;

1. 'மடப்பிடியை' 'இரும்பிடியை' 'பேடையை' எனவரும் இவை அளவடியான் வாராமையின் கொச்சகவொருபோகு ஆகாவாயின என்பர் இளம்பூரணர்.

பாவாய் அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
மேவார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
காவான் துறந்து விடல்'' (யாப். வி. ப. உசுசு)

என வரும்.

கலித்தாழிசையாவது அடிவரையின்றி ஒத்துவந்து ஈற்றடி சில சீர் மிக்குங் குறைந்தும் வருவது. அது,

''வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போழ்தின் எழால்வாழி வெண்திங்காள்
கேள்வரும் போழ்தின் எழாதாய்க் குறாஅலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்திங்காள்''
(யாப். வி. ப. நூ௰)

என வரும்.

இத்தாழிசை ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவரினுங் கொச்சக வொருபோ கெனப்படா; கலித்தாழிசை யெனப்படும், ஈற்றடி மிக்குவருதலான்.

இனி ஆசிரியத்துறையாவது நான்கடியாய் இடையிடை சீர் குறைந்து வரும் அது,

''கரைபொரு கான்யாற்றங் கல்லதர் எம்உள்ளி வருதிராயின்
அரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக
நரையுருமே றுங்கை வேலஞ்சு நும்மை
வரையர மங்கையர் வெளவுதல் அஞ்சுதும் வாரலையோ''
(யாப். வி ப. உகூரு)

என வரும்.

வஞ்சித்துறையாவது குறளடி நான்கினால் தனித்துவரும். அது,

''முல்லைவாய் முறுவலித்தன
கொல்லைவாய்க் குருந்தீன்றன
மல்லல்வான் மழைமுழங்கின
செல்வர்தேர் வரவுகாண்குமே'' (யாப். வி. ப. நூசுக)

என வரும்.

இனி, வெண்டுறையாவது மூன்றடிச் சிறுமையாக ஏழடிப் பெருமையாக வந்து இறுதியடிகளில் சில சீர் குறைந்துவரும்.

"குழலிசைய வண்டினங்கள் கோளிலைய செங்காந்தட்
குலைமேற் பாய
அழலெரியின் மூழ்கினவால் அந்தோ வளியவென் றயல்வாழ்
மந்தி
கலுழ்வனபோல் நெஞ்சயர்ந்து கல்லருவி தூஉம்
நிழல்வரை நன்னாடன் நீப்பனோ அல்லன்"
(யாப். வி. ப. உ௪௯)

என வரும்.

பிறவும் வந்தவழிக் காண்க.

கலித்துறையாவது நெடிலடி நான்கினான் வருவது.

அஃதாவது. ஐஞ்சீரான் வருவதும், பதினாறும் பதினேழும் எழுத்துப்பெற்று நான்கடியான் வருவனவுமாம்.

யானுந் தோழியும் ஆயமும் ஆடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளுங் கைதையும் எல்லாங் கரியன்றே"
(யாப். வி. ப. ௩௩உ)

"நல்லார் பழிப்பில் எழிற்செம் பவளத்தை நாணநின்ற
பொல்லா முகத்தெங்கள் போதக மேபுர மூன்றெரித்த
வில்லான் அளித்த விநாயக னேயென்று மெய்ம்மகிழ
வல்லார் மனத்தன்றி மாட்டாள் இருக்க
மலர்த்திருவே."
(மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை.உ0)

இது நேரசை முதலாகிப் பதினாறெழுத்தான் வந்தது.

"கனிய நினைவொடு நாடொறுங் காதல் செயுமடியார்க்
கினிய னவனொரு வின்னாங் கிலமெவ ரும்வணங்கப்
பனிவெண் பிறைநறுங் கொன்றைச் சடைப்பலி
தேரியற்கை
முனிவன் சிறுவன் பெருவெங்கொல் யானை
முகத்தவனே"
(மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை. ௯)

இது நிரையசை முதலாகிப் பதினேழெழுத்தான் வந்தது.

இனி, ஆசிரியவிருத்தமாவது அறுசீரடி முதலாகிய மிக்க அடியினான் நான்கடியு மொத்துவரும். அது

"இரைக்கும் அஞ்சிறைப் பறவைகள் எனப்பெயர்
இனவண்டு புடைசூழ
நுரைக்க ளென்னுமக் குழம்புகொண் டெதிர்ந்தெழ
நுடங்கிய விலயத்தால்
திரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத்
திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடற் றிரையொடு
பொருதல தவியாதே"

(சூளாமணி. கல்யாண. ௫௧)

என வரும்.

பிறவும் வந்தவழிக் காண்க.

இனி வஞ்சிவிருத்தமாவது முச்சீரடி நான்காகி வரும் அது

"இருது வேற்றுமை இன்மையால்
சுருதி மேற்றுறக் கத்தினோ
டரிது வேற்றுமை யாகவே
கருது வேல்தடங் கையினாய்"

(சூளாமணி. சீயவதை ௧௭0)

என வரும்.

இனி, வெளிவிருத்தமாவது நான்கடியானாயினும் மூன்றடி-யானாயினும் அடிதொறுந் தனிச்சொற் பெற்றுவரும். அது,

"ஆவா என்றே அஞ்சினர் ஆழ்ந்தார் - ஒருசாரார்
கூ கூ என்றே கூவிளி கொண்டார் - ஒருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தார் - ஒருசாரார்
ஏகீர் நாய்கீர் என்செய்தும் என்றார் - ஒருசாரார்

என வரும்.

இது நான்கடியான் வந்தது.

மூன்றடியான் வருவது வந்தவழிக் காண்க.

இனிக் கலிவிருத்தமாவது நாற்சீரடி நான்கினால் வரும்.

"தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
வேம்பழுத் தளித்தன சுளையும் வேரியம்
மாம்பழக் கனிகளு மறுத்தண் டீட்டமுந்
தாம்பழுத் துளசில தவள மாடமே"

என வரும். (சூளாமணி. நகர. ௩௬)

இவையெல்லாம் உரையிற்கோடல் என்பதனானும் பிறநூல் முடிந்தது தானுடம்படுத லென்பதனானுங் கொள்க.[1] (௬௭௫)

அடிநிமிர் கிளவி யீரா றாகும்.

**பேராசிரியம் :**

இதுவும் அது.

(இ-ள்) அப்பண்ணத்தியின் அடிப்பெருக்கங் கிளக்குங்காற் பன்னிரண்டாம் (எ-று).

---

1. மூன்றடியான் வந்து வெண்பாப்போல முடிவது வெண்டாழிசையாகும். சிந்தியல் வெண்பா ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவரின் வெள்ளொத்தாழிசை யென்பர்.

அடிவரையறையின்றிச் சிலசீர் மிக்குங்குறைந்தும் வருவது கலித்தாழிசை யெனப்படும். இத்தாழிசை ஒருபொருள் மேல் மூன்றடுக்கிவரினும் ஈற்றடிமிக்கு வருதலால் கொச்சகவொரு போகெனப்படா கலித்தாழிசையெனப்படும் என்றார் இளம்பூரணர்.

குறளடி நான்கினால் தனித்துவருவது வஞ்சித்துறையெனப்படும்.

மூன்றடிச் சிறுமையாக ஏழடிப்பெருமையாக வந்து இறுதியடிகளில் சில சீர் மிக்குங் குறைந்தும் வருவது வெண்டுறையாகும்.

நெடிலடி (ஐஞ்சீரடி) நான்கினால் வருவது கலித்துறையாகும்.

ஐஞ்சீரடி நான்கினால் வருவதனைக் கலித்துறையெனவும் நெடிலடிநான்காய் நேரசை முதலாகப் பதினாறெழுத்தும் நிரையசை முதலாகப் பதினேழெழுத்தும் பெற்று வருவதனைக் கட்டளைக்கலித்துறை யெனவும் வழங்குதல் மரபு.

அறுசீரடி முதலாகிய கழிநெடிலடியினால் நான்கடியும் அளவொத்துவருவது ஆசிரிய விருத்தம் ஆகும்.

முச்சீரடி நான்கினால் வருவது வஞ்சிவிருத்தம் ஆகும்.

நான்கடியினாலாவது மூன்றடியினாலாவது அடிதோறுந் தனிச்சொற்பெற்று வருவது வெளிவிருத்தமாகும்.

நாற்சீரடி நான்கினால் வருவது கலிவிருத்தம் எனப்படும்.

இவையெல்லாம் இரண்டெனத் தொடுத்தும் நான்கென வகுத்தும் ஆறென விரித்தும் கூறிய இயற்றமிழ்ப்பாக்களின் இலக்கணத்திற்சிதைந்து மேற்குறித்த பாக்களின் இயல்பினவாய் இசைத்திறத்திற் குரியவாகிவருதலின் பண்ணத்தி யெனப்படும் பாவினம் ஆயின என்பதும், பாவினம் பற்றிய இவ்விளக்கங்கள் உரையிற்கோடல் என்னும் உத்தியானும் பிறநூ ன்முடிந்தது தானுடம்படுதல் என்னும் உத்தியாலும் இவ்வியற்றமிழ் நூலில் இளம்பூரண அடிகளால் தந்துரைக்கப்பட்டன என்பதும் இங்கு உளங்கொளத் தக்கனவாகும்.

'பாட்டின் இயலபண்ணத்தி' எனத்தொல்காப்பியனார் ஓதுதலின் இயற்றமிழிற் கூறப்படும் பாட்டு வேறுஎன்பதும், அவற்றின் இயல்பினை ஒருவாற்றாற் பெற்றுவரும் இசைத்தமிழ்ப் பாட்டாகிய பண்ணத்தி வேறுஎன்பதும் இனிது புலனாதலறிக.

'ஆகும்' என்றதனாற் சிறுபான்மை அப்பன்னிரண்டடியின் ஏறியும் வரப்பெறுமென்பது.[1] 'ஈராறாகும்' என்றதனான் இது நெடுவெண்பாட்டாகி வருமெனவும் அதுபோல ஆறடியின் இழிந்து வாராதெனவுங் கொள்க.[2] (௧௮௬)

அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே.

**பேராசிரியம் :**

இதுவும் அது.

(இ-ள்) அது முழுதும் அடியாகி வராது இடையிடை ஒரோவடி பெற்று அல்லுழியெல்லாம் பரந்துபட்டு வரவும் பெறும் (எ-று).[3]

அவை, முற்காலத்துள்ளார் செய்யுளுட் காணாமையிற் காட்டாமாயினாம். இக்காலத்துள்ளனவேற் கண்டுகொள்க. இலக்கணம் உண்மையின் இலக்கியங் காணாமாயினும் அமையுமென்பது. (௧௮௭)

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ-ள்) பண்ணத்தி யென்னும் இசைத்தமிழ்ப் பாடல்களின் அடிப்பெருக்கம் பன்னிரண்டாகும். அவை நாற்சீரின் எல்லை-யினைக் கடந்து மிக்கும் குறைந்தும் வரினும் நீக்கப்படுதல் இல்லை எ-று.

---

1. அடிநிமிர்கிளவி-அடியின் பெருக்கம். எனவே ஈராறு என்னும் தொகை அடியளவினைக் குறித்ததாகக் கொண்டார் பேராசிரியர்.

2. நெடுவெண்பாட்டு - பஃறொடைவெண்பா. நெடுவெண்பாட்டு வடிவில் வரும் பண்ணத்தி ஆறடியிற் குறைந்து வாராது என்பதாம்.

3. அடியிகந்து வருதலாவது, பாட்டுமுழுவதும் அடியமைப்புப் பெற்று வாராது இடையிடையே அடியாம் உறுப்பினைப் பெற்றும் அல்லாதவிடங்களி-ளெல்லாம் அடிவரம்பினைக் கடந்து பரந்துபட்ட உரைத்தொடர்களாகியும் வருதல்.

அவ்வியல்புடைய பாடல்கள் முற்காலத்துள்ளார் செய்யுட்களிற்-காணப்படாமையின் இங்கு அவற்றுக்கு உதாரணம் காட்டப்பெறவில்லை. இக்காலத்துள்ளனவேல் அவற்றை இதற்குரிய உதாரணமாகக்கொள்க. அத்தகைய பாடல்களுக்குத் தொல்காப்பியமாகிய இந்நூலில் இலக்கணம் உண்மையால் இலக்கியங்காணாது போயினும் அவ்வாறு மீண்டும் படைத்துக்கொள்ளப்பெறின் இலக்கியமாக அமையும் என்பதாம்.

இதனால், இசைப்பாடல்களின் அடிப்பெருக்கம் பன்னிரண்டடி யெனவும், பாட்டு முழுவதும் உள்ள அடிகள் சீர்வகையால் ஒத்து வருதலின்றி மிக்கும் குறைந்தும் வருதலும் உண்டெனவும் கொள்ளப்படும். இனி, இச்சூத்திரத்திற்கு, "நாற்சீரடியின் மிக்கு வரும் பாட்டுப் பன்னிரண்டும் அவ்வழி அவ். வடியின் வேறுபட்டு வருவனவும் கொள்ளப்படும். எனப்பொருள் கொண்டு, "இதனாற் சொல்லியது, இருசீரடி முதலிய எல்லா அடிகளானும் மூன்றடிச் சிறுமையாக ஏறிவரும் பாவினம் என்றவாறு" எனவும், "பன்னிரண்டாவன: ஆசிரியம், வஞ்சி, வெண்பா கலி எனச் சொல்லப்பட்ட நான்கு பாவினோடும் தாழிசை' துறை, விருத்தம் என்னும் மூன்றினத்தையும் உறழப் பன்னிரண்டாம்" எனவும், இவையெல்லாம் 'உரையிற்கோடல்' என்பதனாலும் 'பிறநூன் முடிந்தது தானுடம்படுதல்' என்பதனாலும் கொள்க" எனவும் விளக்கங் கூறுவர் இளம்பூரணர். அவ்வாசிரியர் அடியிகந்து (நாற்சீரின்மிக்கு) வருவனவாகக் கூறிய பாவினங்கள் பன்னிரண்டனுள், வெள்ளொத்தாழிசை, கலித்தாழிசை என்பன பெரும்பாலும் நாற்சீரடியால் இயன்று வருதலாலும், கலிவிருத்தம் யாண்டும் நாற்சீரடியேயாய் வருதலாலும், அவை அவர் கருத்துப்படி அடிநிமிர்கிளவி யெனப்படா வாதலாலும், நான்கு பாவினோடும் தாழிசை துறை விருத்தம் என்னும் மூன்றனையும் உறழ்ந்து காணப் பாவினம் பன்னிரண்டாம் என்ற பாகுபாடு இச்சூத்திரத்தில் இடம்பெறாமையாலும், இங்குச் சொல்லப்பட்ட தாழிசை, துறை விருத்தம் என்னும் மூவினப் பெயர்களுள் 'தாழிசை' என்பது ஒன்றுமட்டுமே ஆசிரியர் தொல்காப்பியனாரால் கலிவுறுப்புக்களுள் ஒன்றாக வைத்துரைக்கப்படுவதன்றித் துறை, விருத்தம் என்பன செய்யுள் வகையாகத் தொல்காப்பியத்திற் குறிக்கப் படாமையாலும் இச்சூத்திரவுரையுள் இளம்பூரணர் வகுத்துக்காட்டிய பாவினப்பாகுபாடு ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்புடையதன்றென்பது நன்கு தெளியப்படும். அன்றியும் இசைத் தமிழ்ப் பாடல் வகையாகிய பண்ணத்தியினைத் தழுவிப் பிற்கால யாப்பிலக்கண நூலாசிரியர்களால் வகுத்துரைக்கப் பெற்றதே பாவினப் பாகுபாடென்பதும் அதனையே இளம்பூரணவடிகளும் பிறநூன் முடிந்தது தானுடம்படுதலாக உரையிற் கோடல் என்னும் உத்தியால் இங்கு விரித்துக் கூறியுள்ளார் என்பதும், பிற்கால யாப்பிலக்கண நூலார்

வகுத்துக் கூறிய பாவினப் பாகுபாடு அன்னோர் கருதுமாறு இயற்றமிழுக்குரியதன்றி இசைத்தமிழுக்கே யுரியதென்பதும் 'பண்ணத்தி யெனினும் பாவினம் எனினும் ஒக்கும்'' எனவரும் இளம்பூரணருரைத் தொடரால் நன்கு துணியப்படும்.

௭௪௬. கிளரியல் வகையிற் கிளந்தன தெரியின்
அளவியல் வகையே அனைவகைப் படுமே.

## இளம்பூரணம் :

என்—எனின். மேற்சொல்லப்பட்டன தொகுத்து உணர்த்து தல் நுதலிற்று.

(இ-ள்) ஈண்டுச் சொன்ன வகையினாற் சொல்லப்பட்டன வற்றை யாராயுங்காலத்து அவ்வியல்வகை யத்துணைப் பாகு படும் என்றவாறு.[1]

இதனாற் சொல்லியது செய்யுளாவது அடிவரை யுள்ளனவும் அடிவரை யில்லனவுமென இருவகைப்படுமென்பதூஉம் அடிவரை யுள்ளன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி எனவும்; தாழிசை, துறை, விருத்தமெனவும்; அடிவரையில்லன, நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்புமொழி என அறுவகைப் படுமென் பதூஉம் உணர்த்தியவாறு.

அஃதேல், மேல் 'அளவியல் வகையே அனைவகைப் படுமே' என்ற சூத்திர மிகையாதல் வேண்டுமெனின், அது பாவிற்கு அடி வரையறுத்துக் கூறப்பட்டது; இது செய்யுள் இனைத்தென வரையறுத்துணர்த்திற்று.[2] (௬௭௪)

## பேராசிரியம் :

இதுவும் மேலவற்றுக்கெல்லாம் புறனடை.

(இ-ள்). எடுத்தோதிய வகையாற் சொல்லியன ஆராயின் அளவியற் பகுதி அக்கூற்றதாம் (எ-று)[3]

---

1. கிளரியல் வகையாவது ஒன்றினொன்று கிளைத்துத் தோன்றி இயலும் கூறுபாடு. கிளந்தன-மேற்கூறப்பட்டன. தெரியின்-ஆராயின்.

2. இவ்வியலில், அளவியல் வகையே யனைவகைப் படுமே' என முன்னர் வந்த ௭௪௫-ஆம் சூத்திரம் பாவிற்கு அடிவரையறுத்துக் கூறியது. ௭௪௬ ஆம் சூத்திரமாகிய இது, எழுநிலத்தெழுந்த செய்யுள் இனைத்தென வரையறுத் துணர்த்திற்று.. ஆதலின் அது மிகையன்று என்பதாம்.

3. கிளரியல்வகை - எடுத்துக்கூறியவகை. கிளந்தன - கூறப்பட்டன. தெரிதல்-ஆராய்தல். அளவியல்வகை -அளவியலாகிய பகுதி. அனைவகைப்படும்- மேற்குறித்தவாறு இருகூற்றதாகும்.

எடுத்தோதிய வகையானென்பது நூலும் உரையும் நந்நான்கெனவும், பிசி இரண்டெனவும், முதுமொழியும் மந்திரமுங் கூற்றிடை வைத்த குறிப்பும் ஒரோவொன்றெனவுங் கூறிவந்த வகையான் அவற்றை இனைத்தென் றெண்ணி அளந்த பகுதியும் அளவியலேயா மாகலின் அவ்வளவியல் அடிவரையறை கூறிய வாற்றானும் அடி வரையறையிலவற்றுக்குக் கூறியவாற்றானும் இருவகைப்படும் அளவியலென்றவாறு[1] (கூஅச)

**ஆய்வுரை :**

இது, மேற்கூறப்பட்டனவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்) மேல் எடுத்துக் கூறிய வகையாற் சொல்லப்பட்டனவற்றை ஆராயின் அளவியலாகிய பகுதி மேற்குறித்த வகையினையுடையதாகும் எ-று.

மேற்குறித்த வகையென்றது, அடிவரையறையுடையதும் அடிவரையறையில்லாததும் ஆகிய இருவகையினை. இவ்வியலில் வரும் 'அளவியல் வகையே அனைவகைப் படுமே' என்னும் 156-ஆம் சூத்திரம் அடிவரையறையுடைய பாவிற்குக் கூறப்பட்ட அடிவரையாகிய அளவியலைத் தொகுத்துணர்த்துவதெனவும், 'கிளரியல் வகையிற் கிளந்தன தெரியின்' எனவரும் இச்சூத்திரம் எழுநிலத்தெழுந்த செய்யுள் இவையென வரையறுத்து உணர்த்துவதெனவும் எனவே இது கூறியது கூறலாகாதெனவும் இளம்பூரணர்தரும் விளக்கம் இங்கு மனங்கொளத் தகுவதாகும்.

**ளஎஎ** கைக்கிளை முதலா ஏழ்பெருந் திணையும்[2]
முதற்கிளந் தனவே முறையி னான.[3]

**இளம்பூரணம் :**

என் – எனின். நிறுத்தமுறையானே திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) திணையாவது கைக்கிளை முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் பெருந்திணை யென்பன. அவை முறைமையினான் மேற்சொல்லப்பட்டன என்றவாறு.

---

1. மேற்குறித்த அளவியல் அடிவரையறையுடைய பகுதியும் அடிவரையறையில்லாத பகுதியும் என இருவகைப்படும்.

2. 'எழுபெருந்திணையின்' எனவும்,

3. 'முறைநெறிவகையின்' எனவும் பாடங்கொள்வர் பேராசிரியரும். நச்சினார்க்கினியரும்.

முறைமையினாற் சொல்லுதலாவது, பாடாண்பாட்டினைக் கைக்கிளைப்புறமெனவும், வஞ்சியை முல்லைப்புறமெனவும், வெட்சியைக் குறிஞ்சிப்புறமெனவும், வாகையைப் பாலைப்புற மெனவும், உழிஞையை மருதப்புறமெனவும், தும்பையை நெய்தற் புறமெனவும், காஞ்சியைப் பெருந்திணைப்புறமெனவும் ஓதிய நெறி கொள்ளப்படும். இவ்வாறு கொள்ளவே பதினான்கு திணையும் ஏழாகி யடங்குமாயின.[1] (௧௭௭)

**பேராசிரியம் :**

இது, பதின்மூன்றாம் முறைமைக்கணின்ற திணையுறுப் புணர்த்து (313) கின்றது.

(இ - ள்) கைக்கிளைமுதற் பெருந்திணையிறுவாய் எழும் முன்னர்க் கிளக்கப்பட்டன. (எ-று.)

'முறைநெறி வகையான்' என்பது அவற்றுக்கு முறைமை யாற் புறமெனப்பட்ட வெட்சி முதல் பாடாண் பகுதியீறாகிய எழுபகுதியோடு மென்றவாறு. எனவே, அவற்றுக்குப் பொது வாகிய முறையாற் கரந்தையுள்ளிட்டுப் பதினைந்து திணையுள் ஒன்று செய்யுட்குறுப்பாகி வரல் வேண்டுமெனவும், முன்னோதிய வாறே கொள்ளப்படுமெனவுஞ் சொல்லினானாம்; இது சொல் லாக்கால் அவை வரினும் வரும், வாராதொழியவும் பெறுமென் பது படுமென்பது. இது மேல்வருகின்ற கைகோண் முதலியன வற்றுக்கும் ஒக்கும்.[2] (௧௮௫)

**நச்சினார்க்கினியம் :**

இது நிறுத்தமுறையே திணை யென்னும் உறுப்புக் கூறு-கின்றது.

(இ-ள்) கைக்கிளை திணையும் எ-து, கைக்கிளை முதலாக முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை-

---

1. கைக்கிளை முதலா ஏழ்பெருந்திணையும் அகத்திணையுமே இங்குக் கிளந்துரைத்தாராயினும் முறையே அவற்றின் புறமாகிய பாடாண், வஞ்சி, வெட்சி, வாகை, உழிஞை, தும்பை காஞ்சி யென்னும் புறத்திணையேழும் சேரப்-பதினான்கு திணையும் இங்குக்கூறிய எழுதிணையாயடங்கும் என்பதாம்.

2. அகமும் புறமுமாகிய திணையென்பன முன்னர்க்கூறப்பட்டனவாயினும்-செய்யுட்கு இன்றியமையாதவுறுப்பு இவையென இங்குக் கூறாக்கால் திணையுறுப்பு களாகிய அவை செய்யுளுள் வந்தாலும் வரலாம், வாராது போயினும் போகலாம் என்ற நிலையேற்படும். அதுபற்றியே திணையென்பது மீண்டும் கூறப்படுகிறது. இவ்விளக்கம் பின்னர்க்கூறப்படும் கைகோள் முதலிய உறுப்புக்களுக்கும் பொருந்தும் என்பதாம்.

யென்ற எழு நிலனும். முறை......வகையின் எ-து, அவற்றிற்கு முறைமை வழியாற் புறமென அடைத்த வெட்சிமுதற் பாடாண் பகுதி யீறாகிய எழுபகுதியோடே கூட்ட. முற்.....வே எ-து, முன்னர்க் கிளக்கப்பட்டனவேயாகச் செய்யுட் குறுப்பாய் நிற்கும். எ-று.

எனவே, அகமேழும் புறமேழும் அவ்விரண்டற்கும் பொது-வாகிய கரந்தை யொன்றுமாகப் பதினைந்தனுள் ஒன்று செய்யுட்குறுப்பாயல்லது வேறுறுப்பின் றென்றவாறாயிற்று.[1]

**ஆய்வுரை :**

இது திணையாமாறு இதுவென வுணர்த்துகின்றது. செய்யுட்குரிய உறுப்புக்களுள் ஒன்றாகிய திணையென்பது, செய்யுளிற் பாடப்பெறும் ஒழுகலாறுகளை அகமும் புறமும் எனப் பாகுபடுத்து அறிதற்குரிய கருவியாகும்.

(இ-ள்) கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை எனக் கைக்கிளை முதலாகப் பெருந்-திணை யீறாகவுள்ள ஏழு திணைகளும் முறையே மேற்சொல்லப்-பட்டன எ-று.

முறைமையினாற் சொல்லுதலாவது, பாடாண்திணை கைக்கிளைப்புறம், வஞ்சி முல்லைப்புறம், வெட்சி குறிஞ்சிப்புறம், வாகை பாலைப்புறம், உழிஞை மருதப்புறம், தும்பை நெய்தற்-புறம், காஞ்சி பெருந்திணைப்புறம் என முன்கூறிய வகையே கொள்ளுதல். இங்ஙனம் அகமும் புறமும் எனத்திணைகளை ஒன்று படுத்தவே பதினான்கு திணையும் ஏழு திணைகளாகி-யடங்கின.

௭௭அ காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்[2]
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்
றாங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு[3]
மறையென மொழிதல் மறையோர் ஆறே.

**இளம்பூரணம் :**

என்—எனின். கைகோள் வகையிற் களவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

1. பேராசிரியர் உரையைத் தழுவியது.
2. 'இடந்தலைப்பாடு, எனவும்,
3. 'சார்பொடு, எனவும் பாடங்கொள்வர் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும்

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்படலும் பாங்கற்கூட்டமும் தோழியிற் கூட்டமுமென்று சொல்லப்பட்ட நான்குவகையானும் அவற்றைச் சார்ந்துவருகின்ற கிளவியானும் வருவன களவென்று கூறுதல் வேதம் அறிவோர் நெறி என்றவாறு.[1]

இதனுள் களவென்னாது மறையென்றதனான் இது தீமை பயக்குங் களவன்மை கொள்க.[2]

இன் - ஆன் பொருள்பட வந்தது. ஒடு — எண். (௧௭௮)

**பேராசிரியம் :**

களவு கற்பென்பன காமத்திணையின் ஒழுகலாறு ஆகலான் ஆண்டுப் பரந்து பட்டனவெல்லாந் தொகுத்துக் கூறுகின்றான். அவை செய்யுட் குறுப்பாயடங்கலின், அவற்றுள் இது களவென்னுங் கைகோளுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) [1]காமப்புணர்ச்சியும், அது நிகழ்ந்தபின்னர் [2]இடந்தலைப்பாடும் அதற்குப் பின்னர்ப் [3]பாங்கற்குச் சொல்லி அவனாற் கூடுதலும், அதன்பின்னர்த் [4]தோழியைப் பின்னின்று குறைமுடித்துக் கோடலுமென அந் நாற்பகுதிக் கண்ணும் பொருந்திய சார்பினாற் களவொழுக்கம் இதுவென்று கருது மாற்றாற் செய்யுள் செய்தல் கந்திருவ வழக்கம் (எ-று).

---

1. காமப்புணர்ச்சி - இயற்கைப்புணர்ச்சி
இடந்தலைப்படல் - இடந்தலைப்பாடு
பாங்கொடுதழாஅல் - பாங்கற்கூட்டம்
தோழியிற்புணர்வு - தோழியிற்கூட்டம்.

2. மறை-களவொழுக்கம். களவு என்றசொல்லாற்குறிப்பிடாது 'மறை' எனக் குறிப்பிடுதலால் களவாகிய இவ்வொழுகலாறு ஐம்பெருங்குற்றங்களுள் ஒன்றாகிய களவு போன்று தீமை பயப்பதன்று என்பது புலனாம். ''களவென்னுஞ்சொற் கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமமென்னுஞ் சொற்கேட்டுக் காமந்தீதென்பதூஉ மன்று; மற்றவை நல்லவாமாறுமுண்டு; என்னை? ஒரு பெண்டாட்டி தமரோடு கலாய்த்து 'நஞ்சுண்டு சாவல்' என்னும் உள்ளத்தளாய், நஞ்சுகூட்டி வைத்து, 'விலக்குவாரில்லாத போழ்து உண்பல்' என்று நின்றவிடத்து, அருளுடையானொருவன் அதனைக்கண்டு அவளைக் காணாமே கொண்டுபோய் உகுத்திட்டான்; அவளும் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்றாள். அது காணாளாய்ச் சாக்காடு நீங்கினாள். அவளை அக்களவினான் உய்யக்கொண்டமையான் நல்லுழிச் செல்லுமென்பது. மற்று மிதுபோல்வன களவாகா; நன்மைபயக்குமென்பது'' எனவரும் இறையனார் களவியலுரையை யடியொற்றியது இளம்பூரணர் தரும் இவ்வுரைத் தொடராகும்.

கந்திருவ வழக்கம் மறையோ ரொழுகிய நெறியதுவாகலான் 'மறையோராறு' என்றானென்பது.[1] எனவென்பது, வினையெச்சம். எனவே, பாங்கனுந் தோழியும் உணர்ந்தவழியும் அது மறையோர் வழித்தென்றவாறு. காமப்புணர்ச்சி நிகழ்ந்தன்றி இடந்தலைப்பாடு நிகழாதெனவும் அவ்விடந்தலைப்பாடு பிற்பயத்தலரிதென்பது அவள் ஆயத்தோடுங் கூடிய கூட்டத் தான் அறிந்த தலைமகன் பாங்கனை உணர்த்தி அவனாற் குறை முடித்துக் கோடலுந் தன்வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யானாகலின் அதன்பின்னர்த் தோழியாற் குறைமுடித்துக் கோடலுமென இந்நான்கும் முறையான் நிகழுங் களவொழுக்கம்[2] (எ - று).

"வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலிதல்
ஆக்கஞ் செப்ப னாணுவரை யிறத்தல்
நோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை......" (தொல்-கள:9)

என்பனவும் கைகோ ளாகாவோவெனின்.... ஆகா; கைகோ ளென்பது ஒழுகலாறாகலான். அவை அவற்றுட் பிறந்த உள்ள நிகழ்ச்சி ஒன்றொன்றனிற் சிறந்து பெருகியக்கால் அவ்வப்பகுதி யாகுமெனக் கொள்க.

மற்றுக் **களவியலுள்**,

"ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் றன்வயிற்
பாங்கி னோரிற் குறிதலைப் பெயலும்
பாங்கிலன் றமியோ ளிடந்தலைப் படலும்"
(இறையனார் :3)

எனப் பாங்கற்கூட்டம் முற்கூறியதாலெனின்;— இது கைகோள் கூறிய இடமன்மையின் முற்கூறினும் அமையுமென்பது.

மற்று; இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமனைப் பாங்கன் கண்டு இவ்வேறுபாடு எற்றினா னாயிற்றென்று வினாவுமன்றே? அதனாற் பாங்கற்கூட்டம் நிகழ்ந்த பின்னரன்றி இடந்தலைப்

1. மறையோர் ஒழுகிய நெறி கந்தருவமாதலின் அது மறையோராறு எனப்பட்டது என்றார் பேராசிரியர். இங்கு மறை என்றது கந்தருவ வழக்கத்தைக் குறியாது களவொழுக்கத்தையே குறித்ததாதலின் இவ்விளக்கம் பொருத்த முடையதாகத் தெரியவில்லை.

2. இறையனார்களவியலுரை நோக்குக.

பாடு நிகழாதாம் பிறவெனின்,- அற்றன்று; யாழோர் கூட்டம் உலகிய லாகாதாதலான் இல்லதன்றாமாகவே உலகத்தார் நிறை யுடையாராகி மறை வெளிப்படாமல் ஒழுகுவாரும் மறைவெளிப் படுத்து விளம்பும் பாங்கனையுடையாரும், இல்லாதாருமெனப் பலவகையராதலின் வினாதல் ஒருதலையன்றென்பது: அல்லதூம் இடந்தலைப்பாடு நிகழாதாயினன்றே துணைவேண்டுமென்பது. என்னை? துணையின்றி நிகழுங் களவு சிறப்புடைத்தாகலானும் பாங்கன் கழறுமென்று அஞ்சி அவனை முந்துற மறைத்தொழு குமாகலானு மென்பது. களவொழுக்கமெல்லாம் இந்நான்கு வகையானும் அடங்கும். அவற்றுக்குச் செய்யுள்,

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே" (குறுந்: 2)

என்னும் பாட்டு இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்த செய்யுள்.

"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்
றிருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புகர்முக வேழத்தின்
றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ வல்ல நண்ணா
ராண்டலை மதில ராகவு முரசுகொண்
டோம்பரண் கடந்த வடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா லணங்கே"

என்பது, இடந்தலைப்பாடு. (நற்றிணை: 39)

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே" (குறுந்:58)

என்பது பாங்கற் கூட்டத்துக்கண் வந்தது.

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகி
னாண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
செவ்வரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே" (குறுந்: 222)

என்பது, தோழியிற் கூட்டம் பிறவும் அன்ன. (கஅசு)

**நச்சினார்க்கினியம்:**

இது முறையே கைகோட் செய்யுட் குறுப்பாமாறு கூறுகின்றது.

கைகோளாவன களவு கற்பு. அவைதாங் காமத்தின்கண் ணெழுதலான் அவற்றுட்பிறந்த வுள்ளநிகழ்ச்சி யிடைவிடாது மேற்சிறந்து பெருகி யகலாப்பகுதியெனக் கொள்க. அவற்றைத் தொகுத்தவை செய்யுட் குறுப்பென்றார்.

(இ-ள்) காமப் .....புணர்வும் எ-து இயற்கைப்புணர்ச்சியும் அதன் பின்ன ரிடந்தலைப்பாடும், அதன்பின்னர் அவன்வயிற் பாங்காகிய பாங்கற்குக் கூறி யவனாற் கூடுதலும், அதன்பின்னர் அவள்வயிற் பாங்காகிய தோழியை யிரந்து குறைமுடித்துக் கோடலும். என்று......சார்பொடு எ-து என்ற அந் நாற்பகுதிக் கண்ணும் பொருந்திய சார்பினால், மறை ... ... ராறே எ-து களவொழுக்கம் இதுவென்று பிறர்கருதச் செய்யுள் செய்தல் கந்திருவவழக்கம். எ-று.

கந்திருவர்க்கு மறையோர் ஓதிய நெறி அதுவாகலின் மறை யோராறென்றார். என வினையெச்சம். எனவே பாங்கனுந் தோழியு முணர்ந்துழியுங் களவென்றல் மறையோர்வழக்கு. எ-று.

இக்களவு இல்லதன்றி யுலகியலாதலின்[1] நிறையுடையார் மறைவெளிப்படாதொழுகலிற் றாமேசென்று இடந்தலைப்-

1. களவொழுக்கம் 'இல்லது இனியது நல்லதென்று புலவரால் நாட்டப்பட்டது' என்னும் இறையனார் களவியலுரையினை மறுத்து இஃது உலகியலின் உண்மையான ஒழுக்கமே என வற்புறுத்துவார் "இக்களவு இல்லதன்றி உலகியலாதலின்" என்றார் நச்சினார்க்கினியர். "யாழோர் கூட்டம் உலகியலாதலான் இல்லது அன்றாம்" எனவரும் பேராசிரியர் உரைத்தொடரும் இங்கு நினைத்தற்குரியதாகும்.

பாட்டிற் கூடுதலும், அது நிகழாவழியுங் கூட்டநிகழ்ந்து அவள் ஆயத்திடை நின்றவழியும் அவளருமையறிந்து பாங்கனை யுடம் படுத்திக் கூடுதலும் அவன் தோழியைப்போலக் கூட்டுந்-தன்மையிலனாதலிற் றோழியாற் கூடுதலுமென முறைமை கூறினார். களவு இந்நான்கு பகுதியானு மடங்கும்.

உ-ம். "கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை"

(குறுந்தொகை-கூஉ)

இது இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்தது.

"உறுதோறுயிர் ... ... தோள்" (திருக்குறள்-ககOகூ)

"சொல்லிற் செல்லெதிர் கொள்ளாய்"

(நற்றிணை நஅ)

'வேட்ட பொழுதின ... ... டோள்"

(திருக்குறள்-ககருO)

இவை களவியலிற்கண்டுகொள்க.

**ஆய்வுரை :**

இது களவும் கற்பும் என முன் வகைப்படுத்திய கைகோள் இரண்டனுள் களவாமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) காமப்புணர்ச்சி (இயற்கைப் புணர்ச்சி), இடந்-தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம் எனச் சொல்லப்பட்ட அந்நான்கு வகையாலும் அவற்றைச் சார்ந்து-வரும் கிளவியாலும் வருவன களவென்னும் கைகோள் எனக் கூறுதல் மறையுணர்ந்தோர் நெறியாகும் எ-று.

திணையொழுக்க வகையாகிய களவு, கற்பு என்னும் இப்பாகுபாட்டினை யுணரும் முறையிற் செய்யுள் செய்தல் கைகோள் என்னும் செய்யுளுறுப்பாகும். கைகோள் - களவும் கற்புமாகிய ஒழுகலாறு.

௱௭௯ மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலும்[1]
இவைமுத லாகிய இயனெறி திரியாது[2]
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்[3]
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே.

## இளம்பூரணம்:

என்—எனின். கைகோள்வகையிற் கற்பாகிய கைகோள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) களவொழுக்கம் வெளிப்படுதலுங் களவொழுக்க மின்றித் தமரானே பெறுதலுமென்று சொல்லப்பட்ட இவை முதலாகிய இயற்கை நெறியிற் றப்பாது மகிழ்தலும் புலத்தலும் ஊடலும் ஊடல் தீர்தலும் பிரிதலுமென்று சொல்லப்பட்ட இவற்றொடு கூடிவருவது கற்பென்று சொல்லப்படுவது என்றவாறு.

இயனெறி என்றதனாற் கரணத்தின் அமைதல் இன்றியமை யாதென்று கொள்க. (௧௭௯)

## பேராசிரியம்:

இது, கற்பென்னுங் கைகோளுணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும் அதன்பின் தமர் கொடுப்பத் தான் அவ்வகையாற் பெறுதலு மென்னும் இவ்விரண்டும் முதலாகிய வழக்குநெறி திரியாது மகிழ்ச்சியும் புலத்தலும் ஊடலும் உணர்தலு மென்னும் நான்குடன் பிரிவுளப்பட ஐந்தும் புணர்ந்தது கற்பென்னுங் கை கோளாம் (எ - று).

'இவை முதலாகிய' வென்றதனால்,

> "கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
> புணர்ந்துடன் போகிய காலை யான" (தொல்-கற்: 2)

என்றவழிக் கூடிய வதுவைபோல்வன கொள்க. அவைதாங் கற்பெனப்படுவதல்லது ஒழுகலாறெனப்படா; என்னை? இவ ரொழுக்கமன்றி வேள்வியாசான் முதலாயினார் செய்விக்கும்

---

1. மறை-களவு. தமரிற் பெறுதல்-சுற்றத்தாரால் மணஞ் செய்து கொடுக்கப் பெறுதல்.

2. 'இரு முதலாகிய' என்பது நச்சினார்க்கினியர் உரையிற் கண்ட பாடம்.

3, மலிவு-மகிழ்ச்சி. புலவி-காதலரிருவரிடையே சிறிதுநேரம் அன்பினால் நிகழும் பிணக்கம். ஊடல்-காலம் நீட்டித்து நிற்கும் பிணக்கம்.

ஒழுக்கமாகலான், அங்ஙனமாயினும் அவற்றையுங் கைகோளின் பாற் சார்த்தியுணரப்படுமென்றற்கு ஈண்டுக் கூறினானென்பது.[1]

இனிக் கூறும் ஐந்துந், தலைவனுந் தலைவியும் ஒழுகும் ஒழுகலாறெனவே படும். முன்னைய இரண்டும் போலப் பிறர் கொடுக்கப்பட்டன அல்லவென்பது.[2]

மலிதலென்பது, இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாய வற்றான் மகிழ்தல்.

புலவியென்பது புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறைபடா மற் காலங்கருதிக் கொண்டுய்ப்பதோர் உள்ள நிகழ்ச்சி.

ஊடலென்பது உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழி யானன்றிக் கூற்றுமொழியா னுரைப்பது.

அங்ஙனம் ஊடனிகழ்ந்தவழி அதற்கேதுவாகிய பொரு ளின்மை யுணர்வித்தல் உணர்வெனப்படும். இல்லது கடுத்த மயக்கந்தீர உணர்த்துதலால் உணர்த்துதலெனவும் அதனை உணர்தலால் உணர்வெனவும்படும்: புலவிக்காயின் உணர்த்தல் வேண்டா, அது குளிர்ப்பக் கூறலுந் தளிர்ப்ப முயங்கலும் முதலாயவற்றான் நீங்குதலின் அம்முறையானே கூறி அவற்றுப் பின் பிரிதல் கூறினான். அஃது இவை நான்கனோடும் வேறு படுதலின்: அதனை ஊடலோடு வைக்கவே அவ்வூடலிற் பிறந்த துனியும் பிரிவின்பாற் படுமென்பதூஉங் கொள்க; என்னை? காட்டக் காணாது கரந்து மாறுதலின்.[3] இவற்றுக்குச் செய்யுள்;

---

1, மறைவெளிப்படுதலும் தமரிற்பெறுதலும் ஆகியன தலைவன் தலைவி யென்னும் இவரொழுக் கமன்றிச் சுற்றத்தாரும் வேள்வியாசான் முதலாயினாரும் செய்விக்கும் ஒழுக்கமாயினும் அவற்றையும் காதலர் இருவர்க்குரிய ஒழுகலாற்றிற் சார்த்தியுணரப்படும் என்பதற்கு இவ்வியலிற்கூறினார் தொல்காப்பியனார்.

2. இனிக்கூறும் ஐந்தாவன: மலிவு, புலவி, ஊடல், உணர்தல், துனி என்பன. முன்னைய இரண்டாவன: மறை வெளிப்படுதல், தமரிற் பெறுதல்.

3. அதற்கு ஏதுவாகிய பொருள் இன்மை உணர்வித்தல் - தலைமகள் தன்னோடு ஊடுதற்குக் காரணமாகிய செயல்கள் தன்னால் நிகழ்த்தப்படவில்லை என்பதனைத் தலைமகள் மனங்கொள்ளும்படி த் தலைவன் தலைவிக்கு உணர்த்து தலும் தலைவி அதனை மனத்துட்கோடலும் உணர்வெனப்படும். புலவி- சிறுபிணக்கம்.

குளிர்ப்பக்கூறல்-தலைவியின் மனம் குளிரும்படி இன்னுரை மொழிதல். தளிர்ப்பமுயங்கல் -அவளது மேனியின் வாட்டம் தவிர்ந்து குளிர்ச்சியடைந்து பொலிவுபெறுமாறு அவளைத் தழுவிக்கொள்ளுதல். துனி என்பது ஊடலின்

"எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே" (அகம் 194)

என்பது மறைவெளிப்பாடு.

"தமர்தர-வோரிற் கூடி யுடன்புணர் கங்குல்" (அகம் 186)

என்பது தமரிற் பெறுதல்.

"கேள்கே டூன்ற" என்னும் (93) அகப்பாட்டினுள்

"நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே"

என்பது மலிதல்.

"நாணுக்கடுங் குரைய ளாகிப்
புலவி வெய்யள்யா முயங்குங் காலே"

என்பது புலவி.

"நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்வினாய் வாராமற் பெறுகற்பின்" (கலி-77)

என்பது ஊடல்.

"விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவும்
அரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்கவிந் தொழியுமென் புலவி" (கலி 75)

என்பது உணர்தல்.

"திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்" (கலி 86)

என்பது துனி. துனித்தலென்பது வெறுத்தல். அறுவகைப் பிரிவும் பிரிவெனவே அடங்கும். அவை மேற்காட்டப்பட்டன. (௬௭)

**நச்சினார்க்கினியம் :**

இது கற்பென்னுங் கைகோள்கூறுகின்றது.

---

(முன்பக்கத்தொடர்ச்சி)
முற்றிய பிணக்கம். தன்கண் தவறில்லை யென்பதற்குத் தலைவன் பல்வேறு காரணங்களைக் காட்டவும் அவன் தன்னைக் காணாதவாறு தலைமகள் அவன் முன்னின்றி இடம்பெயர்ந்து மறைதலின் பிரிவின் பாற்படும் என்றார் பேராசிரியர்.

(இ-ள்.) மறை......லும் எ-து மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும், தமர்கொடுப்பக் கரணவகையாற் பெறுதலும், இரு...து எ-து என்னும் இவ்விரண்டுமுதலிய ஆசான்முதலியோர் செய்விக்கும் வழக்குநெறி திரியாது. மலி தது எ-து மகிழ்ச்சியும், புலத்தலும், ஊடலும், உணர்த்தலும் நான்கும் பிரிவுளப்பட்ட ஐந்தும் புணர்ந்தது. கற் மே எ-து கற்பெனப்படும். எ-று.

மலிவு முதலிய வைந்துங் கைகோளின்பாற் சார்த்தித் தலைவனுந்தலைவியும் ஒழுகும் ஒழுகலாறெனவே படும். முன்னை மறைவெளிப்படுதலுந் தமரிற்பெறுதலுமென்னும் இரண்டும் பிறரோடு பட்ட வொழுகலாறெனப்படும். அவை ஆசான்முதலியோர் செய்வித்தலின். மலிதலென்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியு முதலியவற்றான் மகிழ்தல். புலவியென்பது புணர்ச்சியான்வந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங்கருதிக்கொண் டுய்ப்பதோர் உள்ளநிகழ்ச்சி ஊடலென்பது உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்புமொழியானன்றிக் கூற்றுமொழியா னுரைப்பது. அங்ஙனம் ஊடனிகழ்ந்தவழி யதற் கேதுவாகிய காரியமின்மை உணர்வித்தலெனப்படும். இல்லது நடுக்க மயக்கந்தீர[1] வுணர்த்துதலான் உணர்த்துத லெனவும் அதனை உணர்தலான் உணர்வெனவும் படும். புலவியாயி னுணர்த்தாது குளிர்ப்பக்கூறித் தளிர்ப்ப முயங்குதன் முதலியவற்றா னீங்கும். பிரிவு இந்நான்கற்கும் வேறுபடுதலிற் பின்வைத்தார். அதனை யூடலொடு வைப்பவே யவ்வூடலுட் பிறந்த துனியும் பிரிவின்பாற்படும். அது காட்டக் காணாது கரந்து மாறுதலின்.

(உ-ம்.) ''எம்மனை முந்துறத் தருமோ
தம்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே''
(அகம்-௧௧௫)

இது மறைவெளிப்பாடு.

''பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
வோரிற் கூடிய வுடன்புணர் கங்குல்''
(அகம்-௮௬)

என்பது தமரிற் பெறுதல்.

---

1. இவ்வுரைத்தொடரை 'இல்லது கடுத்த மயக்கந்தீர' எனப் பேராசிரியர் உரைநோக்கித் திருத்துக. இல்லது கடுத்தலாவது தலைவன்பால் இல்லாத குற்றத்தை உள்ளதாகக்கொண்டு தலைவி ஐயுறுதல். அதனால் அவளதுள்ளத்து மயக்கம் தோன்றியது. அம்மயக்கந் தீரும் படிச் செய்தல் தலைவனது கடமையாயிற்று.

''விரிதிரைப் பெருங்கடல்'' (குறுந்-௩0௯)

இது மலிதல்.

''நாணுக் கடுங்குரைய ளாகிப்
புலவி வெய்யணா முயங்குங் காலே''

இது புலவிநோய்.

"நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்வினாய் வாராமை பெறுகற்பின்''
(கலி எஎ)

இஃது ஊடல்

''விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்கவிந் தொழியுமென் புலவி'' (கலி எரு)

இஃது உணர்தல்.

''திறனல்ல யான்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்'' (கலி-அ)

இது துனி. துனித்தல். வெறுத்தல். பிரிவெனவே ஆறுமடங்கும். அவை முன்னர்க் காட்டினாம்.

**ஆய்வுரை :**

இது, கற்பென்னும் கைகோளாமாறு கூறுகின்றது.

(இ-ள்) (ஒத்த அன்பினராகிய தலைவன் தலைவி இருவரும்) மறைந்தொழுகும் ஒழுகலாறாகிய களவு வெளிப்படுதலும், தலைவியின் சுற்றத்தார் கொடுப்பத் தலைவியைத் தலைவன் கரணவகையாற் பெறுதலும் என்று சொல்லப்பட்ட இவை முதலாகிய இயற்கை நெறியில் தவறாது மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு என்னும் இவற்றுடன் கூடி வருவது கற்பு என்னும் ஒழுகலாறாகும் எ-று.

மறை வெளிப்படுதலும் தமரிற் பெறுதலும் என முற்கூறிய இரண்டும் ஆசான் முதலியோர் செய்வித்தலின் பிறரொடுபட்ட ஒழுகலாறெனப்படும். மலிவு முதலிய ஐந்தும் கைகோளின்பாற் சார்த்தித் தலைவனும் தலைவியும் ஒழுகும் ஒழுகலாறெனவே கொள்ளப்படும். மலிதல் என்பது, இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாய மனைவாழ்க்கை நிகழ்ச்சிகளால் மகிழ்தல். புலவி என்பது, புணர்ச்சியால் வந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங்

கருதிக்கொண்டு உய்ப்பதோர் உள்ள நிகழ்ச்சி. ஊடல் என்பது, உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழியாலன்றிக் கூற்று மொழியால் உரைப்பது. உணர்வு என்பது, அங்ஙனம் ஊடல் நிகழ்ந்தவழி அதற்குக் காரணமாகிய நிகழ்வு எதுவும் இல்லையென்பதனைத் தலைவி உணரும்படிச் செய்தல். இல்லாததனை உண்டோ எனத் தலைவி ஐயுற்ற மயக்கந்தீரத் தலைவன் உணர்த்துதலால் உணர்த்துதல் எனவும், அதனைத் தலைவி உணர்தலால் உணர்வு எனவும் இது வழங்கப்படும் புலவியாயின் தலைவியது உள்ளங்குளிர இன்னுரை பகர்தலும் அவளது உடல் தளிர்ப்ப அணைத்தலும் முதலாயவற்றால் நீங்குதலின் புலவிக்கு உணர்த்துதல் வேண்டா என்பர். பிரிவு என்பது, இவை நான்கினோடும் வேறுபடுதலின் பிற்கூறினார். இதனை ஊடலொடு சேர்த்துக் கூறவே ஊடலிற் பிறந்த துனியும் பிரிவின்பாற்படு மென்று கொள்ளப்படும். துனித்தல் என்பது வெறுத்தல். அஃதாவது தலைவன் தன்பால் தவறின்மையினைப் பல்வேறு வகையினால் எடுத்துக்காட்டவும் அதனை ஏற்றுக் கொள்ளாது மறைந்து மாறும் இயல்பினதாகும். அறுவகைப் பிரிவும் பிரிவெனவே அடங்கும் என்பர் பேராசிரியர்.

எஅ௰ மெய்பெறும் அவையே[1] கைகோள் வகையே.

**இளம்பூரணம் :**

என் – எனின். மேற்சொல்லப்பட்டவற்றைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருள்பெற வந்த மேற்சொல்லப்பட்ட களவு கற்பென்னும் இருவகையே கைகோள் வகையாவன என்றவாறு.

ஏகாரந் தேற்றம். (அகO)

**பேராசிரியம்:**

இது, புறத்திணைக் கைகோ ளுணர்த்துகின்றது.

(இ-ள்.) பொருள்கள் பெற்ற கைகோட்பகுதி அகத்திணைக் கைகோளே (எ று).

1. 'மெய்பெறு வகையே' 'எனப் பேராசிரியரும்' 'மெய்பெறவவையே' என நச்சினார்க்கினியரும் பாடங் கொள்வர்.

மெய்பெறுதல் - பொருள்பெற வருதல், அவையென்றது களவுகற்பு என்னும் இரண்டினை. கைகோள்-ஒழுகலாறு.

கைகோளென்பது, ஒழுக்கங்கோடல்; எனவே, அகத்திற்குப் புறனாயினும் புறத்திணைக்குக் கைகோள் அவ்வாறு வேறு வகைப்படக் கூறப்படா; பொதுவகையானே மறைந்த ஒழுக்கமும் வெளிப்பாடுமென இரண்டாகி அடங்கும் அவையு மென்றவாறு. அவை வெட்சியுள்ளும் ஒழிந்த திணையுள்ளுங் காட்டப்பட்டன.[1]

(௯௮)

**நச்சினார்க்கினியம் :**

இது புறத்திணைக் கைகோள் கூறுகின்றது.

(இ-ள்). மெய்பெறக் கைகோள் வகை யவையே எ-து பொருள் பெறவரும் கைகோட்பகுதி அகத்திணைக் கைகோளே.[2] எ-று.

எனவே அகத்திற்குப் புறனாயினும் புறத்திணைக் கைகோள் அவ்வாறு வேறுவகைப்படக் கூறப்படா பொதுவகையானே மறைந்த வொழுக்கமும் வெளிப்பாடும் என இரண்டாய் அடங்கும். அவை எ-று. அவை வெட்சித் திணையுள்ளும், ஒழிந்த திணையுள்ளுங் காண்க.

---

1. புறத்திணை அகத்திற்குப் புறனாயினும் அவற்றுக்குக் கைகோள் வகைப் பட வேறு கூறப்படுதல் இல்லை. மறைந்த வொழுக்கம் வெட்சியெனவும் வெளிப்படு செயல் ஒழிந்த திணைகள் எனவும் இரண்டாகி அடங்கும்.

2. 'மெய்பெறும் அவையே கைகோள் வகையே' எனவரும் சூத்திரத்தை, 'மெய்பெறும் கைகோள் வகை அவையே' எனமொழிமாற்றிப் பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர். 'பொருள்பெறவரும்' என்னும் உரைப்பகுதியைக் கூர்ந்து நோக்குங்கால் 'மெய்பெறும்' என இளம்பூரணர் கொண்ட பாடமே நச்சினார்க்கினியரும் கொண்டார் என்பது நன்கு புலனாகும். ஆயினும் இச்சூத்திரம் பேராசிரியர் கருதுமாறு புறத்திணைக் கைகோள் கூறுவதாகக் கொண்டு, "பொருள் பெறவரும் கைகோட்பகுதி அகத்திணைக் கைகோளே" என உரைவரைந்துள்ளார். ஈண்டு 'அவை' என்னும் சுட்டுப்பெயர் முற்கூறிய களவும் கற்பும் ஆகிய அகத்திணைக் கைகோளைச் சுட்டிநின்றது. களவு கற்பு என்னும் இருவகை யொழுகலாறுகளும் முறையே காமப்புணர்ச்சி இடந்தலைப்பாடு முதலிய வகைகளையும் பெற்று வகைபட வருவன அகத்திணைக் கைகோளே எனப் பிரிநிலையேகாரத்தாற் கூறவே, "இவ்வகத்திணைகளின் புறனாகிய புறத்திணைக் கைகோள் இவ்வாறு பல வேறு வகைப்படக் கூறப்படா; பொதுவகையால் மறைந்த ஒழுகலாறும் வெளிப்பட்ட ஒழுகலாறும் என இரண்டாய் அடங்கும்" எனப் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் உய்த்துணர்ந்து பொருள் கூறியுள்ளமை கற்போர் மனங்கொளத் தகுவதாகும்.

**ஆய்வுரை :**

இது, மேற்சொல்லப்பட்டவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்) பொருள் பெற மேற்கூறப்பட்ட களவும் கற்பும் ஆகிய அவ்விரண்டுமே கைகோள் வகையாகும் எ-று.

எனவே "அகத்திற்குப் புறனாயினும், புறத்திணைக்குக் கைகோள் அவ்வாறு வேறு வகைப்படக் கூறப்படா. பொது வகையானே மறைந்த ஒழுக்கமும் வெளிப்பாடும் என இரண்டாகி யடங்கும்" என்றார் பேராசிரியர்.

௫௦௧ பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியோடு
அளவியல் மரபின் அறுவகை யோருங்
களவிற்[1] கிளவிக் குரியர் என்ப.

**இளம்பூரணம் :**

என்—எனின். இனிக்கூறப்படுவாரை உணர்த்துவார் களவின் கட் கூறுவாரை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) பார்ப்பான் முதலாகச் சொல்லப்பட்ட கலந் தொழுகு மரபினையுடைய அறுவகையோரும் களவொழுக்கக் கிளவி கூறுதற்குரியரென்றவாறு.[2]

ஓடு எண்ணின்கண் வந்தது. கலந்தொழுகு மரபென்றதனாற் பார்ப்பாரினும் பாங்கரினுஞ் சிலரே இதற் குடம்படுவாரென்று கொள்க.

பார்ப்பான் உயர்குலத்தானாகிய தோழன்.

பாங்கன் ஒத்த குலத்தானும் இழிந்த குலத்தானுமாகிய தோழன். (௬௫௧)

**பேராசிரியம் :**

இது, கூற்றென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) எண்ணப்பட்ட அறுவருங் களவொழுக்கினுள் (107) நிகழ்ந்தன கூறினாராகவல்லது ஒழிந்தோர், கூறினாராகச் செய்யுள் செய்யப்பெறார் (எ-று).

---

1. களவினிற் கிளவிக்குரியர், என்பதும் பாடம்.

2. அளவியல் மரபாவது, மனைவாழ்க்கையில் கணவன் மனைவி ஆகிய இருவரிடத்தும் அன்பினால் உரையாடிப் பழகும் இயல்பு.

களவொழுக்கத்திற் கூற்று நிகழ்த்தற்குரிய அறுவகையோருள் தலைவன்பால் அறிவுரிமை பூண்டொழுகும் தோழன் பார்ப்பான் எனவும், அன்புரிமை பூண்டொழுகுந் தோழன் பாங்கன் எனவும் கொள்ளுதல்ஏற்புடையதாகும்.

(¹)பார்ப்பானென்பான், நன்றுந் தீதும் ஆராய்ந்து உறுதி கூறுவா னெனப்படும். (²)பாங்க னென்பான் அவ்வாறன்றித் தலைமகன் வழிநின்றொழுகி வருமாகலின் அவனை அவன்பின் வைத்தான். (³)தோழி அவன் போன்றும் பெண்பாலாகலின் அவளைப் பின் வைத்தான். (⁴)செவிலிமாற்றஞ் சிறுவரவிற் றாதலின் அவளை அவளின்பின் வைத்தான். அவரிற் சிறந்தமையிற் சீர்த்தகு சிறப்பிற் (⁵)கிழவனையுங் (⁶)கிழத்தியையும் அவர்பின் வைத்தான். அவ்விருவருள்ளுந் தலைமகளது கூற்றே பெரு வரவினதாகலின் அவளை ஈற்றுக்கண் வைத்தானென்பது.[1]

உ-ம் "சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை

... — ...

தேருங்கா னும்மக னுமக்குமாங் கனையளே" (கலி:9)

என்பது, பார்ப்பான் கூற்று.

"காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்றா விளம்புன்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பேருந்தோ ளோயே" (குறுந்; 204)

என்பது, பாங்கன் கூற்று.

"ஏனல் காவ லிவளு மல்லள்
... ... ...
சொல்லு மாடுப கண்ணி னானே"

என்பது, தோழி கூற்று.

"பெயர்த்தெனன் முயங்கயான் வியர்த்தன னென்றனள்
... ...
ஆம்பன் மலரினும் தான்றண் ணியளே" (குறுந் ;84)

என்பது, செவிலி கூற்று.

"பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி" (அகம் :48)

என்பதும், அது.

1. களவிற்கூற்று நிகழ்த்தற்குரியராகக் கூறப்பட்ட அறுவரும் அன்பினால் உள்ளம் ஒன்றித் தம்முள் உடனுரையாடுதற்குரிய நட்பினர் என்பதுபுலப்படுத்துவார் 'அளவியல் மரபின் அறுவகையோர்' என்றார் ஆசிரியர்.

"கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
...
அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே"
(குறுந் ; 280)

என்பது, கிழவன் கூற்று.

"விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே" (அகம் ; 58)

என்பது, கிழத்தி கூற்று. பிறவும் அன்ன. (கஅசு)

**நச்சினார்க்கினியம்:**

இது கூற்றென்னு முறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்.) பார்ப்பான் முதலாகக் கிழவன் கிழத்தியோ-டெண்ணப்பட்ட கூற்றிற்கு எல்லையாக நடந்த முறைமையை-யுடைய அறுவருங் களவொழுக்கத்து நிகழ்ந்தன கூறினாராக வல்லது ஒழிந்தோராகச்[1] செய்யுள் செய்யப்பெறார். எ-று.

நன்றுந் தீது மாராய்ந்து உறுதிகூறுதலிற் பார்ப்பானை முற் கூறித் தலைவன்வழி நின்றொழுகும் பாங்கனைப் பிற்கூறினார். தோழி கூற்றிற் செவிலி கூற்றுச் சிறுபான்மை வருதலின் அதனைப் பின்வைத்தார். சிறப்புடையன பிற்கூறினார். அவ் விரண்டும் ஒன்றற்கொன்று சிறப்புடைமையு முணர்க.

உ-ம். "சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே" (கலி-கூ)

இது பார்ப்பான் கூற்று.

"காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
... ... ... ... தோளோயே" (குறுந். உளசு)

இது பாங்கன் கூற்று. ஏனைய முன்னர்க் காட்டினாம்.

**ஆய்வுரை :**

இது, நிறுத்த முறையானே 'கூற்று' என்னும் உறுப்புணர்த்தத்தொடங்கிக் களவினுள் கூற்று நிகழ்த்துதற் குரியாரைக் கூறுகின்றது.

---

1. 'ஒழிந்தோர் கூறினாராகச்' என்றிருத்தல் வேண்டும்.

(இ-ள்) பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி எனச் சொல்லப்பட்ட அன்பினால் அளவளாவும் மரபினையுடைய அறுவகையோரும் களவு என்னும் ஒழுகலாற்றிற் கூற்று நிகழ்த்துதற்கு உரியராவர் எ-று.

நன்றுந் தீதும் ஆராய்ந்து தலைமகற்கு உறுதி கூறுவான் பார்ப்பான் எனவும், அவ்வாறன்றித் தலைமகன்வழி ஒழுகுவான் பாங்கன் எனவும் இவ்விருவரிடையே யமைந்த வேறுபாட்டினைக் குறிப்பிடுவர் பேராசிரியர்.

௭அ௨ பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த அறுவரொடு[1] தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்.

**இளம்பூரணம் :**

என் – எனின். கற்பின்கட் கூறத்தகுவாரை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பாணன் முதலாகச் சொல்லப்பட்ட அறுவரும் மேற்சொல்லப்பட்ட பார்ப்பான் முதலிய அறுவருங்கூடப் பன்னிருவருங் கற்பின்கட் கூறுதற்குரியர் என்றவாறு[2]

---

1. 'கிளவியொடு' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

2. அன்புடையராய் மனைவாழ்க்கையில் ஈடுபட்டுள்ள எல்லோர்க்கும் அன்பினால் அறிவுரை பகர்ந்து நன்னெறிப் படுத்தும் அன்புடைய பெருமக்களே அறிவர் எனப் போற்றப் பெறுவர் என்பார். 'ஆணஞ்சான்ற அறிவர்' என அடை புணர்த்தோதினார் தொல்காப்பியனார்.

ஆணம்-அன்பு. 'ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி' எனவருங் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலில் ஆணம் என்பது நேயம் என்னும் இப்பொருளிற் பயின்றுள்ளமை காண்க.

யாவராலும் ஆதரித்துப் பாதுகாக்கத்தக்க கல்விச் சிறப்புடன் விளங்கியவனே பார்ப்பான் என்பது புலப்படுத்துவார் 'பேணுதகு சிறப்பிற் பார்ப்பான்' என்றார்.

மணம்புரிந்து மனையறம் நிகழ்த்தும் ஆணும் பெண்ணுமாகிய காதலர் இருவரிடையே வழிவழியாக நிலைபெற்றுவரும் கலங்கா நிலைமையாகிய ஒருமை வழிப்பட்ட மனத்திண்மையே கற்பு எனப்படும் என்பார் 'தொன்னெறி மரபிற் கற்பு' என்றார்.

களவிற்குரிய பாணன் முதலிய அறுவரோடு பார்ப்பான் முதலிய அறுவரும் கூடக் கற்பின்கண் கூற்று நிகழ்த்தற்குரிய வாயில்கள் பன்னிருவர் என்பதாம்.

'தொன்னெறி மரபிற் கற்பு' என்றதனான் அவர் குலந்தோறுந் தொன்றுபட்டு வருகின்ற நெறியையுடைத்தென்று கொள்க. (௧அ௨)

**பேராசிரியம் :**

இதுவுமது.

(இ ள்.) இவ்வெண்ணப்பட்ட எல்லாருஞ் சொல்லியசொல்லாகச் செய்யுள் செய்யப்பெறுங் கற்பினுள் (எ-று).

'முன்னுறக் கிளந்த கிளவி' யென்பது, பொருணோக்கிற்று. இசையின் பின்னரது நாடகமாகலிற் பாணன்பின் கூத்தனை வைத்தும், பெண்பாலாகலான் விறல்பட ஆடும் விறலியைக் கூத்தன்பின் வைத்தும், அவ்வினத்துப் பரத்தையரை அதன்பின் வைத்தும், பொருட்குச் சிறந்தாராகலின் நற்பொருள் உணரும் அறிவரை அவர்பின் வைத்தும், ஏதிலராகிய கண்டோரை அவர்க்குப்பின் வைத்துங் கூறினானென்பது. இவ்வாற்றான் இவரோடு முன்னர்க் களவொழுக்கத்திற் கூறிய அறுவருங் கூறப் பெறுவரென்றவாறு. 'தொன்னெறி மரபின்' என்றதனாற் பாகனுந் தூதனுங் கூறவும் அமையும். அவை புறப்பொருட்குச் சிறந்துவரும்;[1] அவற்றுக்குச் செய்யுள் :

*செல்வழி நல்யா ழிசையினென் பையெனக்*
*கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்நிறுத்*
*தவர்திறஞ் செல்கவெனக் கண்டனென் யானே"*

என்பது, பாணன் கூற்று. (அகம் 14)

*"ஆடலிற் பயன்றனை யென்னா தென்னுரை*
*யூடலிற் றெளிதல் வேண்டும்"*

என்பது, கூத்தன் கூற்று.

*"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து*
*... ... ... ...*
*நறுங்கண் ணியன்கொ னோகோ யானே"*

(நற்றிணை: 394)

என்னும் நற்றிணைப்பாட்டுக் கண்டோர் கூற்று.

---

1. கற்பியல் வாழ்விற் கூற்று நிகழ்த்தற்குரியராகத் தொல்காப்பியனார் குறித்த பன்னிருவரோடு பாகன், தூதன் என்போரும் கற்பியலில் ஓரோவழி கூற்று நிகழ்த்துதற் குரியரென்பதும் அவர்தம் கூற்றுப் புறப்பொருட்குச் சிறந்து வரும் என்பதும், இச்சூத்திரத்தில் 'தொன்னெறி மரபின் கற்பு' எனவரும் அடைமொழியாற்கொள்ளப்படும்.

"விதையர் கொன்ற முதையற் பூழி
... ... ...
மெல்லிறைப் பணைத்தோட் டுயிலமர்ந் தோயே"
(நற்றிணை: 121)

என்னும் நற்றிணைப்பாட்டுப் பாகன் கூற்று.

ஒழிந்தனவுங் கற்பியலுட் கூறியவாற்றான் அறிக. (௧௯௦)

**நச்சினார்க்கினியம் :**

இதுவுமது.

அவ்வெண்ணப்பட்ட வறுவரும் பார்ப்பார் முதலாக முற்கூறிய அறுவரோடேகூடத் தொகுத்து இப்பன்னிருவருங் கூரிய கூற்றாகச் செய்யுள் செய்யப் பெறுங் கற்பினுள். எ-று.

கிளவியென்னுஞ்சொல் ஈண்டுப் பொருண்மேற்று.[1] இசைப் பின்னரது நாடகமாதலின்: பாணன்பின் கூத்தனும், பெண் பாலாகலின் விறல்பட ஆடும் விறலி அவர்பின்னும், அவ்வினத்துப் பரத்தை அவர்பின்னும், அகப்பொருட்குச் சிறவாமையின் அறம்பொருள்கூறும் அறிவர் அவர்பின்னும், ஏதிலாராகிய கண்டோர் அவர்பின்னும் வைத்தார். தொன்னெறிமரபின் என்றதனால், பாகனும் தூது கூறலு மமையும் அவை புறப்பொருட்குச் சிறந்தன.

''செவ்வழி நல்யா ழிசையினெனன் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத்
தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே''
(அகம்-௧௪)

இது பாணன் கூற்று.

---

1. 'முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇ' எனப்பேராசிரியர் உரையிற் காணப்படும் பாடத்தினையே நச்சினார்க்கினியரும் பாடமாகக் கொண்டார் என்பது இவ்வுரைத் தொடராற் புலனாகும். ஈண்டுக் 'கிளவி' என்பது 'சொல்' என்ற பொருளின்றி அச்சொல்லாற் குறிக்கப்படும் பொருளாகிய அறுவரையும் உணர்த்தியது என்பார், ''கிளவி யென்னுஞ்சொல் ஈண்டுப் பொருள் மேற்று'' என்றார். 'முன்னுறக்கிளந்தகிளவி' என்பதுபொருள் நோக்கிற்று' என இப்பாடத்திற்குப் பேராசிரியர் தரும் விளக்கம் இவ்வுரைத் தொடருடன் ஒப்பு நோக்குதற் குரியதாகும்.

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்
தலந்தலை ஞெமயத் திருந்த குடிஞை
பொன்செய் கொல்லனி னினிய தெளிர்ப்பப்
பெய்ம்மணி யார்க்கு மிழைகிளர் நெடுந்தேர்
வன்பான் முரம்பி னேமி யதிரச்
சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே
யிடைச்சுரத் தெழிலி யுறைத்தென மார்பிற்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுந்தண் ணியளா நோகோ யானே"

(நற்றிணை-ந௩௪)

இது கண்டோர் கூற்று.

"விதையர் கொன்ற முதையற் பூழி
யிடுமுறை நிரம்பிய வீரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை
யரலை யங்காட் டிரலையொடு வதியும்
புறவிற் றம்மநீ நயந்தோ ளூரே
யெல்லி விட்டன்று வேந்தெனச் சொல்லுபு
பரியல் வாழ்கநின் கண்ணி காண்வர
விரியுளைப் பொலிந்த வீங்குசெலற் கலிமா
வண்பரி தயங்க வேறித் தண்பெயல்
கான்யாற் றிடுமணற் கரைபிறக் கொழிய
வெல்விருந் தயரு மனைவி
மெல்லிறைப் பணைத்தோட் டுயின்மா போயே"

(நற்றிணை-௧௨௧)

இது பாகன் கூற்று. ஒழிந்தன கற்பியலுட் காண்க.

**ஆய்வுரை :**

இது, கற்பின்கண் கூற்று நிகழ்த்துதற்குரியாரைக் கூறுகின்றது.

(இ-ள்) பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அன்பு நிறைந்த அறிவர், கண்டோர், பேணிப் பாதுகாக்கத் தகும் சிறப்புடைய பார்ப்பான் முதலாக முன்னர்ச் சொல்லப்பட்ட அறுவரும் ஆக இப்பன்னிருவரும் தொன்று தொட்டுவரும் நெறிமுறைமையினையுடைய கற்பு என்னும் ஒழுகலாற்றின்கண் கூற்று நிகழ்த்துதற்கு உரியராவர் எ-று.

ஆணம் - நேயம்; அன்பு.

எ௮௩ ஊரும் அயலுஞ் சேரி யோரும்
நோய்மருங் கறிநருந் தந்தையுந் தன்ஐயும்
கொண்டெடுத்து மொழியப் படுத லல்லது
கூற்றவண் இன்மை யாப்புறத் தோன்றும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். மேற்சொல்லப்பட்ட இருவகைக் கை-கோளிற்கும் உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ ள்). ஊரிலுள்ளாருஞ் சேரியிலுள்ளாருஞ் அயன் மனையுள்ளாரும் நோய்ப்பக்கங் குறிப்பினா லறிவாருந் தந்தையுந் தமையனும் இருவகைக் கைகோளினும் பட்ட தனையுட்கொண்டு பிறிதொன்றை யெடுத்துமொழியினல்லது பட்டாங்குக் கூறுதலின்மை[1] வலியுறுத்தத் தோன்றும்[2] என்றவாறு.

எனவே, வலியில்வழிச் சிறுபான்மை நிகழவும் பெறும்.[3]

"எந்தையும்,
நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப
எவன்இல குறுமகள் இயங்குதி என்னும்" (அகம், ௧௨)

இது தந்தை யுட்கொண்டு கூறியது. பிறவுமன்ன. (௧௮௩)

**பேராசிரியம் :**

(இ-ள்.) இவ்வெண்ணப்பட்ட அறுவகையோருஞ் சொல்லிய சொல்லாகச் செய்யுள் செய்யப்பெறார் (எ-று.)

இவை, களவிற்குங் கற்பிற்கும் பொது. 'கொண்டெடுத்து மொழியப்படுதலல்ல' தென்பது இவர் கூற்றாகப் பிறர் சொல்லி னல்லது இவர்தாங் கூறாரென்றவாறு.[4] அவை.

---

1. 'கொண்டெடுத்துமொழியப்படுதல்' என்பதற்குத் தாம்சொல்லக்கருதி யதனைப் பட்டாங்கு வெளிப்படக்கூறாது அப்பொருள் குறிப்பிற்புலனாகப் பிறிதொன்றனையெடுத்துக் கூறுதல் என இளம்பூரணர் பொருள்கொண்டுள்ளார் என்பது இவ்வுரைப்பகுதியாற் புலனாம்.

2. 'வலியுற்றுத் தோன்றும்' ரா. இராகவையங்கார் பதிப்பிலுள்ளபாடம்.

3. 'எனவே-பெறும்' எனவரும் இத்தொடர், உரைக்கும் உதாரணத்திற்கும் தொடர்பற்ற நிலையில் இடையே கிடத்தலால் 'வலியுற்றுத்தோன்றும்' என்னும் உரைப்பகுதிக்கு விளக்கமாக ஏடெழுதுவோரால் பிற்காலத்திற் சேர்க்கப் பெற்றதெனக் கருதவேண்டி யுளது.

4. ஊர், அயல், சேரியோர், நோய்மருங்கறிநர், தந்தை, தன்னை என இங்கு எண்ணப்பட்ட அறுவரும் களவிலும் கற்பிலும் கூற்றுநிகழ்த்துவோராக இடம்பெறுதல் இல்லை. இவர்தம் கூற்றுக்கள் தோழி முதலிய பிறர்வாயிலாகக் கொண்டு எடுத்துக் கூறப்படுதல் உண்டு என்பதாம்.

"ஊஉ ரலரெழச் சேரி கல்லென
... ... ... ...
வானா தலைக்கு மறனி லன்னை" (குறுந். 262)

எனவும்,

"தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிச்
.........சாய்த்தார் தலை" (கலி: 39)

எனவும் வருவன போல்வன.

'யாப்புறத் தோன்றும்' என்றதனான் அகத்திணைக்கண் இவ்வாறு நிலைபெற்ற தென்பது; எனவே, புறத்திணைக்கண் அவர் கூறவும் பெறுமென்பது இது நோக்கிப்போலுங் கூறா தாரையுங் கூறுவாராயிற் றென்பது. 'நோய்மருங் கறிநரை' இடைவைத்தான் முன்னைய மூன்றும் பெண்பாலெனவும் ஒழிந் தன ஆண்பாலெனவும் அறிவித்தற்கென்பது. எனவே, நோய் மருங்கறிநர் பெண்பாலும் ஆண்பாலு மாயினாரென்பது.[1]

(௧௯௧)

**நச்சினார்க்கினியம் :**

இது பெரும்பான்மையுங் கூறப்படாதோரைக் கூறப்படு-கின்றது.

இது களவிற்கும் கற்பிற்கும் பொது.

உ-ம். "ஊ உரலரெழச் சேரி கல்லென
வானா தலைக்கு மறனி லன்னை" (குறுந்-௨௬௨)
"தெரிகண நோக்கிச் சிலைநோக்கிக்
......... சாய்த்தார் தலை" (கலி-௩௯)
"எந்தையு
நிலனுற ......... யென்னும்" (அகம்-௧௨)

என்றாற்போல்வன கொள்க.

"துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்"
(ஐங்குறு-௩௯௩)

இது அயலோர் கூற்றுச் சிறுபான்மை வந்தது. அகத்திணைக்-கண் இங்ஙனம் வருமெனவே புறத்திணைக்கண் அவர்கூறவும்

1. மேற்குறித்த அறுவருள் ஊர், அயல், சேரியோர் ஆகிய மூவரும் பெண் பாலார் எனவும் தந்தை, தன்னை என்னும் இருவரும் ஆண்பாலார் எனவும் அறிவித்தற்குப் பெண்பாலும் ஆண்பாலும் ஆயினாராகிய நோய்மருங்கறிநரை இடையே வைத்து எண்ணினார் ஆசிரியர்.

பெறுமென்பது. இது நோக்கிப் பெரும்பான்மை கூறாதாரையுங் கூறினார். முன்னைய மூன்றும் பெண்பாலும் நோய்மருங்கறிநர் இருபாலும், ஒழிந்தார் ஆண்பாலுமாமென்றுணர்க.[1]

**ஆய்வுரை :**

இஃது இவ்விருவகை யொழுகலாற்றிலும் கலந்து நின்று கூற்று நிகழ்த்துதற்கு உரியராகச் செய்யுளில் இடம்பெறா-தாரைத் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகள் வாழும் ஒரே ஊரில் வாழ்பவர்கள், அவளது அயல் வீட்டில் உள்ளவர்கள், அவளது தெருவில் உள்ளவர்கள், அவளது நோயின் கூறுபாட்டினைக் குறிப்பினால் அறிவோர், அவளுடைய தந்தை, தமையன் ஆகிய இன்னோர் கூற்றாகத் தோழி முதலியோர் கொண்டு கூறினல்லது இவர்கள் தாமே கூறினாராகச் செய்யுள் செய்தல் இல்லை எ-று

**ளஅச** கிழவன் தன்னொடுங் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது.

**இளம்பூரணம் :**

என் — எனின். நற்றாய்க்குரிய மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தலைவனொடுந் தலைவியொடும் நற்றாய்கூற்று நிரம்பத் தோன்றாது என்றவாறு[2]

எனவே, ஏனையோர்க்கே கூறும் என்றவாறாம். உதாரணம் வந்துழிக் காண்க. (கஅச)

**பேராசிரியம் :**

இஃது எய்தாத தெய்வித்தது; விலக்கியல் வகையால் விதித்ததெனவும் அமையும்.

(இ ள்) கிழவனோடுங் கிழத்தியோடும் இடையிட்டு நற்றாய் கூறுதல் நிரம்பத்தோன்றாது (எ-று).

'நற்றாய்' என்று ஒருமை கூறியவதனால் தலைமகள் தாயையே கொள்ளப்படும். இதனானே தந்தை தன்னைய-ரென்பன போல்வனவற்றுக்கும் இஃதொக்கும். 'முற்ற' வென்றதனால் தானே தலைவனாதலால் தலைவன் தமர்

1. பேராசிரியர் உரையைத் தழுவியமைந்தது.
2. முற்றத்தோன்றாது-அறவே தோன்றாது.

யாவருங் கூறார்; முற்கூறப்பட்டார். அல்லரென்பது கொள்க'[1] முற்றாதென்னாது 'தோன்றாது' என்றதனாற் புறத்திணைக்கண் இவை வரைவின்றி வழக்கினொடு பொருந்து மாற்றாற் கொள்ளப் படுமென்பது. 'கிழவன் றன்னொடும் கிழத்தி தன்னொடும் கூறாள்' எனவே, அல்லுழிச் சொல்லப்பெறும் நற்றாயென்பதாம்; அஃது,

> "எம்வெங் காம மியைவ தாயின்
> செறிந்த சேரிச் செம்மன் மூதூர்
> அறிந்த மாக்கட் டாகுக தில்ல
> ... ... .. ... ... ... ... ... .. ......
> மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே" (அகம்: 15)

எனவரும். (௨௬௧)

**நச்சினார்க்கினியம் :**

இஃது எய்தாததெய்துவித்தது.

(இ-ள்). கிழவனோடும் கிழத்தியோடும் இடையிட்டு நற்றாய் கூறுதல் நிரம்பத்தோன்றாது. எனவே அல்லுழிக் கூறப்பெறும் நற்றாயும். எ-று.

உ-ம். "செறிந்த சேரிச் செம்மன் மூதூ
ரறிந்த மாக்கட் டாகுக தில்ல" (அகம்-௧௫)

இது நற்றாய் அல்லுழிக்கூறியது. தாயென ஒருமையாற் கூறவே தலைவியுடைய நற்றாயாயிற்று. தந்தை தன்னையர்க்கும் இஃது ஒக்கும். முற்றவென்றதனால், தலைவன் றமர் யாவருங் கூறாரென வுணர்க. தோன்றா தென்றதனானே புறத்திணைக் கண் வரைவின்றி வழக்கிற்குப் பொருந்துமாறு கொள்க.[2]

**ஆய்வுரை :**

இது, நற்றாய்க்குரிய மரபு கூறுகின்றது.

(இ-ள்) தலைவனொடும் தலைவியொடும் (அவளைப் பெற்ற) நற்றாய் கூறியதாகக் கூறும் வழக்கம் இல்லை எ-று.

---

1. நற்றாய் என்றது, தலைமகள் தாயையே குறித்ததாதலின் தந்தை, தன்னை என்பனவும், தலைமகள் தந்தையையும் தன்னையரையும் குறித்தன. தலைமகன் தனதொழுகலாற்றுக்குத் தானே தலைவனாதலால் முற்கூறப்பட்டார் அவனுடைய தந்தை, தன்னை முதலிய சுற்றத்தாரல்லர் என்பது கொள்க என்பதாம்.

2. இதுவும் பேராசிரியர் உரையைத் தழுவியதே.

முற்றத்தோன்றாது - அறவே தோன்றாது. எனவே நற்றாய் தலைவனும் தலைவியும் அல்லாத செவிலி தோழி முதலியோரை நோக்கியே கூறுவாள் என்பது பெறப்படும்.

எஅரு ஒண்டொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.

## இளம்பூரணம் :

என்—எனின். கண்டோர்க்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஒண்டொடி மாதராவார் நற்றாயுந் தோழியுஞ் செவிலியும். இவரொடுந் தலைவனொடுந் தலைவியொடுங் கண்டோர் கூறுதல் காணப்பட்டது[1] என்றவாறு.

எனவே, ஏனையோர் கேட்பக்கூறிற்றில்லை என்றவாறாம்[2] (கஅரு)

## பேராசிரியம் :

(இ-ள்) தலைமகனோடும் தலைமகளோடும் இடைச்சுரத்துக் கண்டோர் மொழிதல் (40) அறியப்பட்டது (எ-று).

'ஒண்டொடி மாதர் கிழவன்' எனவே அவ்விருவர் கூட்டத்துக்கண்ணுமன்றி அவ்விருவரோடும் தனித்துக் கூற்றில்லையென்றவாறு[3] 'கண்டது' என்ற மிகையான் இடைச்சுரத்துக் கண்டோர் செவிலிக்குரைப்பனவுங் கொள்க. அவை,

"இளையண் மெல்லியண் மடந்தை
யரிய சேய பெருங்கான் யாறே" (சிற்றெட்டகம்)

எனவும்,

"அணித்தாத் தோன்றுவ தெம்மூர்
மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே"

எனவும் வரும்.

1. கண்டது-(உலகியலிற்) காணப்பட்டது.

2. கண்டோர் கூறுதல் காணப்பட்டது எனவே கண்டோர்கூற்று தலைவன் தலைவியல்லாத ஏனையோர்ா கேட்ப நிகழ்தலில்லை என்பதாம்.

3. 'ஒண்டொடி மாதர் கிழவன்' என்பதனை ஒருபெயராக்கி "ஒளிதங்கிய தொடியினை யணிந்தாளாகிய தலைவிக் குரியனாகிய தலைவன்" எனப் பேராசிரியர் பொருள் கொண்டார் என்பது 'இதனுள் ஒண்டொடி மாதர் கிழவன் எனச் செவ்வனந்தோன்றக் கூறியது தலைமகனை' எனவரும் அவருரையாற் புலனாம். கிழவன் கிழத்தியொடு, என அவ்விருவரையும் இணைத்துக் கூறுதலால், அவ்விருவரும் ஒருங்கிருந்த கூட்டத்துக்கண் அவ்விருவரையும் நோக்கியல்லது கண்டோர் அவருள் ஒருவரை நோக்கித் தனித்துக்கூறுதல் இல்லை என்பதாம்,

இதனுள், ஒண்டொடி மாதர் கிழவன் எனச் செவ்வனந் தோன்றக் கூறியது தலைமகனை யாதலின்,

"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலன சிலம்பே" (குறுந்: 7)

என்பது செவிலிக்குக் கண்டோர் கூறியது. (கூகூங)

**நச்சினார்க்கினியம்:**

இதுவுமது.

(இ-ள்.) ஒள்ளிய தொடியினையுடைய செவிலியோடும். தலைவனோடும், தலைவியோடும் இடைச்சுரத்துக் கண்டோர்-மொழிந்தன முதனூலிற் கண்டது. எ-று.[1]

ஒண்டொடிமாதரென்றார் செல்வச்சிறப்புடைமை தோன்ற. கண்டதென மிகைபடக்கூறியவதனால், தலைவி நடைமெலிந்து அசைந்தமை கண்டாரல்லது சேர்ந்தனை செல்லென்னார் என்றும் அவ்விருவர் கூட்டத்தன்றி, தனித்துழிக் கூறாரென்றுங் கொள்க உதாரணம் முற்காட்டினாம்

**ஆய்வுரை :**

இது. கண்டோர் கூற்று நிகழுமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஒள்ளிய தொடியினையணிந்த செவிலியோடும், தலைவனொடும் தலைவியொடும் வழியிடையே கண்டோர் உரையாடுதல் உலகியலிற் கண்ட வழக்கமாகும் என்பர் ஆசிரியர் எ-று.

ஒண்தொடி மாதர்-ஒள்ளிய தொடியினையணிந்த பெண்டிர்; என்றது நற்றாயையும் செவிலியையும் தோழியையும் என்பர் இளம்பூரணர். ஒண்டொடி மாதர் என்பதனைத் தலைவிக்கு அடைமொழியாகக் கொள்வர் பேராசிரியர். ஒண்டொடி மாதர் என்றது செவிலியை எனக்கொள்வர் நச்சினார்க்கினியர். கண்டோர்-வழியிடையே எதிர்ப்பட்டோர்.

---

1. ஒண்டொடி மாதராவார் நற்றாயும் தோழியும் செவிலியும் என்றார் இளம்பூரணர். நற்றாயும் தோழியும் தலைமகளைத் தேடிப் புறத்தே செல்லாராதலின் 'ஒண்டொடிமாதர், என்றது செவிலியையே யெனக்-கொண்டு நச்சினார்க்கினியர் எழுதிய இவ்வுரை முன்னிவருரையினும் சிறப்புடையதாக அமைந்துளது. 'கிழத்தியொடு' எனப் பின்னுள்ள ஒடுவுருபினை ஒண்டொடி மாதரொடு, கிழவனொடு என முன்னரும் விரித்துப் பொருள் வரையப்பட்டது.

௭௮௬. இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு
வழக்கியல் ஆணையிற் கிளத்தற்கும் உரியன்.

**இளம்பூரணம் :**

என்—எனின். இது தலைவற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தலைவியை யுடன்கொண்டுபோம் இடைச்சுரத்தின்கண் தலைவியைத் தலைவன் வழக்குநெறி யாணையானே கூறுதற்குரியன்[1] என்றவாறு.

உம்மை எதிர்மறை.[2] ஆணையென்பது ஆக்கினை. வடமொழித் திரிபு. மெல்லிய காம நிகழுமிடத்து ஆக்கினை கூறப்பெறானாயினும் அவ்விடத்து வேண்டுமென்பது எடுத்தோதப்பட்டது.[3]

உதாரணம்

"நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை
மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி
அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென்
நுமர்வரின் மறைகுவன் மாஅ யோளே"

(நற்றிணை. ௩௬௨)

என்பதனுட் கண்டுகொள்க.

மெல்லிய மகளிர்முன் வன்மை கூறலாகாமையின் இது வழுவமைத்தவாறு. (௧௮௬)

**பேராசிரியம் :**

இதுவும் கூற்றுவிகற்பமே கூறுகின்றது.

(இ-ள்.) இடைச்சுரத்து உடன்போகிய கிழத்தியொடும் கிழவன் நீதிநூல் வகையாற் கிளத்தற்கு முரியன் (எ-று).

---

1. 'கூறுதற்கும் உரியன்' என்றிருத்தல் வேண்டும்.

2. 'உம்மை எதிர்மறை' என்றமையால் கூறாமையே பெரும்பான்மை என்றாராயிற்று.

3. அன்புடைய தலைவியின் உள்ளத்திலே மலரினும் மென்மையினதாகிய காமவுணர்வு நிகழுமிடத்து வன்சொல்லாகிய ஆணைமொழியினைத் தான்கூறுதல் முறையன்றாயினும் அவளது மனக்கலக்கத்தினைப் போக்குதல்வேண்டி இவ்விடத்து வன்சொல்லாகிய ஆணைமொழியினைத் தலைவன் கூறுதற்கும் உரியன் என்பது இச்சூத்திரத்தால் எடுத்தோதப்பட்டது.

நீதிநூல் வகையாற் கிளத்தலென்பது கிழத்தி தன் தமர் இடைச்சுரத்துக்குக் கண்ணுறின் அவர் கேட்பத் தலைவிக்குச் சொல்லுவானாய் வழக்கியல் கூறுதலுமுரியனென்பது.' வழக்கிய லாணை' யென்றதனான் நீதிநூல் விதிபிறழக்கூறின் அஃது இராக்கதம் போன்று காட்டுமென்பது.[1] உம்மையாற் கிழத்தி-யோடு வழக்கிய லாணையானன்றி மருட்டிக்கூறவும் பெறு மென்பது.

"அழிவிலர் முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே" (நற்றிணை : 9)

என்பதனுள், 'வருந்தா தேகுமதி' யெனவே, 'வழிபடு தெய்வங் கட்கண்டால்' விடுவார் இல்லாததுபோல நின்னை விடுதல் எனக்கு அறனன்றெனக்கூறி மெல்லெனச் செல்கவென மருட்டிக் கூறியவாறு காண்க. (கூகூச)

**நச்சினார்க்கினியம் :-**

இதுவுங் கூற்றுவிகற்பங் கூறுகின்றது.

(இ—ள்). இடைச்சுரத்தி லுடன்போய்க் கிழத்தியொடுங் கிழவன் நீதி நூல்வழியாற் கிளத்தற்கும் உரியன். எ-று

---

1. வழக்கியல் -நீதிநூல். தலைமகளை உடன்போக்கில் அழைத்துச் செல்லுந்தலைவன். இடைச்சுரத்தே தலைமகளுடைய சுற்றத்தார் இடைமறித்த-வழி நீதிநூல்விதிபிறழக்கூறின் அச்செயல் இராக்கத மணமெனப்படு மாதலின் இடைமறித்தவழித் தலைமகளை நீதிநூல் விதியுடன் உரையாடி அழைத்துச்-செல்வன் என்பதாம், 'வழக்கிய லாணையிற் கிளத்தற்கும் உரியன்' என்ற வும்-மையால் அங்ஙனம் ஆணைகூறாது தலைமகளைத் தன் அன்பின் திறத்தால் வியந்து மருளும்படி இன்னுரை பகர்ந்து அழைத்துச் செல்லுதற்கும் உரியன் என்பதாம்,

அது தலைவி தமர் இடைச்சுரத்திற் கண்ணுறின் அவர்கேட்க அவட்குக் கூறுவானாய் வழக்கியல் கூறலும் உரியனென்க. நீதி-நூல் பிறழக்கூறின் இராக்கதமாம்.

உ-ம். "நுமர்வரி னோர்ப்பி னல்லது தமர்வரின்
முந்நீர் மண்டல முழுது மாற்றா
தெரிகணை விடுத்தலோ விலனே
யரிமதர் மழைக்கண் கலுழ்வகை யெவனே"[1]

உம்மையான் அவ்வாறன்றி மருட்டிக் கூறவும் பெறும்.

உ-ம். "அழிவிலர் முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வழித்தந் தீர.. மாறே" (நற்றிணை ௬)

இது தெய்வம்போல விடுந்தன்மையினை யல்லையென-மருட்டினான்.

**ஆய்வுரை :**

இது. தலைவற்குரியதோர் மரபு கூறுகின்றது.

(இ-ள்) தலைவியை உடன்கொண்டு போகும் இடைச்-சுரத்தின்கண்ணே தலைமகன் உலகியல் நெறியினை மனத்திற் கொண்டு தனது ஆற்றல் தோன்ற ஆணை மொழியினை எடுத்-துரைத்தற்கும் உரியன் எ-று.

'கிளத்தற்கும் உரியன்' எனவே, மெல்லிய காமம் நிகழு மிடத்து வன்மொழியாகிய ஆணையினைத் தலைமகளிடம் கூறுதல் ஏற்புடைத்தன்றாயினும் உலகியல் கருதித் தலைவன் அவ்வாறு ஆணை கூறுதல் தவறாகாது என அறிவுறுத்-தாராயிற்று.

௭௮௭. ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தின் எடுத்தே.

**இளம்பூரணம் :**

என்--எனின். இது தலைமகனுந் தலைமகளும் அல்லாதார்க் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. இது தலைவன் இடைச்சுரத்தில் உடன்போகிய தலைவியொடு வழக்கியலாணையாற் கூறியது.

(இ.ள்) தலைவனையுந் தலைவியையும் ஒழிந்த பதின்மரும்[1] அத் தலைவனொடுந் தலைவியொடுஞ் சொல்லிப்போந்த மரபினாற் சொல்லப்பெறுவர்; இடமுங் காலமுங் குறித்து என்றவாறு.

மொழிந்தாங்கு என்பதனை வழக்கியலாணை யெனினு மமையும். முன்னமாவது :—

"இவ்விடத் திம்மொழி இவரிவர்க் குரித்தென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது"

(தொல்-செய்யுளியல். ௬௬௬)

எடுத்தென்பது அறம்பொருளின்பங்கட்குத் தகாத சொற்களை யெடுத்துக்கூறுதல். அஃதாவது தலைவனைப்பார்ப்பானும் பாங்கனும் கழறலும், தோழி இயற்பழித்தலும், தலைவியைச் செவிலி யலைத்தலும், பாணர் கூத்தர் பாசறையிற் சென்று கூறுதலும், தோழி தலைமகனை வற்புறுத்தலும் முதலாயின. (௧அ௭)

**பேராசிரியம் :**

இதுவுங் கண்டோர் கூற்று.

(இ-ள்) மேலைச்சூத்திரத்துக் கூறிய தலைமகனையுந் தலைமகளையும் ஒழித்து ஒழிந்தோ ரெனப்படுவார் கண்டோரெனப் படுப. அவர் கூற்றுங் கிழவன் கிழத்தியொடு மொழிந்தாங்கு வழக்கியலாணை (506)யிற் கிளத்தற்கும் உரியர் என்பான் முன்னத்தினெடுத்துக் கூறுப என்றா னென்பது.

முன்னத்தி னெடுத்த லென்பது அதிகாரத்தான் அறநூற்குத் தக ஒத்தினானெடுத்துரைப்ப வென்றவாறு;[2] அவை,

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே

(கலி: 9)

என்றாற் போல்வன.

1. 'ஒழிந்தோர் என்பதற்குத் தலைவனையுந் தலைவியையும் ஒழிந்த பதின்மர்' என இளம்பூரணர் உரைவரைந்துள்ளார். வாயில்கள் பன்னிருவருள் இளம்பூரணர் குறித்த பதின்மர் இன்னாரென்பது தெளிவாகத் தெரியவில்லை.

2. முன்னத்தின் எடுத்தல் என்பது, முன்னைச் சூத்திரத்திற்கூறிய முறையானே வழக்கியலாணையாகிய நீதிநூல் விதியினை எடுத்துக் கூறுதல். முன்னம் என்றது ஈண்டு அறநூற்குறிப்பினை.

இவ்வாறு வழக்கி யலாணையாற் கிளவாது (40) வாளாதே அவரைக் கண்டனமெனவும் அவரின்னுழிப் புகுவரெனவுஞ் சொல்லுவன,

"கண்டோர் மொழிதல் கண்ட தென்ப"
(தொல்-செய்: 193)

என்புழிக் கூறினாம்.[1] (௧௫௩)

**நச்சினார்க்கினியம் :**

இதுவுங் கண்டோர் கூற்று.

(இ-ள்.) கண்டோர் கூறுங் கூற்றும் தலைவன் தலைவியொடு மொழிந்தாற்போல வழக்கியலாணையாற் கிளத்தற்குரியர். எ-று

தலைவனுந் தலைவியும் ஒழிந்தோரராவார் கண்டோர். அவர் வழக்கியலாணையாற் கிளத்தற்கு உரியர் என்பார் முன்னத்தி னெடுத்துக்கூறுப என்றார். அதிகாரத்தான் அறநூற் கருத்தான் உரைப்பரென்க.

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே"
(கலி. ௯)

எனவரும். இங்ஙனம் வழக்கிய லாணையாற் கிளவாதன "கண்டோர் மொழிதல் கண்டது" (அகத். ௪௦) என்பதனாற் கூறிற்று.

**ஆய்வுரை :**

இது, தலைவனும் தலைவியும் அல்லாத ஏனையோர்க்குரிய தோர் மரபுகூறுகின்றது.

(இ-ள்) தலைவனும் தலைவியும் அல்லாத ஏனைப் பதின் மரும் தலைவனும் தலைவியும் ஆகிய இருவரோடும் மேற்கூறிப் போந்த மரபினால் இடமுங் காலமுங் கருதி உரை நிகழ்த்து-தற்கு உரியராவர் எ-று.

முன்னத்தின் எடுத்து மொழிந்தாங்கு உரியர் என இயைத்துப் பொருள் கொள்க. முன்னம்—குறிப்பு.

---

1. "வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலன சிலம்பே,, (குறுந். 7)

எனச் செவிலிக்குக் கண்டோர் கூறியது முன்னைச் சூத்திரவுரையிற் காட்டப் பெற்றமையறிக.

2. பேராசிரியருரையைப் பின்பற்றியமைந்தது.

௪௮௮. மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே.[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவு மது.

(இ-ள்.) தலைவியுந் தலைவனுங் கூறக் கேட்போர் மேற் சொல்லப்பட்ட பதின்மரும் என்றவாறு.

இது முதலாகக் கேட்போரைக் கூறுகின்றது.[2] (௧௮௮)

**பேராசிரியம் :**

இது, கேட்போரென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) முன்னர்க் கூற்றிற்குரிய ரெனப்பட்ட பன்னிரு வருட் கேட்டற்குரியார் தலைமகனுந் தலைமகளும் ஒழித்து ஒழிந்த பதின்மரும் (எ-று).

அவர் கேட்பனவும் அவ்விருவர் கிளவியுமே யெனவுந் தத்தங்கிளவி கேளாரெனவுங் கூறியவாறு. 'மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியு மென்பதனை மேற்போயின கூற்றிற் குங் கூட்டியுரைக்க. உரைக்கவே கூறுவனவுங் கேட்பனவு மெல்லாம் அவ்விருவர் கிளவியுமே யெனவுந் தத்தங்கிளவி கூற வுங் கேட்கவும் பெறாரெனவுங் கூறியவாறாயிற்று[3] இங்ஙனம் விலக்கப்பட்டனவற்றுள் வேறுபட வருவனவும் மேற்கூறு கின்றாம். மற்றுக் கூற்றுக்கு உரியரெனப்படுவார், அவ்வயின் தலைவியுந் தலைவனுங் கூறக் கேளாரோ வெனின், அவை தங் கிளவியாகலின் தாங்கேட்டல் விதந்தோத வேண்டுவ தன் றென்பது.

'நினையுங்காலை' யென்றதனால் தலைமகள் சொல்லக் கேட் போருந் தலைமகன் சொல்லக் கேட்போருந் தலைவனுந்

---

1. 'அவர்' என்றது, மேற்குறித்த பதின்மரைச் சுட்டி நின்றது.

2. ௪௮௧ முதல் ௪௮௭ முடியவுள்ள சூத்திரங்களால் கூற்று நிகழ்த்துவோ ரியல்புரைத்த ஆசிரியர் ௪௮௮-ம் சூத்திரமுதலாகச் கேட்போரைக் கூறுகின்றார். எனவே இச்சூத்திரத்திற்கு 'இதுவுமது' என்னும் கருத்துரை பொருத்த முடைய தாகத் தோன்றவில்லை.

3. வாயில்கள் பன்னிருவருள் தலைவனும் தலைவியும் அல்லாத ஏனைய பதின்மரும் கேட்பன தலைவன் தலைவி யென்னும் இருவர் கூற்றுமே. எனவே அப் பதின்மருள் தம்முள் தாமே கேட்டார் என்பதுபடச் செய்யுள் செய்யப் பெறார் என்பதாம்.

தலைவியுந் தம்முட் கேட்டனவற்றுக் குரியனவும் ஆராய்ந்து கொள்ளப்படும். மேற்கூறிய வகையானென்பது; எனவே, தலை-மகன் கூறப் பரத்தை கேட்டலுந் தலைமகள் கூறப் பரத்தை கேட்டலும் முதலாயின புலனெறி வழக்கிற் கெய்தாதன விலக்கப்பட்டன.[1] ஒழிந்தனவற்றுட் சில வருமாறு:

"விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே" (அகம்:58)

என்னுந் தலைமகள் கூற்றுத் தலைமகன் கேட்டது.

"வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே" (நற்:9)

என்பது, தலைமகன் கூற்று, தலைமகள் கேட்டது.

"நின்கேள்,
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி" (கலி: 24)

எனவும்,

"மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண" (அகம்:4)

எனவும்,

"உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ" (அகம்:17)

எனவும்,

"ஒண்டா ரகலமு முண்ணுமோ பலியே" (குறுந்: 362)

எனவும்,

"எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ" (கலி: 42)

எனவும் இன்னோரன்னவெல்லாந் (1)தோழியும் (2)பாணனுஞ் (3)செவிலியுங் (4)கண்டோரும் (5)அறிவருங் கேட்பத் தலைமகள் கூற்று வந்தன. பிறவும் அன்ன.

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
... ... .. ...
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே" (குறுந்: 58)

எனவும்,

---

1. நினையுங்காலை - கூறுவோரும் கேட்போரும் ஆகிய இவ்விருதிறத்தார் தகுதியினையும் ஆராயுங்காலத்து, எனவே, தலைமகன் கூறப் பரத்தை கேட்டாள் என்றலும் தலைவி கூறப் பரத்தை கேட்டாள் என்றலும் எனத் தலைமைப் பண்பு சிதைய வருவன புலனெறிவழக்கிற்கு ஒவ்வாதன என விலக்கப்பட்டன என்பது பெறப்படும்.

"எலுவ சிறாஅ ரேம்முறு நண்ப
... ... ... ...
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றா லெம்மே"
(குறுந் :129)

எனவும்,

"ஊர்க பாக வொருவினை கழிய" (அகம்: 44)

எனவும்,

"பேரமர் மழைக்கணின் றோழி யுறீஇய
ஆரஞ ரெவ்வங் களையா யோவென"

எனவும்,

"சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்"
(கலி: 139)

எனவும் இவை (1)பார்ப்பானும் (2)பாங்கனும் (3)பாகனுந் (4)தோழியுங்(5)கண்டோரும் கேட்போராகத்தலைமகன் கூற்று நிகழ்ந்தன. பிறவும் அன்ன; இனி,

"ஒன்றித் தோன்றுந் தோழி" (தொல்-அகத் :39)

என்றமையின், தோழி கூற்றுந் தலைமகள் (225) கூற்றையா மென்பது. (௨௧௧)

**நச்சினார்க்கினியம்:**

இது கேட்போரென்னு முறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்). முன்னர்க் கூற்றிற்குரியர் என்ற பன்னிருவருள், தலைவி கிளவியையும் தலைவன் கிளவியையும் கேட்டற்குரியர் அவ்விருவரையும் ஒழிந்த பதின்மரும். எ-று.

மனையோள்கிளவியுங் கிழவன்கிளவியும் என்பதனை மேற் போயின கூற்றிற்கும் கூட்டுக. கூட்டவே, அவ்விருவர் கிளவி மேற்கூறுவனவும் கேட்பனவும் எனவும், தத்தம்கிளவி கூறவும் கேட்கவும் பெறாரெனவும் கூறியவாறாயிற்று. இங்ஙனம் விலக்கியவற்றுள் வேறுபட வருவன மேற்கூறுகின்றார். தத்தங் கிளவியைத் தம்மிற்றாம் கேட்ப ரென்றலை விதந்தோத வேண்டாமையின், தலைவனுந் தலைவியுங் கேட்ப ரென்னாரா யினார். நினையுங்காலை என்றதனால் தலைவனுந் தலைவியும் தனித்தனிக்கூற அவற்றைக் கேட்ட பதின்மரும் தாங் கேட்ட கூற்றிற்குச் செய்யத் தகுவன தம்மு ளாய்ந்து கோடற்கு உரியர் என்று கொள்க. எனவே தலைவன் கூறப் பரத்தை கேட்டலுந்

தலைவி கூறப் பரத்தை கேட்டனு முதலியவற்றுள், புலனெறி வழக்கிற்கு ஏலாதன விலக்கப்பட்டன.

உ-ம். "விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே"
(அகம். ௫அ)

இது தலைவி கூற்று. தலைவன் கேட்டது.

"வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே"
(நற்றிணை. க)

இது தலைவன் கூற்று. தலைவி கேட்டது.

"நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவென் றுடைத்தென வெண்ணி யதுதேர"
(கலி. ௨௬)

எனவும்,

"மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவன்கொல் பாண வென்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்"
(அகம் க௬)

எனவும்,

உயங்கின் றன்னையென் மெய்யன் றசைஇ"
(அகம் கஎ)

எனவும்,

"தண்டா ரகலமு முண்ணுமோ பலியே"
(குறுந். ௩௬௨)

எனவும், "எல்லீரும் என்செய்தீர் என்னை நகுதிரோ'
(கலி. க௬௨)

எனவும் இவை தோழியும் பாணனும் செவிலியும் அறிவருங் கேட்பத் தலைவி கூற்று வந்தன.

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக" (குறுந்தொகை. ௫அ)
எனவும்,

"எலுவ சிறாஅ ரேம்முறு நண்ப" (குறுந்தொகை. க௨)
எனவும்,

"ஊர்க பாக வொருவினை கழிய" (அகம். ௬௬)
எனவும்,

"பேரமர் மழைக்கண் ணின்றோழி செய்த
வாரஞர் வருத்தங் களையா யோவென"
எனவும்,

"சான்றவிர் வாழியோ சான்றவிர்" (கலி. ௬௯)
எனவும்,

இவை பார்ப்பானும் பாங்கனும் பாகனும் தோழியும் கண்டோரும் கேட்பத் தலைவன் கூற்று நிகழ்ந்தன.

"ஒன்றித் தோன்றும் தோழி மேன" (அகத்)

என்றலின், தோழிகூற்றும் தலைவி கூற்றேயாம்.[1]

**ஆய்வுரை :**

இது, கேட்போர் என்னும் உறுப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகள் கூற்றினையும் தலைமகன் கூற்றினையும் கேட்போர் யார் என நினையுங்கால் கூற்று நிகழ்த்தற் குரியராக முன்னர்க் கூறப்பட்ட பன்னிருவருள் தலைவன் தலைவியல்லாத ஏனைப் பதின்மரும் எ-று.

தலைவன் தலைவி இருவரும் ஒருவருக்கொருவர் கூறுவன தம் கூற்றேயாதலின் அக்கூற்றினைத் தாம் கேட்பர் என விதந்து கூறவேண்டிய இன்றியமையாமை யில்லை. கேட்போர் என்னும் உறுப்பாவது, இக்கூற்றினைக் கேட்போர் இன்னார் எனச் செய்யுளுட் புலப்பட நின்ற அமைப்பாகும்.

**௫அ௧.** **பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே.**

**இளம்பூரணம் :**

என்—எனின். பார்ப்பாரும் அறிவருங் கூறுங் கூற்றுக் கேட்போரை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பார்ப்பார் அறிவரென்று சொல்லப்பட்ட இருவர் கூற்றும் எல்லாருங் கேட்கப்பெறுவ ரென்றவாறு.[2] (௧அ௧)

**பேராசிரியம் :**

இதுவுமது.

(இ-ள்.) இது மேற்கூறிய பார்ப்பாரும் அறிவரும் கூறிய கூற்றுக் கேட்போரை இன்னாரென்று வரையப்படாது (எ-று)

---

1. இதுவும் பேராசிரியருரையினை யடியொற்றி யமைந்துளது.

2. பார்ப்பார் அறிவர் என்னும் இருவர் கூற்றுக்களையும் எல்லோருங் கேட்கப் பெறுவர் என்பதாம்.

என்றவழி, 'யார்க்கும்' என்றது அகத்திணையோர்க்கும் புறத்திணையோர்க்கு மென்றவாறு. 'யார்க்கும் வரையார், ரென்றதனை, எச்சப்படுத்துச் சிலர்க்கு வரையப்படுமென்பது கொள்க.[1] என்னை? பார்ப்பார் கூற்று, தலைமகனுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்பினல்லது பிறர் கேட்டற்கேலா. அறிவர் கூற்று, தலைமகளுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்டற்குரியர்.

புறத்திணைக்கண்ணும் பொதுவியற்கரந்தையோர்க்கும் (185) பார்ப்பார் கிளவி ஏலாவெனவும் அறிவர் கிளவி ஏற்குமென வும், பிறவு மின்னோரன்ன கொள்க.[2]

'யாப்பொடு புணர்ந்து' என்பது அகப்பொருளும் புறப் பொருளுமாக யாக்கப்படுஞ் செய்யுளெல்லாவற்றோடும் பொருந்து மென்றவாறு. இவர் கிளவி வரையப்படாதெனவே அவர் வாயிலாகிய வழித் தலைமகள் வாயின் மறுத்தலிலளென் பதூஉம் புறத்திணைத் தலைவர்க்கும் அவ்வாறே வழிநிற்றல் வேண்டுமென்பதூஉங் கூறியவாறாயிற்று; என்னை? அறிவரெ னப்படுவார் மூன்று காலமுந் தோன்ற நன்குணர்ந்தோரும் புலனன் குணர்ந்த புலமையோரு (647) மாகலானும், இனிப் பார்ப்பாரும் அவ்வாறே சிறப்புடையராகலானும்,[3] அவர்வழி நிற்றல் அவர்க்குக் கடனாகலானுமென்பது. (௯௯௭)

---

1. 'யார்க்கும் வரையார்' என்புழி முற்றும்மையை எச்சப்படுத்துச் 'சிலர்க்கு வரையப்படும்' எனக் கொண்டார் பேராசிரியர்.

2. பார்ப்பார் கூற்று அகத்திணை மாந்தருள் தலைமகனுஞ் செவிலியும் நற்றாயும் கேட்பினல்லது பிறர் கேட்டற்கு ஏலா எனவும், அறிவர் கூற்று தலைவியுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயும் கேட்டற்குரியர் எனவும், புறத்திணையிலும் பொதுவியற்கரந்தையோர்க்குப் பார்ப்பார் கிளவி ஏலாவெனவும் அறிவர் கிளவி ஏற்குமெனவும் பேராசிரியர் கூறும் வரையறை, சங்கவிலக்கிய மரபினையும், அதன்கண் கூறப்படும் பண்டைத் தமிழர் வாழ்வியலமைப்பினையும் அடிநொற்றி யமைந்தமை நுணுகி நோக்கத்தகுவதாகும். தமிழ் மக்களது அகத்திணை வாழ்விலும் புறத்திணை வாழ்விலும் முழுவதுங் கலவாது ஓரளவு ஒதுங்கி நிற்கும் அயன்மையாளராகப் பார்ப்பாரும், தமிழ் மக்களது அகவாழ்விலும் புறவாழ்விலும் நீக்கமின்றிக் கலந்து நின்று அவர்தம் வாழ்வினைச் செம்மை செய்யும் கடமையாளராக அறிவரும் குறிக்கப்பெற்றுள்ளமை பேராசிரியர் தரும் இவ்வுரை விளக்கத்தால் இனிது புலனாம்.

3. அறிவரது இயல்பினை விளக்கி அவர்வழி நிற்றல் அகத்திணை புறத்திணை மாந்தர் அனைவர்க்குரியகடமையாமெனவும், இனிப் பார்ப்பாரும் அவ்வாறே சிறப்புடையர் எனவும் பேராசிரியர் தரும் உரைவிளக்கம், முறையே 'ஆணஞ்சான்ற அறிவர்', 'பேணுதகு சிறப்பின்பார்ப்பான்' (செய்-௭௯௰)என

**நச்சினார்க்கினியம்:**

இதுவுமது.

(இ-ள்.) பார்ப்பாரும் அறிவரு மென்கின்ற இருவர்கூற்றும் அகமும் புறமுமாக யார்க்குஞ் செய்யு ளென்றவற்றோடும் பொருந்தி வருதலின் அகத்திணையோர்க்கும் புறத்திணை யோர்க்குங் கேட்டவை வரையார்.[1]
எ-று.

இனி வரையாரென்றதனை யெச்சப்படுத்துச்[2] சிலர்க்கு வரையப்படு மென்று கொள்க. அவை பார்ப்பார் கூற்றுந் தலைவனுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்பினல்லது பிறர்கேட்டற்கேலாமையும், இவர்[3] கூற்றுந் தலைவனுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்டற்குரிமையும் புறத்திணைக்கண்ணும் பொதுவியற்கரந்தையோர்க்கும் பார்ப்பார் கிளவி யேலாது அறிவர் கிளவி யேற்குமென்றலும் பிறவுமாம். எனவே தலைவி அறிவர் வாயிலாயவழி மறாமையும் புறத்திணைத் தலைவர்க்கு

(முன்பக்கத் தொடர்ச்சி)

வரும் தொல்காப்பியனார் வாய்மொழியினை அடியொற்றி யமைந்துள்ளமை காணலாம். 'நாட்டுமக்கள் எல்லோரிடத்தும் நிறைந்த பேரன்புடையராய் அவர்களது நல்வாழ்வுக்குத் தமது அறிவின் திறத்தால் அரண்செய்து காக்கும் பெருமக்களே அறிவர் எனப்படுவர், என்பர் 'ஆணஞ்சான்ற அறிவர்' எனவும், இனிப்பார்ப்பார் எனப்படுவார், கல்வித்திறந்தால் நன்கு மதிக்கப்படும் பெருமையினராய்த் தாமே தம்மைப் பாதுகாத்துக்கொள்ளும் வன்மையின்றி, 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும் நும்மரண்சேர்மின்' (புறம்.) என்றாங்கு நாட்டுமக்களாற் பேணிக் காத்தற்குரிய இயல்பினர் என்பார் 'பேணுதகு சிறப்பிற்பார்ப்பான்' எனவும், தொல்காப்பியனார் கூறியுள்ளமை மேற்குறித்த பேராசிரியர் உரைவிளக்கத்திற்கு அரண்செய்வதாகும். ஆணம்-அன்பு.

1. பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி யாப்பொடு புணர்ந்து யார்க்கும் வரையார் - என இயைத்துப் பொருள் வரையப்பட்டது. எனவே ''பார்ப்பாரும் அறிவரும் என்ற இருவர் கூற்றும் அகமும் புறமுமாக யாக்கப்படுஞ் செய்யு ளெல்லாவற்றோடும் பொருந்தி வருதலின் அகத்திணையோர்க்கும் புறத்திணையோர்க்கும் கேட்டலை வரையார்''என இவ்வுரைப்பகுதி அமைந்திருத்தல் வேண்டும் என்பது நன்கு தெளியப்படும். யாப்பொடு புணர்ந்து - யாப்பொடு புணர்தலால்; செய்து என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம் ஈண்டு ஏதுப்பொருட்டாய் நின்றது. யார்க்கும்- அகத்திணையோர்க்கும் புறத்திணையோர்க்கும்.

2. 'யார்க்கும் வரையா ரென்றதனை' என்றிருத்தல் வேண்டும்.

3. 'அறிவர்கூற்று' என்றிருத்தல் வேண்டும்.

மவ்வாறே அவர்வழி[1] நிற்றல்வேண்டு மென்பதூங் கூறிற்று. அறிவராவார் முக்காலமு முணர்ந்தோரும் புலநன்குணர்ந்த புலமையோரும். உ-ம். கூறியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காண்க.

**ஆய்வுரை :**

இது, பார்ப்பார், அறிவர் கூற்றினைக் கேட்போர் இன்னார் என்கின்றது.

(இ-ள்) பார்ப்பார், அறிவர் என்போர் கூறுங் கூற்று கேட்போர் இன்னார் என்று வரையப்படுதல் இல்லை. அகமும் புறமும் என யாக்கப்படும் செய்யுள் எல்லாவற்றொடும் பொருந்தும் எ-று

பார்ப்பார் அறிவர் என்னும் இவ்விருதிறத்தார் கூறும் கூற்றினையும் அகத்திணை மாந்தர், புறத்திணை மாந்தராகிய எல்லோருங் கேட்டற்குரியர் என்பதாம்.

**௫௧௰ பரத்தை வாயில் எனவிரு வீற்றுங்[2]**
**கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப் பயனிலவே.**

**இளம்பூரணம்:**

என்—எனின். இதுவு மொருசார் கூற்றிற்குரியா ரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). பரத்தையென்று சொல்லப்படும் வேறுபாட்டினும் வாயிலென்று சொல்லப்படும் வேறுபாட்டினுந் தலைமகளைச் சுட்டாத கூற்றுப் பயனில்லை என்றவாறு[3] (௧௧௦)

**பேராசிரியம் :**

இது, பயனில் கூற்றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள் ) பரத்தையும் வாயில்களுமென்னும் இரண்டு வேறு-பாட்டின்கண்ணும்[4] எழுந்த கிளவி கிழத்தி கேட்பாளாகக் கருதிச் சொல்லாக்காற் பயனில' (எ-று).

1. அவர்வழி - அறிவர்வழி

2. 'எனவிருகூற்றும்' என்பது பேராசிரியருரையிலுள்ள பாடம்.

3. பரத்தையிற்பிரிவு வாயில்களின் கூற்று என்னும் இரு நிலைமைக்கண்ணும் தலைமகளைக் குறிப்பிடாத உரையாடல்கள் பயனற்றன என்பதாம். கிளப்பு-கிளத்தல். கூறுதல்.

4. 'தம்முளும்' என்புழி உம்மை எதிர்மறையாதலால் கிழத்திகேட்கக்-கூறுதலே பெரும்பான்மை யெனவும் தம்முள் தாம்கேட்டல் சிறுபான்மை-யெனவும் கொள்க.

கிழத்தியைச் சுட்டுதலெனவே பாங்காயினார் கேட்பச் சொல்லினும் அமையுமென்பதாயிற்று.

"செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதிவ
ணுலமந்து வருகஞ் சென்மோ தோழீ"

(அகம்: 106)

என்றக்கால் தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக்கூறல் வேண்டுமென்பது. வாயில்களுந் தலைமகளை ஊடல் காப்ப அல்லது சொல்லாராகலான் தலைமகள் கேட்பாளாகச் சொல்ல வேண்டுமென்பது. 'சுட்டாக் கிளப்புப் பயனில' வென்றதனான் வாயில்கள் கூறுவனவுங் கிழத்திக்குப் பாங்காயின தோழி கேட்பச் சொல்லினும் அமையும். அவற்றுக்குச் செய்யுள்.

"ஒருயிர் மாத ராகலி னிவளுந்
தேரா துடன்றனள் மன்னே"

என்பது கிழத்தி கேட்ப வாயில்கள் கூறியது: தோழி கேட்பச் சொல்லியதூஉமாம். (௬௬௬)

**நச்சினார்க்கினியம் :**

இதுவுமது.

(இ-ள்). பரத்தையும் வாயில்களும் என்னும் இரண்டு வேறு பாட்டின் கண்ணும் கிழத்தி கேட்பாளாகக் கருதிக் கூறாத கூற்றுப் பயமில. எ-று.

கிழத்தியைச் சுட்டாவெனத்[1] தலைவி பாங்காயினார் கேட்பக் கூறுதலு மமையும்.

உ—ம். "செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதிவ
ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி"

இது தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது.[1] வாயில்களுந் தலைவி யூடல் தீரவே கூறவேண்டுதலின் அவள் கேட்பவே கூறுவாராயிற்று. இன்னு மதனானே தோழி கேட்ப வாயில்கள் கூறினு மமையும்.

உ—ம். "ஒருயிர் மாத ராகலி னிவளுந்
தேரா துடன்றனண் மன்னே"

இது வாயில்கள் கூறத் தலைவி கேட்டலின் தோழி கேட்டலுமாம்.

1. 'கிழத்தியைச் சுட்டாவெனவே' என்றிருத்தல் வேண்டும்.

**ஆய்வுரை :**

இஃது ஒருசாரார் தமக்குக் கூறிக்கொள்ளும் கூற்றுப் பயனற்றன என்கின்றது.

(இ-ள்) பரத்தையும் வாயில்களும் என்னும் இருவேறு நிலைமைக் கண்ணும் நிகழும் கூற்றுக்கள் தலைமகள் கேட்பாளாகக் கருதிச் சொல்லாக்கால் பயன்படுவன அல்ல எ-று.

கிளப்பு-கிளத்தல், கூறுதல்; ஈண்டுக் கூறப்படும் மொழிமேல் நின்றது. பரத்தையும் வாயில்களும் ஆகிய ஈரிடத்தும் நிகழும் உரையாடல்கள் கேட்பவள் தலைமகள் எனக்கருதிக் கூறாக்கால் பயனற்றவை எனவே அம்மொழி தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லின் பயனுடையவாம் என்பது பெறப்படும்.

**௯௲௧ வாயில் உசாவே தம்மு ளுரிய**[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். வாயில்கட்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வாயில்கள் உசாவுமிடத்துக் கிழத்தியைச் சுட்டாது தம்முள் உசாவுதலுரித்து என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க. (௧௬௧)

**பேராசிரியம் ;**

இதுவுமது.

(இ-ள்.) மேனின்ற அதிகாரத்தால் தலைமகளைச் சுட்டி ஒருவர்க் குரைப்பார்போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும், அவையுந் தலைமகள் கேட்பன (எ-று)

அதற்குச் செய்யுள் :

> "தண்ணந் துறைவன் கொடுமை
> நம்மு னாணிக் கரப்பா டும்மே" (குறு : 9)

என்பது, பாடினி பாணர்க்குரைத்தது. 'தம்முளும்' என்ற உம்மை

1. 'தம்முளுமுரிய' என்பது பேராசிரியர் கொண்டபாடம். உசாவுதல்-வினவியறிதல்.

எதிர்மறை யாகலான், கேட்குநர் அவரெனப்பட்டவாறன்றித் தம்முள் தாங் கேட்டல் சிறுபான்மை யெனக்கொள்க.[1] (௨௦௦)

**நச்சினார்க்கினியம் :**

இதுவுமது.

(இ-ள்). முற்கூறிய அதிகாரத்தாற் றலைவியைச் சுட்டி- யொருவரொருவர்க் குரைப்பார்போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும். எ-று.

அவையுந் தலைவிகேட்பவென[2]

"தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு ணாணிக் கரப்பா டும்மே" (குறுந். ௯)

இது பாடினி பாணர்க்குரைத்தது.

"மலரைப் பொறாவடி மானுந் தமியண்மன் னன்னொருவன்
பலரைப் பொறாதென் றிழிந்துநின் றாள்பள்ளி காமனெய்த
வலரைப் பொறாதென் றழல்விழித் தோனம் பலம்-வணங்காக்
கலரைப் பொறாச்சிறி யாளெண்ணை கொல்லோ கருதியதே"
(திருச்சிற்-௩௯௭)

இது போல்வன பிறவும் வாயில்கள் தம்முட்கூறின. உம்மை யெதிர்மறையாகலின் கேட்குந ரவரெனப்பட்டவரன்றித் தம்- முட் டாங்கேட்டல் சிறுபான்மையாம்.

**ஆய்வுரை :**

இது, வாயில்கட் குரியதோர் மரபு கூறுகின்றது.

(இ-ள்) பாணன் முதலாக முன்னர்க் கூறப்பட்ட வாயில்கள் தம்முள் உரையாடுமிடத்துத் தலைமகளை நோக்கிக் கூறாது தமக்குள் உரையாடிக் கேட்டலும் உரிய எ-று.

1. 'கேட்போர்' என்னும் உறுப்புணர்த்தும் இச்சூத்திரத்தில் 'சொல்லுந போலவும்' எனவும் கூற்று என்னும் உறுப்பினையும் உடன் கூறினார். கூறுந்திற மில்லாதன கூறுவனவாகக் கூற்றிற்குரிய என்பது மேற்கூறப்படாமையின் அதனையும் கேட்போர் என்னும் உறுப்புடன் இயைத்துக் கூறினார் ஆசிரியர் என்பதாம்.

2. "வாயில்கள் தம்முட் கூறவும் பெறும் அவையும் தலைவி கேட்ப- எ-று" என இத்தொடரைச் சூத்திரப்பொருளொடு கூட்டுக.

உதாரணம் பேராசிரியருரையிற் காண்க. உசாவுதல் - உரையாடுதல். 'தம்முளும்' என்புழி உம்மை எதிர்மறையால் தமக்குள்தாம் உரையாடுதல் சிறுபான்மை என்பதாம்.

௭௯௨. ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மானே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவு நுதலிய[1] நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்.

## இளம்பூரணம் :

என் எனின். இதுவுங் கேட்டற் பெருண்மைக்கண் வருவதோர் மரபு வழுவமைத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஞாயிறு முதலாக நெஞ்சு ஈறாகச் சொல்லப்பட்ட பதினொன்றும் அத்தன்மைய பிறவுமாகிய மக்களல்லாத பொருள்கள் தாங் கருதிய நெறியினானே சொல்லுவன போலவுங் கேட்குநபோலவுஞ் சொல்லியமையப்பெறும் என்றவாறு.

ஆங்கு - அசை.

"பழிதபு ஞாயிறே பாடறியா தார்கட்
கழியக் கதழ்வை யெனக்கேட்டு நின்னை
வழிபட் டிரக்குவேன் வந்தேனென் நெஞ்சம்
அழியத் துறந்தானைச் சீறுங்கால் என்னை
ஒழிய விடாதீமோ என்று." (கலித். ௧௪௩)

"மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி." (குறள். ௧௧௧௮)

"உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும் ஆயிடை"
(நற்றிணை. ௨௮௪)

1. 'நுவலிய' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்டபாடம்.

கானல்-கடற்கரைச்சோலை, புள்-பறவை. புலம்புறு பொழுது - தனிமைத் துயரை விளைக்கும் மாலைக்காலம்.

"நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டேர்
ஊர்ந்த வழிசிதைய ஊர்கின்ற ஓதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடும் அன்னமே
ஈர்ந்தண் துறையே இதுதகா தென்னீரே."

(சிலப். கானல்)

இதனுட் கடலுங் கானலும் புள்ளு மரனுங் கூறப்பட்டது.

"மாலைநீ,
தையெனக் கோவலர் தனிக்குழல் இசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தோம் பக்கம்பா ராட்டுவாய்."

(௧0௮)

"வருந்தினை வாழிய நெஞ்சே" (அகம். ௭௯)

பிறவு மென்றதனான்,

"மன்றப் பனைமேல் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டும் அறிதியோ
மென்தோள் ஞெகிழ்த்தான் தகையல்லால் யான் காணேன்
நன்றுதீ தென்று பிற" (கலித். ௧௨௪)

எனவும் இந்நிகரன கொள்க.

இத்துணையுங் கூறப்பட்டது கேட்போ ரியல்பு, (௧௯௨)

**பேராசிரியம் :**

இது, கேளாதென சில பொருள், கேட்பனவாகப் பொரு ளியலுள் (196) வழுவமைக்கப்பட்டனவற்றை இலக்கணவகை யாற் கூறுவனவும் கேட்குநவும் ஆகற்கண்ணும் ஆராய்கின்றா னென்பது.

(இ-ள்.) ஞாயிறுந் திங்களும் அறிவும் நாணுங் கடலுங் கானலும் விலங்கும் மரனும் பொழுதும் புள்ளும் நெஞ்சும் இன்னோரன்ன பிறவும் மேற் பொருளியலுள்,

*செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும், (தொல் பொரு:2)*

என்று பொதுவகையாற் கூறியவற்றான் அவைதாஞ் சொல்லு வன போலவுங் கேட்பன போலவுஞ் சொல்ல அமையும் (எ-று)

ஈண்டுக் கூற்றும் உடன் கூறினான் மேலிவற்றை வரையறுத்துக் கூற்றிற்கு உரிய வென்றில னாகலின்[1] புலம்புறு பொழுதென்பது மாலையும் யாமமும் எற்பாடும் காரும் கூதிரும் பனியும் இளவேனிலும் போல்வன. 'பிறவு' மென்றதனால் புல் புதல் முதலியன கொள்க. அவற்றுட் சில வருமாறு:

"கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ" (கலி:142)

என்றாற் போல்வன கண்டுகொள்க. (௨0௧)

**நச்சினார்க்கினியம் :**

இது கேட்போருங் கூற்றும் வேறுபட வருமாறு கூறுகின்றது. அவை பொருளியலுள் வழுவமைதி கூறுவனவுங் கேட்குநவுமாய் ஈண்டு வருதலின் ஆராய்கின்றார்.

(இ-ள்). ஞாயிறுமுதல்நெஞ்சீறாக் கூறியனவும் அவை போல்வன பிறவும் மேற் "செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" (பொருளியல்-௨) எனப் பொருளியலுட் பொதுவகையாற் கூறிய

---

1. காட்சி, ஐயம், துணிவு, புணர்ச்சி, நயப்பு, பிரிவு, பிரிவச்சம், வன்புறை எனத் தம்முள் தொடர்புடையனவாய் ஒத்த இலக்கணத்தன பலவும் ஓரிடத்துத் தொக்கு நிகழ்தற்கு இடனாயது காமப்புணர்ச்சியாதலின், வினைசெய் யிடமாகிய அஃது இயற்கைப் புணர்ச்சியென ஓரிடமாயிற்று. பாங்கற் கூட்டம் முதலிய-வற்றுக்கும் இவ்விளக்கம் ஒக்கும்.

'ஞாயிறு திங்கள்' என்னும் சூத்திரத்தின் பின்னர் அமையவேண்டிய இச்-சூத்திரம் பேராசிரியருரைப் பதிப்பில் 'பரத்தைவாயில்' என்னும் சூத்திரத்திற்கு முன் முறைபிறழ வைக்கப்பட்டுள்ளது. 'பரத்தைவாயில்', 'வாயிலுசாவே', 'ஞாயிறு திங்கள்' என்னும் முதற்குறிப்புடைய மூன்றும் கூற்று, கேட்போர் என்னும் செய்யுட்களைப் பற்றிய விதிகளாதலின், அவை கூறிமுடிந்த பின்னரே 'களன்' என்னும் உறுப்புப்பற்றிய சூத்திரம் அமைதல் முறை. அம்முறையிலேயே இளம்பூரணருரையிலும் நச்சினார்க்கினியருரையிலும் 'களன்' என்னும் உறுப்பு-ணர்ந்ததும் சூத்திரம் இடம் பெற்றிருத்தலால், அம்முறையே இப்பதிப்பிலும் மேற்கொள்ளப்பெற்றது.

"கேளாதன சிலபொருள் கேட்பனவாகப் பொருளியலுள் வழுவமைக்கப் பட்டனவற்றை இலக்கண வகையாற் கூறுவனவும் கேட்குநவும் ஆகற்கண்ணும் ஆராய்கின்றான்" என இச்சூத்திரத் திற்குப் பேராசிரியர் வரைந்துள்ள கருத்துரையின் துணைகொண்டு இவ்வுரைப்பகுதியின் பொருள் அறியற் பாலதாகும்.

வாற்றான் அவைதாங் கூறுவன போலவுங் கேட்பன போலவுங் கூறுமாறமையு மென்று கூறுவர் புலவர் எ-று.

கூற்றும் உடன்கூறினார் மேற்கூற்றிற்குரியன இவையென வரையறாமையின். பொழுதாவன: மாலையும், யாமமும், எற்பாடும், காரும்,கூதிரும், பனியும், இளவேனிலும் போல்வன. பிறவுமென்றதனால் புல்லும் புதலும் முதலியனவுங்கொள்க.

உ-ம். "கதிர்பகர் ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவையாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ" (கலி கூசஉ)

"வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போழ்தி னெழால்வாழி வெண்டிங்காள்"

"உறுதி தூக்கத் தூங்கிய வறிவே" (நற்றிணை-கூஅச)

"நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே"
(சிலப்-கானல்வரி)

"பொங்கிரு முந்நீ ரகமெலா நோக்குபு
திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயா
லெங்கே ளிதனகத் துள்வழிக் காட்டீமோ"
(கலி-கூசச)

"காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ
... ... ... ... மாலை (கலி-கஉ0)

"நீ காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே"
(கலி-கஉரு)

எனவரும். புள்ளெனவே வண்டு முதலியனவும் அடங்கும்.

"அம்மெ னிணர வடம்புகா ளன்னங்காள்"
(சிலப்-கானல்)

ஒழிந்தன வந்துழிக்காண்க.

**ஆய்வுரை :**

இது, கேட்டற் பொருண்மைக்கண் வருவதோர் மரபு வழு அமைக்கின்றது.

(இ ள்) ஞாயிறு, திங்கள், அறிவு, நாண், கடல், கானல், விலங்கு, மரம், என்பனவும் தனிமையுணர்வு மிகுதிப்படும் பொழுது, பறவை, நெஞ்சம் எனச் சொல்லப்பட்டனவும் ஆகிய பதினொன்றும் ஒன்றைக் கூறுதலும் கேட்டலும் இல்லாத அவை போல்வன பிறவும் தாம் கருதிய நெறியினால் ஒன்றைச் சொல்லுவன போலவும் கேட்பன போலவும் சொல்லி அமையப் பெறும் என்பர் புலவர் எ-று.

ஏகாரம் எண்ணுதற் பொருளில் இடையிட்டு வந்தமை காண்க.

கேளாதன சில பொருள்கள் கேட்பனவாகவும் மறுத்துரைப் பனவாகவும் செய்யுந் திறமில்லாதன செய்வனவாகவும் பொருளியலுள் வழுவமைக்கப்பட்டன. அவற்றுட் சில இலக்கண வகையாற் கூறுவனவும் கேட்பனவுமாகச் செய்யுள் செய்தலும் புலனெறி வழக்கமாம் என்பதுணர்த்துவார். 'நுதலிய நெறியாற் சொல்லுந போலவும் கேட்குந போலவும் சொல்லி யாங்கு அமையும்' என்மனார் புலவர் என்றார் ஆசிரியர். உதாரணம் முன்னுரைகளிற் காட்டப்பெற்றன.

**௭௬௫. ஒருநெறிப் பட்டாங் கோரியல் முடியுங்**
**கரும நிகழ்ச்சி இடமென மொழிப.**

**இளம்பூரணம் :**

என்—எனின். நிறுத்த முறையானே இடமாமாறு உணர்த்து தல் நுதலிற்று.

(இ-ள்.) ஒருவழிப்பட்டு ஓரியல்பாக முடியும் வினை நிகழ்ச்சி இடமென்று சொல்லுவர் என்றவாறு.[1]

நிகழ்ச்சி, நிகழ்ந்தவிடம்.

**ஒருநெறிப் படுதலாவது**—அகமாயினும் புறமாயினும் ஒரு பொருண்மேல் வருதல்.

**ஓரியல் முடிதலாவது**—அகத்தின்கட் களவென்றானும் கற் பென்றானும் அவற்றின் விரிவகையில் ஒன்றானும் பற்றி வருதல். புறத்தின்கண் நிரைகோடலானு மீட்டலானு மேற் செலவானும் எயில் வளைத்தலானும் யாதானுமோ ரியல்புபற்றி வருதல்.

1. அகப்புறம் என்பவற்றுள் ஒருபொருள்மேல் பொருந்தியதொரு நெறி யினைப் பற்றி யாதானும் ஒருசெயல் நிகழுங்கால் அதற்காகும் இடத்தோடும்கூட நிகழ்தலைப் புலப்படுத்தலே இடமென்னும் செய்யுளுறுப்பாம் என்றவாறு.

கரும நிகழ்தலாவது—அப்பொருளைப்பற்றி யாதானு மொரு வினை நிகழுமிடம் இன்னுங் கருமநிகழ்ச்சி என்றதனால் தன்மை முன்னிலை படர்க்கை யென்பனவுங் கொள்ளப்படும்

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை" (குறள் ௧௧௫௧)

என்றவழிப் பிரிவுப் பொருண்மை நிகழும் இடமாயிற்று. முன்னின்றானைக் கூறுதலின் முன்னிலை யென்னும் இடமாயிற்று

யாதானுமோர் கருமநிகழ்வுழி அதற்காகும் இடத்தொடுங் கூட நிகழ்தல் வேண்டுமென்று இப்பொருள் கூறப்பட்டது.

ஒருநெறிப்படாதும் ஓரியன் முடியாதும் வருமிடம் வழுவாம். அஃதாவது, தலைமகளொடு புணர்தல்வேண்டித் தோழியை யிரந்து குறையுறுவான் அவ்விடத்திற்குத் தக்கவுரை கூறாது தன்னாற்றலும் பிறவுங் கூறுதல்.

"மெல்லியல் நல்லாருள் மென்மை அதுவிறந்
தொன்னாருள் கூற்றுட்கும் உட்குடைமை யெல்லாஞ்
சலவருட் சாலச் சலமே நலவருள்
நன்மை வரம்பாய் விடல்." (நாலடி. ௧அஅ)

இதனானு மறிக. அன்றியும்,

"நெடும்புனலுள் வெல்லு முதலை அடும்புனலுள்
நீங்கி னதனைப் பிற" (குறள். ௪௯௫)

இதுவும் இடனறிதல்.

உண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரால்
எண்ணப் படவேண்டா தார்." (குறள். ௯௨௨)

இது தன்மையானையும் முன்னின்றானையும் ஒழித்துப் படர்க்கையானைத் தொழிற்படுத்துதல். உண்ணற்க வென்னும் படர்க்கைச்சொல் படர்க்கைப் பெயரொடு முடிந்தது. பிறவு மன்ன. (௪௧௩)

**பேராசிரியம் :**

இது, களனெனப்பட்ட உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) பலவும் ஒருவழிப்பட்டு ஓரிலக்கணத்தான் முடியுங் கருமநிகழ்ச்சியை இடமென்று கூறுப (எ-று).

இடமெனினுங் களமெனினும் ஒக்கும். ஒரு செய்யுட்கேட்டால் இஃது இன்னவிடத்து நிகழ்ந்ததென்று அறிதற்கேதுவாகியதோர் உறுப்பினை இடமென்றானென்பது. ஒரு நெறிப்படுதலென்பது, ஒருவழிப் பலவுந் தொகுதல்; ஓரியலென்பது அவற்றுக்கெல்லாம் இலக்கணமொன்றாதல்: அஃதாவது, காட்சியும் ஐயமுந் துணிவும் புணர்ச்சியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையுமென்று இன்னோரன்ன எல்லாம் ஒரு நெறிப்பட்டு இயற்கைப்புணர்ச்சி யென்னும் ஓரிலக்கணத்தான் முடியுமென்பது. கருமநிகழ்ச்சி யென்பது காமப்புணர்ச்சி யென்னுஞ் செயப்படு பொருணிகழ்ச்சி. அஃது இடமெனப்பட்டது.[1] இது வினைசெய்யிடம் நிலமாயின முன்னர்த் திணையெனப்பட்டது. காலம் முன்னர்ச் சொல்லுதும்

"எலுவ சிறாஅ ரேம்முறு நண்ப" (குறுந்:129)

என்னும் பாட்டும்,

"கேளிர் வழியோ கேளிர் நாளுமென்
னெஞ்சுபிணிக் கொண்ட வஞ்சில் லோதிப்
பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாக
மொருநாள் புணரப் புணரி
னரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே".
(குறுந்:280)

என்னும் பாட்டும் பாங்கற்கூட்டமே இடனாக ஒருவழிப்பட்டன; என்னை? நின் வேறுபாடு எற்றினா னாயிற்றென்று வினவிய பாங் கற்கு இதனினானாயிற்றென்று உரைத்ததூஉம் அதற்குப் பாங் கன் கழறினானை எதிர்மறுத்ததூஉமென இரண்டும் பாங்கற் கூட்டத்துப்பட்டு ஓரியலான் முடிந்தன. அவை மேற்கூறிய வகையானே கண்டுகொள்க. (௧௧௮)

**நச்சினார்க்கினியம் :**

இது களமெனப்பட்ட வுறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்) பலவும் ஒருவழித் தொக்கவற்றுக்கெல்லாம் ஓரிலக் கணத்தான் முடியுங் கருமநிகழ்ச்சியை யிடமென்று கூறுப. எ-று.

களமெனினும் இடமெனினு மொக்கும். அது ஒருசெய்யுட் கேட்டால் இது இன்ன இடத்து நிகழ்ந்ததென் றறிதற்கு

1. 'பரத்தையும் வாயில்களு மென்னும் இரண்டு வேறுபாட்டினும்' எனவரும் பேராசிரியருரை கொண்டு, அவர் கொண்டபாடம் 'பரத்தைவாயில் எனவிரு வீற்றும்' என இளம்பூரணருரையிற் கண்டபாடமே என்பதும் 'எனவிருகூற்றும்' என்ற பாடம் பிழைபட்டதென்பதும் நன்கு தெளியப்படும்.

ஏதுவாயதோ ருறுப்பு. அது காட்சியும் ஐயமுந் துணிவும் புணர்ச்சியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையும் இன்னோரன்னவும் ஒரு நெறிப்பட்டு இயற்கைப்புணர்ச்சி யென்னும் ஓரிலக்கணத்தான் முடியுமென்பது. கரும நிகழ்ச்சியென்பது காமப்புணர்ச்சியென்னுஞ் செயப்படுபொருணிகழ்ச்சி. இது வினைசெயிடம்.

"எலுவ சிறாஅர்" (குறுந்-௧௨௯)

கேளிர் வாழியோ" (குறுந் ௨௮௦)

என்பன பாங்கற் கூட்டமிடனாக ஒருவழிப்பட்டன. பிறவு மன்ன இது புறத்திணைக்கு மொக்கும்.[1]

**ஆய்வுரை :**

இது, நிறுத்தமுறையானே செய்யுட்குரிய களன் என்னும் உறுப்பு உணர்த்துகின்றது

(இ-ள்) ஒருநெறிப்பட்டு ஓரியல்பாக முடியும் கரும நிகழ்ச்சி இடம் எனப்படும் எ-று.

ஒரு செய்யுளைக் கூறக்கேட்டால் 'இதன்கண் கூறப்படும் பொருள் நிகழ்ச்சி இன்ன இடத்து நிகழ்ந்தது' என அறிந்து கொள்ளுதற்கு ஏதுவாகியதோர் உறுப்பு இடம் எனப்படும். இடமெனினும் களம் எனினும் ஒக்கும்.

ஒருநெறிப்படுதலாவது, அகத்திணை புறத்திணை என்பவற்றுள் ஏதேனும் ஒருதிணைக்கண் வருதல். ஓரியல் முடிதலாவது, அகத்திணைக்கண் களவு கற்பு என்பவற்றுள் ஒன்றைப் பற்றியோ அல்லது அவற்றின் விரியாகிய இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாடு முதலியவற்றுள் ஒன்றைப் பற்றியோ இனி, புறத்திணைக்கண் நிரைகோடல், மீட்டல், மேற்சேறல் முதலியவற்றுள் ஒன்றைப் பற்றியோ வருதல் கருமநிகழ்ச்சியாவது, மேற்கூறிய அகமும் புறமும் ஆகிய பொருட்பகுதிகளுள் யாதாயினும் ஒன்றைப்பற்றி நிகழும் வினைநிகழ்ச்சி. இது 'வினைசெய்இடம்' எனப்படும். காடுறையுலகம் முதலாக மேற்சொல்லப்பட்ட நிலப்பகுதிகள் முன்னர்த் திணையென அடக்கப்பட்டன ஆதலால் ஈண்டு இடமென்றது வினைசெய் இடத்தையே யென்பது நன்கு புலனாம். இனி, 'கருமநிகழ்ச்சி' யென்றதனால் அந்நிகழ்ச்சிக்கு நிலைக்களமாகிய தன்மை முன்னிலை படர்க்கை என்பனவும் இடமெனக் கொள்ளப்படும்.

1. பேராசிரியர் உரையுடன் ஒப்புநோக்குக.

௭௬௪ இறப்பே நிகழ்வே எதிர தென்னுந்
திறத்தியல் மருங்கில் தெரிந்தனர் உணரப்[1]
பொருள்நிகழ் வுரைப்பது கால மாகும்.

## இளம்பூரணம் :

என்—எனின், நிறுத்தமுறையானே காலமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமெனக் கூறப் பட்டியலும் பக்கத்தின் ஆராய்ந்து நோக்குமாறு பொருணிகழ்ச்சியைக் கூறுவது காலமாகும் என்றவாறு.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே"

இஃது இறந்த காலத்தின்கட் புணர்ச்சியுண்மை தோன்ற வந்தது.[2] இனி,

"அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியில் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கேழ் ஊர" (நற்றிணை ௬0)

என்றவழி நிகழ்காலம் இளமைப் பருவமென்பது தோன்ற வந்தது.[3] இதனுள், நீத்தலோம்புமதி யென்பது எதிர்காலங் குறித்து நின்றது.[4] இவ்வகையினாற் காலமுமிடமும் எல்லாச் செய்யுளின் கண்ணும் வருமென்று கொள்க. (௧௬௪)

## பேராசிரியம் :

இது, கால முணர்த்துகின்றது.

(இ-ள்) மூன்று காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சி அச்செய்யுளுட் டோன்றச் செய்யிற் கால மென்னும் உறுப்பாம் (எ-று)

---

1. 'தெரிந்தனருள்ளப்' என்பது பேராசிரியர் கொண்ட பாடம்.

2. 'முதுக்குறைந்தனள்' என்ற இறந்தகாலச் சொல் புணர்ச்சியுண்மை தோன்ற நின்றமை காலம் என்னும் செய்யுளுறுப்பாம்.

3. அண்ணாந்தேந்தியவனமுலை, பொன்னேர்மேனி, நன்னெடுங்கூந்தல் என்ற தொடர்கள் நிகழ்காலம் இளமைப் பருவம் என்பது புலப்பட வந்தன.

4. 'நீத்தலோம்புமதி' என்பது இவளை எக்காலத்தும் கைவிடாது பாதுகாப்பாயாக எனப் பொருள் தந்தமையின் எதிர்காலங் குறித்துநின்றது.

பொருணிகழ்ச்சியைக் காலமென்றதென்னை? 'காலமென வேறு பொருள் இல்லதுபோலவெனின்[1] அஃது ஈண்டாராய்ச்சியின்று நியாய நூலாராய்ச்சி யென்க [2]

"வில்லோன் காலன கழலே தொடியோள்
... ... ...
வேய்பயி லவழும் முன்னி யோரே" (குறுந்.7)

என்னும் பாட்டினுள் வில்லோனுந் தொடியோளும் பொருளெனப்படும்;

"வேய்பயி லவழும் முன்னி யோரே"

என்பது அப் பொருணிகழ்ச்சியான் இறந்தகால மெனப்படும். அப் பாட்டிற்குச் சிறந்தார் அவராகலின் அவரே பொருளாயினா ரென்பது.

'மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப்
பெருந்தோ ணுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே" (குறுந்; 71)

என்பது, நிகழ்காலம்;

"பகலும் பெறுவையிவ டடமென் றோளே" (கலி:49)

என்பது, எதிர்காலம்.

புறத்திற்கும் இவ்வாறே இன்றியமையா தென்பது. பெரும்பொழுது சிறுபொழு தென்பன ஈண்டுத் திணையெனப்பட் டடங்கின; என்னை? முதலும் கருவும் உரிப்பொருளுங் கூட்டித் திணையாகலின். (202)

**நச்சினார்க்கினியம் :**

இது காலமென்னுமுறுப்புக் கூறுகின்றது.

---

1, 'காலமென வேறுபொருள் இல்லதுபோலப் பொருள் நிகழ்ச்சியைக் காலம் என்றது என்னையெனின்' என இயைத்து வினவுக.

2. 'காலம்' என்பதனை உள்பொருளாகவே தொல்காப்பியனார் கொண்டார் என்பது,

'காலம் உலகம்' (தொல். கிளவி(௫௮) எனவும்
'வினையெனப்படுவது வேற்றுமைகொள்ளாது
நினையுங்காலைக் காலமொடு தோன்றும்' (தொல்.வினை- ௧)

எனவும் வரும் அவரது வாய்மொழியால் இனிது புலனாம்.

(இ-ள்). இறப்...........து எ-து இறப்பும் நிகழ்வும் எதிர்வும் என்னும் மூன்று காலத்தே. இயன்...... மருங்கில் எ-து எல்லாத்திணையும் நிகழ்கின்ற நிகழ்ச்சிக்கண்ணே. பொருணிகழ்வுணரத்தெரிந்தன ருரைப்பது காலமாகும். என்பது பொருணிகழ்ச்சியுணரத் தெரிந்தனரா யுரைப்பது காலமென்னும் உறுப்பாம் எ-று.

உ-ம். "வில்லோன் காலன கழலே...... முன்னியோரே" (குறுந்-எ)

இதனுள் வில்லோன் தொடியோளென்பன பொருள். முன்னியோர் எ-து, தம்பொருள் நிகழ்ச்சியாகலின் இஃ திறந்தகாலமெனப்படும். இதற்குச் சிறந்தாரவர்களாதலின் அவர்களே பொருளாயினார்.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
யரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப்
பெருந்தோ ணுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே" (குறுந் எக)

இது நிகழ்காலம்.

"பகலும் பெறுவையிவ டடமென் றோளே"
(கலி ௬௫)

இஃ தெதிர்காலம்.

புறத்திற்கு மிவ்வாறே யின்றியமையாதென்பது; பெரும்பொழுதுஞ் சிறுபொழுதும் முதல், கரு. உரிப்பொருளோடு கூடித் திணையாகலின் இக்காலம் அவற்றின்வேறாம்.[1]

**ஆய்வுரை :**

இது, நிறுத்தமுறையானே காலம் என்னும் உறுப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எனக் கூறப்பட்டு இயலும் மூன்று காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சியினை ஆராய்ந்து உணருமாறு செய்யுளுள் தோன்றச் செய்யின் அது காலம் என்னும் உறுப்பாகும் எ-று.

பெரும்பொழுதும் சிறுபொழுதும் ஆகிய பருவ காலங்கள் முதல், கரு, உரிப்பொருள் என்பவற்றோடு கூடித் திணையென அடங்குமாதலின் அவற்றின் வேறாகிய பொருள் நிகழ்ச்சியை ஈண்டுச் செய்யுட்குரிய 'காலம்' என்னும் உறுப்பாகக் கொண்டார் ஆசிரியர்.

1. பேராசிரியருரையைப் பின்பற்றியமைந்தது.

எகூரு இதுநனி பயக்கும் இதன்மா றென்னுந்[1]
தொகுநிலைக் கிளவி[2] பயனெனப் படுமே.

**இளம்பூரணம் :**

என் – எனின். நிறுத்தமுறையானே பயனாமாறு உணர்த்து-தல் நுதலிற்று.

(இ-ள்) யாதானும் ஒரு பொருளைக் கூறியவழி இதன் பின்பு மிதனைப்பயக்கு மென விரித்துக்கூறாது முற்கூறிய சொல் லினானே தொகுத்துக்கூறுதல் பயனெனப்படும் என்றவாறு.

"சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கின்றே
வாரல் வரினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே"

இதனாற் பயன் வரைந்து கோடல் வேண்டும் என்பது

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று" (குறள் ௩௨௩)

இதனாற் பயன் நன்மை வேண்டுவார் இவ்வாறு செய்தல் வேண்டு மென்றல்.

இவ்வகையினால் யாதானுமொரு செய்யுளாயினும் பயன்-படக்கூறல் வேண்டு மென்பது கருதிப் பயனென ஒருபொருள் கூறினார். (கூகூரு)

**பேராசிரியம் :**

இது, முறையானே பயனென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) இது மிகவும் பயக்கும் இதனானெனத் தொகுத்துச் சொல்லப்படும் பொருள் பயனென்னும் உறுப்பாம் (எ-று).

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே"

---

1. 'இதனானென்னும்' எனவும்

2. 'தொகைநிலைக் கிளவி' எனவும் பாடங்கொள்வர் பேராசிரியர்.

இதன்மாறு -இதன்பின்பு; எனப்பொருள் வரையப்பெற்றுளது. இதன்மாறு-இதனால் எனப்பொருள் கொள்ளுதல் மாறு என்னும் பொருத்தமாகும். 'இதனான்' எனவே பாடங்கொண்டார் பேராசிரியர். மாறு என்னும் இவ்விடைச்சொல் 'சிறந்தோன் பெயரன்பிறந்தமாறே' (புறம்) என ஏதுப்-பொருளிற் பயின்றுள்ளமை இங்கு ஒப்பு நோக்கி யுணர்தற் பாலதாகும்.

என்னும் பாட்டு, தோழியைத் தூதுவிடுவாளாதற் பயன்பட வந்தது. இவ்வாறெல்லாப் பாட்டும் பயனுறுப்பாகவன்றி[1] வாரா வென்க. இவை புறத்திற்கும் ஒக்கும். (உ0௫)

**நச்சினார்க்கினியம் :**

இது பயனென்னும் உறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்.) இது மிகவும் பயக்கும் இதனானெனத் தொகுத்துக் கூறப்படும் பொருளும் பயனென்னு முறுப்பாம். எ-று.

உ ம். "மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியாம் வாழு மாறே"

இது தோழியைத் தூதுவிடுதல் பயனாகவந்தது. இது புறத்திற்கு மொக்கும். இங்ஙனம் பயனுறுப்பாகவே செய்யுள் வருமாறுணர்க [2]

**ஆய்வுரை :**

இது, பயன் என்னும் உறுப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) யாதானும் ஒரு பொருளைப் பற்றிக் கூறியவழி இதனாற் போந்த பயன் இதுவென விரித்துக் கூறாது முற்கூறிய சொல்லினாலே தொகுத்துணரவைத்தல் பயன் என்னும் உறுப்பாம் எ-று.

எனவே சொல்லிய சொல்லாற் பிறிதொன்று பயப்பச் செய்தல் 'பயன்' என்னும் உறுப்பு என்பது பெறப்படும்.

'இதன்மாறென்னும்' என்பது இளம்பூரணர்கொண்ட பாடம். நச்சினார்க்கினியருரையிலும் இப்பாடமே காணப்படுதலால் பேராசிரியர் கொண்ட பாடமும் இதுவே யெனக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

இதன்மாறு-இதனான்; மாறு என்பது ஏதுப்பொருட்டாய இடைச்சொல். 'நெடுமானஞ்சி நீயருளன்மாறே'' (புறம்-௯உ) என இச்சொல் இப்பொருளில் ஆளப்பெற்றுள்ளமை காண்க.

1. பயனுறுப்பாகவன்றி-பயனை உறுப்பாகக் கொண்டன்றி.

2. இதுவும் பேராசிரியருரையை அடியொற்றியதே. 'இதன்மாறு' என இளம்பூரணருரையிலுள்ள பாடமே. நச்சினார்க்கினியருரையிலும் உள்ளது. இதன்மாறு-இதனான்; 'மாறு' என்பது காரணப் பொருளிற் பயிலும் இடைச் சொல். 'சோறுபட நடத்தி நீ துஞ்சாய் மாறே' (புறம் உஉ) என இச்சொல் இப்பொருளிற் பயின்றமை காண்க.

'இவ்வகையினால் யாதானுமொரு செய்யுளாயினும் பயன்படக் கூறல் வேண்டும் என்பது கருதிப் 'பயன்' என ஒருபொருள் கூறினார்'' என்பர் இளம்பூரணர்.

எகஈ. உய்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்[1]
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்.

**இளம்பூரணம் :**

என்-எனின் நிறுத்தமுறையானே மெய்ப்பாடு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதானுமொன்றைக் கூறியவழி யதன்கட் பொருண்மையை விசாரித்துணர்தலன்றி அவ்விடத்து வரும் பொருண்மையானே மெய்ப்பாடு தோன்ற முடிப்பது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் என்றவாறு.

> "ஐயோ எனின்யான் புலியஞ் சுவலே.
> அணைத்தனன் கொளினே அகன்மார்பெடுக்க வல்லேன்
> என்போற் பெருவிதுப் புறுக நின்னை
> இன்னா துற்ற அறனில் கூற்றே
> நிரைவளை முன்கை பற்றி
> வரைநிழற் சேர்க நடத்திசிற் சிறிதே". (புறம். உருரு)

இதனுள் அழுகையாகிய மெய்ப்பாடு புலப்பட வந்தவாறு கண்டு கொள்க.

செய்யுட் செய்வார் மெய்ப்பாடு தோன்றச் செய்தல் வேண்டு மென்பது கருத்து. (கசுஈ)

**பேராசிரியம் :**

இது, மெய்ப்பாட்டுறுப்புணர்த்துகின்றது.

(இ - ள்.) உய்த்துணர்ச்சியின்றிச் செய்யுளிடத்துச் சொல் லப்படும் பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீரரும்பன் மெய்ம்மயிர் சிலிர்த்தன் முதலாகிய சத்துவம் படுமாற்றான் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் (எ-று).

கவிப்பொருளுணர்ந்தால் அதனானே சொல்லப்படும் பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறிதலை மெய்ப்-

1. 'தலைவருபொருளான்' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்டபாடம்.

உய்த்துணர்தல்-விசாரித்தறிதல். தலை-இடம். மெய்ப்பட- மெய்ப்பாடுதோன்ற.

பாடென்றான், அது தேவருலகங் கூறினும் அதனைக் கண்டாங்கறியச்செய்தல் செய்யுளுறுப்பாம்[1] என்றவாறு. அவை,

"மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன்
மெய்பெறா மழலையில் விளங்குபூ ணனைத்தர"
(கலி:81)

என்றாற்போல வருவன. 'தலைவரு பொருளா' னெனவே நோக் குறுப்பால், உணர்ந்த பொருட்பிழம்பினைக் காட்டுவது மெய்ப் பாடென்பது இதன் கருத்து. இக்கருத்தினாற் 'கவி கண்காட்டும்' எனவுஞ் சொல்லுப.[2] (௨௦௪)

**நச்சினார்க்கினியம்:**

இது மெய்ப்பாடென்னும் உறுப்புக் கூறுகின்றது.

அஃதாவது உலகத்தார் உள்ளநிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோ ராற்றான் வெளிப்படுதல். உய்த்துணர்ச்சியின்றிச் செய்யுளிடத்து வந்த பொருளானே கண்ணீரரும்பல், மெய்ம்மயிர்சிலிர்த்தன் முதலிய சத்துவம் படுமாறு வெளிப்படச்செய்வது மெய்ப்பாடென்னு முறுப்பாம். எ-று.

அது தேவருலக முதலியவற்றைக் கூறினுங் கண்டாங்கறியச் செய்யுள் செய்தல் செய்யுளுறுப்பென்றார்.

உ-ம் "மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன்
மெய்பெறா மழலையின் விளங்குபூ ணனைத்தரப்
பொலம்பிறை யுட்டாழ்ந்த புனைவினை யுருள்கல
நலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர
வுருவெஞ்சா திடைகாட்டு முடைகழ லந்துகி
லரிபொலி கிண்கிணி யார்ப்போவா தடிதட்பப்
பாலோ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக்

---

1. செய்யுளின் பொருளையுணர்ந்தால் அப்பொருளுணர்ச்சியாலே செய்யுளிற் கூறப்படும் பொருள் வேறுகட்புலனாகக் கண்டாற்போன்று அறிதலை மெய்ப்பாடு என்னும் உறுப்பு என்றார் ஆசிரியர். உலகமக்களாற் காணப்படாத வானோருலகினைப் புலவன் கூறினாலும் அவ்வுலகினைக் கட்புலனாகக் கண்டாற்பேகன்று அறியச்செய்தல் மெய்ப்பாடு என்னும் உறுப்பாகும் என்பதாம்.

2. தலைவருபொருள் - செய்யுளிடத்தே சொல்லப்படும் பொருள். அஃதாவது 'நோக்கு' என்னும் உறுப்பால் உணர்ந்த பொருளின் வடிவத்தினைக் கட்புலனாமாறு காட்டுவது மெய்ப்பாடு என்னும் கருத்தில் வழங்குவது, 'கவிகண் காட்டும்' என்னும் பழமொழியாகும்.

கால்வறோர் கையி னியக்கி நடைபயிற்றா
லாலமர் செல்வ னணிகால் பெருவிறல்
போல வருமென் னுயிர்'' (கலி-அ௬)

இவை போல்வனவற்றுள் அவ்வாறு காண்க. தலைவரு பொருளான் எனவே நோக்குறுப்பானுணர்ந்த பொருட்பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடாமென்றுகொள்க[1]

**ஆய்வுரை :**

இது, செய்யுட்குரிய மெய்ப்பாடு என்னும் உறுப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) யாதானும் ஒன்றைக் கூறியவழி அதனை ஆராய்ந்துணர்தலின்றிச் செய்யுளிடத்து வந்த அப்பொருள் தானே வெளிப்பட்டுத் தோன்றினாற் போன்று கண்ணீரரும்பல் மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலிய மெய்ப்பாடு தோன்றுமாற்றால் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடு என்னும் உறுப்பாகும் எ-று.

செய்யுளின் பொருளை உணர்ந்தால் அதனாலே சொல்லப்படும் பொருள் கற்போர்க்கு எதிரே தோன்றினாற் போன்று அறிவதனை மெய்ப்பாடு என்றார் ஆசிரியர். அஃதாவது தேவருலகத்தைக் குறித்துக் கூறினாலும் அதனை நேரே கண்டாற் போன்று அறியச் செய்தல் மெய்ப்பாடு என்னும் செய்யுளுறுப்பாகும் எனவும், 'நோக்கு' என்னும் செய்யுளுறுப்பினால் உணர்ந்த பொருளின் வடிவத்தைக் கற்போர் முன்னிலையிற் காட்டுவது மெய்ப்பாடு எனவும், அதுகுறித்தே 'கவி கண்காட்டும்' என அறிஞர் கூறுவர் எனவும் பேராசிரியர் தரும் விளக்கம் இங்கு உளங்கொளத் தகுவதாகும்.

௱௯௯. எண்வகை இயனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின தநுவே.

**இளம்பூரணம் :**

என் – எனின். மெய்ப்பாடாவது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அது நகை முதலாகிய எட்டு மெய்ப்பாட்டு நெறியையும் பிழையாதாகி மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தையுடைத்து என்றவாறு.[2]

அஃதாமாறு மெய்ப்பாட்டியலுட் காண்க. (௬௯௯)

---

1. இது பேராசிரியருரையிற் காணப்படும் உரை விளக்கமாகும்.

2. எண்வகை இயல்நெறியாவது, நகைமுதல் உவகையீறாக மெய்ப்பாட்டியலிற் கூறப்பட்ட எண்வகை மெய்ப்பாடுகளின் இலக்கணமுறைமை,

**பேராசிரியம் :**

இஃது, எய்திய திகந்துபடாமைக் காத்தது

(இ-ள்) இதுவும் மேற்கூறப்பட்ட மெய்ப்பாடே; பிறி திலக்கணத்தனவென்று கொள்ளற்க (எ-று).[1]

எனவே,

"நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகை" (தொல்-மெய்ப்: 3)

என அவை நந்நான்காமெனவும் மெய்ப்பாட்டியலுட் கூறியவா றெல்லாம் பிறவாற்றான் வேறுபடுவனவுங் கொள்ளப்படுமென்ற வாறு. (உ0ரு)

**நச்சினார்க்கினியம் :**

இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் உரை கிடைத்திலது. இவ்வியலிற் பேராசிரியர் உரையினையே நச்சினார்க்கினியர் பெரிதுந் தழுவி உரை வரைந்திருத்தலால் இச்சூத்திரத்திற்குப் பேராசிரியர் வரைந்த வுரையே நச்சினார்க்கினியர்க்கும் உடம்பாடானதென்று கொள்க.

**ஆய்வுரை :**

இது, முன்னர் மெய்ப்பாட்டியலிற் கூறிய மெய்ப்பாட்டின் இலக்கணம் இகந்துபடாமைக் காக்கின்றது.

(இ ள்) முற்கூறிய மெய்ப்பாடாகிய அது, நகை முதலிய எண்வகை மெய்ப்பாட்டு நெறியினையும் பிழையாதாகி, மேல் மெய்ப்பாட்டியலிற் சொல்லப்பட்ட இலக்கணத்தையுடைய தாகும். எ-று

முன்னுறக் கிளந்த முடிவினது என்றது முன் மெய்ப்பாட்டி யலிற் கூறப்பட்ட இலக்கணத்திற் பிறழாது வருதலை. முடிவினது அது' என்பதனை அது, முடிவினது எனமாறிக் கூட்டுக. அது என்றது, முற்கூறிய மெய்ப்பாடென்னும் உறுப்பினை.

---

1. செய்யுட்கு உறுப்பாக இங்குக் கூறப்படும் மெய்ப்பாடு முன் மெய்ப் பாட்டியியலிற் கூறப்பட்ட அவ்விலக்கணத்ததேயன்றி அதற்குப் பிறிதான இலக்கணத்தன்று என்பதாம்.

எகூஅ. சொல்லொடுங் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
புல்லிய கிளவி எச்சம் ஆகும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். நிறுத்தமுறையானே எச்சவகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று,

(இ-ள்) பிறிதோர் சொல்லொடும் பிறிதோர் குறிப்பொடும் முடிவுகொள்ளும் இயற்கையைப் பொருந்திய செய்யுள் எச்சமாகும் என்றவாறு.

எனவே. சொல்லெச்சம் குறிப்பெச்சமென இருவகையாயின அது எச்சவியலுட் 'பிரிநிலை வினை' யென்னுஞ் சூத்திரத்துள் (தொல், சொல். எச்ச. ௩௪) பிரிநிலையென்பது முதலாகச் சொல்லப்பட்ட எண்வகை யானும் வருவன சொல்லெச்சமாம். குறிப்பென்றோதப் பட்டது குறிப்பெச்சமாம்.[1] (கூகூஅ)

**பேராசிரியம் :**

இஃது, எச்சங் கூறுகின்றது.

(இ-ள்) கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தோடு பொருந்திய கிளவி, எச்சமென்னும் உறுப்பாம் (எ-று).

'முடிவுகொள் இயற்கை' யெனவே, செய்யுளின்கண்ண தன்றிப் பின்கொணர்ந்து முடிக்கப்படுமென்பது பெற்றாம்.[2]

(உ-ம்) 'செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழறொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே'' (குறுந்: க)

---

1. செய்யுளுறுப்பாகிய எச்சம் என்பது, சொல்லெச்சம் குறிப்பெச்சம் என, இரு திறப்படும். 'பிரிநிலைவினையே என்புழிச் சொல்லதிகாரம் எச்சவியலிற் கூறப்பட்ட பத்துவகை யெச்சங்களுள், பிரிநிலையெச்சம், வினையெச்சம், பெயரெச்சம், ஒழியிசையெச்சம், எதிர்மறையெச்சம், உம்மையெச்சம் எனவெனெச்சம், சொல்லெச்சம் எனவரும் எட்டும் சொல்லெச்சங்களாகும், அச்சூத்திரத்திற் 'குறிப்பு' என்று ஓதப்பட்ட ஒன்றுமே குறிப்பெச்சம் எனப்படும்.

2. முடித்தலைக்கொள்ளும் இயல்பு எனவே, செய்யுளின் வேறாகச் சொல்லும் குறிப்பும் எச்சமாய் நின்று பின்னர்க் கொணர்ந்து முடிக்கப் பெறும் என்பதாம்.

எனச் செய்யுண் முடிந்தவழியும், 'இவற்றான் யாங்குறையுடையேம் அல்லேமென்று தலைவற்குச் சொன்னாளேல் அது கூற்றெச்சமாம். என்னை? அவ்வாறு கூறவுஞ் சிதைந்ததின்மையின்[1] தலைமகட்குச் சொன்னாளேல் அது குறிப்பெச்சம்: என்னை? அது காண்பாயாகிற் காணெனத் தலைமகளை இடத்துய்த்து நீக்கிய குறிப்பினளாக்கி அது தான் கூறாளாகலி னென்பது.[2] (உ௦௬)

**நச்சினார்க்கினியம் :-**

இது முறையே யெச்சமென்னு முறுப்புக் கூறுகின்றது.

(இ ள்). கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தொடு பொருந்திய கிளவி யெச்சமென்னு முறுப்பாம். எ-று

முடிவுகொளியற்கையெனவே செய்யுட்கண்ணதன்றிப் பின் கொணர்ந்து முடித்தல் பெற்றாம்.

உ-ம். "செங்களம் படக்கொன்ற ..குலைக்காந் தட்டே" (குறுந் -க)

இக்காந்தளால் யாங் குறையுடையமல்லமெனத் தலைவற்குக்கூறிற் கூற்றெச்சமாம். அக்கூற்றுஞ் செய்யுட்குச் சிதைவின்மையின் அதுகாண்பாயாகிற் காணெனத் தலைவியை நோக்கியிடத்துய்த்துக் கூறிற் குறிப்பெச்சமாம். அவனைக் கூடுகவெனத் தான் கூறாளாகலின்.[3]

---

1. 'செங்களம்பட' (க) என்னும் குறுந்தொகைப்பாடலில் முருகனது குன்றம் கொத்தாக அவர்ந்த செங்காந்தட்பூவின் குலையினையுடையது. எனவே, 'இப்பூக்கலால்யாம் குறையுடையோம் அல்லோம்' எனத் தோழி தலைவனை நோக்கிக் கூறுதல் 'கையுறைமறுத்தல்' என்னுந் துறையின்பாற் படுதலால் இங்ஙனம் தோழி வெளிப்படக் கூறினாளென்றல் குற்றமாகாமையின் இது கூற்றெச்சமெனப்படும்.

2. இங்ஙனம் தோழி தலைவியை நோக்கிக் கூறினாள் எனக்கொள்ளின், "செவ்வேள் குன்றம் குலையாக மலர்ந்த செங்காந்தட்பூக்களாற் பொலிவு பெற்றுளது. அக்காட்சியைக் காண விரும்பினை யாயின் ஆண்டுச் சென்று காண்பாயாக" எனத் தலைமகளைக் குறியிடத்து உய்த்தல் என்னுந் துறையில் தனது குறிப்பினைப் புலப்படுத்துதலால் அது குறிப்பெச்சமெனப்படும்.

3. இவ்வுரைப்பகுதி பேராசிரியர் உரையினையே முழுவதும் அடியொற்றியமைந்துள்ளமை காண்க.

**ஆய்வுரை :**

இஃது எச்சம் உணர்த்துகின்றது.

(இ-ள்) கூற்றினாலும் குறிப்பினாலும் எஞ்சி நின்று பின்னர்க் கொணர்ந்து முடிக்கப்படும் இலக்கணந்தொடு பொருந்தியது எச்சம் என்னும் உறுப்பாகும் எ-று.

எனவே கூற்றெச்சம் குறிப்பெச்சம் என எச்சம் இருவகைப்படும் என்பதாயிற்று. இவ்விருவகை யெச்சத்திற்கும் 'செங்களம்-படக்கொன் றவுணர்த் தேய்த்த (குறுந்-1) எனவரும் குறுந்தொகைப் பாடலை உதாரணமாகக் காட்டிப் பேராசிரியர் தந்த விளக்கம் இங்கு நினைக்கத் தகுவதாகும்.

௭௯௯. இவ்விடத் திம்மொழி இவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது[1] முன்னம்.

**இளம்பூரணம் :**

என் - எனின். நிறுத்தமுறையானே முன்னமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இவ்விடத்து இம்மொழியை இவர்க்குச் சொல்லத்-தகுமெனக் குறித்து அவ்விடத்து அவர்க்கு அம்மொழியை யுரைப்பது முன்னமாம் என்றவாறு.

எனவே, இடமுங் காலமு முணர்ந்து கேட்போர்க்குத் தக்க-வாறு மொழிதலுஞ் செய்யுளுறுப்பாம் என்றவாறு.[2]

வந்ததுகொண்டு வாராதது முடித்த லென்பதனாற் காலமுங் கொள்க.[3] (௬௯௯)

**பேராசிரியம் :**

இது, முன்னமென்று கூறப்பட்ட உறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்.) யாதோரிடத்தானும் யாதானுமொரு மொழி தோன்றியக்கால் இம்மொழி சொல்லுதற்குரியாருங் கேட்டற் குரியாரும் இன்னாரென்று அறியுமாற்றான் அங்ஙனம் அறிதற்கு

1. 'அவரவர்க்குரைப்பதை' என்பது நச்சினார்க்கினியருரையிற் கண்ட பாடம்.

2. செய்யுளைக் கேட்போர் அதன்கண் கூறப்படும் கூற்று இவ்விடத்து இன்னார் இன்னார்க்குக் கூறியது என இடமுங் காலமும் உணர்ந்து கொள்ளுமாறு அமைத்தல் 'முன்னம்' என்னும் உறுப்பாகும்.

2. 'இவ்விடத்து' என வந்தது கொண்டு 'இக்காலத்து' என வாராதது ஆகிய காலமுங் கொள்க என்பதாம்.

ஓரிடம் நாட்டி அவ்விடத்துக் கூறுவார்க்குங் கேட்பார்க்கு மேற்ற செய்யுட்கு ஈடாகச் சொல்லுவது முன்னம் (எ-று).

'இவரிவர்க் குரியவென்று' அறிவான், செய்யுட் கேட்டா னெனவும், அவ்விடத் தவரவர்க் குரைக்கவென்றான் ஆசிரிய னெனவுங் கொள்க.[1] என்றென்பது எனவென்பதுபோலச் சொல்லினெச்சமாதலும் **வினையெச்சமாதலும்** உடைமையின் இஃது,

"எனவே னெச்சம் வினையொடு முடிமே"
(தொல்-சொல் எச்: 42)

என்பதொரு வினையெஞ்சி நிற்கும். அவ்வினைதான் எச்சமாக லான் உரைப்பதென்னும் வினைகொண்டு முடியுமென்பது.

"யாரிவ னெங்கூந்தற் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" (கலி: 89)

என்றக்கால் இம்மாற்றஞ் சொல்லுகின்றாள் தலைவி யெனவுஞ் சொல்லப்பட்டான் தலைமகனெனவும் முன்னத்தான் அறியப் படுத்தலின் இது முன்னவுறுப்பாயிற்று.[2] ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். இவையெல்லாம், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகக் கூறுகின்றானென்பது.[3] (௨0எ)

**நச்சினார்க்கினியம் :**

இது முன்னமென்கின்ற உறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்) இவ்விடத்துத் தோன்றிய இம்மொழி கூறற்குரி யோருங் கேட்டற்குரியோரும் இன்னாரென்று அச்செய்யுட்கட் டோன்றின் அறியாமற் றானங்ஙன மறிதற் குரித்தாக நாட்டிய

1. இம்மொழியினைக் கூறுதற்குரியார் இவர், இம்மொழியினைக் கேட்டற் குரியார் இவர் என உய்த்துணர்ந்து அறிபவன் செய்யுளைக் கேட்டவன் எனவும் அங்ஙனம் அறிந்து கொள்ளுதற்கோர் இடத்தினை யமைத்துக் கூற்று நிகழ்த்து- வார்க்கும் அதனைக் கேட்போர்க்கும் உரியவற்றை உரைக்க எனச் செய்யுள் செய்வார்க்கு அறிவுறுத்தியவர் இந்நூலாசிரியர் எனவும் இச்சூத்திரத் தொடரைப் பகுத்துப்பொருள் கொள்க என்பதாம்.

2. இதனைக் கூறுகின்றார் இவர், கேட்கின்றார் இவர் என்பதனை முன்னியுணர அறிவுறுத்துவது முன்னம் என்னும் உறுப்பாகும். முன்னம்- குறித்துணரப்படுவது.

3. இடம், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம் எனப்படும் செய்யுளுறுப்புக்களாகிய இவையாவும் அகத்திணைச் செய்யுட்கும் புறத்திணைச் செய்யுட்கும் பொதுவாகக் கூறுகின்றார் தொல்காப்பியனார்.

தோரிடத்தே கூறுவோர்க்குங் கேட்போருக்கும் ஏற்றயுரையாகச் செய்யுளுட் கிடத்திக் கூறுவது முன்னம்[1] எ-று

இவரிவர்க்குரிய வென்றறிவான் செய்யுட் கேட்போனெனவும் அவ்விடத் தவரவர்க் குரைக்க வென்றார் ஆசிரியரெனவுங். கொள்க. என்றென்பது ஈண்டுவினையெச்சம்;சொல்லெச்சமன்று. அறியவென வொருவினை வருவிக்க. அது உரைப்பதையென்னும் வினைப்பெயரொடு முடியும்.

(உ-ம்) "யாரிவ னெங்கூந்த கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" (கலி-அ௯)

என்றக்கால் இது கூறுகின்றாள் தலைவி யென்பதூஉங் கூறப்பட்டான் தலைவனென்பதூஉம் முன்னத்தான் உணரப்பட்ட வாறு காண்க. இவை அகம் புற மென்னும் இரண்டற்கும் பொது.

**ஆய்வுரை:**

இது 'முன்னம்' என்னும் உறுப்பாமாறு கூறுகின்றது.

(இ-ள்) "இவ்விடத்துத் தோன்றிய இக்கூற்றினைச் சொல்லுதற்குரியாரும் கேட்டற்குரியாரும் இன்னார்" என்று அறியுமாற்றால் அவ்வாறு அறிதற்கு ஓர் இடம் நாட்டி அவ்விடத்துக கூறுவார்க்கும் கேட்பார்க்கும் ஏற்ற உரை செய்யுட்கு ஈடாகச் சொல்லுவது முன்னம் என்னும் உறுப்பாகும் எ-று.

"யார்இவன் என்கூந்தல் கொள்வான் இதுவுமோர்
ஊராண்மைக்கு ஒத்த படிறுடைத்து" (கலித்-89)

என்றக்கால், இதனைக் கூறுகின்றாள் தலைவியென்பதும் இங்ஙனங் கூறப்பட்டான் தலைவன் என்பதும் குறிப்பினால் அறிய வைத்தலின் இது முன்னம் என்னும் உறுப்பாயிற்று.

---

1. (இ-ள்) "இவ்விடத்துத் தோன்றிய இம்மொழி கூறற்குரியாரும் கேட்டற்குரியாரும் இன்னார் என்று அச்செய்யுட்கண் அறியுமாற்றான் அங்ஙனமறிதற் குரித்தாக நாட்டியதோ ரிடத்தே கூறுவோர்க்கும் கேட்போர்க்கும் ஏற்ற உரையாகச் செய்யுளுட்கிடத்திக் கூறுவது முன்னம்". எ-று என இவ்வுரை அமைந்திருத்தல் வேண்டும். இதன்கண் 'தோன்றின் அறியாமற்றான்' என்றிருப்பது ஏடெழுதுவோரால் நேர்ந்த பிழை. 'அறியாமற்றான்' என்பதனை 'அறியுமாற்றான்' எனத் திருத்துக.

உள. இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்குநெறி யின்றி
இதுவா கித்திணைக் குரிப்பொருள் என்னாது[1]
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப.

**இளம்பூரணம் :**

என் — எனின் நிறுத்தமுறையானே பொருள்வகை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இன்பமுந் துன்பமும் புணர்வும் பிரிவும் ஒழுக்கமு-மென்று சொல்லப்பட்டவை வழுவுநெறியின்றி இத்திணைக்குரிய பொருள் இப்பொருளென்னாது எல்லாப் பொருட்கும் பொதுவாகி நிற்கும் பொருளே பொருள்வகையாம் என்றவாறு.[2]

(௨௦௦)

**பேராசிரியம் :**

இது, பொருள்வகை கூறுகின்றது.

(இ-ள்.) இன்பமுந் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமுமெனப்பட்ட இவை இழுக்காதவாற்றான் இத்திணைக்கு இது பொருளென்று ஆசிரியனோதிய உரிப்பொருளன்றி அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது பொருட் கூறெனப்படும் (எ -று).[3]

'வகை'யென்றதனாற் புலவன்றான் வகைந்ததே பொருளென்று கொள்க. அஃதன்றிச் செய்யுள் செய்தலாகாதென்பது இதன் கருத்து.[4] அவை,

1. 'எனாது' என்பதும் பாடம்.

2. இத்திணைக்குரிய பொருள் இதுவெனச் சுட்டிக்கூறுதலன்றி எல்லாத்திணைக் குரிய பொருள்களுக்கும் பொதுவாக நிற்கும் வண்ணம் புலவனால் அமைத்துக் கொள்ளப்படும் பொருட்பகுதி 'பொருள்வகை' என்னும் உறுப்பாகும் என்பதாம்.

3. ஆசிரியன் கூறிய உரிப்பொருளேயன்றி அவற்றுக்கெல்லாம் பொதுமை-யின் உரியவாகப் புலவனால் வகுத்துரைக்கப்படும் பொருளமைப்பு 'பொருள்-வகை, என்னும் செய்யுளுறுப்பாகும்.

4. 'பொருள்' என்னாது 'பொருள்வகை' என விரித்துரைத்தமையால் செய்யுள் செய்யும் புலவன் தானே வகுத்தமைத்தது பொருள்வகையெனப்படும். புலவனது படைப்பாற்றலைப் புலப்படுத்தும் 'பொருள்வகை' எனப்படும் உறுப்பின்றிச் செய்யுள் செய்தல் புலமையாகாது என்பது கருந்து. வகைந்தது-வகுத்துக்கூறியது.

"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே"
(அகம்.9)

என்றாற்போலச் செய்யுள் செய்தவன் தானே வகுப்பன வெல்லாங்கோடல்; இது பாலைப்பாட்டினுள் வந்ததாயினும் முல்லை முதலாயவற்றுக்கும் பொதுவாமென்பது. பொதுமை என்பது எல்லா வுரிப்பொருட்கும் ஏற்கப் பல்வேறு வகையாற் செய்தல். (உ0அ)

**நச்சினார்க்கினியம்:**

இது பொருளென்னும் உறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்.) இன்...ன்றி எ-து இன்பமுந் துன்பமும் புணர்தலும் பிரிதலும் உலகவொழுக்கமு மெனப்பட்ட இவை தப்பும்வழி யின்றி, இது ...து எ-து இத்திணைக்குரியபொருளிதுவாகவென்று ஆசிரிய ரோதிய பொருளன்றி. பொது..ப எ-து அவற்றுக் கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது பொருட் கூறெனப்படும். எ-று.

இன்பத்துன்பங் கூறுதலிற் புறத்திற்குங்கொள்க[1]. ஒழுக்கம் இரண்டற்குங் கொள்க. வகையென்றதனாற் புலவன்றான் வகைந்ததே பொருளென்று கொள்க. அதுவின்றிச் செய்யுள் செய்தலாகாதென்பது கருத்து.

உ-ம். "கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே"
(அகம்-கூ)

---

1. இன்பமும் துன்பமும் கூறுதலால் இப்பொருள் வகையினை அகத்திற்கேயன்றிப் புறத்திற்கும் கொள்க என்றார். ஒழுக்கம் இரண்டாவன களவும் கற்பும் ஆகிய இருவகை ஒழுகலாறுகள்.

என்றாற்போலப் புலவன் வகுப்பனவாம். இப்பாட்டுப் பாலை யேனும் முல்லை முதலியனவற்றிற்கும் இப்பொருள் பொதுவாம். பொதுமையென்றது எல்லாவுரிப்பொருட்கு மேற்றுப் பலவேறு வகையாகச் செய்தல். இவ்வாறு வருவன புறப்பொருள் கூறியவற்றுள்ளுங்காண்க.

**ஆய்வுரை :**

இது, பொருள் வகையாமாறு இதுவென உணர்த்துகின்றது.

(இ-ள்) இன்பமும் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமும் எனப்பட்ட இவை வழுவாத நெறியால் இத்திணைக்கு இது பொருள் என ஓதிய உரிப்பொருளன்றி எல்லாவுரிப்-பொருட்கும் ஏற்பப் (புலவரால் தோற்றிக் கொள்ளப்பட்டுப்) பொதுவாகி நிற்கும் பொருளினைப் பொருள்வகை யென்பர் ஆசிரியர் எ-று.

செய்யுள் செய்யும் புலவன் தன் புலமைத் திறத்தால் தானே வகுத்துக் கூறும் பொருட்கூறு அனைத்தும் பொருள்வகை யென்னும் இவ்வுறுப்பின்பாற் பட்டு அடங்கும் என்பது பேராசிரியர் கருத்தாகும்.

**உ௭௧.** **அவ்வவ மாக்களும்[1] விலங்கும் அன்றிப்**
**பிறவவண் வரினுந் திறவதின் நாடித்[2]**
**தத்தம் இயலான்[3] மரபொடு முடியின்**
**அத்திறந் தானே துறையெனப் படுமே.**

**இளம்பூரணம் :**

எனின் — எனின். நிறுத்தமுறையானே துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அகப்பொருளாகிய ஏழு பெருந்திணைக்கும் புறப்-பொருளாகிய ஏழு பெருந்திணைக்குமுரிய மாந்தரும் பரந்து பட்ட மாவும் புள்ளும், உம்மையால் மரமுதலாயினவும், பிறவ-

1. 'அவ்வவமாக்களும்' என்பது, பழைய அச்சுப்புத்தகத்திலுள்ள பாடம். 'அவ்வம்மாக்களும்' என்பது பேராசிரியருரையிலுள்ள பாடம். அவ்வம்மக்களும் என்பதே இளம்பூரணர் கொண்டபாடம் என்பது ஏழு பெருந்திணைக்குரிய 'மாந்தரும்' எனவரும் உரைத்தொடரால் புலனாம்.

2. திறவதின் நாடுதலாவது, பல்வேறு கூறுபாடுடையதாகப் பகுத்து ஆராய்தல்.

3. 'தத்தமியலின்' என்பது பேராசிரியருரையிலுள்ள பாடம்.

வண் வரினுமென்றதனால் நிலம் நீர்தீ வளி முதலாயினவும் செய் யுட்கண் வருமிடத்துத் திறப்பாடுடைத்தாக ஆராய்ந்து தத் தமக்கேற்ற பண்போடும் பொருந்திய மரபோடும் முடியின், அவ் வாறு திறப்பாடுடைத்தாய் வருவது துறையென்று கூறப்படும் என்றவாறு. (உ0க)

**பேராசிரியம் :**

இது, துறையென்னு முறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) ஐவகை நிலத்திற்கும் உரியனவெனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறன்றிப் படைத்துச் செயினும் அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமைச் செய்யின் அது மார்க்க-மெனப்படும் (எ-று).

மார்க்கமெனினும் துறையெனினும் ஒக்கும்.

'ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்கால்'' (கலி 56)

என்னுங் கலியினுள்,

''கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை''

என, நெய்தற் றலைமகள்போலக் கூறி அவளை மருதநிலத்துக்-கண்டான்போல,

''ஊர்க்கா னிவந்த பொதும்பருள்''

எனவுஞ் சொல்லிப் பின் குறிஞ்சிப் பொருளாகிய புணர்தலுரிப் பொருளான் முடித்தான்; இவ்வாறு மயங்கச் செய்யினுங் குறிஞ்சித் துறைப்பாற்படச் செய்தமையின் அத்துறையுறுப்பான் வந்ததென்பது. இதுவும் மேலைப் பொருள்வகைபோலப் புலவராற் செய்துகொள்ளப்படுவதாகலான் அதற்குப் பின் வைத்தானென்பது. மற்று,

'எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்'' (தொல்-அகத்: 19)

என்றதனான், இது முடியாதோவெனின், அது கருப்பொருண் மயங்குதற்குக் கூறினான், இது மக்களேயன்றித் தலைவனுந் தலைவியும் மயங்குமாறும் நான்கு திணையும் ஒன்றொன்றனோடு மயங்குமாறுங் கூறி அது புலவராற் செய்துகொள்ளுவதோர்

உறுப்பெனவும் ஓதிவந்த இலக்கணத்த தன்றாயினும் அது பெறு மெனவும் கூறினானென்பது.[1]

**நச்சினார்க்கினியம் :**

இது துறையென்னும் உறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்) அவ்வ...றி எ-து ஐவகை நிலத்திற்கு முரியவெனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்த-வாறன்றி, பிறதிறவதின் நாடியவண் வரினும் எ-து பிறவற்றைத் திறவிதாக ஆராய்ந்த செய்யுட்கண்ணே புலவன் படைத்துச்-செய்யினும் ஒக்கும்.[2]

உ-ம். "ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்காற்
கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்
தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்
வல்லவன் றைஇய பாவைகொ னல்லா
ருறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொ லாண்டார்
கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்த ளீங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள்" (கலி-ரு )

இதனுள் ஞாழல்முடித்தாளென நெய்தற் றலைவி போலக்கூறி "ஊர்க்கா னிவந்த பொதும்பருள்" என்றதனான் மருதத்துக்-கண்டான்போலக்கூறிப் பின் குறிஞ்சிப்பொருளாகிய புணர்தல்

1. ஐவகை நிலத்திற்கும் உரியவாகக் கூறப்படும் கருப்பொருள்களுள் மக்களேயன்றித் தலைவனும் தலைவியும் நிலம்பெயர்ந்து மயங்குமாறும் முல்லை முதலாகப் பகுத்துரைக்கப்பட்ட நான்கு திணையும் ஒன்றோடொன்று மயங்கு-மாறும் கூறி இவ்வாறு முன்னர்க்கூறிய இலக்கணத்தில் அடங்காததாய்ப் புலவர்களால் செய்துகொள்ளப்படுவது 'துறை' யென்னும் செய்யுளுறுப்பாகும் எனவுணர்த்துவது இச்சூத்திரமாகும். ஆகவே இவ்விதி, கருப்பொருள் மயக்கங்-கூறும் 'எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்(தொல். அகத்திணை. ௰௯) என்னுஞ்-சூத்திரத்தால் முடியாது. ஆதலின் இதனைத் தனியே எடுத்துரைத்தார் ஆசிரியர்.

2. "அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமைச் செய்யின் அது மார்க்கமெனப்படும் என்றவாறு" எனவரும் பேராசிரியர் உரைத்தொடரைக் கூட்டி இச்சூத்திரப்பொருளை நிறைவு செய்து கொள்க.

நிமித்தம் உரிப்பொருளாக முடித்தான்.[1] இவ்வாறு மயங்கலுங் குறிஞ்சித்துறைப்பாற்பட்ட துறையுறுப்பான் வந்ததென்க. இது ஓதிய இலக்கணமன்றாயினும் முற்கூறிய பொருள்வகைபோற் புலவர் செய்ததோருறுப்பு. இதுவுங் கொள்ளப்பெறுமென்றார். இது புறத்திற்கும் ஒக்கும்.

**ஆய்வுரை :**

இது, துறையாமாறு இதுவென வுணர்த்துகின்றது.

(இ-ள்) ஐவகை நிலத்திற்கும் உரியவெனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் விலங்கு பறவை முதலியவும் தம்மில் மயங்கிவரினும் அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமல் ஒருதுறையின்பாற்படச் செய்தல் துறையென்னும் உறுப்பாம் எ-று.

எனவே, திணைக்குரிய முதலும் கருவும் முறை பிறழ வந்தாலும் இஃது இதன்பாற்படும் என்று ஒருதுறைப்பட வகுத்தற்கு ஏதுவாகியதோர் கருவி அச்செய்யுட்கு உளதாக அமைத்தல் துறை யென்னும் உறுப்பாம் என்றாராயிற்று.

உளஉ. **அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்**
**இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்**
**மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்**

**இளம்பூரணம் :**

என்—எனின். நிறுத்தமுறையானே மாட்டேறு உணர்த்துதல் நுதலிற்று.[2] (உஉ0)

**பேராசிரியம் :**

இது, மாட்டென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) பொருள் கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்யினும் அணுகிக் கிடப்பச் செய்யினும் இருவகையானுஞ் சென்று பொருள் முடியுமாற்றாற் கொணர்ந்துரைப்பச்

---

1. 'ஊர்க்கானிவந்த' என்ற கலித்தொகைப் பாடலுக்கு நச்சினார்க்கினியர் எழுதிய இவ்வுரை விளக்கம் பேராசிரியர் உரையை அடியொற்றி யமைந்தமை காண்க.

2. செய்யுளிடத்தே கூறப்படும் பொருள்கள், தொடர்நிலைகளால் சேய்மையிடத்தே நின்ற நிலையினும் அணுகிய நிலையினும் அவை தம்முள் இயைந்து பொருள்முடியும் வண்ணம் இயைத்துக் கூட்டி முடிக்கும்படி யமைவது மாட்டு என்னும் செய்யுளுறுப்பாகும் என்பது இதன் பொருளாகும்.

செய்தலை மாட்டென்னும் உறுப்பென்று சொல்லுவர் செய்யுள் வழக்கின் (எ-று.)

இதுவும் நால்வகைப் பொருள்கோ ளன்றிப் புலவரது வேறு செய்கை; அது,

"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே" (பத்துப்-பட்டின: (218-20)

என நின்றது. பின்னர்,

"வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே"
(பத்துப்.பட்டின: 300.301)

எனச் சேய்த்தாகச் சென்று பொருள் கோடலின் அஃது அகன்று பொருள் கிடப்பினும் இயன்று பொருண்முடியத் தந்து உரைத்ததாம்.[1]

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம் உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு" (முத்தொள்ளாயிரம்: 642)

என்பது, அணுகிய நிலையெனப்படும்; பிறவும் அன்ன; மாட்டுத லென்பது கொண்டுவந்து கொளுத்துதல்.[2]

---

1. பட்டினப்பாலையென்னும் வஞ்சிநெடும்பாட்டினுள் 'நாம் சென்று பொருளீட்டுங்கால் முட்டாச் சிறப்பிற் பட்டினமே கிடைத்தாலும் 'வாரிருங்-கூந்தல் வயங்கிழையாகிய தலைமகள் மனையிடத்தாளாக அவளைப் பிரிந்து பொருள் தேடுதற்பொருட்டு நின்னுடன் வரமாட்டேன் நெஞ்சமே வாழ்வாயாக' எனத் தன்னெஞ்சினை நோக்கிக்கூறும் நிலையில் அமைந்த 218-220 ஆம் அடிகளாகிய தொடரோடு அங்ஙனம் தான் தலைமகளை விட்டுப் பிரிந்து வாராமைக்குக் காரணம் கூறுவதாகிய

'திருமாவளவன் தெவ்வர்க்கு ஓக்கிய
வேலினும் வெய்யகானம்
கோலினுந் தண்ணிய தடமென்றோளே'

எனவரும் 299-301 ஆம் அடிகளாகிய தொடர் செய்மைக்கண் கிடப்பினும் இயன்று பொருள் முடியச் செய்தமையின், இஃது அகன்று பொருள் கிடப்ப அமைந்த மாட்டு என்னும் உறுப்பாயிற்று.

2. நான்கடியான் இயன்ற இப்பாடலில் 'தமிழர் பெருமானைக் கண்ணாரக் காணக்கதவு திறந்திடுமின்' எனத் 'திறந்திடுமின்' என முதலடியிலுள்ள வினை நான்காமடியின் இறுதியிலுள்ள 'கதவு' என்னும் செயப்படுபொருளோடு இயன்று முடியச் செய்தமையின் இஃது அணுகிய நிலையில் அமைந்த மாட்டு என்னும் உறுப்பாயிற்று.

**நச்சினார்க்கினியம் :**

இது மாட்டென்னும் உறுப்புக் கூறுகின்றது. மாட்டுதலாவது கொண்டு வந்து கொளுத்துதல்.

(இ-ள்.) அகன்-னும். எ-து பொருள்கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்யினும், அணுகிக்கிடப்பச் செய்யினும், இயன் தல் எ-து இவ்விருவகையானுஞ் சென்று பொருண்முடியுமாற்றாற் கொண்டுவந்து கூட்டி யுரைப்பச்செய்தல். மாட்... கின் எ-து மாட்டென்னும் உறுப்பென்று கூறுவர் செய்யுள் வழக்கினுள். எ-று.

இது மொழிமாற்றுப்பொருள்கோளன்றிப் புலவர் வேறு செய்வதோர் செய்கை. இது பலபொருட்டொடராற் பலவடியான்வரும் ஒருசெய்யுட்கண்ணும், பலசெய்யுளைப் பலபொருட்டொடரால் ஒரு கதையாகச் செய்யுமிடத்தும் வரும்.

உ-ம். **முருகாற்றுப்படையுள்**

'மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெருழுத கீழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்

நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரம்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
... ... பார் முதிர் பனிக்கடல்" (திருமுருகாற்றுப்படை)

இதனுள் அடிமுதல் மேனியீறா யுள்ளவற்றையுடைய சூரர மகளிர் பலருடனே கிள்ளி, இடையிடுபு, வைத்து, பண்ணி, செரீஇ, இட்டு, வளைஇ, திளைப்ப, கொட்டி, அப்பி, தெறியா, ஏத்திப், பாடி, ஆடும் வெற்பில் அடுக்கத்துச் சோலையிற் காந்தட்கண்ணி மலைந்த சென்னியனென அகன்றும் அணுகியும் மாட்டியவாறுணர்க. இப்பாட்டும் பிறபாட்டுக்களும் இவ்வாறே மாட்டுறுப்பு வருமாறுணர்க. "ஆரிய மன்னர் பறையின்" என்பதுமது. இனிப் பல செய்யுட்கண் வருமாறு **சிந்தாமணியுள் யாங்கூறிய வுரைகள் பலவற்றானு முணர்க**[1] அருமையும் பெருமையும் உடையவாய்ப் பரந்த சொற்றொடர்ந்து பொருள் தருவதோ ரின்பம் நோக்கிச் சான்றோர் இம்மாட்டிலக்கணமே யாண்டும் பெரும்பான்மைவரச் செய்யுள்செய்தலிற் பின்தொடர் நிலைச்செய்யுள் செய்தவர்களும் இம்மாட்டிலக்கணமே யாண்டும் வரச் செய்யுள் செய்தார். இதுவும் பொருள்வகைபோற் புலவர் செய்துகொண்டதாயிற்று.

**ஆய்வுரை :**

இது, மாட்டு என்னும் உறுப்பு உணர்த்துகின்றது.

---

1. பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி ஆகிய இலக்கியங்களுக்கு உரையெழுதியபின் தொல்காப்பியச் செய்யுளியலுக்கு நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளார் என்பது இவ்வுரைத்தொடரால் இனிது புலனாதல் காணலாம்.

(இ-ள்) செய்யுளிடத்தே கூறப்படும் பொருள் சேய்மைக் கண்ணே கிடப்பினும் அன்றி அணுகிய நிலையில் நிற்பினும் ஒரு தொடர்புபட அமைந்து பொருள் முடியும்படி கொண்டுவந்து இயைத்துணர வைத்தல் மாட்டு என்னும் உறுப்பென்று சொல்வர் செய்யுள் வழக்குணர்ந்த அறிஞர் எ-று.

செய்யுளிடத்தே அகன்றும் அணுகியும் கிடந்த பொருள்களைக் கொண்டுவந்து ஒரு தொடராகக் கூட்டி முடித்தல் மாட்டு என்னும் உறுப்பாகும் என்பதாகும். மாட்டுதலாவது, தனித்து நிற்பதனை முன்னும் பின்னும் இயைபுடையதாயுள்ள பிறிதொன்றனோடு கொண்டுவந்து கூட்டி முடித்தல்.

"இது, பல்பொருட்டொடராற் பலவடியான் வரும் ஒரு செய்யுட்கண்ணும், பல செய்யுளைப் பலபொருட் டொடரால் ஒரு கதையாகச் செய்யுமிடத்தும் வரும்" எனவும், 'அருமையும் பெருமையும் உடையவாய்ப் பரந்தசொல் தொடர்ந்து பொருள் தருவதோர் இன்பம் நோக்கிச் சான்றோர் இம்மாட்டிலக்கணமே யாண்டும் பெரும்பான்மையும் வரச் செய்யுள் செய்தார்' எனவும் கூறுவர் நச்சினார்க்கினியர்.

உதாரணம் முன்னுரைகளிற் காண்க.

உளங. மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி
உடனிலை மொழியினுந் தொடைநிலை பெறுமே.[1]

**இளம்பூரணம் :**

இவையிரண்டுஞ் சூத்திரத்தாற் பொருள் விளங்கும்
(உ0௩)

**பேராசிரியம் :**

இது, மேற்கூறியவற்றுள் ஒருசாரனவற்றுக்குப் புறனடை.

(இ - ள்.) மேற்கூறிய எச்சமும் மாட்டும் இன்றியும் அச் செய்யுளுட் கிடந்தவாறே அமையச் செய்யவும்பெறுஞ் செய்யுள் (எ - று).[2]

---

1. 'தொடர்நிலை பெறுமே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

உடனிலை மொழிதலாவது சொல் தொடர்ந்தவாறே அமைய வெளிப்படச் செய்யுள் செய்தல்.

2. உடனிலைமொழிதலாவது, செய்யுளிலமைந்த தொடர்கள் தம்முள் பொருளியை புடையனவாய்த் தொடர்ந்து கிடப்பச் செய்யுள் செய்தல்.

எச்சமும் மாட்டும் என்னாது மாட்டு முற்கூறியதென்னை யெனின் எச்சம் முதலாகிய ஐந்து உறுப்பும் இவ்விதி பெறு மென்று கோடற்கு எதிர் சென்று தழீஇயினானென்பது.[1]

(உ - ம்) "வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னா தெறிதரும் வாடையொடு
என்னா யினள்கொ லென்னா தோரே"

என்பது, எச்சமின்றி வந்தது.

"தாமரை புரையுங் காமர் சேவடி"
(குறுந்: கடவுள் வாழ்த்து)

என்பது, முன்னமின்றி வந்தது.

"மருந்தெனின் மருந்தே" (குறுந்: 71)

என்பது, பொருளின்றி வந்தது.

"அயற்புறத் தீர்ம்புறத் திருத்த" (அகம்: 8)

என்பது, துறைவகையின்றி வந்தது.

"யானே யீண்டையேனே" (குறுந்: 54)

என்பது, மாட்டின்றி வந்தது. இடைநின்ற மூன்றினை இலேசி னாற்கொண்டு இரண்டினை[2] எடுத்தோதினான். இவை இரண்டும் அவற்றதுதுணை இன்றியமையாச் சிறப்பினவல்ல என்றற் கென்பது. (உகக)

**நச்சினார்க்கினியம் :-**

இது எய்தியதுவிலக்கிற்று.

1. செய்யுளியல் முதற்சூத்திரத்துள் எண்ணியவாறு முதற்கணுள்ள எச்சத்தை இங்கு முற்கூறாது இறுதியிலுள்ள மாட்டு என்னும் உறுப்பை ஆசிரியர் முற்கூறியது இச்சூத்திரவிதியினை முற்கூறிய எச்சம், முன்னம், பொருள், துறை, மாட்டு என்னும் ஐந்துறுப்பும் பெறும் என அறிவித்தற்பொருட்டாம் என்பர் பேராசிரியர்.

2. இடைநின்ற மூன்றாவன: முன்னம், பொருள், துறை என்பன, இரண்டாவன எச்சம், மாட்டு என்பன.

(இ-ள்). தொடர்நிலையென்பது முற்கூறிய இருவகைத் தொடர்நிலைச் செய்யுள். மாட்டு றி எ-து முற்கூறிய மாட்டும் எச்சங்களும் நிறுத்தலின்றி, உடனிலைமொழியினும் பெறும் எ-து. அச்செய்யுட் கிடந்தவாறே யமையச் செய்யினுஞ் செய்யுட்டன்மையைப் பெறும். எ-று.

உ-ம். "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே"

"வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே"

அகன்று கிடந்து மாட்டின்றிவந்தது.

"யானே யீண்டையேனே" (குறுந்-ரு)

என்னும் பாட்டு அணுகி மாட்டின்றி வந்தது. **சிந்தாமணியுள்** மாட்டும் எச்சமுமின்றி யுடனிலையா யமைந்தன பலவும் **யாம் கூறியவுரையானுணர்க**. எச்சமும் மாட்டும்என்னாத முறைபிறழ்ச்சியானே எச்சமுதலிய நான்குறுப்பு மின்றி அச்செய்யுள் வரப் பெறும் என்று கொள்க.[1]

"வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர்நிலைப்
பைம்போ துளரிப் புதல நீலம்
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னா தெறிதரும் வாடையொ
டென்னா யினள்கொ லென்னா தோரே"
(குறுந்-கக0)

இது எச்சமின்றி வந்தது.

"தாமரை புரையுங் காமர் சேவடி
(குறுந்-கடவுள்வாழ்த்து)

இப்பாட்டு முன்னமின்றி வந்தது.

1. செய்யுளியல் முதற்சூத்திரத்து எண்ணிய முறையே எச்சத்தினை முற்கூறாது 'மாட்டு' என்னும் உறுப்பினை முற்கூறிய பிறழ்ச்சியாலே எடுத்தோதிய மாட்டிற்கும் எச்சத்திற்கும் இடையே யெண்ணப்பட்ட முன்னம், பொருள், துறைவகை என்னும் உறுப்புக்க ளில்லாமலும் செய்யுள் வரப்பெறும் என்பதாம்.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே"
(குறுந் ௭௧)

இப்பாட்டுப் பொருளின்றிவந்தது.

"ஈயற்புற்றத்து" (அகம் ௭)

என்னும் பாட்டுத் துறைவகையின்றி வந்தது. மாட்டும் எச்சமு மெடுத்தோதினார் முன்னமும் பொருளுந் துறைவகையும்போல இன்றியமையாச் சிறப்பினவல்ல வென்றற்கு.[1]

**ஆய்வுரை :**

இது, மேற்கூறியவற்றுள் ஒருசாரனவற்றுக்குப் புறனடை கூறுகின்றது.

(இ-ள்) முற்கூறிய மாட்டு, எச்சம் என்னும் இவ்வுறுப்புக்கள் மேற்கூறிய மாத்திரை முதலிய ஏனை யுறுப்புக்கள் போன்று அத்துணை இன்றியமையாதன அல்ல என்பது பெறப்படும். உடனிலை மொழிதலாவது, அகன்றும் அணுகியும் உள்ள சொற்களைக் கொண்டுவந்து கூட்டவேண்டாது அவைதாமே ஒருங்கு இயைந்து நின்று பொருள் தரும்படி ஒருங்கு இணைந்து கிடக்கும்படிச் செய்யுள் செய்தல். நிறுத்தமுறையானே எச்சமும் மாட்டும் என்னாது மாட்டும் எச்சமும் என 'மாட்டு' என்பதனை முற்கூறிய அதனால் மாட்டு முதல் அதற்குமுன்னர்க் கூறப்பட்ட எச்சம் என்பது இறுதியாகவுள்ள ஐந்துறுப்புக்களுள், இடையே எண்ணப்பட்டுள்ள துறை, பொருள்வகை, முன்னம் என்னும் மூன்றுறுப்புக்களும் செய்யுட்கு இன்றியமையாதன அல்ல என்பது இலேசினாற் கொள்ளப்படும் எனவும் இவ்வைந்தனுள் மாட்டு எச்சம் என்னும் இரண்டையும் ஆசிரியர் எடுத்தோதினமையால் இடைநின்ற மூன்றுறுப்புக்களைப் போன்று இவையிரண்டும் அத்துணை இன்றியமையாச் சிறப்பின அல்ல எனவும் கருத்துரை வரைவர் பேராசிரியர்.

---

1. முன்னம், பொருள், துறைவகை என்னும் மூவகை யுறுப்புக்களையும் கிளந்து கூறாது மாட்டு, எச்சம் என்னும் இரண்டினையுமே ஆசிரியர் எடுத்தோதினமையால் அவை மூன்றும் மாட்டு எச்சம் என்னும் இரண்டினைப்போல அத்துணை இன்றியமையாச் சிறப்பின அல்ல என்பது ஆசிரியர் கருத்தாதல் புலனாம்.

உளசு. 'வண்ணந் தாமே நாலைந் தென்ப,[1]

## இளம்பூரணம் :

என்-எனின். இனி நிறுத்தமுறையானே வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வண்ணமாவன இருபதாம். என்றவாறு. அவற்றின் பெயர் வருகின்ற சூத்திரத்தாற் காட்டுதும். (உ௦சு)

## பேராசிரியம் :

இது, முறையானே ஈற்றுநின்ற வண்ணம் இத்துணைப் பகுதித் தென்கின்றது.

(இ-ள்). வண்ணம் இருபது வகைப்படும் (எ-று).

வண்ணமென்பது, சந்தவேறுபாடு. நூறும் பலவுமாகி வேறுபடினும் அவை ஈண்டடங்குமென்பதூஉம், அவ்வேறுபாட் டானெல்லாஞ் சந்த வேற்றுமை செய்யா வென்பதூஉங் கூறிய வாறு. அது நுண்ணுணர்வுடையார்க்குப் புலனாமென்பது.[2]

(உகஉ)

## நச்சினார்க்கினியம் :

இது முறையே வண்ணம் இத்தனை பகுதித்தென்கின்றது.

(இ-ள்). வண்ணந்தாம் இருபதென்று கூறுவர் புலவர்.(எ-று) தானேயென்றார், அவை நூறும் பலவுமாக வேறுபடக்-கொள்ளினும் இவ்விருபதின்கண்ணே யடங்கும் வேறு சந்த-வேற்றுமை செய்யாவென்றற்கு. அது நுண்ணுணர்வுடை-யோர்க்குப் புலனாமென்றுணர்க.[3]

---

1. 'வண்ணந்தானே' என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைகளிற் காணப்படும் பாடம். வண்ணமாவது- எழுத்துவகையான் அமையும் சந்தக் கூறுபாடு. நாலைந்து-இருபது.

2. வண்ணம் நூறும் அதற்குமேலும் என்போர் யாப்பருங்கலவாசிரியர் முதலியோர். அன்னோர்கூறும் வண்ணங்கள் யாவும் ஆசிரியர் தொல்-காப்பியனார் கூறிய இருபது வண்ணங்களுள் அடங்கும். அன்றியும் அன்னோர் கூறும் வண்ணங்கள் இவ்விருபது வண்ணங்களைப் போன்று சந்தவேறுபாடு செய்யமாட்டாவாதலின் அவர் கூறும் வண்ணப்பகுப்பினாற் பயன் சிறிதுமில்லை யென்பது நுண்ணுணர்வுடையார்க்கு நன்கு புலனாம் என்பதாம்.

3. பேராசிரியர் கருத்தும் இதுவே என்பது முன்னர் விளக்கப்பட்டது.

**ஆய்வுரை :**

இது, வண்ணம் ஆமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) 'வண்ணமாவன இருபது வகைப்படும் என்பர் ஆசிரியர். எ-று.

வண்ணம் என்பது, பாவின்கண்ணே நிகழும் ஓசை விகற்பமாகிய சந்தவேறுபாடு. அவை பின்வரும் சூத்திரங்களில் விரித்துரைக்கப்படும்.

உ௭௫. அவைதாம்
பாஅ வண்ணம் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்
அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்
எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்
தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணமென்று
ஆங்கென மொழிப[1] அறிந்திசி னோரே.

**இளம்பூரணம் :**

என்—எனின், வண்ணத்திற்குப் பெயர் கூறுதல் நுதலிற்று.

இதுவுஞ் சூத்திரத்தாற் பொருள் விளங்கும். (உ௦௫)

**பேராசிரியம் :**

இது, மேற்கூறப்பட்ட வண்ணங்களது பெயர் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) மேற்சொல்லிய நாலைந்து வண்ணமும் இவ்விருபது பெயர் வேறுபாட்டினவென்று சொல்லுப அவற்றை உணர்ந்த ஆசிரியர் (எ-று).

இது, முறையாயினவாறென்னையெனின், இது, வரலாற்று முறைமையென்றற்கு 'ஆங்஖னம்[2] மொழிப அறிந்திசினோ'-ரென்றானென்பது. அவையாமாறு சொல்லுகின்றான். (உ௧௬)

1. 'ஆங்஖னமொழிப' எனப் பேராசிரியரும், 'ஆங்஖னமறிப, என நச்சினார்க்கினியரும் பாடங்கொள்வர். ஆங்கு-அத்தன்மைய. அறிந்திசினோர்-அறிந்தோர்.

2. ஆங்஖னம்-அம்முறைப்படி; வரலாற்றுமுறைப்படி. 'ஆங்கென' என்பது இளம்பூரணருரையிலுள்ள பாடமாகும்.

**நச்சினார்க்கினியம் :-**

இது மேற்கூறப்பட்ட வண்ணங்களினது பெயர்வேறுபாடு கூறுகின்றது

(இ ள்). முற்கூறிய நாலைந்தும் அவ்விருபது பெயர் வேறு ...[1]

**ஆய்வுரை :**

இது, மேற்குறித்த வண்ணங்களின் பெயர்களை விரித்துக் கூறுகின்றது.

(இ-ள்) வண்ணமாவன பாஅவண்ணம், தாஅவண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இயைபு வண்ணம், அளபெடை வண்ணம், நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம், சித்திர வண்ணம், நலிபு வண்ணம், அகப்பாட்டு வண்ணம், புறப் பாட்டு வண்ணம், ஒழுகு வண்ணம், ஒரூஉ வண்ணம், எண்ணு வண்ணம், அகைப்பு வண்ணம், தூங்கல் வண்ணம், ஏந்தல் வண்ணம், முருட்டு வண்ணம், முடுகு வண்ணம் என மேற்குறித்த அவை என்று கூறுவர் வண்ணத்தியல்பறிந்த ஆசிரியர் எ-று.

ஆங்கு என மொழிப - மேற்குறித்த அவையென்று கூறுவர்.

உளசுை அவற்றுட்
பாஅ வண்ணம்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்

**இளம்பூரணம் :**

என்-எனின். பா வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பாஅ வண்ணமாவது சொற்சீரடியாகி நூலின் கட் பயின்றுவரும் என்றவாறு.[2]

'அ இ உ அம்மூன்றுஞ் சுட்டு,' (தொல். எழுத். நூன்மரபு.௩க)
'கொல்லே ஐயம் எல்லே இலக்கம்' (தொல். சொல் இடை-
(உ0)

என வரும். (உசு0)

**பேராசிரியம் :**

இது, நிறுத்த முறையானே பாஅவண்ண முணர்த்துதல் நுதலிற்று.

---

1. இச்சூத்திரவுரை சிதைந்துள்ளது.

2. சொற்சீர்த்துஆகி-சொற்சீரடிகளையுடையதாகி. நூல்-சூத்திரயாப்பான் இயற்றப்படும் இலக்கணநூல். தொல்காப்பியமாகிய இந்நூல் இங்குக்கூறிய பாஅவண்ணத்திற்குரிய இலக்கியமாகத் திகழ்தல் காணலாம்.

(இ - ள்.) பாஅவண்ணமென்பது, நூற்பாவண்ணம் (எ-று)

எற்றுக்கு? 'நூற்பாற்பயிலு'மென்றமையின்.[1] இது சொற்சீரடித்தாகி வருமென்பது. இதனுட் 'பயிலு'மெனவே அந்நூற்பாவினுளல்லது அகவலுள் இத்துணைப் பயிலாதென்பது;[2] இது,

"வடவேங்கடந் தென்குமரி" (தொல்: பாயிரம்)

எனவும்,

"எழுத்தெனப் படுப அகரமுத
னகர விறுவாய் முப்பஃ தென்ப"
(தொல் எழுத்து-நூன்: 1)

எனவும்,

"அவற்றுள், அஇஉ,
எஒ என்னு மப்பா லைந்தும்" (தொல்-எழுத்-நூன்: 3)

என்பது சொற்சீராகி அகவலுட் பயிலாது வந்தது. சொற்சீரடியென்னாது 'சொற்சீர்' என்றான் அடியோடு தொடராதுஞ் சொற்சீர் வருமாதலினென்பது. அவை,

"நன்றுபெரி தாகும்" (தொல்-சொல்-உரிச்: 45)

என்றாற்போல வேறாகி நிற்பன. கலியுள்ளும் பரிபாடலுள்ளுஞ் சொற்சீர்வருமென மேற்கூறினானாகலின் அவற்றுள்ளுஞ் சந்த-வேற்றுமைப்பட்டன பாஅவண்ணமேயா மென்பது. (உ௧௪)

**நச்சினார்க்கினியம் :**

206முதல் 210 வரை ஐந்து சூத்திரங்கட்கு உரையில்லை

**ஆய்வுரை :**

இது, பாஅவண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) அவற்றுள், பாஅவண்ணம் என்பது சொற்சீரடியினையுடையதாகி நூற்பாவாகிய சூத்திரத்தின்கண் பயின்று வரும் எ-று.

ஈண்டு 'நூல்' என்றது, இலக்கணச் சூத்திரமாகிய நூற்பாவினையுணர்த்தி நின்றது. வண்ணங்களுக்குரிய உதாரணங்கள் முன்னைய உரைகளிற் காட்டப்பெற்றன.

---

1. நூற்பாப்பயிலும் என்றமையால் ஈண்டுப் 'பா' என்றது, சூத்திரமாகிய நூற்பாவினை. 'நூற்பாப்பயிலும்' என்பதே பேராசிரியர் கொண்ட பாடம் எனக்கருத வேண்டியுளது.

2. பயிலுதல் - பெரும்பான்மையாய் வருதல். நூற்பாவிற் சொற்சீர்த்தாகிப் பயிலும் எனவே ஆசிரியப் பாவில் சொற்சீர் அத்துணைப் பயிலாது என்பதாம்.

உ௱௭. தாஅ வண்ணம்
இடையிட்டு வந்த எதுகைத் தாகும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். தாஅவண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தாஅ வண்ணமாவது இடையிட்டெதுகையான் வரும் என்றவாறு.[1]

உதாரணம்

"தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் கலுழ
வாடா அவ்வரி தகைஇப் பசலையும்
வைக றோறும் பைபையப் பெருக
நீடார் இவணென நீமனங் கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழீ
வாடாப் பௌவம் அறமுகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே"
(யாப். வி. ப. ௩௮௧)

என்னும் பாட்டு. (உ௦௭)

**பேராசிரியம் :**

(இ-ள்) இடையீடுபடத் தொடுப்பது தாஅவண்ணம் (எ-று)

அவை பொழிப்பும் ஒரூஉவு மாகலின் எதுகையென வரைந்து கூறினானென்பது.[2] அடியிடையிட்டு வருவது தொடை வேற்று மையாவதல்லது வண்ணவேற்றுமை யாகாதென்பது. ஒரு செய் யுளுட் பலஅடிவந்தால் அவைஎல்லாம் இடையிட்டுத்தொடுத்தல் வேண்டுமோவெனின், வேண்டா; அவை வந்தவழித் தாஅ

---

1. தவளை பாய்ந்தாற்போன்று ஓரடிவிட்டு ஓரடியில் தாவியமைந்த எதுகையையுடையது தாஅ வண்ணம் என்பதாம். தாவுதல்-இடைவெளியுளதாகத் தாவிக்குதித்தல்.

2. இடையிடடுவருதல் எனவே ஓரடிக்குள் பொழிப்பும் ஒரூஉவுமாகி வருதல் எதுகைக்குரிய தனிச் சிறப்பாதலின் 'எதுகைத்தாகும்' என எதுகைத் தொடையை விதந்து கூறினார்.

வண்ண மெனப்படுமென்பது:[1] எனவே, இவ்வண்ண வகைக-ளெல்லாஞ் செய்யுண் முழுவதுமே பெறுவனவாகக் கொள்ளக்-கிடந்தனவல்ல; இவற்றை உறுப்பென்ற தன்மையாற் கந்திருவ நூலார் வண்ணங் கூறியவாறுபோல ஒரு செய்யுளுட்பலவும் வரப் பெறுமென்பதாம்.[2] அவை,

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு" (திருமுரு: 1)

எனவும்,

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை" (ஐங்குறு-ப: 456)

எனவும் வரும். பிறவும் அன்ன. (௨௪௫)

**ஆய்வுரை :**

இது, தாஅவண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) தாஅவண்ணம் என்பது, எதுகை இடையிட்டு வரத் தொடுக்கப்படுவதாகும் எ-று.

ஒன்றிடையிட்டு வருதல் தாவுதலாதலின் இடையிட்டு வந்த எதுகையினை யுடையது தாஅவண்ணம் ஆயிற்று.

**உ௪அ. வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே.[3]**

**இளம்பூரணம் :**

என்—எனின். வல்லிசை வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வல்லெழுத்து மிக்குவருவது வல்லிசை வண்ணமாம் என்றவாறு.

"பட்டொட்டி யன்ன தொடர்புமுடப் புன்னைக்கீழ்க்
கட்டிட்டுக் கண்ணி தொடுப்பவர் தாழைப்பூத்
தொட்டிட்டுக் கொள்ளுங் கடற்சேர்ப்பன் நின்னொடு
பட்டொட்டி யுள்ளம் விடாது நினையுமேன்
விட்டொட்டி நீங்காதே ஒட்டு"
(யாப்.வி.ப.௩அஉ) (உ0அ)

---

1, அடியிடையிட்டு வருதல் தொடைவேற்றுமை யாவதன்றி வண்ண வேற்றுமையாகாது. ஒருசெய்யுளுட் பல அடி வந்தால் அவையாவும் இடையிட்டுத் தொடுக்கப்பெறுதல் வேண்டுமென்னும் நியதியில்லை. இடை-யிட்டுத் தொடுத்த வழி அது தாஅவண்ணம் எனப்படும் என்பதாம்.

2, வண்ணவகையாவும் செய்யுள் முழுவதுமே பெறக் கிடப்பன அல்ல; இசை நூலார் வண்ணங் கூறியவாறுபோல ஒரு செய்யுளுள்ளே வண்ணங்கள் பலவரு-தலும் உண்டு என்பதாம்.

3. 'வல்லெழுத்துப் பயிலும்' எனப் பாடங் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். வல்லிசை - வல்லோசை.

**பேராசிரியம் :**

(இ-ள்) வல்லிசைவண்ணம் வல்லெழுத்துப் பயின்று வரும் (எ-று.)

வல்லெழுத்துப் பயின்று வருதலால் அப்பெயர்த்தாயிற்று.[1]

''முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்''
(பத்துப்-பட்டினப்:21)

எனவும்,

''முட்டாட் டாமரைத் துஞ்சி'' (பத்துப் திருமுருகு: 73)

எனவும் வரும், பிறவும் அன்ன. (உகசு)

ஆய்வுரை -:

இது, வல்லிசை வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) வல்லொற்று மிக்கு வருவது வல்லிசை வண்ணமாகும் எ-று.

**உளக. மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே.**

**இளம்பூரணம் :**

என்—எனின். மெல்லிசை வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மெல்லெழுத்து மிக்கது மெல்லிசை வண்ணமாம் என்றவாறு.[2]

''பொன்னின் அன்ன புன்னை நுண்தாது
மணியின் அன்ன நெய்தலங் கழனி
மனவென உதிரு மாநீர்ச் சேர்ப்ப
மாண்வினை நெடுந்தேர் பூண்மணி யொழிய
மம்மர் மாலை வாநீ
நன்மா மேனி நயந்தனை எனினே'' (யாப்.வி.ப.௫௬௨)

என வரும். (உ0௬)

**பேராசிரியம் :**

(இ-ள்.) மெல்லெழுத்து மிகுவது மெல்லிசை வண்ணம் (எ-று.)

ஒரு செய்யுண் முழுவதும் ஓரினத்தெழுத்தே பயிலச்செய்தால் இன்னாதாதலின் இவை உறுப்பெனப்பட்டு இடையிட்டு

1. வல்லெழுத்துப்பயின்று வருதலால் வல்லிசை வண்ணம் என்னும் பெயருடையதாயிற்று.

2. மெல்லிசை-மெல்லோசை.

வருமென்றானென்பது.[1] அவ்வாறு செய்யின் அவை மிறைக்கவி யெனப்படும். ஒழிந்த எழுத்திற்கும் இஃதொக்கும்.[2]

"பொன்னி னன்ன புன்னை நுண்டாது"

(யா·வி·ப: 352)

என மெல்லெழுத்துப் பயின்றவாறு; (உகஎ)

**ஆய்வுரை :**

இது, மெல்லிசை வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) மெல்லொற்று மிக்கு வருவது மெல்லிசை வண்ணமாகும் எ-று.

**உஎ௰. இயைபு வண்ணம் இடைஎழுத்து மிகுமே.**

**இளம்பூரணம் :**

என்-எனின். இயைபு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று[3]

(இ-ள்) இடையெழுத்துமிக்கு வருவது இயைபுவண்ண மாம் என்றவாறு.

"வால்வெள் ளருவி வரைமிசை இழியவும்
கோள்வல் உழுவை விடரிடை இயம்பவும்
வாளுகிர் உளியம் வரையகம் இசைப்பவும்
வேலொளி விளக்கிநீ வரினே
யாரோ தோழி வாழ்கிற் போரோ"

(யாப். வி. ப நூஅநூ)

என வரும். (உகO)

**பேராசிரியம் :**

(இ-ள்) இடையெழுத்து மிகுவது இயைபு வண்ணம் (எ-று).

"அரவி னதிர வுரீஇய வரகுகதிரின்"

---

1. ஒருசெய்யுள் முழுவதும் ஓரினத் தெழுத்தே பயின்று வரச் செய்தல் கேட்போர்க்கு இன்னாவோசைத்தாமாதலின், அங்ஙனம் ஓரினத்தெழுத்தே முழுதும் வாராது உறுப்பாயஎழுத்துக்கள் இடையிடையே மிக்குப் பலவாய் வரும் என்றார் ஆசிரியர்.

2. இவ்வியல்பு ஏனையவண்ணங்களின் உறுப்பாய எழுத்துக்களுக்கும் ஒக்கும்.

3. வன்மைக்கும் மென்மைக்கும் இடைநிகர்த்த ஓசையினைப் பெற்று வருவது இயைபு வண்ணமாகும்,

என இடையெழுத்து மிக்கு வந்தமையின் இயைபு வண்ணமா யிற்று. மென்மை வன்மைக்கு இடை நிகரவாகிய எழுத்தான் வருதலின் இயைபுவண்ண மென்றார்.[1] (ந.அஉ)

**ஆய்வுரை :**

இஃது இயைபு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) இடையின வொற்று மிக்கு வருவது இயைபு வண்ணமாகும் (எ-று)

**உகக. அளபெடை வண்ணம் அளபெடை பயிலும்.**

**இளம்பூரணம் :**

என் - எனின். அளபெடை வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ- ள்.) அளபெடைபயின்று வருவது அளபெடை வண்ணமாம் என்றவாறு.[2]

"தாஅட் டாஅ மரைமலர் உழக்கி
பூஉக் குவளைப் போஓ தருந்திக்
காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்
மாஅத் தாஅள் மோஒட் டெருமை"

(யாப் வி.ப. கரு௬அ)

என வரும். (உகக)

**பேராசிரியம் :**

(இ-ள்). இரண்டளபெடையும்[3] பயிலச் செய்வன அள பெடைவண்ணமாம் (எ-று).

"மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்" (அகம்: 99)

என்பது அளபெடைவண்ணம்.

"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்"

(பத்துப் மலைபடு; 352)

என்பதும் அது. (உகக)

---

1. ஈண்டு 'இயைபு' என்றது, மென்மைக்கும் வன்மைக்கும் இடை- நிகர்த்தாம் தன்மையினை.

2. மாத்திரைமிக்கொலிக்கும் அளபெடை பெற்றுவருவது அளபெடை வண்ணமாகும்.

3. உயிரளபெடை, ஒற்றளபெடை என்னும் இரண்டளபெடையும்.

**நச்சினார்க்கினியம் :**

(இ-ள்.) இரண்டளபெடையும் பயிலச் செய்வது. எ-று[1]

உ-ம். "மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்"
"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்"

எனவரும்.

"தாஅம் படுநர்க்குத் தண்ணீ ருளகொல்லோ
வாஅம் பல்விழி யன்பனை யறிவுறில்
வாஅம் புரவி வழுதியொ டெம்மிடைத்
தோஒ நுவலுமிவ் வூர்"

இஃதளபெடைத் தொடையாம்.

**ஆய்வுரை :**

இஃது, அளபெடை வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்). அளபெடை பயின்று வருவது அளபெடை வண்ணமாகும் எ-று.

**உ௲உ நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்.**

**இளம்பூரணம் :**

என்—எனின். நெடுஞ்சீர் வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நெட்டெழுத்துப் பயின்று வருவது நெடுஞ்சீர் வண்ணமாம் என்றவாறு.[2]

"நீரூர் பானா யாறே காடே
நீலூர் காயாப் பூவீ யாவே
காரூர் பானா மாவே யானே
யாரோ தாமே வாழா மோரே
ஊரூர் பாகா தேரே
பீரூர் தோளாள் பேரூ ராளே" (யாப். வி. ப. ௩௮௩)

என வரும். (உ௲உ)

1. 'அளபெடை' எனப் பொதுப்படக் கூறினாராயினும் உயிரளபெடை. ஒற்றளபெடை இரண்டையும் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

2. நெடுஞ்சீர் என்றது, நீரூர், பானா. என்றாற்போன்று நெட்டெழுத்துக் களாலியன்ற சீர்களை.

**பேராசிரியம் :**

(இ-ள்) நெட்டெழுத்துப் பயின்றுவருவது நெடுஞ்சீர் வண்ணம் (எ-று).

அது,

"மாவா ராதே மாவா ராதே" (புறம்: 273)

என்பது, நெடிதாய் வருவது நெடுஞ்சீரெனப்பட்டது.[1] (உஉ0)

**நச்சினார்க்கினியம் :**

இது நெடுஞ்சீர்வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) நெடுஞ்சீர்வண்ணமாவது நெட்டெழுத்துப் பயின்று வரும். எ-று

உ-ம். "மாவா ராதே மாவா ராதே"

எனவரும்.

"நீரூர் பானா யாறே காடே
நீலூர் காயாப் பூவீ யாதே
யூரூர் பாகா தேரே
பீரூர் தோளாள் சீறூ ரோளே"

இதுவு மிறைக்கவியாம்.[2]

**ஆய்வுரை :**

இது, நெடுஞ்சீர் வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) நெட்டெழுத்துப் பயின்று வருவது நெடுஞ்சீர் வண்ணம் எனப்படும் எ-று.

நெட்டெழுத்துப் பயின்று வருஞ்சீர் நெடுஞ்சீர் எனப்பட்டது.

---

1. நெட்டெழுத்தாலியன்ற சீர் நெடுஞ்சீர் எனப்பட்டது.

2. மிறைக்கவி - சித்திரகவி. இப்பாடல்,

"நீரூர் பானா யாறே காடே
நீலூர் காயாம் பூவீ யாதே
காரூர் பானா மாலே யானே
யாரோ தாமே வாழா மோரே
ஊரூர் பாகா தேரே
பீரூர் தோளாள் பேரூ ராளே"

என ஆறடிகளால் இயன்றதாக யாப்பருங்கலவிருத்தியில் நெடுஞ்சீர் வண்ணத்திற்கு உதாரணமாகக் காட்டப்பெற்றுள்ளது.

உகங குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்.

**இளம்பூரணம் :**

என்--எனின். குறுஞ்சீர் வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) குற்றெழுத்துப் பயின்று வருவது குறுஞ்சீர் வண்ணமாம் என்றவாறு.[1]

"உறுபெய லெழிலி தொகுபெயல் பொழியச்
சிறுகொடி அவரை பொரிதளை யவிழக்
குறிவரு பருவம் இதுவென மறுகுபு
செறிதொடி நலமிலை யழியல்
அறியலை அரிவை கருதிய பொருளே"

(யாப். வி. ப. ௩அ௪)

எனவரும். (உகங)

**பேராசிரியம் :-**

(இ-ள்.) குற்றெழுத்துப் பயில்வது குறுஞ்சீர்வண்ணம் (எ-று).

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (அகம் 4:)

எனவரும்.[2] (உஉ)

**நச்சினார்க்கினியம் :**

இது குறுஞ்சீர்வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) குறுஞ்சீர்வண்ணமாவது குற்றெழுத்து மிக்குவரும் எ-று.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி"

(அகம்-௪)

எனவரும்.

"உறுபெய லெழிலி...கருதிய பொருளே"

இதுவும் மிறைக்கவியாம்.[3]

---

1. குறுஞ்சீர் என்றது உறுபெயல், எழிலி யென்றாற்போன்று குற்றெழுத்-துக்களாலியன்ற சீர்களை.

2. குற்றெழுத்தால் இயன்றசீர் குறுஞ்சீர் எனப்பட்டது.

3. குறுஞ்சீர்வண்ணம் பயின்று வரும் செய்யுளும் சித்திரகவியாகும் எனக்-கொள்வர் நச்சினார்க்கினியர்.

**ஆய்வுரை :**

இது, குறுஞ்சீர் வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) குற்றெழுத்துப் பயின்று வருவது குறுஞ்சீர் வண்ணம் எனப்படும் எ-று.

குறுஞ்சீர் - குற்றெழுத்துப் பயின்று வருஞ்சீர்.

**உகசு. சித்திர வண்ணம்**

**நெடியவுங் குறியவும் நேர்ந்துடன் வருமே.**

**இளம்பூரணம் :-**

என் — எனின். சித்திர வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்) சித்திர வண்ணமாவது நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் சார்ந்துவரும் என்றவாறு.[1]

"ஓரூர் வாழினுஞ் சேரி வாரார்
சேரி வரினும் ஆர முயங்கார்" (குறுந். உ௩௧)

என வரும். (கஉசு)

**பேராசிரியம் :-**

(இ-ள்) சித்திரவண்ணம் நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் ஒப்ப விராஅய்ச் செய்யப்படுவது (எ-று,)

அது,

"சார னாட நீவர லாறே"

என வரும்.

சித்திரவண்ணமென்பது பலவண்ணம்படச் செய்வதாகலின் அப்பெயர்த்தாயிற்று.[2] (உஉஉ)

**நச்சினார்க்கினியம்:**

இது சித்திரவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) சித்திரவண்ணமாவது நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் ஒப்பவிராய்ச் செய்வது. எ-று.

---

1. சேரி, ஆர என்றாற் போன்று நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் ஒத்து வருஞ் சீர்களால் இயன்றது சித்திரவண்ணமாகும்,

2. சித்திரம்-ஓவியம். ஓவியம் போன்று பலவண்ணம் பொருந்தச் செய்யப்படுதலின் சித்திரவண்ணம் என்னும் பெயர்த்தாயிற்று. நேர்தல்-தம்முள் ஒத்தமைதல்.

"சார னாட நீவர லாறே"

எனவரும்.[1]

"ஊர்வழியூர் தெர்தார் வாசி பேரச்
சேரி சார்வரி தொல்லாதிப்
பீர்தீர் தோழி தோளே"

இதுவும் மிறைக்கவியாம்.[2] பல்வண்ணம் படுதலின் இதனைச் சித்திர வண்ணமென்றார்.

ஆய்வுரை :-

இது, சித்திர வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) சித்திர வண்ணமாவது நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் ஒப்ப விவர வருவதாகும் எ று

**உ௬௫ நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்.**

**இளம்பூரணம் :-**

என் — எனின். நலிபுவண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஆய்தம் பயின்றுவருவது நலிபுவண்ணமாம் என்றவாறு.[3]

"அஃகாமை செல்வத்துக் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்" (குறள்.௧௭௮)

என வரும். (உ௬௫)

---

1. "சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
வாரல் வரினே யானஞ் சுவலே
சார னாட நீவர லாறே"

எனவரும் பாடல் சித்திரவண்ணத்திற்கு எடுத்துக்காட்டாகும்.

2. இச்செய்யுளின் திருந்தியவடிவம் புலனாகவில்லை.

"ஊர வாழி ஊர தேர
தார வாரி பேர சேரி
கார வேரி பாய வாரி
பீர நீர தோழி தோளே"

என யாப்பருங்கலவிருந்தியிற் சித்திரவண்ணத்திற்கு உதாரணமாகக் காட்டப்பட்ட பாடல் இச்செய்யுளின் திருந்திய வடிவமாகக் கொள்ளத்தகுவதாகும்.

3. ஆய்தம் பெற்று நுணுகிய ஓசையினதாய் வருவது நலிபுவண்ணம் எனப்படும்.

பேராசிரியம் :-

(இ-ள்). ஆய்தம் பயின்று வருவது நலிபுவண்ணமாம் (எ-று)

அஃது,

"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை"
(குறள் 178)

எனவும்,

"னஃகான் றஃகா னான்க னுருபிற்கு"
(தொல்-எழுத்-புணர் 21)

எனவும் வரும். நலிபென்பது ஆய்தம்[1] (உஉ௯)

நச்சினார்க்கினியம் :-

இது நலிபுவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) நலிபுவண்ணம் ஆய்தம் பயின்று வரும். எ-று.

"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள் (திருக்-௧௭௮)

"னஃகான் றஃகா னான்கனுரு பிற்கு"
(தொல், எழுத்-உக)

எனவரும். நலிபென்பது ஆய்தம்.[2]

"எஃகோ டவன்கேட்ப வேமறந்தாள் போதென்றா
பஃகுநீர்க் கான்யாற் றவிர்மண லெக்கர்மேல்"

என்றாற் றொடைப்பாற்படும்.

ஆய்வுரை :-

இஃது, நலிபு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஆய்தவெழுத்துப் பயின்று வருவது நலிபு வண்ணமாகும் எ-று.

ஆய்தம் நலிந்து கூறும் ஓசையாதலின் ஆய்தம் பயின்ற செய்யுள் நலிபு வண்ணத்திற்கு இலக்கியமாயிற்று.

---

1. குற்றெழுத்திற்கும் உயிரொடுபுணர்ந்த வல்லெழுத்திற்கும் இடையே சுருங்கிய ஓசையதாய் நலிவுற்றொலிப்பது ஆய்தமாதலின் அவ்வெழுத்துப் பயின்ற பாடலின் ஓசை நலிபு வண்ணம் என்னும் பெயர்த்தாயிற்று.

1. பேராசிரியரும் இவ்வாறே பொருள் கொண்டார்.

௨௧௬ அகப்பாட்டு வண்ணம்
முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே.

இளம்பூரணம் :-

என்—எனின். அகப்பாட்டு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அகப்பாட்டு வண்ணமாவது முடியாத்தன்மையான் முடிந்ததன் மேலதென்றவாறு.[1]

"பன்மீன் உணங்கற் படுபுள் ளோப்பியும்
புன்னை நுண்தாது நம்மொடு தொடுத்தும்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றி
தோழி நீங்காமை சூளில் தேற்றியும்
மணந்ததற் கொவ்வான் தணந்து புறமாறி
இனைய னாகி ஈங்குனைத் துறந்தோன்
பொய்த லாயத்துப் பொலங்கொடி மகளிர்
கோடுயர் வெண்மணல் ஏறி
ஓடுகலம் எண்ணும் துறைவன் தோழி"
(யாப். வி. ப. ௩௮௫)

என வரும். (௨௧௬)

பேராசிரியம் ;-

(இ-ள்.) அகப்பாட்டு வண்ணமென்பது இறுதியடி இடையடி போன்று நிற்பது (எ-று).

அவையாவன: முடித்துக் காட்டும் ஈற்றசை ஏகாரத்தானன்றி, ஒழிந்த உயிரீற்றானும் ஒற்றீற்றானும் வருவன; அவை -

"தலழ்பவை தாமு வவற்றோ ரன்ன" (தொல்-மர ;5)

எனவும்,

"உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்"
(ஐங்குறு ; 21)

எனவும்,

1. சொல்லக்கருதியபொருள் முற்றுப்பெற்ற நிலையில் செய்யுள் முடியாதது போன்று அமைந்த ஓசைத்திறம் அகப்பாட்டு வண்ணமாகும்,

செய்யுளின் எல்லைக்குள் அகப்பட்டு ஒடுங்கிய பொருளையுடையதாய்ச் செய்யுள் முடியாதுபோன்றமைந்த ஓசைத்திறம் அகப்பாட்டுவண்ணமாகும். அகப்படுதல்-கூறக்கருதியபொருள் செய்யுளில் அடங்குதல்.

"கோடுயர் வெண்மணை லேறி
யோடுகலன் எண்ணுந் துறைவன் றோழி;

எனவும்,

"ஆணமில் லபாருளெமக் கமர்ந்தனை யாடி"
(கலி: கடவுள் வாழ்த்து)

எனவும்,

"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ"
(அகம்-46)

எனவும், இவை ஆசிரிய ஈற்றன.

"குளிறு குரலருவிக் குன்றத் திதண்மேற்
களிறு வருவது கண்டு—வெளிலென்ன
லாயினான் பின்னை யணங்கிற் குயிரளித்துப்
போயினான் யாண்டையான் போன்ம்"

என இதனுள் இறுதியடி முடியாத்தன்மையின் முடிந்ததாகலின் அகப்பாட்டு வண்ணமாயிற்று.

"கொடி யுவணத் தவணரோ"

எனக் கலிப்பாவுள் அரோவந்து பின் முடியாத்தன்மையின் முடிந்தது.

**ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என்பனவற்றான் ஆசிரியம் இறுமென வரையறுப்பாருண்மையின்** அவ்வச் சொல்லானே அவை முடிந்தனவென்று கொள்வலெனின்—அங்ஙனம் வரையறையில வென்பது மேற்காட்டிய உதாரணங்களால் அறிந்தாமாகலின் அக்கடா வண்ணமென வரையறுப்பார் மேற்றென விடுக்க.[1]

**நச்சினார்க்கினியம் :**

இஃது அகப்பாட்டுவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்). அகப்பாட்டுவண்ணமாவது முடித்துக்காட்டாத் தன்மையாலே முடிந்ததன்மேலே நிற்பதாம். எ-று.[2]

---

1. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என்பனவற்றால் ஆசிரியப்பா முடியும் என்னும் வரையறை பொருந்தாதென்பது இவ்வுரையில் எடுத்துக்காட்டிய ஆசிரியப்பாக் களாற் புலனாகும், ஆகவே ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என்னும் ஈற்றால் ஆசிரியம் முடியும் என்னும் அவ்வரையறை பொருந்துமா என்னும் வினா வண்ணத்தை வரையறுப் போர் கேட்டற்குரிய எதிர் வினாவாகும் என்பதாம்.

2. செய்யுளின் இறுதியடிபோலும் முற்றோசை பெறாது இடையடி போல மேலுந் தொடரு மோசையினதாய் நிற்றல் அகப்பாட்டு வண்ணம் என்பது கருத்து.

அது தன்னை முடித்தற்குரிய ஈற்றசை யேகாரத்தான் வாராது இறுதி இடையடிபோன்று நிற்பது.

"பன்மீ னுணங்கற் படுபுள் ளோப்பியும்
புன்னை நுண்டாது நம்மொடு தொகுத்தும்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியு
மணந்ததற் கொவ்வான் றணந்துபுற மாறி
யினைய யனாகி யீங்குத் துறந்தோன்
பொய்த லாயத்துப் பொலந்தொடி மகளிர்
கோடுயர் வெண்மண லேறி
யோடுகல னெண்ணுந் துறைவன் றோழி"

"ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி"

எனவரும்.

**ஆய்வுரை :**

இஃது, அகப்பாட்டு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) அகப்பாட்டு வண்ணம் என்பது, செய்யுள் ஓசை முடிவு பெறாதது போன்ற தன்மையதாய்ப் பொருள் முடிந்து வருவது எ-று.

அஃதாவது, பாட்டினது முடிபினை விளக்கி வரும் ஈற்றசை யேகாரம் முதலியவற்றால் முடியாது ஒழிந்த மெய்யீற்றாலும் உயிரீற்றாலும் முடிந்து நிற்பது அகப்பாட்டு வண்ணம் என்பதாம். 'பன் மீனுணங்கற் படுபுள் ளோப்பியும்' என இளம்பூரணருரையிற் காட்டப்படும் மேற்கோட் செய்யுளில் 'இனையனாகி யீங்குத் துறந்தோன் ......... ஓடுகல னெண்ணுந் துறைவன் தோழி' எனவரும் இறுதிப்பகுதி, பாட்டு முடியாதது போன்ற ஓசையினதாய்ப் பாட்டிற் கூறப்படும் பொருள் முற்றி நிற்கும் நிலையிற் செய்யுள் முடிந்த தன்மையதாய் வருதலின் அகப்பாட்டு வண்ணமாயிற்று.

௨௧௭ புறப்பாட்டு வண்ணம்
முடிந்தது போன்று முடியா தாகும்.

இளம்பூரணம் :-

என்—எனின் புறப்பாட்டு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). புறப்பாட்டுவண்ணமாவது முடிந்தது போன்று முடியாதாகிவரும் என்றவாறு.[1]

உ—ம்

“நிலவுமண லகன்துறை வலவ னேவலின்
எரிமணிப் புள்ளின மொய்ப்ப நெருநலும்
வந்தன்று கொண்கன் தேரே இன்றும்
வருகுவ தாயின் சென்று சென்று
தோன்றுபு துதைந்த புன்னைத் தாதுகு
தண்பொழில் மெல்லக வனமுலை நெருங்கப்
புல்லின் எவனோ மெல்லியல் நீயும்
நல்காது விடுகுவை யாயின் அல்கலும்
படர்மலி உள்ளமொடு மடல்மா வேறி
உறுதுயர் உலகுட னறியநம்
சிறுகுடிப் பாக்கத்துப் பெரும்பழி தருமே”

(யாப். வி. ப.௩அரு)

என வரும். (உகஎ)

**பேராசிரியம் :**

(இ-ள்) புறப்பாட்டு வண்ணமென்பது, இறுதியடிப் புறத்ததாகவுந் தான் முடிந்தது போல நிற்றல்.[2] (எ-று).

“இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே” (புதம்.363)

என்புழி ஈற்றயலடி ‘முன்னிய வினையே’ யென முடிந்தது போன்று முடியாதாயிற்று.[3] (உஉரு)

---

1. செய்யுள்முடிந்த நிலையிலும் அதனாற் சொல்லக்கருதிய பொருள் செய்யுளின் புறத்தேயும் விரிந்துநிற்பது போன்று அமைந்த ஓசைத்திறம் புறப்பாட்டு வண்ணமாகும்.

புறப்படுதல்-கூற எடுத்துக்கொண்டபொருள் கூறி முடித்த நிலையிலும் செய்யுள் முடியாததுபோன்று முடிந்துநிற்கும் ஓசைத்திறம்.

2. இறுதியடியிலுள்ள அடி பாட்டு முடிந்ததுபோன்ற ஓசையினாதல்.

3. ‘செய்ந்நீ முன்னிய வினையே’ எனவரும் ஈற்றயலடி செய்யுள் முடிந்தது போன்று காட்டினும் அதன் முடிபாகிய ஓசைத்திறம் ‘முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே’ என அதன்புறத்தே இறுதியடியில் அமைந்து கிடத்தலின் இது புறப்பாட்டு வண்ணமாயிற்று.

**நச்சினார்க்கினியம்:**

இது புறப்பாட்டு வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) புறப்பாட்டு வண்ணமாவது இறுதியடிப் புறத்த-தாகவுந் தான் முடிந்ததுபோன்று நிற்றல். எ-று.[1]

"இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே"
(புறம்·௩௬௩)

'முன்னியவினையே' முடிந்ததுபோன்று முடியாதாயிற்று.

**ஆய்வுரை :**

இது, புறப்பாட்டு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) புறப்பாட்டு வண்ணமாவது 'முடிந்தது போன்று முடியாததாகி' வருவது எ-று.

அஃதாவது பாட்டின் முடிபினை யுணர்த்தும் இறுதியடி புறத்தே நிற்கவும் அதற்கு முன்னுள்ள இடையடி முடிந்தது போன்ற ஓசையினதாய் நிற்பது புறப்பாட்டு வண்ணமாகும் என்பதாம்.

'இருங்கட லுடுத்தஇப் பெருங்கண் மாநிலம்' (புறம்-363) எனவரும் புறப்பாடலில்,

'இன்னாவைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் றுறந்தே'

என்புழி, ஈற்றயலடி 'முன்னிய வினையே' என முடிந்தது போன்று நிற்பினும், முடிவு பெறாது 'முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே' என ஈற்றடியைக் கொண்டு பொருள் முடிவுபெற வேண்டுதலின், இது முடிந்தது போன்று முடியா-தாகிய புறப்பாட்டு வண்ணத்திற்கு உதாரணமாயிற்று.

---

1. பாட்டினை முடிக்கும் இறுதியடி பின்தொடரும் நிலையிலும் அதற்கு முன்னுள்ள அடி முடிந்தது போன்று முற்றிய ஓசையினதாய் வருவது புறப்பாட்டு வண்ணம் என்பதாம்.

உகஅ. ஒழுகு வண்ணம் ஓசையி னொழுகும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். ஒழுகு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஓசையான் ஒழுகிக்கிடப்பது ஒழுகுவண்ணமாம் என்றவாறு.[1]

உ-ம் "அம்ம வாழி தோழி காதலர்
இன்முன் பனிக்கும் இன்னா வாடையொடு
புன்கண் மாலை அன்பின்று நலிய
உய்யலள் இவளென உணரச் சொல்லிச்
செல்லுநர்ப் பெறினே செய்ய வல்ல
இன்னளி யிறந்த மன்னவர்.
பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே."
(யாப். வி. ப. ருஅரு)
(உஅக)

எனவரும்.

**பேராசிரியம் :**

(இ-ள்) முற்கூறிய வகையானன்றி ஒழுகிய லோசையாற் செல்வது ஒழுகுவண்ணம் (எ-று).

ஒழிந்தனவும் ஒழுகுமாயினும் அவை வேறுவே றிலக்கண முடையன என்பது.[2]

"அம்ம வாழி தோழி காதலர்க்
கின்னே பனிக்கு மின்னா வாடையொடு
புன்கண் மாலை யன்பின்று நலிய
வுய்யல ளிவள்" (யா. வி. ப. 638) (உஉரு)

எனவரும்.

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஒழுகுவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) முற்கூறியவாறன்றி யொழுகிய வோசையாற் செய்வது ஒழுகு வண்ணம். எ-று.

---

1. ஆற்றொழுக்கினைப்போன்று இடையீடின்றித் தொடர்ந்து செல்லும் ஓசைத்திறம் ஒழுகுவண்ணம் எனப்படும்.

2. ஒழுகியலோசையாற் செல்லுதல் பிற வண்ணங்கட்கும் ஒக்குமாயினும் அவை தமக்கென வேறுவேறு இலக்கணமுடையனவாதலின் அவற்றால் வேறு வேறு பெயர் பெறுவனவாயின என்பதாம்.

ஒழிந்தனவும் ஒழுகுமேனும் அவற்றின் வேறிலக்கணமுடைய.[1]

"அம்ம வாழி தோழி காதல
ரின்னே பனிக்கு மின்னா வாடையொடு
புன்கண் மாலை யன்பின்று நலிய
வுய்யல ளிவளென் றுணரச் சொல்லிச்
செல்லுநர்ப் பெறினே சேய வல்ல
வின்னினி யிறந்த மன்னவர்
பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே"

எனவரும்.

## ஆய்வுரை :

இஃது ஒழுகுவண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஒழுகு வண்ணமாவது (யாற்றொழுக்குப் போன்று தொடர்ந்து) ஒழுகிய ஓசையால் இயன்றதாகும் எ-று.

உ-ம். யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா

எனவரும்.

உ௯௯. ஒரூஉ வண்ணம் ஒரூஉத்தொடை தொடுக்கும்[2]

## இளம்பூரணம் :

என் — எனின். ஒரூஉ வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஒரூஉ வண்ணமாவது நீங்கின தொடையாகித் தொடுப்பது என்றவாறு.

அது செந்தொடையாம்.[3]

உ-ம் "தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே
யான்சென் றுரைப்பின் மாண்பின் றெவனோ
சொல்லாய் வாழி தோழி வரைய

1, இது, பேராசிரியர் தரும் விளக்கத்தை அடியொற்றியது. யாற்றொழுக்குப்-போல ஒழுகும் ஓசையினையுடையது ஒழுகு வண்ணம் எனக்கொள்க.

2. 'ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும்' எனப் பேராசிரியரும் நச்சினார்க்-கினியரும் பாடங்கொண்டனர். ஒரூஉதல்-நீங்குதல். செய்யுட்குரிய மோனை-யெதுகை முதலியன நீங்கிய நிலையில் தொடுக்கப்படும் ஓசைத்திறம் ஒரூஉ வண்ணம் எனப்படும்.

3, செந்தொடையால் வருவது ஒரூஉவண்ணமாம் என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

முள்ளிற் பொதுளிய அலங்குகுலை நெடுவெதிர்
பொங்குவா விளமழை துவைப்ப
மணிநிலா விரியுங் குன்றுகிழ வோற்கே''
(யாப். வி.ப. ௩அ௬) (உகக)

எனவரும்.

**பேராசிரியம்:**

(இ-ள்.) யாற்றொழுக்குப்போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றனை அவாவாமை அறுத்துச் செய்வது ஒரூஉவண்ணம்[1] (எ-று).

ஒரீஇத்தொடுத்தலென்பது எல்லாத் தொடையும் ஒரீஇச் செந்தொடையால் தொடுத்தலென்பாரும் உளர். செந்தொடையுந் தொடையாகலான் அற்றன்றென்பது;[2] அது,

"யானே யீண்டை யேனே யென்னலனே
யானா நோயொடு கான லஃதே
துறைவன் றம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே'' (குறுந்: 97)

எனவரும்.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே'' (புறம்: 235)
என்பதும் அது.

யாப்புப் பொருணோக்கியவாறுபோல இது பொருணோக்காது ஓசையே கோடலானும் அடியிறந்து கோடலானும் யாப்பெனப்படாது.[3] (உஉஎ)

---

1. ஒரீஇத் தொடுத்தல் என்பது செய்யுளிற் சொல்லிய தொடர்ப்பொருள்கள் பிறிதொன்றனை யவாவாது தனித்தனியே முடிய ஆற்றொழுக்குப்போல அறுதிப்பட்டுச் செல்லுதல்.

2. ஒருதொடையும் அமையப்பெறாதது செந்தொடையென்பது பிற்கால யாப்பிலக்கண நூலார் கொள்கை. செயற்கையாகப் பறித்துத் தொடுக்கப்படும் மாலைபோலாது கொன்றையும் கடம்பும்போலத் தன்னியல்பில் அமைந்த தொடை செந்தொடைதொடையென்பது தொல்காப்பியனார் கருத்தாகும். ஆகவே ஓரீஇத்தொடுத்தல் என்பது எல்லாத் தொடையும் நீக்கித் தொடுத்தல் செந்தொடை யென்றல் பொருந்தாது என்பதாம்.

3. முற்கூறிய செய்யுளுறுப்புக்களுள் யாப்பு என்னும் உறுப்பு செய்யுளுட் கூறப்படும் பொருளை நோக்கியதாய் அடிவரம்பினதாய் அமையும். வண்ணமாகிய இவ்வுறுப் புப்பொருளை நோக்காது ஓசையையே கொண்டுநிற்கும். அவ்வோசை அடியினைக் கடந்தும் கொள்ளப்படும். எனவே யாப்பு வேறு வண்ணம் வேறு; வண்ணம் யாப்பெனப்படாது என்பதாம்.

**நச்சினார்க்கினியம் :**

இஃது ஒரூஉவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்) ஒரூஉவண்ணமாவது யாற்றொழுக்குப்போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றினை யவாவாமை அறுத்துச் செய்வது. எ-று.

"யானேயீண் டையேனே யென் னலனே
யானா நோயொடு ...... மன்றத் தஃதே''
(குறுந்-கூ௭)

எனவரும்.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே'' (புறம்-உ௩௫)

என்பதுமது. இஃது யாப்புப்போலப் பொருணோக் கோசையே கோடலானும் அடியிறந்து கோடலானும் யாப்பெனப்படாது. இனியெல்லாத் தொடையும் ஒரீஇச் செந்தொடையாற் றொடுப்பது ஒரூஉவண்ணமெனக்கூறிப் "பூத்த வேங்கை'' என்பது உதாரணங்காட்டுவது தொடைப்பகுதியாம்.[1]

**ஆய்வுரை :**

இது ஒரூஉ வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஒரூஉ வண்ணமாவது ஒரூஉத் தொடை தொகுத்து வருவதாகும் எ-று.

ஒரூஉத் தொடையாவது நடு இருசீர்க்கண்ணும் இன்றி முதற்சீர்க்கண்ணும் நாலாஞ்சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பதாகும். 'இருசீர் இடையிடின் ஒரூஉவென மொழிப' (செய்யுள் .95) என்பது தொல்காப்பியம்.

(உ-ம்.) அம்பொற் கொடிஞ்சி நெடுந்தே ரகற்றி
என்றாற்போன்று ஒரூஉத் தொடை யமைய வருவது ஒரூஉ வண்ணமாகும்.

இனி, 'ஒரூஉத்தொடை' என்பதற்கு 'நீங்கிய தொடை' அஃதாவது செந்தொடை எனப் பொருள் கொள்வர் இளம்பூரணர். 'ஒரூஉ வண்ணம் ஒரீஇத்தொடுக்கும்' எனப்

1. இங்ஙனம் காட்டுபவர் பிற்கால யாப்பிலக்கண வுரையாசிரியர்கள், செந்தொடை என்பது தொடைப்பகுதியாதலின் அதனை வண்ணத் திற்கு உதாரணங் காட்டுதல் பொருந்தாது என்பதாம்.

பாடங்கொண்டு, "யாற்றொழுக்குப் போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றனை அவாவாமை அறுத்துச் செய்வது ஒரூஉ வண்ணம்" எனப்பொருள் வரைந்தார் பேராசிரியர். 'ஒரீஇத்தொடுத்தல்' என்பது' எல்லாத் தொடையும் ஒரீஇ (நீங்கி)ச் செந்தொடையால் தொடுத்தல் எனப்பொருள் கொண்டாரும் உளர். செந்தொடையும் 'தொடை யாகலால்' அவர் கூற்றுப் பொருந்தாது என மறுத்தார் பேராசிரியர்.

"யானே யீண்டை யேனே, யென்னலனே
ஆனா நோயொடு கான லஃதே"

என இங்ஙனம் பிறிதொன்றனை யவாவாது அறுத்துச் செல்லும் ஓசையுடையது ஒரூஉ வண்ணமாம் என்பது பேராசிரியர் கருத்தாகும்.

**உஉம் எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும்.**

**இளம்பூரணம் :**

என் எனின். எண்ணுவண்ணம் உணர்த்துதல் நுதலிற்று (இ-ள்) எண்ணுப் பயின்றுவருவது எண்ணுவண்ணமாம் என்றவாறு[1]

உ-ம் "நிலம்நீர் வளிவிசும் பென்ற நான்கின்
அளப்பரியையே
நாள்கோள் திங்கள் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை"
(பதிற்றுப். கச)

எனவரும். (உஉO)

**பேராசிரியம் :**

(இ-ள்) எண்ணுப் பயில்வது எண்ணுவண்ணம் (எ-று)

இஃது அடியெண்ணுப் பயிறலான்[2] எண்ணுவண்ணமெனக் காரணப்பெயராயிற்று. அவை,

---

1. எண்ணுவண்ணம் என்பது எண்ணுதற் பொருளில் வரும் ஓசைத்திறமாகும்.

2. அடியெண்ணுப் பயிறலாவது,
'நிலநீர்நெருப்புயிர் நீள்சுப்பு நிலாப்பகலோன்'
என்றாங்கு அடிதோறும் எண்ணுதற்பொருள் பயின்று வருதல். 'எண்' என்னும் ணகர வீற்றுப் பெயர். உகரச் சாரியை பெற்று 'எண்ணு' என வழங்கப் பெற்றது.

"நன்னன் ஏற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" (அகம்: 44)

என்றாற் போல்வன.

"நுதலுந் தோளுந் திதலை யல்குலும்" (அகம்: 119)

என்பதும் அது (உஉஅ)

**நச்சினார்க்கினியம் :-**

இது எண்ணுவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) எண்ணு வண்ணமாவது அடிக்கண்ணே பயின்று வருவது. எ-று.[1]

இது காரணப்பெயர்

"நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கட் கன்டி
பொன்னணி வல்விற் பொன்றுறை யென்றாங்கு"
(அகம் சுசு)

எனவரும்.

"நாள்கோ டிங்கண் ஞாயிறு கனையழல்"
(பதிற்று-இரண்டு-கசு)

"நுதலுந் தோளுந் திதலை யல்குலும்"
(அகம்-கககூ)

என்பதுமது.

**ஆய்வுரை :**

இஃது, எண்ணு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) எண்ணுதற் பொருண்மை பயின்று வருவது எண்ணு வண்ணம் எனப்படும் எ-று.

(உ-ம்.) நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய் புணர்ந்து
நின்றான்

எனவரும். (திருவாசகம்)

---

1. 'எண்ணுவண்ணமாவது அடிக்கண்ணே எண்ணுப் பயின்று வருவது எ-று' என்றிருத்தல் வேண்டும்.

''எண்ணுவண்ணம் என்பது, செவ்வெண்ணினாலும் உம்மை யெண்ணினாலும் எனவெண்ணினாலும் என்றா வெண்ணினாலும் பிறவும் யாதானுமோர் எண்ணினாலும் வருவது என்பர் யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர்.

உஉக அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். அகைப்பு வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அறுத்தறுத் தியலுவது அகைப்பு வண்ணமாம் என்றவாறு.[1]

(உ-ம்) "தொடுத்த வேம்பின்மிசைத் துதைந்த போந்தையிடை
அசைத்த வாரமலைப் பட்டு ரண்ணலென்பான்
இயன்ற சேனைமுர சிரங்குந் தானையெதிர்
முயன்ற வேந்தருயிர் முருக்கும் வேலினவன்"
(யாப். வி. ப. நஅஎ) (உஉக)

எனவரும்.

**பேராசிரியம் :**

(இ-ள்) அறுத்தறுத்துப் பயில்வது அகைப்புவண்ணம் எ-று.

இது விட்டுவிட்டுச் சேறலின் அகைப்புவண்ணமென்னும் பெயர் பெற்றது.

"வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி" (குறுந்-110)

என்புழி, ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் அறுத்தொழுகிய அகைப்புவண்ணமாம்.[2] (உஉக)

**நச்சினார்க்கினியம் :**

இஃது அகைப்புவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) அகைப்புவண்ணமாவது விட்டுவிட்டுச் சொல்லும் ஓசையையுடையது. எ-று

அகைத்தல் அறுத்தலாதலிற் காரணப்பெயர். ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில்பயின்றும் அற்றும் வருவது.

---

1. அகைத்தல்-தொடர்த்துசெல்லும் ஓசையினை இடையிடையே துணித்து நிறுத்தல்.

2. அகைத்தல்-பிளவுபட அறுத்தல்; 'வாராராயினும்' என ஒருவழி நெடில் பயின்றும், 'வரினும்' என ஒருவழிக் குறில் பயின்றும் ஓசையறுத்து நிற்றலின் இஃது அகைப்பு வண்ணமாயிற்று.

"வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியாரோ தோழி" (குறுந்-௧௧௦)

எனவரும்.

"தொடுத்தவேம் பின்மிசைத் துதைபோந் தையிடை
யடுத்தவ ரருமலை யட்டுண் டுண்ண
லென்பா னியன்ற வேனை முயற்சி
யர்பசும்பு தானை யெதிர்முயன்ற வேந்த
ருயிர்முடிக்கும் வேலின் னவன்"[1]

என்பதுமது.

**ஆய்வுரை :**

இஃது, அகைப்பு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) அறுத்தறுத்தொழுகும் ஓசையினதாய் வருவது அகைப்பு வண்ணமாகும் எ-று.

அறுத்தறுத்தொழுகலாவது, விட்டுவிட்டுச் செல்லுதல். ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் வருதல் இதன் இயல்பாகும்.

---

1. இச்செய்யுள் யாப்பருங்கலவிருத்தியிற் பின்வருமாறு காணப்படுகிறது.

''தொடுத்த வேம்பின் மிசைத்துதைந்த போந்தை
அடைய அசைத்த ஆர்மலைப் பாட்டூர்
அண்ணல் என்போன் இயன்ற சேனை
முரசிரங்கும் தானையெதிர் முயன்ற
வேந்தருயிர் முருக்கும் வேலினன் னவன்''

எனவரும். இங்ஙனம் அமைந்த செய்யுளமைப்பில் அறுத்தறுத்துச் சொல்லு-மோசையாகிய அகைப்பு வண்ணம் புலப்படவில்லை. எனவே இச்செய்யுள் வடிவம் ஏடெழுதுவோரால் அடிபிறழ்ந்து வாசிக்கப்பெற்றதெனக் கருத-வேண்டியுள்ளது. யாப்பருங்கல விருத்தியிலும் நச்சினார்க்கினிய ருரையிலும் காணப்படும் இச்செய்யுளடிகளை ஒப்புநோக்கி,

''தொடுத்த வேம்பின்மிசைத் துதைந்த போந்தையிடை
அடுத்தவ ரருமலை யட்டுண் டுண்ண
ஆர்மலைப் பாட்டூர் அண்ண லென்பான்
இயன்ற சேனைமுர சிரங்குந் தானையெதிர்
முயன்ற வேந்தருயிர் முடிக்கும் வேலின்னவன்''

என அடிவரையறை செய்யின் இச்செய்யுள், விட்டுவிட்டுச்செல்லும் ஓசையாகிய அகைப்பு வண்ணத்திற்கு இலக்கியமாதல் நன்கு புலனாம்.

உஉஉ. தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்.

**இளம்பூரணம் :**

என்—எனின். தூங்கல் வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தூங்கல் வண்ணமாவது வஞ்சியுரிச்சீர் பயின்று வரும் என்றவாறு.[1]

(உ-ம்) "வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்" (பட்டினப். க)

எனவரும். (உஉஉ)

**பேராசிரியம் :**

(இ-ள்). தூங்கல்வண்ணந் தூங்கலோசைத்தாகி வருவது (எ-று).

வஞ்சியென்பது, வஞ்சித்தூக்குப்போல இதுவும் அற்றுச் சேறலுடைத்தென்பது.[2]

அது,

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்"
(முத்தொள்ளாயிரம்: 104)

என நின்ற தொடர்நிலைக்கண்ணே அத்தூங்கல் கண்டுகொள்க. இக்கருத்தறியாதார் கலிப்பாவினுள் வஞ்சிப்பாப் பிறக்குமென வும் வஞ்சியுட் கலிப்பாப் பிறக்குமெனவும் மயங்குப.[3] (உ௩O)

**நச்சினார்க்கினியம் :**

இது தூங்கல்வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) தூங்கல்வண்ணமாவது தூங்கலோசைத்தாகி வரும் எ-று[4]

1. வஞ்சிப்பாவிற்குரிய தூங்கலோசையமையவரும் ஓசைத்திறம் தூங்கல் வண்ணமாகும்.

2. இங்கு வஞ்சியென்றது, வஞ்சிப்பாவினையன்றி வஞ்சிப்பாவுக்குரிய தூங்கலோசையினை யுணர்த்தியதாகக் கொண்டார் பேராசிரியர்.

3. இங்ஙனம் மயங்கிக் கூறுவார் இன்னாரென்பது நன்கு புலப்படவில்லை.

4. "தூங்கல் வண்ணம் என்பது, பெரும்பான்மையும் வஞ்சி பயின்று வருவது" என்பர் யாப்பருங்கல விருத்தியாசிரியர்.

அது வஞ்சிபோ லற்றுச் சேறல்.[1]

“யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணரான்
றேனூடும்” (முத்தொள்.)

எனத்தூங்கல் வண்ணம் வந்தது.

**ஆய்வுரை :**

இது, தூங்கல் வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) தூங்கல் வண்ணமவது வஞ்சிப்பாவிற்குரிய வஞ்சி-யுரிச்சீர் பயின்று வருவதாகும் எ-று.

**உ௨௩. ஏந்தல் வண்ணம்**

**சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்.**

**இளம்பூரணம் :**

என்—எனின். ஏந்தல் வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஏந்தல் வண்ணமாவது சொல்லிய சொல்லினானே சொல்லப்பட்டது சிறக்கவரும் என்றவாறு.[2]

உதாரணம்

உ-ம் “கூடுவார் கூடல்கள் கூட லெனப்படா
கூடலுட் கூடலே கூடலுங்—கூடல்
அரும்பிய முல்லை யரும்பவிழ் மாலைப்
பிரிவிற் பிரிவே பிரிவு” (யாப்.வி.ப.௩௮௮)

(உ௨௩)

என வரும். (உ௩௨)

**பேராசிரியம் :**

(இ-ள்) சொல்லிய சொல்லானே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வது ஏந்தல் வண்ணம் (எ-று).[3]

---

1. இங்கு ‘வஞ்சி’ என்றது, வஞ்சிப்பாவினைமட்டுங் குறிப்பதன்று; வஞ்சித் தூக்குப் போன்று அற்றுச் செல்லும் ஓசையினைக் குறிப்பதாகும்.

2. சொல்லியசொற்களை மேலும்மேலும் தாங்கிநிற்றலால் ஓசை ஏந்தல் வண்ணமாகும்.

ஏந்தல் வண்ணத்திற்கு இத்தொல்காப்பியச் சூத்திரமே இலக்கியமாக அமைந்துள்ளமை காண்க.

3. சொல்லிய சொல்லினாலே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வது ஏந்தல் வண்ணம். எனவே, அதன்கண் முன்னர்ச் சொல்லப்பட்ட ஒரு சொல்லே பலவாக மிக்குவரும் எனக் கொண்டனர் உரையாசிரியர்கள்.

ஏந்தலென்பது, மிகுதல்; ஒரு சொல்லே மிக்கு வருதலின் ஏந்தல் வண்ண மென்றாயிற்று. அது,

''வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்'' (நாலடி 4-9) எனவரும். (உ௩க)

**நச்சினார்க்கினியம்:**

(இது) ஏந்தல் வண்ணங் கூறுகின்றது.

(இ-ள்.) ஏந்தல் வண்ணமாவது ஒருகாற் சொல்லிய சொல்லானே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்தல். எ-று [1]

ஏந்தல் ஒருசொன்மிகுதல்.

உ-ம் ''வைகலும் வைகல் ...... துணரா தார்'' (நாலடி கூ௩)

''கூடுவார் கூடல்கள் கூட லெனப்படா
கூடலுட் கூடலிலே கூடலுங் -கூட
லரும்பிய முல்லை யரும்பவிழ் மாலைப்
பிரிவிற் பிரிவே பிரிவு''

எனவரும் [2]

**ஆய்வுரை :**

இஃது ஏந்தல் வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஏந்தல் வண்ணமாவது, சொல்லிய சொல்லினாலே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வதாகும். எ-று.

ஏந்தல்-மிகுதல். ஒரு சொல்லே மிக்கு அடுக்கி வருதலின் ஏந்தல் வண்ணம் என்னும் பெயர்த்தாயிற்று.

ஏந்தல் வண்ணத்திற்கு இலக்கணம் கூறும் இந்நூற்பாவே அதற்குரிய இலக்கியமாகவும் அமைந்திருத்தல் அறியத்தகுவதாகும்.

**உஉச. உருட்டு வண்ணம் அராகந் தொடுக்கும்.**

**இளம்பூரணம் :**

என்—எனின். உருட்டு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. 'ஏந்தல்வண்ணம் என்பது, சொல்லிய சொல்லிற் சிறந்து வருவது', என்பர் யாப்பருங்கலவிருத்தியாசிரியர்.

2. யாப்பருங்கலவிருத்தி மேற்கோள்.

(இ-ள்.) உருட்டு வண்ணமாவது அராகந் தொடுக்கும் என்றவாறு.[1]

உ-ம் "தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்" (யாப். வி. ப.உ௬௪)

எனவரும்.

**பேராசிரியம் :**

(இ ள்.) உருட்டிச் சொல்லப்படுவது அராகமாகலின் அராகந் தொடுப்பது உருட்டு வண்ணமாம் (எ-று).

"உருமுரறு கருவிய பெருமழை தலைஇய" (அகம் 158)

எனவும்,

"எரியுரு வுறழ விலவ மலர." (கலி33)

எனவும் வரும். இது நெகிழாது உருண்டவோசையாகலிற் குறுஞ்சீர் வண்ணமெனப்படாது உருட்டுவண்ணமெனப்படு மென்பது.[2] (உ௩உ)

**நச்சினார்க்கினியம் :**

இஃது உருட்டுவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்) உருட்டுவண்ணமாவது அராகந்தொடுக்குமது எ-று.[3]

உருட்டிச் சொல்லப்படுவது அராகமாதலின், ஞெகிழாதுருண்ட வோசைத்தாகலின், இது குறுஞ்சீர்வண்ணத்தின் வேறாம்.

உ-ம் உருகெழு முருகிய முருமென வதிர்தொறு
மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்"

எனவரும்.[4]

---

1. அராகம்-முடுகியல். முடுகியலாகவும் நெகிழாது உருண்ட ஓசையினதாகவும் வருவது உருட்டு வண்ணமாகும்.

2. குற்றெழுத்துப்பயின்று வருதல் குறுஞ்சீர் வண்ணத்திற்கும் அராகத்திற்கும் ஒக்குமாயினும் குறுஞ்சீர் வண்ணம் நெகிழ்ந்த ஓசையதாய் வரும். அதுபோல் இடையறவுபட நெகிழ்தலின்றி விரைந்து உருள்வதுபோலும் ஓசையினதாதலின் அராகந்தொடுத்து வருவதாகிய இது உருட்டு வண்ணம் என்னும் பெயர்த்தாயிற்று.

3. உருட்டுவண்ணம் என்பது, அராகத்தொடைமேல் வருவது" என்பர் யாப்பருங்கலவுரையாசிரியர்"

4, இங்கு எடுத்துக்காட்டிய அராகவுறுப்பு இவ்வியல் ௪உ௫-ஆம் சூத்திரவுரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ள 'செஞ்சுடர் வடமேரு' என்னும் முதற்குறிப்புடைய இடையளவு அம்போதரங்க ஒருபோகிற்கு உரியதாகும்.

**ஆய்வுரை :**

இஃது, உருட்டு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) உருட்டு வண்ணமாவது அராகம் தொடுக்கப் பெறுவதாகும் எ-று.

'நெகிழாது உருண்ட வோசையாகலிற் குறுஞ்சீர் வண்ணமெனப்படாது. உருட்டு வண்ணம் எனப்பட்டது என்பர்' பேராசிரியர்.

உஉரு. முடுகு வண்ண முடிவறி யாமல்
அடியிறந் தொழுகி அதனோர் அற்றே.[1]

**இளம்பூரணம் :**

என் — எனின். முடுகு வண்ணம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்! முடுகு வண்ணமாவது நாற்சீரடியின் மிக்கோடி அராகத்தோடு ஒக்கும் என்றவாறு.[2]

உதாரணம்

உ-ம் 'நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇ'
(கலித். ந. கூ.) (உஉரு)

**பேராசிரியம் :**

(இ-ள்) முடுகுவண்ணமென்பது, நாற்சீரடியின் மிக்கு ஓரடி[3] அராகத்தோடொக்கும்[4] (எ-று)

---

1. 'முடுகு வண்ணம் என்பது அடியிறந்தோடிய ததனோரற்றே' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம்.

இச்சூத்திரத்தின் முதலடியிலுள்ள 'முடிவறியாமல், என்ற தொடருக்குரிய விளக்கம் இளம்பூரண ருரையிற் காணப்படாமையாலும் இப்பாடம் ஏனைய உரையாசிரியர்களாற் குறிக்கப்படாமையாலும் இத்தொடர் பிற்காலத்தில் ஏடெழுதுவோராற் சேர்க்கப் பெற்றதெனவே கொள்ளவேண்டியுளது.

2. இங்கு 'அடி' என்றது நாற்சீரடியினை. இறந்து ஓடுதல்-நாற்சீரெல்லை மிக்கு ஐஞ்சீர் முதலாக நீண்டு செல்லுதல். அதனோரற்று-மேற்குறித்த அவ்வராகத்தினையொத்து முடுகிச் சொல்லும் அத்தன்மையதாகும்.

3. 'அடியிறந்தோடி' என்பதற்கு ஏற்ப 'நாற்சீரடியின் மிக்கு ஓடி' என உரைப்பகுதியைத்திருத்துக. அடியென்றது நாற்சீரடியினை. இறந்து ஓடுதலாவது, நாற்சீரடியினைக் கடந்து மிக்க சீர்களையுடைய அடியினதாய் விரைந்து செல்லும் ஓசையினதாதல்.

4. அதனோரற்று - (மேற்குறித்த) அராகத்தோடு ஒக்கும். எனவே நாற்சீரடியுட்பட்டு உருண்ட ஓசையினதாய் வருவது உருட்டு வண்ணம் எனவும்,

அது,

"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசலையு மம்பலும்" (கலி: 39)

எனவரும்.

இவற்றைக் 'கொச்சகம் அராகம்' (செய் ௪௨௧) எனவுஞ் 'சொற்சீரடியும் முடுகியலடியும்' (செய் ௪௨௨) எனவும் பரி-பாடற்கு வேறுபடுத்தோதினான்இவ்வேறுபாடு நோக்கியென்பது. (௨௩௩)

**நச்சினார்க்கினியம் :**

இது முடுகுவண்ணங் கூறுகின்றது.

(இ-ள்) முடுகுவண்ணமாவது முடுகியல்தொடுத்த அடியோடு பிறவடி வேறுபடத் தொடர்ந்தோடுவது. எ-று.

உ-ம். "நெறியறி செறிகுறி புறிதிரிபு" (கலி-௩௯)

என்னுஞ் சுரிதகமும்,

"இரிபெழு பதிர்பதிர் பிகந்து" (கலி-௧௦௪)

என்பது முதலியனவுமாம். இவை வேறுபாடு நோக்கி'[1] யிதனைச் சொற்சீரடியும் முடுகியலடியுமெனப் பரிபாடற்கு விதந்-தோதினார்.

**ஆய்வுரை :**

இது, முடுகு வண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) நாற்சீரடியின்மிக்கு ஓடி உருட்டு வண்ணத்தை யொத்து அராகந் தொடுத்து வருவது முடுகு வண்ணம் எனப்படும் எ-று.

உதாரணம் முன்னைய உரைகளிற் காட்டப்பெற்றது.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

நாற்சீரடியினைக் கடந்து விரைந்த ஓசையினதாய்] வருவது முடுகுவண்ணம் எனவும் இவ்விரண்டற்குமுள்ள வேறுபாட்டினை விளங்கயுணர்த்தியவாறு நன்கு பெறப்படும். "அராகந்தொடுத்த அடியொடு பிறவடி தொடர்ந்தோடுவது" எனவும் பாடம் உண்டு. "முடுகுவண்ணம்" என்பது, அடியற்ற வழி அறிய-லாகாதாய் நீண்ட அடித்தாய் அராகம் தொடுத்து வருவது. என்னை?

'முடுகு வண்ணம் முடிவறி யாமல்
அடியிறந் தொழுகு மதனோ ரற்றே'

என்றாராகலின்" என வரும் யாப்பருங்கலவிருத்தியுரையில் இத்தொல்காப்பியச் சூத்திரம் பாடவேறுபாட்டுடன் எடுத்தாளப் பெற்றுள்ளமை ஒப்புநோக்கியுணரத் தகுவதாகும்.

1. 'இவ்வேறுபாடு நோக்கி' என்றிருத்தல் வேண்டும்.

உஉகூ வண்ணந் தாமே அவையென மொழிப.[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். மேற்கூறப்பட்ட வண்ணமெல்லாந் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வண்ணங்களாவன மேற்சொல்லப்பட்டன என்றவாறு.[2]

இதனாற் பெற்றது என்னை? இப்பொருண்மை மேலே பெறப்பட்டதால் எனின், ஒருபயன் கருதிக் கூறினார் என்க. வண்ணம் பாகுபடுகின்றது தொடையினான் அன்றே; இன்னும் வேறொருவாற்றாற் பாகுபடுப்பப் பலவாம் என்பது அறிவித்தல். அது குறில்நெடில் வல்லினம் மெல்லினம் இடையினம் என நிறுத்து அகவல், ஒழுகிசை, வல்லிசை, மெல்லிசை என்ற நான்கனொடும் உறழ இருபதாம். அவற்றைத் தூங்கிசை, ஏந்திசை, அடுக்கிசை, பிரிந்திசை, மயங்கிசை என்பனவற்றோடுறழ நூறாம். அவற்றைக் குறிலகவற் றூங்கிசை வண்ணம், நெடிலகவற் றூங்கிசை வண்ணம் எனஒரு சாராசிரியர் பெயரிட்டு வழங்குப. (உஉகூ)

**பேராசிரியம் :**

இது புறனடை.

(இ-ள்.) வண்ணமென்பன சந்தமாதலான் அச்சந்த வேற்றுமை செய்வன இவையல்லதில்லை (எ-று).[3]

எனவே, என்சொல்லப்பட்டதாம்; நான்கு பாவினோடும்[4] இவற்றை வைத்துறழவும் அவைமயங்கிய பொதுப்பா இரண்டினோடும்[5] உறழவும் நூற்றிருபதாகலும், உயிர்மெய் வருக்க

1. 'வண்ணந் தாமே யிவையென மொழிப' எனப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் பாடங் கொண்டனர்.

2. இயற்றமிழில் வண்ணம் என்பன இவ்விருபதுக்குமேல் இல்லையென முன்னோர் முடித்துக் கூறினர் என்பார் 'வண்ணந்தாமே அவையென மொழிப' என்றார். அவை மேற்கூறப்பட்ட அவ்விருபதும்.

3. 'வண்ணந் தாம் இவையேயெனமொழிப' என ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டிப்பாட்டின்கண்ணே ஓசை வேற்றுமை செய்வனவாகிய வண்ணங்கள் மேற்கூறிய இருபதுமன்றிப் பிறிதில்லையென்பார்'' சந்தவேற்றுமை செய்வன இவையல்லதல்லை'' எனப் பொருள் வரைந்தார் பேராசிரியர்.

4. நான்கு பா ஆவன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலிப்பா என்பன.

5. அவை மயங்கிய பொதுப்பா என்பன மருட்பா, பரிபாடற்பா என்னும் இரண்டுமாகும். உறழ்தல்-பெருக்குதல்.

மெல்லாவற்றோடும் உறழ்ந்து பெருக்கின் எத்துணையும் பலவாகலும், இனிப் பிறவாற்றாற் சில பெயர் நிறீஇ அவற்றால் உறழ்ந்து பெருக்க வரையறையிலவாகலும் உடையவாயினும் இவ்விருபது வகையானல்லது சந்தவேற்றுமை விளங்காதென்பது கருத்து. (௨௩௪)

**நச்சினார்க்கினியம் :**

இது புறனடை.

(இ-ள்). சந்தவேற்றுமை செய்வன இவையல்லது வேறில்லை. எ-று

வண்ணமாவது சந்தம். தாமேயென அவற்றின் சிறப்புக் கூறிற்று. இதன்கருத்துப் பாக்களோடும் பிறவற்றோடும் உறழ அது பலவகைப்படுத்தினால் வரையறையின்றா மாயினும் அவையெல்லாம் இருபதின் கூறாகிய சந்தவேற்றுமை யாவதல்லது சந்தவேற்றுமை விளங்காவாறாயிற்று.[1]

**ஆய்வுரை :**

இது, வண்ணத்திற்குரிய புறனடை.

(இ-ள்) வண்ணங்களாவன இவையே எனக்கூறுவர் ஆசிரியர் எ-று.

'இவை' என்றது பாஅவண்ணம் முதலாக முடுகு வண்ணமீறாக மேற்கூறிய இருபது வண்ணங்களையும். வண்ணம் என்பன சந்த ஓசையாதலால் அவ்வோசை வேற்றுமை செய்வன மேற்கூறிய வண்ணங்கள் இருபதுமேயன்றி வேறு இல்லை என்பது இச்சூத்திரத்தின் கருத்தாகக் கொள்வர் பேராசிரியர்.

வண்ணம் இருபது என்னும் இப்பொருண்மை மேலே பெறப்பட்டதாயினும் இன்னும் தொடையினாற் பாகுபடுக்க வண்ணம் பலவாய் விரியும் என்பது அறிவித்தல் இச்சூத்திரத்தின் பயன் எனக்கொண்டு, பிற்கால யாப்பிலக்கண நூலார் பெருக்கிக் கூறும் நூறு வண்ணங்களையும் குறிப்பிடுவர் இளம்பூரணர்.

''குறில், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம் என முதற்கண் நிறுத்தி அகவல், ஒழுகிசை, வல்லிசை, மெல்லிசை என்னும் நான்கினோடும் உறழ இருபதாகும். அவற்றைத் தூங்கிசை, ஏந்திசை, அடுக்கிசை, பிரிந்திசை, மயங்கிசை என்பன-

1. பேராசிரியர் உரையினை அடியொற்றியமைந்தது.

வற்றோடு உறழ நூறாகும். அவற்றைக் குறிலகவற் றூங்கிசை வண்ணம், நெடிலகவற்றூங்கிசை வண்ணம் என ஒருசார் ஆசிரியர் பெயரிட்டு வழங்குப" என இளம்பூரணர் கூறும் விளக்கம் பிற்கால யாப்பிலக்கண மரபை அடியொற்றியமைந்ததாகும்

"தூங்கேந் தடுக்கல் பிரிதல் மயங்கிசை வைத்துப்பின்னும்
ஆங்கே யகவல் ஒழுகிசை வன்மையு மென்மையுமா
ஆங்கே குறில்நெடில் வல்லிசை மெல்லிசை யோடிடையும்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ணம் நூறுந் தலைப்படுமே"

எனவரும் யாப்பருங்கலக்காரிகையும்,

"தூங்கிசை வண்ணம், ஏந்திசைவண்ணம், அடுக்கிசை வண்ணம்,

பிரிந்திசைவண்ணம், மயங்கிசைவண்ணம், என இவ்வைந்தினையும்;

அகவல்வண்ணம், ஒழுகல்வண்ணம், வல்லிசைவண்ணம், மெல்லிசைவண்ணம் என்று இந்நான்கினையும்; குற்றெழுத்து வண்ணம், நெட்டெழுத்துவண்ணம், வல்லெழுத்துவண்ணம், மெல்லெழுத்துவண்ணம், இடையெழுத்துவண்ணம் என இவ்வைந்தினையுங் கூட்டிக் குறிலகவற்றூங்கிசைவண்ணம், நெடிலகவற்றூங்கிசை வண்ணம், வலியகவற் றூங்கிசை வண்ணம், மெலியவகற்றூங்கிசைவண்ணம், இடையகவற் றூங்கிசைவண்ணம் என்று இவ்வாறெல்லாம் உறழ்ந்து கொள்ள நூறுவண்ண விகற்பமாம்"

எனவரும் யாப்பருங்கலவிருத்தியுரையும் இங்கு நோக்கத்தக்கன.

"நான்கு பாவினோடும் இவற்றை (இருபது வண்ணங்களையும்) வைத்து உறழவும், பொதுப்பா இரண்டினோடு உறழவும், நூற்றிருபதாகலும் உயிர்மெய் வருக்கம் எல்லா வற்றோடும் உறழ்ந்து பெருக்கின் எத்துணையும் பலவாகலும், இனிப் பிறவாற்றாற் சிலபெயர் நிறீஇ அவற்றால் உறழ்ந்து பெருக்க வரையறையிலவாகலும் உடையவாயினும் இவ்விருபது வகையான் அல்லது சந்த வேற்றுமை விளங்காதென்பது கருத்து" எனப் பேராசிரியர் கூறிய விளக்கம் வண்ணம் இருபதே என வரையறுத்த ஆசிரியர் தொல்காப்பினார் கருத்தினை நன்கு புலப்படுத்துவதாகும்.

௨௨௭ சின்மென் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அம்மை தானே அடிநிமிர் வின்றே.[1]

**இளம்பூரணம் :**

என்-எனின். நிறுத்தமுறையானே அம்மையாகிய செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சிலவாய் மெல்லியவாகிய மொழியினானே தொடுக்கப்பட்ட அடிநிமிர்வில்லாத செய்யுள் அம்மையாம் என்றவாறு.[2]

உ-ம் "அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை" (குறள். ௩௧௫)

எனவரும். (௨௨௭)

**பேராசிரியம் :**

இது தொகைச் சூத்திரத்துள்,

"ஆறுதலை யிட்ட வந்நா லைந்தும்" (தொல்-செய்:1)

எனக் கூறு செய்து நிறீஇப், பின்னர் எட்டுறுப்புக் கூறினானன்றே? இவை அவற்றோடொத்த இலக்கணத்த அன்மையான்; என்னை? அவை ஒரோ செய்யுட்கே ஓதிய உறுப்பாகலானும் இவை பல செய்யுளுந் திரண்டவழி இவ்வெண்வகையும் பற்றித் தொடுக்கப்படுமெனக் கூறப்பட்டதாகலானுமென்பது. இவற்றை வனப்பென்று கூறப்படுமாறென்னை? அச்சூத்திரத்துப் பெற்றிலமாலெனின், வனப்பென்பது, பெரும்பான்மையும் பலஉறுப்புந் திரண்ட வழிப் பெறுவதோர் அழகாகலின் அவ்வாறு கோடும். அதனாற் பல செய்யுளும் உறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர்நிலையதே வனப்பென்னும் பெயர்ப்பகுதி வகையான் ஏற்பதென்பது.[3] அஃதேல், இவ்வெட்டுந் தனிவருஞ் செய்யுட்

---

1. வனப்பியல் தானே வகுக்குங் காலை, சின்மென் மொழியாற் றாய பனுவலோ, டம்மை தானே யடிநிமிர் பின்றே. எனப்பாடங்கொள்வர் பேராசிரியர். சில்மொழி மென்மொழி எனத்தனித்தனி இயையும். அடிநிமிர்வு இன்று-அடிகள் ஏறி (மிக்கு) வருதல் இல்லை.

2. சின்மென்மொழியாற் சீர்புனைந்து யாக்கப்பெற்று அடிநிமிர்வின்றி வருஞ்செய்யுள் அம்மையென்னும் வனப்புடைதாகும் என்பதாம்.

3. செய்யுளியல் முதற்சூத்திரத்தில் மாத்திரை முதலாகச் சொல்லப்பட்ட இருபத்தா றுறுப்புக்களும் ஒவ்வொரு செய்யுட்கும் இன்றியமையா தமைய வேண்டிய உறுப்புக்களாகும். அச்சூத்திரத்தில் அம்மை முதலாகப் பிற்கூறப்பட்ட எண்வகை யுறுப்புக்களும் பல செய்யுளுந் திரண்டவழித் தொகுக்கப்படும் அழகிய

தண் வந்தால் அழகு செய்யாவோ வெனின், அவைபோல் இவை தனிவரும் செய்யுட்குமாகும் என்றற்கன்றே அவ்விருபத்தா றுறுப்போடும் இவற்றை ஓரினப்படுத்து ஓதியதென்பது.[1] அஃது இயைபிற்கொப்ப வாராதென்பது முன்னர்ச் (55) சொல்லுதும். இதனானே முன்னை யுறுப்புக்கள் தொடர்நிலைச் செய்யுட்கு வருமென்பதூஉங் கொள்க. அல்லாக்கால் மாத்திரை முதலாகிய ஓரோவுறுப்பான் அழகு பிறவாதாகிய செல்லும் இவற்றையே வனப்பென்று ஓரோ செய்யுட்கே கொள்ளினென்பது.[2] இங்ஙனம் இருபத்தாறும் எட்டுமென வகுப்பவே அவை அகமென்பன, தனிநிலைச் செய்யுட்கு முற்கூறப்படா, இத்தொடர்நிலைச் செய்யுட்கு முற்கூறுமென்பது;[3] இனி, இவற்றைச் சூத்திரத்தான் வனப்பென்னுங் குறியெய்துவிக்கவேண்டுவானாகச் சூத்திரத்தை

"வனப்பிய றானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் றாய பனுவலின்"

என்பது பாடமாக உரைத்தானென்க;[4] அதுவும் அறிந்தவாறே கொள்க.

(இ-ள்.) சிலவாய மெல்லியவாய சொல்லோடும் இடை யிட்டு வந்த பனுவலிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லது அம் மையாம் (எ-று.)

---

(முன்பக்கத்தொடர்ச்சி)

லுறுப் புக்களாகும். இவை பெரும்பாலும் பலவுறுப்புந் திரண்டவழி யமைதலின் பலசெய்யுளும் உறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர்நிலைக்கண் வருதலின் வனப்பெனப் பெயர் பெற்றன.

1. தனிச் செய்யுட்குரிய இருபத்தா றுறுப்போடும் எண்வகை வனப்பினையும் இயைத்துக் கூறியது இவை தனிவரும் செய்யுட்கும் பொருந்தும் என்னும் கருத்தினாலேயாம்.

2. முற்கூறிய இருபத்தாறுறுப்புக்களும் இவைபோலன்றித் தனிச்செய்யுட்கும் தொடர்நிலைச் செய்யுட்கும் இன்றியமையாத உறுப்புக்களாகும்.

3. இவ்வாறு செய்யுட் குரிய வுறுப்புக்களை இருபத்தாறும் எட்டும் என வகுப்பவே வனப்பென்பன தனிநிலைச் செய்யுண் முற்கூறப்படா, இத்தொடர்-நிலைச் செய்யுட்கு முற்கூறப்படும் என்பதாம்.

4. அம்மை முதலாக எண்ணப்பட்ட இவ்வெட்டிற்கும் வனப்பு என்னும் பெயர் எய்துவித்தற்பொருட்டு ஆசிரியர் தொல்காப்பியனார், 'வனப்பியல் தானே வகுக்குங் காலை' என இச்சூத்திரத்துத் தோற்றுவாயாக முன்மொழிந்தார் என்பதாம். இவ்வடி இளம்பூரணருரையில் இடம் பெறவில்லை.

'அடிநிமிராதெனவே அம்மையென்பது முழுவதும் ஒரு செய்யுளாகல் வேண்டும்: வேண்டவே, அஃது உறுப்பன்றாகிய செல்லும்; அதனை உறுப்பெனல் வேண்டுமாதலான் அடிநிமிராதெனப்பட்ட செய்யுள் உறுப்பாக அவை பல தொடர்ந்து முடிந்து ஈண்டுச் செய்யுளாமென்பது.[1] சிலவாகவென்பது, எண்ணுச் சுருங்குதல், மெல்லியவாதல், சிலவாகிய சொற்கள் எழுத்தினான் அகன்று காட்டாது சிலவெழுத்தினான் வருவது. அடிநிமிராதென்றது, ஐந்தடியின் ஏறாதென்றவாறு.

தாயபனுவலோடென்றது, அறம்பொருளின்பமென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப (போன்று) வேறிடையிடை அவையன்றியுந் தாய்ச்செல்வதென்றவாறு, அஃதாவது, பதினெண் கீழ்க்கணக்கென வுணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம்பொருளின்பமென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப் பயின்றுவருமாறுங் கார்நாற்பது, களவழிநாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டு கொள்க.

"பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்" (குறள்:675)

என்பது இலக்கணங் கூறியதாகலிற் பனுவலோடென்றான்.

"மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று" (குறள்: ககக௨)

என இஃது இலக்கியமாகலாற் றாயபனுவ லெனப்பட்டது.

இவை தனித்துவரினும் அவ் வனப்பெனப்படும், தாவுத லென்பது, இடையிடுதல். இவ்விருவகையுஞ் செய்யுளெனப் படும்.[2] அம்மையென்பது குணப்பெயர். அமைதி பட்டு நிற்றலின் அம்மை யென்றாயிற்று. அதனுள் உறுப்பாகிய பாட்டுக் கடோறும் மாத்திரை யுறுப்பு முதலாகிய உறுப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும், இவ்வனப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும் அறிந்துகொள்க. (௨௫௩)

1. 'அடிநிமிர் வில்லது' என ஒருமையாற் கூறினும் அங்ஙனம் அடிநிமிர்வின்றிவரும் செய்யுள் உறுப்பாக அச்செய்யுட்கள் பல தொடர்ந்துவரும் தொடர்நிலைக்கண் அமைந்ததே அம்மையென்னும் வனப்பாமெனக் கொள்க.

2. இருவகையாவன: அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணம் சொல்லுதல் போன்று அமைதலும் அவையன்றி வேறிடையிடையே இலக்கியங்கூறுதல் போன்று அமைதலும் என இருவகை.

**நச்சினார்க்கினியம் :**

இதன் தொகைச் சூத்திரத்துள் ஆறு தலையிட்ட வந்நாலைந்து மெனக் கூறுபடுத்தி வேறு நிறீஇப் பின்ன ரெட்டுறுப்பெனக்கூறிய தென்னையெனின் அவை யொரோ செய்யுட்கோதிய வுறுப்பென் பதூஉம் இவை பல செய்யுளுந் திரண்ட வழி இவ்வெட்டுறுப்பும் பற்றித் தொகுக்கப்படு மென்பதூஉம் அறிவித்தற்கெனக் கொள்க. இவற்றை வனப்பென்று பெயர் கூறிற்றுப் பலவுறுப்புந் திரண்டவழிப் பெறுவதோ ரழகாதலின். இப்பெயர் சூத்திரத்தாற் பெறவேண்டுவார்

"வனப்பிய றானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியால்"

எனப்பாடமோதுப.[1] இது பெரும்பான்மை பல செய்யுளுறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர்நிலைக்குப் பெறுவதோ ரழகென்பதூம், சிறுபான்மை தனிச்செய்யுட்கும் இவ்வழகு கொள்ளவேண்டுமென்பதூம், இருபத்தாறுறுப்பும் அங்ஙனந் திரண்டசெய்யுட்கு முரித்தென்பதூம் உணர்த்துதற்குத் தொகைச் சூத்திரத்தைப் பிரித்தோதிப் பின்னும் ஓரினப்படுத்தி யொருசூத்திரமாகவே யோதினா ரென்றுணர்க. இவ்வனப்பை யொரோசெய்யுளுட்கொள்ளின் மாத்திரை முதலியவற்றின் அழகு பிறவாதாம். இங்ஙனம் வகுப்பவே தனிநிலைச் செய்யுளுந் தொடர்நிலைச்செய்யுளும் எனச் செய்யு ளிரண்டாயிற்று. இனிக் கூறுகின்றன தொடர்நிலைச்செய்யுளென் றுணர்க.

இது முறையே அம்மை கூறுகின்றது. அம்மை குணப்பெயர். அமைதிபட்டு நிற்றலின் அம்மையாயிற்று.

(இ-ள்). சின் ... யால் எ-து சின்மையாய் மெல்லியவாய சொல்லானும் தாய .. பனுவலின் எ-து இடையிட்டு வந்த பனுவல் இலக்கணத்தானும். அடிநிமிர் வின்றுதான் அம்மை- எ.து அடிநிமிர்வின்றாய் வருவதுதான் அம்மை யெனப்படும் எ-று.

அடிநிமிராதென்றது ஆறடியின் ஏறாமையை. சிலவாதல் சொல்லெண்ணுச் சுருங்குதல். மெல்லியவாதல் சிலவாகிய சொற்களும் எழுத்தினான் அகன்று காட்டாது சிலவெழுத்தான்

1. இங்ஙனம் பாடங் கொண்டோர் இளம்பூரணரும் பேராசிரியரும். "அம்மையாவது, சிலவாய் மெல்லியவாய சொற்களால் ஒள்ளியவாய பொருண்மேற் சிலவடியாற் சொல்லப்படுவது" என்பர் யாப்பருங்கலவிருத்தியாசிரியர்.

வருதல். தாயபனுவலின் என்பது அறம் பொரு ளின்ப மென்னு மூன்றற்கு மிலக்கணங் கூறுவன போன்றும் இடையிடையே அன்றாயுந் தாவிச் செல்வ தென்றவாறு. அங்ஙனம் வந்தது பதினெண்கீழ்க் கணக்கு. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானுஞ் சிறுபான்மை யாறடியானு மொரோசெய்யுள் வந்தவாறும் அவை சின்மென்மொழியாய் வந்தவாறும் அறம்பொருளின்பத்திலக்கணங் கூறிய பாட்டுக்களும் பயின்று வந்தவாறும் இடையிடையே கார்நாற்பதுங் களவழி நாற்பது முதலியன வந்தவாறுங் காண்க. உள்ளுறுப்பாய்ப் பதினெட்டையும் வனப்பெனப் படுமென்றுங் கொள்க.

> "பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
> மிருடீர வெண்ணிச் செயல் (திருக்-சுஎரு)

இஃது இலக்கணங் கூறலிற் பனுவலினென்றார்.

> "மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
> பலர்காணும் பூவொக்கு மென்று" (திருக்-கககஉ)

இஃது இலக்கிய மாதலில் தாயவென்றார். தாவுதல் இடையிடுதல். அத னுள்ளுறுப்பாகிய பாட்டுக்கடோறும் மாத்திரை முதலிய வுறுப்புக்க ளேற்பன பலவும் வருமாறும் இவ்வனப்பெட்டனுள் ஏற்பன பலவும் வருமாறு முணர்க.

ஆசாரக்கோவையுள் "ஆரெயின் மூன்றும்" (தற்சிறப்புப்) ஆறடியாற் சிறுபான்மைவந்தது.

**ஆய்வுரை :**

செய்யுளுறுப்புக்கள் பலவுந் திரண்டவழிப் பெறுவதோர் அழகினை ஈண்டு வனப்பு என்றார். அஃது அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என எண் வகைப்படும். செய்யுட்கள் பலவும் திரண்டவழி அவற்றின்கண் அமைந்த சொற்பொருள் அழகினை முற்கூறிய எட்டுறுப்பும் பற்றி வகுத்துணர்த்துதல் மரபாதலின் இவை வனப்பெனப் பட்டன.

மாத்திரை முதல் வண்ணம் ஈறாகச் சொல்லப்பட்ட இருபத்தாறும் செய்யுள் ஒவ்வொன்றிற்கும் இன்றியமையாத உறுப்புக்களாகும். அம்மை முதலாகிய எட்டும் செய்யுட்கள் பலவாகத் தொடர்ந்தமைந்த தொடர்நிலைச் செய்யுட்கே பெரும்பான்மையும் வருவன. சிறுபான்மை தனிச்செய்யுட்கும்

இவ்வகை வனப்புக்கள் உரியனவாகும். இங்ஙனம் செய்யுளுறுப்புக்கள் முப்பத்து நான்கினையும் இருபத்தாறும் எட்டும் என இருதிறமாக வகுக்கவே இவற்றை யுறுப்பாகக் கொண்ட செய்யுட்கள் தனிநிலைச் செய்யுளும் தொடர்நிலைச் செய்யுளும் எனச் செய்யுள் இருவகையாகப் பகுக்கப்படும் என்றாராயிற்று.

இச்சூத்திரம், எண்வகை வனப்பினுள் அம்மையென்னும் வனப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) சிலவாய் மெல்லியவாய சொற்களால் தொடுக்கப் பட்ட அடிநிமிர்வு இல்லாத செய்யுள் அம்மை யென்னும் வனப்புடையதாகும் எ-று.

'அம்மை என்பது குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மை யென்றாயிற்று' என்பர் பேராசிரியர். அடி நிமிராமை-ஆறடியின் மேற்படாமை. சிலவாதல், சுருங்கிய எண்ணினவாகிய சில சொற்களால் இயன்று வருதல். மெல்லியவாதல் சிலவாகிய அச்சொற்களும் பலவவெழுத்துக்களால் இயன்று விரிந்தனவாகாமல் சிலவெழுத்துக்களால் அமைந்து சுருங்கி நிற்றல். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணங்கூறுவன போன்றும் அன்றாகியும் இடையிட்டு நிற்கும் இயல்பினது என்பார். 'தாஅய பனுவல்' என்றார். தாவுதல் - இடையிடுதல். அம்மை என்னும் இவ்வனப்பிற்கு,

"அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை                    (315)

எனவரும் திருக்குறளை உதாரணமாகக் காட்டினார் இளம்பூரணர்.

"அங்ஙனம் வந்தது பதினெண்கீழ்க்கணக்கு, அதனுள் இரண்டடியாயினும் ஐந்தடியாயினும் சிறுபான்மை ஆறடியாயினும் ஒரோ செய்யுள் வந்தவாறும், அவை சின்மென் மொழியால் வந்தவாறும், அறம்பொருளின்பத் திலக்கணங் கூறிய பாட்டுக்களும் பயின்று வந்தவாறும் இடையிடையே கார் நாற்பது, களவழி நாற்பது முதலியன வந்தவாறும் காண்க" என நச்சினார்க்கினியர் விளக்குதலால், நாலடியார் முதலிய கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டும் அம்மையென்னும் வனப்பமைந்த இலக்கியங்கள் என்பது நன்கு புலனாம்.

உஉஅ. செய்யுள் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே.

## இளம்பூரணம் :

என்—எனின் நிறுத்தமுறையானே அழகென்னும் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்குரிய சொல்லினாற் சீரைப்புணர்த்துத் தொடுப்பின் அவ்வகைப்பட்ட செய்யுள் அழகு எனப்படும் என்றவாறு.[1]

"துணியிரும் பரப்பகங் குறைய வாங்கி
மணிகிளர் அடுக்கல் முற்றிய எழிலி
காலொடு மயங்கிய கனையிருள் நடுநாள்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப
நெடுவரை மருங்கிற் பாம்பென இழிதருங்
கடுவரற் கலுழி நீந்தி
வல்லியம் வழங்குங் கல்லதர் நெறியே"

(யாப். வி ப. ௩௭௧)

எனவரும். (உஉஅ)

## பேராசிரியம் :

இஃது, இரண்டா மெண்ணுமுறைமைக்க ணின்ற அழ குணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) திரிசொற் பயிலாது செய்யுளுட் பயின்று வரும் மொழிகளாற் சீரறுத்துப் பொலிவுபட்ட யாப்பின் பொருள் அழகு[2] (எ-று).

'அவ்வகை'யென்றதனால் அவை வேறு வேறு வந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றவாறு. அவையாவன, நெடுந்தொகை முதலாகிய தொகையெட்டு மென்றவாறு. அழகு செய்யுண் மொழி யென்ற தென்னையெனின், அது பெரும்பான்மையாற் கூறினான். அம்மொழியானே இடைச்சங்கத்தாருங் கடைச்சங்கத் தாரும் இவ்விலக்கணத்தாற் செய்யுள் செய்தார்; இக்காலத்துச்

1. செய்யுள்மொழியாவன இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்பன.

2. 'பொலிவுபட யாப்பின் (அப்) பொருள் (வகை) அழகு. எ-று' என இவ்வுரைத் தொடர் அமைதல் பொருத்தமுடையதாகும்.

செய்யினும் விலக்கின்றென்பது. மற்று மூவடிமுப்பது முதலாயின அம்மை யெனப்படுமோ அழகெனப்படுமோ வெனின்,-தாயபனுவலின்மையின் அம்மையெனப்படாவென்பது[1] இவற்றுள்ளும் ஒரோ செய்யுட்கண்ணே மாத்திரை முதலாகிய உறுப்பும் ஏற்ற வகையான் வருவன அறிந்துகொள்க. ஒழிந்தன !வற்றிற்கும் இஃதொக்கும். (உ௩௬)

**நச்சினார்க்கினியம்:**

இது முறையே அழகு கூறுகின்றது.

இ-ள். வழக்குச்சொற்பயிலாமற் செய்யுளுட் பயின்றுவருஞ்சொல்லானே சீர்த்துப் பொலிவுபெறப் பாடின் அப்பகுதி அழகெனப்படும். எ-று.[2]

அவ்வகை யென்றதனான் அவை வேறுவேறாக வந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றுணர்க. அவை நெடுந்தொகை முதலிய தொகையெட்டுமாம். அது தலைச்சங்கத்தாரையொழிந்தோர் சிறுபான்மை வழக்கும் பெரும்பான்மை செய்யுட்சொல்லுமாக இவ்விலக்கணத்தாற் செய்தவாறே இக்காலத்துச் செய்யினுமாம். எ-று. தாய பனுவலின்மையின் மூவடிமுப்பது முதலியனவும் அழகின்பாற்படும். இவற்றுள்ளும் ஒரோசெய்யுட்கண் மாத்திரை முதலியவுறுப்பும் இவையும் ஏற்ற வகையான் வருமாறு காண்க.

**ஆய்வுரை :**

இஃது அழகென்னும் வனப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) செய்யுளுட் பயின்று வரும் சிறந்த சொற்களால் ஓசையினிதாகச் சீர்பெற யாக்கப்படும் அவ்வகைச் செய்யுள் அழகு என்னும் வனப்பாகும் எ-று.

இவ்விலக்கணத்தால் அமைந்தவை அகநானூறு முதலிய எட்டுத்தொகை நூல்களாகும்.

---

1. 'மூவடிமுப்பது' என்பது இன்ன நூலெனத் தெரியவில்லை. அது மூன்றடிகளால் இயன்ற முப்பது பாடல்களைப் பெற்றமையால் மூவடி முப்பது என்னும் பெயர்த்தாயிற்றுப் போலும். அது இடையிட்டுத் தாவிச் செல்லும் பொருள் வகை பற்றிய இலக்கியமாக அமையாமையின் அம்மை யெனப்படா எனவும் செய்யுள் மொழியாற் சீர் புனைந்தியாத்தமையின் அழகெனப்படும் எனவும் வேண்டுந் தொடர்களை வருவித்து இவ்வுரைப்பகுதியினை யமைத்துக்கொள்ளுதல் பேராசிரியர் கருத்தாக இருக்குமோ என்பது சிந்தித்தற்குரியதாகும்.

2. ''அழகாவது செய்யுட் சொல்லாகிய திரிசொல்லினால் ஓசை இனியதாக நன்கியாக்கப்படுவது'' என்பர் யாப்பருங்கலவிருத்தியுரையாசிரியர்.

உஉ௯ தொன்மை தானே சொல்லுங் காலை[1]
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே.

**இளம்பூரணம் :**

என்—எனின். நிறுத்தமுறையானே தொன்மைச் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). தொன்மையாவது உரையொடு பொருந்திப் போந்த பழைமைத்தாகிய பொருண்மேல் வருவன. அவை இராம சரிதமும், பாண்டவ சரிதமும் முதலாகியவற்றின்மேல் வருஞ்செய்யுள்,[2]

**பேராசிரியம் :**

இது, தொன்மையுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தொன்மையென்பது உரைவிராஅய்ப் பழைமைய வாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது (எ-று).[3]

அவை பெருந்தேவனாரால் பாடப்பட்ட பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன.

**நச்சினார்க்கினியம் :**

இது தொன்மை கூறுகின்றது.

இ-ள். தொன்மையாவது உரைவிராஅய்ப் பழமையாகிய கதை பொருளாகச் செய்யப்படுவன. எ-று.[4]

அவை பெருந்தேவனார் செய்த பாரதமும். தகடூர்யாத் திரையும் போல்வன. சிலப்பதிகாரமும் அதன்பாற்படும்.

"தொன்றுபட வரூஉந் தொன்மைத்தாகலின்"
(சிலப்·ஊர்காண் 45)

எனவும்,

---

1. 'சொல்லுங்காலை' என்ற தொடர் பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைகளில் இல்லை.

2. நெடுங்காலத்துக்கு முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பொருளாகக் கொண்டு இயற்றப்பெறும் இலக்கியம் தொன்மை யென்னும் வனப்புடையதாகும் என்பது இளம்பூரணர் கருத்தெனத் தெரிகிறது.

3. தொன்மை - பழமை; என்றது பழைய வரலாற்றைப் பொருளாகக் கொண்டு உரையும் பாட்டும் விரவிய நடையில் இயற்றப்பெற்ற நூலாகும்.

4. "தொன்மையாவது, பழைமைத்தாய் நிகழ்ந்த பெற்றி உரைக்கப்படுவனவற்றின் மேற்று" என்பர் யாப்பருங்கல விருத்தியாசிரியர்.

"நீயறிந் திலையோ நெடுமொழி யன்றோ"
(சிலப்-ஊர்காண் 49)

எனவும் வரும் சிலப்பதிகாரத் தொடர்களும், 'தொன்றுபட வரூஉம் தொன்மைத்து- அடிப்பட்டு வருகின்ற பழைமைத்து' எனவும், 'நெடுமொழி பெருவார்த்தை. பழைதாகப் போதுகின்ற வார்த்தை யென்றுமாம்' எனவும் வரும் அரும்பதவுரையும் இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

இனி, பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் 'உரையொடு புணர்ந்த' எனவரும் தொல்காப்பியத் தொடர்க்கு 'உரை-நடையுடன் விரவிய' எனப்பொருள்கொண்டு, பெருந்-தேவனாராற் பாடப்பெற்ற பாரதமும் தகடூர் யாத்திரையும் போலஅமைந்த உரையிடையிட்ட செய்யுட்களைத்' 'தொன்மை' என்னும் வனப்புக்கு உதாரணமாகக் குறித்துள்ளார்கள். எவ்வாறாயினும் நாட்டில் வழங்கும் பழைய (புராணக்) கதைகளையும் வரலாறுகளையும் பொருளாகக் கொண்டு பாடப் பெறும் தொடர்நிலைச் செய்யுள்கள் தொன்மை யென்னும் வனப்பமைந்த இலக்கியங்கள் எனக் கொள்ளுதலில் தொல்-காப்பிய உரையாசிரியர் அனைவரும் ஒத்த கருத்தினர் என்பது இங்கு மனங்கொளத் தகுவதாகும்.

**ஆய்வுரை :**

இது, தொன்மை யென்னும் வனப்பு உணர்த்துகின்றது

(இ-ள்) உரையோடு புணர்ந்த பழமை பொருளாக வருவது தொன்மை என்னும் வனப்பாகும் எ-று.

உரையொடு புணர்தலாவது, நெடுங்காலமாகப் பலராலும் சொல்லப்பட்டு வழங்கி வருதல். பழமை-பழங்கதை. பழமைத்-தாகிய பொருள்மேல் வருவன, இராம சரிதை, பாண்டவ சரிதை முதலாயனவற்றின் மேல் வருஞ் செய்யுள் என்பர் இளம்பூரணர். 'தொன்மை' என்னும் இச்சொல்லை இப்பொருளில் இளங்கோவடிகளும் எடுத்தாண்டுள்ளார்.

௨௩௰. இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப தொன்னெறிப் புலவர்.[1]

## இளம்பூரணம் :

என்—எனின். நிறுத்தமுறையானே தோலாகிய செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இழுமென்மொழியால் விழுமிய பொருளைக் கூறினும் பரந்த மொழியினால் அடி நிமிர்ந்து ஒழுகினும் தோல் என்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

உ-ம். "பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
துளிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி எளிதெனக் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை
நன்மை யில்லைத் தீமை யில்லைச்
செய்வோ ரில்லைச் செய்பொரு ளில்லை
அறிவோர் யாரஃ திறுவழி இறுகென"
(மார்க்கண்டேயனார் காஞ்சி)

என்றது இழுமென் மொழியால் விழுமியது நுவல வந்தது.

"திருமழை தலைஇய இருள்நிற விசும்பு"
(மலைபடுகடாம். ௧)

என்னுங் கூத்தராற்றுப்படை பரந்தமொழியான் அடிநிமிர்ந்து வந்தது. (௨௩௦)

## பேராசிரியம் :

இது, முறையானே தோலென்னும் வனப்புணர்த்துதல் நுதலிற்று. அஃதிருவகைப்படும்; கொச்சகக்கலியானும் ஆசிரியத்தானுஞ் செய்யப்படுவன.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது"

---

1. 'தொன்மொழிப்புலவர்' என்பது பேராசிரியர் கொண்ட பாடம்.

இழுமென்மொழியாவது இழும் என்னும் இன்னோசையுடைய மெல்லென்ற சொல்லானாயது. பரந்தமொழியாவது விரிந்து பரவிய சொற்களானாயது.

தோல் என்னும் வனப்பு இருவகைப்படும் என்பதாம்.

என்றவழித் தேவபாணியுங் காமமும் பொருளாக வன்றியுங் கொச்சகக்கலி வருமென்றானாகலான் அவை மேல் வருதல் ஈண்டுக் கொள்ளப்பட்டது.

(இ-ள்) இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்-மெல்லென்ற சொல்லான் அறம்பொருளின்பம் வீடென்னும் விழுப்பொருள் பயப்பச் செய்வன; அவை செய்த காலத்துள்ளன கண்டிலம்; பிற்காலத்து வந்தன கண்டுகொள்க.

பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்-ஆசிரியப் பாட்டான் ஒரு கதைமேல் தொடுக்கப்பட்டன; அவை பொருட்டொடர்நிலை.

தோல் என மொழிப தொன்மொழிப் புலவர்-தோலென்று சொல்லுப புலவர் (எ-று).

'தொன்மொழி யென்றார் பழைய கதையைச் செய்தல். பற்றி; இது முன்வருஞ் சூத்திரத்தானும் பெறுதும். (உ௩அ)

**நச்சினார்க்கினியம் :**

இது தோல் கூறுகின்றது. அஃது இருவகைய. கொச்சகத் தானும் அகவலானுஞ் செய்யப்படுவனவாம்.

(இ-ள்.) இழுமென்னு மோசையையுடைய மெல்லென்ற சொல்லானே அறம் பொரு ளின்பம் வீடென்னும் விழுமிய பொருள் பயப்பச் செய்யினும் ஆசிரியப்பாட்டான் ஒருகதைமேற் றொடுப்பினுந் தோலென்று கூறுவர் பழநெறியை யறிந்த புலவர் எ-று.[2]

---

1. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள் பயப்ப மெல்லெனும் இனிய சொல்லமையக் கொச்சகக் கலியினாற் செய்தலும் பரந்து விரிந்த சொல்லமைமையை ஆசிரியப்பாட்டாற் செய்தலும் எனத் தோல் என்னும் வனப்புடைய பொருட்டொடர் நிலை இருவகைப்படும் என்பதாம்.

2. ''தோல் என்பது. இழுமென்று மெல்லியவாய சொற்களால் விழுமிய வாய்க் கிடப்பனவும், எல்லாச் சொற்களோடுங் கூடிய பலவடியை உடையன வாய்க் கிடப்பனவுங் என இரண்டு வகைப்படும்'' என்பர் யாப்பருங்கலவிருத்தி யாசிரியர்.

செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பாவும் இனமுமென நான்கினீக்கிய பாவி-னைத் தொகை வரையறையான் இரண்டென அடக்கியும் விரிவரையறையான் ஆறென விரித்தும் அவற்றை அறம் பொரு ளின்பத்தாற் கூறுக வென்றுங் கூறிப் பின்பு அம்மை முதலிய எட்டு வனப்பும் தொடர்நிலைச் செய்யுட்கு இலக்கண

யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது (செய் ௧) என்றவழிப் பொருள்வேறுபட்டுக் கொச்சகத்தாற் செய்யப்படுவன தோலாம். எ-று. இவை பொருட்டொடர். அவை சிந்தாமணி முதலியன. அவை பாவிற்கினமாகிய துறையும் விருத்தமும் பற்றிச் செய்தன வென்பார்க்கு அப்புலவர் செய்யுட் செய்கின்ற காலத்திற்கு நூல் தொல்காப்பியமாயவாறும் அவர் இனங் கொள்ளாதவாறும் அவ்வினங்கடாம் இலக்கணக் குறைபாடுடைய வாறுங் கொச்சகம்போற் சிறப்பின்மையும் முன்னர் விளங்கக் கூறியவற்றைக்கொண்டும் பின்பு செய்த நூல்கள் முன்பு செய்த செய்யுட்கு விதியாகாதவாறுங் கொண்டு மறுக்க[1] பின்னோர் தாஞ்செய்த நூல்கட்கு அவை உதாரணமாகக் காட்டலின் அச்செய்யுள் அந்நூல்கட்கு முன்னாயவாறு முணர்க. இனித் தொல்காப்பியனாரை யொழிந்த ஆசிரியர் பதினொருவருட் சிலர் இனமுங்கொண்டார். அதுபற்றி யாப்பருங்கல முதலிய வற்றிலும் இனங்கொண்டா ரென்பார்க்கு அவர்கள் அகத்திய னார்க்கு மாறாக நூல்செய்தவராவர். அவை வழிநூ லெனப்படா வென்று மறுக்க. இனி யாசிரியப்பாவான் அடிநிமிர்ந்து வந்தன தேசிகப்பா முதலியன.

**ஆய்வுரை :**

இது, தோல் என்னும் வனப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) இழுமென்னும் ஓசையையுடைய மெல்லென்ற சொல்லால் விழுமிய பொருள் பயப்பச் செய்யினும், பரந்த மொழியால் அடிநிமிர்ந்து வரத்தொடுப்பினும் தோல் என்னும்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

மென்று கூறியவர், 'இழுமென்மொழியான் விழுமியது நுவலினும்' பரந்த மொழியான் அடிநிமிர்ந்தொழுகினும்; (தொல்-செய்-௨௩௮) என்பதனால், குவிந்து மெல்லென்ற சொல்லானும் பரந்து வல்லென்ற சொல்லானும் அறம் பொருளின்பம் பயப்ப வீடென்னும் விழுமிய பொருள் பயப்ப ஒருகதைமேற் கொச்சகத்தானும் ஆசிரியத்தானும் வெண்பா,வெண்கலிப் பாவானும் மற்றும் இன்னோரன்ன செய்யுட்களானும் கூறுக வென்றமையால், இத்தொடர்நிலைச் செய்யுள் அங்ஙனங் கூறிய தொடர்நிலையெனவுணர்க'' என அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரைப்பாயிரத்திற் கூறிய விளக்கம் எண்வகை வனப்பினுள் 'தோல்' என்னும் வனப்பின் இயல்பினை இனிது புலப்படுத்துதல் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தகுவதாகும்.

1. செய்யுளியல் ௫௪௯-ஆம் சூத்திரவுரை நோக்குக.

வனப்புடைய செய்யுளாம் என்பர் தொன்மை நெறியுணர்ந்த புலவர் எ-று.

எனவே தோல் என்னும் வனப்பு இருவகைப்படும் என்ப-தாயிற்று. 'பாயிரும் பரப்பகம்' என்ற முதற்குறிப்புடைய செய்யுள் இழுமென் மொழியால் விழுமியது நுவன்றது எனவும், 'திருமழை தலைஇய' எனத்தொடங்கும் கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்) பரந்த மொழியால் அடிநிமிர்ந்து வந்தது எனவும் உதாரணங் காட்டுவர் இளம்பூரணர்.

'யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது' எனப்பட்ட கொச்சகத்தால் இயன்ற சீவக சிந்தாமணி போன்ற தொடர் நிலைச்செய்யுட்கள் இழுமென் மொழியால் விழுமியது நுவன்ற தோல் என்னும் வகையைச் சார்ந்தன எனவும், ஆசிரியப்-பாட்டால் ஒருகதைமேல் தொடுக்கப்பட்ட தொடர்நிலைச் செய்யுட்கள் பரந்த மொழியால் அடிநிமிர்ந்தொழுகிய தோல் என்னும் வகையின்பாற்படுவன எனவும் நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் கூறிய விளக்கம் இங்கு நோக்கதற் பாலனவாகும்.

''செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பாவும் இனமுமென நான்கி னீக்கிய பாவினைத் தொகை வரையறையால் இரண்டென அடக்கியும், விரிவரையறையான் ஆறென விரித்தும், அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுக என்றும் கூறிப் பின்பு அம்மை முதலிய எட்டு வனப்பும் தொடர்நிலைச் செய்யுட்கு இலக்கணமென்று கூறியவர். 'இழுமென் மொழியான் விழுமியது நுவலினும், பரந்த மொழியான் அடிநிமிர்ந் தொழு-கினும்' என்பதனால் குவிந்து மெல்லென்ற சொல்லானும் பரந்து வல்லென்ற சொல்லானும் அறம் பொருளின்பம் பயப்ப வீடென்னும் மற்றும் இன்னோரன்ன செய்யுட்களானும் கூறுக என்றமையான், இத்தொடர்நிலைச் செய்யுள் அங்ஙனங் கூறிய தொடர்நிலை யெனவுணர்க'' எனச் சிலப்பதிகார உரைப் பாயிரத்தே அடியார்க்கு நல்லார் இச்சூத்திரப் பொருளைத் தெளிவாக விளக்கியுள்ளார். இவ்விளக்கத்தினைக் கூர்ந்து நோக்குங்கால் தொல்காப்பியனார் கூறிய 'தோல்' என்னும் வனப்புக்குரிய இருவகை யியல்பும் ஒருசேரப்பெற்ற தொடர் நிலைச் செய்யுள் சிலப்பதிகாரம் என்பது நன்கு புலனாதல் காணலாம்.

உ௫க. விருந்தே தானும்
புதுவது புனைந்த[1] யாப்பின் மேற்றே

**இளம்பூரணம் :**

என்—எனின். நிறுத்தமுறையானே விருந்தென்னுஞ் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது என்றவாறு.

புதிதாகப் புனைதலாவது ஒருவன் சொன்ன நிழல்வழி யன்றித் தானே தோற்றுவித்தல்[2] அது வந்தவழிக் காண்க.

இது பெரும்பான்மையும் ஆசிரியப்பாவைக் குறித்தது. (உ௫க)

**பேராசிரியம் :**

(இ-ள்) விருந்துதானும் புதிதாகத் தொடுக்கப்படுந் தொடர் நிலை மேற்று (எ-று.)

'தானு'மென்ற உம்மையான் முன்னைத் தோலெனப்பட்ட தூஉம் பழைய கதையைப் புதியதாகச் சொல்லியதாயிற்று.[3] இது பழங்கதை மேற்றன்றிப் புதிதாகச் சொல்லப்படுதல் ஒப்புமையின் உம்மையான் இறந்தது தழீஇயினானென்பது. 'புதுவது கிளந்த யாப்பின் மேற்று' என்றதென்னையெனின், புதிதாகத் தாம்

1. 'கிளந்த' என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரையிலுள்ள பாடம் விருந்து-புதுமை; புதுமையான் இயன்ற யாப்பிற்கு ஆகுபெயர்.

2. 'ஒருவன்சொன்னநிழல்' என்றது, புலவனொருவன் இயற்றிய யாப்பின் சாயலை, நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல் என்பது, பிறரொருவர் செய்த யாப்பினை அடியொற்றிச் செய்தலன்றித் தானே புதியதொரு யாப்பினை அமைத்துக் கொண்டு செய்தல்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதலிய அருளாசிரியர்கள் தாமே புதுவது புனைந்த சொன்மாலை 'விருந்து' என்னும் வனப்புக்குரிய இலக்கியமாகும். 'விருந்தாய சொன்மாலை' என்பது ஆளுடையபிள்ளையார் அருளிச் செயல்.

3. விருந்து-புதுமை; என்றது புதிதாகத் தொடுக்கப்படும் தொடர்நிலைச் செய்யுளை; 'விருந்தேதானும்' என்னும் உம்மை 'முற்கூறிய தோலே யன்றி விருந்தும்' என இறந்தது தழீஇ நிற்றலின் 'தோல்' என்பது பழைய கதையைப் புதியதாகச் சொல்லியதெனவும் இங்குக் கூறப்படும். 'விருந்து' என்பது பொருள் பழையை தாயினும் புலவன் தான்விரும்பிய புதிய யாப்புவகையாற் பல செய்யுளுந் தொடர்ந்து வரச் செய்வது எனவும் விளக்குவர் பேராசிரியர்.

வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்துவரச் செய்வது. அது, முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென உணர்க. கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப. (உ௩௯)

**நச்சினார்க்கினியம் :**

இது விருந்து கூறுகின்றது.

(இ-ள்) விருந்தென்று கூறப்படுவதுதானும் புதிதாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலைச் செய்யுளின்மேற்று எ-று.[1]

தானுமென்றவும்மை இறந்ததுதழீஇயிற்று. முற்கூறிய தோல் பழைய கதையைப் புதிதாகக் கூறலென்றும், இது பழையதும் புதியதுமாகிய கதை மேற்றன்றித் தான் புதிதாகப் படைத்துத் தொடர்நிலைச் செய்யுள் செய்வதென்றும் பொருள் தருதலின் அவை முத்தொள்ளாயிரம் பின்னுள்ளார் பாட்டியன்மரபிற்கூறிய கலம்பகச்செய்யுள் முதலியவற்றைப் பாடுதலுமாயிற்று[2].

**ஆய்வுரை :**

இது, விருந்து என்னும் செய்யுள் வனப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) விருந்தென்பது, புதிதாகச் சொன்ன யாப்பின் மேலதாம் எ-று.

"புதிதாகப் புனைதலாவது. 'ஒருவன் சொன்ன நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல்' என்பர் இளம்பூரணர். 'புதுவது கிளந்த யாப்பின் மேற்று' என்றது புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்துவரச்செய்வது. அது முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென உணர்க. கலம்பக முதலாயினவுஞ் சொல்லுப" என விளக்குவர் பேராசிரியர்.

முற்கூறிய தோல் என்பது பழைய கதையைப் புதிதாகக் கூறலென்றும், ஈண்டுக் கூறிய விருந்தென்பது பழையதும் புதியதுமாகிய கதைமேற்றன்றித் தான் புதிதாகப் படைத்துத் தொடர்நிலைச் செய்யுள் செய்வதென்றும் இவ்விருவகை வனப்பிற்கு மிடையேயுள்ள வேறுபாட்டினை விளக்குவர் நச்சினார்க்கினியர்.

---

1. "விருந்து என்பது, புதியவாயினவற்றின்மேற்று. அவை இப்பொழுதுள்ளாரைப்பாடும் பாட்டு" என்பர் யாப்பருங்கலவிருத்தியாசிரியர்.
2. பேராசிரியர் உரையினை அடியொற்றி யமைந்தது இவ்விளக்கம்.

௨௩௨. ஞகார முதலா னகார ஈற்றுப்[1]
புள்ளி இறுதி இயைபெனப் படுமே.

**இளம்பூரணம் :**

என்—எனின். நிறுத்தமுறையானே இயைபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஞணநமன யரலவழள என்னும் பதினொரு புள்ளியும் ஈறாக வருஞ் செய்யுள் இயைபென்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க[2] (௨௩௨)

**பேராசிரியம் :**

இஃது, இயைபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஞ ண ந ம ன, ய ர ல வ ழ ள வென்னும் பதினெரு புள்ளியீற்றினுள் ஒன்றனை இறுதியாகச் செய்யுஞ் செய்யுள் பொருட்டொடராகவுஞ், சொற்றொடராகவுஞ் செய்வது இயைபெனப்படும் (எ-று.)

இயைபென்றதனான் பொருளும் இயைந்து சொல்லும் இயைந்து வருமென்பது கருத்து; சீத்தலைச் சாத்தனாரால் செய்யப்பட்ட மணிமேகலையுங் கொங்குவேளிரால் செய்யப்பட்ட தொடர்நிலைச்செய்யுளும் போல்வன. அவை னகார ஈற்றான் இற்றன. மற்றையீற்றான் வருவனவற்றுக்கும் ஈண்டிலக்கணம் உண்மையின் இலக்கியம் பெற்றவழிக் கொள்க. இப்பொழுது அவை வீழ்ந்தனபோலும்.[3]

---

1. 'ஞகாரை முதலா னகாரை யீற்றுப்' என்பது பேராசிரியரும் 'ஞகாரைமுதலா ளகாரை வீற்றுப்' என நச்சினார்க்கினியரும் பாடங் கொள்வர்.

2. 'என்' என முடியும் இறுதியையுடைய மணிமேகலைப் பாட்டுக்களை இயைபு என்னும் வனப்புக்குரிய இலக்கியமாகக் கொள்ளலாம்.

3. ஞணநமன, யரலவழள என்னும் பதினொரு மெய்களுள் னகர வீற்றான் முடிவன வாகிய தொடர்நிலைச்செய்யுள் மணிமேகலையும் கொங்குவேண்மாக்கதையும் ஆகும். ஏனைய பத்து மெய்யீறுகளால் முடிவனவாகிய தொடர்நிலைச் செய்யுட்கள் கிடைக்கவில்லை. 'அவை இக்காலத்து வழக்கு வீழ்ந்தன போலும்' எனப் பேராசிரியர் குறிப்பிடுதலால் அவர் காலத்திலேயே அவை கிடைக்கவில்லை யென்பது நன்கு புலனாம்.

பரந்த மொழியான் அடிநிமிர்ந்தொழுகிய தோலோடு இதனிடை வேற்றுமை யென்னையெனின், அவை உயிரீற்றவாதல் பெரும்பான்மை யாகலான் வேறுபாடுடைய சொற்றொடரான் வருதலு முடைய வென்பது.[1] சொற்றொட்ரென்பது, அந்தாதி யெனப்படுவது; என்றதனான், உயிரீற்றுச் சொற்றொடர் சிறு பான்மை யென்பது கொள்க.[2]

**நச்சினார்க்கினியம் :**

இஃது இயைபு கூறுகின்றது.

(இ-ள்) ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் பதினொரு புள்ளியுள் ஒன்றனை யீறாகக்கொண்டு செய்யுளைப் பொருட்டொடராகச் செய்வது இயைபெனப்படும் எ-று[3].

இயை பென்றதனானே பொருளியைதல் பெற்றாம். பரந்த மொழியா லடிநிமிர்ந்த தோல் உயிரீற்றவாயே வரும். னகரவீற்றா, னிற்றுப் பொருடொடர்ந்தன மணிமேகலையும், உதயணன்கதையும், ஒழிந்த வொற்றுக்களுக்கும் இலக்கண முண்மையின் இலக்கியம் இக்காலத்து வீழ்ந்தன போலும். எனப்படுவதென்றதனான் இக்காலத்தார் கூறும் அந்தாதிச்சொற்றொடருங் கொள்க.[4]

**ஆய்வுரை :**

இஃது, இயைபு என்னும் வனப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) ஞண நமன யரல வழள என்னும் பதினொரு புள்ளியுள் ஒன்றனை இறுதியாகக் கொண்டு முடியுஞ் செய்யுள் இயைபு என்னும் வனப்புடையது என்பர் ஆசிரியர் எ-று.

---

1. பரந்தமொழியான் அடிநிமிர்ந் தொழுகிய தோல் என்னுந் தொடர்நிலை உயிரீற்றவாதல் பெரும்பான்மை. இயைபு என்னும் இத்தொடர்நிலை ஞகர முதலிய பதினொரு புள்ளிகளுள் ஒன்றால் முடிவன. இவைதம்முள் வேற்றுமை.

2. ‘சொற்றொடர் என்பது அந்தாதி ‘எனப்படுவது’ என்றதனான் ‘உயிரீற்றுச்சொற்றொடர் சிறுபான்மையென்பது கொள்க’ என இவ்வுரைத் தொடரைப் பிரித்துப் படித்தல் வேண்டும்.

3. ‘‘இயைபு என்பது, ஞணநமன யரலவழள எனப்பட்ட பதினொரு புள்ளியீறாய் வந்த பாட்டெல்லாம்’’ என்பர் யாப்பருங்கல விருத்தியாசிரியர்.

4. இவ்விளக்கம் பேராசிரியர் உரையை அடியொற்றியது.

இயைபு என்றதனானே பொருளும் இயைந்து சொல்லும் இயைந்து வரும் என்பது கருத்து. சீத்தலைச் சாத்தனாரால் செய்யப்பட்ட மணிமேகலையும் கொங்குவேளிரால் செய்யப் பட்ட தொடர்நிலைச் செய்யுளும் போல்வன. அவ்வ னகார வீற்றான் இற்றன மற்றை யீற்றான் வருவனவற்றுக்கும் இலக்கியம் பெற்றவழிக் கொள்க.

பரந்த மொழியான் அடிநிமிர்ந்தொழுகிய தோல் என்பன பெரும்பான்மையும் உயிரீற்றவாய் வருதலும், இயைபு ஈண்டுக் கூறிய மெய்யீற்றதாய் வருதலும் தம்முள் வேற்றுமை. சொற்றொடர் என்பன அந்தாதி. 'என்ப்படுவது என்றதனால் இக்காலத்தார் கூறும் அந்தாதிச் சொற்றொடரும் கொள்க' என்பர் நச்சினார்க்கினியர்.

உ௩௩. தெரிந்த மொழியாற்[1] செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது[2] குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே.

**இளம்பூரணம் :**

என் எனின், நிறுத்தமுறையானே புலன் என்னுஞ் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வழக்கச் சொல்லினானே தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமற் பொருள் தோன்றுவது புலனென்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

(உ-ம்) "பாற்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்சொறி முரசின் முழங்கி ஒன்னார்
மலைமுற் றின்றே வயங்குதுளி சிதறிச்
சென்றவள் திருமுகங் காணக் கடுந்தேர்
இன்றுபுகக் கடவுமதி பாக உதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல
இரும்பிடி யுடைய தாகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே"
(யாப் வி ப. ௩௭௯)

எனவரும். (உ௩௩)

---

1. 'சேரிமொழியாற்' என்பது பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்டபாடம். 'ஓதல்வேண்டாது' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம்.

தெரிந்தமொழி-எல்லார்க்கும் பொருள்தெரிந்த வழக்குச்சொல். தேர்தல்-ஆராய்தல், குறித்தது -புலவன் மனத்துட்குறித்த பொருள்.

**பேராசிரியம் :**

இது புலனாமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சேரிமொழியென்பது பாடிமாற்றங்கள்.[1] அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணாமைப்[2] பொருட்டொட்-ரானே தொடுத்துச் செய்வது புலனென்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர் (எ-று).

அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வனவென்பது கண்டு கொள்க.[3] (உ௪௧)

**நச்சினார்க்கினியம் :**

இது புலன் கூறுகின்றது.

(இ-ள்). பாடி மாற்றங்களானே செவ்விதாகக் கூறப்பட்டு ஆராய்ந்து காணாமை பொருள் தானே தோன்றச்செய்வது புலனென்று கூறுவார் அறிவுறிந்தோர். எ-று.[4]

அவை விளக்கத்தார்கூத்து முதலிய வெண்டுறைச்செய்யு-ளென்று கொள்க.

**ஆய்வுரை :**

இது, புலன் என்னும் வனப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) பலருக்கும் தெரிந்த வழக்குச் சொல்லினாலே செவ்விதாகத் தொடுக்கப்பட்டுக் குறித்த பொருள் இதுவென ஆராய வேண்டாமல் தானே விளங்கத் தோன்றுவது புலன் என்னும் வனப்புடைய செய்யுளாம் என்பர் இலக்கண நூலுணர்ந்த ஆசிரியர்கள் எ-று.

'அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன' என்பர் பேரசிரியர்.

---

1. பாடிமாற்றங்கள் - சிற்றூர்ப்பேச்சு வழக்கு; இதனைக் கிராமிய வழக்கு என்பர் இக்காலத்தார்.

2. ஆராய்ந்து காணாமற் பொருள் எளிதில் விளங்கும்படி.

3. 'விளக்கத்தார் கூத்து' என்பது பேராசிரியர் காலத்து வழக்கிலிருந்த நாடகச் செய்யுள் நூலாகும். இது எல்லார்க்கும் பொருள் இனிது புலனாக நாடகத் தமிழுக்குரிய வெண்டுறைச் செய்யுட்களால் இயன்றமையின் 'புலன்' என்னும் வனப்பிற்கு இலக்கியமாயிற்று.

4. ''புலன் என்பது, இயற்சொல்லாற் பொருள் தோன்றச் செய்யப்படும் பாட்டு'' என்பர் யாப்பருங்கலவிருத்தியாசிரியர்.

உநசு ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது[1]
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து
ஓங்கிய மொழியான் ஆங்கவண் மொழியின்[2]
இழைபின் இலக்கணம் இயைந்த தாகும்.

**இளம்பூரணம் :**

என் - எனின் நிறுத்தமுறையானே இழைபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்தடக்காது ஆசிரியப் பாவிற் கோதப்பட்ட நாலெழுத்தாதியாக இருபதெழுத்தின்-காறும் உயர்ந்த பதினேழு நிலத்தும் ஐந்தடியும் முறையானே வரத்தொடுப்பது இழைபு என்னும் செய்யுளாம் என்றவாறு.

உ.ம் "பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து
வண்டு சூழ விண்டு நீங்கி
நீர்வாய்க் கொண்ட நீல மூர்வாய்
ஊதை வீச ஊர வாய
மதியோர் நுண்டோ டொல்கி மாலை
நன்மணங் கமழும் பன்னல் லூர
அமையேர் வளைத்தோள் அம்பரி நெடுங்கண்
இணையீர் ஓதி ஏந்திள வனமுலை
இரும்பன் மலரிடை எழுந்த மாவின்
நறுந்தழை துயல்வருஞ் செறிந்தேந் தல்குல்
அணிநகை நசைஇய அரியமர் சிலம்பின்
மணிமருள் வார்குழல் வளரிளம் பிறைநுதல்
ஒளிநிலவு வயங்கிழை உருவுடை மகளிரொடு
நளிமுழவு முழங்கிய அணிநிலவு மணிநகர்
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடையலள்
கலனளவு கலனளவு நலனளவு நலனளவு
பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ
தொருநீ மறைப்ப ஒழிகுவ தன்றே"

(யாப். வி. ப. நஅO)

என வரும். (உநசு)

1. 'ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது' என்றமையான் ஒற்றொடு-புணராத வல்லெழுத்து வருமென்றாராயிற்று.

2. 'ஆங்கனமொழுகின்' எனப் பேராசிரியரும் 'ஆங்ஙனமொழுகின்' என நச்சினார்க்கினியரும் பாடங் கொள்வர்.

**பேராசிரியம் :**

இஃது இறுதிநின்ற இழைபிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது-ஒற்றடுத்த வல்லெழுத்துப்பயிலாது;[1] குறளடி முதலா ஐந்து அடி ஒப்பித்து[2] இருசீரடி முதலாக எழுசீரடியளவும் வந்த அடி ஐந்தனையும் ஒப்பித்து: ஒப்பித்தலென்பது, பெரும்பான்மைமையான் நாற்சீரடி படுக்கப்பட்டென்றவாறு;[3] ஓங்கிய மொழியான்[4] நெட்டெழுத்தும் அந்நெட்டெழுத்துப்போல் ஓசை எழும் மெல்லெழுத்தும் லகரா ளகாரங்களும் உடைய சொல்லான்: ஆங்ஙனம் ஒழுகின்[5] இவையும்.

"சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது" (513)
பொருள் புலப்படச் சென்று நடப்பின்;

இழைபின் இலக்கணம் இயைந்ததாகும் இழைபென்று சொல்லப்படும் இலக்கணத்தது (எ-று)

அவையாவன, கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறைமார்க்கத்தன வென்பது. இவற்றுக்குக் காரணந் தேர்தல் வேண்டாது பொருள் இனிது விளங்கல் வேண்டுமென்றது, அவிநயத்திற்கு உரியவாதல் நோக்கியென்பது[6] மற்

1. ஒற்றொடுபுணர்ந்த வல்லெழுத்துப் பயின்றுவருதல் இசைநுட்பத்திற்குத் தடை வாராதாகலின் 'ஒற்றொடுபுணர்ந்த வல்லெழுத்தடக்காது' என்றார். அடக்குதல்-தன் கண் பலவாகச் செறித்தல்.

2. இருசீரடி, முச்சீரடி, நாற்சீரடி, நெடிலடி, கழிநெடிலடி என்னும் ஐந்தடிகள்.

3. ஒப்பித்தலாவது நாற்சீரடியுடன் ஒத்து அமையுமாறு செய்தல்.

4. ஓங்கிய மொழியாவது இசையினை வளர்த்துப் பாடும் முறையில் நெட்டெழுத்தும் அந்நெட்டெழுத்துப்போல் ஓசையெழும் மெல்லெழுத்தும் லகார ளகாரங்களும் உடைய சொல்.

5. ஆங்ஙனம் ஒழுகுதலாவது இவ்விசைப்பாடல்களும் முற்கூறிய நாடகச் செய்யுள் போன்று வழக்குச் சொற்களாலே பொருள் விளங்கும்படி அமைந்தொழுகுதல்.

6. செந்துறைமார்க்கத்தன- இசைப்பாடல் நெறியில் அமைந்தன. இவை மெய்ப்பாடு தோன்றப் பாடுதற்குரியவாதல் நோக்கி ஆராய்தல் வேண்டாது பொருள் இனிது விளங்க அமைதல் வேண்டும் என்றார் ஆசிரியர்.

றிதனை வெண்டுறைச் செய்யுட்குமுன் வைப்பி னென்னெனின். இஃதிசைப்பாட்டாகலின் இனி வருகின்றது இசைத்தமிழாக லின் அதற்குபகாரப்பட இதனை, இறுதிக்கண் வைத்தா னென்பது.[1] (உசஉ)

**நச்சினார்க்கினியம்**

இஃது இறுதிநின்ற இழைபு கூறுகின்றது.[2]

(இ-ள்) ஒற்...து எ-து வல்லொற்றடுத்த வல்லெழுத்துப் பயிலாமல் குறள்...து எ.து இருசீர்முதல் எழுசீரடியளவும் அவ் வைந்தடியினையும் ஒப்பித்து. ஓங்கி...ன் எ-து நெட்டெழுத் துப்போல் ஓசைதரும். மெல்லெழுத்தும் லகார ளகாரங்களு-முடைய சொல்லானே முற்கூறியவாறே தெரிந்த மொழியாற் கிளந்து ஓதல்வேண்டாமற்[3] பொருள் புலப்படச் செய்யும். இழை—கும் இழைபினது இலக்கணம் பொருந்திற்றாம். எ-று.

கழிநெடிலடியானும் வருமென்றாரேனும் எழுசீரின் மிகா-தென்று கொள்க. ஒப்பித் தென்றதனாற் பெரும்பான்மை நாற்சீரடியான் வருஞ் செய்யுட்கண்ணே யொழிந்த நான்கடியும் வருமென்று கொள்க.[4] அவ்வாறு வருவன கலியும் பரிபாடலும்-போலுமிசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன என்றுணர்க. இவ்வைப்பு இனத்திற்குரியவாதலிற்[5] றேர்தல் வேண்டாது பொருள் தோன்றச் செய்கவென்றார். இத்தொல்காப்பியனார்

---

1. இசைத்தமிழ் நெறிக்குரிய இழைபு என்னும் வனப்பாகிய இதனை நாடகத்தமிழ் நெறிக்குரிய புலன்என்னும் வனப்பாகிய வெண்டுறைச் செய்யுளுக்கு முன் வைத்தல் முறையாயினும் இயற்றமிழிலக்கணத்தின்பின் இனிக் கூறத்தகுவது இசைத்தமிழிலக்கணமாதலால் அதற்கு உபகாரப்படுதல் கருதி இதனை இறுதிக்-கண் வைத்தார் தொல்காப்பியனார் என்பதாம்.

2. ''இழைபு என்பது, வல்லொற்று யாதுந் தீண்டாது செய்யுளியலுடை-யாரால் எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட குறளடி முதலியவாய்ப் பதினேழ்நிலத்து ஐந்தடியும் முறையானே உடைத்தாய் ஓங்கிய சொற்களான் வருவது'' என்பர் யாப்பருங்கலவிருத்தியாசிரியர்.

3. 'தேர்தல் வேண்டாமற்' என்றிருத்தல் வேண்டும்.

4. எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட குறளடி முதலாகவுள்ள ஐந்தடிகளும் நாற்சீரடியினை நிலைக்களமாகக் கொண்டனவாதலின் ஒழிந்த நான்கடி என்பன குறளடி, சிந்தடி, நெடிலடி, கழிநெடிலடி என்னும் நான்கு மாகும்.

5. ''இவை யவிநயத்திற்குரியவாதலிற்'' என்றிருத்தல் வேண்டும்.

